

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியரில்

ஒருவராகிய

மாணிக்கவாசக சுவாமிகளால்

அருளிச்செய்யப்பட்ட

# திருவாசகமும்,

சில வித்துவான்களால்

இயற்றப்பட்ட

## உரையும்,

திருவாதவூரடிகள் புராணவசனமும்.

இவை

சென்னை ப்ரீசர்ச்மிஷன் போர்டிங் ஐஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

பட்டாளம்

வாசுதேவ முதலியா ரவர்களால்

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

1897.

ஏவிளம்பி௵.

# விளம்பரம்.



அடியிற்குறித்த புத்தகங்கள் சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை, மீஞ்சூர் அப்பாவுமுதலி வீதி 10 வது கதவிலக்கமுள்ள வீட்டில் இருக்கும் தமிழ்ப் பண்டிதர் ப. வாசுதேவமுதலியார் குமாரர் ப. புருஷோத்தம முதலியாரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்,

| | | | |
|---|---|---|---|
| திருவாசகம் மூலமும்உரையும் காலிக்கோ கட்டடம் | 2 | 0 | 0 |
| ஷை பட்டுக்கட்டடம் | 2 | 4 | 0 |
| தாயுமானசுவாமிகள் பாடலுரை | 3 | 4 | 0 |
| பட்டணத்துப்பிள்ளையார் பாடலுரை | 1 | 12 | 0 |
| தனிப்பாடலுரை முதற்பாகம் | 1 | 8 | 0 |
| பிள்ளைப்பெருமாளையங்கார் அஷ்டப்பிரபந்தவுரை | 1 | 4 | 0 |
| கந்தரலங்கார வுரை | 0 | 3 | 0 |
| கயிலைபாதி காளத்திபாதி திருவந்தாதியுரை | 0 | 3 | 0 |
| திருக்கருவைக் கலித்துறையந்தாதி யுரை | 0 | 3 | 0 |
| திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி யுரை | 0 | 3 | 0 |
| திருக்கருவை வெண்பாவந்தாதி யுரை | 0 | 3 | 0 |



# முகவுரை.

இந்தச் சென்னையிலும் பிறதேசங்களிலும் உள்ள கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவர்களும், சாராசார விவேக முள்ளவர்களும் ஆகிய கனவான்களே!

"வினையினீங்கி விளங்கியவறிவின் முனைவன்" ஆகிய கடவுளாலும் அவனது அருள்வழிப்பட்டோராகிய முனிவர் முதலியோராலும், ஆன்மாக்கள் விதி விலக்குகளை யுணர்ந்தொழுகி உய்தற் பொருட்டுத் தமது பெருங்கருணையால் அருளிச் செய்யப்பட்ட முதனூல், வழிநூல், சார்புநூல்களாகிய வேதாகம புராணேதிகாசாதிகள் கீர்வாண ரூபமா யிருத்தலாலும், அவற்றின் பொருளுணர்தல் அருமையாதலாலும், வேதியர்க்கே உரியனவாதலாலும், உலகத்திலுள்ள மற்றை வருணத்தார்க்கும் அவற்றின் பொருளுணர்ச்சியை எளிதில் உண்டாக்கி அவர்களை உய்விக்கும் பொருட்டுத் திருவுளம்பற்றிச் சான்றோர் அந்தந்தத் தேச பாஷைகளில் அவ்வேதாக மாதிகளின் பொருளை யமைத்துச் சாத்திர ரூபமாகவும் தோத்திர ரூபமாகவும் பல நூல்கள் செய்தருளினர். அவற்றுள் "வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்" ஆகிய இந்தத் தமிழ் நாட்டில் மிக்கு வழங்குவதாகிய தமிழ்ப்பாஷையில் செய்யப்பட்டுள்ள நூல்கள் அளவற்றன. அவற்றைச் செய்தவர்களோ மதுரையிலிருந்த முதல் இடை கடை என்னும் முச்சங்கத்தார் முதலிய பெரியோர். அந்த நூல்களுள் சில இலக்கண நூல்களாகவும், சில இலக்கிய நூல்களாகவும், சில நீதி நூல்களாகவும், சில லௌகிக நூல்களாகவும் இன்னும் பலவகைப்பட் டிருக்கும். அவற்றுள்ளே, தொன்று தொட்டு அச்சிட்டுவரும் வழக்கம் இல்லாமையாலும், அவற்றைச் சிரத்தையோடு எட்டிலெழுதி ஆசிரியரிடத்

தில் அடுத்துப்படித்துப் பொருளறிய வேண்டுமென்னும் விருப்பம் ஊக்கம் முதலியவை இந்நாட்டிலுள்ளார்க்கு நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருதலாலும் பல நூல்கள் சிதல் முதலியவற்றிற்கு இரையா யொழிந்தன; ஒழிந்தும் எஞ்சிநின்ற சிலவும் இதுவரையும் ஒழிந்தே யிருக்கலாம். ஆனால் துரைத்தனத்தார் வித்தியா சாலைகளில் பாடமாக ஏற்படுத்திச் சுதேசபாஷைகளை விருத்தி செய்து வருவதனால் இறந்தொழியாமல் பிழைத்திருக்கின்றன. அந்தச் சில நூல்களுள்ளும், வித்தியா சாலைகளுக்கு உபயோக மாகவும், மற்றைச் சாதாரண சனங்களுக்கு உபயோக மாகவும், மூலபாடமாகவும் உரைபாடமாகவும் அச்சிட்டு வெளிப்படுத்தப் பட்டவைபோக மற்றவற்றுள் மூலபாடமா யுள்ளவற்றுக்கு எமது சிற்றறிவுக்குப் புலப்பட்ட அளவு பதவுரை யெழுதி வெளியிட்டால் இந்நாட்டார்க்கு உதவியா யிருக்குமென்றெண்ணி, "வித்யா விநோதினி" என்னும் பெயரால் ஒரு பத்திரிகை ஏற்படுத்தி, அதன் வாயிலாகத் தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு, பட்டணத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு, கந்தர் அலங்காரம், கயிலைப்பாதி காளத்திபாதி அந்தாதி, தனிப்பாடற் றிரட்டு முதற் பாகம், முதலியவற்றை மாதாந்தர சஞ்சிகையாய் வெளியிட்டுவந்தேன். இதுவரையும் எனக்கு உதவியாயிருந்த, திரு-சம்பந்த முதலியாரவர்கள் தேக வியோகம் அடைந்ததனாலும், எனக்குள்ள உத்தியோக நிர்ப்பந்தத்தினாலும் மாசாந்தர சஞ்சிகை நிறுத்தி, ஒவ்வொரு நூலும் முழுதும் அச்சிட்டு முடித்துப் புத்தக ரூபமாகவே வெளியிடக்கருதி, இந்நூலை இப்போது வெளியிட்டேன்.

அபௌருஷேய மாயும், நித்திய நிர்த்தோஷங்களாயும் உள்ள வேதங்களுக்கும் உபநிடதாதிகளுக்கும், ஆகமாதிகளுக்கும், அவற்றின் விரிவுருவாகிய புராண இதிகாசாதிகளுக்கும், முன்னிருந்த பெரியோர்கள் விஸ்தாரமான பாஷியம், வியாக்கியாநம் முதலியவை யெழுதியிரு

ப்பதையும், இப்போது ஒரு ஆங்கிலேயர் சங்கர பாஷியத்தை இங்கிலீஷில் மொழி பெயர்த்துக்கொண்டு வருகிறார் என்பதையும், தற்காலம் மூல சிவாகமங்களாகிய காமிகம் முதலியவற்றை ஒவ்வொன்றாக, முன்னோர் செய்த உரைகளோடு, சிந்தாதிரிப்பேட்டை - ஸ்ரீ சண்முகசுந்தர முதலியாரவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்திவருவதையும், சைவ சித்தாந்த நூல்களாகிய சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலியவும் உரையோடு அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டிருப்பதையும், இந்நூலின் சில பதிகங்கள் சில வருடங்களுக்கு முன்னே பரீக்ஷைப் பாடமாய்வைத்து உரையோடு வெளிப்படுத்தப் பட்டதையும், இனிமேலும் அப்படியே இந்நூல் முழுதும் வெளிப்படும் என்பதையும், இந்நூலுக்குப் பழையவுரை யொன்று ஏட்டில் எழுதப்பட்டுப்பலரிடத்தும் உள்ளது என்பதையும், இங்கிலாந்தில் ஒரு ஆங்கிலேயர் இத்திருவாசகத்தை முழுதும் இங்கிலீஷில் மொழிபெயர்த்து வருகிறார் என்பதையும், இன்னும் பலகாரணங்களையும் முன்னிட்டே இந்நூலை வெளிப்படுத்தினேன்.

இந்நூலின் முதலிலுள்ள நான்கு அகவல்களில் உள்ள கதைகளும், பொருளும், சொன்முடிபு பொருள் முடிபுகளும், எழுவாய் பயனிலை முதலியவும், நன்கு விளங்காமையால் அவைகளுக்கு ஒருவாறு பதவுரை மாத்திரம் எழுதி அச்சிட்டேன்; இதில் உள்ள குற்றங்களைக் குணமாகக் கொள்வது புத்திமான்களுக்கு உரியகுணமாகும் என்று அவர்களை மிகவும் வணக்கத்தோடு பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம் :

ப. வாசுதேவமுதலியார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாதவூரர்புராணவசநம்.

## பாயிரம்.

### காப்பு.

### விநாயகர் துதி.

பவளமால்வரையி னிலவெறிப்பதுபோற் பரந்தநீற்றழகுபச் சுடம்பில், திவளமாதுடனின் றுடியபரமன் சிறுவனைப் பாரதப் பெரும்போர், தவளமாமருப் பொன்றொடித்தொருகரத்திற் றரித் துயர்கிரிப்புறத்தெழிதும், கவளமாகளிற்றின் றிருமுகம்படைத்த கடவுளை நினைந்து கை தொழுவாம்.

### இதன் பொழிப்புரை.

பெரிய பவளமலையி னிடத்திலே சந்திரிகை வீசுதல்போலச் சிவந்த தனது திருமேனியில் பரவப்பூசின திருநீற்றி னழகானது உமாதேவியின் பசிய திருமேனியில் பிரதிபலிக்கும்படி அந்தத் தேவியோடு கூடி நின்று நிருத்தம் செய்தருளின பரமசிவனுடைய புதல்வனும், பெரிய பாரத யுத்தத்தைத் தனது வெண்மையாகிய பெரிய கொம்பொன்றை யொடித்து ஒருகையில் எழுத் தாணியாகக் கொண்டு, உயர்ந்த மேருமலையை ஏடாகக் கொண்டு அதனிடத் தெழுதி யருளின கவளத்தைக் கொள்ளுகின்ற பெரிய யானைமுகத்தைப் படைத்தவனும் ஆகிய விநாயகக் கடவுளை மனத்தால் நினைந்து, இரண்டு கைகளையுங் குவித்து வணங்குவோம் யாம் என்றவாறு.

### சபாபதி துதி.

இதந்தருமடந்தை யொடிசைந்துயிருடம்புபோல்
விதம்பலுலகங்களின்விரிந்தொளிவிளங்குவார்
மதங்கமொடுதுந்துமிவளங்கெழமுழங்கவே
சிதம்பரநடம்பயில்செழுங்கழலிறைஞ்சுவாம்.

### இதன் பொழிப்புரை.

இதத்தைத் தருகின்ற சிவகாமி யம்மையோடுகூடி, உயிரும் உடம்பும் போலப் பலவகைப்பட்ட எல்லா வுலகங்களிலும் நிறைந்து சோதி சொரூபராய் விளங்குகின்ற சபாநாயகரது, மிருதங்க வாத்தியத்துடனே பேரிகையும் வளம்பொருந்த முழங்கச் சிதம்பரத்தில் நடநஞ் செய்கின்ற செழுமையாகிய திருவடிகளை வணங்குவோம் யாம் என்றவாறு.

### சிவகாமியம்மை துதி.

ஆடகசிதம்பரவணங்குமையணங்கிலா
நாடகனநந்தசுகநன்குபுணைபங்கினள்
ஏடகமனம்பொருவவெங்கணுமிசைந்துளாள்
பாடகமிலங்குசிறுபங்கயமிறைஞ்சுவாம்.

### இதன் பொழிப்புரை.

பொன்னம்பலத்தில தங்கிய அழகிய உமாதேவி, வருத்தமில்லாத நடநஞ் செய்தருளுகின்ற சபாபதியின் அளவற்றசுகத்தை நன்மையாகப் பெற்றுக்கொண்டு அவருடைய பாகத்தில் வாழ்பவள், இதழ்களையுடைய பூவினிடத் திருக்கு மணம்போலச் சராசரங்க ளனைத்தினும் நிறைந்திருக்கின்றவள், இப்படிப்பட்ட சிவகாமி யம்மையின், பாடகங்கள் விளங்குகின்ற சிறிய தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்குவோம் யாம் என்றவாறு.

### சுப்பிரமணியர் துதி.

துங்கமதகும்பவுயர்தும்பிமுகனெம்பிசீ
தங்குஞெகிழஞ்சிறுசதங்கைகள்புலம்பவே
மங்கையுமைகண்குளிரவந்துலவுகின்றதாள்
அங்கைமலர்கொண்டுமிகுமன்புடனிறைஞ்சுவாம்.

### இதன் பொழிப்புரை.

பரிசுத்தமாகிய மதநீரைப் பொழிகின்ற மத்தகத்தையுடைய உயர்வாகிய யானைமுக விநாயகருக் கிளைய முருகக் கடவுளின் சிறப்புப் பொருந்திய பொற்சிலம்புகளும் சிறு சதங்கைகளும் ஒலிக்க, மங்கையாகிய உமாதேவியின் கண்கள்குளிரும்படி வந்து உலாவுகின்ற மாத

ங்களை அழகிய கையினிடத்திலே மலர்களைக் கொண்டு அருச்சித்து மிகுந்த அன்போடு வணங்குவோம் யாம் என்றவாறு.

### நூல் வரலாறு.

தென்பொதியமாமுனிசிறக்கவருளெண்ணெண்
ணின்பவிளையாடலெனுங்கடலுளொருயேன்
மின்பயிலுமாமதுரைமேவுதமிழ்மாறன்
துன்பமறநல்குகதைசொல்லலுறுகின்றேன்.

### இதன் பொழிப்புரை.

தென்றிசையில் விளங்குகின்ற பொதியமலையிலிருக்கும் அகஸ்தியமுனிவர் யாவரும் சிறப்படையும்படி முற்காலத்தில் நைமிசாரணிய வாசிகளாகிய முனிவருக்கு அருளிச்செய்த பேரின்பத்தைத் தருகின்ற அறுபத்து நான்கு திருவிளையாட லென்கிற கடலிலே, ஒளி விளங்குகின்ற குதிரைகளை மதுரைமாநகரத்திலிருந்த பாண்டியராஜனது துன்பம் நீங்கக் கொடுத்த கதையை அடியேன் சொல்லத் தொடங்கினேன் என்றவாறு.

அற்றகனிருந்தருள்பெருந்துறையடைந்தே
சிற்பரமுணர்ந்துதிருவாசகமுரைப்பார்
முற்பகலருந்தவமுயன்றுபெறுமன்பால்
உற்பவமொழிந்தமைமொழிந்திடரொழிப்பாம்.

### இதன் பொழிப்புரை.

பரமசிவ னெழுந்தருளியிருந்த திருப்பெருந்துறை யென்னும் தலத்திற் சேர்ந்து அறிவுருவாகிய சிவத்தை யறிந்து திருவாசகம் உரைத் தருளிய மாணிக்க வாசகரானவர் முன்னாளில் அருந்தவங்களைச் செய்து பெற்ற அன்பினால் பிறவி யொழிந்து மோக்ஷமடைந்த கதையைச் சொல்லி எமது பிறவித்துன்பத்தை யொழிப்போம் யாம் என்றவாறு.

### அவை யடக்கம்.

கொண்டலனகண்டனருள்கொண்டுதமிழ்பாடித்
தொண்டுபடுமன்பர்செயல்சொன்னநெறிதன்னால்
வண்டமிழ்தெரிந்தவர்கண்மற்றெனுரைகுற்றம்
உண்டெனினுநன்கிதெனவுன்னுவர்களெள்ளார்.

### இதன் பொழிப்புரை.

மேகம் போன்ற நீலகண்டத்தையுடைய பரமசிவனது கிருபையைக்கொண்டு திருவாசகம் என்னும் தமிழ் வேதம் பாடி, அடிமைத்திறஞ் செய்த அன்பராகிய மாணிக்கவாசகர் சரித்திரத்தைச் சொன்னதனால், வளமாகிய தமிழை யறிந்த புலவர்கள் அடியேன் சொல்லும் பாடலில் குற்றமுண்டா யிருந்தாலும் அந்தக் குற்றத்தைக்கொண்டு இகழாமல் இது நல்லதென்று கொள்ளுவார்கள் என்றவாறு.

### நூற்பயன்.

இந்தவளநற்கதையியம்பினர்நயந்தே
சிந்தையினினைப்பவர்செவிப்புலநிறைப்போர்
புந்திமகிழப்புவிபுரப்பருடல்விட்டால்
அந்தவுலகத்தினிலரன்சபையில்வாழ்வார்.

### இதன் பொழிப்புரை.

இந்தத்தெய்விகமுள்ள நல்லகதையைச் சொன்னவர்களும், நயப்புடனே சிந்தையில் நினைப்பவர்களும், செவிநிறையக் கேட்பவர்களும், மனமகிழும்படி பூலோகத்தை அரசாள்வார்கள். சரீரம் விட்டால் அந்தச் சிவலோகத்திலே சிவசமூகத்தில் வாழ்ந்திருப்பார்கள் என்றவாறு.

பாயிரம் முற்றிற்று.

## மந்திரிச்சருக்கம்.



வையையாறு சூழ்ந்த பாண்டிநாட்டில், திருவாதவூரில், அந்தணர் வருணத்தில், ஆமாத்தியர் குலத்தில் ஒப்பற்ற சைவசமயத் தலைவராகிய ஒரு வேதியருக்கும் அவர் மனைவியாருக்கும் பரமசிவன் அருளினாலே ஒரு புதல்வர் அவதரித்தார். அவருக்குத் திருவாதவூரர் என்று பெயரிட்டு நாளொருமேனியாய்ப் பொழுதொருவண்ணமாய் வளர்த்து, பருவமறிந்து அன்னப்பிராசநம், சௌளம், வித்தியாரம்பம், உபநயநம் முதலானவைகளுஞ் செய்து வைத்தார்கள். இவரும் பதினாறு வயதுக்குள்ளே

வேத சிவாகமாதிகளை யையந்திரிபற வோதி, அவற்றின் பொருள்களையும் உணர்ந்து, அக்கல்வி யறிவுக்கேற்ப நல்லொழுக்க முதலானவைகளை யுடையவராய் விளங்கியிருந்தார். இப்படி யிருக்கும் நாளில், இவருடைய கல்வி யறி வொழுக்கங்களைப் பெரியோரால் கேள்விப்பட்ட பாண்டியராஜனனவன் இவரை யழைப்பித்துத் தனக்கு முதன்மையாகிய மந்திரியாகச் செய்துகொண்டு இவரிடத்தில் மிகுந்த சிநேகமும் அன்பும் பூண்டிருந்தான். மேலும் அரசர் யாவரும் மதிக்கும்படி தென்னவன் பிரமராயன் என்னுஞ் சிறப்புப் பெயரையுங் கொடுத்து, ரத்நாபரணம், பீதாம்பரம், குடை, சிவிகை, வெண்சாமரம், யானை முதலியவற்றையுங் கொடுத்தான். இவரும் அவைகளைப் பெற்று மற்ற மந்திரிகளினும் சிறப்படைந்து விளங்கி யிருந்தார். இப்படி பாண்டியனது ராஜ்யபார முழுதும் தாமே நடத்திக்கொண்டு வருங் காலத்தில், இவர் பரமசிவனது திருவருளால் அவனிடத்தில் மிகுந்த அன்புடையவராய், உலகத்தில் விருப்பமற்றவராய், மந்திரித் தொழிலைமாத்திரம் முறைமைப்படி நடத்தி வந்தார். இப்படி யிருக்குங் காலத்தில் இவருக்கு உண்மை யறிவைத் தருகின்ற அதி தீவிரபக்குவமும், ஐந்தெழுத்தின் பொருளாகிய சிவத்தை யறிவிக்கின்ற ஞானசாரியனது திருவடியைப் பெறவேண்டுமென்னும் விருப்பமும் உண்டாயின. இந்தத் தருணத்தில் பாண்டியராஜனுக் கெதிரே சில தூதர்கள் வந்து, சோழதேசத்தைச் சார்ந்த கடற்கரையில், ஆரியதேசத்தார் உயர்ந்த குதிரைகளைக் கொண்டுவந் திறங்கி யிருக்கிறார்கள், யாம் பார்த்தோம் என்று சொன்னார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட பாண்டியராஜனனவன், திருவாதவூரரைநோக்கி, நீர்போய் அந்தக் குதிரைகளைக் கொண்டுவாரும் என்று சொன்னான். திருவாதவூரரும் அப்படியே யாகட்டுமென்று சம்மதித்தார். உடனே அரசன் இவரைத் தனது அரண்மனைக்குள்ளே யழைத்துப்போய்க் குதிரை கொள்ளும்பொருட்டு நாற்பத்தொன்பதுகோடி பொன்னைக் கொடுத்தான்.

அந்தப் பொன்னைக் கைக்கொண்டு, சேரசோழர்களுடைய சேனைகள் முதலானவையும் தம்மைச் சூழ்ந்துவர, நன்னாளில் நன் முகூர்த்தத்தில் திருவாதவூரர் குதிரைகொள்ளப் புறப்பட்டார்.

மந்திரிச்சருக்கம் முற்றிற்று.

## திருப்பெருந்துறைச் சருக்கம்.

புறப்பட்டு மதுராபுரியை நீங்கிச் சோழதேசத்துக்குப் போகும்போது, இவரை ஆட்கொள்ளத் திருவுளங்கொண்ட பரமசிவனானவர், கைலாயகிரியிலுள்ள தமது அடியார்களையும் கணநாதர்களையும் நோக்கி, நீங்கள் மாநுடரூபங்கொண்டு எம்மோடு வாருங்கள் என்று அவர்களை யழைத்துக்கொண்டு முத்தியைத் தருகின்ற 'ஆசாரிய மூர்த்தங்கொண்டு நெடிய கைலாயமலையை நீங்கித் திருப்பெருந்துறையில் வந்து சேர்ந்து, அவ்விடத்திலுள்ள ஒரு சோலையின் நடுவே ஒரு குருந்தமரத்தின்கீழே எழுந்தருளித் திருவாதவூரருடைய பாசம் நீங்குகின்ற காலத்தை நோக்கிக்கொண் டிருந்தார். இப்படி யிருக்கத் திருவாதவூரரும் அந்த வழியாகவே வந்து, திருப்பெருந்துறைக்குச் சமீபத்திற் சேர்ந்தார். சேர்ந்து அங்குள்ள சோலை முதலானவைகளின் வளங்களை நோக்கிக்கொண்டே திருப்பெருந்துறையை யடைந்தார். அவ்விடத்தில் குருமூர்த்தமாய் பரமசிவன் எழுந்தருளியிருக்கும் சோலையில் அடியார்கள் படிக்கின்ற சிவாகமங்களின் சப்தத்தைக் கேட்டு இது என்ன சப்தம் என்று அறிந்துவந்து சொல்லுங்கள் என்று தூதர்களை நோக்கிச் சொல்ல, அவர்கள் போய்ப் பார்த்து வந்து பல அடியார்கள் தம்மைச் சூழ்ந்திருக்கப் பரமசிவனுக் கொப்பான ஒரு பெரியவர் அங்குள்ள ஒரு குருந்தமர நிழலில் வீற்றிருக்கின்றார் என்று சொல்லுதலும் திருவாதவூரர் மனமகிழ்ந்து அந்தப் பெரியவரைக் காணவேண்டு மென்கிற ஆவலோடு அந்தச் சோலையிற் போய் மேன்மையாகிய பரமசிவனது தெய்வசபையைக்

கண்டு மனத்தால்வணங்கிகாயத்தால்வணங்காதவர்போல நின்று அந்த ஆசாரிய மூர்த்தியின் திருமேனி பொன்போல விளங்குவதைக் கண்டு மன மகிழ்ந்து அவரை நோக்கி ஐயா உமது திருக்கரத்தில் இருக்கின்ற புத்தகத்தின் பெயர் என்னவென்று கேட்க, அந்தப்பெரியவர் இந்தப் புத்தகத்தின் பெயர் "சிவஞானபோதம்" என்று அருளிச் செய்தார். அதைக் கேட்ட திருவாதவூரர் சிவமாவது யாது, ஞானமாவது யாது, போதமாவது யாது இவற்றை விவரித்துச் சொல்லுவீராஞல் அந்நாளில் கல்லால நிழலின்கீழ் எழுந்தருளி யிருந்தவர் நீரே யாவீர், அடியேனும் உமக்கு அடிமையாவேன் என்று சொல்ல, பரமசிவன் சிவம் என்பது ஒப்பற்ற மெய்ப்பொருள், ஞானமென்பது அதனை யறிதல், போதமென்பது அறிந்ததைத் தெளிதல் என்று திருவாதவூரருடைய மனமுருகும்படி அருளிச்செய்தார். அருளிச்செய்தலும், திருவாதவூரர் மன மகிழ்ந்து பொன்னம்பலத்திலே திருநடனம் செய்கின்ற பரமசிவனனவர் என்னை யாளும்பொருட்டுக் குருவடிவம் கொண்டு இங்கு எழுந்தருளினுர் என்று நினைத்து அவரை நோக்கி நிலையில்லாத பொருள்களெல்லாவற்றையும் யான் விரும்பேன், உம்முடைய திருவடியை யடைந்து என் பிறவித்துன்பத்தை நீக்கிக்கொள்ள விரும்புகின்றேன், என்னை இப்பொழுதே உமக்கு அடிமையாக்கிக் கொள்ளவேண்டும் என்று வணங்கி நின்றார். அப்படி நின்ற இவரது அதிதீவிர பக்குவத்தை யறிந்த பரமசிவனடியார்களில் ஒருவர் எழுந்து இவரது வினைகளை நீக்கிக் காத்தருளவேண்டும் என்று வணங்கி நின்றார். அவ்வடியாருடைய வேண்டுகோளுக்குக் கருணைக் கடலாகிய பரமசிவனனவர் இசைந்து திருவாதவூரரை நோக்கி, உன்னை அடிமை கொள்ளும்பொருட்டு இந்தத் திருப்பெருந்துறைக்கு யாம் வந்தோம், நீ இரங்கவேண்டாமென்று திருவாய் மலர்ந்தருளி அவ்வடியார்களில் பெரியவராகிய ஒருவரைநோக்கி இந்தத் திருவாதவூரரை இன்று நாம் அடிமைகொள்ளல் வேண்டும், ஆகையால்

இதற்கு வேண்டிய திரவியங்களை நீ விரைவில் ஆயத்தப் படுத்தல் வேண்டும் என்று நியமித்தருளினர். அந்த அடியவரும் அப்படியே அந்தச் சோலையில் ஒரு அழகாகிய கோயிலையும் வேண்டிய திரவியங்களையும் அமைத்தார். பிறகு சூரியன் அஸ்தமித்து பதினைந்து நாழிகைக்கு மேல் திருவாதவூரருக்கு மாயாமலம் நீங்கும் சமயம் வந்து தோன்ற ஆசாரியமூர்த்தி நீராடி ஒப்பற்ற சிவந்த பட்டுப் பரிவட்டத்தை உடுத்து அந்தக் கோயிலினுட் சென்று தக்ஷிண அபிமுகமாக ஆசனத்தின்மேல் எழுந்தருளியிருந்த பின்பு, திருவாதவூரரும் நீராடி வெள்ளை வஸ்திரம் உடுத்திக்கொண்டு விபூதி தரித்த தேகத்தையுடையராய் ஆசாரியருடைய சந்நிதியில் மகிழ்ச்சியோடு வந்து சேர்ந்து, அவரது திருவடிக்கு அபிஷேகம்செய்து மலர்களா லருச்சித்துச் சந்தனம்பூசி செங்கழுநீர் மாலையைச் சூட்டி ஆசைதீர நோக்கி திருவமுது படைத்து அவர் அமுது செய்தபின் வெள்ளிலை, பழுக்காய், தூபதீபம், முதலிய உபசாரங்களும்செய்து பட்டுக் குடைபிடித்து ஆலவட்டம் அசைத்து மலர்களை இரண்டு கைகளிலும் ஏந்திக்கொண்டு நின்றூர். அப்பொழுது பரமசிவனுனவர் இவர்மீது அன்புவைத்து கிருபாநோக்கம் செய்து ஸ்ரீ பஞ்சாட்சரத்தை யறிவிக்க விரும்பிச் சிவத்தை முன்னுகமாறி இவரது காதில் திருவாய்மலர்ந்தருளினர். அப்பொழுது திருவாதவூரருடைய பிறவித் துன்பமானது பரமசிவனது பார்வையினலே விளக்கின்முன்னே யிருள் கெடுவதுபோலக் கெட்டொழிந்தது. உடனே ஆசாரியமூர்த்தியைத் தோத்திரம்செய்து வணங்கி பூமியில் வீழ்ந்தார். ஆசாரியரும் இவரது சிரசின்மீது தமது திருவடியைச் சூட்டினர். அந்தத் திருவடியைத் திருவாதவூரர் தமது இண்டு கண்களிலும் ஒற்றிக்கொண்டு மார்போடணைத்து மெய்பரிவோடும் எழுந்து நின்றூர். அப்பொழுது தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள். அந்த இரவு நீங்கி விடியற்காலம் வருதலும் காலைக்கடன்கள் கழித்து ஆசாரிய மூர்த்தியானவர் திருவாதவூரரைத் தனியே யழைத்



1847

திருவாதவூரர்க்கு உபதேசம்.

துப்போய் சிவாகமங்களின் அருமையாகிய பொருள்களை யெல்லாம் நன்ருக விளங்கும்படி அருளிச்செய்து இப் பொழுது யாம் கொண்டுவந்த இந்த வுருவத்தை உன் மனத்திலிருத்தி வைப்பாயென்றும் இதுவே பொருளெ ன்றும் அருளிச்செய்தார். இந்த உபதேச மொழிகளைக் கேட்ட திருவாதவூரர் மனமகிழ்ந்து பலவகையாக ஆசா ரியமூர்த்தியைத் துதித்துக் குதிரைகொள்ளக் கொண்டு வந்த பொருள் முழுதும் ஆசாரியருக் கெதிரே வைத்து வணங்குதலும் ஆசாரியரும் முகமலர்ந் தெழுந்தருளி யிருந்தார். பின்பு அவ்வடியார்களில் சிறந்த ஒருவர் முக த்தைப் பார்த்து, இந்தப் பொருளையெல்லாம், சிவாலயத் திருப்பணிக்கும், தவஞ்செய்வோர்க்கும், வறியவர்க்கும் கொடும் என்றருளிச்செய்ய, அவரும் அப்படியே செய் தார். திருவாதவூரரும் சீவன் முத்தரானூர். அன்றியும் சேனைகள் சூழ்ந்துவர அரசரைப்போல வந்த திருவாத வூரர் உருவம் தெரியாமல் பூசப்பட்ட திருநீற்றையும் கோவண வுடையையும் குடுமி விரிந்திருக்கின்ற சிரசை யும் ஆநந்தபாஷ்பம் பொழிகின்ற கண்களையும் உடை யவரானூர். இப்படியான பின்பு தமக்கு அநுக்கிரகம் செய்த பரமாசாரியரை அன்புடனே பார்த்து நிற்பார், ஆநந்தக் கண்ணீரொழுக அழுவார், கைகூப்பித் தொழு வார், கீழேவிழுந்து நமஸ்கரிப்பார், எழுந்திருப்பார்,புறங் காட்டாமல் நடப்பார், திரும்பி வருவார், பகலும் இரவும் அறியமாட்டார்,சிவஞானத்தையேபொருளாகக்கொண்டு கண்டோர்கள் அஞ்சும்படியான பித்தர் பாலர் பிசாசர்க ளுடைய கோட்பாட்டை யுடையவரானூர். இப்படியிருக்க, இவருடைய படைத் தலைவர்களும், உறவினரும் ஆகிய எல்லாரும் நெருங்கி யெதிரேவந்து நின்று அவரைத் தொழுது பாண்டியராஜன் கோபங்கொள்ளாதபடி குதி ரைகளை வாங்கிக்கொண்டு போகவேண்டு மென்பதைத் தெரியாதிருப்பது பழுதென் றிரங்கி, ஐயரே நீர் வரவே ண்டுமென் றழைத்தபோது, அவர்களை நோக்கி, நீங்கள் யார், இந்த வார்த்தைகளெல்லாம் என்னேடு சொல்ல

வேண்டாம், நீங்கள் தூரமாகப் போய்விடுங்கள் என்று சொன்னார். இவர் இப்படி சொல்லுவது என்னவென்று சேநாதிபதிக ளெல்லாரும் இரங்கி நின்று, அவரைவிட்டு நீங்கிப் பாண்டியராஜனிடத்திற் போய், நடந்த செய்தியைச் சொல்லி வணங்கி நின்றார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட பாண்டியராஜன், இப்படிப்பட்ட மந்திரிகளையுடைய அரசர்களுக்கு என்ன குறையென்று கோவத்தோடு சிரித்து, வன்சொற்கள் நிரம்பிய ஒரு ஓலையெழுதி அவர்கள் கையிற் கொடுத்து, இந்த ஓலையைக் கொண்டு போய் அவருக்குக் காட்டி அவரைக் கைப்பிடியாய்க் கொண்டுவாருங்களென் றனுப்ப, அவர்களும் அவரிருக்கும் திருப்பெருந்துறைக்குப் போய் அவரைக் கண்டு திருமுகத்தைக் காட்ட, அவர் பரமசிவன் திருமுகமல்லாமல் மற்றொரு திருமுகத்தையும் பார்க்கமாட்டேன், அதைப் படித்து அதில் எழுதப்பட்டிருக்கிற செய்தியைச் சொல்லுங்கள் என்று சொல்ல, அந்தத் தூதர்களில் ஒருவன் அப்படியே படித்துச் சொல்லக் கேட்ட திருவாதவூரர், யமன் எழுதியனுப்பும் ஓலையைக்கண் டஞ்சாத சிவனடியார் ஒரு அரசனெழுதும் ஓலையைக்கண் டஞ்சுவாரோ வென்று சொல்லி, ஆசாரியர் சந்நிதிக்குப்போய், ஓலையில் அரச னெழுதி யனுப்பின செய்தியைச் சொல்லக் கேட்ட பரமசிவனவர், நீர் அஞ்சவேண்டியதில்லை, நாமே குதிரைகளைக் கொண்டுவந்து பாண்டியனுக்குக் கொடுப்போம், நீர் தூதர்களோடு போய்ப் பாண்டியனைக் கண்டு, நீர் எழுதின ஓலையைப் பார்த்தவுடனே நான் வந்துவிட்டேன், ஆவணி மாதம் மூலநாளில் குதிரைகள் வரும் என்று சொல்வாயாக என்று சொல்லி, அவருக்குத் திருநீறு தரித்து, முன் வந்ததுபோல ஆடை ஆபரணாதிகளால் அலங்கரித்து மந்திரிக் கோலஞ்செய்து, ஒரு உயர்ந்த மாணிக்கத்தைக் கொடுத்து, இதைக் கொண்டு போய்ப் பாண்டியனுக்குக் கொடுத்துக் காண்பாயென்று சொல்லி யனுப்ப, விடைபெற்றுப் போன திருவாதவூரர் மதுராபுரியைச் சேர்ந்து, பாண்டியனிடத்துக்குப்

போய்த் தமது பரமாசாரியர் கொடுத்த மாணிக்கத்தைக் கையுறையாக வைத்து அவனைக் கண்டார், பாண்டியன் அவரை மகிழ்ந்து நோக்கி, இரும் என்று சொல்லி ஆசநங் கொடுக்க இருந்தார். பின்பு பாண்டியன் அந்த மாணிக்கத்தை வியந்து பலதரம் உற்றுப் பார்த்து, நீர் போன இடத்தில் நடந்த செய்தியைச் சொல்லுமென்று கேட்கத் திருவாதவூரர் பாண்டியராஜனைப் பார்த்து, நீர் கொடுத்த திரவியத்தைக் கொண்டுபோய் நல்ல இலக்கணங்க ளமைந்த குதிரைகளை வாங்கி, அவைகளை மதுராபுரிக்குக் கொண்டு போவதற்குத் தகுந்த நல்ல நாள் விசாரித்தபோது, வேதியர் ஆராய்ந்து பார்த்து ஆவணி மாதம் மூலநக்ஷத்திரம் நல்லநாளென்று சொல்ல, அந்த நாளைக் குறித்துக்கொண்டு திருப்பெருந்துறையி லிருந்தேன், உம்முடையசேனைகளும் உறவினரும் இங்குவர விரும்பித் திரும்பிவந்து என்மீது சில அபவாதங்களைச் சொல்லக் கேட்டு நீர் கோவங்கொண்டு ஒரு ஓலை யெழுதி யனுப்பினீர், அதைக்கண்டு, நான் முன்னே வந்துவிட்டேன், குதிரைகள் நான் சொன்னபடியே ஆவணி மூலத்தில் வரும் என்றுசொன்னார். அதைக்கேட்ட பாண்டியன், திருவாதவூரரை நோக்கி, நமக்குள்ள சிநேகத்தைக் கெடுக்கவேண்டு மென்னும் எண்ணமுடையவர் சிலர் சொல்லக்கேட்டுக் கோவங்கொண் டெழுதினேம், அதை மனத்திற் கொள்ளாமல் பழையபடியே யிருமென்று உரிமை யுண்டாகப் பேசி, அரண்மனைக்கு அழைத்துப் போய்த் தன்பக்கத்திலிருத்தி, உயர்ந்த ஆடை ஆபரணங்களைக் கொடுத்து, ராஜகாரியங்க ளெல்லாஞ் சொல்லி வீட்டுக்குப் போமென்றனுப்பினான். அப்படியே திருவாதவூரரும்போய்த் தமது திருமாளிகையிலிருக்க, குதிரைகள் வரவேண்டிய தினத்துக்கு இரண்டு நாளைக்கு முன்னே பாண்டியன் தனித்திருக்கும்போது ஒருமந்திரிவந்து, அரசனே; திருவாதவூரர் கையில் நீர்கொடுத்த பொருளையெல்லாம், அவர், திருப்பெருந்துறையில் ஒரு சிவனடியார் கையில் கொடுத்துவிட்டார், குதிரைகள்

வாங்கவேயில்லை, அவர் சொன்னவையெல்லாம் பொய் வார்த்தைகள் என்றான். அதுகேட்ட பாண்டியன், சில தூதர்களைப்பார்த்து, நீங்கள் திருப்பெருந்துறைக்குப் போய், அங்கே குதிரைகள் இருக்கின்றனவா வென்று பார்த்துவாருங்களென்று கட்டளையிட, அவர்களும் அப்படியே போய்ப் பார்த்துத் திரும்பிவந்து, திருப்பெருந்துறையிலும் அதையடுத்தவூர்களிலும் தேடிப்பார்த்தோம், குதிரைகள் இல்லையென்று சொன்னார்கள். அது கேட்ட பாண்டியன் பெருங்கோபங்கொண்டு, திருவாதவூரரை வருத்திப் பொருள் வாங்கும்படி தண்டற் காரருக்குக் கட்டளையிட்டான். அப்படியே தண்டற்காரர்கள் திருவாதவூரரைப் பலவகையாய் வருத்தியும் கடுஞ்சொற்கள் பேசியும் அவர் பேசாதிருக்க அவரைச் சிறைச்சாலையில் வைத்தார்கள். உடனே சூரியன் அஸ்தமித்தான். அவருக்குநேரிட்ட துன்பத்தைக்குறித்து அந்த மதுரைமாநகரிலுள்ளாரெல்லாரும் அன்றிராமுழுதுங் கண்ணுறங்கிலர். பின்பு பொழுது விடிந்தது, சூரியனும் உதயமானான். பாண்டியராஜனும் எழுந்து விதிப்படி காலைக்கடனைக் கழித்து,ஆடையாபரணாதிகளணிந்து தனது அரண்மனைமுகப்பிலேவந்து வீற்றிருந்தான். தண்டற்காரர்கள் திருவாதவூரரைச் சிறைச் சாலையி லிருந்து வெளியிற் கொண்டுவந்து, பொருளைக்கொடுக்கச் சொல்லி வெய்யிலில் நிறுத்தி வருத்தினார்கள். அப்பொழுது திருவாதவூரர், பரமாசாரியரை நினைத்து, ஐயரே, ஆவணி மூலத்தில் குதிரை கொண்டுவருவோ மென்று நீர் சொன்னது பொய்யோவென்றும், பிரபஞ்சவாழ்வை வெறுத்து உம்மையடைந்த என்னை மீளவும் இந்தத்துன்பத்துக் காளாக்கினது தகுதியோவென்றும், உம்மிடத்தில் அன்பிலேனென்று என்னைவெறுத்து விட்டால் இங்கேயெனக்குவேறுதவி யுண்டோவென்றும் சிவனடியானொருவனை வெயிலில் நிறுத்தினார்களென்று பலரும் பேசிக்கொண்டால் உமக்குப் பெருமையாகுமோ வென்றும் அடியேன் படுந் துன்பத்தைக் கண்டால் யார்தான் உமக்கு அடிமைப்

படுவார்களென்றும் உன் அன்பர்சொல் உன் திருச்செவிக்கேறுமே யன்றி அன்பிலேனாகிய என்சொல் உன் திருச்செவிக்கேறுமோ வென்றும் பலவாறுசொல்லின் சொற்களையெல்லாம் பரமதயாளனாகிய சிவபெருமானவர் தமது திருச்செவியிலேற்றுத் திருவாதவூரருடை துன்பத்தை நீக்கநினைத்துப் பாண்டியனுக்குக் குதிரைகளைக் கொடுத்த கதை யினிச் சொல்லப்படுகின்றது.

திருப்பெருந்துறைச்சருக்கம் முற்றிற்று.

## குதிரையிட்டசருக்கம்.

பரமசிவனானவர் திருவாதவூரருக்கு நேரிட்ட துன்பத்தை நீக்கிக்காத்தருள வேண்டுமென்றுதிருவுளங்கொண்டு, நரிகளெல்லாம் பரிகளாகவும் தேவர்கள் அப்பரிகளைச் செலுத்துகிற பாகர்களாகவும் தமது திருவுளத்தில் நினைத்தார். நினைத்தமாத்திரத்தில் அப்படியேயானபின்பு தாமும் ஆரியதேசத்துக் குதிரைவர்த்தகர்போலத் தமது உருமாறி வேதக்குதிரைமீ தேறிக்கொண்டு, குதிரைச்சேவகர் இரண்டுபக்கங்களிலும் தம்மைச் சூழ்ந்துவர, மதுரைமா நகரத்தின் நெடியமதில் வாயிலில் குதிரைகளைக்கொண்டு வந்தார். அவ்விடத்திலிருந்தவர்கள் குதிரைகள் வந்த செய்தியைப் பாண்டியராஜனுக்கு அறிவித்தார்கள். கேட்ட அரசன் சந்தோஷித்துத் திருவாதவூரரிடத்தில் நேசம்வைத்து அவரை வரவழைத்து அவருக்கு ஆடையாபரணாதிகளை வெகுமதிசெய்து, குதிரைகளைப் பார்ப்போம் வாருமென்று அவரோடு அரண்மனையை விட்டு வெளியே வந்து சிவிகைமே லேறிக்கொண்டு, வையாளி வெளிக்குப்போய், முத்துப் பந்தலின்கீழே பொன்னினாற் செய்யப்பட்ட சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்து, திருவாதவூரருடைய மனங் களிக்கவும், தனது சந்திரவமிசம் விளங்கவும், திருநீறும் ஸ்ரீபஞ்சாக்ஷரமும் எந்நாளும் நிலைபெற்று விளங்கவும், சங்கு முதலிய வாத்

தியங்கள் சத்திக்கவும், பூமியிலிருந்து மேலெழுகின்றதுகள் ஆகாசத்திற் பரவவும், பெரிய கடலானது பரவி வருவதுபோல நெருங்கி வருகின்ற குதிரைக் கூட்டங்களின் தோற்றத்தைக் கண்டான். பின்பு குதிரைக் கூட்டங்களும் வந்தன. குதிரைச்சேவகர் நடுவே பரமசிவனுனவர் ஆரியதேசத்தார்க்கு அரசன்போல வந்தார். பாண்டியன், குதிரைச்சேவகர்க் கிடையே வந்த பரமசிவனது திருக்கோலத்தையும், குதிரைச் சேவகருடைய பொலிவையும், குதிரைகளுடைய அலங்காரத்தையும் கண்டு அதிசயித்து, மனமகிழ்ந்து, திருவாதவூரரை நோக்கி, இந்த ஆரிய குலேசரை ஒரு வீதியிலே இந்தக் குதிரைகளை நடத்தும்படிக்குப் போய்ச் சொல்லுமென்முன்; அப்படியே திருவாதவூரரும் போய்ப் பரமசிவனிடத்தில் விண்ணப்பஞ் செய்ய, அவரும் அதற்கிசைந்து, பாண்டியராஜன் நன்முகப் பார்க்கும்படி, குதிரையை நாகபந்தம், விருத்தம், நெடுவீதி என்னும் குதிரைநடையெல்லாம் இனிதாக நடத்திக் காட்டி, பிறகு நடனமிடும்படி நடத்திக்கொண்டு எதிரே வந்தார். பாண்டியராஜன் குதிரைக்குத் தலைவனைப் பார்த்து அதிசயப்பட்டுத் தலையசைத்து, மதிக்கப்படாத உயர்ந்த வஸ்திர மொன்றைப் பரிசாகக் கொடுத்தான். அதைப் பரமசிவனுனவர் சவுக்கினுல் ஏற்றுக்கொண்டு புன்னகை செய்தார். அதை விரைந்து வந்து கையினுலேற்று வணங்கவில்லை யென்றும், சிரசிலே தரித்துக் கொள்ளவில்லை யென்றும் பாண்டியன் கோவங் கொண்டான். இதைக்கண்ட திருவாதவூரர் பாண்டியனுக் கருகிற்போய், எப்படிப்பட்ட அரசர்கள் கொடுத்தாலும் அந்த வஸ்திரங்களைச் சவுக்கினுலேற்றுக்கொள்வது அவரது தேசவழக்கம் என்று சொல்லி அவன் மனத்திற் கொண்ட கோவத்தைத் தணித்தார். பாண்டியன் கோவந் தணிந்த பிறகு அசுவ லக்ஷண சாஸ்திரத்தில் வல்லவரை நோக்கி இந்தக் குதிரைகளின் இலக்கணங்களையாராய்ந்து சொல்லுங்களென்று சொல்ல, அவர்களும் அவற்றின் இலக்கணங்களை யாராய்ந்து பார்த்து, இந்தக் குதிரைகள்

மிகவும் உயர்ந்தவைகளென்று சொன்னார்கள். அசுவ லக்ஷண சாஸ்திரிகள் இப்படிசொன்னதின் பின்பு பாண்டியன் அவற்றை விலை மதித்துத் தான் கொடுத்தனுப் பின பொருளினும் எட்டுப்பங்கதிகமான பொருள் விலை பெற்ற குதிரைகள் கிடைத்தமையால் மிகவும் மனமகிழ்ந்து, பரமசிவனது திருமுகத்தைப் பார்த்து, இந்தக் குதிரைகளையெல்லாம் கயிறுமாறித் தரவேண்டுமென்று சொல்ல, அப்படியே குதிரைச் சாத்தர்களுக்குள்ளே பெரியவராகிய ஒருவர் கயிறு மாறிக்கொடுக்கக் குதிரைகளைக் கொண்டுபோய் லாயத்தில் சேர்த்தார்கள். பரமசிவனவர் பாண்டியராஜனும் திருவாதவூரரும் காணும்படி தாம்வந்ததிசை வழியாகப்போய்த் தமது பழையவடிவங் கொண்டு, தேவர்கள் சூழ்ந்துவரத் தமது கோயிலில் புகுந்தார். பின்பு பாண்டியன் திருவாதவூரரை நோக்கி, இப்படிப்பட்ட உயர்ந்த குதிரைகள் உம்மாலே யெனக்குக் கிடைத்தனவென்று உபசரித்து அரண்மனைக்குப் போக விடுத்துத் தானும் தன் அரண்மனையிற் புகுந்தான். அந்த நாள் கழித்து மறுநாள் உதயமான பின்பு பரமசிவனது அருளினால் அந்தக் குதிரைகளெல்லாம் நரிகளாகி, மதுரையிலுள்ளவர்களுடைய நித்திரையை நீக்கித் தமக்குள்ளே சண்டையிட்டு, அந்தக் குதிரைலாயத்தி லிருந்த குதிரைகள் வெருளும்படி அவைகளைக் கொன்று, ஊளையிடத் தொடங்கின. இதைக்கண்ட பாண்டியனுடைய குதிரைக்காரர்கள் போய் அவனுக்கு இதைத் தெரிவித்தார்கள். கேட்ட பாண்டியன் அதிக கோவங் கொண்டான். பரமசிவனவர் நரிகளை மாயமாய்ப் போகும்படி செய்ய அவை மறைந்துபோயின. உடனே அரசன் தன்னிடத்து அன்புள்ள தண்டற்காரரை வரவழைத்து, மந்திரியாகிய திருவாதவூரரை அழைத்து வாருங்கள் என்று சொல்ல அவர்கள்போய் அழைத்தவுடனே புறப்பட்டு வந்து பாண்டியராஜனுக்குப் பக்கத்திலே நின்றார். பாண்டியன் அங்கிருந்த சில மந்திரிகளை நோக்கி இவர் இப்படி செய்யலாமோ, இவர் இப்படி செய்தாலும், பிராம

ணர், தவசிகள், மாதர்கள், விருத்தர்கள், பாலர்கள் என்பவர்கள் என்ன குற்றஞ் செய்தாலும் அவர்களை அரசன் தண்டிக்கலாகாது என்று தர்மசாஸ்திரம் சொல்லுவதனால் இவரைத் தண்டிக்க மனமில்லையென்று சொல்லி தண்டற்காரரை நோக்கி, நீங்கள் இவரைக்கொண்டுபோய் வெய்யிலிலே நிலத்திற் கோடு கிழித்து அதிலே நிறுத்தி நாம் கொடுத்த திரவிய முழுதும் வாங்குங்கள் என்றான். அப்படியே அவர்கள் இவரைக் கொண்டுபோய் வெய்யிலிலே நிறுத்தினார்கள். அப்போது திருவாதவூரர் பரமசிவனை நினைந்து, கடவுளே, நான் என்செய்வேன், உனக்குக் கிருபையில்லையோ, என்னை யடிமைகொண்டவன் நீயல்லவோ, என் துன்பத்தை அறிந்திலையோ அறிந்திலையோ, என்னை இந்த வருத்தத்தினின்று நீக்கிக் காத்தருளாயாயின், நீ முற்காலத்தில் நஞ்சுண்டு தேவர் முதலானோரைக் காத்ததும் முப்புரங்களை யெரித்ததும் பொய்யாமென்று இரங்கினார்.

குதிரையிட்டசருக்கம் முற்றிற்று.

## மண்சுமந்த சருக்கம்.



இப்படி திருவாதவூரர் இரங்கின நிலையைப் பரமதயாளுவாகிய பரமசிவனானவர் கண்டு இரக்கங்கொண்டு, கங்காநதியை நோக்கி, நீ போய்த் திருவாதவூரருடைய துன்பத்தை நீக்கக்கடவை யென்று சொல்லி விடுக்க, அந்த நதி பெரிய பெருக்கெடுத்து வைவை நதியிலே சேர்ந்து மிகவும் பெரிய கடல்போல எங்கும் புரண்டு பரவிற்று. இந்தப் பெரிதாகிய வைவை நதியின் பெருக்கை அந்த மதுரைமா நகரத்து ஜனங்களெல்லாரும் கண்டு கவலையடைந்து வருந்தாநிற்க, வெள்ளம் மென்மேலும் அதிகரித்து மதுரைமாநகரத்து மதிற்புறத்தே வந்து சூழ்ந்துகொண்டது. இந்தச் செய்தியைப் பாண்டியன் கேட்டு விரைவாய் வந்து, பொன்னையும், பூவையும் முத்தினையும், வஸ்திரத்தையும், ரத்நாபரணத்தையும் அந்த

வையை நதியில்விட்டு, இந்த வுலகத்திலுள்ள ஜீவராசிகளுக்கெல்லாம் உயிர்போன்ற தாயே, உன்னுடைய கோவம் தணிய வேண்டு மென்று வணங்கிநின்றான். அப்படி வணங்கியும் அந்தநதியானது கோவம் தணியாமல் மேன் மேலும் அலைகளை வீசிக்கொண்டு வருவதைக் கண்டு இதன் வரலாற்றை யோசித்து அறிதல் வேண்டுமென்று தன் மனதுக்குள்ளே சற்றுநேரம் ஆலோசித்துப் பிறகு தன் மந்திரிகளை நோக்கி, நான் பெரியோர்களுடைய மனம் புழுங்கும்படியான தீமை செய்ததுண்டோ, நீங்கள் சொல்லுங்கள் என்றான். அதைக் கேட்ட மந்திரிகள் ஆலோசித்து, திருவாதவூரரைக் கோட்டினிறுத்தி வருத்துவதை நீக்கி அவரை மனமகிழ்வித்தால் இந்தப் பெருக்கானது ஊரை யடித்துக்கொண்டு போகாது என்று ஆலோசித்துச் சொல்லி வணங்கிநின்றார்கள். அதைக் கேட்ட பாண்டியன் மனமகிழ்ந்து அவர்களைக் கிருபையோடு பார்த்து என் மனத்தில் நினைத்தபடியே நீங்களும் சொன்னீர்கள் என்று சொல்லி, திருவாதவூரரை வரவழைத்துத் தன் முன்னே யிருத்தி உபசரித்து, நீர் சிவனடியார் கையிற் கொடுத்த பொருள் நம்மதேயானால் அந்தப் புண்ணியம் பிறருக்குச் சேருமோ, இதை யறியாமல் நான் உம்மை வருத்தினது என் அறிவில்லாமையின் காரியமேயாகும், இந்த வையை யாற்றுப் பெருக்கானது நமது நகரத்தை யழிக்காதபடி தவத்திற் சிறந்தவராகிய நீரே தடை செய்ய வேண்டும், என்று பிரார்த்தித்தான். அதற்கு மனமிசைந்த திருவாதவூரர் பரமசிவனது திருவடியை நினைந்து, அவர் குதிரையேறி வந்த திருக்கோலத்தை மனத்தி லமைத்து வணங்கின மாத்திரத்தில், வையை நீரானது வேகங்குறைந்து அடங்கி உள் வாங்கிப்போகவே, திருவாதவூரர் அந்த நதிக்கரையில் வந்து நின்று, அங்குள்ள தூதர்களை நோக்கி நீங்கள், நகரிலுள்ளவர்களெல்லாரும் வந்து இந்த நதியில் அணை செய்யவேண்டும் என்று முரசறைவித்து விரைவில் வாருங்களென்று நியமிக்க, அவர்களும் அப்படியே முரசறை

வித்து மதுரை நகரத்திலுள்ள மனிதர் யாவரும் நதிக் கரையில் வந்து சேரும்படிசெய்தார்கள். அந்நகரத்து ஜனங்கள் அணை கோலுதற்குரிய கருவிகளாகிய மண் வெட்டி, குந்தாலி, கூடை முதலியவற்றை யெடுத்துக் கொண்டுவந்து நதிக்கரையில் இடமில்லாமல் நிறைந்தார் கள். அப்போது திருவாதவூரர் நியமித்த அதிகாரத்தைப் பெற்ற தூதர்கள் எவ்விடத்திலும் போய் ஒவ்வொரு வருக்கும் இவ்வளவென்று அளவுகோலால் அளவுசெய்து விட்டு அணைகோலுந் தொழில் முயன்று நின்றார்கள். இப்படி அணை கட்டும்போது, பரமசிவன்மீது மிகவும் அன்புள்ளவளும், பிட்டு விற்று ஜீவனம் செய்பவளும், நரைத்த கிழவியும் ஆகிய செம்மனச் செல்வி யென்ப வள் தனக்கு அளவு செய்துவிட்ட பங்கை அடைக்கச் சத்தியில்லாமல் நிற்க, அதிகாரிகள் அவளை நோக்கி, நீ உன் பங்கை என் அடைக்கவில்லை யென்று கடுஞ்சொற் களால் வருத்த, அவள் பார்த்து நான் கொடுக்கும் பிட் டைக் கூலியாக வாங்கிக்கொண்டு என் பங்கை யடைப்ப வர் ஒருவருமில்லையே, நானென் செய்வேன், என்று துக் கித்துக்கொண்டு சொக்கநாயகர் ஆலயத்துக்குப்போய்ச் சுவாமியை வணங்கி வாழ்த்தித் தன் கருத்தை விண்ணப் பஞ் செய்து நின்றாள். சொக்க நாயகர் அவள் மீது இரக் கங்கொண்டு, ஒரு கூலியாள்போல வடிவங்கொண்டு, அவள் காணும்படி அவளுக்கெதிரே வந்து நின்று, என் னைக் கூலிவேலைக்கு வைத்துக்கொள்வாருண்டோ வென் றழைக்க, செம்மனச் செல்வியானவள் மனமகிழ்ந்து அந் தக் கூலியாளிடத்திற்குப் போய் நின்று, மகனே நீ என க்குக் கூலியாளாய் வரவேண்டுமென்று சொல்ல, கூலி யாளானவர், கூலியை முன்னே கொடுத்தால் வருவே னென்று சொல்ல, அந்த அம்மை இப்போது வேண்டு மானால் உன் பசி தீரச் சாப்பிடுவதற்குத் தேவாமிர்தம் போன்ற இந்தப் பிட்டைத் தருவேன், பணமாகவேண்டு மென்றால், சாயங்காலம் பிட்டு விற்றபிறகு பணமாகத் தருவேன் என்றாள். அதைக் கேட்ட கூலியாளானவர்

அதற்கிசைந்து அவள் கொடுத்த பிட்டை வாங்கி யுண்டு, தாயே பசிதீர்ந்தது, இனி உன் பங்கு முழுதும் நானே யடைக்கிறேன் என்று சொல்லிப் பின்னும் கொஞ்சம் பிட்டினை வாங்கியுண்டு, வையைக் கரையில் வந்துநின்று அம்மையை நோக்கி, உன் பங்கைக் காட்டென்று சொல்ல, அவளும் அப்படியே காட்ட, சொக்கநாயகராகிய கூலியாளானவர் அடைக்கத்தொடங்கினூர். எப்படியென்றால், மண்ணை வெட்டுவார், கூடையிலே யிடுவார், பிறையணிந்த தலைமேலே சும்மாடு கோலிவைப்பார், நதிக்கரையிலே கொட்டித் திரும்புவார், வேர்ப்பார், உடம்பினைப் பவர்போலப் பிட்டினை மென்று நாவினுற் சுவைப்பார், அந்தப் பிட்டு வாணிச்சியம்மைமேல் அன்புவைத்துக் கிருபைக் கண்ணுல் நோக்குவார், பிட்டு நன்றாயிருக்கின்றதென்று தலையசைப்பார், பரமசிவனுக்குக் கண்ணப்ப நாயனூர் படைத்த மாமிசத்தினும் இந்தப் பிட்டு மிகவும் இனிமையா யிருக்கின்றதென்பார், மண்வெட்டியோடு கவித்த கூடையைக் கொண்டு கூத்தாடுவார், மண்ணை வெட்டிக் குவிப்பார், சீக்கிரமாய்க் காலினுலே தாண்டித் திரும்புவார். இப்படி இவர் செய்வதைப் பார்த்த பிட்டு வாணிச்சியம்மை பயந்து பாண்டியன் காரியக்காரர் பார்த்தால் என்னுய் முடியுமோ வென்று இவரை அதட்ட மாட்டாதவளாய் மனத் துன்பத்தோடு இதற்கென்செய்வேனென்று நினைந்து நின்றுள். இவள் நினைவை யறிந்த கூலியாளானவர் இவளை நோக்கி, தாயே, நீ கவலைப்படாமல் உன் வீட்டுக்குப் போ, உன்பங்கை நான் விரைவில் அடைப்பேன் என்று சொல்ல, அந்த அம்மையும் அப்படியே வீட்டுக்குப்போனுள். அப்போது அவள் பங்கைக் கடவுளாகிய சொக்கநாயகர் அடைக்கக் கண்ட வையை நதியாகியபெண், அலைகளாகிய கைகளால் அவரை வணங்கினுள். கூலியாளாய்வந்த சொக்கநாயகர், மண்ணெடுக்குங் கூடை சடாபாரத்தையுடைய திருமுடிக்குத் தலையணையாகவும், கொன்றை மர நிழலிலே நிறைந்திருக்கிற மணலே மெத்தையாகவும், கொண்டு வேலைசெய்யும் முய

ற்சியாலே வருந்தித் திருமேனி யிளைத்தவர்போல நித்திரைசெய்தார். அவர் நித்திரை செய்யும்போது, பேரின்ப வாழ்வையுடைய திருவாதவூரர் ஒளியையுடைய பிரம்பை வைத்துக்கொண்டு பக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து, அவரவர்களுக்கு அளந்துகொடுத்த பங்கிலுள்ள குற்றத்தையும் நன்மையையும் அறிந்து வாருங்கள் என்றார். அவர்களும் அப்படியே வையைநதிக்கரையிற் போய்ப் பார்த்து எல்லாரும் அவரவர் பங்கை நன்றாய் அடைத்திருப்பதைப் பார்த்து மனமகிழ்ந்து, பின்பு பிட்டு வாணிச்சியம்மைக்காக சொக்கநாயகர் அடைக்கிற பங்கு அடைபடாமலிருப்பதைப்பார்த்து இது யாருடைய பங்கென்று அங்கே நிற்பவர்களைக் கேட்க, அவர்கள் மதுரைமா நகரத்தில் பிட்டுவிற்று ஜீவனம் பண்ணுகிறவளாகிய ஒரு கிழவி யிருக்கின்றாள், இது அவள் பங்கு, அவள் தனக்கு வேலை செய்யத் திராணி யில்லாமையாய் ஒரு கூலியாளைக் கொண்டு வந்து விட்டாள், அவன் வேலையை விரைவாய்ச் செய்யாமல் சிரித்தும் ஆடியும் பாடியும் காலங் கழிக்கின்றான், அவனைப் பார்ப்பீராக என்றார்கள். அப்போது அவர்களிற் பெரியவனாகிய ஒருவன் அவர்களை நோக்கி, அவனை யிங்கே அழைத்துக்கொண்டு வாருங்கள் என்றார். அவர்களில் ஒருவன் கூலியாளை யழைக்கும் பொருட்டு ஓடினான். அப்போது பரமசிவனானவர் திடுக்கென்று விழித்துக்கொண்டார். அவ்வளவில் ஓடின தூதன் அவரைப் பார்த்து எங்கள் எசமானனவர் உன்னை யழைத்து வரச்சொன்னார், வாவென்றான். பரமசிவனானவர் பயந்தவர்போல நிற்க, அவரை அந்தத் தூதன் கையைப் பிடித்து இழுத்தான். அப்படியிழுத்துக்கொண்டுபோய் எசமானிடத்தில் விட்டவுடனே, அவன் அவரைப் பார்த்துக் கோவங்கொண்டு, பக்கத்தில் நின்ற ஒரு பாவியைப் பார்த்து, இவனை உதிரம் ஒழுகும்படி அடிப்பாயாகவென்று சொன்னான். அவனும் பிரம்பைக் கையிலெடுத்தவுடனே முனிவரும் தேவரும் கைகூப்பி வணங்கினார்கள். அவன் அடித்த அடியை



திருவாதவூரர் திருவாலவாயில் சொக்கலிங்கப்பெருமா
ணைத்தரிசித்தல்)

உமாதேவியா ரிருக்கின்ற இடதுபாகத்திலேற்றுக்கொள்ளாமல் அங்குள்ளாரெல்லாம் திடுக்கிடும்படி சொக்கநாயகர் மறைந்துவிட்டார். அந்த அடியானது பாண்டியன், அவன் பத்தினிமார், மந்திரிகள், சேனைகள், தேவர், முனிவர் முதலாகிய எல்லார் மேலும் பட்டதுமன்றித் திருவாதவூரர் மேலும் பட்டது, அப்போது திருவாதவூரர், நான் உய்யும்படி என்னை யடிமைகொள்ள வந்த சொக்கநாயகர் ஒருவருக்குக் கூலியாளாகி எழுந்தருளினரோவென்று மிகவும் துக்கித்துக் கொண்டிருக்கும்போது தூதர்கள் ஓடிவந்து கடவுளுடைய திருவிளையாட லெல்லாம் அவருக்குச் சொன்னார்கள். அதைக் கேள்விப்பட்ட திருவாதவூரர் மனந் தளர்ந்து, அவர் மண் சுமந்த இடத்தைக் காட்டுங்களென்று அவர்களோடு போய் அந்தஇடத்தைப் பார்த்து, கடவுளே! அடியேன் கொடிய நரகத்தில் விழாமல் என்னைத் தடுத்தாட்கொண்டனையே, நீ யெவ்விடத்தி லிருக்கிறு யெனத் தொழுதகையும் அழுதகண்ணும் புளகங்கொண்ட வுடம்பு முடையவராய்க் கீழேவிழுந்து புரண்டு இந்தப்பிரகாரம் புலம்பத் தொடங்கினர்.

நீறுபடும்பொன்மேனிநின்மலனேநெடுங்கங்கை
யாறுபடுஞ்சடைமுடியாயடியவர்கட்கெளியானே
மாறுபடும்புரமெரித்தாய்மாறுபடும்போதுடலில்
கூறுபடுஞ்சிவஞானக்கொம்பினுளங்குழையாதோ.

கொங்கையான்பணிமார்பிற்குறியிடுமவ்வீறுடைய
மங்கையாள்பெருமானைமண்சுமக்கநினைத்தாளோ
கங்கையாளலக்கரத்தாற்கரைத்திலளோபுள்ளூருவாம்
பங்கையாசநனறியாப்பணிமுடியென்றறியாளோ.

பிரமனுடன்றிருமாலும்பிறப்பசலப்பல்காலும்
பரிவினுடன்றருமலரோபத்தரிடும்பச்சிலையோ
புரிதருசெஞ்சடையோநற்புதுமதியோவாயிரவாய்
வரியரவின்பலபடமோமண்சுமக்குஞ்சும்மாடு.

கலையறியும்புகழ்வையைக்கரைதிருவம்பலமாக
அலையெறியும்புனலோசையந்தரதுந்துமியாகத்
தலைவனடங்கண்டார்களரவமெனுந்தவமுனியும்
கொலைசவிரும்புலியென்னுங்குருமுனியுமானுரோ.

மீனேறுங்கொடித்தென்னன்விழிக்கேறவிரைதுரகந்
தானேறுவதுகண்டுதெருங்கலைபொற்செண்டேறத்
தேனேறுமலர்க்கொன்றைத்திருமுடிமேன்மண்ணேற
யானேறுஞ்சிவபதமுமெனக்கேறவின்றாதோ.

பொன்னுலகத்துள்ளோரும்புரந்தரனுந்திருமாலும்
மன்னுமறைக்குரியோனும்வழியடிமைத்தொழில்செய்ய
அன்னைதனக்காளாகியணிவையைகடைத்தடியுண் [னே.
டென்னை யருட்பணிகொள்ள விசைந்தனையோ விறையோ

கட்டுமெரைத்துணிச்சீரைக்கச்சையுமத்திருத்தோளிற்
கொட்டுமுடித்தலைமீதுகவித்ததொருகூடையுமாய்ப்
பிட்டிநேற்றவமுடையாள்பின்புவருந்திருக்கோலம்
இட்டமுறத்தொழும்படிநான்கண்டிலேனிறையோனே.

தாரூருஞ்சடைமுடியாய்தவம்பெருகமுயன்றவர்கள்
நீரூரும்புகழ்வையைநெடுங்கரைமேனின்றாரோ
சீரூருங்கனகமுடித்தென்னவனேமதுரையெனும்
பேரூரிலிருப்பவரோபிட்டமுதிட்டருள்வாளோ.

பொன்மவுலித்தலைமீதுபுண்ணியர்மண்சுமந்தேறும்
கொன்மலியுங்கோலவறையுங்குளிர்வையைப்பேராறும்
கன்மமெனும்பகைபோகக்கண்ணுதல்வெம்பரியேறும்
தென்மதுரைமூதூருமல்லவோசிவலோகம்.

இப்படிப் பலவாறுகப்புலம்பி இரக்கமடைந் திருந்தார். வையை நதியும் விரைவாய் வடிந்தது. பின்பு பாண்டியராஜனும் இவை யெல்லாம் சிவன் செயலாமென்று தெளிந்து திருவாதவூரரை வணங்கி, தேவலோகத்திலிருந்திறங்கி, அருளையுடைய ஆமாத்தியர் குலத்திலேவந்து அவதரித்து, அடியேனுக்கு மந்திரியாகி மனமகிழ்ந்து எமது பிதாவாகிய சொக்கநாயகர் குதிரையேறி வருவதை எனக்குக் காட்டி, எப்போதும் நீங்காதபாசத்தனை யறும்படி திருவுளம் பற்றினீர், என்பிறவியொழியத்திருமேனி கொண்டுவந்து அடியேனுக்குக் காட்டினுரென்று அறியாமல், அவர்க்கு அழுக்கு வஸ்திரத்தைக் கொடுத்தேன், யான் என்னபிழைசெய்தேன், கங்கையைத் தரித்த சடைமுடியை யுடைய கடவுளைக் குதிரை யாளாக்கி மெய்ப்பொருளென்றறி யாமல் பொருளைவேண்டி உம்

மையும் வருத்தினேன், என்பிழைக ளெல்லாவற்றையும் பொறுத்தருளவேண்டும்.சொக்கநாயகர் குதிரைமேலேறி வந்தது மல்லாமல் சடைமுடிமேல் மண் சுமந்த கீர்த்தி போதாதோ, நான் நாள்தோறும் உமது பணிவிடை செய்ய நீர் இவ்வுலகத்தை யாளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். இந்தப்பிரகாரம் பாண்டியன் சொல்லி வணங்கத் திருவாதவூரர் பாண்டியராஜனைப் பார்த்துச் சிவ பெருமான் நிலைபெற்றிருக்கிற திருப்பெருந்துறைக்குப் போகும்படி என்னை யனுப்புவதே இவ்வுலகத்தை யாளக் கொடுத்ததாகும் ஆதலால் திருப்பெருந்துறைக்குப் போகும்படி விடை கொடுக்க வேண்டுமென்றார். அது கேட்டபாண்டியனும் அப்படியே செய்யலாமென்று விடைகொடுத்துத் தான் மதுராபுரியில் பிரவேசித்தான். பிறகு திருவாதவூரர் அரசன் பொருட்டுக் கொண்டிருந்த மந்திரி வேடத்தை நீக்கி மேன்மையாகிய தவவேடங் கொண்டு சொக்கநாயகரை வணங்கிமதுரையை விட்டுப் புறப்பட்டுக் கடவுள் தம்மை யாண்டருளின திருக்கோலத்தைக் கண்டு வணங்கவேண்டு மென்னும் விருப்பங் கொண்டு திருப்பெருந்துறைக்குப் போய், முன்பு போல முனிவர்கள் சூழவிருந்த போதில், பரமசிவனுடைய திருவடியின் மேல் வீழ்ந்து வணங்கி,

தீண்டுதற்கரியமார்பிற்சேயிழைதனத்தினாலும்
ஈண்டொருமாற்றினாலுமெய்தியதழும்பபோற்றி
வேண்டியவடிவமாகிவெம்பரிமேற்கொண்டெம்மை
யாண்டருள்செய்யவந்தவண்ணலேபோற்றிபோற்றி.

அண்டருக்கரியாய்போற்றியடியவர்க்கெளியாய்போற்றி
வண்டமிழ்ப்பாண்டிநாடுவாழமண்சுமந்தாய்போற்றி
கண்டனக்கினியமேனிகாட்டியென்சென்னிமீது
முண்டகத்திருத்தாள்வைத்தமுத்தனேபோற்றிபோற்றி.

என்று இந்தப்பிரகாரம்துதித்த திருவாதவூரரது சிரசின்மேல் பரவசிவனானவர் தமது திருக்கரத்தை வைத்து இன்சொற் சொல்லி எழுந்திருமென்று சொல்லத் திருவாதவூரர் எழுந்திருந்தார். கடவுளானவர் அவருக்குத்

திருநீறு தரித்துக் கிருபாநோக்கஞ் செய்து அன்புள்ள அடியார் கூட்டத்தில் விளங்கியிருந்தார் அப்படி யிருக்கும் பொழுது அந்த அடியார்களை நோக்கி, கைலாயத்தி லிருக்கிறவர்கள் நமது திருவுருவைத் தரிசிக்கவேண்டு மென்றுவிரும்பினார்கள், ஆதலால் அவ்விடத்துக்கு நாம் போகவேண்டும், நீங்கள் இவ்விடத்தில் இன்பத்தோடு வாழ்ந்துகொண்டிருங்கள், நாம்போவோம் என்று சொல்லக்கேட்ட அடியவர்கள் வந்து சூழ்ந்துகொண்டு வணங்கித் துதித்து, ஐயரே இனி யாம் தேவரீரைத் தரிசிக்கிறது அருமையென்று பூமிமேல் விழுந்து துக்கித்து அழுதார்கள். அப்படி அன்பு கொண்டு அழுகின்ற அடியார்கள்மீது பரமசிவனானவர் அன்புவைத்து நீங்கள் வருந்துதலை யொழியுங்கள், இந்தக் குருந்த மர நிழலிலே தெய்வ பீடமொன்று செய்து அதன்மேல் நம்முடைய திருவடிகளைச் செய்து வைத்து நாள்தோறும் வணங்கி விரும்பியிருங்கள். அப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் இந்தப் பொய்கையிலே செழுமையாகிய நெருப்புண்டாகும், உண்டானவுடனே நீங்கள் எல்லீரும் தடாகத்தில் விழுந்து நம்மிடத்தில் வந்து உங்கள் கவலையை யொழிப்பீர்கள் என்று சொல்லி, அந்த அன்பர்கள் சூழ்ந்து பின்னேவரக் கைலாயத்துக்கெழுந்தருளினார். எழுந்தருளினவுடனே அன்பர்களெல்லாம் தாயைப் பிரிந்த பிள்ளைகள்போல வாடினார்கள். இப்படி யிவர்கள் வாடிநிற்கத் திருவாதவூரர் மாத்திரம் பரமசிவனைத் தொடர்ந்துபோனார். இவர் தொடர்ந்து வருவதைக்கண்ட பரமசிவனானவர் கிருபைமிகுந்து அங்குள்ள ஒரு கொன்றை மர நிழலிலே வீற்றிருந்தார். திருவாதவூரர் அவ்விடத்திற்போய் அந்தக் கடவுளுடைய சீர்பாதத்தைத் தொழுது நிற்கப் பரமசிவனானவர் அவரைப் பக்கத்தி லிருத்தி வைத்துக்கொண்டு, நாம் எங்கே யிருந்தாலும் இந்தக் குருந்த மரநிழலிலே யெல்லாரும் கண்டு வணங்கி உய்யும்பொருட்டு நித்தியவாசம் பண்ணுவோம், ஆகையால் இவ்விடத்தில் அடியார் கூட்டத்துடன் சேர்ந்திருந்து, இந்தப் பொய்கையி லுண்டா

கின்ற நெருப்பில் அவர்கள் யாவரும் விழும்போதுநீயும் கூடவிழாமல் இவ்விடத்தை விட்டு, உத்தரகோச மங்கைக்குப்போய் அட்டமாசித்திகளையும் அடைந்து, தெய்விகமாகிய லிங்கவடிவா யிருக்கிற தலங்களில் இன்ன இன்ன தலங்களில் வணங்கினால் அந்தந்தத் தலங்களில் இந்த ஒளியுருவையே நீ காணும்படி நாம் காட்டுவோம், பிறகு திருக்கழுக்குன்றம் என்னும் தலத்தை வணங்கி, இங்கேவந்து சிதம்பரத்துக்குப் போய்ப் புத்தரைவாதில் வென்ற பின்பு எமது சாயுச்சிய பதவியைப் பெறுவா யென்றார்.

மண்சுமந்தசருக்கம் முற்றிற்று.

## திருவம்பலச் சருக்கம்.



அப்படிப் பரம சிவனானவர் சொல்லக்கேட்ட திருவாதவூரர் கடவுளை நோக்கி, ஐயரே திருப்பெருந்துறையி லல்லாமல் புண்டரீக புரம் என்னும் பெயரை யுடைய சிதமபரத்திற் பொருந்துதல் பரமுத்தி யென்று நீர் அருளிச்செய்தது என்னவென்று கேட்கப் பரமசிவ னானவர் சொல்லத் தொடங்கினார். எப்படி யென்றால், புழுவானது தன்னை யெடுத்த விடத்தி லல்லாமல் கொண்டுபோய் வைத்த விடத்தில் குளவிவடிவங் கொள்ளும், அதுபோல, உன்னைக்கண்ட இந்தத் தலத்தில் உனக்கு உண்மை யறிவை உபதேசித்தோம். மேன்மை பொருந்திய சிவாநு பூதியாகிய மோக்ஷம் சிதம்பரத்தில் உண்டாகும், உடம்பில் மூலாதாரத்தி லிருந்து எழுந்த நல்ல சுழுமுனைநாடி யுடனே நிறைந்த வொளியாய், அந்த வொளியிலே பஞ்சாக்ஷரமும் ஒன்றாய் நெடுக்குழலோசையாய்ப் பிரகாசம் பொருந்திய அந்தவோசை நீங்கி யடங்கின விடமே நாள்தோறும் நாம் ஆடுகின்ற சிதம்பரமாகும், பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்று சொல்லப்பட்ட பூதங்களைந்தும், இடை, பிங்கலை, சுழுமுனை என்று சொல்லப்பட்ட நாடிகள் மூன்

றும், அக்கினி மண்டலம் ஆதித்த மண்டலம் சந்திர மண்டலம் என்று சொல்லப்பட்ட மண்டலங்கள் மூன்றும், ஆகி நிலைபெற்ற சம்பந்தத்தால் பிண்டமும் அண்டமுமாகும். பிரமா, விஷ்ணு, ருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் என்று சொல்லப்பட்ட ஐந்து வடிவமாகக் கண்டவர்கள் நின்ற விதமும் இவ்விரண்டு விதத்திலும் காணலாம், ஆகையால் இவ்வண்டத்தில் அறிதற்கரிய பொருளாகி, என்றும் குற்ற மற்ற மூலத்தை நாடிப் பார்த்தால் பிரகாசிக்கிற சிவலிங்க மேனியா யிருக்கும் மேலாகிய அந்த நாத வெளியின்மேல் ஒளியா யிருப்பது சபை, அங்கே உமாதேவி ஆசையோடு காணும்பொருட்டு மனம் பொருந்த நிருத்தம் பண்ணுவோம். அந்த நடனம் ஏதென்றால், சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்று சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியங்களையும் நடத்துவ தாகும். பாசத்தளையை யறுக்கின்ற இந்த வடிவமும் அதுவே யாகும். உலகத்திலுள்ளவர் யாவர் வந்து தரிசித்தாலும் பரமுத்தியைக் கொடுத்துக் கிருபையைத் தருகின்ற தெய்வத்தலமும் அந்தச் சிதம்பரமே யாகும். திருமாலும், பிரமனும், பதஞ்சலி வியாக்கிர பாதர்களும், திரிபுராதிகளும், தில்லை மூவாயிரவரும், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும், வணங்குகின்ற எல்லையையுடையது அந்தத்தில்லைமாநகரம். இவைகளை யெல்லாம் தெளிந்தறிவாயென்று சொல்லித் திருவாதவூரருடைய நெற்றியில் விபூதி தரித்து, இவ்விடத்து நில்லென்று நீங்குதலும், இவர் நில்லாதவராய்க் கொஞ்சதூரம் போனார். இவரது தன்மையைக் கண்டு பரமசிவனானவர் நின்று கிருபை செய்து கண்ணுக் கெதிரே நடப்பதைக்கண்டு மனங்கனிந்து நிற்பவராகிய திருவாதவூரர் காணும்படி கடவுளானவர் மறைந்தார். அதைக் கண்ட திருவாதவூரர்அச்சமும் இரக்கமும்அடைந்து வணங்கிக்கையைச் சிரசின்மேல் வைத்துக் கொண்டு அடியார் கூட்டத்தையடைந்த அடியாருந் தாமுமாய்க் குருந்தமர நிழலில்

ஒரு பீடம் அமைத்து அதின்மீது வேண்டுவார் வேண்டும் வரங்களைத் தருகின்ற திருவடிகள் செய்துவைத்து வணங்கி யிருந்தார். அப்படி யிருக்கின்ற நாளிலே, கடவுளானவர் அன்பில்லா தவர்கள் தம்மைப் பாடினாலும் இரங்கி அவர்களுக் கருள்செய்வா ரென்று தெளிந்து நமச்சிவாய என்று தொடங்கி இறைவரது திருவடியைப் புகழ்ந்து ஞான வாசகமாகிய திருவாசகத்தைச் சொல்லத் தொடங்கி, அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்தபத்து, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப் பத்து, அடைக்கலப்பத்து, செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து, என்பவைகளை அருளிச்செய்த பிறகு திருவார்த்தை, எண்ணப்பதிகம், திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டிவிருத்தம் என்பவற்றையும் அருளிச்செய்து அடியார்களோடு கூடிச் சிலநாள் தங்கி யிருந்த பிறகு ஒருநாள், முன்னே பரம சிவனுனவர் அநுக்கிரகித்தபடியே தடாகத்தில் அக்கினி யுண்டாகக் கண்டு அடியார்களெல்லாம் பஞ்சாக்ஷரத்தை செபித்துக் கொண்டு அந்த அக்கினியில் மூழ்கினார்கள். மூழ்கினவுடனே பரமசிவனுனவர் இடப வாகநத்தின் மீது உமா தேவியாரோடு எழுந்தருளித் தரிசநங்கொடுக்க, அடியாரெல்லாரும் சிவகண நாதர்களாய் வடிவுகொண்டு இறைவருக் கெதிரே வர இறைவர் அவர்கள் முகத்தைப் பார்த்து, நாம் உங்களை விட்டு நீங்கினதும், தடாகத்திலுண்டாகின்ற அக்கினியில் மூழ்குங்கள் என்று சொன்னதும் யாதுக்கென்றால், திருவாதவூரன் சிதம்பரத்தில் புத்தரை வாதில் வெலலவேண்டி யிருப்பதால், அவன் தனியே யிருந்தால் துன்ப மடைவான், ஆதலால் உங்களையும் சிலநாளிருக்கச் சொன்னோம். மும்மலத்தொடர்பு நீங்கினவர்களும் இந்தப் பூமியில் மாநுட வடிவு கொண்டு சிலநாளிருந்தால் மலவாசனை பின்னும் சேருமென்று தடாகத்தில் ஞானக்கினியை யுண்டாக்கி பொய்யாய்த் தோன்றிய மாயா சரீரத்தை நீக்கி இந்நாளில்

இந்தச் சரீரத்தை உங்களுக்குக் கொடுத்தோம். என்று அருளிச் செய்து ஆகாயத்தில் மறைந்தார். அப்போது திருவாதவூரர் வேறாகப் போய் ஒரு கொன்றைமர நிழலிலே சிவயோகஞ் செய்திருந்தார். அப்படி சிவயோகஞ் செய்திருக்கிற காலத்தில் அடியார்கள் அக்கினியில் புகுந்த விதம், கடவுள் இடப வாகநத்தின்மேல் எழுந்தருளினவிதம், முதலியவற்றையும், இனித்தாம் கனக சபையிற்போய்ச் சேரும் விதத்தையும் சிவயோகத்தில் அறிந்துகொண்டு, கடவுள் இடபவாகநத்தின் மீதெழுந்தருளினதலம் இதுவோவென்று கைகளைச் சிரமேற்குவித்து ஆநந்தக் கண்ணீர் சொரிய மயக்கமடைந்து, கடவுளே நீர் எழுந்தருளிப் பின் எங்கே மறைந்தீரென்று பூமியில் விழுந்து அழுது ஐயோவென்று நொந்து, அடியார்கள் என்னை நீங்கிப் பொய்கைத் தீயிற் புகலாமோவென்று புலம்பித் தெளிந்து, பொய்கையை விட்டுக் குருந்தமர நிழலிலே திருவடியைப்பற்றி விழ்ந்து, பூமியிலுள்ளவர்களுடைய பிறவி மாளும்படி மெய்தானரும்பி யென்றெடுத்துத் திருச்சதகம் சொல்லிப் புலம்பிக் கடவுள் முன்னே தமக்கருளிச் செய்ததை நினைந்து அவ்விடத்தை விட்டுத் திருவுத்தரகோசமங்கை யென்னும் தலத்துக்குப் போய்க் கோயிலுக்குள்ளே தம்மை வந்தடிமைகொண்ட திருவுருவைக் காணாதவராய் மயங்கி மூர்ச்சித்துக் கீழே விழுந்து தெளிந்து என்னை விட்டு விடுகிறாயோ வென்று நீத்தல் விண்ணப்பம் என்னும் பாடலைச் சொல்லப் பரமசிவனுனவர் தமது பழைய வுருவைக் காட்டினார். அந்த வுருவைத் திருவாதவூரர் கண்டு வணங்கிச் சிலநாள் அங்கிருந்து, கடவுள் சொற்படியே போய் அநேகமாகிய தலங்களை வணங்கிச் சோழநாட்டுக்குப் போய்த் திருவிடைமருதூரை யடைந்து வணங்கித் திருவாரூருக்குப் போய்த் தியாகராயருடைய திருவடித் தாமரைகளை வணங்கித் திருப்புலம்பல் என்னும் பாடலைச்சொல்லி வணங்கிப் பரமசிவன் அநுக்கிரகித்த தலங்களெல்லாம் தவறாமல் வணங்கி, சீகாழியை

யடைந்து கோயிலினுள்ளேசென்று இறைவரது திருவடியைப் பிடித்துக்கொண்டு பிடித்தபத்து என்னும் பாடலை யருளிச்செய்து, சிலநாள் அங்கு வாசஞ்செய்து, அவ்விடத்தை விட்டு நீங்கித் திருக்கழுக் குன்றத்துக்குப் போக விரும்பித் தில்லை நகரத் திசைநோக்கி வணங்கிப் போய் வடதிசையிலுள்ள விருத்தாசலத்தை வணங்கித் திருவருட்டுறை யென்று சொல்லப்படுகிற திருவெண்ணெய் நல்லூரையடைந்து, வணங்கி நீங்கித் திருவண்ணாமலையை யடைந்து வணங்கி அன்று வந்து தம்மை யாண்டருளின திருவுருவைக் கண்டு பலவாறாகத் துதித்து அங்கே யிருக்கிற நாளில் மாதர்கள் மார்கழி மாதத்தில் திருவாதிரைக்கு முன்னே பத்துத் தினங்களி லெல்லாம் வீடுகள் தோறும் போய் ஒருவரை யொருவர் அழைத்துக்கொண்டு விடியற் காலத்தில் சென்று நீராடுதலைப் பார்த்து அவர்கள் சொன்னதாகத் திருவெம்பாவையைச் சொல்லிப் பின்பு அம்மனை யாடுகிற மங்கையரைப் பார்த்து அவர்கள் சொன்னதாகத் திருவம்மானையைப் பாடி, அந்தத் திருவண்ணாமலையை நீங்கிக் காஞ்சிமா நகரில் வந்து ஏகாம்பரத்திலே ஏகம்பரரை வணங்கித் திருக்காமக் கோட்டத்தில் காமாக்ஷி யம்மையின் திருவடியையும் வணங்கித் திருக்கழுக் குன்றத்துக்கு எழுந்தருளிக் கடவுளை வணங்கித் திருக்கழுக் குன்றப்பதிகம் பாடிச் சில நாள் அங்கே வாசஞ்செய்து, பின் சிதம்பரத்துக்குப் போய்ச் சிற்சபையைக் கண்டு, அந்தச் சிற்சபையில், அந்நாளிற் கண்ட கடவுளுடைய திருவுருவைக் கண்டு அன்போடு தொழுது ஆநந்தக் கண்ணீரொழுக நின்று துதித்துக் கண்டபத்து என்னும் பாடலையருளிச்செய்து ஒரு சித்திரம்போலச் சிவாநுபூதியில் செயலற்று நின்றார். இவரது நிலையை அங்குள்ள மெய்க்காவலாளர்கள் கண்டு இவரைச் சபையை விட்டுப்போமென்று சொன்னார்கள். சொல்லியும் கேளாதவராய்த் துரியாதீதமாகிய பரவொளியில் மூழ்கிப் பரவசப்பட்டு நீண்ட ஒருதம்பம் போல நெடுநேரம் நின்றார். இவரைக்கண்ட மெய்க்காவ

லர் அஞ்சிநிற்கும்போது கைகூப்பிச் சிவ சிவ போற்றி யென்றார். பிறகு அவ்விடம்விட்டுத் திருப்புலீச்சுரத்தை யடைந்து கடவுளுடைய திருவடியை வணங்கித் திருநாகேச்சுரத்தி லிருந்த கடவுளுடைய திருவடியை வணங்கித் தில்லைமூவாயிரவர் வாழ்கின்ற வீதியில் போகும்போது, குலாப்பத்து, கோயிற்றிருப்பதிகம், கோயின் மூத்த திருப்பதிகம், கீர்த்தித் திருவகவல் திருவண்டப் பகுதி, போற்றித் திருவகவல் என்பவைகளைப் பாடி, திருப்பொற் சுண்ணம் இடிக்கின்ற மாதர்களைக் கண்டு அவர்கள் சொன்னதாகத் திருப்பொற்சுண்ணம் பாடி, திருத்தெள்ளேணம் முதலியவைகளையும் பாடினபின்பு, அந்த நகர்ப்புறத்தில் ஒரு பன்னசாலை செய்து அதில் தங்கி யிருந்தார். இவரது செய்தி முழுதும் தில்லையிலுள்ளார் தங்களுக்குள்ளே புகழ்ந்து பேசி மன மகிழ்ந்து அதிசயித்தார்கள். இந்தப் பிரகாரம் சபாநாயகரது நிருத்தத்தைத் தமக்குள்ளே கண்டு நித்தியம் போய் அந்தக் கடவுளைப் பத்தியோடு வணங்கித் தில்லைமாநகர்ப் புறத்திற்செய்த பன்னசாலையில் திருவாதவூரர் எழுந்தருளி யிருந்தார்.

திருவம்பலச்சருக்கம் முற்றிற்று.

## புத்தரை வாதில் வென்ற சருக்கம்.



அப்படி யிருக்குங் காலத்தில், பரமசிவனுடைய சீர்பாதங்களை இடையறாமல் நினைக்கின்ற ஒரு தபசியானவர், பூமியிலுள்ள எல்லாத் தேசங்களின் வளங்களையும் காணவேணு மென்னும் விருப்ப முள்ளவராய்ச் சோழநாட்டைக் கண்டு தில்லைமாநகரை வணங்கி, ஈழதேசத்தைப் பார்க்க வேண்டு மென்று நினைத்து அங்கேபோய் அந்தத் தேசத்தரச னிருக்கும் ஊரைச் சேர்ந்து, தானிருக்கு மிடங்களி லெல்லாம் சிதம்பரம் அளவற்ற காலம் வாழ்க வென்று சொல்லத் தொடங்கினர். இவர் இப்படி சொல்லுவதைக் கேட்ட புத்தர்கள் அந்த நாட்டரசனிடத்

திற்போய்ச் சொன்னார்கள். அரசன் அந்தத் தபசியை இங்கே யழைத்து வாருங்க ளென்றான். அப்படியே அவர்கள்போய் அழைக்க அந்தத் தபசியானவர் அவர்களோடு கூடவந்து அரசனுக் கருகில் இருந்தார். அவர் இருக்கும் போது திருவம்பலம் என்று சொல்லக் கேட்ட அரசன் அவரைப் பார்த்து நீர் திருவம்பலம் என்று சொல்லுந் தன்மை யென்னவென்று வினவ, அந்தத் தபசியானவர், சோழ நாட்டிலே சிதம்பரம் என்று ஒரு தலமுண்டு, அந்தத் தலம் முன்னே தில்லைவனம் என்று பெயரை யுடையதா யிருந்தது, அது திரிபுவனங்களுக்கு முன்னே யுண்டான தலமாம். அதனால் அதை மூலஸ்தானம் என்று சொல்லலாம். அந்தத் தலத்தில் சிற் சபையில் பரம சிவனானவர் உமாதேவியார் காண நடனஞ்செய்தார். அந்தத்தலத்தில், மநுச்சக்கரவர்த்தி குமாரனாகிய இரணியவன்மனுடைய தேகத்தி லிருந்த குட்டநோயை நீக்கி நெடிய மகமேருவைப் போலும் திவ்விய தேகத்தைக் கொடுத்த பரிசுத்த மாகிய சிவகங்கை யென்னும் ஒரு தடாகமுண்டு, அந்தத் தடாகத்தில் மூழ்கிப் பரமதயாளுவாகிய சிவபெருமானது நடனத்தைத் தரிசிக்கிறவர்கள் இவ்வுலகத்தில் வந்து பிறக்க மாட்டார்கள். ஒருதரம் பொன்னம்பலம் என்று சொன்னால் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத் தறுநூறுதரம் உச்சரித்ததற்கு நிகராகும் ஆதலால் அதனை யாம் உச்சரித்து வருகிறோமென்று சொன்னார். அப்படி அந்தத் தபசியானவர் சொல்ல, அரசனுக் கருகி லிருந்த புத்த குருவானவன் கோவித்து, பிடகாகம மூன்றையும் சொன்ன தலைவனல்லாமல் வேறொரு தெய்வமும் உண்டோ, உண்டானால், தில்லை நகருக்குப்போய், வாதுசெய்து, அவரிருந்து நடனஞ்செய்கிற பாதத்தி லணிந்த வீரக்கழலையும் அவரது கொடியையும் அறுத்துப் போடுவேன். அவனது நடன சபையையும் புத்தன்கோயிலென்று சொல்லும்படி பண்ணுவேன், இந்தக்காரியத்தை மூன்று தினங்களுக்குள்ளே செய்து முடிக்கிறேன் என்று சொல்லி, ஒரு சிவிகையி

லேறிக்கொண்டு அநேக பௌத்தர் சூழச் சிதம்பரத்துக்குப் போனான். புத்தராஜனும் தன் ஊமைப் பெண்ணைப் பேசுவிக்க வேண்டுமென்று நினைத்துத் தன் சேனைகள் சூழ ஒரு சிவிகையி லேறிக்கொண்டு தில்லைநகரத்துக்கு வந்தான். இந்த அரசன் வருவதற்கு முன்னே வந்த புத்த குருவானவன் சிவிகையை விட்டிறங்கி, பரமசிவனது ஆலயத்திற் பொன்னினாற் செய்யப்பட்ட மண்டபத்திற் சேர்ந்திருந்தான், அவனை புத்தராஜன் வணங்கியிருந்தபோது, ஆலயத்தி லிருந்தவர்க ளெல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்து, மனம் நொந்து, நெருப்புப்போலக் கோவித்து, புத்தனே நீ இப்பொழுதே ஆலயத்தைவிட்டு ஓடிப்போ, யாம் பொறுக்க மாட்டோ மென்றார்கள். அப்போது புத்த குருவானவன் அவர்களை நோக்கி, சோழராஜனுக்கெதிரில் வாதுசெய்து, உங்கள் சைவநெறி நிலையல்லவென்று சாதித்து புத்தனே உயர்ந்த தெய்வமென்று நிலைபெறுத்துவதல்லது யான் போகமாட்டேன் என்றான். இப்படி சொல்லக் கேட்ட ஆலயத்திலுள்ளோர் விரைவாகப்போய்த் தில்லை மூவாயிரவருக்கும் தபோதநர்களுக்கும் அவரவர்கள் வீடுகளிற்போய்ச் சொன்னார்கள். அது கேட்ட தில்லை மூவாயிரவர் விரைவாகப்போய்ச் சபையையடைய, இவர்களைக்கண்டு மதியாதிருந்த புத்தனைப் பார்த்து, பிழைக்கும்வகை யறியாத நீ இங்கே சற்றும் அச்சமில்லாமல் வந்திருந்தது மல்லாமல் யாம்வரச் சற்றும் மதியாமலு மிருந்தாய், இதற்குக் காரணம் யாதென்று கேட்க, புத்த குருவானவன், வேதசாத்திரப் பிரமாணங்களைக்கொண்டு உங்கள் தெய்வமே தெய்வமென்று சொல்லுவீர்க ளானால் அதனை மறுத்து எங்கள் தெய்வமே தெய்வமென்று யான் சொல்லுவேன் என்றான். அதைக் கேட்ட தில்லை மூவாயிரவர் கோவித்து, புத்தனே உன்னோடு பேசுவது சேற்றில் கல்லெறிவது போலாகும் ஆதலால் உன்னைத் தகுந்த வித்வான்களைக் கொண்டு வெல்வோம். உன்னோடு பேசுதல் எமக்குத் தகாதகாரியமா யிருக்கிறது என்று சொல்லிச் சோழ ராஜனுக்கு

ஒரு ஓலையெழுதிவிட்டு, மற்ற தபோதநர்கள் முதலானவர்களும் நாளைச் சிதம்பரத்தில் நடராஜனுடைய தரிசநத்துக்கு வந்து சேரவேண்டுமென்று ஓலையெழுதி யனுப்பினார்கள். உடனே சூரியன் அஸ்தமித்தான். அன்றிரவில் தில்லை மூவாயிரவர் முதலானவர்கள் தங்கள் தங்கள் வீடுகளிற் சென்று உண்டு உறங்கினார்கள். உறங்கும்போது பொன்னம்பலத்தில் நிருத்தஞ் செய்கின்ற கடவுளானவர் கையில் பிரம்புகொண்டு, நீண்ட சடைமுடியும் திருநீறணிந்த திருமேனியும் உடையவராய் எல்லாரும் விரும்பும் படியான திருவுருவங் கொண்டு சூரியன் உதிக்கு முன்னே எல்லாருடைய கனவிலும் வந்து, நீங்கள் வருந்துவதை ஒழியுங்கள், நமது தில்லை யெல்லையில் திருவாதவூரன் வந்திருக்கிறான். அவன் இந்தச் செய்தியைக் கேட்டால் இந்தப் புத்தர்களைத் தர்க்க சாஸ்திரத்தைக் கொண்டு ஒரு நொடியில் வென்று விடுவான். ஆதலால் அவனை நீங்கள்போய் இப்பொழுதே அழைத்து வாருங்கள் என்று சொல்லக் கேட்டு விழித்துக்கொண்ட தில்லை நகரத்தார் எல்லாரும் கோயில் மண்டபத்திலே வந்து சேர்ந்து புத்தகுரு சொன்ன சொல்லுக்கு இரங்கி, பின்பு கருணையினாலே கடவுளானவர் தம் கனவிலே வந்து, சொன்ன சொல்லினால் முகமலர்ச்சி யுடையவராய், இருளுக்கு ஒடுங்கிப் பின்பு சூரியன் வர விரிந்த தாமரை மலரை யொத்திருந்தார்கள். இருந்த காலத்தில் தாங்கள் கண்ட கனவை ஒருவரோடு ஒருவர் சொல்லிக்கொண்டு மெய்த்தவத்தை யுடைய திருவாதவூரர் இருக்கு மிடத்துக்குப் போய் அவரைக் கண்டு, செய்தியைத் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட திருவாதவூரர், முன்னே கடவுள் தமக்குச் சொன்னதை நினைந்து தில்லை மூவாயிரவருடனே விரைவாகப் போய்ச் சபாநாயகரை வணங்கி, அவருடைய அருள்பெற்றுப் புத்தர்க ளிருக்கும் மண்டபத்திற்போய், அவர்களுடைய முகத்தைப் பார்த்தால் தீமை யுண்டாமென்று திரைபோடுவித்து அதன் மறைவில் ஒரு ஆசநத்தில் எழுந்தருளி யிருந்தார். அப்போது

சோழராஜனும் சீக்கிரமாய் வந்து சபாநாயகரைத் தரிசித்து, மண்டபத்தில் வந்து திருவாதவூரருடைய திருவடியை வணங்கி, அவருக்குப் பக்கத்திலே ஒருஆசநத்திலிருந்தான். ஈழதேசத்தரசனும் சோழராஜனை வணங்கித் திறை கொடுத்து நீ வாழ்க வென்று துதித்த போது சோழராஜன் சந்தோஷித்து, நீ கொடுத்த யானை மிகச் சிறந்தது, நீ கொடுத்த ரத்திநத்துக்கு விலையில்லையென்று அதிசயித்துப் பக்கத்தி லிருக்கச் சொல்லி, எல்லாரும் சூழ்ந்திருக்குஞ் சபையில், ஆலோசித்து சாக்ஷிசொல்வோர்கள் பக்கத்தி லிருந்தார்கள். தில்லை மூவாயிரவரும், முனிவரும் வந்து சேர்ந்தார்கள், அப்போது திருவாதவூரர் புத்தனோடு வாது செய்வதைப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பங் கொண்டு, பிரமா, விஷ்ணு, சப்த முனிவர்கள், அஷ்டதிக்குப் பாலகர்கள், உருத்திரர்கள், விஞ்சையர்கள், சந்திர சூரியர்கள் இவர்கள் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள். அந்தச் சமயத்தில் சோழராஜன் திருவாதவூரருடைய திருவடிகளை வணங்கி, சுவாமீ, உலகத்தில் சிவஞான நிலைமையை நிறுத்துவது உமதுபாரம், புத்தரை உயிர் போக்குவது என்பாரம் என்றான். இப்படி சோழராஜன் சொல்ல, திருவாதவூரர் புத்தனைப் பார்த்து, நீ வந்த காரணத்தைச் சொல்லென்ன, புத்தன் எங்கள் தெய்வமல்லாமல் வேறு தெய்வமில்லை யென்று, இவ்விடத்தில் எல்லாருங் காணும்படி பொன்னம்பலத்திலே எங்கள் புத்தரை வைக்க விரும்பி நேற்றே வந்திருக்கிறேன், இதுதான் நான் வந்ததற்குக் காரணமென்றான். இதைக்கேட்ட திருவாதவூரர் புன்னகை செய்து, புத்தனே, உன் தெய்வத்தின் வரலாற்றையும், ஆன்மாக்கள் அவன் அடியிற் சேரும் வரலாற்றையும் சொல்வாயாக என்றார். அதற்குப் புத்த குருவானவன் கோவங்கொண்டு, கண்ணில்லாதவனுக்குச் சூரிய கிரணத்தினொளியைக் காட்டக் கூடுமோ, எங்கள் புத்த தேவனுடைய கீர்த்தியைச் சொல்லவேண்டுமானால் அநேகமாயிரம் நாக்கள் வேண்டும். எமது கடவுளானவன் தருமம விளங்கு

கின்ற பிடகாகமம் சொல்லி, அநேக யோனிகள்தோறும் பிறந்து ஆன்மாக்களுக்கு உறுதிசெய்து, கொலை, களவு, பொய், கள்ளுண்டல் என்னும் நான்கு குற்றங்களையும் நீங்கி, மேன்மையுள்ள அரசமரநிழலிலே சேர்ந்து வீற்றிருப்பான். கருப்பத்திற் சேருகின்ற உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தங்களும் கூடி, ஒழிவில்லாத அநேக அறிவுண்டாய் நீங்குவது பிறவித் துன்பமாம். அது நீங்கக் கெடாயழிவது மோக்ஷமாம் என்று சொன்னான். அப்போது திருவாதவூரர் சோழ ராஜனுடைய முகத்தைப் பார்த்துக் கிருபா நோக்கஞ் செய்து, இந்தப் புத்தன் அறியாமையும் பைத்திய குணமுமுள்ளவன். இவனுக்கு நாம் யாது சொல்லுவது, என்று சொல்லி, பின்பு, புத்தன் சொன்ன பிடகாகம முதலிய வற்றிலுள்ள குற்றங்களை யெடுத்துச் சொல்லிக் கண்டித்துச் சிவபெருமானது பெருங் கீர்த்தியையும் சைவ நெறியின் பெருமையையும் விரித்துச் சொல்லக்கேட்ட புத்த குருவானவன், மறுபடியும் திருவாதவூரரை நோக்கி, உங்களுடைய கடவுள் முற்காலத்தில் கல்லாலின் கீழிலிருந்து தருமத்தைச் சொன்னதாகச் சொன்னீர், ஆனால் அவர் கையிலே செபமாலையைக் கொண்டிருப்பது தன்னைவிட வேறொரு தெய்வமுண்டென்று நினைத்தோ, சொல்லும்; உலகத்தார் வணங்கும்படி சிதம்பரத்திலே நிருத்தம் பண்ணுவார் என்று சொன்னீர், நல்லறிவை யுடைய சிலர் பார்க்க ஆடுவதல்லது தமது இச்சையினாலே ஆடுவாருமுண்டோ சொல்லும்; உலகமெல்லாம் பிழைக்கப் பொன்னம்பலத்திலே நிருத்தம்பண்ணுகிற எமது கடவுள் திருமேனியில் விபூதி தரித்திருக்கிறார் என்று சொன்னீர் சிவந்தவொளியுள்ள திருமேனியிலே விபூதியைத் தரித்தது, அது பரிசுத்தமானதென்று நினைத்தோ, சொல்லும்; உமாதேவியை ஒருபாகத்தில் உடையவரென்று சொன்னீர், பாதியுடம்பு பெண் வடிவாயிருப்பது உலகத்திலுண்டோ, அப்படி உமது கடவுளது பாதியுடம்பு பெண்

வடிவா யிருக்கையில் நீர்துறவிற் பொருந்தி யிருப்பது யாதுக்கு, சொல்லும்; என்று இப்படி பலவாறாக அந்தப் புத்த குருவானவன் வினவ, திருவாதவூரர், இகழ்ந்து நகைத்து, எமது கடவுளுடைய அடியார்கள் பெரிய வாழ்வைப் பெற வந்தவர்கள், நல்ல உபதேசமாகிய இதனை நல்ல தவமொன்று மில்லாத உன்னெதிரே சொல்லத் தகாது என்று சொல்லி, மேலும் சொல்லுவார், எமது கடவுள் கையிலே செபமாலிகை வைத்திருப்பது உலகத்தாரெல்லாரும் இங்கே உயர்ந்த தவங்களைச் செய்தற் கென்று நினைவாய், அது எதுபோல வென்றால், ஆயுதத் தொழிலைச் சீடருக்குப் பழக்குகின்ற ஆசிரியர்கள் தங்கள் கையிலே ஆயுதத்தைக் கொண்டிருத்தல் போலாகும் என்றார். மேலும், தவப்பயனைச் சம்பாதியாதவர்களைப் போல ஊனக் கண்களையுடையவராகிய உலகத்தார் காண எதிரே கூத்தாடுவானென்றாய், விறகிலே யிருக்கும் தீயைப் போலச் சரீரத்திற் கலந்து உயிர்களை யெல்லாம் ஆட்டுகின்ற ஒரு நட்டுவனை நிகர்ப்பார் எமது கடவுள் என்றார். மேலும், உம்முடைய கடவுள் விபூதியைத் தரித்த தென்ன வென்று கேட்டாய், அது ஆத்மாக்களுக்குத் துன்பத்தைத் தணிப்ப தென்று எண்ணிக்கொள்வாய், எப்படியென்றால், பிள்ளைகள் அடைந்த பிணியை நீக்குதற்குத் தாய்மார் சாப்பிட்ட மருந்தைநிகர்க்கும் என்றார். மேலும் புல்லறிவைக்கொண்டு அநேகமாகிய வீண் வார்த்தைகள் பேசுகின்ற புத்தனே நிற்பாய் அவனையன்றி வேறொருவர் நீற்றைத் தரிப்பதுண்டோ, நல்ல திருநீற்றிலுள்ள சுகம் வேதம் சொல்லுவ தன்றி மற்றொருவர் சொல்ல எளிதோ, மேலும் உமாதேவியை ஒரு பாகத்தில் வைப்பது குற்றமென்றாய், அப்படி வைத்தது உலகத்தார்க்குப் போகத்தைத் தரல்வேண்டுமென்று நினைத்தே யல்லது வேறல்ல, அல்லாமலும் உயிர்களுக்கு போகத்தைக் கொடுக்கும் பொருட்டு யோக வுருவம் கொண்டிருந்தார். குருடர்கள் தங்கள் கையிலுள்ள தடியை யல்லாமல் வேறொன்றையும் அறியாதவிதம்போல இந்தப்

பேச்சுமாத்திரம் கற்ற யல்லாமல் வேறென்றும் அறிய மாட்டாய். இடபவாகநத்தை யுடைய பரமசிவன், பூவி லிருக்கும் மணம்போல ஆன்மாக்க ளிடத்தில் கலந்து நின்ற நிலைமையைக் கண்டா யில்லை. ஆதி யாகியும், சிவ யோகி யாகியும், மிகுந்த போகி யாகியும், அருவாகியும், சோதியாகியும், வெகு ரூபியாகியும், இன்பக்கடலாகியும் இருக்கின்ற கடவுள், துன்ப மில்லாத பொன்னம்பலத் திலே நின்ற நிலையை யல்லாமல் எது சிரசு, எது பாதம், அவரை யறிவோர் யார் என்றிப்படி பலவாறு சமாதா னம் சொல்லி, சரசுவதியைக் கோவித்து, நான்கு வேதங் களையுஞ் சொன்ன நீதானே இந்தப் பொய்யைச் சொல்ல வேண்டிய தென்ன, தக்கன் யாகத்தில் உன் மூக்கறு பட்டதை மறந்து விடலாமோ, திரிநேத்திரத்தையுடைய பரமசிவனது அருளில்லை யென்று சொல்லுகின்ற மூட ருடைய நாவைவிட்டு நீ சிவபெருமான் ஆணையின்படி நீங்கிப்போவென்று சொல்ல, சரசுவதியும் பயந்து, வஞ் சகருடைய நாவி னின்றும் நீங்கின பின்பு, அந்தப் புத் தர்க ளெல்லாரும் விஷத்தை யுண்டவர்போல் ஒடுங்கி நடுங்கி ஊமைக ளானார்கள். அதனை ஈழ நாட்டரசன் கண்டு மனம் வருந்தி, திருவாதவூரருடைய திருவடிகளை வணங்கி நின்று, பேச வல்லவர்கள் ஊமைக ளானார்கள். பேச்சில்லாத எனதூமைப்பெண் பேசும்படி பண்ணினால், நான் உமக்குஅடியனாவேனென்றரசன் சொல்ல,திருவாத வூரர் அந்த ஊமைப் பெண்ணை யழைத்து வாரும் என் றார். அரசன் அப்படியே அந்தப் பெண்ணைச் சபைக்கு அழைப்பிக்க அந்தக் கன்னியைத் திருவாதவூரர் கிருபை செய்து தடிக்கெதிரி விருத்தி மனம் நடுங்கி அங்கிருந்த புத்தன் வினாக்களுக் கெல்லாம் நீ விடை சொல்லென் றார். அப்படியே அவன் தர்க்க வார்த்தைகளுக் கெல் லாம், கற்றறிந்தவர் போல விடை கூறினாள். அதைத் திருவாதவூரர், மாதர் செய்யும் திருச்சாழல் விளையாட் டாகப் பாடியருளினார். இந்த அற்புதத்தைக் கண்ட ஈழ நாட்டரசன் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துத் திருநீற்

றைத் தரித்துத் தாழநின்று, திருவாதவூரரது அடிமைத் திறத்தில் தவறாத தொண்டரானன். சோழ ராஜனும் தில்லை மூவாயிரவரும் அம்பலம் வாழ்க வென்று துதித்துத் திருவாதவூரரையும் துதித்தார்கள். ஈழ நாட்டரசன் திருவாதவூரருக் கடிமை யாதலும் புத்தர்க ளெல்லாரும் தங்களுக்கு ஊமைத்தன்மை நீங்கும்படி கிருபை செய்ய வேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். அப்படியே திருவாதவூரர் அவர்களைக் கிருபை யோடு நோக்க, அவர்களுடைய ஊமைத்தன்மை நீங்கிற்று. உடனே அவர்கள் திருவாதவூரரை வணங்கி நின்று, எம்முடைய சீவர வஸ்திரத்தைச் சுட்டெரித்து, காவி வஸ்திரத்தையும் கொடுத்தருளுவீர் என்று வேண்ட, அப்படியே திருவாதவூரரும் அவர்களுக்கு விபூதி ருத்திராக்ஷங்களைக் கிருபை செய்து அவர்களுடைய சீவரவஸ்திரங்களையும் நெருப்புக்கு இரையாக்கினர். பின்பு திருவாதவூரரும், தில்லை மூவாயிரவரும் நூதநமாய் விபூதியைத் தரித்துக்கொண்ட புத்தர்களும், சோழராஜனும், ஈழநாட்டரசனும் பொற்சபையிலிருக்கும் சபாநாயகரைத் தரிசித்தார்கள். பின்பு எல்லாரும் தங்கள் தங்களிடத்துக்குப் போகத் திருவாதவூரர் மாத்திரம் திருப்புலீச்சுரத்தில் எழுந்தருளி யிருக்கும் கடவுளுடைய திருவடிகளை வணங்கி, அங்கே யிருந்தனர். தில்லைநகரத்தார் எல்லாரும் ஐயரே, நீர் எந்நாளும் இங்கேயிருமென்று பிரார்த்துத் தங்கள்தங்கள் வீடுகளுக்குப் போனர்கள். சோழராஜனும், ஈழதேசத் தரசனும், வேறு தேசத்தி லிருந்து வந்த அரசரும், தங்களுடைய தீவினைக ளெல்லாம் நீங்கிச் சபையை வணங்கின பின்பு, விபூதி தரித்த புத்தர்களும் வணங்கி, திருவாதவூரரை வணங்கி அவரைவிட்டு நீங்கிப்போய், ரத்நங்களிழைத்த உப்பரிகையில் சேர்ந்தார்கள். இவர்களெல்லாரும் சிதம்பரமே தங்களுக்கு நிலையான இடமாகக்கொண்டு அங்கே வாழ்ந்திருந்தார்கள்.

புத்தரைவாதில் வென்ற சருக்கம் முற்றிற்று.

## திருவடிபெற்ற சருக்கம்.

இப்படியிருக்குங்காலத்தில் பெரியதவத்தையுடைய திருவாதவூரர், திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பத்து, யாத்திரைப்பத்து என்பவைகளைப்பாடி, சிவாநந்தப்பெருவாழ்வை யுடையவரானார். இப்படி அந்தச் சிதம்பரத்தில் வாழ்கின்ற நாளிலே, பொன்னம் பலத்தி லாடுகின்ற சபாபதி யானவர் தமது கிருபையாலே வேதிய வுருவங் கொண்டு, பரிசுத்த மாகிய முப்புரிநூலணிந்த மார்பும் விளங்குகின்ற புஸ்தகமும் தெரியும்படியாகச் சிவந்த திருவடிகள் நோவ எழுந்தருளி எதிராக நின்றார். நின்ற வேதியரைத் திருவாதவூரர் பார்த்து இருமென்று சொல்லி அவரிருந்த பின்பு, வேதத்தில் வல்ல அந்தணரே, நீர் எங்கே இருக்கிறது சொல்லுமென்று கேட்க, அந்த வேதியர் நாமிருப்பது பாண்டி நாட்டிலே யென்றார். அதைக் கேட்ட திருவாதவூரர் அந்த வேதியரை அன்போடு உபசரித்து, இங்கே நீர் வருகைக்குக் காரணம் என்னென்று கேட்க, வேதியர் உம்மைக் காணும் பொருட்டு வந்ததேயன்றி வேறு காரியம் இல்லை யென்றார். மேலும் ஞானசபையில் நடனஞ் செய்கின்ற சபாநாயகரைக் குதிரை யேறி வரச்செய்த உம்முடைய பெருமையாலே பாண்டிநாடு முழுதும் வாழ்ந்தது. திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருக்கிற கடவுளுடைய திருவடியை வணங்கித் திருக்கழுக்குன்றத்துக்குப் போய்ப் பின்பு சிதம்பரத்துக்கு வந்து புத்தரை வாது செய்து வென்றீர் என்பதைக் கேள்விப்பட்டு யாவரும் மகிழ்ச்சி யடைந்தார்கள். சிற்சபையிலாடுகின்ற கடவுளைப் பத்தியினால் நீர் பாடிய தமிழ்ப் பாடல் முழுமையும் ஓதவேண்டுமென்று விரும்பி இங்கு வந்தேன்; அந்தப் பாடல்களை நான் எழுதிக்கொள்ளவேண்டும். ஆதலால் அவற்றை விளக்கமாகச் சொல்லவேண்டும் என்றார். தேவர்கள் வணங்குகின்ற சபாநாயகர் இப்படி சொல்லத் திருவாதவூரரும் அதற்கிசைந்து திருவாசகத்தை மன

மகிழ்ச்சியுடனே சொன்னார். அவர் சொன்ன பாடல்களை யெல்லாம், பொன்னம்பலத்தி லாடுகின்ற கடவுளானவர் தம்முடைய திருக்கையில் ஏட்டைப் பிடித்துத் தெளிவாக எழுதின பின்பு மிகுந்த அருளையுடையவ ராகிய திருவாதவூரர் முகத்தைப் பார்த்துச் சபாநாயகரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு ஒரு கோவை பாட வேண்டும் என்றார். அப்படியே திருவாதவூரரும் கோவை பாட அதனையும் கடவுளானவர் எழுதிமுடித்துப் புத்தகத்தைக் கட்டிக்கொண்டு அங்கே யிருந்து மின்னலைப் போல மறைந்தார். அது கண்டு திருவாதவூரர் மனம் வருந்தி யெழுந்து எங்கும் ஓடித்தேடிப் பார்த்துங் காணாமல் இது என்ன ஆச்சரியம் என்று மனமகிழ்ந்து பின்பு இப்படி வந்து மறைந்தவர் சிதம்பரத்தில் நிருத்தஞ் செய்கின்ற சபாபதியேயென்றறிந்து கண்ணில் நின்றும் ஆநந்த பாஷ்பங்களைப் பொழிந்து கடவுளே, எங்கே யெழுந்தருளினீர் என்று பூமியில் விழுந்து பரமாநந்தக்கடலில் அழுந்தினார். தமிழ்ப் பாடல்களில் அன்புமிகுந்த கடவுளானவர் புத்தகத்தை யெடுத்துக் கொண்டு தமது சபைக்கு எழுந்தருளித் தேவர்களையும் திருமாலையும் பிரமதேவனையும் பார்த்து நமக்கு அடிமை செய்து மேன்மையடைந்த திருவாதவூரன் சொன்ன இந்த நல்ல பாடல்களைக் கேளுங்கள் என்று அவர்களுக்கு அநுக்கிரகம் பண்ணினார். மெய்த்தவத்தை யுடையவராகிய திருவாதவூரர் சொல்ல எழுதப்பட்ட இந்தத் திருவாசகம் பொன்னம்பலத்திலே நிருத்தம் செய்கிற அழகிய திருச்சிற்றம்பல முடையார் திருவெழுத்தா மென்று, திருக்கோவையார் முடிந்த இடத்தில் எழுதி மைக்காப்பும் செய்து திருவாதவூரருடைய நல்ல தவப்பெருமையை எல்லாருக்கும் அறிவிக்க நினைத்து அம்பலத்தின் வாசற்படியில் திருவாசகத் திருமுறையை வைத்துமறைந்தார். அந்தத்திருமுறையை, பூசைசெய்யும் ஒரு பிராமணன் கண்டு, இந்தப்புத்தகம் இங்கேயிருப்பது தெய்வீகமா மென்று மனமுருகி நின்று தில்லைமா நகரத்தார்க்கு இதனைச்சொல்ல

வேண்டு மென்று சபையை விட்டுப்போய், ஒரு புத்த கம் சபையின் படியிலே யிருக்கின்ற தென்று சொல்ல, அவர்களும் இது அதிசயமாமென்று ஓடிவந்து படியின் மேல் சபாநாயகர் வைத்த புத்தகத்தைப் பார்த்து, இது கடவுளால் சொல்லப்பட்ட சிவாகமமோ, தமிழ் நூலோ வென்று அறிய விரும்பினார்கள். அப்போது தில்லை மூவாயிரவருள் ஒருவர் போய் மலர்களால் அருச்சித்து வணங்கி அந்தப் புத்தகத்தை அவிழ்த்து ஏட்டை நீக்கி அகவல் நான்கையும் படித்த பின்பு திருச்சதகம் முத லாகிய அறுநூறு பாடலையும் அகப்பொருட்கோவை நானூறு பாடலையும் படித்து முடிந்த இடத்தில் திரு வாதவூரர் சொல்ல அழகிய திருச்சிற்றம்பல முடையார் கையெழுத்தென்று படித்தார். இதைக் கேட்டவர்கள் எல்லாரும் மெய் புளகித்துக் குறுவேர்வை கொண்டு ஆநந்தக் கண்ணீர் சொரிந்து மனம் கசிந் துருகித் திருவாதவூரர் சொன்ன இந்தத் தமிழ்நூ லல்லாமல் மோக்ஷ மார்க்கத்துக்கு வேறு நூல்களுளவோ வென்று சொல்லி, இதன் பொருளை அந்தத் திருவாதவூரரைக் கொண்டே கேட்டறிவோ மென்று நினைத்து, சபையை விட்டுப்போய்த் திருவாதவூரருக் கெதிரே நின்று வணங் கிக் கடவுள் அம்பலத்தின் வாசற்படியில் திருமுறையை வைத்த செய்தியைச் சொன்னார்கள். அதுகேட்ட திரு வாதவூரர் அற்பமாகிய என் பாடலை எல்லாரும் ஏற்றுக் கொள்ளும்படி நான் செய்த தவப்பெருமை யிருந்தவா றென்னோ வென்று புலம்பி யழுது நிற்க, வந்தவர்கள் எல்லாரும் அவரை வணங்கி நின்று, உம்மிடத்தில் கட வுள் வந்து செய்த காரியம் யாதென்று கேட்க, திருவாத வூரர் நடந்த செய்தி யெல்லாம் சொன்னார். அது கேட்ட தில்லை மூவாயிரவர் அவரை வணங்கி இந்தத் தமிழ் நூலு க்கு நீரே பொருள் சொல்லவேண்டு மென்று பிரார்த்தித் தார்கள். அப்போது திருவாதவூரர் மனமகிழ்ந்து கனக சபைக் கெதிரேபோய்ப் பொருள் சொல்லுகிறேனென்று முன்னே போக, எல்லாரும் பின்னே போனார்கள். முன் னேபோன திருவாதவூரர் கனகசபையை யடைந்து, இந் தத் தமிழ் நூலுக்குப் பொருள் இவர்தா மென்று சபா நாயகரைக்காட்டிச் சபையிலே யெல்லாருங்காண மறைந் தார். கடவுளும் அவருடைய அன்பின் உண்மையைத்

காட்டப் பாலுடனே சேர்ந்த நீர்போல அவரைத் தம்மி டத்தில் ஐக்கியம் செய்து கொண்டார். இந்த அற்புத மான செய்தியைக் கண்ட எல்லாரும் உடல் புளகித்து நடுங்கித் துதித்து மனமுருகிக் கண்ணீர் பொழிந்து மன மகிழ்ந்தார்கள். பூதங்களெல்லாம் நடனஞ் செய்தன. கண நாதர்கள் புகழ்ந்தார்கள். தும்புரு நாரதர்கள் இசைபாடி னார்கள். வேதங்களும் அந்தர துந்துமியும் ஆகாயத்தில் முழங்கின. முனிவரும் இந்திரரும் பஞ்ச தருவின் மலர் களைத் தூவி வணங்கினார்கள். கடவுளுடைய திருநாமத் தைத் தியானிப்பவர்களும், சிவபூசை செய்வோர்களும், சிதம்பரத்தில் வசித்துச் சித்தி பெற்றவர்களும், திருவா சகமாகிய தமிழ் நூலின் இன்பத்தை அநுபவித்திருந் தார்கள். இழிவு மிகுந்த தோல், எலும்பு, நரம்பு முத லியவைகளால் அமைக்கப் பட்ட இந்த வுடம்பு சிவ ரூபம் எனத் தெளியாமல் மாயையாகிய வலையில் அகப் பட்ட மனிதர்கள், மாமிச பிண்டமாகிய உடம்புக் கிரை தேடிச் சஞ்சரித்து, உலகத்தில் தடுமாறிக் கொடிய நர கத்திற் புகுவது என்ன ஆச்சரியம்! திருவாதவூரருடைய வைபவமாகிய இந்தக் கதையைப் படித்தவர்களும் கேட் டவர்களும் மிகுந்த உண்மை ஞானம் பொருந்திய சுக போகத்துடன் கீர்த்தியையும் பெற்றுப் பிறவிக் கடலைக் கடந்து, வளமாகிய சிவலோகத்தை யடைவார்கள்.

வாழி.

பூதலமாதும்வாழ்க பொன்மழை பொழிந்துவாழ்க
வேதவாகமமும்வாழ்க வேந்தர்செங்கோலும்வாழ்க
நீதிலஞ்செழுத்துநீறுஞ் சிவனடியாரும்வாழ்க
வாதவூரிறைபுராணம் படிப்பவர்கேட்போர்வாழ்க.

பொ - ரை. பூமிதேவியும் வாழ்க, மேகம் பொன் மழை பொழிந்து வாழ்க, வேதாகமங்களும் வாழ்க, அர சர்களுடைய செங்கோலும் வாழ்க, குற்றமில்லாத பஞ் சாக்ஷரமும், விபூதியும், சிவனடியார்களும் வாழ்க, திரு வாதவூரர் புராணத்தைப் படிப்பவர்களும் கேட்பவர் களும் வாழ்க எ - று.

திருவடிபெற்ற சருக்கம் முற்றிற்று.

திருவாதவூரர் புராணவசனம் முற்றிற்று.

சிவமயம்.

# திருவாசகச்சிறப்பு.

## சிவபுராணம்.

தேசுறுமாணிக்கமெனச்சிறந்ததிருவாசகத்திற்
பேசுதிருச்சிவபுராணத்தகவற்பெருமைசொலி
லீசர்தமக்கியல்பானதிருநாமமுதலெவையு
மாசறவேவாழ்கவெனவாழ்த்துகின்றவருட்குறிப்பாம். (க)

## கீர்த்தித்திருவகவல்-திருவண்டப்பகுதி.

புகழ்பெருகுஞ்செய்கையெலாம்புகலகவலொன்றுகுந்
திகழ்தருவண்டப்பகுதித்திருவகவற்செப்பியது
தகுசிருட்டிதிதியொடுக்கஞ்சாற்றுதிரோதம்பொதுவா
யகலமுறத்தேர்ந்திடவேயருளியநற்பொருளாகும். (உ)

## போற்றித்திருவகவல்-திருச்சதகம்-நீத்தல் விண்ணப்பம்.

முத்திபெறுநெறியறியுமொழிபோற்றித்திருவகவற்
சத்தியஞானந்தருதேசிகர்மோகஞ்சதகமதா
மித்தையுலகினையகற்றிவிடாமலெனையாண்டருளென்
றத்தரறிந்திடநீத்தல்விண்ணப்பமறைந்ததுவாம். (ங)

## திருவெம்பாவை-திருவம்மானை.

மலவிருளுற்றுறங்காமன்மன்னுபரிபாகரருட்
செலமுழுகவருகவெனச்செப்பல்திருவெம்பாவை
நலமுறுமந்தணர்வடிவாய்நாரணன்காண்பரியபத
நிலமதில்வந்தாள்கருணைநினைந்தாடலம்மானை. (ச)

## திருப்பொற்சுண்ணம் - திருக்கோத்தும்பி.

சத்திகளாற்றனுகரணபுவனபோகங்கடமை
யத்தனுக்குச்சுண்ணமவையாயிடிக்கக்கூவுதலே
யொத்ததிருச்சுண்ணமுயர்ப்போதமொருவண்டாகச்
சித்தவிகாரத்தூதுசெப்பிவிடற்கோத்தும்பி. (ரு)

## திருத்தெள்ளேணம்-திருச்சாழல்.

பொன்னார்மெய்யண்ணலரும்போதவின்பமேமிகுந்து
தென்னாதென்னாவெனவேதெள்ளேணங்கொட்டியதாம்
முன்னூற்கலையுமுணராமூகையாமேடி
தன்னூற்பதிமுதன்மைசாற்றியதாந்திருச்சாழல். (சு)

திருப்பூவல்லி-திருவுந்தியார்.

தேவரறியாதசிவன்தேடியேயாண்டநல
மாவலொடுஞ்சொல்லியடியாரொடுங்கூடிப்
பூவியந்துகொய்தறிருப்பூவல்லியாமரன்சீர்
பாவமுறுதீமையறப்பாடல்திருவுந்தியதே. (எ)

திருத்தோணோக்கம்-திருப்பொன்னூசல்.

சித்தஞ்சிவமாக்கிச்செய்தனவேபுண்ணியமா
யத்தன்செயுங்கருணைக்காராமையுண்மிகுந்து
பொத்தியகைகொட்டிப்புகழ்தரோணோக்கமருட்
சத்தியிருந்தாடத்தாலாட்டற்பொன்னூசல். (அ)

திருவன்னைப்பத்து-குயிற்பத்து.

நேயமிகுந்தநிலைகுலையக்கூடுதலை
யாயவருட்டாய்க்கங்கறைதலன்னைப்பத்தாகுந்
தூயவருட்குயிலேசோதியெனைக்கூடுதற்குன்
வாயினாற்கூவெனமுன்வாழ்த்தல்குயிற்பத்தாமே. (கூ)

திருத்தசாங்கம்-திருப்பள்ளியெழுச்சி.

பேர்நாரோறுமலைபேணுமெழிலூர்திபடை
சீர்முரசுதாராற்குச்செப்பற்றசாங்கமதா
மேர்மருவும்பள்ளியெழுச்சிப்பணிவிடைகேட்
டார்வமுடனுண்டவரற்கன்புசெயுமியல்பே. (கo)

கோயின்மூத்த திருப்பதிகம்-கோயிற்றிருப்பதிகம்.

செத்திலாப்பத்து-அடைக்கலப்பத்து.

கோயின்மூத்ததிருப்பதிகஞ்சிதம்பரத்திலருளடையுங்குறிப்ப தாகு, மேயுங்கோயிற்பதிகம்பெருந்துறைத்தேசிகர்மோகமியம்ப லாகு, மாயபசுபோதமறக்கெடவேண்டலேசெத்திலாப்பத்தாகு, மோதுவல்வாதனைகள்வந்தணுகாமலடைக்கலப்பத்துரைத்ததாமே

ஆசைப்பத்து-அதிசயப்பத்து.

கருவிபுறமூனுடற்கண்வாராமற்றிருவருளிற்கலப்பதற்சே, யரனடியைப்புகழ்ந்துபெருகார்வமொடுபொடுதலேயாசைப்பத்தாம், வெருவிமலத்தினைச்சிலத்தொன்றுகுமடியார்குழாத்துடனே கூட் டும், பரமரருட்பெருமைமிகுதியைப்புகழ்ந்துபாடலதிசயப்பத் தாமே. (கஉ)

புணர்ச்சிப்பத்து - வாழாப்பத்து.

ஆண்டகுருவைப்பிரியாதணைந்துபணிபுரிந்துமிகுமன்போடி ன்பம், பூண்டுகிடக்கப்பெறுவதென்றுகொலோவெனும்விருப்பம்

புணர்ச்சிப்பத்தாம், நீண்டவுலகத்தினிற்பற்றென்றிலேனிவ்வு டற்கணின்றுவாழேன், மாண்டகுநின்பதநிழற்கீழ்வருகவருள்புரி யெனுஞ்சொல்வாழாப்பத்தே. (கரு)

அருட்பத்து - திருக்கழுக்குன்றப்பதிகம்.

சோதியருட்சுடர்விளக்கேதுயர்ப்பிறவிக்கூடல்விடுத்தருள் சேர்தற், காதரித்திங்குனையழைத்தாலதேந்துவெனக்கேளெனுஞ் சொலருட்பத்தாகு, நீதிமறைபரவுதிருப்பெருந்துறையிற்குருவடி வாய்நிகழ்ந்தகோலங், காதலொடுங்காட்டினையேயெனுங்களிப்புப் பகர்திருக்கழுக்குன்றமே. (கச)

கண்டபத்து - பிரார்த்தனைப்பத்து.

இந்திரியவயமயங்காதேயெடுத்துத்தானுக்குமெழிலானந்தங், கந்தமலிதில்லையினுட்கண்டேனென்றுவந்துரைத்தற்கண்டப் பத்தா, மந்தமிலாவானந்தத்தகலாமலெனையழுத்தியாள்வாயென்று, சிந்தைகவர்ந்துரைத்ததுவேபிரார்த்தனைப்பத்தாய்ப்புகலுஞ் செய் கையாமே. (கரு)

குழைந்தபத்து - உயிருண்ணிப்பத்து.

இழைத்தேனிவ்வாக்கைபொறுத்தினிச்கணமும்பொறுக்க லேனேழையேனைக், குழைப்பதேன்பிழைபொறுத்தாளெனவிரங் கிக்கூறுதலேகுழைத்தப்பத்தாந், தழைத்துவளர்பேரின்பந்தானுகி யுயிர்தோன்றத்தன்மையாய்த்துன், பொழித்துநிறைவைப்பெறு தலுயிருண்ணிப்பத்தாயிங்குரைத்ததாமே. (கசு)

அச்சப்பத்து - திருப்பாண்டிப்பதிகம்.

தரையில்வளர்வினைமுழுதும்வரினுமஞ்சேன்சிவசமயத்தவஞ் சாராதா, ரருகின்வரக்காண்கின்மனமஞ்சுமெனவிகழ்ந்துரைத்தல ச்சப்பத்தாம், புரவியின்மேற்பாண்டியன்முன்வரும்பதத்தையாம் பெறுமற்புதம்போலியாரும்,விரவுமின்களென்றடியார்க்குறுதிசொ லற்றிருப்பாண்டிவிருத்தமாமே. (கள)

பிடித்தபத்து - திருவேசறவு.

மிக்கபிறவித்துயரெலாமொழித்துவிபுத்துவமிங்களித்தலாலே, பிக்கறச்சிக்கெனப்பிடித்தேனுன்னையென்றுத்துணிவுசெப்பற்பிடி த்தப்பத்தாந், தக்கபரியாய்நரியையாக்குதற்போலெனைப்பெரிதா ய்த்தாக்கித்தாட்கீ, ழக்கணம்வைத்தனையேயென்றிரங்கல்திருவே சறவென்றியம்பலாமே. (கஅ)

திருப்புலம்பல் - குலாப்பத்து.

கரைந்தருகும்பேரன்புன்கழலிணைக்கேகற்றவின்மனம்போ லென்றுந், திருந்தும்வகையெனக்கருள்கவெனக்கேட்டல்திருப்பு

லம்பலாகுமுள்ளம், விரும்புசிவானந்தவெள்ளம்விழைந்துதில்லை நாயகனைமிகக்கொண்டாடி, நிரம்புமனக்களிமிகுத்தவிறுமாப்பே குலாப்பத்தாய்நிகழ்த்தலாமே. (கக)

அற்புதப்பத்து - சென்னிப்பத்து.

மாயவுருக்கொண்டுளத்தைமயக்குமின்னார்கண்வலையுண்மயங்குவேற்கிங், காயுமறிவழித்தாண்டலதிசயமென்றுரைத்தலற்புதப்பத்தாகுந், தூயவருட்குருபதத்தைச்சூட்டுதெற்குப்பெற்றவுயிர்சுகத்தைநோக்கிச், சேயமலர்ப்பதத்தருமையடியரொடும்வியந்துரைத்தற்சென்னிப்பத்தே. (உ0)

திருவார்த்தை - எண்ணப்பதிகம்.

அறம்பெருகும்பெருந்துறையிற்றமையாண்டசெயன்முதலாயான்சீராட்டின், திறமறிவாரெம்பிரானாவரெனவுரைத்தறிருவார்த்தையாகு, நிறம்வளருமலர்ப்பொழில்சூழ்ந்தோங்குதிருத்தில்லைமன்றுணிமலனுமத், திறம்பெருகுமின்பமருளென்றலெண்ணப்பத்தெனவுந்திகழ்த்தலாமே. (உக)

யாத்திரைப்பத்து - திருப்படையெழுச்சி.

பொல்லாதபவத்தைவிட்டுச்சிவன்கழற்கீழ்புகுங்காலம்புணர்ந்ததெற்கிங், கெல்லாரும்வாருமெனக்கிருபையினாலழைத்திடல்யாத்திரைப்பத்தாகு, மல்லாததுற்குணமாயப்படைகள்விளையாமலருள்வாளேந்தி, நல்லோர்களியாருமெம்மோடெய்துமெனப்படையெழுச்சிநவிறலாகும். (உஉ)

திருவெண்பா - பண்டாயநான்மறை.

தொந்தமாமலமொறுத்துச்சுகம்பெருக்கிப்பெருந்துறைவாழ்சோதியென்றன, சிந்தனையேயூராகக்கொண்டிருந்தாரென்றுரைத்தற்றிருவெண்பாவா, மெந்தைதிருப்பெருந்துறையையேத்துநமரேவாழ்வுற்றிடர்சேர்பாச, பந்தமறுத்திடுவரெனப்பண்டாயநான்மறையும்பகர்ந்ததாமே. (உங)

திருப்படையாட்சி - ஆனந்தமாலை - அச்சோப்பதிகம்.

வாகுதிருப்பெருந்துறையாரெழுந்தருளப்பெறிலெல்லாவளங்கண்முற்று, மாகுமெமக்கல்லாததாகாவென்றியம்பல்படையாட்சியாகு, மோகமிகுமடியரொடுங்கூடவிரும்பியதுமின்னேமொழியாமீசர், போகசுகந்தமக்களித்தாரேபெறுவாரெனுமருமைபுகலச்சோவே. (உச)

இஃது திருப்பெருந்துறைப்புராணத்துட் கண்டது.

உ

சிவமயம்.

# திருவுள்ளக்கிடை.

சிவபுராணம்-சிவனது அநாதி முறைமையானபழமை, எ-து-சிவனது அருவநிலைமைகூறுதல்
கீர்த்தித் திருவகவல் - சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை.
திருவண்டப் பகுதி - சிவனுடையதூலசூக்குமத்தை வியந்தது.
போற்றித் திருவகவல் - சகத்தினுற்பத்தி, எ - து - பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல்.
திருச்சதகம் - பத்தி வைராக்கிய விசித்திரம், எ - து - பத்துவகையாகஇரட்சித்த முறைமை. க. மெய்யுணர்தல்-தேகாதிபிரபஞ்சங்களைக் கண்டு நீங்கல். உ. அறிவுறுத்தல்-பொறியோடே கூட்டுதல்; அருள் தரிசனம், குருதரிசனம், ௩. சுட்டறுத்தல் - தன் செயலறுத்தல். ச. ஆத்துமசுத்தி - அனுபவத்தழுந்தல். ரு. கைம்மாறுகொடுத்தல் - தன்னைச் சிவனிடத்திலே கொடுத்தல். சு. அனுபோகசுத்தி-சுகமேலீடு. எ. காருணியத்திரங்கல் - சிவனுடைய வெற்றிப்பாட்டிரங்கல். அ. ஆனந்தத்தழுந்தல். கூ.ஆனந்தபரவசம். க0. ஆனந்தாதீதம்.
நீத்தல் விண்ணப்பம் - பிரபஞ்சவைராக்கியம்.
திருவெம்பாவை - சத்தியைவியந்தது; சத்திகளாவார் - அம்பிகை, கணம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என ஒன்பதின்மர்.
திருவம்மானை-ஆனந்தக்களிப்பு, எ - து - சுகமேலீடு.
திருப்பொற் சுண்ணம் - ஆனந்தமனோலயம், எ - து - தானன்றி நிற்றல்.
திருக்கோத்தும்பி - சிவனோடைக்கியம், எ - து - சிவனுடன் இடையறாது நிற்றல்.
திருத்தெள்ளேணம் - சிவனோடைவு, எ - து - சிவனுடனே சென்று கூடுதல்.
திருச்சாழல் - சிவனுடைய காருணியம், எ - து -சிவனுடைய அருட்சத்தி விளையாட்டு.
திருப்பூவல்லி - மாயாவிசய நீக்குதல், எ - து - மாயையினுடைய பெலத்தை மறுத்தல்.
திருவுந்தியார் - ஞான வெற்றி அருட்சத்தியினுடைய சாமர்த்தியம்.
திருத்தோணோக்கம் - பிரபஞ்சசுத்தி, எ - து - ஆன்மாக்களைச்சுத்தி கரித்தல்.
திருப்பொன்னூசல்-அருட்சுத்தி, எ - து - அருளோடு கூடுதல்.
அன்னைப்பத்து - ஆத்தும பூரணம், எ - து - ஆன்மா சிவனுடனே நிறைதல்.
குயிற்பத்து - ஆத்தும விரக்கம், எ-து-சிவனைக்கண்டிரங்குதல்.
திருத்தசாங்கம் -அடிமைகொண்டமுறைமை, எ - து - பத்தடையாளம்.
திருப்பள்ளியெழுச்சி - திரோதானசுத்தி, எ - து - ஏகமாகிய திரோதாயி மறைப்பானமலம் நீக்குதல்.
கோயின்மூத்த திருப்பதிகம் - அநாதியாகிய சற்காரியம்.

கோயிற்றிருப்பதிகம் - அனுபோகவிலக்கணம், எ - து - சிவானுபூதிக் கடையாளம்.

செத்திலாப்பத்து - சிவானந்தமளவறுக் கொணுமை, எ-து-சிவானந்தமனுகிச் செயிக்கப்படாமை.

அடைக்கலப்பத்து - பக்குவநிண்ணயம், எ - து - வித்துமங்குரமும்போல என்றல்.

ஆசைப்பத்து - ஆத்துமவிலக்கணம், எ - து - ஆன்மரூபத்தையறிதல்.

அதிசயப்பத்து - முத்தி யிலக்கணம், எ - து - மோட்சத்தினடையாளம்.

புணர்ச்சிப்பத்து - அத்துவிதவிலக்கணம், எ - து - ஒன்றுமல்ல இரண்டுமெல்ல என்றல்.

வாழாப் பத்து - முத்தியுபாயம், எ - து - பிரபஞ்சத்தை விட்டுப் பரபோகத்தைக் கூடுதற்குபாயம்.

அருட்பத்து - மகாமாயா சுத்தி, எ - து - மாயையைச் சுத்திபண்ணுதல்.

திருக்கழுக்குன்றப்பதிகம் - குருதரிசனம், எ - து - பசுத்துவங் கெட்டவிடம்.

கண்டபத்து - நிருத்த தரிசனம்

பிரார்த்தனைப்பத்து - சதாமுத்தி, எ - து - ஆன்மாக்களுக்குமுத்தி நிச்சயம் பண்ணுதல்.

குழைத்தபத்து - ஆத்துமநிவேதனம், எ - து - நேயத்தோடே ஒன்றினது.

உயிருண்ணிப்பத்து - சிவானந்த மேலிடுதல், எ - து நேய மேலிடுதல்.

அச்சப்பத்து - ஆனந்த முறுதல், எ - து - நேயத்திலே ஒன்றுபட்டுச்சிக்கென அழுந்தினது.

திருப்பாண்டிப் பதிகம் - சிவானந்தவிளைவு, எ - து-சுகமேலீடு.

பிடித்தபத்து -முத்திக்கலப்புரைத்தல், எ - து - மற்றுள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின் சுகத்தைச் சொல்லியது.

திருவேசறவு - சுட்டறிவொழித்தல்,எ-து-தன்செயலறநிற்றல்

திருப்புலம்பல் - சிவானந்தமுதிர்வு, எ - து-சிவானந்தம் பெருவிச்சை.

குலாப்பத்து - அனுபவமிடையீடுபடாமை, எ - து - விட்டுப்பற்றுமல் ஒருதன்மையாவது.

அற்புதப்பத்து - அனுபவம் ஆற்றுமை, எ-து - அனுபவ முற்றுதல் பொறுமை விம்முதல்.

சென்னிப்பத்து-சிவவிளைவுஎ-து சீவனுக்குநிச்சயப்படுதல்.

திருவார்த்தை-அறிவித் தன்புறுதல், எ - து - உன்னலறியப்படாததுரைக்கஅறியென்றது.

எண்ணப்பதிகம் - ஒழியாவின்பத்துவகை, எ - து - தேகமுதலாகியஆசையையறுத்தல்

யாத்திரைப்பத்து -அனுபவாதீதமுரைத்தல், எ - து - அனுபவத்திலதீதப்பட்டுப்போனது.

திருப்படையெழுச்சி- பிரபஞ்சப்போர்,எ-து-மலவிளைவற்றது.

திருவெண்பா - அணைந்தோர்தன்மை எ - து - பரிசவேதிபோல என்றது.

பண்டாய நான்மறை - அனுபவத்துக் கையமின்மை யுரைத்தல்.

திருப்படையாட்சி - சீவ உபாதியொழித்தல், எ - து - கிரியாசூனியம்.

ஆனந்தமாலை - சிவானுபவ விருப்பம், எ - து - சிவானந்தமேலீட்டில் கிரியாசத்தி யழிவுரைத்தல்.

அச்சோப்பதிகம் - அனுபவவழியறியாமை, எ - து - அனுபவத்ததிசயம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

செந்தமிழ்வேதமாகிய

# திருவாசகம்.

---

## சிறப்புப்பாயிரம்.

நேரிசைவெண்பா.

தொல்லையிரும்பிறவிச் சூழுந்தளைநீக்கி
யல்லலறுத்தானந்த மாக்கியதே- யெல்லை
மருவாநெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
றிருவாசகமென்னுந்தேன்,

முதலாவது

## சிவபுராணம்.

சிவனதநாதிமுறைமையானபழமை

இஃது திருப்பெருந்துறையி லருளிச்செய்தது,

கலிவெண்பா

நமச்சிவாயவாஅழ்க நாதன்றாள்வாழ்க
விமைப்பொழுதுமென்னெஞ்சி னீங்காதான்றாள்வாழ்க
கோகழியாண்டகுருமணிதன்றாள்வாழ்க
வாகமமாகிநின் றண்ணிப்பான்றாள்வாழ்க
வேகனனேகனிறைவனடிவாழ்க

வேகங்கெடுத்தாண்ட வேந்தனடிவெல்க
பிறப்பறுக்கும்பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள்வெல்க
புறத்தார்க்குச்சேயோன்றன் பூங்கழல்கள்வெல்க
கரங்குவிவாருண்மகிழுங் கோன்கழல்கள்வெல்க
சிரங்குவிவாரோங்குவிக்குஞ் சீரோன்கழல்வெல்க
ஈசனடிபோற்றி யெந்தையடிபோற்றி
தேசனடிபோற்றி சிவன்சேவடிபோற்றி
நேயத்தேநின்ற நிமலனடிபோற்றி
மாயப்பிறப்பறுக்கு மன்னனடிபோற்றி
சீரார்பெருந்துறைநந் தேவனடிபோற்றி
ஆராதவின்ப மருளுமலைபோற்றி
சிவனவனென் சிந்தையுணின்றவதனா
லவனருளாலே யவன்றாள்வணங்கிச்
சிந்தைமகிழச் சிவபுராணந்தன்னை
முந்தைவினைமுழுது மோயவுரைப்பனியான்
கண்ணுதலான்றன் கருணைக் கண்காட்டவந் தெய்தி
யெண்ணுதற்கெட்டா வெழிலார்கழலிறைஞ்சி
விண்ணிறைந்துமண்ணிறைந்து மிக்காய்விளங்கொளியாய்
யெண்ணிறந்தெல்லை யிலாதானேநின்பெருஞ்சீர்
பொல்லாவினையேன் புகழுமாறொன்றறியேன்
புல்லாகிப்பூடாய்ப் புழுவாய்மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப்பாம்பாகிக்
கல்லாய்மனிதராய்ப் பேயாய்க்கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த்தேவராய்
செல்லாஅநின்றவித் தாவரசங்கமத்து
ளெல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேனெம்பெருமான்
மெய்யேயுன்பொன்னடிகள் கண்டின்றுவீடுற்றே
னுய்யவென்னுள்ளத்து ளோங்காரமாய்நின்ற
மெய்யாவிமலா விடைப்பாகாவேதங்க
ளையாவெனவோங்கி யாழ்ந்தகன்றநுண்ணியனே
வெய்யாய்தணியா யியமானனாம்விமலா
பொய்யாயினவெல்லாம் போயகலவந்தருளி
மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்றமெய்ச்சுடரே
யெஞ்ஞானமில்லாதே னின்பப்பெருமானே
யஞ்ஞானந்தன்னை யகல்விக்குநல்லறிவே
யாக்கமளவிறுதி யில்லாயனைத்துலகு
மாக்குவாய்காப்பா யழிப்பாயருடருவாய்
போக்குவாயென்னைப் புகுவிப்பாய்நின்றொழும்பி

நாற்றத்தினேரியாய் சேயாய்நணியானே
மாற்றமனங்கழிய நின்றமறையோனே
கறந்தபால்கன்னலொடு நெய்கலந்தாற்போலச்
சிறந்தடியார்சிந்தனையுட் டேனூறிநின்று
பிறந்தபிறப்பறுக்கு மெங்கள்பெருமா
னிறங்களோரைந்துடையாய் விண்ணோர்களேத்த
மறைந்திருந்தாயெம்பெருமான் வல்வினையேன்றன்னை
மறைந்திடமூடிய மாயவிருளை
யறம்பாவமென்னு மருங்கயிற்றாற்கட்டிப்
புறந்தோல்போர்த்தெங்கும் புழுவழுக்குமூடி
மலஞ்சோருமொன்பது வாயிற்குடிலை
மலங்கப்புலனைந்தும் வஞ்சனையைச்செய்ய
விலங்குமனத்தால் விமலாவுனக்குக்
கலந்தவன்பாகிக் கசிந்துள்ளுருகு
நலந்தானிலாத சிறியேற்குநல்கி
நிலந்தன்மேல்வந்தருளி நீள்கழல்கள்காட்டி
நாயிற்கடையாய்க் கிடந்தவடியேற்குத்
தாயிற்சிறந்த தயாவானதத்துவனே
மாசற்றசோதி மலர்ந்தமலர்ச்சுடரே
தேசனேதேனா ரமுதேசிவபுரனே
பாசமாம்பற்றறுத்துப் பாரிக்குமாரியனே
நேசவருள்புரிந்து நெஞ்சில்வஞ்சங்கெடப்
பேராதுநின்ற பெருங்கருணைப்பேராறே
யாராவமுதே யளவிலாப்பெம்மானே
யோராதாருள்ளத் தொளிக்குமொளியானே
நீராயுருக்கியெ னாருயிராய்நின்றானே
யின்பமுந்துன்பமு மில்லானேயுள்ளானே
யன்பருக்கன்பனே யாவையுமாயல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப்பெருமையனே
யாதியனேயந்த நடுவாகியல்லானே
யீர்த்தென்னையாட்கொண்ட வெந்தைபெருமானே
கூர்த்தமெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார்தங்கருத்தி
னோக்கரியநோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும்வரவும்புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங்காவலனே காண்பரியபேரொளியே
யாற்றின்பவெள்ளமே யத்தாமிக்காய்நின்ற
தோற்றச்சுடரொளியாய்ச் சொல்லாதநுண்ணுணர்வாய்
மாற்றமாம்வையகத்தின் வெவ்வேறேவந்தறிவாந்

கள்ளப் புலக்குரம்பை - வஞ்சனையைச் செய்கின்ற புலன்களுக் கிருப்பிடமாகிய சரீரத்தின், கட்டு அழிக்கவல்லானே - பந்தத் தையறுக்க வல்லவனே, நள் இருளில் - அர்த்த யாமத்தில், நட் டம் பயின்று ஆடும் - திருநடனம் ஆடுகின்ற, நாதனே - தலை வனே, தில்லையுள் கூத்தனே - சிதம்பரத்தில் கூத்தாடுவோனே, தென்பாண்டி நாட்டானே - தென்பாண்டி நாட்டையுடைய வனே, அல்லல் பிறவி அறுப்பானே - துன்பத்தைத் தருகிற பிற வியை யறுப்பவனே, ஓவென்று - ஓவென்றரற்றி, சொல்லற்கு அரியானைச் சொல்லி - சொல்லுதற் கரியவனைப் புகழ்ந்து சொல்லி, திருவடிக்கீழ் சொல்லிய பாட்டின் பொருள் - (அவ னது) திருவடிமீது சாத்திய சொன்மாலையின் அர்த்தத்தை, உண ர்ந்து சொல்லுவார் - அறிந்து சொல்லுவோர், பல்லோரும் - எல்லோரும், பணிந்து ஏத்த - வணங்கித் துதிக்க, சிவ புரத்தி னுள் ஆர் - சிவலோகத்தில் வாழ்கின்ற, சிவன் அடிக்கீழ் - சிவ பெருமானது திருவடியின்கீழ், செல்வர் - சென்றுவாழப் பெறு வர். எ - று.

வாச்சியப் பிரபாவத்தினும் வாசகப் பிரபாவம் சிறந்ததாத லால் நமச்சிவாய என ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை முற்கூறி அதன் பொருளாகிய இறைவனை நாதன் எனப் பிற் கூறினர். இதனைக் கல்லானது கடலிற் புணையாகி மிதத்தல் முதலானவற்று லுண ர்க. குருமணி : நிறமுள்ள மணியென்றலு மொன்று. ஆகமம் என் பது ஆ, கம், மம், என மூன்று பதங்களாய்ப் பிரிந்து பசுபதி பாசம் என்பவற்றை யுணர்த்தும். உணர்த்தவே, ஆகமம் என் பது பசு பதி பாசங்களின் இலக்கணங்களை விரித்துரைக்கும் நூலென்ற தாயிற்று. ஈசன் - நித்தியைச்சுவரிய முடையோன். சிவன் - மங்களகரன். நிமலன் - அநாதிமல விமுக்தன். விம லன் - இதுவுமது. மாற்ற மனங்கழிய நின்ற மறையோன் - அவாங் மானசா கோசரன். ஐந்தொழில் - பஞ்ச கிருத்தியங்கள். அவை : சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என் பன. விலங்குமனம் ஒரு கிளையைவிட்டு ஒரு கிளையின்மீது தாவு கின்ற சாகாமிருகம் போல, ஒரு விடயத்தை விட்டு மற்றொரு விடயத்தில் தாவுகின்ற மனம். விலங்கும் மனம் - நீங்கின மன மெனினும் பொருந்தும். சாகாமிருகம் - குரங்கு. பிற அமுது களைத் தாழ்த்துதற்கு ஆராவமுது என்றார். நள் இருள் - சருவ சங்கார காலம் என்னலுமாம். மலருக்கு மணம் சிறந்தமையால் சுடர் என்பது இவ்விடத்து மணத்தை யுணர்த்திற்று.

---

## இரண்டவது
# கீர்த்தித்திருவகவல்.



சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

---

திருச்சிற்றம்பலம்.

---

நிலைமண்டலவாசிரியப்பா.

தில்லைமூதூராடியதிருவடி
பல்லுயிரெல்லாம்பயின்றனனாகி
யெண்ணில்பல்குணமெழில்பெறவிளங்கி
மண்ணும்விண்ணும்வானோருலகுந்
துன்னியகல்விதோற்றியுமழித்து
மென்னுடையிருளையேறத்துரந்து
மடியாருள்ளத்தன்புமீதூரக்
குடியாக்கொண்டகொள்கையுஞ்சிறப்பு
மன்னுமாமலைமகேந்திரமதனிற்
சொன்னவாகமந்தோற்றுவித்தருளியுங்
கல்லாடத்துக்கலந்தினிதருளி
நல்லாளோடுநயப்புறவெய்தியும்
பஞ்சப்பள்ளியிற்பான்மொழிதன்னொடு
மெஞ்சாதீண்டுமின்னருள்விளைத்துங்
கிராதவேடமொடுகிஞ்சுகவாயவள்
விராவுகொங்கைநற்றடம்படிந்துங்
கேவேடராகிக்கெளிறதுபடுத்து
மாவேட்டாகியவாகமம்வாங்கியு
மற்றவைதம்மைமகேந்திரத்திருந்
துற்றவைம்முகங்களாற்பணித்தருளியு
நந்தம்பாடியினான்மறையோனா
யந்தமிலாரியனாயமர்ந்தருளியும்

வேறுவேறுருவும்வேறுவேறியற்கையு
நூறுநூறாயிரமியல்பினதாகி
யேறுடையீசனிப்புவனியையுய்யக்
கூறுடைமங்கையுந்தானும்வந்தருளிக்
குதிரையைக்கொண்டுகுடநாடதன்மிசைச்
சதுர்படச்சாத்தாய்தானெழுந்தருளியும்
வேலம்புத்தூர்விட்டேறருளிக்
கோலம்பொலிவுகாட்டியகொள்கையுந்
தர்ப்பணமதனிற்சாந்தம்புத்தூர்
விற்பொருவேடற்கீந்தவிளைவு
மொக்கணியருளியமுழுத்தழன்மேனி
சொக்கதாகக்காட்டியதொன்மையு
மரியொடுபிரமற்களவரியொண்ணு
னரியைக்குதிரையாக்கியநன்மையு
மாண்டுகொண்டருளவழகுறுதிருவடி
பாண்டியன்றனக்குப்பரிமாவிற்
றீண்டுகனகமிசையப்பெறாஅ
தாண்டானெங்கோனருள்வழியிருப்பத்
தூண்டுசோதிதோற்றியதொன்மையு
மந்தணனாகியாண்டுகொண்டருளி
யிந்திரஞாலங்காட்டியவியல்பு
மதுரைப்பெருநன்மாநகரிருந்து
குதிரைச்சேவகனாகியகொள்கையு
மாங்கதுதன்னிலடியவட்காகப்
பாங்காய்மண்சுமந்தருளியபரிசு
முத்தரகோசமங்கையுளிருந்து
வித்தகவேடங்காட்டியவியல்பும்
பூவணமதனிற்பொலிந்திருந்தருளித்
தூவணமேனிகாட்டியதொன்மையும்
வாதவூரினில்வந்தினிதருளிப்
பாதச்சிலம்பொலிகாட்டியபண்புந்
திருவார்பெருந்துறைச்செல்வனாகிக்
கருவார்சோதியிற்கரந்தகள்ளமும்

பூவலமதனிற்பொலிந்தினிதருளிப்
பாவநாசமாக்கியபரிசுந்
தண்ணீர்ப்பந்தர்சயம்பெறவைத்து
நன்னீர்ச்சேவகனாகியநன்மையும்
விருந்தினனாகிவெண்காடதனிற்
குருந்தின்கீழன்றிருந்தகொள்கையும்
பட்டமங்கையிற்பாங்காயிருந்தங்
கட்டமாசித்தியருளியவதுவும்
வேடுவனாகிவேண்டுருக்கொண்டு
காடதுதன்னிற்கரந்தகள்ளமு
மெய்க்காட்டிட்டுவேண்டுருக்கொண்டு
தக்கானொருவனாகியதன்மையு
மோரியூரினுகந்தினிதருளிப்
பாரிரும்பாலகனாகியபரிசும்
பாண்டூர்தன்னிலீண்டவிருந்துந்
தேவூர்த்தென்பாற்றிகழ்தருதீவிற்
கோவார்கோலங்கொண்டகொள்கையுந்
தேனமர்சோலைத்திருவாரூரின்
ஞானந்தன்னைநல்கியநன்மையு
மிடைமருததனிலீண்டவிருந்து
படிமப்பாதம்வைத்தவப்பரிசு
மேகம்பத்தினியல்பாயிருந்து
பாகம்பெண்ணோடாயினபரிசுந்
திருவாஞ்சியத்திற்சீர்பெறவிருந்து
மருவார்குழலியொடுமகிழ்ந்தவண்ணமுஞ்
சேவகனாகித்திண்சிலையேந்திப்
பாவகம்பலபலகாட்டியபரிசுங்
கடம்பூர்தன்னிலிடம்பெறவிருந்து
மீங்கோய்மலையிலெழிலதுகாட்டியு
மையாறதனிற்சைவனாகியுந்
துருத்திதன்னிலருத்தியோடிருந்துந்
திருப்பனையூரில்விருப்பனாகியுங்
கழுமலமதனிற்காட்சிகொடுத்துங்

கழுக்குன் றதனில்வழுக்காதிருந்தும்
புறம்பயமதனிலறம்பலவருளியுங்
குற்றாலத்துக்குறியாயிருந்து
மந்தமில்பெருமையழலுருக்கரந்து
சுந்தரவேடத்தொருமுதலுருவுகொண்
டிந்திரஞாலம்போலவந்தருளி
யெவ்வெவர்தன்மையுந்தன்வயிற்படுத்துத்
தானேயாகிய தயாபரனெம்மிறை
சந்திரதீபத்துச்சாத்திரனாகி
யந்தரத்திழிந்துவந்தழகமர்பாலையுட்
சுந்தரத்தன்மையொடுதுதைந்திருந்தருளியு
மந்திரமாமலைமகேந்திரவெற்ப
னந்தமில்பெருமையருளுடையண்ண
லெந்தமையாண்டபரிசதுபகரி
னாற்றலதுவுடையழகமர்திருவுரு
நீற்றுக்கோடிநிமிர்ந்துகாட்டியு
மூனந்தன்னையொருங்குடனறுக்கு
மானந்தம்மேயாறாவருளியு
மாதிற்கூறுடைமாப்பெருங்கருணைய
னாதப்பெரும்பறைநவின்றுகறங்கவு
மழுக்கடையாமலாண்டுகொண்டருள்பவன்
கழுக்கடை தன்னைக்கைக்கொண்டருளியு
மூலமாகியமும்மலமறுக்குந்
தூயமேனிச்சுடர்விடுசோதி
காதலனாகிக்கழுநீர்மாலை
யேலுடைத்தாகவெழில்பெறவணிந்து
மரியொடுபிரமற்களவறியாதவன்
பரிமாவின்மிசைப்பயின்றவண்ணமு
மீண்டுவாராவழியருள்புரிபவன்
பாண்டிநாடேபழம்பதியாகவும்
பத்திசெய்யடியரைப்பரம்பரந்துய்ப்பவ
னுத்தரகோசமங்கையூராகவு
மாதிமூர்த்திகட்கருள்புரிந்தருளிய

தேவதேவன்றிருப்பெயராகவு
மிருள்கடிந்தருளியவின்பவூர்தி
யருளியபெருமையருண்மலையாகவு
மெய்ப்பெருந்தன்மையுமெவ்வெவர்திறமு
மப்பரிசதனாலாண்டுகொண்டருளி
நாயினேனைநலமலிதில்லையுட்
கோலமார்தருபொதுவினில்வருகென
வேலவென்னையீங்கொழித்தருளி
யன்றுடன்சென்றவருள்பெறுமடியவ
ரொன்றவொன்றவுடன்கலந்தருளியு
மெய்தவந்திலாதாரெரியிற்பாயவு
மாலதுவாகிமயக்கமெய்தியும்
பூதலமதனிற்புரண்டுவீழ்ந்தலறியுங்
கால்விசைத்தோடிக்கடல்புகமண்டி
நாதநாதவென்றழுதரற்றிப்
பாதமெய்தினர்பாதமெய்தவும்
பதஞ்சலிக்கருளியபரமநாடகவென்
றிதஞ்சலிப்பெய்தநின்றேங்கினரேங்கவு
மெழில்பெறுமிமயத்தியல்புடையம்பொற்
பொலிதருபுலியூர்ப்பொதுவினினடநவில்
கனிதருசெவ்வாயுமையொடுகாளிக்
கருளியதிருமுகத்தழகுறுசிறுநகை
யிறைவனீண்டியவடியவரோடும்
பொலிதருபுலியூர்ப்புக்கினிதருளின
னொலிதருகைலையுயர்கிழவோனே.

ப - ரை. தில்லைமூதூர் ஆடிய திருவடி - திருத்தில்லையென்கிற பழமையாகிய வூரின்கண் நிருத்தஞ்செய்த திருவடி, பல் உயிரெல்லாம் - பலவகைப்பட்ட வுயிர்களெல்லாவற்றுள்ளும், பயின்றனன் ஆகி - பழகினவனாகி, எண் இல் - அளவற்ற, பல் குணம் - பல நற்குணங்களும், எழில்பெற விளங்கி - அழகுபெறப் பிரகாசித்து, மண்ணும் விண்ணும் - பூமியிலும் ஆகாயத்திலும், வானோர் உலகும் - தேவலோகத்திலும், துன்னிய - பொருந்திய, கல்வி - கலைகளை, தோற்றியும் அழித்தும் - உண்டாக்கியும் அழித்தும்,

என்னுடை இருளை - என்னுடைய அஞ்ஞானாந்தகாரத்தை, ஏறத் துரந்தும் - முழுதும் போக்கியும், அடியார் உள்ளத்து - அடியா ரது மனத்தில், அன்புமீதூர - அன்புமிக, குடியாக்கொண்ட - (அவ்வடியார் மனத்தையே) குடியிருப்பாகக்கொண்ட கொள்கை யும் - கோட்பாடும், சிறப்பும் - (அக்கொள்கையாலுளதாகிய) சீர் மையும், மன்னு - நிலைபெற்ற, மாமலை-பெரியமலையாகிய, மகேந் திரமதனில் - மகேந்திரத்துள், சொன்ன-தான் (ஆதியில்) சொல் லிய, ஆகமம் - ஆகமத்தை, தோற்றுவித்தருளியும் - வெளியிட் டருளியும், கல்லாடத்து - கல்லாடமென்னுந் திருப்பதியில், கலந்து இனிது அருளி - இனிதாகச்சேர்ந்தருளி, நல்லாளோடு - தேவியாரோடு, நயப்புறவு எய்தியும் - இன்பமெய்தியும், பஞ்சப் பள்ளியில் - பஞ்சப்பள்ளியென்னும் திருப்பதியின்கண், பான் மொழி தன்னோடும் - உமாதேவியோடும், எஞ்சாது-குறையாமல், ஈண்டும் - மிகுதியாகிய, இன் - இனிய, அருள் விளைத்தும் - அரு ளைத்தோற்றுவித்தும், கிராதவேடமொடு - வேடவுருவத்துடன், கிஞ்சுகம் வாயவள் - முருக்கம் பூப்போன்ற அதரத்தையுடையா ளது, விராவு - ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற, நல்-அழகாகிய, கொங்கைத் தடம்படிந்தும் - தநதடத்திற் படிந்தும், கேநவேடர் ஆகி - மீன் வேடராகி, கெளிறது படுத்தும் - கெளிற்றுமீனை யகப்படுத்தியும், ஆ வேட்டு ஆகிய ஆகமம் வாங்கியும் - பசுக்கள் (ஆன்மாக்கள்) விரும்புதற்குரிய ஆகமங்களைக் கவர்ந்தும், அவை தம்மை - அவைகளை, மகேந்திரத்து இருந்து - மகேந்திரமலையி லெழுந்தருளியிருந்து, உற்ற - பொருந்திய, ஐம்முகங்களால் - ஐந்து முகங்களானும், பணித்தருளியும் - உபதேசித்தருளியும், நந்தம் பாடியில் - நந்தம்பாடியென்னுந் திருப்பதியின்கண், நான் மறையோனாய் - நான்கு வேதங்களையுமுணர்ந்த பிராமணனாகி, அந்தம் இல் - முடிவற்ற, ஆரியனாய் அமர்ந்தருளியும் - ஆசாரிய னாகி யமர்ந்திருந்தும், வேறு வேறு உருவும் - வெவ்வேறு உருவ மும், வேறு வேறு இயற்கையும் - வேறு வேறு சுபாவமும், நூறு நூறு ஆயிரம் இயல்பினது ஆகி-நூறுலக்ஷ இயற்கைகளையுடைய தாகி, ஏறு உடைய ஈசன் - இடபவாகநத்தையுடைய இறைவன், இப்புவனியை உய்ய - இந்த வுலகம் உய்யும் பொருட்டு, கூறு உடை மங்கையும் தானும்வந்தருளி - ஒருபாகத்தையுடைய மங் கைப்பருவத்தினளாகிய வுமாதேவியும் தானுமாக எழுந்தருளி, குதிரையைக்கொண்டு - குதிரைகளை யழைத்துக்கொண்டு, குட நாடு அதன்மிசை - மேல் நாட்டில் இருந்து, சதுர்பட - சதுரதை யுண்டாக, சாத்து ஆய் - குதிரைச்சேவகனாய், தான் எழுந்தருளி

யும் - தானே எழுந்தருளியும், வேலம் புத்தூர்-வேலம் புத்தூரில், ஏறு விட்டருளி - ஏறு விடுத்தருளி, கோலம் பொலிவு காட்டிய கொள்கையும் - தன் திருக்கோலப் பொலிவைக் காட்டிய கோட்பாடும், சாத்தம் புத்தூர் - சாந்தப் புத்தூரின்கண், வில்பொரு வில்லைக்கொண்டு பொருகின்ற, வேடன் கு - ஒரு வேடனுக்கு, தர்ப்பணமதனில் - கண்ணுடியில், ஈந்த விளைவும் - காட்சிகொடுத்தருளிய தோற்றமும், மொக்கணி அருளிய - தோற்பையைக் கொடுக்க, முழுத்தழல் மேனி - முழு அக்கினி சொரூபத்தை, சொக்கதாகக்காட்டிய தொன்மையும்-தூய்தாகக்காட்டிய பழமையும், அரியொடு பிரமற்கு - திருமாலோடு பிரமனுலும், அளவு அறிய வொண்ணுன் - அளவறிய வொண்ணுதவன், நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்-நரிகளைப்பரிகளாகச் செய்த நன்மையும், ஆண்டுகொண்டருள - ஆட்கொண்டருளும் பொருட்டு, அழகு உறு திருவடி - அழகு மிக்க திருவடியை, பாண்டியன் தனக்கு - பாண்டியனுக்கு, பரிமாவிற்று - குதிரைவிற்று, ஈண்டு கனகம் இசையப்பெருது - மிக்க பொன்கிடைக்கப் பெருமல், ஆண்டான் எங்கோன் - ஆண்டவனுகிய எம்மிறைவன், அருள் வழி யிருப்ப - அருணெறியிலிருக்க, தூண்டுசோதி தோற்றிய தொன்மையும் - மிகுந்த ஒளியுருவன் காணப்பட்ட பழமையும், அந்தணன் ஆகி - வேதியனுகி, ஆண்டுகொண்டருளி-ஆட்கொண்டருளி, இந்திரஞாலம் காட்டிய இயல்பும் - இந்திரஜாலங் காட்டிய இயற்கையும், பெரு - பெரிய, நல் - சிறந்த, மா - அழகிய, மதுரைநகர் இருந்து - மதுராபுரியிலிருந்து, குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும் - குதிரை வீரனுகிவந்த கோட்பாடும், ஆங்கு அது தன்னில் - அந்த மதுராபுரியில், அடியவள் கு ஆக-அடியவளாகிய செம்மனச் செல்விக்காக, பாங்காய் - ஒழுங்காய், மண் சுமந்தருளிய பரிசும் - மண்சுமந்தருளின தன்மையும், உத்தரகோசமங்கையுள் இருந்து - திருவுத்தரகோசமங்கையிலிருந்து, வித்தகவேடம் காட்டிய இயல்பும் - ஞானவேடத்தைக் காட்டிய இயற்கையும், பூவணமதனில் - திருப்பூவணத்தில், பொலிந்து இருந்தருளி - பிரகாசித்திருந்தருளி, தூவண்ணம் மேனிகாட்டிய தொன்மையும் - பரிசுத்தமாகிய நிறத்தையுடைய திருமேனியைக் காட்டிய பழமையும், வாதவூரினில் - திருவாதவூரில், இனிது வந்தருளி-இனிமையாய் வந்தருளி, பாதச்சிலம்பு ஒலிகாட்டிய பண்பும் - பாதச்சிலம்பினேசையை காட்டிய குணம், திரு ஆர்-செல்வம் நிறைந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையில், செல்வன் ஆகி - செல்லவானுகி, கரு ஆர் சோதியில் - பெருமை நிறைந்த

ஒளியில், கரந்த கள்ளமும்-ஒளித்த வஞ்சகமும், பூவலமதனில் - திருப்பூவலத்தில், இனிது பொலிந்தருளி - இனிதாகப் பிரகாசித் தருளி, பாவநாசம் ஆக்கிய பரிசும் - பாபத்தை நீக்கிய விதமும், தண்ணீர்ப்பந்தர் சயம்பெற வைத்து - தண்ணீர் பந்தலைச் சயம டைய வைத்து, நன்னீர்ச் சேவகனாகிய நன்மையும் - நல்ல நீர்ச் சேவகனாயிருந்த நன்மையும், வெண்காடதனில்-திருவெண் காட் டில், விருந்தினன் ஆகி - விருந்தாகி, அன்று - அன்று, குருந்தின் கீழ் - குருந்தமரத்தின் கீழ், இருந்த கொள்கையும்-இருந்த கோட் பாடும், பட்ட மங்கையில் - திருப்பட்ட மங்கையென்னும் திருப் பதியில், பாங்காயிருந்து - நன்கமர்ந்திருந்து, அங்கு-அவ்விடத்து, அட்டமாசித்தி அருளிய அதுவும்-அட்டமாசித்திகளை யருளினது வும், வேடுவன் ஆகி - வேடனாகி, வேண்டு உருக்கொண்டு-வேண் டும் வடிவங்கொண்டு, காடது தன்னில் - காட்டில், கரந்த கள்ள மும்-மறைந்த கள்ளமும், மெய்காட்டிட்டு-புறங்காட்டி, வேண்டு உருக்கொண்டு - வேண்டிய உருவங்கொண்டு, தக்கான் ஒருவனா கிய தன்மையும் - ஒரு தகுதியுடையோனான தன்மையும், ஓரியூ ரின் - திருவோரியூரின்கண், உகந்து இனிது அருளி - இனிதாக உகந்தருளி, பார் - உலகில், இருபாலகன் ஆகிய பரிசும்-பெருமை பொருந்திய சிறுவனாகிய பிரகாரமும், பாண்டூர் தன்னில் - திருப் பாண்டூரில், ஈண்ட இருந்தும் - மிகுதியாக இருந்தும், தேவூர் தென்பால் - திருத்தேவூரின் தென்புறத்தில், திகழ்தரு தீவில் - விளங்காநின்ற தீவினில், கோ ஆர் கோலம்கொண்ட கொள்கை யும் - அழகு நிறைந்த கோலத்தை தரித்துவந்த கோட்பாடும், தேன் அமர் சோலை - தேன் பொருந்திய சோலை சூழ்ந்த, திருவா ரூரில் - திருவாரூரின்கண், ஞானந்தன்னை நல்கிய நன்மையும் - ஞானத்தை யருள்செய்த நன்மையும், இடைமருது அதனில்-திரு விடைமருதூரில், ஈண்ட இருந்து - மிகவுமிருந்து, படிமப்பாதம் வைத்த அப்பரிசும் - பரிசுத்தமாகிய பாதத்தைவைத்த அத்த பிர காரமும், ஏகம்பத்தின் - திருவேகம்பத்தில், இயல்பாயிருந்து - இயற்கையாயிருந்து, பெண்ணொடு - பெண்ணுடன், பாகம் ஆயின பரிசும் - பாகம் பெற்ற தன்மையும், திருவாஞ்சியத்தில் - திரு வாஞ்சியத்தின்கண், சீர்பெற இருந்து-சிறப்புப்பொருந்த இருந்து, மரு ஆர் குழலியொடு - மணம்பொருந்திய கூந்தலையுடையவளு டன், மகிழ்ந்த வண்ணமும்-சந்தோஷித்த பிரகாரமும், சேவகன் ஆகி-வீரனாகிவந்து, திண் சிலை ஏந்தி-திண்ணிய வில்லைத்தாங்கி, பலபல பாவகம் காட்டிய பரிசும் - பற்பல பாவனைகளை காட்டிய தன்மையும், கடம்பூர் தன்னில் - திருக்கடம்பூரில், இடம்பெற

இருந்து - இடமுண்டாக விருந்தும், ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும் - திரிசிங்கோய் மலையின்கண் அழகைக் காட்டியும், ஐயாறு அதனில் - திருவையாற்றில், சைவன் ஆகியும்-சைவனாய் வந்தும், துருத்தி தன்னில் - திருத்துருத்தியில், அருத்தியோடு இருந்தும் - ஆசையோடு வீற்றிருந்தும், திருப்பனையூரில் - திருப் பனையூரின்கண், விருப்பன் ஆகியும் - விருப்பினையுடையவனாகி யும், கழுமல மதனில் - சீகாழியில், காக்ஷிகொடுத்தும் சேவை சாதித்தருளியும், கழுக்குன்றதனில் - திருக்கழுக்குன்றில், வழுக் காது இருந்தும் - தவறாதிருந்தும், புறம்பய மதனில்-திருப்புறம் பயத்தில், அறம்பல அருளியும் - பல தருமங்களை அருளிச்செய் தும், குற்றாலத்து - திருக்குற்றாலத்தில், குறியாய் இருந்தும் - அடையாளமாயிருந்தும், அந்தம் இல் - முடிவில்லாத, பெருமை-பெருமை யமைந்த, அழல் உருகரந்து-நெருப்புருவை யறைத்து, சுந்தரவேடத்து - அழகாகிய வேடத்தோடுகூடிய, ஒரு-ஒப்பற்ற, முதல் உருவுகொண்டு - முதன்மையாகிய உருவங்கொண்டு, இந் திரஞாலம்போல வந்தருளி - இந்திரசாலம்போல வந்தருளி, எவ் வெவர் தன்மையும் தன்வயிற்படுத்து - எவ்வெவரியற்கைகளையும் தன்னகப்படுத்தி, தானே ஆகிய தயாபரன் எம்மிறை - ஓர் முதல் வனாயிருந்த தானே கருணையிற் சிறந்தவனும் எம் தலைவனாகிய கடவுள், சந்திரதீபத்து - சந்திரதீபத்தில், சாத்திரன் ஆகி - சாத் திரன் உருவங்கொண்டு, அந்தரத்து இழிந்துவந்து - ஆகாயத்தி னின்று இறங்கிவந்து, அழகு அமர்பாலையுள் - அழகமைந்த பாலை நிலத்தில், சுந்தரத் தன்மையொடு - சௌந்தரிய வேடத்துடன் துதைந்திருந்து அருளியும் - பொருந்தி யிருந்தருளியும் நின்ற, மந்திரம் ஆம்மலை - தனக்கிருப்பிடமாகிய மலையாகிய, மகேந்திர வெற்பன் - மகேந்திரமலையையுடையவன், அந்தம் இல் பெருமை அருள் உடை - முடிவில்லாத பெருமையையும் அருளையுமுடைய, அண்ணல் - பெரியோன், எந்தமை - எம்மை, ஆண்டபரிசது பக ரின் - ஆண்ட தன்மையைச்சொன்னால், ஆற்றலது வுடைய-வல் லமையையுடைய, அழகு அமர் திருவுரு-அழகமைந்த திருவுருவை, நீற்றுக்கொடி நிமிர்ந்து காட்டியும் - திருநீற்று இரேகையோடு நிமிர்ந்துகாட்டியும், ஊனந்தன்னை - நமது குறைவை, ஒருங்கு உடன் அறுக்கும் - ஒருமிக்க அறுக்கின்ற, ஆனந்தமே ஆறு அரு ளியும்-பேரானந்தமே பிரயோஜனமாக அருளிச்செய்தும், மாதின் கூறு உடை - பெண்பாகத்தையுடைய, மாபெரு கருணையன் - மிகப்பெருங்கருணையுடையோன், நாதப்பெரும்பறை நவின்று கறங்கவும் - நாதமாகிய பெருமுரசு மிக்கொலிக்கவும், அழுக்கு

அடையாமல் - மாசுபொருந்தாமல், ஆண்டுகொண்டருள்பவன் - ஆண்டுகொண்டருள்வோன், கழுர்கடை தன்னை கைக்கொண்டருளியும் - சூலத்தைக் கைப்பற்றியருளியும், மூலமாகிய மும்மலம் அறுக்கும்-பிறவிப்பிணிக்குக் காரணமாகிய மும்மலங்களையும் சேதிக்கிற, தூயமேனி - பரிசுத்தமாகிய திருமேனியின், சுடர்விடு - காந்தியை யெறிகின்ற, சோதி - ஒளியுருவின், காதலன் ஆகி - விருப்பமுள்ளோனாகி, கழுநீர் மாலை - கழுநீர் மாலையை, ஏல் உடைத்தாக - பொருத்த முடைத்தாக, எழில்பெற அணிந்தும் - அழகாயணிந்தும், அரியொடு பிரமற்கு - திருமாலோடு பிரமனுக்கும், அளவு அறியாதவன் - அளவறியப்படாதவன், பரிமாவின் மிசைபயின்ற வண்ணமும் - குதிரைமீது பயின்ற தன்மையும், மீண்டு வராவழி - மீண்டும் பிறவிக்கு வராமைக்கேதுவாகிய வீட்டுநெறியை, அருள்புரிபவன் - அருள்செய்பவன், பாண்டிநாடே - பாண்டிதேசமே, பழம்பதியாகவும்-பழமையாகிய ஊராகவும், பத்திசெய் அடியரை - தன்னிடத்துப் பத்திமை செய்கிற அடியார்களை, பரம்பரத்து உய்ப்பவன் - மோக்ஷநிலத்திற் செலுத்துவோன், உத்தரகோசமங்கை ஊர் ஆகவும் - திருவுத்தரகோசமங்கையூராகவும், ஆதிமூர்த்திகட்கு - திரிமூர்த்திகளுக்கு, அருள் புரிந்தருளிய-அருள்செய்தருளிய, தேவதேவன்-தேவதேவனது, திருப்பெயர் ஆகவும் - திருநாமமாகவும், இருள் கடிந்தருளிய - அவிச்சையாகிய அந்தகாரத்தை நீக்கி அருளிய, இன்ப ஊர்தி - ஆனந்த ஊர்தியை, அருளிய பெருமை - அருளிய பெருமையையுடைய, அருள் மலையாகவும் - திருவருள் மலையாகவும், எப்பெருந்தன்மையும் - எவ்வகைப்பட்ட பெருந்தன்மையையும், எவ்வெவர் திறமும்-எவ்வெவர் திறத்தையும், அப்பரிசதனால் ஆண்டுகொண்டருளி-அவ்வத்தன்மையால் ஆண்டுகொண்டருளி, நாயினேனை - நாயேனை, நலம்மலி - நன்மை மிகுந்த, தில்லையுள் - திருத்தில்லையின்கண், கோலம் ஆர்தரு - அழகு நிறைந்த, பொதுவினில் வருக என - அம்பலத்தில் வருகவென்று, ஏல - ஏற்க, என்னை - அடியேனை, ஈங்கு ஒழித்தருளி - இவ்விடத்தே நீக்கியருளி, அன்று உடன் சென்ற - அன்று உடன்போன, அருள் பெறும் அடியவர் - அருள்பெற்ற அடியார்கள், ஒன்ற ஒன்ற - பொருந்தப் பொருந்த, உடன் கலந்தருளியும் - அவருடன் சேர்ந்தருளியும், எய்த வந்திலாதார் - அடையவராதவர்கள், எரியில் பாயவும்-நெருப்பில் பாயவும், மாலது ஆகி மயக்கமாகியும்- ஆசைகொண்டு மயங்கியும், பூதலமதனில் புரண்டு வீழ்ந்து அலறியும் - பூமியின்மேல் விழுந்து புரண்டு அலறியும், கால் விசைத்து ஓடி -

கால் வேகங்கொண்டோடி, கடல்புக மண்டி - கடலில்விழ நெருங்கி, நாத நாத என்று அழுது அரற்றி - தலைவனே தலைவனே யென்றழுதரற்றி, பாதம் எய்தினர் பாதம் எய்தவும்-திருவடியை அடைந்தவர் திருவடியை அடையவும், பதஞ்சலிக்கு அருளிய - பதஞ்சலி முனிவர்க்கருள்செய்த, பரம நாடக என்று - மேலான நிருத்தத்தையுடையவனே யென்று, இதம் சலிப்பு எய்த நின்று - இருதயங் கலங்க நின்று, ஏங்கினர் ஏங்கவும் - இரங்கினோர் இரங்கவும், எழில் பெறும் - அழகைக்கொண்ட, இமையத்து இயல்பு உடைய - இமைய மலையின் இயற்கையையுடைய, அம்-அழகிய, பொன் - பொன்னினால் செய்யப்பட்டு, பொலிதரு - பிரகாசியாநின்ற, புலியூர் பொதுவினில் - திருப்புலியூர் அம்பலத்தில், நடம் நவில் - நடனஞ்செய்கிற, கனிதரு செவ்வாய் - கொவ்வைக்கனி போலும் செவ்வாயினையுடைய, உமையொடு காளிக்கு - உமாதேவியோடு காளிக்கும், அருளிய - அருள்செய்த, திருமுகத்து அழகு உறு சிறு நகை இறைவன் - திருமுகத்தழகுமிக்க புன்னகையையுடைய தலைவன், ஒலிதரு கைலை உயர்கிழவோன் - ஒலிக்கின்ற கைலைமலைக்கு உயர்ந்தவுரியோன், ஈண்டிய அடியவரோடும் - நெருங்கிய அடியார்களுடன் பொலிதரு - விளங்குகின்ற, புலியூர் - திருப்புலியூரின்கண், இனி - இனிதாக, புக்கு அருளினன் - புகுந்தருளினன், எ - று,

ஐம்முகங்கள் - அகோரம், ஈசானம், சத்தியோசாதம், தற்புருஷம், வாமம் என்பன. மும்மலங்கள் - ஆணவம், மாயை, காமியம் என்பன.

கள்ளப் புலக்குரம்பை - வஞ்சனையைச் செய்கின்ற புலன்களுக்கிருப்பிடமாகிய சரீரத்தின், கட்டு அழிக்கவல்லானே - பந்தத்தையறுக்க வல்லவனே, நள் இருளில் - அர்த்த யாமத்தில், நட்டம் பயின்று ஆடும் - திருநடநம் ஆடுகின்ற, நாதனே - தலைவனே, தில்லையுள் கூத்தனே - சிதம்பரத்தில் கூத்தாடுவோனே, தென்பாண்டி நாட்டானே - தென்பாண்டி நாட்டையுடையவனே, அல்லல் பிறவி அறுப்பானே - துன்பத்தைத் தருகிற பிறவியை யறுப்பவனே, ஓவென்று - ஓவென்றரற்றி, சொல்லற்கு அரியானைச் சொல்லி - சொல்லுதற் கரியவனைப் புகழ்ந்து சொல்லி, திருவடிக்கீழ் சொல்லிய பாட்டின் பொருள் - (அவனது) திருவடிமீது சாத்திய சொன்மாலையின் அர்த்தத்தை, உணர்ந்து சொல்லுவார் - அறிந்து சொல்லுவோர், பல்லோரும் - எல்லோரும், பணிந்து எத்த - வணங்கித் துதிக்க, சிவ புரத்தினுள் ஆர் - சிவலோகத்தில் வாழ்கின்ற, சிவன் அடிக்கீழ் - சிவபெருமானது திருவடியின்கீழ், செல்வர் - சென்றுவாழப் பெறுவர். எ - று.

வாச்சியப் பிரபாவத்தினும் வாசகப் பிரபாவம் சிறந்ததாதலால் நமச்சிவாய என ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை முற்கூறி அதன் பொருளாகிய இறைவனை நாதன் எனப் பிற் கூறினர். இதனைக் கல்லானது கடலிற் புணையாகி மிதத்தல் முதலானவற்றா லுணர்க. குருமணி: நிறமுள்ள மணியென்றலு மொன்று. ஆகமம் என்பது ஆ, கம், மம், என மூன்று பதங்களாய்ப் பிரிந்து பசுபதி பாசம் என்பவற்றை யுணர்த்தும். உணர்த்தவே, ஆகமம் என்பது பசு பதி பாசங்களின் இலக்கணங்களை விரித்துரைக்கும் நூலென்ற தாயிற்று. ஈசன் - நித்தியைச்சுவரிய முடையோன். சிவன் - மங்களகரன். நிமலன் - அநாதிமல விமுக்தன். விமலன் - இதுவுமது. மாற்ற மனங்கழிய நின்ற மறையோன் - அவாங் மாநசா கோசரன். ஐந்தொழில் - பஞ்ச கிருத்தியங்கள். அவை : சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. விலங்குமனம் ஒரு கிளையைவிட்டு ஒரு கிளையின்மீது தாவுகின்ற சாகாமிருகம் போல, ஒரு விடயத்தை விட்டு மற்றொரு விடயத்தில் தாவுகின்ற மனம். விலங்கும் மனம் - நீங்கின மனமெனினும் பொருந்தும். சாகாமிருகம் - குரங்கு. பிற அமுதுகளைத் தாழ்த்துதற்கு ஆராவமுது என்றார். நள் இருள் - சருவ சங்கார காலம் என்னலுமாம். மலருக்கு மணம் சிறந்தமையால் சுடர் என்பது இவ்விடத்து மணத்தை யுணர்த்திற்று.

---

# இரண்டவது
# கீர்த்தித்திருவகவல்.

சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

**நிலைமண்டலவாசிரியப்பா.**

தில்லைமூதூராடியதிருவடி
பல்லுயிரெல்லாம்பயின்றனனாகி
யெண்ணில்பல்குணமெழில்பெறவிளங்கி
மண்ணும்விண்ணும்வானோருலகுந்
துன்னியகல்விதோற்றியுமழித்து
மென்னுடையிருளையேறத்துரந்து
மடியாருள்ளத்தன்புமீதூரக்
குடியாக்கொண்டகொள்கையுஞ்சிறப்பு
மன்னுமாமலைமகேந்திரமதனிற்
சொன்னவாகமந்தோற்றுவித்தருளியுங்
கல்லாடத்துக்கலந்தினிதருளி
நல்லாளோடுநயப்புறவெய்தியும்
பஞ்சப்பள்ளியிற்பான்மொழிதன்னொடு
மெஞ்சாதீண்டுமின்னருள்விளைத்துங்
கிராதவேடமொடுகிஞ்சுகவாயவள்
விராவுகொங்கைநற்றடம்படிந்துங்
கேவேடராகிக்கெளிறதுபடுத்து
மாவேட்டாகியவாகமம்வாங்கியு
மற்றவைதம்மைமகேந்திரத்திருந்
துற்றவைம்முகங்களாற்பணித்தருளியு
நந்தம்பாடியினான்மறையோனா
யந்தமிலாரியனாயமர்ந்தருளியும்

வேறுவேறுருவும்வேறுவேறியற்கையு
நூறுநூறாயிரமியல்பினதாகி
யேறுடையீசனிப்புவனியையுய்யக்
கூறுடைமங்கையுந்தானும்வந்தருளிக்
குதிரையைக்கொண்டுகுடநாடதன்மிசைச்
சதுர்படச்சாத்தாய்தானெழுந்தருளியும்
வேலம்புத்தூர்விட்டேறருளிக்
கோலம்பொலிவுகாட்டியகொள்கையுந்
தர்ப்பணமதனிற்சாந்தம்புத்தூர்
விற்பொருவேடற்கீந்தவிளைவு
மொக்கணியருளியமுழுத்தழன்மேனி
சொக்கதாகக்காட்டியதொன்மையு
மரியொடுபிரமற்களவரியொண்ணா
னரியைக்குதிரையாக்கியநன்மையு
மாண்டுகொண்டருளவழகுறுதிருவடி
பாண்டியன்றனக்குப்பரிமாவிற்
றீண்டுகனகமிசையப்பெறாஅ
தாண்டானெங்கோனருள்வழியிருப்பத்
தூண்டுசோதிதோற்றியதொன்மையு
மந்தணனாகியாண்டுகொண்டருளி
யிந்திரஞாலங்காட்டியவியல்பு
மதுரைப்பெருநன்மாநகரிருந்து
குதிரைச்சேவகனாகியகொள்கையு
மாங்கதுதன்னிலடியவட்காகப்
பாங்காய்மண்சுமந்தருளியபரிசு
முத்தரகோசமங்கையுளிருந்து
வித்தகவேடங்காட்டியவியல்பும்
பூவணமதனிற்பொலிந்திருந்தருளித்
தூவணமேனிகாட்டியதொன்மையும்
வாதவூரினில்வந்தினிதருளிப்
பாதச்சிலம்பொலிகாட்டியபண்புந்
திருவார்பெருந்துறைச்செல்வனாகிக்
கருவார்சோதியிற்கரந்தகள்ளமும்

பூவலமதனிற்பொலிந்தினிதருளிப்
பாவநாசமாக்கியபரிசுந்
தண்ணீர்ப்பந்தர்சயம்பெறவைத்து
நன்னீர்ச்சேவகனாகியநன்மையும்
விருந்தினனாகிவெண்காடதனிற்
குருந்தின்கீழன்றிருந்தகொள்கையும்
பட்டமங்கையிற்பாங்காயிருந்தங்
கட்டமாசித்தியருளியவதுவும்
வேடுவனாகிவேண்டுருக்கொண்டு
காடதுதன்னிற்கரந்தகள்ளமு
மெய்க்காட்டிட்டுவேண்டுருக்கொண்டு
தக்கானொருவனாகியதன்மையு
மோரியூரினுகந்தினிதருளிப்
பாரிரும்பாலகனாகியபரிசும்
பாண்டூர்தன்னிலீண்டவிருந்துந்
தேவூர்த்தென்பாற்றிகழ்தருதீவிற்
கோவார்கோலங்கொண்டகொள்கையுந்
தேனமர்சோலைத்திருவாரூரின்
ஞானந்தன்னைநல்கியநன்மையு
மிடைமருததனிலீண்டவிருந்து
படிமப்பாதம்வைத்தவப்பரிசு
மேகம்பத்தினியல்பாயிருந்து
பாகம்பெண்ணோடாயினபரிசுந்
திருவாஞ்சியத்திற்சீர்பெறவிருந்து
மருவார்குழலியொடுமகிழ்ந்தவண்ணமுஞ்
சேவகனாகித்திண்சிலையேந்திப்
பாவகம்பலபலகாட்டியபரிசுங்
கடம்பூர்தன்னிலிடம்பெறவிருந்து
மீங்கோய்மலையிலெழிலதுகாட்டியு
மையாறதனிற்சைவனாகியுந்
துருத்திதன்னிலருத்தியோடிருந்துந்
திருப்பனையூரில்விருப்பனாகியுங்
கழுமலமதனிற்காட்சிகொடுத்துங்

கழுக்குன் றதனில்வழுக்கா திருந்தும்
புறம்பயமதனில றம்பலவருளியுங்
குற்றாலத்துக்குறியாயிருந்து
மந்தமில்பெருமையழலுருக்கரந்து
சுந்தரவேடத்தொருமுதலுருவுகொண்
டிந்திரஞாலம்போலவந்தருளி
யெவ்வெவர்தன்மையுந்தன்வயிற்படுத்துத்
தானேயாகிய தயாபரனெம்மிறை
சந்திரதீபத்துச்சாத்திரனாகி
யந்தரத்திழிந்துவந்தழகமர்பாலையுட்
சுந்தரத்தன்மையொடுதுதைந்திருந்தருளியு
மந்திரமாமலைமகேந்திரவெற்ப
னந்தமில்பெருமையருளுடையண்ண
லெந்தமையாண்டபரிசதுபகரி
னாற்றலதுவுடையழகமர்திருவுரு
நீற்றுக்கோடிநிமிர்ந்துகாட்டியு
மூனந்தன்னையொருங்குடனறுக்கு
மானந்தம்மேயாறுவருளியு
மாதிற்கூறுடைமாப்பெருங்கருணைய
னாதப்பெரும்பறைநவின்றுகறங்கவு
மழுக்கடையாமலாண்டுகொண்டருள்பவன்
கழுக்கடைதன்னைக்கைக்கொண்டருளியு
மூலமாகியமும்மலமறுக்குந்
தூயமேனிச்சுடர்விடுசோதி
காதலனாகிக்கழுநீர்மாலை
யேலுடைத்தாகவெழில்பெறவணிந்து
மரியொடுபிரமற்களவறியாதவன்
பரிமாவின்மிசைப்பயின்றவண்ணமு
மீண்டுவாராவழியருள்புரிபவன்
பாண்டிநாடேபழம்பதியாகவும்
பத்திசெய்யடியரைப்பரம்பரந்துய்ப்பவ
னுத்தரகோசமங்கையூராகவு
மாதிமூர்த்திகட்கருள்புரிந்தருளிய

தேவதேவன் றிருப்பெயராகவு
மிருள்கடிந்தருளியவின்பவூர்தி
யருளியபெருமையருண்மலையாகவு
மெய்ப்பெருந்தன்மையுமெவ்வெவர்திறமு
மப்பரிசதனாலாண்டுகொண்டருளி
நாயினேனைநலமலிதில்லையுட்
கோலமார்தருபொதுவினில்வருகென
வேலவென்னையீங்கொழித்தருளி
யன்றுடன்சென்றவருள்பெறுமடியவ
ரொன்றவொன்றவுடன்கலந்தருளியு
மெய்தவந்திலாதாரெரியிற்பாயவு
மாலதுவாகிமயக்கமெய்தியும்
பூதலமதனிற்புரண்டுவீழ்ந்தலறியுங்
கால்விசைத்தோடிக்கடல்புகமண்டி
நாதநாதவென்றழுதரற்றிப்
பாதமெய்தினர்பாதமெய்தவும்
பதஞ்சலிக்கருளியபரமநாடகவென்
றிதஞ்சலிப்பெய்தநின்றேங்கினரேங்கவு
மெழில்பெறுமிமயத்தியல்புடையம்பொற்
பொலிதருபுலியூர்ப்பொதுவினினடநவில்
கனிதருசெவ்வாயுமையொடுகாளிக்
கருளியதிருமுகத்தழகுறுசிறுநகை
யிறைவனீண்டியவடியவரோடும்
பொலிதருபுலியூர்ப்புக்கினிதருளின
னொலிதருகைலையுயர்கிழவோனே.

ப - ரை. தில்லைமூதூர் ஆடிய திருவடி - திருத்தில்லையென்கிற பழமையாகிய வூரின்கண் நிருத்தஞ்செய்த திருவடி, பல் உயிரெல்லாம் - பலவகைப்பட்ட வுயிர்களெல்லாவற்றுள்ளும், பயின்றனன் ஆகி - பழகினவனாகி, எண் இல் - அளவற்ற, பல் குணம் - பல நற்குணங்களும், எழில்பெற விளங்கி - அழகுபெறப் பிரகாசித்து, மண்ணும் விண்ணும் - பூமியிலும் ஆகாயத்திலும், வானோர் உலகும் - தேவலோகத்திலும், துன்னிய - பொருந்திய, கல்வி - கலைகளை, தோற்றியும் அழித்தும் - உண்டாக்கியும் அழித்தும்,

என்னுடை இருளை - என்னுடைய அஞ்ஞானாந்தகாரத்தை, ஏறத் துரந்தும் - முழுதும் போக்கியும், அடியார் உள்ளத்து - அடியா ரது மனத்தில், அன்புமீதூர - அன்புமிக, குடியாக்கொண்ட - (அவ்வடியார் மனத்தையே) குடியிருப்பாகக்கொண்ட கொள்கை யும் - கோட்பாடும், சிறப்பும் - (அக்கொள்கையாலுளதாகிய) சீர் மையும், மன்னு - நிலைபெற்ற, மாமலை-பெரியமலையாகிய, மகேந் திரமதனில் - மகேந்திரத்துள், சொன்ன-தான் (ஆதியில்) சொல் லிய, ஆகமம் - ஆகமத்தை, தோற்றுவித்தருளியும் - வெளியிட் டருளியும், கல்லாடத்து - கல்லாடமென்னுந் திருப்பதியில், கலந்து இனிது அருளி - இனிதாகச்சேர்ந்தருளி, நல்லாளோடு - தேவியாரோடு, நயப்புறவு எய்தியும் - இன்பமெய்தியும், பஞ்சப் பள்ளியில் - பஞ்சப்பள்ளியென்னும் திருப்பதியின்கண், பான் மொழி தன்னொடும் - உமாதேவியோடும், எஞ்சாது-குறையாமல், ஈண்டும் - மிகுதியாகிய, இன் - இனிய, அருள் விளைத்தும் - அரு ளைத்தோற்றுவித்தும், கிராதவேடமொடு - வேடவுருவத்துடன், கிஞ்சுகம் வாயவள் - முருக்கம் பூப்போன்ற அதரத்தையுடையா ளது, விராவு - ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற, நல்-அழகாகிய, கொங்கைத் தடம்படிந்தும் - தநதடத்திற் படிந்தும், கேநவேடர் ஆகி - மீன் வேடராகி, கெளிறது படுத்தும் - கெளிற்றுமீனை யகப்படுத்தியும், ஆ வேட்டு ஆகிய ஆகமம் வாங்கியும் - பசுக்கள் (ஆன்மாக்கள்) விரும்புதற்குரிய ஆகமங்களைக் கவர்ந்தும், அவை தம்மை - அவைகளை, மகேந்திரத்து இருந்து - மகேந்திரமலையி லெழுந்தருளியிருந்து, உற்ற - பொருந்திய, ஐம்முகங்களால் - ஐந்து முகங்களானும், பணித்தருளியும் - உபதேசித்தருளியும், நந்தம் பாடியில் - நந்தம்பாடியென்னுந் திருப்பதியின்கண், நான் மறையோனாய் - நான்கு வேதங்களையுமுணர்ந்த பிராமணனாகி, அந்தம் இல் - முடிவற்ற, ஆரியனாய் அமர்ந்தருளியும் - ஆசாரிய னாகி யமர்ந்திருந்தும், வேறு வேறு உருவும் - வெவ்வேறு உருவ மும், வேறு வேறு இயற்கையும் - வேறு வேறு சுபாவமும், நூறு நூறு ஆயிரம் இயல்பினது ஆகி-நூறுலக்ஷ இயற்கைகளையுடைய தாகி, ஏறு உடைய ஈசன் - இடபவாகநத்தையுடைய இறைவன், இப்புவனியை உய்ய - இந்த வுலகம் உய்யும் பொருட்டு, கூறு உடை மங்கையும் தானும்வந்தருளி - ஒருபாகத்தையுடைய மங் கைப்பருவத்தினளாகிய வுமாதேவியும் தானுமாக எழுந்தருளி, குதிரையைக்கொண்டு - குதிரைகளை யழைத்துக்கொண்டு, குட நாடு அதன்மிசை - மேல் நாட்டில் இருந்து, சதுர்பட - சதுரதை யுண்டாக, சாத்து ஆய் - குதிரைச்சேவகனாய், தான் எழுந்தருளி

யும் - தானே எழுந்தருளியும், வேலம் புத்தூர்-வேலம் புத்தூரில், ஏறு விட்டருளி - ஏறு விடுத்தருளி, கோலம் பொலிவு காட்டிய கொள்கையும் - தன் திருக்கோலப் பொலிவைக் காட்டிய கோட்பாடும், சாத்தம் புத்தூர் - சாந்தப் புத்தூரின்கண், வில்பொரு வில்லைக்கொண்டு பொருகின்ற, வேடன் கு - ஒரு வேடனுக்கு, தர்ப்பணமதனில் - கண்ணாடியில், ஈந்த விளைவும் - காட்சிகொடுத்தருளிய தோற்றமும், மொக்கணி அருளிய - தோற்பையைக் கொடுக்க, முழுத்தழல் மேனி - முழு அக்கினி சொரூபத்தை, சொக்கதாகக்காட்டிய தொன்மையும்-தூய்தாகக்காட்டிய பழமையும், அரியொடு பிரமற்கு - திருமாலோடு பிரமனாலும், அளவு அறிய வொண்ணான் - அளவறிய வொண்ணாதவன், நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்-நரிகளைப்பரிகளாகச் செய்த நன்மையும், ஆண்டுகொண்டருள - ஆட்கொண்டருளும் பொருட்டு, அழகு உறு திருவடி - அழகு மிக்க திருவடியை, பாண்டியன் தனக்கு - பாண்டியனுக்கு, பரிமாவிற்று - குதிரைவிற்று, ஈண்டு கனகம் இசையப்பெறாது - மிக்க பொன்கிடைக்கப் பெறாமல், ஆண்டான் எங்கோன் - ஆண்டவனாகிய எம்மிறைவன், அருள் வழி யிருப்ப - அருணெறியிலிருக்க, தூண்டுசோதி தோற்றிய தொன்மையும் - மிகுந்த ஒளியுருவன் காணப்பட்ட பழமையும், அந்தணன் ஆகி - வேதியனாகி, ஆண்டுகொண்டருளி-ஆட்கொண்டருளி, இந்திரஞாலம் காட்டிய இயல்பும் - இந்திரஜாலங் காட்டிய இயற்கையும், பெரு - பெரிய, நல் - சிறந்த, மா - அழகிய, மதுரைநகர் இருந்து - மதுராபுரியிலிருந்து, குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும் - குதிரை வீரனாகிவந்த கோட்பாடும், ஆங்கு அது தன்னில் - அந்த மதுராபுரியில், அடியவள் கு ஆக-அடியவளாகிய செம்மனச் செல்விக்காக, பாங்காய் - ஒழுங்காய், மண் சுமந்தருளிய பரிசும் - மண்சுமந்தருளின தன்மையும், உத்தரகோசமங்கையுள் இருந்து - திருவுத்தரகோசமங்கையிலிருந்து, வித்தகவேடம் காட்டிய இயல்பும் - ஞானவேடத்தைக் காட்டிய இயற்கையும், பூவணமதனில் - திருப்பூவணத்தில், பொலிந்து இருந்தருளி - பிரகாசித்திருந்தருளி, தூவண்ணம் மேனிகாட்டிய தொன்மையும் - பரிசுத்தமாகிய நிறத்தையுடைய திருமேனியைக் காட்டிய பழமையும், வாதவூரினில் - திருவாதவூரில், இனிது வந்தருளி-இனிமையாய் வந்தருளி, பாதச்சிலம்பு ஒலிகாட்டிய பண்பும் - பாதச்சிலம்பினோசையை காட்டிய குணம், திரு ஆர்-செல்வம் நிறைந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையில், செல்வன் ஆகி - செல்லவனாகி, கரு ஆர் சோதியில் - பெருமை நிறைந்த

ஒளியில், கரந்த கள்ளமும்-ஒளித்த வஞ்சகமும், பூவலமதனில் - திருப்பூவலத்தில், இனிது பொலிந்தருளி - இனிதாகப் பிரகாசித்தருளி, பாவநாசம் ஆக்கிய பரிசும் - பாபத்தை நீக்கிய விதமும், தண்ணீர்ப்பந்தர் சயம்பெற வைத்து - தண்ணீர் பந்தலைச் சயமடைய வைத்து, நன்னீர்ச் சேவகனாகிய நன்மையும் - நல்ல நீர்ச் சேவகனாயிருந்த நன்மையும், வெண்காடதனில்-திருவெண் காட்டில், விருந்தினன் ஆகி - விருந்தாகி, அன்று - அன்று, குருந்தின் கீழ் - குருந்தமரத்தின் கீழ், இருந்த கொள்கையும்-இருந்த கோட்பாடும், பட்ட மங்கையில் - திருப்பட்ட மங்கையென்னும் திருப்பதியில், பாங்காயிருந்து - நன்கமர்ந்திருந்து, அங்கு-அவ்விடத்து, அட்டமாசித்தி அருளிய அதுவும்-அட்டமாசித்திகளை யருளினதுவும், வேடுவன் ஆகி - வேடனாகி, வேண்டு உருக்கொண்டு-வேண்டும் வடிவங்கொண்டு, காடது தன்னில் - காட்டில், கரந்த கள்ளமும்-மறைந்த கள்ளமும், மெய்காட்டிட்டு-புறங்காட்டி, வேண்டு உருக்கொண்டு - வேண்டிய உருவங்கொண்டு, தக்கான் ஒருவனாகிய தன்மையும் - ஒரு தகுதியுடையோனான தன்மையும், ஓரியூரின் - திருவோரியூரின்கண், உகந்து இனிது அருளி - இனிதாக உகந்தருளி, பார் - உலகில், இருபாலகன் ஆகிய பரிசும்-பெருமை பொருந்திய சிறுவனாகிய பிரகாரமும், பாண்டூர் தன்னில் - திருப்பாண்டூரில், ஈண்ட இருந்தும் - மிகுதியாக இருந்தும், தேவூர் தென்பால் - திருத்தேவூரின் தென்புறத்தில், திகழ்தரு தீவில் - விளங்காநின்ற தீவினில், கோ ஆர் கோலம்கொண்ட கொள்கையும் - அழகு நிறைந்த கோலத்தை தரித்துவந்த கோட்பாடும், தேன் அமர் சோலை - தேன் பொருந்திய சோலை சூழ்ந்த, திருவாரூரில் - திருவாரூரின்கண், ஞானந்தன்னை நல்கிய நன்மையும் - ஞானத்தை யருள்செய்த நன்மையும், இடைமருது அதனில்-திருவிடைமருதூரில், ஈண்ட இருந்து - மிகவுமிருந்து, படிமப்பாதம் வைத்த அப்பரிசும் - பரிசுத்தமாகிய பாதத்தைவைத்த அந்த பிரகாரமும், ஏகம்பத்தின் - திருவேகம்பத்தில், இயல்பாயிருந்து - இயற்கையாயிருந்து, பெண்ணொடு - பெண்ணுடன், பாகம் ஆயின பரிசும் - பாகம் பெற்ற தன்மையும், திருவாஞ்சியத்தில் - திருவாஞ்சியத்தின்கண், சீர்பெற இருந்து-சிறப்புப்பொருந்த இருந்து, மரு ஆர் குழலியொடு - மணம்பொருந்திய கூந்தலையுடையவளுடன், மகிழ்ந்த வண்ணமும்-சந்தோஷித்த பிரகாரமும், சேவகன் ஆகி-வீரனாகிவந்து, திண் சிலை ஏந்தி-திண்ணிய வில்லைத்தாங்கி, பலபல பாவகம் காட்டிய பரிசும் - பற்பல பாவனைகளை காட்டிய தன்மையும், கடம்பூர் தன்னில் - திருக்கடம்பூரில், இடம்பெற

இருந்து - இடமுண்டாக விருந்தும், ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும் - திரிவிங்கோய் மலையின்கண் அழகைக் காட்டியும், ஐயாறு அதனில் - திருவையாற்றில், சைவன் ஆகியும்-சைவனாய் வந்தும், துருத்தி தன்னில் - திருத்துருத்தியில், அருத்தியோடு இருந்தும் - ஆசையோடு வீற்றிருந்தும், திருப்பனையூரில் - திருப் பனையூரின்கண், விருப்பன் ஆகியும் - விருப்பினையுடையவனாகி யும், கழுமல மதனில் - சீகாழியில், காக்ஷிகொடுத்தும் சேவை சாதித்தருளியும், கழுக்குன்றதனில் - திருக்கழுக்குன்றில், வழுக் காது இருந்தும் - தவறாதிருந்தும், புறம்பய மதனில்-திருப்புறம் பயத்தில், அறம்பல அருளியும் - பல தருமங்களை அருளிச்செய் தும், குற்றாலத்து - திருக்குற்றாலத்தில், குறியாய் இருந்தும் - அடையாளமாயிருந்தும், அந்தம் இல் - முடிவில்லாத, பெருமை- பெருமை யமைந்த, அழல் உருகரந்து-நெருப்புருவை மறைத்து, சுந்தரவேடத்து - அழகாகிய வேடத்தோடுகூடிய, ஒரு-ஒப்பற்ற முதல் உருவுகொண்டு - முதன்மையாகிய உருவங்கொண்டு, இந் திரஞாலம்போல வந்தருளி - இந்திரசாலம்போல வந்தருளி, எவ் வெவர் தன்மையும் தன்வயிற்படுத்து - எவ்வெவரியற்கைகளையும் தன்னகப்படுத்தி, தானே ஆகிய தயாபரன் எம்மிறை - ஓர் முதல் வனாயிருந்த தானே கருணையிற் சிறந்தவனும் எம் தலைவனாகிய கடவுள், சந்திரதீபத்து - சந்திரதீபத்தில், சாத்திரன் ஆகி - சாத் திரன் உருவங்கொண்டு, அந்தரத்து இழிந்துவந்து - ஆகாயத்தி னின்று இறங்கிவந்து, அழகு அமர்பாலையுள் - அழகமைந்த பாலை நிலத்தில், சுந்தரத் தன்மையொடு - சௌந்தரிய வேடத்துடன் துதைந்திருந்து அருளியும் - பொருந்தி யிருந்தருளியும் நின்ற, மந்திரம் ஆம்மலை - தனக்கிருப்பிடமாகிய மலையாகிய, மகேந்திர வெற்பன் - மகேந்திரமலையையுடையவன், அந்தம் இல் பெருமை அருள் உடை - முடிவில்லாத பெருமையையும் அருளையுமுடைய, அண்ணல் - பெரியோன், எந்தமை - எம்மை, ஆண்டபரிசது பக ரின் - ஆண்ட தன்மையைச்சொன்னால், ஆற்றலது வுடைய-வல் லமையையுடைய, அழகு அமர் திருவுரு-அழகமைந்த திருவுருவை, நீற்றுக்கொடி நிமிர்ந்து காட்டியும் - திருநீற்று இரேகையோடு நிமிர்ந்துகாட்டியும், ஊனந்தன்னை - நமது குறைவை, ஒருங்கு உடன் அறுக்கும் - ஒருமிக்க அறுக்கின்ற, ஆனந்தமே ஆறு அரு ளியும்-பேரானந்தமே பிரயோஜனமாக அருளிச்செய்தும், மாதின் கூறு உடை - பெண்பாகத்தையுடைய, மாபெரு கருணையன் - மிகப்பெருங்கருணையுடையோன், நாதப்பெரும்பறை நவின்று கறங்கவும் - நாதமாகிய பெருமுரசு மிக்கொலிக்கவும், அழுக்கு

அடையாமல் - மாசுபொருந்தாமல், ஆண்டுகொண்டருள்பவன் - ஆண்டுகொண்டருள்வோன், கழுக்கடை தன்னை கைக்கொண்டருளியும் - சூலத்தைக் கைப்பற்றியருளியும், மூலமாகிய மும்மலம் அறுக்கும்-பிறவிப்பிணிக்குக் காரணமாகிய மும்மலங்களையும் சேதிக்கிற, தூயமேனி - பரிசுத்தமாகிய திருமேனியின், சுடர்விடு - காந்தியை யெறிகின்ற, சோதி - ஒளியுருவின், காதலன் ஆகி - விருப்பமுள்ளோனாகி, கழுநீர் மாலை - கழுநீர் மாலையை, ஏல் உடைத்தாக - பொருத்த முடைத்தாக, எழில்பெற அணிந்தும் - அழகாயணிந்தும், அரியொடு பிரமற்கு - திருமாலோடு பிரமனுக்கும், அளவு அறியாதவன் - அளவறியப்படாதவன், பரிமாவின் மிசைபயின்ற வண்ணமும் - குதிரைமீது பயின்ற தன்மையும், மீண்டு வராவழி - மீண்டும் பிறவிக்கு வராமைக்கேதுவாகிய வீட்டுநெறியை, அருள்புரிபவன் - அருள்செய்பவன், பாண்டிநாடே - பாண்டிதேசமே, பழம்பதியாகவும்-பழமையாகிய ஊராகவும், பத்திசெய் அடியரை - தன்னிடத்துப் பத்திமை செய்கிற அடியார்களை, பரம்பரத்து உய்ப்பவன் - மோக்ஷநிலத்திற் செலுத்துவோன், உத்தரகோசமங்கை ஊர் ஆகவும் - திருவுத்தரகோசமங்கையூராகவும், ஆதிமூர்த்திகட்கு - திரிமூர்த்திகளுக்கு, அருள்புரிந்தருளிய-அருள்செய்தருளிய, தேவதேவன்-தேவதேவனது, திருப்பெயர் ஆகவும் - திருநாமமாகவும் இருள் கடிந்தருளிய - அவிச்சையாகிய அந்தகாரத்தை நீக்கி அருளிய, இன்ப ஊர்தி - ஆனந்த ஊர்தியை, அருளிய பெருமை - அருளிய பெருமையையுடைய, அருள் மலையாகவும் - திருவருள் மலையாகவும், எப்பெருந்தன்மையும் - எவ்வகைப்பட்ட பெருந்தன்மையையும், எவ்வெவர் திறமும்-எவ்வெவர் திறத்தையும், அப்பரிசதனால் ஆண்டுகொண்டருளி-அவ்வத்தன்மையால் ஆண்டுகொண்டருளி, நாயினேனை - நாயேனை, நலம்மலி - நன்மை மிகுந்த, தில்லையுள் - திருத்தில்லையின்கண், கோலம் ஆர்தரு - அழகு நிறைந்த, பொதுவினில் வருக என - அம்பலத்தில் வருகவென்று, ஏல - ஏற்க, என்னை - அடியேனை, ஈங்கு ஒழித்தருளி - இவ்விடத்தே நீக்கியருளி, அன்று உடன் சென்ற - அன்று உடன்போன, அருள்பெறும் அடியவர் - அருள்பெற்ற அடியார்கள், ஒன்ற ஒன்ற - பொருந்தப் பொருந்த, உடன் கலந்தருளியும் - அவருடன் சேர்ந்தருளியும், எய்த வந்திலாதார் - அடையவராதவர்கள், எரியில் பாயவும்-நெருப்பில் பாயவும், மாலது ஆகி மயக்கமாகியும்-ஆசைகொண்டு மயங்கியும், பூதலமதனில் புரண்டு வீழ்ந்து அலறியும் - பூமியின்மேல் விழுந்து புரண்டு அலறியும், கால் விசைத்து ஓடி -

கால் வேகங்கொண்டோடி, கடல்புக மண்டி - கடலில்விழ நெருங்கி, நாத நாத என்று அழுது அரற்றி - தலைவனே தலைவனே யென்றழுதரற்றி, பாதம் எய்தினர் பாதம் எய்தவும்-திருவடியை அடைந்தவர் திருவடியை அடையவும், பதஞ்சலிக்கு அருளிய - பதஞ்சலி முனிவர்க்கருள்செய்த, பரம நாடக என்று - மேலான நிருத்தத்தையுடையவனே யென்று, இதம் சலிப்பு எய்த நின்று - இருதயங் கலங்க நின்று, ஏங்கினர் ஏங்கவும் - இரங்கினோர் இரங்கவும், எழில் பெறும் - அழகைக்கொண்ட, இமையத்து இயல்பு உடைய - இமைய மலையின் இயற்கையையுடைய, அம்-அழகிய, பொன் - பொன்னினால் செய்யப்பட்டு, பொலிதரு - பிரகாசியாநின்ற, புலியூர் பொதுவினில் - திருப்புலியூர் அம்பலத்தில், நடம் நவில் - நடஞ்செய்கிற, கனிதரு செவ்வாய் - கொவ்வைக்கனி போலும் செவ்வாயினையுடைய, உமையொடு காளிக்கு - உமாதேவியோடு காளிக்கும், அருளிய - அருள்செய்த, திருமுகத்து அழகு உறு சிறு நகை இறைவன் - திருமுகத்தழகுமிக்க புன்னகையையுடைய தலைவன், ஒலிதரு கைலை உயர்கிழவோன் - ஒலிக்கின்ற கைலைமலைக்கு உயர்ந்தவுரியோன், ஈண்டிய அடியவரோடும் - நெருங்கிய அடியார்களுடன் பொலிதரு - விளங்குகின்ற, புலியூர் - திருப்புலியூரின்கண், இனி - இனிதாக, புக்கு அருளினன் - புகுந்தருளினன், எ - று,

ஐம்முகங்கள் - அகோரம், ஈசானம், சத்தியோசாதம், தற்புருஷம், வாமம் என்பன. மும்மலங்கள் - ஆணவம், மாயை, காமியம் என்பன.

## மூன்றாவது

# திருவண்டப்பகுதி.



சிவனது தூலசூக்குமத்தை வியந்தது.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

---

திருச்சிற்றம்பலம்.

---

இணைக்குறளாசிரியப்பா.

அண்டப்பகுதியினுண்டைப்பிறக்க
மளப்பருந்தன்மைவளப்பெருங்காட்சி
யொன்றனுக்கொன்றுநின்றெழில்பகரி
னூற்றொருகோடியின்மேற்படவிரிந்தன
வின்னுழைகதிரின்றுன்னணுப்புரையச்
சிறியவாகப்பெரியோன்றெரியின்
வேதியன்றொகையொடுமாலவன்மிகுதியுந்
தோற்றமுஞ்சிறப்புமீற்றொடுபுணரிய
மாப்பேரூழியுநீக்கமுநிலையுஞ்
சூக்கமொடுதூலத்துச்சூறைமாருதத்
தெறியதுவளியிற்
கொட்கப்பெயர்க்குங்குழகன்முழுவதும் [வை
படைப்போற்படைக்கும்பழையோன் படைத்த
காப்போற்காக்குங்கடவுள்காப்பவை
கரப்போன்கரப்பவைகருதாக்
கருத்துடைக்கடவுடிருத்தகு
மறுவகைச்சமயத்தறுவகையோர்க்கும்
வீடுபேறாய்நின்றவிண்ணோர்பகுதி
கீடம்புரையுங்கிழவோனாடொறு
மருக்கனிற்சோதியமைத்தோன்றிருத்தகு
மதியிற்றண்மைவைத்தோன்றிண்டிறற்
றீயின்வெம்மைசெய்தோன்பொய்தீர்

வானிற்கலப்புவைத்தோன்மேதகு
காலினூக்கங்கண்டோனிழறிகழ்
நீரிலின்சுவைநிகழ்ந்தோன்வெளிப்பட
மண்ணிற்றிண்மைவைத்தோனென்றென்
றெனைப்பலகோடியெனைப்பலபிறவு
மனைத்தனைத்தவ்வயினடைத்தோனஃதான்று
முன்னோன்காண்கமுழுதோன்காண்க
தன்னேரில்லோன்றானேகாண்க
வேனத்தொல்லெயிறணிந்தோன்காண்க
கானப்புலியுரியரையோன்காண்க
நீற்றோன்காண்கநினைதொறுநினைதொறு
மாற்றேன்காண்கவந்தோகெடுவே
னின்னிசைவீணையிலிசைந்தோன்காண்க
வன்னதொன்றவ்வயினறிந்தோன்காண்க
பரமன்காண்கபழையோன்காண்க
பிரமன்மால்காணாப்பெரியோன்காண்க
வற்புதன்காண்கவநேகன்காண்க
சொற்பதங்கடந்ததொல்லோன்காண்க
சித்தமுஞ்செல்லாச்சேட்சியன்காண்க
பத்திவலையிற்படுவோன்காண்க
வொருவனென்னுமொருவன்காண்க
விரிபொழின்முழுதாய்விரிந்தோன்காண்க
வணுத்தருந்தன்மையிலையோன்காண்க
வினைப்பரும்பெருமையிலீசன்காண்க
வரியதிலரியவரியோன்காண்க
மருவியெப்பொருளும்வளர்ப்போன்காண்க
நூலுணர்வுணரா நுண்ணியோன்காண்க
மேலொடுகீழாய்விரிந்தோன்காண்க
வந்தமுமாதியுமகன்றோன்காண்க
பந்தமும்வீடும்படைப்போன்காண்க
நிற்பதுஞ்செல்வதுமானோன்காண்க
கற்பமுமிறுதியுங்கண்டோன்காண்க
யாவரும்பெறவுறுமீசன்காண்க

தேவருமறியாச்சிவனேகாண்க
பெண்ணாணலியெனும்பெற்றியன்காண்க
கண்ணாலியானுங்கண்டேன்காண்க
வருணனிசுரக்குமமுதேகாண்க
கருணையின்பெருமைகண்டேன்காண்க
புவனியிற்சேவடிதீண்டினன்காண்க
சிவனெனயானுந்தேறினன்காண்க
வவனெனையாட்கொண்டருளினன்காண்க
குவளைக்கண்ணிகூறன்காண்க
வவளுந்தானுமுடனேகாண்க
பரமானந்தப்பழங்கடலதுவே
கருமாமுகிலிற்றோன்றித்
திருவார்பெருந்துறைவரையிலேறித்
திருத்தகுமின்னொளிதிசைதிசைவிரிய
வைம்புலப்பந்தனைவாளரவிரிய
வெந்துயர்க்கோடைமாத்தலைகரப்ப
நீடெழிற்றோன்றிவாளொளிமிளிர
வெந்தம்பிறவியிற்கோபமிகுத்து
முரசெறிந்துமாப்பெருங்கருணையின்முழங்கிப்
பூப்புரையஞ்சலிகாந்தள்காட்ட
வெஞ்சாவின்னருணுண்டுளிகொள்ளச் [றக்
செஞ்சுடர்வெள்ளந்திசைதிசைதெவிட்டவரையு
கேதக்குட்டங்கையறவோங்கி
யிருமுச்சமயத்தொருபேய்த்தேரினை
நீர்நசைதரவருநெடுங்கண்மான்கணந்
தவப்பெருவாயிடைப்பருகித்தளர்வொடு
மவப்பெருந்தாபநீங்காதசைந்தன
வாயிடைவானப்பேரியாற்றகவயிற்
பாய்ந்தெழுந்தின்பப்பெருஞ்சுழிகொழித்துச்
சுழித்தெம்பந்தமாக்கரைபொருதலைத்திடித்
தூழூழோங்கியநங்க
ளிருவினைமாமரம்வேர்பறித்தெழுந்
துருவவருணீரோட்டாவருவரைச்

சந்தின்வான்சிறைகட்டிமட்டவிழ்
வெறிமலர்க்குளவாய்கோலிநிறையகின்
மாப்புகைக்கரைசேர்வண்டுடைக்குளத்தின்
மீக்கொளமேன்மேன்மகிழ்தலினோக்கி
யருச்சனைவயலுளன்புவித்திட்டுத்
தொண்டவுழவராரத்தந்த
வண்டத்தரும்பெறன்மேகன்வாழ்க
கரும்பணக்கச்சைக்கடவுள்வாழ்க
வருந்தவர்க்கருளுமாதிவாழ்க
வச்சந்தவிர்த்தசேவகன்வாழ்க
நிச்சலுமீர்த்தாட்கொள்வோன்வாழ்க
சூழிருந்துன்பந்துடைப்போன்வாழ்க
வெய்தினர்க்காரமுதளிப்போன்வாழ்க
கூரிருட்கூத்தொடுகுனிப்போன்வாழ்க
பேரமைத்தோளிகாதலன்வாழ்க
வேதிலர்க்கேதிலெம்மிறைவன்வாழ்க
காதலர்க்கெய்ப்பினில்வைப்புவாழ்க
நச்சரவாட்டியநம்பன்போற்றி
பிச்செமையேற்றியபெரியோன்போற்றி
நீற்றொடு தோற்றவல்லோன்போற்றிநாற்றிசை
நடப்பனநடாஅய்க்கிடப்பனகிடாஅய்
நிற்பனநிறீஇச்
சொற்பதங்கடந்ததொல்லோ
னுள்ளத்துணர்ச்சியிற்கொள்ளவும்படாஅன்
கண்முதற்புலனாற்காட்சியுமில்லோன்
விண்முதற்பூதம்வெளிப்படவகுத்தோன்
பூவினாற்றம்போன்றுயர்ந்தெங்கு
மொழிவறநிறைந்துமேவியபெருமை
யின்றெனக்கெளிவந்தருளி
யழிதருமாக்கையொழியச்செய்த வொண்பொரு
ளின்றெனக்கெளிவந்திருந்தனன்போற்றி
யளிதருமாக்கைசெய்தோன்போற்றி
யூற்றிருந்துள்ளங்களிப்போன்போற்றி

யாற்றாவின்பமலர்ந்தலைசெய்யப்
போற்றாவாக்கையைப்பொறுத்தல்புகலேன்
மரகதக்குவாஅன்மாமணிப்பிறக்க
மின்னொளிகொண்டபொன்னொளிதிகழத்
திசைமுகன்சென்று தேடினர்க்கொளித்து
முறையுளியொற்றிமுயன்றவர்க்கொளித்து
மொற்றுமைகொண்டுநோக்குமுள்ளத்
துற்றவர்வருந்தவுறைப்பவர்க்கொளித்து
மறைத்திறநோக்கிவருந்தினர்க்கொளித்து
மித்தந்திரத்திற்காண்டுமென்றிருந்தோர்க்
கத்தந்திரத்தினவ்வயினொளித்து
முனிவறநோக்கிநனிவரக்கௌவி
யாணெனத்தோன்றியலியெனப்பெயர்ந்து
வாணுதற்பெண்ணெனவொளித்துஞ்சேண்வயி
னைம்புலன்செலவிடுத்தருவரைதொறும்போய்த்
துற்றவைதுறந்தவெற்றுயிராக்கை
யருந்தவர்காட்சியுட்டிருந்தவொளித்து
மொன்றுண்டில்லையென்றறிவொளித்தும்
பண்டேபயிறொறுமின்றேபயிறொறு
மொளிக்குஞ்சோரனைக்கண்டன
மார்மினார்மினாண்மலர்ப்பிணையலிற்
றாடளையிடுமின்
சுற்றுமின்சூழ்மின்றொடர்மின்விடேன்முன்
பற்றுமினென்றவர்பற்றுமுற்றொளித்துந்
தன்னேரில்லோன்றானேயான தன்மை
யென்னேரனையோர்கேட்கவந்தியம்பி
யறைகூவியாட்கொண்டருளி
மறையோர்கோலங்காட்டியருளலு
முளையாவன்பென்புருகவோலமிட்
டலைகடற்றிரையினார்த்தார்த்தோங்கித்
தலைதடுமாறாவீழ்ந்துபுரண்டலறிப்
பித்தரின்மயங்கிமத்தரின்மதித்து
நாட்டவர்மருளவுங்கேட்டவர்வியப்பவுங்

கடக்களிறேற்றாத்தடப்பெருமதத்தி
னாற்றேனாகவவயவஞ்சுவைதரு
கோற்றேன்கொண்டுசெய்தன
னேற்றார்மூதூரெழினகையெரியின்
வீழ்வித்தாங்கன்
றருட்பெருந்தீயினடியோமடிக்குடி
லொருத்தரும்வாழாமையொடுக்கினன்
றடக்கையினெல்லிக்கனியெனக்காயினன்
சொல்லுவதறியேன்வாழிமுறையோ
தரியேனாயேன்றானெனைச்செய்தது
தெரியேனாவாசெத்தேனடியேற்
கருளியதறியேன்பருகியுமாரேன்
விழுங்கியுமொல்லகில்லேன்
செழுந்தண்பாற்கடற்றிரைபுரைவித்
துவாக்கடனள்ளுநீருள்ளகந்ததும்ப
வாக்கிறந்தமுதமயிர்க்காறேறாங்
தேக்கிடச்செய்தனன்கொடியேனூன்றழை
குரம்பைதோறுநாயுடலகத்தே
குரம்பைகொண்டின்றேன்பாய்த்திநிரம்பிய
வற்புதமானவமுததாரைக
ளெற்புத்துளைதொறுமேற்றினனுருகுவ
துள்ளங்கொண்டோருருச்செய்தாங்கெனக்
கள்ளூறாக்கையமைத்தனனொள்ளிய
கன்னற்கனிதேர்களிறெனக்கடைமுறை
யென்னையுமிருப்பதாக்கினனென்னிற்
கருணைவான்றேன்கலக்க
வருளொடுபராவமுதாக்கினன்
பிரமன்மாலறியாப்பெற்றியோனே.

ப. ரை. அண்டப் பகுதியின் - அண்டப் பகுப்புக்களோடு கூடிய, உண்டைப்பிறக்கம் - பூகோள ககோளங்களின் விளக்கம், அளப்புஅரு தன்மை - அளத்தற்கரிதாகிய தன்மையும், வளப்பெருங்காட்சி - வளமாகிய பெரியகாக்ஷியு முளதாகி, ஒன்றனுக்கு ஒன்று - ஒன்றற்கொன்று, நின்ற - தொடர்ந்துநின்ற, எழில்பக

ரின் - அழகினைச் சொல்லுமிடத்து, நூற்றொருகோடியின் மேற்பட விரிந்தன - நூற்றொரு கோடியினு மிக்கு விரிந்திருந்தன, (ஆயினுமவை) இல்நுழைகதிரின் - வீட்டின்கண் நுழைகின்ற சூரியகிரணத்திற் காணப்படுகிற, துன் - நெருங்கிய, அணு புரைய - அணுவை நிகர்க்க, சிறியஆக - சிறியனவாக, பெரியோன் - பெரியவனு யிருப்பவன், தெரியின் - ஆராயின், வேதியன் தொகையொடு - பிரமனது தொகுதியோடு, மாலவன் மிகுதியும் - திருமாலின் மிகுதியும், தோற்றமும் - உற்பத்தியும், சிறப்பும் - எற்றமும், ஈற்றொடுபுணரிய - இறுதியை அடைய(அழிய), மாப்பேரூழியும் - மிகப்பெரிய யுகாந்தமும், நீக்கமும் - நீங்குகையும், நிலையும் - நிலைமையும், சூக்கமொடு தூலத்து - சூக்ஷ்மமோடு தூலசரீரங்களும், சூறைமாருதத்துஎறியதுவளியின் - சூறைக்காற்றின்வீச்சின் வழிப்பட்ட துரும்புகள்போல, கொட்க - சுழல, பெயர்க்கும் - நிலைபெயர்க்கின்ற, குழகன் - அழகன், முழுவதும் படைப்போன் படைக்கும் பழையோன் - எல்லாவற்றையும் படைப்பவனுகிய பிரமனையும் படைக்கின்ற தொல்லோன், படைத்தவை காப்போன் காக்கும் கடவுள் - படைக்கப்பட்டவைகளைக் காப்பவனுகிய திருமாலையும் காக்கின்ற கடவுள், காப்பவை - காப்பவைகளை, கரப்போன் - மறைப்பவன் (சங்கரிப்பவன்), கரப்பவை - மறைப்பவைகளை (சங்கரிப்பவைகளை), கருதா - மறையும்படி திருவுளம் பற்றி, கருத்துடைகடவுள் - அவைகளின் பிறவியை ஒழித்தருளுகின்ற கடவுள், திருதகும் - அழகுபொருந்திய, அறுவகைசமயத்து - அறுவகைப்பட்ட சமயத்தையுடைய, அறுவகையோர்க்கும் - அறுவகைச் சமயிகளுக்கும், வீடுபேறுஆய்நின்ற கிழவோன் - வீடுபேருகிநின்ற உரிமை யுடையோன் (இறைவன்), விண்ணோர்பகுதி - தேவர்குழு, கீடம்புரையும் - (தன் பெருமைக்கு) புழுவை நிகர்க்கின்ற, கிழவோன் - உரிமையுடையோன், (இறைவன்) நாள்தோறும் - தினந்தோறும், அருக்கனில் சோதிஅமைத்தோன் - சூரியனிடத்து ஒளியை யமைத்தவன், திருத்தகு - அழகுபொருந்திய, மதியில் சந்திரனிடத்து, தண்மை வைத்தோன் - குளிர்ச்சியை யமைத்தவன், திண்திறல் - வலிய வெற்றியையுடைய, தீயின் - நெருப்பின்கண், வெம்மை செய்தோன் - வெப்பத்தை யமைத்தவன், பொய் தீர் வானில் - (கண்ணுக்குப் புலப்படா விடினும், உண்மை விசாரத்தில்) மெய்யாயிருக்கிற ஆகாயத்தின்கண், கலப்பு வைத்தோன் - வியாபகத்தை யமைத்தவன், மேதகு - மேன்மை பொருந்திய, காலின் - காற்றின்கண், ஊக்கம் கண்டோன் - (இடையருத சஞ்சாரமாகிய) முயற்சியை யமைத்தவன், நிழல்

திகழ் - குளிர்ச்சியோடு விளங்குகின்ற, நீரில் - நீரின்கண், இன் சுவை நிகழ்ந்தோன் - இனிய சுவையை அமைத்தவன், வெளிப் பட - வெளிப்படையாக, மண்ணில் - பூமியினிடத்து, திண்மை வைத்தோன் - வலிமையை அமைத்தவன், என்றஎன்று - என்று பலவகையால் சொல்லப்பட்டன, எனைப்பலகோடி - எத்தனைபல கோடிக ளுள்ளனவோ, எனைப் பல பிறவியும் - எத்தனை பலவா கிய பிறவிவுள்ளனவோ, அனைத்து அனைத்து - அத்தனை யத்தனைப் பொருள்களையும், அவ்வயின் அடைத்தோன் - (அவைகட்குரிய) அவ்வவ்விடங்களில் அமைத்தவன், அஃதான்று - அதுவன்றி, முன்னோன் - முற்பட்டவன், முழுதோன் முழுதுமானவன், தன் னேர் இல்லோன் - தனக்கு நிகரிலாதவன், ஏனம் தொல் எயிறு அணிந்தோன் - வராகத்தின் முதிர்ந்த தந்தங்களை அணிந்தவன், கானப்புலி உரிஅரையோன்-காட்டில் வாழ்கின்ற புலியின்தோலை யணிந்த அரையை யுடையோன், நீற்றோன் - திருநீற்றை யுடைய வன், (அவனை) நினைதொறும் நினைதொறும்-யான் நினைக்குந்தோ றும் நினைக்குந்தோறும், ஆற்றேன் - (அவனது பிரிவைச்) சகி யேன், அந்தோகெடுவேன் - ஐயோகெடுவேன். இன் இசைவீணை யில் இசைந்தோன் - இனிய இசையாய் வீணையி லிசைந்து நிற்ப வன், அன்னது ஒன்று - அப்படிப்பட்டதாகிய ஒன்றை, அவ்வயின் அறிந்தோன் - அவ்விடத் தறிந்தவன், பரமன் - மேலானவன், பழையோன் - பழமையானவன், பிரமன் மால் காணாப் பெரி யோன் - பிரமனும் விட்டுணுக்களுங் காணாத பெரியவன், அற்பு தன் - ஆச்சரியகரன், அநேகன் - அநேகவுருவங்களாயிருப்பவன், சொற்பதம் கடந்த தொல்லோன் - சொல்லளவைக்கடந்த பழை யோன், சித்தமும் செல்லா சேட்சியன் - மனமுஞ் சென்றறிய வொண்ணாத தூரத்தை யுடையவன், பத்திவலையில் படுவோன் - பத்திமையாகிய வலையி லகப்படுவோன், ஒருவன் என்றும் ஒரு வன் - ஒப்பற்றவனென்று சொல்லுதற்குரிய வொருத்தன், விரி பொழில் முழுதாய் விரிந்தோன்-விரிந்த வுலகமுழுதுமாகி வியா பித்தவன், அணுத்தரும் தன்மையில் ஐயோன் - அணுப்போலுந் தன் மையில் நுண்ணியன், இணைப்பு அருபெருமையில் ஈசன் - ஒப்பிடு தல் அருமையாகிய பெருமையினால் தலைவன், அரியதில்அரியஅரி யோன் - அரியதில் அரிய அருமையானவன், மருவி எப்பொரு ளும் வளர்ப்போன் - (அவ்வவற்றில் பொருந்தி எல்லாப்பொருள் களையும் வளர்ப்பவன், நூலுணர்வு உணரா நுண்ணியோன் - நூல றிவினு லறியப்படாத நுண்மையை யுடையோன், மேலொடு கீழ் ஆய் விரிந்தோன் - மேலுங் கீழுமாகி வியாபித்தவன், அந்தமும்

ஆதியும் அகன்றோன் - முடிவும் முதலும் நீங்கினவன், பந்தமும் வீடும் படைப்போன் - பிறவிப் பிணியையும் மோக்ஷத்தையும் உண்டாக்குவோன், நிற்பதும் செல்வதும் ஆனோன் - அசரமும் சரமும் ஆனவன், கற்பமும் இறுதியும் கண்டோன் - கற்பங்களையும் அவற்றின் முடிவுகளையும் கண்டவன், யாவரும் பெற உறும் ஈசன் - யாவரும் அடையப் பொருந்துகின்ற ஈசன், தேவரும் அறியா சிவன் - தேவருமுணராத சிவன், பெண் ஆண் அலி என்னும் பெற்றியன் - பெண் ஆண் அலி என்னும் தன்மையன், (இத்தன்மையனை) கண்ணால் யானும் கண்டேன் - கண்களால் நானும் பார்த்தேன், அருள் நனி சுரக்கும் அமுது - அருளை மிகுதியாகச் சுரக்கின்ற அமிர்தம், கருணையின் பெருமைகண்டோன் - பெருங் கருணையுடையவன், புவனியில் சேவடி தீண்டினன் - மண்ணின் மீது திருவடி தீண்டப் பெற்றவன், (இவனை) சிவன் என யானும் தேறினன் - சிவனென்று நானும் தெளிந்தேன், அவன் என்னை ஆட்கொண்டருளினன் - அவன் என்னை யாண்டுகொண்டருளினான், குவளைக்கண்ணி கூறன் - குவளை மலர்போலுங் கண்களையுடையளாகிய வுமாதேவி பங்கன், அவளும் தானும் உடனே - அவ்வுமாதேவியும் தானுங் கூடியிருக்க, பரமானந்தப் பழங்கடல் - (அந்தக் கூட்டரவு) பேரானந்தமாகிய பெருங்கடலாயிற்று, அதுவே - அந்தப்பொருளையே, கருமாமுகிலின்தோன்றி-கரிய பெரிய மேகம்போலத் தோன்றி, திரு ஆர் பெருந்துறை வரையில் ஏறி - அழகுநிறைந்த திருப்பெருந்துறை என்கிற மலைமேலேறி, திருத்தகு - அழகுபொருந்திய, மின்ஒளி - மின்னலொளியானது, திசைதிசைவிரிய - திக்குகள்தோறும் பரவ, ஐம்புலப்பந்தனை - ஐம்புல ஆசையாகிய, வாள் அரவு இரிய - ஒளி பொருந்திய பாம்பு ஓடவும், வெம்துயர்கோடை - வெவ்விய பிறவித்துன்பமென்னுங் கோடையானது, மா தலை கரப்ப - பெரியதலை மறையவும், நீடு எழில்தோன்றி - மிக்கஅழகுண்டாகி, வாள்ஒளிமிளிர - மிக்க ஒளியோடுகூடிப் பிரகாசிக்கவும், எம்தம்பிறவியின் - எம்பிறவிகளாகிய, கோபம் மிகுந்து - இந்திரகோபங்கள் மிக, முரசு எறிந்து - முரசம்போல அதிர்ந்து, மாப்பெருங்கருணையின் முழங்கி - அறப்பெரியகருணையோடு முழங்கி, பூப்புரைஅஞ்சலி - தாமரைப்பூவின் குவிவைப்போன்ற குவிவை, காந்தள்காட்ட - காந்தளின் பேரரும்புகள் காட்டவும், எஞ்சா - குறையாத, இன்அருள் - இனியஅருளாகிய, நுண்துளிகொள்ள - நுண்ணிய துளிகளுண்டாகவும், செஞ்சுடர்வெள்ளம் - செவ்விய ஒளிபெருக்கு, திசைதிசை தெவிட்ட - திசைகள்தோறும் தேக்கவும், வரைஉற - மலைபோற் பொருந்த, கேதக்குட்டம் -

துன்பமாகிய பள்ளங்கள், கையற ஓங்கி - ஒழுங்கடையும்படி விரு த்தி அடைந்து, இருமுச் சமயத்து - ஆறு சமயங்களாகிய, ஒரு பேய்த்தேரினை - ஒப்பற்ற கானனீரை, நீர்நசை தரவரும் - நீர் வேட்கை யுண்டாகிவருகிற, நெடுங்கண் மான்கணம் - நெடிய கண்ணையுடைய மான்கூட்டங்கள், தவம் - தவமாகிய, பெருவா யிடை பருகி - பெரிய வாயினாற் குடித்து, தளர்வொடும் - தளர்ச் சியோடு கூடி, அவப் பெருந்தாபம் - வீணாகிய பெருந்தாபம், நீங் காது - விலகப்பெறாது, அசைந்தன-வருந்தினவாகவும், ஆயிடை வானப்பேர் யாற்று அகவயின் - அவ்விடத்துப் பொருந்திய அந்த மிகப்பெரிய ஆற்றின்கண், பயந்து எழுந்து - மூழ்கிஎழுந்து, இன் பப் பெருஞ்சுழி கொழித்து - ஆநந்தமென்னும் பெருஞ் சுழிகளை யெறிந்து, சுழித்து - சுழன்று, எம்பந்தம் - எமது பிறவியாகிய, மாக்கரை பொருது-பெருங்கரையை மோதி, அலைத்து இடித்து - அசைத்து இடித்து, ஊழ் ஊழ் ஓங்கிய- முறைமுறையாய் ஓங்கா நின்ற, நங்கள் - நம்முடைய, இருவினை - இருவினை என்கிற, மாமரம் - பெருமரத்தினது, வேர்பறித்து எழுந்து - வேரைப் பிடுங்கி யெழுந்து, உருவ - உருவும்படி, அருள்நீர் ஓட்டா - திரு வருளாகிய நீர் ஓடச்செய்து, அருவரைச் சந்தின் -அருமையாகிய மலையிலுள்ள சந்தனமரங்களால், வான்சிறை கட்டி-பெருங்கரை கோலி, மட்டு அவிழ் - தேனோடு மலர்கின்ற, வெறிமலர்க்குள வாய் கோலி - மணமலர்க் குளப்பரப்புக்களை வளைத்து, நிறை அகில் நிறைந்த அகிற்கட்டையின், மாப்புகைக் கரைசேர்-பெரும் புகையோடுகூடிய கரையை யணைந்த, வண்டு உடைக்குளத்தில் - வண்டுகளையுடைய குளத்தில், மீக்கொள - அதிகரிக்க, மேல் மேல் மகிழ்தலின் நோக்கி - மேன்மேலுங் களித்தல்போலப் பார்த்து, அருச்சனை வயலுள் - அர்ச்சனை என்கிற வயலில், அன்பு வித்து இட்டு - அன்பென்கிற விதையை விதைத்து, தொண்ட வுழவர்- தொண்டர்களாகிய உழவர்கள், ஆரத்தந்த - உண்ணக் கொடுத்த, அண்டத்து - சிதாகாயத்தின் கண் ணுள்ள, அரும்பெறல் - பெறு தற்கரிய, மேகன் வாழ்க - மேகம்போல்வான் வாழ்க, கரும்பணக் கச்சை கடவுள் வாழ்க - கருமையாகிய படத்தைவுடைய பாம் பாகிய கச்சையை அணிந்த கடவுள் வாழ்க, அருந்தவர்க்கு அரு ளும் ஆதி வாழ்க-அருமையாகிய தவத்தையுடையோர்க்கு அருள் செய்கின்ற முதலவன் வாழ்க, அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க- பிறவி யச்சத்தை நீக்கியருளிய வீரன் வாழ்க, நிச்சலும் ஈர்த்து ஆட்கொள்வோன் வாழ்க - நாடோறும் என்னை இழுத்து ஆட் கொண் டருள்வோன் வாழ்க, சூழ் இரு துன்பம் துடைப்போன்

வாழ்க - வளைந்துகொண்ட பெரிய பிறவித் துன்பத்தை நீக்கி யருள்வோன் வாழ்க, எய்தினர்க்கு ஆர் அமுது அளிப்போன் வாழ்க - தன்னை அடைந்தவர்களுக்கு அரிய கருணாமிர்தத்தை யருள்வோன் வாழ்க, கூர் இருள் கூத்தொடு குனிப்போன் வாழ்க - மிகுந்த இருளின்கண் கூத்தாடுவோன் வாழ்க, பேர் அமை தோளி காதலன் வாழ்க - பெரிதாகிய மூங்கில் போலுந் தோள்களையுடைய உமாதேவியின் தலைவன் வாழ்க, ஏதிலர்க்கு ஏதில் எம் இறைவன் வாழ்க - அயலார்க்கு அயலாந் தன்மையை யுடைய எம் தலைவன் வாழ்க, காதலர்க்கு எய்ப்பினில் வைப்பு வாழ்க - அன்புடையார்க்கு மெலிவுகாலத்தில் நிதிக்குவையா யிருப்பவன் வாழ்க, நச்சு அரவு ஆட்டிய நம்பன் போற்றி - விஷத் தையுடைய பாம்பை அசைக்கின்ற குணமூர்த்தியுள்ளவனே போற்றி, எம்மைப் பிச்சு ஏற்றிய பெரியோன் போற்றி - எமக் குப் பித்தேற்றிய பெருமையுடையோனே போற்றி, நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி - திருவெண்ணீற்றுடன் காணப் பட வல்லவனே போற்றி, நாற்றிசை - நான்கு திக்கினும், நடப் பன நடா அய் - நடப்பவற்றை நடத்தியும், கிடப்பன கிடா அய்- கிடப்பவற்றைக் கிடத்தியும், நிற்பன நிறீஇ - நிற்பவற்றை நிறுத் தியும், சொற்பதம் கடந்த தொல்லோன் - சொல்லளவைக்கடந்து நின்ற பழையோன், உள்ளத்து உணர்ச்சியின் கொள்ளவும் படா அன் - மன வுணர்ச்சியால் அறிந்து கொள்ளவும் ஒண்ணாதவன், கண் முதல் புலனால் காட்சியும் இல்லோன் - கண் முதலாகிய புலன்களால் அறியப்படுதலும் இல்லாதவன், விண் முதல் பூதம் வெளிப்பட வகுத்தோன் - ஆகாய முதலாகிய பூதங்களை வெளிப் படையாய் தோன்றப் படைத்தவன், பூவின் நாற்றம் போன்று உயர்ந்து - மலரின்கண் மணம்போன்று சிறந்து, எங்கும் ஒழிவு அற நிறைந்து - எவ்விடத்தும் நீக்கமற நிறைந்து, மேவிய பெருமை - பொருந்திய பெருமையை, இன்று எனக்கு எளிவந்து அருளி - இன்று எனக்கு எளிதில் வந்து அருள்செய்து, அழி தரும் ஆக்கை - அழியுமியல்புள்ள சரீர சம்பந்தம், ஒழியச்செய்த - நீங்கப்பண்ணின, ஒண் பொருள் - சிறந்த பொருளானவன், இன்று எனக்கு எளிவந்து இருந்தனன் - இன்று என்பொருட்டு எளிதாக வந்திருந்தான், போற்றி - (அவன்பொருட்டு) வணக்கம், அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி - தான் அருள்செய்தற் குரிய உடம்பை எனக்கருள் செய்தோன் பொருட்டு வணக்கம், ஊற்றிருந்து உள்ளம் களிப்போன் போற்றி - (அன்பர்களுடைய) மனதின்கண்ணே சுரந்திருந்து களிப்பவன் பொருட்டு வணக்

கம், ஆற்ரு இன்பம் அலர்ந்து அலைசெய்ய - தாங்கவொண்ணுத ஆநந்தக்கடல் பரவி அலையெறியா நிற்க, போற்ரு - அதைப் பேணுத, ஆக்கையைப் பொறுத்தல் - சரீரத்தைச் சுமத்தலைப் பற்றி, புகலேன் - யான் சொல்லேன், மரகதக்குவால் - மரகதக் கூட்டமும், மாமணிப் பிறக்கம் - மாணிக்கத் தொகுதியும், மின் - மின்னலுமாகிய இவற்றினுடைய, ஒளிகொண்ட - ஒளியைக் கொண்ட, பொன் ஒளி திகழ - அழகிய ஒளியானது விளங்க, திசைமுகன் சென்று தேடினர்க்கு ஒளித்தும் - திக்குகளில் போய்த் தேடினுர்க்கு மறைந்தும், முறையுளிபோற்றி முயன்ற வர்க்கு ஒளித்தும் - முறையினுல் தொழுது முயன்றவர்களுக்கு மறைந்தும், ஒற்றுமைகொண்டு - ஒருமைப்பாட்டைக்கொண்டு, நோக்கும் உள்ளத்து உற்றவர் - பார்க்கின்ற மனத்தையுடைய ராய் அடைந்தவர், வருந்த - வருந்தும்படி, உரைப்பவர்க்கு ஒளி த்தும் - (கடுஞ்சொல்; சொல்லுவார்க்கு மறைந்தும், மறைத்தி றம் நோக்கிவருந்தினர்க்கு ஒளித்தும் - வேதங்களின் கூறுபாட் டை நோக்கி வருந்தினவர்களுக்கு மறைந்தும், இத்தந்திரத்தின் காண்டும் என்று இருந்தோர்க்கு - இந்த உபாயத்தினுல் காண் போமென்றிருந்தார்க்கு, அத்தந்திரத்தின் - அந்த வுபாயத்தினுல், அவ்வயின் ஒளித்து - அவ்விடத்தில் மறைந்தும், முனிவு அற நோக்கி - வெறுப்பறப்பார்த்து, நனிவரக்கௌவி - மிகுதியும் வர ப்பற்றி, ஆண் எனத் தோன்றி - ஆணென்னும்படி தோன்றி, அலி எனப்பெயர்ந்து - அலிஎன்னும்படி சஞ்சரித்து, வாணுதல் பெண் என ஒளித்தும் - ஒளியுள்ள நெற்றியையுடைய பெண் என் னும்படி மறைந்தும், சேண்வயின் நெடுந்தூரம், ஐம்புலன் செல விடுத்து - ஐம்புலன்களைப் போம்படி அனுப்பி, அருவரை தோறும் போய் - அரிய மலைகடோறும் சென்று, துற்றவை துறந்த - உண்ணப்படுமவற்றை நீக்கின, வெறு உயிர் ஆக்கை - வெறு மையாகிய உயிரோடுகூடிய சரீரத்தையுடைய, அருந்தவர் காட் சியுள் - அரியதவத்தினருடைய அறிவினுள், திருந்த ஒளித்தும் - திருத்தமாக மறைந்தும், ஒன்று உண்டு இல்லை என்ற அறிவு ஒளித்தும் - ஒரு பொருள் உண்டு இல்லை என்ற அறிவுக்கு மறை ந்தும், பண்டே பயில் தொறும் - பூர்வத்தில் பழகுந் தோறும், இன்றே பயில்தொறும் - இன்று பழகுந்தோறும், ஒளிக்கும் - மறைகின்ற, சோரனை - கள்வனை, கண்டனம் - பார்த்தோம், ஆர் மின் ஆர்மின் - ஆரவாரியுங்கள் ஆரவாரியுங்கள், நாள்மலர் பிணை யலின் - புதியமலர்களால் சமைத்தமாலைகளால், தாள்தளையிடு மின் - திருவடியைத் தளை யிடுங்கள், சுற்றுமின் - சுற்றுங்கள்,

சூழ்மின் - சூழுங்கள், தொடர்மின் - தொடருங்கள், விடேல் மின் - விடாதேயுங்கள், பற்றுமின் - பற்றுங்கள், என்றவர் - என்றவர்களுடைய, பற்று - பற்றுக்கு, முற்று ஒளித்தும் - முழுதும் ஒளித்தும், தன் நேர் இல்லோன் - தனக்குவமை யில்லாதவன், தானே ஆனதன்மை - (உவமை) தானேயாயிருந்த தன்மையை, என்னோர் அனையோர் கேட்க - என்னை நிகர்த்தவர்கள் கேட்கும்படி, வந்து இயம்பி - வந்து சொல்லி, அறைகூவி-வலிந்தழைத்து, ஆட்கொண்டு அருளி - அடிமைகொண்டருளி, மறையோர் கோலம் காட்டியருளலும் - வேதியர் கோலத்தைக் காட்டியருளின மாத்திரத்தில், உளையா - வருந்தி, அன்பு என்பு உருக - அன்பினால் என்பு முருகும்படி, ஓலம் இட்டு - முறையிட்டு, அலை கடல் திரையின் - அசைகின்ற கடலின்கண்ணுண்டாகிய அலைகளைப்போல, ஆர்த்து ஆர்த்து - இரைந்திரைந்து, ஓங்கி - மேலெழுந்து, தலைதடுமாறா வீழ்ந்து - தலைதடுமாறி விழுந்து, புரண்டு அலறி - புரண்டு அலறி, பித்தரின் மயங்கி - பித்தரைப்போல மயங்கி, மத்தரின் மறித்து - உன்மத்தரைப் போலத் தடைபட்டு, நாட்டவர் மருளவும் - நாட்டார் மருட்சியை யடையவும், கேட்டவர் வியப்பவும் - கேட்டார் அதிசயிக்கவும், கடக்களிறு ஏற்றாத் தடப்பெரு மதத்தின் - மதயானையும் ஏற்கப்பெறாத மிகப் பெரிய மதத்தினால், ஆற்றேனாக - யான் ஆற்றாதவனாகும்படி, சுவைதரு கோற்றேன் கொண்டு - சுவையைத்தருகின்ற கொம்புத் தேனைக்கொண்டு, அவயவம் செய்தனன் - அவயவம் செய்யப்பட்டவன், ஏற்றார்-எதிர்த்தவர்களுடைய, மூதூர் - பழையவூரை, எழில் நகை எரியின் வீழ்வித்து - அழகிய சிரிப்பாகிய நெருப்பில் விழுத்தி, ஆங்கு அன்று - அக்காலத்தில், அருள்பெருந் தீயின் - தன் திருவருளாகிய பெரு நெருப்பில், அடியோம் - அடியோங்களாகிய, அடிக்குடில் - தன்னடிமைக் குடிகளில், ஒருத்தரும் வாழாமை ஒடுக்கினன் - ஒருத்தரேனும் தவறாமல் அடங்கும்படி பண்ணினான், தடக்கையில் - பெரிய கையின்கணுள்ள, நெல்லிக்கனி-நெல்லிக்கனிபோல, எனக்கு ஆயினன் - எனக்கு எளிதிற் கிடைத்தான், சொல்லுவது அறியேன் - (இதைப்பற்றி) சொல்லவேண்டியதை யறிந்திலேன், முறையோ - முறையோ, நாயேன் தரியேன் - நாயினேன் ஆற்றேன், தான் என்னைச் செய்தது - தானென்னைச் செய்ததை, தெரியேன் - தெரிந்திலேன், ஆவா செத்தேன் - ஐயோ இறந்தொழிந்தேன், அடியேற்கு அருளியது அறியேன் - அடியேனுக்கு அருளினதையும் அறிந்திலேன், பருகியும் ஆரேன் - உண்டும் திருப்தி யடையேன், விழுங்கியும் ஒல்லகில்

லேன் - விழுங்கியும் அமைகிலேன், செழுந்தண் பாற்கடல் திரை புரைவித்து - செழுமையாகிய குளிர்ச்சியுள்ள பாற்கடலின் அலைகளை நிகர்வித்து, உவாக்கடல் நள்ளுநீர் - நிறைகடலின் நடுவிலுள்ள நீர்போல, உள் அகம் ததும்ப - உள்ளிடம் தளும்ப, வாக்கு இறந்து - வாக்கு அற்று, மயிர்க் கால்தோறும் - மயிர்க்கால்கள்தோறும், அமுதம் தேக்கிடச் செய்தனன் - அமிர்தமானது தேங்கும்படி செய்தனன், கொடியேன் - கொடியேனது, ஊன் தழை - தசையாற் செழித்த, குரம்பை தோறும் - உடல்களெல்லாவற்றுள்ளும், நாயுடல் அகத்தே - நாயினேனது இவ்வுடம்பினிடத்தே, குரம்பைகொண்டு - சிறுகுடிலாகக்கொண்டு, இன்தேன் பாய்த்தி - இனிய தேனைப்பாய்ச்சி, நிரம்பிய - நிறைந்த, அற்புதமான - ஆச்சரியகரமான, அமுத தாரைகள் - அமிர்ததாரைகளை, எற்புத்தொளைதோறும் - என்பின் துவாரங்கள் தோறும், ஏற்றினன் - ஏறப்பண்ணினன், உருகுவது உள்ளம் கொண்டு - உருகுவதாகிய மனத்தைக்கொண்டு, ஓர்உருச் செய்தாங்கு - ஒரு வடிவையமைத்தாற்போல, எனக்கு - எனக்கு, அள்ளூறு ஆக்கை அமைத்தனன் - மிகுதியுமுருகுகின்ற வுடம்பை யமைத்தான், ஒள்ளிய - ஒட்பமாகிய, கன்னல் கனிதேர் களிறு என - கரும்பையும் விளாங் கனியையும் தேடுகின்ற யானைபோல, கடைமுறை - கடைமுறையில், என்னையும் இருப்பது ஆக்கினன் - என்னையும் இறுமாந்து இருக்கும் பொருளாகச் செய்தனன், என்னில் - என்கண், கருணைவான் தேன் கலக்க - கருணையாகிய மேலான தேன் விரவும்படி, அருளொடுபராவு - அருளோடுபரவிய, அமுது ஆக்கினன் - அமிர்தமாக்கினன், பிரமான்மால் அறியா பெற்றியோன் - பிரமனும் திருமாலும் அறியாத தன்மையை யுடையோன்.

---

# போற்றித்திருவகவல்.

சகத்தினுற்பத்தி.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

---

திருச்சிற்றம்பலம்.

---

நிலைமண்டிலவாசிரியப்பா.

நான்முகன்முதலாவானவர்தொழுதெழ
வீரடியாலேமூவுலகளந்து
நாற்றிசைமுனிவருமைம்புலன்மலரப்
போற்றிசெய்கதிர்முடித்திருநெடுமாலன்
றடிமுடியறியுமாதரவதனிற்
கடுமுரணேனமாகிமுன்கலந்
தேழ்தலமுருவவிடந்துபின்னெய்த்
தூழிமுதல்வசயசயவென்று
வழுத்தியுங்காணாமலரடியிணைகள்
வழுத்துதற்கெளிதாய்வார்கடலுலகினில்
யானைமுதலாவெறும்பீறாய
வூனமிலியோனியினுள்வினைபிழைத்து
மானுடப்பிறப்பினுண்மாதாவுதரத்
தீனமில்கிருமிச்செருவினிற்பிழைத்து
மொருமதித்தான்றியினிருமையிற்பிழைத்து
மிருமதிவிளைவினொருமையிற்பிழைத்து
மும்மதிதன்னுளம்மதம்பிழைத்து
மீரிருதிங்களிற்பேரிருள்பிழைத்து
மஞ்சுதிங்களின்முஞ்சுதல்பிழைத்து
மாறுதிங்களினூறலர்பிழைத்து
மேழுதிங்களிற்றாழ்புவிபிழைத்து
மெட்டுத்திங்களிற்கட்டமும்பிழைத்து
மொன்பதில்வருதருதுன்பமும்பிழைத்துந்
தக்கதசமதிதாயொடுதான்படுந்

துக்கசாகரத்துயரிடைப்பிழைத்து
மாண்டுகெடோறுமடைந்தவக்காலை
யீண்டியுமிருத்தியுமெனைப்பலபிழைத்துங்
காலைமலமொடுகடும்பகற்பசிநிசி
வேலைநித்திரையாத்திரைபிழைத்துங்
கருங்குழற்செவ்வாய்வெண்ணகைக்கார்மயி
லொருங்கியசாயனெருங்கியுண்மதர்த்துக்
கச்சறநிமிர்ந்துகதிர்த்துமுன்பணைத்
தெய்த்திடைவருந்தவெழுந்துபுடைபரந்
தீர்க்கிடைபோகாவிளமுலைமாதர்தங்
கூர்த்தநயனக்கொள்ளையிற்பிழைத்தும்
பித்தவுலகர்பெருந்துறைப்பரப்பினுண்
மத்தக்களிறெனுமவாவிடைப்பிழைத்துங்
கல்வியென்னும்பல்கடற்பிழைத்துஞ்
செல்வமென்னுமல்லலிற்பிழைத்து
நல்குரவென்னுந்தொல்விடம்பிழைத்தும்
புல்வரம்பாயபலதுறைபிழைத்துந்
தெய்வமென்பதோர்சித்தமுண்டாகி
முனிவிலாததோர்பொருளதுகருதலு
மாறுகோடிமாயாசத்திகள்
வேறுவேறுதம்மாயைகடொடங்கின
வாத்தமானாரயலவர்கூடி
நாத்திகம்பேசிநாத்தழும்பேறினர்
சுற்றமென்னுந்தொல்பசுக்குழாங்கள்
பற்றியழைத்தும்பதறினர்பெருகவும்
விரதமேபரமாகவேதியருஞ்
சரதமாகவேசாத்திரங்காட்டினர்
சமயவாதிகடத்தமதங்களே
யமைவதாகவரற்றிமலைந்தனர்
மிண்டியமாயாவாதமென்னுஞ்
சண்டமாருதஞ்சுழித்தடித்தாஅர்த்
துலோகாயதனெனுமொண்டிறற்பாம்பின்
கலாபேதத்தகடுவிடமெய்தி

யதிற்பெருமாயையெனைப்பலசூழவுந்
தப்பாமேதாம்பிடித்ததுசலியாத்
தழலதுகண்டமெழுகதுபோலத்
தொழுதுளமுருகியழுதுடல்கம்பித்
தாடியுமலறியும்பாடியும்பரவியுங்
கொடிறும்பேதையுங்கொண்டதுவிடாதெனும்
படியேயாகிநல்லிடையறாவன்பிற்
பசுமரத்தாணியறைந்தாற்போலக்
கசிவதுபெருகிக்கடலெனமறுகி
யகங்குழைந்தனுகுலமாய்மெய்விதிர்த்துச்
சகம்பேயென்றுதம்மைச்சிரிப்ப
நாணதுவொழிந்துநாடவர்பழித்துரை
பூணதுவாகக்கோணுதலின்றிச்
சதுரிழந்தறிமால்கொண்டுசாருங்
கதியதுபரமாவதிசயமாகக்
கற்றாமனமெனக்கதறியும்பதறியு
மற்றோர்தெய்வங்கனவிலுநினையா
தருபரத்தொருவனவனியில்வந்து
குருபரனாகியருளியபெருமையைச்
சிறுமையென்றிகழாதேதிருவடியிணையைப்
பிறிவினையறியாநிழலதுபோல
முன்பின்னாகிமுனியாதத்திசை
யென்புநைந்துருகிநெக்குநெக்கேங்கி
யன்பெனுமாறுகரையதுபுரள
நன்புலனொன்றிநாதவென்றரற்றி
யுரைதடுமாறியுரோமஞ்சிலிர்ப்பக்
கரமலர்மொட்டித்திருதயமலரக்
கண்களிகூரநுண்டுளியரும்பச்
சாயாவன்பினைநாடொறுந்தழைப்பவர்
தாயேயாகிவளர்த்தனைபோற்றி
மெய்தருவேதியனாகிவினைகெடக்
கைதரவல்லகடவுள்போற்றி
யாடகமதுரையரசேபோற்றி

கூடலிலங்குகுருமணிபோற்றி
தென்றில்லைமன்றினுளாடிபோற்றி
யின்றெனக்காரமுதானாய்போற்றி
மூவாநான்மறைமுதல்வாபோற்றி
சேவார்வெல்கொடிச்சிவனேபோற்றி
மின்னாருருவவிகிர்தாபோற்றி
கன்னாருரித்தகனியேபோற்றி
காவாய்கனகக்குன்றேபோற்றி
யாவாவென்றனக்கருளாய்போற்றி
படைப்பாய்காப்பாய்துடைப்பாய்போற்றி
யிடரைக்களையுமெந்தாய்போற்றி
யீசபோற்றியிறைவபோற்றி
தேசப்பளிங்கின்றிரளேபோற்றி
யரைசேபோற்றியமுதேபோற்றி
விரைசேர்சரணவிகிர்தாபோற்றி
வேதிபோற்றிவிமலாபோற்றி
யாதிபோற்றியறிவேபோற்றி
கதியேபோற்றிகனியேபோற்றி
நதிசேர்செஞ்சடைநம்பாபோற்றி
யுடையாய்போற்றியுணர்வேபோற்றி
கடையேனடிமைகண்டாய்போற்றி
யையாபோற்றியணுவேபோற்றி
சைவாபோற்றிதலைவாபோற்றி
குறியேபோற்றிகுணமேபோற்றி
நெறியேபோற்றிநினைவேபோற்றி
வானோர்க்கரியமருந்தேபோற்றி
யேனோர்க்கெளியவிறைவாபோற்றி
மூவேழ்சுற்றமுரணுறுநரகிடை
யாழாமேயருளரசேபோற்றி
தோழாபோற்றிதுணைவாபோற்றி
வாழ்வேபோற்றியென்வைப்பேபோற்றி
முத்தாபோற்றிமுதல்வாபோற்றி
யத்தாபோற்றியரனேபோற்றி

யுணாயுணர்விறந்தவொருவபோற்றி
விரிகடலுலகின்விளைவேபோற்றி
யருமையிலெளியவழகேபோற்றி
கருமுகிலாகியகண்ணேபோற்றி
மன்னியதிருவருண்மலையேபோற்றி
யென்னையுமொருவனுக்கியிருங்கழற்
சென்னியில்வைத்தசேவகபோற்றி
தொழுதகைதுன்பந்துடைப்பாய்போற்றி
யழிவிலாவானந்தவாரிபோற்றி
யழிவதுமாவதுங்கடந்தாய்போற்றி
முழுவதுமிறந்தமுதல்வாபோற்றி
மானேர்நோக்கிமணாளாபோற்றி
வானகத்தமரர்தாயேபோற்றி
பாரிடையைந்தாய்ப்பரந்தாய்போற்றி
நீரிடைநான்காய்நிகழ்ந்தாய்போற்றி
தீயிடைமூன்றாய்த்திகழ்ந்தாய்போற்றி
வளியிடையிரண்டாய்மகிழ்ந்தாய்போற்றி
வெளியிடையொன்றாய்விளைந்தாய்போற்றி
யளிபவருள்ளத்தமுதேபோற்றி
கனவிலுந்தேவர்க்கரியாய்போற்றி
நனவிலுநாயேற்கருளினைபோற்றி
யிடைமருதுறையுமெந்தாய்போற்றி
சடையிடைக்கங்கைதரித்தாய்போற்றி
யாரூரமர்ந்தவரசேபோற்றி
சீரார்திருவையாறாபோற்றி
யண்ணாமலையெம்மண்ணாபோற்றி
கண்ணாரமுதக்கடலேபோற்றி
யேகம்பத்துறையெந்தாய்போற்றி
பாகம்பெண்ணுருவானாய்போற்றி
பராய்த்துறைமேவியபரனேபோற்றி
சிராப்பள்ளிமேவியசிவனேபோற்றி
மற்றோர்பற்றிங்கறியேன்போற்றி
குற்றாலத்தெங்கூத்தாபோற்றி

கோகழிமேவியகோவேபோற்றி
யீங்கோய்மலையெம்மெந்தாய்போற்றி
பங்கார்பழனத்தழகாபோற்றி
கடம்பூர்மேவியவிடங்காபோற்றி
யடைந்தவர்க்கருளுமப்பாபோற்றி
யித்திதன்னின்கீழிருமூவர்க்
கத்திக்கருளியவரசேபோற்றி
தென்னாடுடையசிவனேபோற்றி
யெந்நாட்டவர்க்குமிறைவாபோற்றி
யேனக்குருளைக்கருளினைபோற்றி
மானக்கயிலைமலையாய்போற்றி
யருளிடவேண்டுமம்மான்போற்றி
யிருள்கெடவருளுமிறைவாபோற்றி
தளர்ந்தேனடியேன்றமியேன்போற்றி
களங்கொளக்கருதவருளாய்போற்றி
யஞ்சேலென்றிங்கருளாய்போற்றி
நஞ்சேயமுதாநயந்தாய்போற்றி
யத்தாபோற்றியையாபோற்றி
நித்தாபோற்றிநிமலாபோற்றி
பத்தாபோற்றிபவனேபோற்றி
பெரியாய்போற்றிபிரானேபோற்றி
யரியாய்போற்றியமலாபோற்றி
மறையோர்கோலநெறியேபோற்றி
முறையோதரியேன்முதல்வாபோற்றி
யுறவேபோற்றியுயிரேபோற்றி
சிறவேபோற்றிசிவமேபோற்றி
மஞ்சாபோற்றிமணாளாபோற்றி
பஞ்சேரடியாள்பங்காபோற்றி
யலந்தேனாயேனடியேன்போற்றி
யிலங்குசுடரெம்மீசாபோற்றி
கவைத்தலைமேவியகண்ணேபோற்றி
குவைப்பதிமலிந்தகோவேபோற்றி
மலைநாடுடையமன்னேபோற்றி

கலையாரரிகேசரியாய்போற்றி
திருக்கழுக்குன்றிற்செல்வாபோற்றி
பொருப்பமர்பூவணத்தரனேபோற்றி
யருவமுமுருவமுமானாய்போற்றி
மருவியகருணைமலையேபோற்றி
துரியமுமிறந்தசுடரேபோற்றி
தெரிவரிதாகியதெளிவேபோற்றி
தோளாமுத்தச்சுடரேபோற்றி
யாளானவர்கட்கன்பாபோற்றி
யாராவமுதேயருளேபோற்றி
பேராயிரமுடைப்பெம்மான்போற்றி
தாளியருகின்றாராய்போற்றி
நீளொளியாகியநிருத்தாபோற்றி
சந்தனச்சாந்தின்சுந்தரபோற்றி
சிந்தனைக்கரியசிவமேபோற்றி
மந்திரமாமலைமேயாய்போற்றி
யெந்தமையுய்யக்கொள்வாய்போற்றி
புலிமுலைபுல்வாய்க்கருளினைபோற்றி
யலைகடன்மீமிசைநடந்தாய்போற்றி
கருங்குருவிக்கன்றருளினைபோற்றி
யிரும்புலன்புலரவிசைந்தனைபோற்றி
படியுறப்பயின்றபாவகபோற்றி
யடியொடுநடுவீறானாய்போற்றி
நரகொடுசுவர்க்கநானிலம்புகாமற்
பரகதிபாண்டியர்க்கருளினைபோற்றி
யொழிவறநிறைந்தவொருவபோற்றி
செழுமலர்ச்சிவபுரத்தரசேபோற்றி
கழுநீர்மாலைக்கடவுள்போற்றி
தொழுவார்மையறுணிப்பாய்போற்றி
பிழைப்புவாய்ப்பொன்றறியாநாயேன்
குழைத்தசொன்மாலைகொண்டருள்போற்றி
புரம்பலவெரித்தபுராணபோற்றி
பரம்பரஞ்சோதிப்பரனேபோற்றி

போற்றிபோற்றிபுயங்கப்பெருமான்
போற்றிபோற்றிபுராணகாரண
போற்றிபோற்றிசயசயபோற்றி.

ப - ரை. நான்முகன் முதல் ஆ வானவர் தொழுது எழ - நான்கு முகங்களையுடையவனாகிய பிரமன் முதலாகிய தேவர்கள் தொழுது வழிபடுதலால், ஈர் அடியாலே-இரண்டடியைக்கொண்டு மூவுலகு அளந்து-மூன்றுலகங்களையும் அளந்து, நாற்றிசை முனிவரும் - நான்கு திக்கிலுள்ள முனிவர்களும், ஐம்புலன் மலர - (தமது) ஐம்புலன்களும் விரிய, போற்றிசெய் - வணங்கிய, கதிர் முடி - ஒளியோடுகூடிய முடியை யணிந்த, திரு நெடுமால் - திருமகளையுடைய நெடுமாலானவர், அன்று - அக்காலத்தில், அடி முடி அறியும் -அடிமுடிகளை யுணரப்புக்க, ஆதரவதனின் - விருப்பத்தினால், கடு முரண் ஏனம் ஆகி – வேகமும் வலிமையுமுள்ள வராகமாகி, முன் கலந்து - முன்னே விரவி, ஏழ்தலம் உருவ இடந்து-ஏழுலகங்களையும் ஊடுருவும்படி நிலத்தைக் கீண்டு சென்று, பின் எய்த்து - பிறகு (தான் கொண்ட கருத்து முடியாமையால்) இளைத்து, ஊழி முதல்வ - ஊழி முதல்வனே, சய சய என்று - சய சய வென்று, வழுத்தியும் - துதித்தும், காணா-காணாத, மலர் அடி இணைகள் - தாமரை மலர்போலும் இரண்டு திருவடிகளையும், வழுத்துதற்கு எளிது ஆய் - (எம்போலியர்) துதித்தற்கெளிதாகி, வார்கடல் உலகினில் - நெடிய கடலாற் சூழப்பட்ட வுலகத்தின் கண், யானை முதல் ஆ - யானை முதலாக, எறும்பு ஈறு ஆய - எறும்பு இறுதியாகிய, ஊனம் இல் யோனியின் உள்வினை பிழைத்தும் - அழிவற்ற யோனிகளுள்ளே செய்த வினைகளுக் கீடாகத் தங்கியிருந்து பிழைத்தும், மானுடப் பிறப்பினுள் - மானுடப்பிறவியில், மாதா உதரத்து - தாய் வயிற்றில், ஈனம் இல் - அழிவற்ற, கிருமிச் செருவினில் பிழைத்தும் - புழுப்போரில் பிழைத்தும், ஒருமதித்தான்றியின் இருமையில் பிழைத்தும் - முதலாவது மாசத்து நிறைவில் பிழைத்தும், இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும் - இரண்டாவது மாதத்தின் தோற்றத்தில் ஒருமையாய்ப் பிழைத்தும், மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்-மூன்றாவது மாதத்தில் உண்டாகின்ற (தாயின்) அம்மதத்தினின்று பிழைத்தும், ஈரிருதிங்களில் பேர் இருள் பிழைத்தும்-நான்காவது மாதத்திலுண்டாகிய பெரிய இருளினின்று பிழைத்தும், அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும் - ஐந்தாவது மாதத்தில் இறத்தலினின்று பிழைத்தும், ஆறு திங்களின் ஊறு அலர் பிழைத்தும் - ஆறாவது மாதத்தி லுண்டாகின்ற துன்பம் பழி இவைகளி

னின்று பிழைத்தும், எழு திங்களில் தாழ்புவி பிழைத்தும் - ஏழாவது மாதத்தில் தாழ்ந்த பூமியினின்று பிழைத்தும், எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்-எட்டாவது மாதத்திலுண்டாகிற கஷ்டங்களிலிருந்து பிழைத்தும், ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும் - ஒன்பதாவது மாதத்தி லுண்டாகிற துன்பங்களினின்று பிழைத்தும், தக்க தசமதி - தகுதியாகிய பத்தாவது மாதத்தில், தாயொடு - தாயுடன், தான்படும் - தான்படுகின்ற, துக்கசாகரத் துயரிடை பிழைத்தும், துன்பக்கடலி லழுந்துகின்ற துயரங்களினின்று பிழைத்தும், ஆண்டுகள் தோறும் அடைந்த அக்காலை - வருடங்களெல்லாம் நிரம்பின அந்தக்காலத்தில், ஈண்டியும் இருத்தியும் - நெருங்கியும் இருக்கச்செய்தும், எனைப் பல பிழைத்தும்-வேறு பல விடங்களினின்று பிழைத்தும், காலை மலமொடு - காலையில் மலவிசர்ச்சநத்தோடு, கடும்பகல் - கடும்பகலில், பசி - பசியினின்றும், நிசிவேலை-இராப்பொழுதில், நித்திரை யாத்திரை பிழைத்தும் - நித்திரை சஞ்சாரங்களினின்று பிழைத்தும், கருங்குழல் - கருமையாகிய கூந்தலையும், செவ்வாய் - சிவந்த வாயையும், வெள்நகை - வெண்மையாகிய பற்களையும், கார்மயில் ஒருங்கிய சாயல் - கார் காலத்து மயில் கண்டு ஒதுங்கும்படியான சாயலையும், நெருங்கி - நெருங்கப் பெற்று, உள் மதர்த்து - உள்ளே மதர்த்து, கச்சு அற நிமிர்ந்து - கச்சுக்கிழியும்படி இறுமாந்து, கதிர்த்து - ஒளியை யுடையனவாகி, முன் பணைத்து - முன்னே பருத்து, இடை எய்த்து வருந்த - இடையானது மெலிந்து வருந்தும்படி, எழுந்து - ஓங்கி, புடை பரந்து - பக்கங்களில் பரவி, ஈர்க்கு இடைபோகா - ஈர்க்கும் இடையே நுழையப்பெறாத, இளமுலை - இளமையாகிய தனங்களையுமுடைய, மாதர்தம் - மாதர்களுடைய, கூர்த்த - கூர்மையாகிய, நயனக்கொள்ளையில் பிழைத்தும் - கண்களின் கொள்ளையினின்று பிழைத்தும், பித்த உலகர் - பித்த வுலகினரது, பெருந்துறை பரப்பினுள் - பெரிய துறையினது பரப்பின்கண், மத்தக்களிறு என்னும் - மதயானை என்கிற, அவா இடை பிழைத்தும் - ஆசையினின்று பிழைத்தும், கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும் - கல்வி என்கிற பலகடல்களினின்று பிழைத்தும், செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும் - செல்வமென்கிற துன்பத்தி னின்று பிழைத்தும், நல்குரவு என்னும் - தரித்திரம் என்கிற, தொல்விடம் பிழைத்தும் - பழமையாகிய விஷத்தினின்று பிழைத்தும், புல் வரம்பு ஆய - புல்கீழ் எல்லையாகிய, பல துறை பிழைத்தும் - பல துறைகளினின்று பிழைத்தும், தெய்வம் என்பது ஓர் சித்தம் உண்டாகி - தெய்வ

முண்டென்பதாகிய ஒரு நினைப்புண்டாகி, முனிவு இலாததது ஓர் பொருளது கருதலும், வெறுப்பற்றதாகிய ஒரு பொருளை நினைத்தலும், ஆறுகோடி மாயா சத்திகள் - ஆறுகோடியாகிய மாயாசத்திகள், வேறு வேறு தம்மாயைகள் தொடங்கின-வெவ்வேறாயுள்ள தம்முடைய மாயைகளைச் செய்யத்தொடங்கின, ஆத்தம் ஆனோர் - நட்பாயினோரும், அயலவர் - அயலாயினோரும், கூடி - சேர்ந்து, நாத்திகம் பேசி - நாஸ்திகம்பேசி, நா தழும்பு ஏறினர் - நாவின்கண் தழும்பேறப் பெற்றனர், சுற்றம் என்னும் - உறவினர் என்கிற, தொல்பசுக் குழாங்கள் - பழமையாகிய பசுக்கூட்டங்கள், பற்றி அழைத்து - தொடர்ந்தழைத்து, பதறினர் பெருகவும் - பதறிப் பெருகவும்; விரதமே பரம் ஆக - விரதமே மேன்மையாக, வேதியரும் - மறையவரும், சரதம் ஆகவே - உண்மையாகவே, சாத்திரம் காட்டினர் - பகைமையைக் காட்டினார்கள், சமயவாதிகள் - சமயவாதியர், தத்த மதங்களே - தத்தம் மதங்களே, அமைவது ஆக - அமைவுளதாக, அரற்றி மலைந்தனர் - அரற்றிப் போரிட்டார்கள், மிண்டிய - நெருங்கிய, மாயாவாதம் என்னும் - மாயாவாதமென்கிற, சண்டமாருதம் சுழித்து அடித்து ஆர்த்து - பெருங்காற்றானது சுழித்தெறிந்து ஆரவாரித்து, உலோகாயதன் என்னும் - உலோகாயதனென்கிற, ஒள் திறல் பாம்பின் - ஒள்ளிய வலிமிகுந்த பாம்பினது, கலாபேதத்தகடு விடம் எய்தி - கலாபேதத்தையுடைய கொடிய விடத்தை யடைந்து, அதின் - அதினால், பெருமாயை பல - பல பெருமாயைகள், என்னை சூழவும் - என்னை வளைந்து கொள்ளவும், தப்பாமே - பிழையாமல், தாம் பிடித்தது சலியா - தாம் பிடித்த பிடியினின்றும் அசையாமல், தழலதுகண்ட - நெருப்பைக்கண்ட, மெழுகதுபோல - மெழுகு போல, தொழுது - வணங்கி, உள்ளம் உருகி - மன முருகி, அழுது - அழுது, உடல் கம்பித்து - சரீரம் நடுங்கி, ஆடியும் - ஆடுதலைச் செய்தும், அலறியும் - அரற்றியும், பாடியும் - பாடுதலைச் செய்தும், பரவியும் - வழிபட்டும், கொடிறும் பேதையும் - குறடும் மூடனும், கொண்டது விடாது எனும் படியே ஆகி - பற்றினதை விடாவென்கிறபடியேயாகி, நல்-நல்ல, இடையறா அன்பின் - இடையறாத அன்பினால், பசுமரத்து ஆணி அறைந்தாற்போல் - பசிய மரத்தின்கண் ஆணி யடித்ததுபோல, கசிவது பெருகி உருக்கம் பெருகி, கடல் என மறுகி-கடல்போல மயக்க மடைந்து, அகம் குழைந்து - மனங் குழைந்து, அநுகுலமாய் மெய் விதிர்த்து-(அதற்கு) இணங்கச் சரீரம் நடுங்கி, சகம்-உலகமானது, பேயென்று தம்மைச் சிரிப்ப - பேயென்று தம்மை நோக்கி நகைக்கவும், நாணது ஒழிந்து - நாணத்தைவிட்டு, நாட

வர் பழித்துரை - உலகத்தாரது நிந்தை வார்த்தையை, பூணது ஆக - ஆபரணமாகக்கொண்டு, கோணுதல் இன்றி - மனங் கோணுதலில்லாமல், சதுர் இழந்து - சதுரதையை யொழிந்து, அறிமால் கொண்டு - அறிவோடுகூடிய மயக்கங்கொண்டு, சாருங் கதியது - தாம் அடைகின்ற கதியே, பரம் ஆ - மேன்மையாக, அதிசயமாக - அதிசய முண்டாக, கற்று மனம் என - கன்றையுடைய பசுவின் மனம்போல, கதறியும் பதறியும் - கதறுதலைச் செய்தும் பதறுதலைச் செய்தும், கனவிலும் - கனவிலும், மற்று ஓர் தெய்வம் நினையாது-வேறு ஒரு தெய்வத்தை நினையாமல், அருபரத்து-அருமையாகிய மேன்மையையுடைய, ஒருவன் - ஒப்பற்றவன், அவனியில் வந்து - பூமியில் வந்து, குருபரன் ஆகி அருளிய பெருமையை - ஆசாரிய மூர்த்தியா யெழுந்தருளி அருள்செய்த மேன்மையை, சிறுமை என்று இகழாதே - சிறுமையென் றிகழாமல், திருவடி யிணையை - திருவடித்துணையை, பிறிவினை அறியா நிழலதுபோல - பிரிவென்பதை யறியாத சாயை போல, முன் பின் ஆகி முனியாது-முன் பின்னாய் வெறுப்படையாமல், அத்திசை - அந்தத்திக்கு நோக்கி, என்பு நைந்து உருகி - என்பு நைந்துருகப் பெற்று, நெக்கு நெக்கு ஏங்கி நெகிழ்ந்து நெகிழ்ந்திரங்கி, அன்பு என்னும் ஆறு கரையது புரள - அன்பென்னும் நதிக்கரை புரண்டோட, நன் புலன் ஒன்றி - நன்மையாகிய புலன்கள் ஒருமைப்பட்டு, நாத என்று அரற்றி - தலைவனே என்று அலறி, உரை தடுமாறி - சொல் தடுமாறி, உரோமம் சிலிர்ப்ப - மயிர்க்குச்செறிய, கரமலர் மொட்டித்து - கைம்மலர்களைக் கூப்பி, இருதயம் மலர - இதயகமலம் அலர, கண்களி கூர - கண்கள் களிமிகும்படி, நுண்துளி அரும்ப - நுட்பமாகிய நீர்த்துளிகள் அரும்பா நிற்க, சாயா அன்பினை - கெடாத அன்பை, நாள்தோறும் தழைப்பவர் - நாடோறும் செழிக்கச் செய்வோர்களுக்கு, தாயே ஆகி வளர்த்தனை போற்றி - தாயையே ஒப்பவனாகி வளர்த்தவனே (உன் பொருட்டு) வணக்கம், மெய்தரு வேதியன் ஆகி - உண்மையை யெனக்கருள்கின்ற மறையவனாகி, வினைகெட - என்வினைகளழியுமாறு, கைதரவல்ல கடவுள்போற்றி - கைகொடுக்க வல்ல கடவுளே போற்றி, ஆடு அகம்-ஆடிடமாகிய, மதுரைஅரசே போற்றி-மதுரைக்கிறைவனே போற்றி, கூடல் இலங்கு குருமணி போற்றி-கூடலில் விளங்குகின்ற நிறமுள்ள மாணிக்கமே போற்றி, தென் தில்லை மன்றினுள் ஆடி போற்றி - தெற்கிலுள்ள தில்லையம்பலத்துள் நடனஞ் செய்பவனே போற்றி. இன்று எனக்கு ஆர் அமுது ஆனாய் போற்றி - இன்று எனக்கு அரிய அமிர்தமானவனே போ

ற்றி, மூவா நான்மறை முதல்வா போற்றி - மூப்படையாத சதுர் வேதமுதல்வனே போற்றி, சேஆர்வெல் கொடிசிவனே போற்றி - இடபமாகிய வெற்றிக்கொடியையுடைய சிவபிரானே போற்றி, மின்ஆர் உருவம் விகிர்தா போற்றி - ஒளிபொருந்திய உருவவேறு பாடுகள் உள்ளவனே போற்றி, கல்நார் உரித்தகனியே போற்றி - கல்லின்கண் நாருரித்த கனியே போற்றி, கனகக்குன்றே காவாய் போற்றி - பொற்குன்றமே காப்பாயாக (உன்பொருட்டு) வணக்கம், ஆவா எனக்கு அருளாய் போற்றி - ஐயோவென் றிரங்கி எனக்கருள்வாயாக போற்றி, படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி - எல்லாப் பொருள்களையும் படைப்பவனே காப்பவனே அழிப்பவனே போற்றி, இடரைக்களையும் எந்தாய் போற்றி - துன்பத்தைப் போக்குகின்ற என் தந்தையே போற்றி, ஈச போற்றி - ஈசனே போற்றி, இறைவ போற்றி - தலைவனே போற்றி, தேசம் பளிங்கின் திரளே போற்றி - ஒளியுள்ள அழகிய படிகப்பிழம்பே போற்றி, அரைசே போற்றி - வேந்தனே போற்றி, அமுதே போற்றி - அமிர்தமே போற்றி, விரைசேர் சரண விகிர்தா போற்றி - மணம் பொருந்திய திருவடிகளையுடைய (அன்பர்மீது) அன்புள்ளவனே போற்றி, வேதி போற்றி - வேதப்ரதிபாத்யனே போற்றி, விமலா போற்றி - மல ரகிதனே போற்றி, ஆதி போற்றி - முதற்பொருளே போற்றி, அறிவே போற்றி - அறிவுருவே போற்றி, கதியே போற்றி - சற்கதியே போற்றி, கனியே போற்றி - பலமே போற்றி, நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி - கங்காநதி பொருந்திய சிவந்த சடாபாரத்தை யுடைய சிவபெருமானே போற்றி, உடையாய் போற்றி - (எப்பொருள்களையும்) உடையவனே போற்றி, உணர்வே போற்றி - உணர்ச்சியே போற்றி, கடையேன் அடிமை கண்டாய் போற்றி - கடையனேன் உன் அடிமை போற்றி, ஐயா போற்றி - ஐயனே போற்றி, அணுவே போற்றி - அணுவுருவமே போற்றி, சைவா போற்றி - மங்களமுள்ளவனே போற்றி, தலைவா போற்றி - தலைவனே போற்றி, குறியே போற்றி - அடையாளமே போற்றி, குணமே போற்றி - குணமே போற்றி, நெறியே போற்றி - நன்னெறியே போற்றி, நினைவே போற்றி - எண்ணமே போற்றி, வானோர்க்கு அரிய மருந்தே போற்றி - தேவர்களுக்கு அருமையாகிய அமிர்தமே போற்றி, ஏனோர்க்கு எளிய இறைவா போற்றி - மற்றையர்க்கு எளியனாகிய இறைவனே போற்றி, மூவேழ் சுற்றம் - (என்) இருபத்தொரு தலைமுறையும், முரண் உறும் நாடு இடை ஆழாமே அருள் - வலிமையாகிய நரககூபத்தில் அழுந்தாவண்ணம் அருள்செய்த, அரசே போற்றி - அரசனே

போற்றி, தோழா போற்றி - சிநேகனே போற்றி, துணைவா போற்றி - சகாயனே போற்றி, வாழ்வே போற்றி - வாழ்க்கையே போற்றி, என் வைப்பே போற்றி - என் நிக்ஷேபமே போற்றி, முத்தாபோற்றி - முத்தனேபோற்றி, முதல்வாபோற்றி - முதல்வனே போற்றி, அத்தாபோற்றி - தந்தையே போற்றி, அரனே போற்றி - சிவனேபோற்றி, உரைஉணர்வு இறந்த ஒருவபோற்றி- சொல்லும் உணர்ச்சியு மற்ற ஒருவனே போற்றி, விரிகடல் உலகின் விளைவே போற்றி - பரந்த கடல்சூழ்ந்த வுலகத்துக்கு உற்பத்தி ஸ்தாநமே போற்றி, அருமையில் எளிய அழகே போற்றி - அருமையில்லாத எளியதாகிய அழகே போற்றி, கருமுகில் ஆகிய கண்ணே போற்றி - கரு மேகமாகிய (என்) கண்ணே போற்றி, மன்னிய - நிலைபெற்ற, திருவருள் மலையே போற்றி - திருவருட் குன்றமே போற்றி, என்னையும் ஒருவன் ஆக்கி - என்னையும் ஒரு பொருட்டன்மை யுடையோனாகச் செய்து, சென்னியில் - (என்) சிரத்தில், இருகழல்வைத்த-பெரிதாகிய திருவடியை வைத்தருளின, சேவகபோற்றி - சேவகனேபோற்றி, தொழுதகை - தொழுந்தன்மை யமைந்த, துன்பம் துடைப்பாய் போற்றி - துக்கநாசனே போற்றி, அழிவு இல்லா - கெடுதலில்லாத, ஆநந்தவாரி போற்றி - சுகக்கடலே போற்றி, அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி - கெடுதியையும் தோற்றத்தையும் கடந்தவனே போற்றி, முழுவதும் இறந்த முதல்வா போற்றி - முழுதுங் கடந்த முதல்வனே போற்றி, மான்நேர் நோக்கி மணாளாபோற்றி - மானை நிகர்த்த நோக்கத்தை யுடையாளாகிய உமாதேவியின் மணவாளனே போற்றி, வான்அகத்து அமரர் தாயே போற்றி - விண்ணுலகத்துள்ள தேவர்களுக்குத் தாயே போற்றி, பாரிடை ஐந்துஆய் பரந்தாய் போற்றி - மண்ணினிடத்தில் ஐந்தாகி வியாபித்தவனே போற்றி, நீரிடை நான்கு ஆய் நிகழ்ந்தாய் போற்றி - நீரினிடத்து நான்காகி வியாபித்தவனே போற்றி, தீயிடை மூன்றுஆய் திகழ்ந்தாய் போற்றி - நெருப்பின்கண் மூன்றாகி விளங்கினவனே போற்றி, வளியிடை இரண்டு ஆய் மகிழ்ந்தாய் போற்றி - காற்றினிடத்து இரண்டாகி மகிழ்ந்தவனே போற்றி, வெளியிடை ஒன்றுஆய் விளைந்தாய் போற்றி-ஆகாயத்தின்கண் ஒன்றாகி விளைந்தவனே போற்றி, அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி - கனிவார் மனத்தில் அமிர்தமே போற்றி, கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி - கனவிடத்தும் தேவர்களுக்கு அருமையாயிருப்பவனே போற்றி, நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி - சாக்கிரத்திலும் நாயினேனுக்கு அருள்செய்தவனே போற்றி, இடை

மருது உறையும் எந்தாய் போற்றி - திருவிடை மருதூரி லெழுந்தருளி யிருக்கிற எந்தையே போற்றி, சடையிடை கங்கை தரித்தாய் போற்றி - சடையினிடத்துக் கங்கையை யணிந்தவனே போற்றி, ஆரூர் அமர்ந்த அரசே போற்றி - திருவாரூரில் அமர்ந்திருக்கிற அரசனே போற்றி, சீர்ஆர் திருவையாறா போற்றி - சிறப்பமைந்த திருவையாற்றை யுடையானே போற்றி, அண்ணாமலை எம் அண்ணா போற்றி-திருவண்ணாமலையி லெழுந்தருளியிருக்கிற எமது தந்தையே போற்றி, கண் ஆர் அமுதக் கடலே போற்றி - பெருமை நிறைந்த அமிர்த சாகரமே போற்றி, ஏகம்பத்து உறை எந்தாய்போற்றி - திருவேகம்பத்தில் வசிக்கின்ற எந்தையே போற்றி, பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி - பாகம் பெண்வடிவானவனே போற்றி, பராய்த் துறை மேவிய பரனே போற்றி - திருப்பராய்த்துறையி லெழுந்தருளிய பரனே போற்றி, சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி - திருச்சிராப்பள்ளியிற் பொருந்திய சிவபெருமானே போற்றி, மற்று ஓர் பற்று இங்கு அறியேன் போற்றி- வேறொரு ஆதாரத்தை இவ்விடத்து உணர்ந்திலேன் போற்றி, குற்றாலத்து எம் கூத்தா போற்றி - திருக்குற்றாலத்தில் அமர்ந்திருக்கிற எமது கூத்தனே போற்றி, கோகழி மேவிய கோவே போற்றி - திருவாவடுதுறையிற் பொருந்திய வேந்தனே போற்றி, ஈங்கோய் மலை எம் எந்தாய் போற்றி - திருவீங்கோய் மலையை யுடைய எமது தந்தையே போற்றி, பாங்கு ஆர் பழனத்து அழகா போற்றி - அழகு நிறைந்த திருப்பழனத்தில் வீற்றிருக்கின்ற சுந்தரனே போற்றி, கடம்பூர் மேவிய விடங்கா போற்றி-திருக்கடம்பூரிற் பொருந்திய அழகனே போற்றி, அடைந்தவர்க்கு அருளும் அப்பா போற்றி - அடுத்தவர்களுக்கு அருள் செய்கின்ற அப்பனே போற்றி, இத்திதன்னின்கீழ்-இத்தி மரத்தின் கீழ், இருமூவர்க்கு - அறுவருக்கும், அத்திக்கு - யானைக்கும், அருளிய - அருள்செய்த அரசேபோற்றி-அரசனேபோற்றி, தென்னாடுஉடைய சிவனே போற்றி - தென்னாட்டையுடைய சிவபெருமானே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி-எந்நாட்டினர்க்கும் தலைவனேபோற்றி, ஏனக்குருளைக்கு அருளினை போற்றி- பன்றிக்குட்டிக் கருள்புரிந்தவனே போற்றி, மானம் கயிலை மலையாய் போற்றி-பெருமைபொருந்திய கைலாய மலையை யுடையவனே போற்றி, அருளிட வேண்டும் அம்மான்போற்றி - அருள்செய்யவேண்டும் அம்மானேபோற்றி, இருள்கெடஅருளும் இறைவாபோற்றி - அஞ்ஞான இருள் கெடும்படி அருள்செய்கின்ற இறைவனே போற்றி, தளர்ந்தேன் அடியேன் தமியேன்போற்றி-சோர்ந்தேன் அடியேன்தனியனேன்

போற்றி, கள்ளம் கொள்ளக்கருத அருளாய்போற்றி - குற்றத்தைக் கொள்ள நினைக்கவும் அருளாதவனே போற்றி, அஞ்சேல் என்று இங்கு அருளாய் போற்றி - அஞ்சாதேஎன்று இவ்விடத்து அருள்வாய் போற்றி, நஞ்சேஅமுது ஆ நயந்தாய் போற்றி - விஷத்தையேஅமுதமாக விரும்பினவனே போற்றி, அத்தாபோற்றி - தந்தையே போற்றி, ஐயாபோற்றி - ஐயனே போற்றி, நித்தா போற்றி - நித்தியனே போற்றி, நிமலாபோற்றி - பரிசுத்தனே போற்றி, பத்தா போற்றி - பத்தனே போற்றி, பவனேபோற்றி - பவனே போற்றி, பெரியாய் போற்றி - பெரியோனே போற்றி, பிரானே போற்றி - பிரானே போற்றி, அரியாய்போற்றி - அரியவனே போற்றி, அமலாபோற்றி - அமலனே போற்றி, மறையோர்கோல நெறியே போற்றி - வேதியரது திருக்கோலத்தை யுடைய நீதிமார்க்கமே போற்றி, முறையோதரியேன் முதல்வாபோற்றி - முறையோ ஆற்றேன் முதல்வனே போற்றி, உறவேபோற்றி - சுற்றமே போற்றி, உயிரேபோற்றி - உயிரே போற்றி, சிறவேபோற்றி - சிறப்பே போற்றி, சிவமேபோற்றி - சிவமே போற்றி, மஞ்சா போற்றி - அழகனே போற்றி, மணாளாபோற்றி - மணவாளனே போற்றி, பஞ்சுஏர் அடியாள் பங்காபோற்றி - செம்பஞ்சூட்டிய அழகியபாதங்களையுடையளாகிய உமாதேவிபங்கனே போற்றி, அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி - துன்பப்பட்டேன் நாயினேன் அடியனேன் போற்றி, இலங்குசுடர் எம்ஈசாபோற்றி - விளங்குகின்ற காந்தியையுடைய எம் ஈசனே போற்றி, கவைத்தலைமேவிய கண்ணேபோற்றி - பல்வேறு உருவங்களாதலைப் பொருந்திய கண்ணே போற்றி, குவைப்பதி மலிந்த கோவே போற்றி - கூட்டமாகிய திருப்பதிகளில் நிறைந்திருக்கிற வேந்தனே போற்றி, மலைநாடு உடைய மன்னே போற்றி - மலை நாட்டை யுடைய அரசனே போற்றி, கலைஆர் அரி கேசரியாய் போற்றி - கலைகள் நிரம்பிய திருமாலுக்குச் சிங்கம்போல்பவனே போற்றி, திருக்கழுக்குன்றில் செல்வா போற்றி-திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளியிருக்கிற செல்வனே போற்றி, பொருப்பு அமர் பூவணத்து அரனே போற்றி - மலைகளமைந்த திருப்பூவணத்தி லெழுந்தருளிய ஹரனே போற்றி, அருவமும் உருவமும் ஆனாய் போற்றி-அரூபமும் ரூபமும் ஆனவனே போற்றி, மருவிய கருணைமலையே போற்றி-பொருந்திய கருணைக் குன்றமே போற்றி, துரியமும் இறந்த சுடரே போற்றி - துரியத்தையுங் கடந்த ஒளியே போற்றி, தெரிவு அரிது ஆகிய தெளிவே போற்றி - தெரிந்து கொள்ளல் அரிதாகிய தேர்ச்சியே போற்றி, தோளாமுத்தச் சுடரே போற்றி-தொளைக்காத முத்தின் ஒளியே

போற்றி, ஆள்ஆனவர்கட்கு அன்பா போற்றி - ஆளானவர்களுக்கு அன்பனே போற்றி, ஆராஅமுதே அருளே போற்றி-தெவிட்டாத அமிர்தமே அருளே போற்றி, பேர் ஆயிரம் உடைய பெம்மான் போற்றி - திருநாமங்கள் ஆயிரமுள்ள பெருமானே போற்றி, தாளி அறுகின்முராய் போற்றி - கொடியறுகின் மாலை யணிந்தவனே போற்றி, நீள் ஒளி ஆகிய நிருத்தா போற்றி - பேரொளியாகிய கூத்தனே போற்றி, சந்தனச் சாந்தின் சுந்தரபோற்றி - சந்தனக்குழம்பைத் தரித்த அழகனே போற்றி, சிந்தனைக்கு அரிய சிவமே போற்றி - நினைத்தற்கரிய மங்களகரனே போற்றி, மந்திரம் ஆ மலை மேயாய் போற்றி - இடமாகக் கயிலையைப் பொருந்தினவனே போற்றி, எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி - எம்மை உய்யும்படி யேற்றுக்கொள்வோனே போற்றி, புலி முலை புல்வாய்க்கு அருளினை போற்றி - புலி முலையை மானுக்கருளினாய் போற்றி, அலைகடல்மீமிசை நடந்தாய் போற்றி - அசையாநின்ற கடலின்மீது நடந்தவனே போற்றி, கருங்குருவிக்கு அன்று அருளினை போற்றி - கரிக்குருவிக்கு அன்று அருள் புரிந்தவனே போற்றி, இரும்புலன்புலர இசைந்தனை போற்றி - பெரிய புலன்கள் அவிய இசைந்திருந்தவனே போற்றி, படி உறப் பயின்ற பாவக போற்றி - பூமியிற் பொருந்தப் பயின்ற சங்கார கர்த்தனே போற்றி, அடியொடு நடு ஈறு ஆனாய்போற்றி - ஆதியோடு இடைகடைகள் ஆயினவனே போற்றி, நரகொடு சுவாக்கம் நானிலம் புகாமல் - நரகலோகத்துடன் சுவர்க்கலோக மத்ய லோகங்களில் பிரவேசியாமல், பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி - மேலான கதியைப் பாண்டியனுக்கு அருளினவனே போற்றி, ஒழிவு அற நிறைந்த ஒருவ போற்றி - எங்கும் நீக்கமற நிறைந்த ஒருவனே போற்றி, செழுமலர்ச் சிவபுரத்து அரசே போற்றி - செழிய மலர்ச்சோலை சூழ்ந்த சிவபுரத்தரசனே போற்றி, கழுநீர் மாலைக் கடவுள் போற்றி - கழுநீர் மாலையை யணிந்த கடவுளே போற்றி, தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி - வணங்குவோரது மயக்கத்தை யறுப்பவனே போற்றி, பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன் - உய்வு வள்மை இவற்றுளொன்றையும் அறியாத நாயினேன், குழைத்த சொல்மாலை கொண்டருள் போற்றி - இசைத்த சொல் மாலையைக் கொண் டருள வேண்டும் போற்றி, புரம் பல எரித்த புராண போற்றி - முப்புரங்களையும் எரித்த பழையோனே போற்றி, பரம்பரம் சோதிபரனே போற்றி- மிகவும் மேலான ஒளியையுடைய மேலோனே போற்றி, போற்றி போற்றி புயங்கப் பெருமான் - புயங்கப் பெருமானே போற்றி போற்றி, போற்றி போற்றி புராண காரண-புராதநனே எல்லாப் பொருள்களுக்கும் காரணனே போற்றி போற்றி, போற்றி போற்றி சயசய போற்றி - போற்றி போற்றி சயசய போற்றி.

---

# திருச்சதகம்.

பத்தி வைராக்கிய விசித்திரம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

## க-வது. மெய்யுணர்தல்.

திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற் கென், கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும் பியுள்ளம், பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றிசயசய போற்றியென்னும், கைதா னெகிழ விடேனுடையா யென் னைக் கண்டுகொள்ளே.

பதவுரை: உடையாய் - எல்லாவற்றையும் உடையவனே, உன்-உனது, விரைஆர் - மணம் நிறைந்த, கழற்கு - திருவடியைப் பெறுதற்கு, என் மெய் அரும்பி-என் உடல் புளகித்து, விதிர்விதிர்த்து - நடு நடுங்கி, கைதலைவைத்து - கைகளைத் தலைமேல்வைத்து, கண்ணீர் ததும்பி - கண்களில் நீர் துளும்பி, உள்ளம் வெதும்பி - மனம் வெதும்பி, பொய் தவிர்ந்து - பொய்யை நீங்கி, உன்னை - (மெய்ப்பொருளாகிய)உன்னைக் குறித்து, போற்றி - போற்றி, சய சயபோற்றி - சயசயபோற்றி, என்னும் - என்று துதிக்கின்ற, கை - ஒழுக்கத்தை, நெகிழவிடேன் - நான் தளரவிடேன், (ஆத லால்) என்னை - எனது நிலைமையை, கண்டு - நீ நோக்கி, கொள் - (உன் அடியாருள் ஒருவனாக) ஏற்றுக்கொள்வாயாக. எ - று.

கருத்துரை. உடையவனே; உன் திருவடியைப் பெறும் பொருட்டு என் மெய்பொடித்து, நடுநடுங்கி, கைகளைத் தலைமேல் வைத்து, கண்ணீர் துளும்பி, மனம்வெதும்பி, பொய்ப்பொருளின் தொடர் பொழிந்து, மெய்ப்பொருளாகிய வுன்னைக் குறித்து சய சய போற்றியென்று துதிக்கின்ற ஒழுக்கத்திற் சோர்விலேன் ஆத லால் என் நிலைமையை நோக்கி, என்னை உன் அடியாருள் ஒருவ னாக ஏற்றுக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

விசேடவுரை. பொய்யுடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. தான் நான்கும் ஈற்றேகாரமும் அசைநிலைகள். கழல் ஆண்மக்கள் கொடையாலும் வீரத்தாலும் காலில் அணியும்பூண் ஆதலால் அது தன்னையணிந்த திருவடியை யுணர்த்திற்றெனக் கொள்ளினும் பொருந்தும். இறைவனுக்குக் கொடையாவது முத்தியாகிய பெருஞ்செல்வத்தைக் கொடுத்தல். வீரமாவது அடுத்தாரது பல பிறவித் தொகையாகிய பகையை வென்று அவரைக் காத்தல். விரையார் கழல் என்றது அடியாரிடம் மலர்களால் மணங்கமழ்தலை.

"விண்ணுஞ்செலவறியா வெறியார்கழல் வீழ்சடைத்தீ
வண்ணன்சிவன்றில்லைமல் லெழிற்கான லரையிரவின்
அண்ணன் மணிநெடுந்தேர்வந்ததுண்டா மெனச் சிறிது
கண்ணுஞ் சிவந்தன்னை யென்னையுநோக்கினள் கார்மயிலே"

என்னும் திருக்கோவையார் உ௫௬-வது செய்யுள் விசேடவுரையில் "எல்லாப்பொருள்களையும் கடந்து நின்றனவாயினும், அன்பர்க்கணியவாய், அவரிட்ட நறுமலரான் வெறி கமழு மென்பது போதரவெறியார்கழல் என்றார்" எனக் கூறியிருத்தல் காண்க. இவ்வாறன்றி இயற்கை மணந்தங்கிய திருவடியெனினு மமையும். இது, "நறுமலராய் நாறுமலர்ச்சேவடி" என்னும் வாகீசர் திருவதிகை வீரட்டானம் திருவடித் திருத்தாண்டகம் அ-வது செய்யுளால் இனிது விளங்கும். "மெய்தானரும்பி" என்பதற்கு உடம்பு தானாகவே பொடித்து என்றலுமாம். மிகுதியாய் நடுங்கி என்றற்கு "விதிர்விதிர்த்து" என் றடுக்கி யருளினர். "உன்கழல்" என்றும், "என்கைதலைவைத்து" என்றும் கூறியது இறைவன் உடையவனும் தாம் உடைமையும் ஆதலை விளக்குதற் கென்க. இறைவன் அவயவங்களெல்லா மிருக்க "விரையார் கழற்கு" எனத் திருவடியில் நோக்கம் வைத்தது யாதுக்கெனின், ஆன்மாக்களுக்கு அதுவல்லது வேறு புகலிட மில்லாமையா லெனக் கொள்க. இது "இறுமாந்திருப்பன்கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச் - சிறுமானேந்தி தன் சேவடிக்கீழ்ச்சென் றங்கிறுமாந்திருப்பன்கொலோ" என்றும், "சார்ந்தார்கட்கெல்லாஞ் சரணுமடி" என்றும், "பற்றற்றார் பற்றும்பவளவடி" என்றும் கூறிய மேலோர் திருவாக்குக்களாலும் விளங்கும். "கற்றதனாலா யபயனென் கொல்வாலறிவன் - நற்றாடொழாஅரெனின்" என்றும், "மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார் - நிலமிசை நீடுவாழ்வார்" என்றும், "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க் - கியாண்டு மிடும்பை யில" என்றும், "தனக்குவமையில்லா தான் றாள்சேர்ந்தார்க் கல்லான் - மனக்கவலை மாற்றலரிது" என்

றும், "அறவாழியந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் - பிறவாழி நீந்தலரிது" என்றும், "கோளில்பொறியிற் குணமிலவே யெண் குணத்தான் - றாளை வணங்காத்தலை" என்றும், "பிறவிப்பெருங் கடனீந்துவர் நீந்தார் - இறைவனடி சேராதார்" என்றும் தெய் வப்புலமைத் திருவள்ளுவர் கூறுதலுங் காண்க. போற்றி - வணக் கம். இதனை வடநூலார் நமஸ்காரம் என்பர். சயஎன்பது வெல்க என்னும் பொருளது. சயசய என்னும் அடுக்கு மிகுதிப்பொரு ளது. இன்னதை உடையாய் என்னுமையால் எல்லாவற்றையும் உடையவனே எனப் பொருளுரைக்கலாயிற்று. எல்லாவற்றையும் என்றது இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் என்பவற்றை. இவற்றை வடநூலார் சரம் அசரம் என்பர். மெய் அரும்புதல், கைதலைவைத்தல், கண்ணீர் ததும்புதல் என்பவை காயத்தின் தொழில்களாகையாலும்; உள்ளம் வெதும்பல், பொய் தவிர்தல் என்பவை மனத்தின் தொழில்களாகையாலும்; சயசயபோற்றி என்பது வாக்கின் தொழிலாகையாலும், முக்கரணங்களாலும் வழிபடா நின்றேன் என்றவாறாயிற்று. "கண்டுகொள்" என்பத ற்கு எழுவாயாகிய நீ யென்பதும், விடேன் என்பதற்கு எழு வாயாகிய நான் என்பதும் வருவித் துரைக்கப்பட்டன. வெதும் பல் வாடலாதலால் அதனைஉடம்பின்தொழிலாகக்கொண்டு பொய் தவிர்தலை உள்ளத்தின் தொழிலாகக் கொண்டாலும் பொருந்தும். இறைவன் முற்றுணர்ச்சியுள்ளோனாதலால் "கண்டு" என்றருளி னர். பொய்-பொய்யொழுக்கம் எனினும்பொருந்தும்.பொய்ப்பொ ருள் எனக்கொண்டு பிரபஞ்சம் எனினும் அமையும். பொய்யை விட்டு மெய்யைப் பற்றுதல் தகுதியாதலால் "பொய்தான் றவிர்ந் துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங் கைதானெகிழவி டேன்" என்றருளினர். கைதலைவைத்தலாவது கைகளைக் கூப்பிச் சிரமேல் வைத்து அஞ்சலித்தல். (க)

கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளே னினதடி யாரொடல்லா னரகம்புகினும்
எள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல்லாதெங்க ளுத்தமனே

ப - ரை. எங்கள் உத்தமனே - எங்கள் மேலோனே, இறைவா - தலைவனே, திருவருளாலே இருக்கப்பெறின் - உன் திருவருளோடு கூடி யிருக்கப் பெறுவேனாயின், புரந்தரன் - இந்திரன், மால் - திருமால், அயன் - பிரமன் (ஆகிய இவர்க ளுடைய) வாழ்வு - பதங்களையும், கொள்ளேன் - ஒருபொருளாக

என்மனத்திற் கொள்ளமாட்டேன், குடிகெடினும் - என் குடி நசித்தாலும், நினது அடியாரொடு அல்லால் - உன் அடியாரோடன்றி, நள்ளேன் - (பிறரோடு) நட்புக்கொள்ளேன், நரகம் புகினும் - நரகத்திற் புகுந்தாலும், எள்ளேன் - அதனை யிகழமாட்டேன், உன்னை அல்லாது - உன்னையன்றி, பிறதெய்வம் - வேறு தெய்வங்களை, உள்ளேன் - மனத்தாலும் நினைக்கமாட்டேன். எ-று.

க - ரை. கடவுளே, யான் உன் திருவருளோடுகூடி யிருக்கப் பெற்றால், இந்திரன் முதலியோருடைய வாழ்வுகளையும் மதிக்கமாட்டேன், என் குடிகெட்டாலும் உன் அன்பரோடன்றிப் பிறரோடு நட்புக்கொள்ளேன், நரகம்புகினும் அதனை யிகழமாட்டேன், உன்னையன்றி வேறுதெய்வங்களை நினைக்கமாட்டேன் என்பதாம்.

வி - ரை. உத்தமன் என்பது உத்-தமன்எனப் பிரிக்கப்பட்டு, கடந்த் தமத்தை யுடையவன் எனப் பொருள்படுவதோர் வடசொல், மூலப்பகுதியாகிய பேரிருளைக் கடந்து நின்றவன் என்பது கருத்து. இது "கடக்கும்பலத்தர்" என்றாற்போல்வது. உத்-தாண்டப்பட்ட, தமன் - இருளையுடையவன், தமம் - இருள். கதகல்மஷன், ஜிதேந்த்ரியன் என இங்ஙனம் வருவன வடசொற்கள் பலவுள. இறைவன் - தலைமையையுடையவன். அதாவது ஆன்மாக்களைப் படைத்தலும், காத்தலும், அழித்தலும், மறைத்தலும், அநுக்கிரகித்தலும் ஆகிய பஞ்சகிருத்தியங்களையும் நடத்த வல்லவனாய் முதன்மை பெற்றிருப்போன். புரந்தரன் வடமொழி, இதற்குப் பகைவரூரை யழிப்பவன் எனப் பொருள் கூறுவர் வடநூலார். மால் - அன்பரிடத்தன்பு செய்பவன், அன்பர்க்குத் தன்மீது ஆசையுண்டாக்குவோன். அயன் - அஜன் என்னும் வடமொழித் திரிபு. இதற்குப்பொருள் பிறப்பில்லாதவன் என்பது. பிறப்புள்ளவனை இவ்வாறு கூறியது மங்கலவழக்கு. நள்ளல் - சிநேகித்தல். நரகம் - பாதாளலோகத்தில் பாவிகள் சேரும் இடம். அது அள்ளல், ரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி என எழுவகைப்பட்டிருக்கும். உள்ளல் - நினைத்தல், இது மனத்தின் தொழில், வாக்கும் காயமும் இதன்வழியேநிகழ்வனவாதலால் தலைமைபற்றிஉள்ளேன், எனஇதன்தொழிலைக்கூறினார், கூறினாரேனும்இனம்பற்றி வாக்கினால் வாழ்த்தேன் காயத்தால் வணங்கேன் எனக் கூறினதாகவுங்கொள்க. புரந்தரன், அயன், என்பவர்க்கிடையே சிறப்புநோக்கித்திருமாலை வைத்தருளினர். எள்ளல்- இகழ்தல். இந்திரன் முதலிய இறையவர் வாழ்வையும் மதியேன் என்றமையால் மற்றையர்வாழ்வை மதியாமைதானே பெறப்படும்,

வாழ்வு என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது, இறந் தது தழீஇய உம்மை தொக்கதெனினு மமையும். கெடினும் புகி னும் என்னும் உம்மைகள் இழிவு சிறப்பு. இந்திரன் முதலிய இறையவர் வாழ்வுகள் அழியுமியல்பின ஆதலால், "கொள்ளேன் புரந்தரன் மாலயன்வாழ்வு" எனவும், அடியாருறவு வீடுபேற் றுக்குக் காரணமாதலால், "குடிகெடினும நள்ளேனினதடியா ரொடல்லால்' எனவும், இறைவனது திருவருளாற் கிடைக்கப் பெற்றது நன்றேயாயினும் தீதேயாயினும் மனமுவந்தேற்றுக்கொ ளல் வேண்டுமாதலால், "நரகம் புகினுமெள்ளேன் திருவருளாலே யிருக்கப்பெறின்'' எனவும்,உத்தமனைவிட்டுஅதமரைவழிபடல்நன் றன்றாதலால்,"உள்ளேன் பிறதெய்வமுன்னையல்லா தெங்களுத்த மனே"எனவும் கூறினர். பெறின் என்பது பெறலருமை தோன்ற நின்றது.உத்தமனாதலால்இறைவனாயினு னென்பதுபோதர"உத்த மனே, இறைவா" என்றார். (௨)

உத்தம னத்த னுடையா னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவில்
ஒத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவரும்
தத்த மனத்தன பேசவெஞ் ஞான்றுகொல் சாவதுவே.

ப - ரை. உத்தமன் - உத்தமனும், அத்தன் - எமது தந்தை யும், உடையான் - உடையவனும் ஆகிய இறைவனது, அடியே - திருவடியையே, நினைந்து உருகி-கருதி யுருகி, மத்தமனத்தொடு - உன்மத்தங்கொண்ட மனத்துடன் கூடிய, மால் இவன் - பித்தனி வன், என-என்று கண்டோர் சொல்லவும், ஊர்ஊர் திரிந்து - ஊர் தோறுந்திரிந்து,மன நினைவில்-அவரவர் மனக்கருத்துக்கு,ஒத்தன ஒத்தனசொல்லிட-இசைந்தனவாகியபலசொற்களைச் சொல்லவும், எவரும்-யாவரும், தத்தம் மனத்தனபேச-தங்கள் தங்கள் மனத்துக் கிசைந்தவற்றைப் பேசவும், (கேட்டு) சாவது - மனமிறக்கப் பெறு வது, எஞ்ஞான்றுகொல் - எக்காலமோ. எ - று.

க - ரை. உத்தமனும் எமதுஅத்தனுமாகிய சிவபெருமானது திருவடியையே நினைந்துருகி, உன்மத்தனாகி, உலகத்தார் பித்த னென்றென்னை இகழும்படி நான் செயலற்றிருப்பது எந்நாளோ என்பதாம்.

வி - ரை. அத்தன் - ஆன்மாக்களுக்கெல்லாம் தந்தை. அத் தம் பொருளாதலால் வேதாகமப்பொருளா யிருப்பவன் என்றும், அத்தம் பொன்னாதலால் எனக்குப் பொற்குவையா யிருப்பவன்

என்றும் கூறலுமாம். அடியே என்னும் ஏகாரம் தேற்றம்,பிரிநிலை யெனினுமாம். நினைந்து என்னாது நினைந்துருகி என்றது இடையறாது நினைந்து என்றபடி. மத்தம் - உன்மத்தம்; மால் - மயக்கம், அது மயச்கமுடையவனை யுணர்த்திற்று. "மனநினைவி லொத்தன வொத்தன சொல்லிட" என்றது தம் மூரவர் சொல்லை. "தத்த மனத்தனபேச" என்றது பிறவூரவர் சொல்லை, ஊரூர் என்றது ஊர்தோறும் என்றபடி. சாதல் - தொழிலற்றிருத்தல். கொல் - அசைநிலை யெனினுமாம். (ஙூ)

சாவமுன் னாட்டக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சம ஞ்சி, ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே, மூவ ரென் றேயெம்பி ரானொடு மெண்ணிவிண் ணாண்டுமண் மேல், தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந்திரி தவரே.

ப - ரை. முன்நாள்-முற்காலத்தில், தக்கன்-தக்கனுனவன், சாவ - இறக்க, வேள்வித்தகர்தின்று - யாகத்தில் கொல்லப்பட்ட ஆட்டைத் தின்று, நஞ்சம் அஞ்சி - பாற்கடலிற்றோன்றிய விஷத்தையஞ்சி, ஆவ - ஐயோ, எந்தாய் என்று - எந்தையே யென்று, அவிதாஇடும் - முறையிட்ட, நம்மவர் - நம்மவராகிய, அவரே - அவர்கள்தாமோ, (இப்போது) எம்பிரானொடும் - எம்பெருமானோடும், மூவர் என்று எண்ணி - மூவரென் றெண்ணப்பட்டு, விண் ஆண்டு - விண்ணுலகையாண்டு, மண்மேல் - மண்ணுலகில், தேவர் என்று-தேவரென்று சொல்லப்பட்டு, இறுமாந்து திரிதவர் - செருக்கடைந்து திரிகின்ற இறைவர்கள், என்ன பாவம் - (இவர்கள் இவ்வாறு இறுமாந்து திரிதற்குக் காரணம்)என்னபாவமோ.எ-று.

க - ரை. முற்காலத்தில் தக்கன்சாவ, யாகத்தில் கொல்லப் பட்டஆட்டை யுண்டு, பாற்கடலிற்பிறந்த நஞ்சுக்கு அஞ்சி,எந்தையேயென்று முறையிட்ட நம்மவர்தாமோ, எம்மிறைவனோடுமூவர் என்று எண்ணப்பட்டு, தம்முலகங்களையாண்டு, மண்ணுலகிலும் தேவரென்று சொல்லப்பட்டு, கர்வித்துத் திரிகின்ற தலைமை யுடையவர்கள், இதென்ன பாவம் என்பதாம்.

வி - ரை. தக்கன்வேள்வி சாவ என்பதற்கு தக்கன் இறக்க யாகம் அழிய எனப் பொருள் கூறலுமாம். வேள்வித்தகர் என்றதனல்செய்தது அஜமேதம் என்பது பெறப்பட்டது. நஞ்சம் அஞ்சி என்பதனை நஞ்சத்தை யஞ்சி நஞ்சத்துக்கஞ்சி என இரண்டனுருபாயினும் நான்க னுருபாயினும் விரித்துரைத்துக் கொள்ளலாம். ஆவ-இரக்கக்குறிப்பு. அவிதாவிடல்-முறையிடுதல்,நம்மவரே என்

பதில் ஈற்றேகாரம்வினா, இது இழிவைக்குறித்தது. "மூவரென்றே யெம்பிரா னொடுமெண்ணி" என்றமையால், நம்மவர் திரிதவர் என்றது பிரமவிட்டுணுக்களை. இறுமாத்தல் - அகங்கரித்தல்.

**தக்கன் செய்த வேள்வியின் வரலாறு:**—தக்கன் சிவபெருமானையொழிந்தமற்ற தேவர்களைவைத்துக்கொண்டுயாகஞ் செய்தனன். இதைநாரத முனிவர் சிவபெருமானுக்கறிவிக்க, உமாதேவியார் தன்தந்தை செய்யும் யாகத்தைக்காணவிரும்பி விடைகேட்க, அவர் வேண்டா மென்று தடுத்தும் மீண்டுங் கணவனை வருந்திக் கேட்டமையால் அச்சிவபெருமான் போக விடை கொடுத்தனர். அங்கு உமாதேவியார் சென்றபோது அத் தக்கன் தன்னையும் தன் கணவனையும் அவமதித்து இகழ்ந்து பேசினமையால் உமாதேவியார் கோபங் கொண்டு கயிலையை மீண்டு மடைந்து நடந்த செய்தியை யுணர்த்தி அவன் யாகத்தை யழிக்கவேண்டு மெனச் சிவ பெருமானை வேணடினள், அப்போது சிவபெருமான் தக்கன் யாகத்தை யழிக்க வெண்ணினவுடன் தமது நெற்றியி னின்றும் வீரபத்திரன் பிறந்து, அந்த யாகசாலையிலிருந்த தேவர்களில் சூரியனைப் பல்லை யுடைத்தும், சந்திரனை நிலத்தில் தேய்த்தும், இந்திரனைத் தோள் நெரித்தும் இப்படிப் பலபடியாக அவமானஞ் செய்ததுமன்றி, தக்கனையும் தலையை யறுத்து, யாகத்தையும் நிர்மூலமாக அழித்தனன் என்பது.

**தேவர்கள் நஞ்சமஞ்சிய வரலாறு:**—தேவர்களும் அசுரர்களும் இடைவிடாது போர்புரிந்து வருகையில் அவ்விருதிறத்தாரும் தமக்கு மரணம் நேரிடாம லிருக்க அமிர்தபானம் செய்ய எண்ணிப் பிரமனை யடைந்து தம தெண்ணத்தைத் தெரிவிக்க, அவர் தேவாசுரர்களுடன் சென்று, திருமாலை வணங்கிப் பாற் கடல் கடைந்து அமிர்தம் தந்தருளும்படி வேண்டத் திருமால் கருடனால் மந்தர மலையைக் கொண்டுவந்து பாற்கடலில் மத்தாக நாட்டி அதற்கு வாசுகியைத் தாம்பாகப் பூட்டி ஒருபுறம் தேவர்களும் ஒருபுறம் அசுரரும் நின்று கடையச் செய்தனர். அவ்வாறு கடைகையில் அவ்வாசுகி வருத்தம் பொறுமல் விஷத்தைக் கக்கியது. அங்குள்ள எவரையுங் கொல்ல எழுந்த அக்கொடிய விஷத்தை அஞ்சிப் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் சிவபெருமானைச் சரண் புகுந்தனர். சிவபெருமானும் சரண் புகுந்த அத்தேவரைக் காக்கும் பொருட்டு அவ்விஷத்தை உண்டு தமது கண்டத்தில் நிறுத்தினர். அதனால் காளகண்டமாயிற்று. (சு)

தவமே புரிந்திலன் றண்மல ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த வருவினை யேனுனக் கன்பருள்ளாம்
சிவமே பெறுந்திருவெய்திற்றி லேனின் றிருவடிக்காம்
பவமே யருளுகண்டா யடியேற்கெம் பரம்பரனே.

ப - ரை. தவமேபுரிந்திலன் - தவத்தையோ செய்திலேன், தண்மலர் இட்டு - குளிர்ந்த மலர்களால் அருச்சித்து, முட்டாது இறைஞ்சேன் - குறைபாடின்றி வணங்கேன், அவமேபிறந்த - வீணாகவே ஜந்மித்த, அரு-பிறர் செய்தற்கரிய, வினையேன் - பாவ கன்மத்தை யுடையேன், உனக்கு அன்பர் உள் ஆம் - உன்னன்ப ராயினாரோடு சேரத்தக்க, சிவம் - மங்களத்தை, பெறும் - அடை தற்குரிய, திரு - செல்வத்தை, எய்திற்றிலேன் - அடைந்திலேன், (ஆதலால்) எம்பரம்பரனே - எமது மேலோர்க்கும் மேலோனே, அடியேற்கு - தொண்டனேற்கு, நின் திருவடிக்கு ஆம் - உன் திரு வடிக் காளாதற்குரிய, பவமே அருள் - பிறவியையே யருள் செய் வாயாக. எ - று.

க-ரை. தவமுதலியவற்றைச் செய்யாத வீண்பிறவி பிறந்தே னாதலால், இனியாயினும் உன் திருவடிக கன்புசெய்தற்குரிய சிற ந்த பிறவி பிறக்கும்படி அடியேனுக்குக் கிருபை செய்யவேண்டும் என்பதாம்.

வி-ரை. தவம் - தவசு, அதாவது மனம் பொறிவழியே போ காது நிற்றற்பொருட்டு விரதங்களால் உணவுகுறைத்தல், கோடை க்காலத்து வெயிலில் நிற்றல், மழைக்காலத்தும் பனிக்காலத்தும் நீரில் நிற்றல் முதலியவற்றைச் செய்து, அச்செயல்களால் தம்மு யிர்க் குண்டாகுந் துன்பங்களைச் சகித்துப் பிற வுயிர்களைக் காத் தல். இதனை, "உற்றநோய்நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை- அற்றேதவத்திற்குரு" என்னுந் திருக்குறளா லறிக. தண்-சாதிவிசே டணம். முட்டாது என்பதனை மலரிடுதற்கும் கூட்டுக. முட்டாது மலரிடுதலாவது-நியமித்துக்கொண்ட தொகையிற் குறைவற்றன வும் புட்பவிதிப்படி மாசற்றனவும் ஆகிய மலர்களைக்கொண் டருச் சித்தல். முட்டாது இறைஞ்சுதலாவது விதிப்படி கை கால் நெற்றி மார்பு தோள் என்னும் எட்டுறுப்பும் நிலந்தோய வீழ்ந்து வணங்குதல். அடியார் நடுவிலிருத்தல் முத்தியாகிய பெருஞ்செல் வத்தைத் தருதலால், "அன்பருள்ளாஞ் சிவமே பெறுந்திருவெய் திற்றிலேன்" என்றார். "அவமே பிறந்தவரு வினையேன்" என்றது தவமுதலியவற்றைச் செய்யாமையா லென்க. (ரு)

பரந்து பல்லாய்மல ரிட்டுமுட் டாதடியே யிறைஞ்சி
இரந்தவெல்லா மெமக்கேபெற லாமென்னு மன்பருள்ளம்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன் வார்கழற்கன்பெனக்கு
நிரந்தர மாயரு ளாய்நின்னை யேத்த முழுவதுமே. [ம்

ப - ரை. பரந்து-பரவி, பல் - பலவகையா யிருக்கிற, ஆய் - ஆராய்ந்து எடுக்கப்பட்ட, மலர் - மலர்களை, இட்டு - உன் திருவடிகளிற் பெய்து, முட்டாது - குறைபாடின்றி, அடியே இறைஞ்சி - உன் திருவடிகளையே வணங்கி, இரந்த எல்லாம் - வேண்டினவையெல்லாம், எமக்கே பெறல்ஆம் - எங்களுக்கே பெறுதல் கூடும், என்னும் - என்று நிச்சயித்த, அன்பர் - அடியார்களுடைய, உள்ளம் - மனத்தை, கரந்து நில்லா - ஒளித்து மற்றோரிடத்தில் நில்லாத, கள்வனே - கள்வா, முழுவதும் நின்னை எத்த - பூர்ணமாக உன்னைத் துதிக்க, எனக்கும் - அடியேனுக்கும், நின்றன்வார் கழற்கு - உன் நெடிய கழலையணிந்த திருவடிகளுக்குச் செய்யவேண்டிய, அன்பு - அன்பை, நிரந்தரமாய் அருளாய் - இடையீடின்றி யருள் செய்வாயாக. எ - று.

க - ரை. அன்பர்க்கெளியனே, நான் உன்திருவடிக் கன்பு செய்யும்படி கிருபை செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. பல்மலர்என்றது-கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்பவற்றை. ஆய்தலாவது-ஈரிலை கீழுறவிருந்து பூத்தல், புழுக்கடி, எடுத்துவைத் தலர்தல், பழம்பூவாதல், எருக்கிலை ஆமணக்கிலையினிற் பொதிதல், உடுத்த புடவையிலுங் கையிலுங் கொணர்தல், உதிர்தல், அரையின் கீழாதல், எச்சந்தாக்கல், சிலந்திகூடுகெட்டல்,மயிர்சுற்றல், இரவிலெடுத்தல், நீரிலமிழ்தல், புறங்காட்டிலெய்தல், எச்சிலாதல், குளியாதெடுத்தல் முதலிய தோஷங்களில்லாதனவாக ஆராய்தல். வார்கழல் என்றார் தம்மைக் கருதுமன்பர் எவ்விடத்தினராயினும் அவ்விடத் தவர்கட் கணித்தாய்ச் செல்லுதனோக்கி-அன்பருள்ளங் கரந்து நில்லா என்றதனால்அன்பரல்லாதா ருள்ளத்தில் கரந்துநிற்றல் பெறப்பட்டது. அன்பர் மனத்தில் வெளிப்பட்டு நிற்றலும், அன்பரல்லாதார் மனத்தில் மறைந்து நிற்றலும் ஆகிய இருதன்மைய னாதலால் கள்வனே என்றார். முழுதும் என்றதற்கேற்ப "நிரந்தரமாய்" என்றார். எனக்கும் என்பது இழிவு சிறப்பும்மை பரத்தல் - பரம்பி நிற்றல். இடுதல் இங்கு அருச்சித்தற்பொருளது. இரந்த வெல்லாம் என்றது இம்மையின்பம் மறுமையின்பம் மோக்ஷவின்பம் என்பவற்றை. எல்லாம் என்றது எஞ்சாமைப்பொருட்டு. (௬)

முழுவதுங் கண்டவனைப் படைத்தான்முடிசாய்த்து முன்னாள், செழுமலர் கொண்டெங்குந் தேடவப்பாலனிப் பாலெம்பிரான், கழுதொடு காட்டிடை நாடகமாடிக் கதி யிலியாய், உழுவையின் றோலுடுத் துன்மத்தமேல்கொண் டுழிதருமே.

ப - ரை. முழுவதும் - உலகமுழுமையும், கண்டவனை - சிருட்டித்தவனாகிய பிரமனை, படைத்தான் - சிருட்டித்தவனாகிய விட்டுணுவும், முடிசாய்த்து - தலைவளைத்து, முன்நாள் - முற்காலத்தில், செழுமலர்கொண்டு - செழுமையாகிய மலர்களை யேந்திக்கொண்டு, எங்கும்தேட - எவ்விடத்தும் தேடாநிற்க, அப்பாலன் - அப்பாற்பட்டிருந்தவன், இப்பால் - இவ்விடத்தில், எம்பிரான் - எமக்கு உபகாரகனாய், காட்டிடை - மயானத்தில், கழுதொடு - பிசாசங்களோடு கூடி, நாடகம்ஆடி - நடனம்செய்து, கதியிலியாய் - கதியில்லாதவனாகி, உழுவையின்தோல் உடுத்து - புலித்தோலைத் தரித்து, உன்மத்தம் மேல்கொண்டு - உன்மத்த குணத்தை மேற்கொண்டு, உழிதரும் - சஞ்சரியாநிற்பன், ஏ - இதென்ன ஆச்சரியம். எ - று.

க - ரை. முற்காலத்தில் திருமால் மலர்களைக்கொண்டு தேடியும்காண்பதற் கரிதானவன் இப்போது மயானத்தில் பேயோடாடு கின்றான், இதென்ன வியப்பு என்பதாம்.

வி - ரை. விட்டுணு அருச்சிக்கத் தேடினபோது மறைந்த திருவடியை இப்போது எம்போல்வார் கண்டுய்ய நாடகமாடி நின்றான் இதுஎன்ன வியப்பென்றாராயிற்று. நாடகமாடத் திருவடி காணப்படுமோவெனின், படும், என்னை, நாடகம் திருவடித் தொழிலாதலாலென்க. கதியிலி-வறியன். முழுவதும் என்றது ஐம்பூத வகையாலாகிய உலக முழுதும் என்றபடி. காண்டல் - படைத்தல், படைத்தான் என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மை தொகுத்தல். ஈற்றேகாரம் வியப்பு. திருமால்தேட மறைந்திருந்தவன் எம்போல்வார்க்குக் காணப்பட்டமை வியப்புக்குக் காரணம். கதியிலியாய் என்றதற்கேற்ப "உழுவையின்றோலுடுத்து" என்றார். காடு என்றமையால்இடுகாடு சுடுகாடு என்னு மிரண்டுங் கொள்ளக்கிடப்பினும் சுடுகாட்டைக் கொள்வதே சிறப்புடைத்து. திருமால்தேட மறைந்தவன் இங்குக் காட்டிலாடுவது உன்மத்தமேற் கோடலானேயாம் என்பதற்கு "முழுவதுங் கண்டவனைப் படைத்தான் முடிசாய்த்து முன்னாள் செழுமலர்கொண் டெங்குந் தேடவப்

பாலனிப்பாலெம்பிரான் கழுதொடு காட்டிடை நாடகமாடிக் சதியிலியாய் உழுவையின் றோலுடுத் துன்மத்தமேல் கொண்டுழி தருமே" என்றார். அப்பாலன் இப்பாலனுயினமையால் "பிரான்" என்றார்.

உழுவைத் தோலுடுத்த வரலாறு:—தாருகாவனத்தில் சிவபிரான் தம்மை மதியாத முனிவர் மடந்தையரைப் பிக்ஷாடன கோலமாய் வந்து கற்பழிக்க, அது பொறுது அம்முனிவர்கள் சிவபெருமானைக் கொல்லயாகஞ் செய்து அவ்வியாகத்தில் தோன்றிய அரா, புலி, சூலம், மான், பூதம், துடி, நகுவெண்டலை, தீ இவைகளை அப்பெருமான்மேல் விடுக்கப் பெருமானும் அவற்றின் வலியடக்கி அணி முதலிய அலங்காரப் பொருள்களாகத் தரித்தனர் என்பது. (எ)

உழிதருகாலுங் கனலும் புனலொடு மண்ணும்விண்ணும்
இழிதரு காலமெக் காலம் வருவது வந்ததற்பின்
உழிதரு காலத்த வுன்னடி யேன்செய்த வல்வினையைக்
கழிதரு காலமுமாயவை காத்தெம்மைக் காப்பவனே.

ப-ரை. உழிதரு - சஞ்சரிக்கிற,காலும் - வாயுவும், கனலும் - அக்கினியும், புனலொடு - நீருடன், மண்ணும் விண்ணும் - பூமியும் ஆகாயமும், இழிதரு - நசிக்கின்ற, காலம் - காலமானது, எக்காலம் வருவது - எக்காலத்துண்டாவது, வந்ததற்பின் - அவ்விறுதிக்காலமுண்டான பின்பும், உழிதரு - நீடு வாழ்கின்ற, கால் - திருவடியையுடைய, அத்த - எமது தந்தையே, உன்அடியேன் - உன்தொண்டனேன், செய்த - பண்ணின, வல்வினையை - வலிய வினைகளை, கழிதரு - நீக்கியருளுக, காலமும்ஆய் - காலதத்துவங்களுமாகி, அவைகாத்து - அவைகளைக் காத்து, எம்மை - எங்களையும், காப்பவனே-காக்கின்ற இறைவனே. எ - று.

க-ரை. உலகத்தின் தோற்றக் கேடுகளுக்கு முன்னும் பின்னும் உள்ளவனுகிய உனக்கு, என் வலியவினையை நீக்கியருளுதல் அரிதன்று என்பதாம்.

வி-ரை. அசைவும் சதாகதி யென்னும் பெயரும் காற்றுக்குண்டா யிருக்கையால் உழிதருகால் என்றார். உழிதரல் - சுழலல், திரிதல். இதற்குப் பகுதி உழிதா. உழிதருகாலத்த என்பதற்கு நிலைத்திருக்கிற காலதத்துவத்தை யுடையவனே எனினுமாம். இறைவன் காலதத்துவ முதலியவற்றுக்கும் நியாமகன் ஆகையால் இவ்வாறு கூறலாயிற்று. எனவே எக்காலத்துமுள்ள என்பது பொருள். இதற்குச் செய்யுள் திருக்கோவையார்:—

மூப்பானிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான் வியன்றில்லையானருளால் விரிநீருலகம்
காப்பான் பிரியக்கருதுகின்றூர் நமர்கார்க்கயற்கட்
பூப்பானல மொளிரும் புரிதாழ்குழற் பூங்கொடியே.

கழிதா என்னும் முதனிலை கழிதருஎன விகாரப்பட்டு வியங்கோட் பொருளில் வந்ததென்பதைக் கீழ்வரும் திருக்கோவையார் செய்யுளில் "போதரு" என்பதற்கு நச்சினூர்க்கினியார் நீபோதுவாயாக என உரைத்த உரையானு முணர்க.

புயல்வளருசன்முன்றூடிப்பொன்னேபின்னைப்போயப்பொலியும்
அயல்வளர்குன்றினின்றேற்றுமருவிதிருவுருவிற்
கயல்வளர்வாடகண்ணிபோதருகாதரந்தீர்த்தருளும்
தயல்வளர்மேணியனம்பலத்தான்வரைத்தண்புனத்தே.

கால்-காற்று. கனலுதல் - சுடுதல், காய்தல். வல்வினை-இறைவன் திருவருளாலன்றிப் போக்கப்படாத வினை. எம்மைக் காப்பவனே என்றது ஆன்மகோடிகளை யெல்லாம் உளப்படுத்தற் கென்க. (அ)

பவனெம் பிரான்பனி மாமதிக்கண்ணிவிண்ணேூர் பெருமான், சிவ னெம்பிரானென்னை யாண்டுகொண்டானென் சிறுமைகண்டும், அவனெம்பிரானென்ன நானடியேனென்ன விப்பரிசே, புவனெம்பிரான் றெரியும் பரிசாவதியம் புகவே.

ப-ரை. பவன்-பவனென்னுந் திருநாமமுள்ளவன், எம்பிரான்-எமக்கு உபகாரகன், பனி-குளிர்ச்சி பொருந்திய, மா - பெருமையமைந்த, மதிக்கண்ணி - கலை மாலையை யணிந்தவன், விண்ணேூர் பெருமான் - தேவர் பெருமான், சிவன் - சிவனென்னும் பெயருடையவன், எம்பிரான் - எமக்குபகார சீலன், புவன் எம்பிரான் - புவன் என்னும் எம்பெருமான், என்சிறுமை கண்டும் - என் தாழ்வைக் கண்டுவைத்தும், என்னை ஆண்டுகொண்டான் - என்னை யாண்டுகொண்டருளினன், (ஆதலால்) அவன் - அவனே, எம்பிரான் என்ன - எமக்குத் தலைவனென்றும், நான்அடியேன் என்ன - நான் அடியவன் என்றும், இப்பரிசே - இவ்வாறே, தெரியும் பரிசுஆவது - தெரியுந் தன்மையை, இயம்புக - சொல்லுக.

க-ரை. உலகங்களுக்கு முதற்காரணனுகவும் தேவர் பெருமானுகவும் இருக்கின்ற இறைவன் என் சிறுமையைப் பார்த்தும் என்னை யாண்டுகொண்டருளினன், இதற்குக் காரண மென்னையோ நீங்கள் சொல்லுங்கள் என்பதாம்.

வி - ரை. பவன்-எல்லாம் தன்னிடத்துப் பிறத்தலையுடைய வன். "தாரென்ன வோங்குஞ் சடைமுடிமேற் றனித் திங்கள் வைத்த" "எனப்பிறவிடங்களிலுங் கூறுதற்கேற்ப இங்கும் மதிக் கண்ணி என்றார். நீலவேணி, புஸ்தகபாணி, சுகவாணி என்பன போல மதிக்கண்ணியும் உடையானை யுணர்த்திற்று. அன்றி மதிக் கண்ணியைத் தரித்த விண்ணோர் பெருமான் என் றியைத் துரைப் பினு மமையும். விண்ணோர் பெருமான் ஒருசொல். விண்ணோர் பெருமான் என்றதில் தாமொழிந்து நிற்றலை யஞ்சி எம்பிரான் என்றார். சிவன் - மங்களகரன், மங்களமுடையவன், பிரமாநந்த சொரூபனும் நிர்விகாரியு மாதலால் சமித்திருப்பவன், அறிஞர் மனங்கள் தன்னிடத்திருக்கப் பெற்றவன். அறிஞர் மனங்களில் சென்று தங்குவோன் எனப் பலபொருள் தருவதோர் வடசொல். என் சிறுமை கண்டும் என்னை யாண்டுகொண்டா றதலால் அவன் ஆண்டான், நான் அடிமை என்னும் விவகாரம் வெளியா யிற்று. புவன் - சுயம்பு, தானே யுண்டானவன். எக்காலத்தும் குறையாத ஒளியை யுடையவன் என்றும், எல்லாப் பொருள்களை யும் தோன்றுவிப்போன் என்றும் கூறுவர். மதி இங்கு ஒரு கலை யாகிய சந்திரனை யுணர்த்திற்று. பூமாலைபோல வளைந்திருத்தலால் மதியைக் கண்ணி யென்றார். பிரான் - உபகார குணமுள்ளவன். இவ்விடத்து உபகாரகுணம் யாதெனின், எல்லாப் பொருள்களும் தன்னிடத்தே தோன்றுவதற்குரிய மூலகாரணன் தமது சிறுமை நோக்காது ஆட்கொண்டமை.

சிவபெருமான் பிறையணிந்தவரலாறு:—தக்கனுடைய புத் திரிகளாகிய அசுவினிமுதலிய இருபத்தேழுபெண்களையும் மணம் புரிந்துகொண்ட சந்திரன் அவர்களில் உரோகணியினிடத்து மாத்திரம் மிக்ககாதல் கொண்டு அவளுடனே எப்போதும் கூடிக் களித்திருக்க இச்செய்தியைத் தன்புதல்வியரா லுணர்ந்த தக்கன் சந்திரனைநோக்கி, உன்கலைகள் குறைக எனச்சபிக்க, அச்சாபத் தால் சந்திரன் பதினைந்து கலைகளும் குறைந்தபோது மற்றோர் கலையையும் இழக்கவரும் எனப்பயந்து சிவபெருமானைச் சரண மடைந்தான். அப்பெருமான் இரங்கி ஒற்றைக்கலையோடிங்கூடிய சந்திரனைத்தமது சடாபாரத்திலணிந்து மீண்டும் கலைகள் வளரும் படி அநுக்கிரகித்தனர் என்பது. (௬)

புகவேதகேனுனக் கன்பருள் யானென்பொல் லாமணி யே, தகவேயெனையுனக் காட்கொண்ட தன்மையெப்புன் மையரை, மிகவே யுயர்த்திவிண்ணோரைப் பணித்தியண்

ணுவமுதே, நகவே தகுமெம் பிரானென்னை நீசெய்த நாடகமே.

ப-ரை. என்பொல்லாமணியே-என் தொளைக்காத மாணிக்கமே, யான் - நான், உனக்கு அன்பர் உள் - உன்னன்பருக்கிடையே,புகவே தகேன்-பிரவேசிக்கவும் தகுதியில்லேன்,(அங்ஙனமாக) என்னை - அடியேனை, உனக்கு ஆட்கொண்ட தன்மை - உனக்காளாக்கிக்கொண்ட தன்மையானது, தகவே - தகுதியோ, எப்புன்மையரை - எவ்வகைப் புன்மையோரையும், மிகஉயர்த்தி - மிகவும் உயர்வித்து, விண்ணோரைப்பணித்தி - தேவர்களை அவரைப் பணியச் செய்கிறாய், அண்ணா - கிடைக்கலாகாத, அமுதே-அமிர்தமே, எம்பிரான் - எம்பிரானே, என்னை நீசெய்த நாடகம்-என்னை நீசெய்த கூத்து, நகவேதகும் - நகைப்பதற் குரியதேயாகும். எ - று.

க-ரை. எம்பிரானே, உன்னடியார் கூட்டத்தில் பிரவேசிக்கவும் தகுதியில்லாத என்னை யாண்டருளினதை நோக்கினால் சிரிக்குந் தகுதியுடைத் தென்பதாம்.

வி-ரை. பொள்ளல் - தொளைத்தல், பொள்ளாமணி - தொளைக்காத மணி (முழுமணி), அது வடநூலார் மதம்பற்றிப் பொல்லாமணியென வந்தது. வடநூலார் மதமாவது லகர ளகரங்களை வேற்றுமையின்றி வழங்கல். மணியென்பது நவமணிக்கும் பொதுவாயினும் இவ்விடத்து மாணிக்கத்துக்காயிற்று. இதனை "சூளாமணி யும்பர்க்காயவன்" என்னும்திருக்கோவையார் சஎ-ம் செய்யுளுரையில் காணலாம். முன்னுளையில் முடிந்தாளலாம்படி யிருக்கிற மாணிக்கம்போல அன்பர்க் கெளியனா யிருக்கையால் இறைவனை மணியென்றார். அண்ணா என்பதை விளியாக்கி அத்தனேயெனப் பொருளுரைப்பினுமமையும். உயர்ந்ததைத் தாழ்த்தலும் தாழ்ந்ததை உயர்த்தலும் இறைவனது சுதந்திரத்துவம் சர்வசக்தித்வம் என்பவற்றி னியல்பாமென்க. உன்னடியாரோடு கூடியிருக்குந் தகுதியிலேனாயினும், அவரவையிற் புகவுந் தகுதியிலேன் என்றற்கு, "புகவேதகேனுனக் கன்பருள்" என்றார். "தாழச்செய்தார் முடிதன்னடிக் கீழ்வைத்தவரை விண்ணோர் சூழச் செய்தான்" என்றதற்கேற்ப இங்கும், "புன்மையரை மிகவே யுயர்த்தி விண்ணோரைப் பணித்தி" என்றார். அடியார் கூட்டத்திற் புகவுந் தகுதியற்ற என்னை யாண்டருளினதை நோக்கு மிடத்து நகும் தகுதியுடைத்து என்றற்கு, "என்னை நீ செய்த நாடகம் நகவே தகும்" என்றார். (கo)

## உ - வது அறிவுறுத்தல்.

### தரவு கொச்சகக் கலிப்பா.

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே.

ப - ரை. எம் உடையானே - எம்மைத் தொன்று தொட்டே அடிமைகளாக வுடையவனே, நாடகத்தால் - உலகின்கண், உன் அடியார்போல் நடித்து - உன்னன்பர்போலப் பாவனை காட்டி, நடுவே - (உனக்காட்படுந்தன்மை யெனக்குச் சிறிதுமில்லாதிருக்க) நடுவிலே, வீடுஅகத்தே புகுந்திடுவான் - முக்தி யுலகத்தில் பிரவேசிக்க, நான் மிக பெரிதும் விரைகின்றேன் - நான் மிகுதியும் துரிதப்படுகின்றேன், சீர் - சிறப்பமைந்த, ஆடகக் (குன்றே) - பொன்மலையே, மணிக்குன்றே - மாணிக்க மலையே, உனக்கு - உன் விஷயமாக, இடையறா - இடையீடில்லாத, அன்பு - அன்பானது, எனஅகத்தூடு - என்மனத்தின்கண், நின்று - நிலைபெற்று, உருக - (அதுகாரணமாக) உருகும்படி, தந்துஅருள் - கருணை செய்தருளாய். எ - று.

க - ரை. நான் உன்னிடத் தன்பில்லாதவனா யிருந்தும் உன் அன்பர்போல நடித்து முத்தியுலகத்திற் புகும்பொருட்டு விரையாநின்றேன், ஆதலால் இனியாயினும் உன்னிடத் தன்பு செய்யும்படி எனக்குக் கிருபைசெய்ய வேண்டும் என்பதாம்.

வி - ரை. நாடகம் வீடகம் என்பன, "காடக மிறந்தார்க்கே" என்றாற் போல் டகரம் இரட்டாது வந்தன. நாடகத்தால்-வஞ்சகமாகிய நடிப்பால் எனினுமாம். தனக் காட்படுந்தன்மை யெனக் குண்டாவதற்கு முன்னே என்னை யாண்டருளினன் என்றற்குத் திருக்கோவையாரில், "என்னை முன்ஆள்ஊழுடையான்" என்றாற் போல, ஈண்டும், நடுவே என்றார். மிகப்பெரிது. ஒரு பொருட் பன்மொழி. "பொன்பணைத் தன்னவிறை" ஆதலால், ஆடகக் குன்றேயெனவும், "மாணிக்கக்கூத்தன்" ஆதலால், மாணிக்கக் குன்றேயெனவும் கூறினர். இவை யிரண்டும் உருவகம். இடையறா வன்புக்குக் காரணம் அவனருளேயாதலால், 'இடையறாவன் புனக்கென்னூடகத்தே நினறுருகத் தந்தருள்' என்றார். உனக்கு என்னும் நான்காவது ஏழாவதனிடப்பொருளது. தந்தருள் என்

பதில் அருள் ஈவோனுயர்வு குறிக்கும் விகுதி. ஏனைய அடியார் களையும் தம்மொடுபடுத்தி எம் எனவும், இறைவன் உடையவனும் உயிர்கள் உடைமையுமாதலால் உடையாய் எனவும் கூறினார். இது ஆண்டான் அடிமை யென்னும் வழக்குக்குச் சூசகம். வீட் டுலகத்துக்குரியஉன்னடியாரிருக்க, அவ்வுரிமை யொன்றுமில்லாத நான் அவர்களுக்கு நடுவில் விரைவது தகுதியன்றென்பார். "உன் னடியார்போ னடித்து நானடுவே வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்" என்றாரெனினுமாம். (கக)

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன், வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்து மிரேன், தேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம்பெரு மானெம், மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே.

ப - ரை. யான் - நான், ஏதும் - சிறிதும், பிறப்புஅஞ்சேன்- பிறவித் துன்பத்துக்கு அஞ்சமாட்டேன், இறப்பு அதனுக்கு - இறத்தற்றுன்பமாகிய அதற்கு, என்கடவேன் - யாதுசெய்யக்கட வேன், வான்ஏயும் - சுவர்க்கலோகமாயினும், பெறில் - அடையப் படுவதாயிருப்பின், வேண்டேன் - விரும்பேன், மண்ஆள்வான் - மண்ணுலகை (அரசாகி) ஆள, மதித்தும் இரேன் - நினைத்துமி ரேன், தேன் ஏயும் - தேன்பொருந்திய, கொன்றைமலர் - கொன் றைமலர்மாலையையணிந்த, சிவனே - மங்களகரனே, எம்பெரு மான் - எம்மிறைவனாகிய, எம்மானே - எம்பெரியோனே, உன் அருள்பெறும்நாள் - உன்னருள் பெறுங்காலம், என்றுஎன்று - எக்காலமென்று, வருந்துவன் - வருந்தாநின்றேன். எ - று.

க - ரை: நான் பிறவித்துன்பத்துக்கு அஞ்சேன், ஆயினும் இறப்புத் துன்பத்துக்கு அஞ்சுகின்றேன், மண் ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் ஆளவிரும்பேன், உன் திருவருளுக்கு உரி யேனாகுங் காலம் எக்காலமோவென்று வருந்துவேன், ஆதலால் என்பிறவியை ஒழித்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. பிறத்தற் றுன்பத்தினும் இறத்தற் றுன்பம் பெரி தாதலால் "இறப்பதனுக்கென் கடவேன்" என்றார். பிறத்தற்றுன் பம் கருப்பாசயத்திற் கட்டுண்டிருத்தல், நீரிலமிழ்தல், சாடராக்கி யாற் சுடப்படுதல், பிரசூதவாயு முறித்துத்தள்ளல், யோனித் துவாரத்தி னெருக்குண்ணல் முதலியன. இறத்தற்றுன்பம் - ஐப்பகுதி, பித்தப்பகுதி, உணர்வு, பொறி இவைகள் தத்தம் நிலை

கலங்கல், நாவறட்சி, நெஞ்சம் பறையடித்தல்,காலரை உயிர்கண் டஞ்சல் முதலியன. ஏயும் - எனினும் என்பதன் மரூஉ. உம்மை உயர்வு சிறப்பு. கொன்றைமலர் என்பது மலர்க்கொன்றை என சொல் முன்பின்னாக மாறிநின்றது. பெருமான் - மான் விகுதி பெற்ற ஆண்பாற் படர்க்கைப் பெயர். எம்மான் - எம்மவன் என்பதன் சிதைவு, அன்றி மான்மகான் என்னும் வடமொழிச் சிதைவு என்னலுமாம். மகான் - பெரியோன். மண்விண்ணாளும் வளப்பெரு வாழ்வினும் அண்ணல் திருவருளடைந் துயல் ஏற்ற மாதலால், "வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன், உன்னருள் பெறுநாளென் றென்றே வருந்துவனே", என்றார். (கஉ)

வருந்துவனின் மலர்ப்பாத மவைகாண்பா னாயடியேன்
இருந்துநல மலர்புனையே னேத்தேனாத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தா யருளமுதம்புரியாயேல்
வருந்துவனற் றமியேன்மற் றென்னேநா னுமாறே.

ப - ரை. வருந்துவல்-வருந்துவேன், நின்மலர்ப்பாதம்அவை காண்பான்-உன்தாமரைமலர்போன்றதிருவடிகளைக்காணும்பொரு ட்டு, நாயடியேன் - நாயினேன், இருந்தும் - தநுகரணங்களோடு கூடியிருந்தும், நல்லமலர்புனையேன் - உன்திருவடிகளுக்கு நல்ல மலர்களைச் சூட்டேன், நாதழும்புஏற - நாவினிடத்துத் தழும் புண்டாக, ஏத்தேன் - தோத்திரம் பண்ணேன், பொருந்திய - அமைந்த, பொன் - மேருமலையை, சிலைகுனித்தாய் - வில்லாக வளைத்தவனே, அருள் அமுதம் புரியாய்எல் - உன் திருவருளாகிய அமிர்தத்தைக் கொடாவிடின், நல்தமியேன் - மிகத்தனியேனாகிய நான், வருந்துவன் - வருந்துவேன், மற்று - வருந்தாமல், நான் ஆம்ஆறு - நான் உய்யும்வழி, என் - யாது. எ - று.

க - ரை. நான் உன் திருவடியைக்காணும்பொருட்டு மலர் சூட்டேன், நாத்தழும்புண்டாகத் துதியேன், இது காரணமாக நீ உன் அருளாகிய அமிர்தத்தைத் தந்தருளாயானால், நான் வருந்து தலேயன்றி உனக்காளாகும் விதம் யாது என்பதாம்.

வி - ரை, நல்மலர் என்றது நிர்த்தோஷமான மலர்களை. புரிதல் ஈண்டு ஈதல்மேற்று. நற்றமியேன் என்புழி நன்மை மிகு தியை யுணர்த்திற்று,நல்லமழை நல்லவெயில் என்பவற்றிற்போல. பாதத்துக்கு உவமையாதற் குரியது தாமரைமலரே யாதலால் மலர்ப்பாதம் என்பதில் மலர் அதனையே யுணர்த்திற்று. "பொன்

வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி'' ''பொன்னார்மேனி யனே'' ''பொன்பணைத் தன்னவிறை'' என்றபடி பொன்மேனி யுடையவனுதலால் பொன்வில்லைவளைத்தலே பொருத்தமாகும் என்பார்,''பொருந்திய பொற்சிலை குனித்தாய்'' என்றார்.

**சிவபெருமான் பொற்சிலை குனிந்த வரலாறு:**—தாரகாசுர னது புத்திரர்களான வித்யுந்மாலி, தாரகாக்ஷன்,கமலாக்ஷன் என் னும் மூன்று அசுரர்கள் மிகுந்த தவஞ்செய்து அசுரத் தச்சனுகிய மயனென்பவனுல் சுவர்க்க மத்திய பாதாளமாகிய மூன்றுலகங்க ளிலும் அந்தரத்திற் சஞ்சரிக்கத்தக்க இரும்பு, வெள்ளி, பொன் இவற்றால் செய்யப்பட்ட மூன்று பட்டணங்களையும் முறையே பெற்று, தம்மினத்தாராகிய பல அசுரர்களைக் கூட்டிக்கொண்டு, அந்தரத்திற் செல்லும் அந்நகரங்களுடனே தாம் நினைத்த இடங் களிற்சென்று, அங்குள்ளவரைக்கொன்று திரியாநிற்குங் காலத் தில், அவர்களுடைய கொடுமைக் கஞ்சி முறையிட்ட தேவர் முனிவர் முதலியோரது முறைபாட்டுக்குச் சிவபெருமான் இரங் கிச் சந்திர சூரியர்கள் சக்கரங்களாகவும்,வேதங்கள் குதிரைகளாக வும், பிரமன் சாரதியாகவும் அமைந்த பூமியாகிய இரதத்தின்மேல் ஏறி மேருவை வில்லாக வளைத்துக்கொண்டு, அதற்கு ஆதிசேஷ னுகிய நாரியமைத்து, வாயுவைச் சிறகாகவும் திருமாலைக் கூர்வா யாகவும் கொண்டு அக்கினியாகிய அம்பைத் தொடுத் தெய்ய முயல்கையில், சந்திரன்முதலிய தேவர்கள் தந்தம் ஆற்றலால் திரி புரங்களை அழித்தலாகிய இக்காரியம் முற்றுப்பெறுகின்றதென்று இறுமாப்புக் கொண்டதைச் சிவபெருமான் உணர்ந்து புன்னகை புரிய, அந்நகையால் திரிபுரவாசியர்கள் தமது முப்புரங்களோடு எரிந்து சாம்பராயினர் என்பது. (கரு)

ஆமாறுன் றிருவடிக்கே யகங்குழையே னன்புருகேன்
பூமாலைபுனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன்புத்தேளிர்[ன்
கோமானின் றிருக்கோயி றூகேன்மெழுகேன் கூத்தாடே
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

ப - ரை. ஆம் ஆறு - நான் உய்யும்வண்ணம், உன்திருவடி க்கே - உன் சீர்பாதங்களை யடைதற்பொருட்டே, அகம்குழை யேன் - மனங் குழையேன், அன்பு உருகேன் - அன்பினுலுரு கேன், பூமாலை புனைந்து - மலர்மாலையைக்கொண் டலங்கரித்து, ஏத்தேன் - துதியேன், புகழ்ந்துஉரையேன் - புகழ்ந்துபேசேன், புத்தேளிர்கோமான் - தேவர்பெருமானே, நின் திருக்கோயில் -

உன் திருக்கோயிலை, தூகேன் - திருவலகிடேன், மெழுகேன் - திருமெழுக்கிடேன், கூத்தாடேன் - (உன் சந்நிதியில் நின்று ஆனந்தக்) கூத்தாடேன், சதுராலே சார்வானே - சதுரப் பாட்டினுல் அடையப்படுவோனே, சாமாறே விரைகின்றேன் - சாம்வண்ணமே விரையாநின்றேன், எ - று.

க - ரை. அறிஞர் அறிவுக்குப் புலப்படுவோனே, உன் திருவடிக்கு ஆளாகும்பொருட்டு மனமுருகுதல்முதலியவும் செய்யேன் ஆயினும் இந்த உலகவாழ்வைநீக்கி உன்திருவடியைப்பெற விரும்புகிறேன், உன் பெருங்கருணையால் என் எண்ணத்தை நிறைவேற்றவேண்டும் என்பதாம்.

வி - ரை. சதுர் - முக் கரணங்களுக்கு மெட்டாத இறைவனை யறிந்தெய்தும் சதுரப்பாடு (சாமர்த்தியம்), அறிவு எனினுமாம். குழைதல் - இளகுதல். உருகுதல் - நீர்போல நெகிழ்தல். புகழ்ந்துரைத்தல் - சொல்லாற்புகழ்தல். ஏத்தல் - பாமாலை சூட்டல். புத்தேளிர் - தேவர். தூகல் - அலகிடல் (விளக்கல்). மெழுகுதல் - கோமயத்தால் நிலம் பூசுதல். கோமயம் - பசுஞ்சாணம். சாதல் - உடம்பைவிட்டு நீங்குதல். திருவடிப்பேற்றுக்குத் தடையா யிருப்பது உடம்பாதலால் "சாமாறே விரைகின்றேன்" என்ருர். புனைதல் - தொடுத்தல் எனினும் பொருந்தும். (சச)

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்ருயை யென்சொல்லி வாழ்த்துவனே.

ப - ரை. வான் ஆகி - ஆகாயமாகி, மண் ஆகி - பிருதுவியாகி, வளி ஆகி - காற்ருகி, ஒளி ஆகி - தீயாகி, ஊன் ஆகி - உடம்பாகி, உயிர் ஆகி - (அந்த வுடம்பில்தங்கும்) உயிராகி, உண்மையும்ஆய் - மெய்யுமாகி, இன்மையும்ஆய் - பொய்யுமாகி, கோன்ஆகி - முதல்வனுகி, அவர்அவரை - அவரவர்களை, யான்எனது என்று - யான் எனது என்று சொல்லாநின்று, கூத்தாட்டுவான்ஆகி - கூத்தாடச் செய்வோனுகி, நின்ருயை - நின்றவுன்னை, என்சொல்லி வாழ்த்துவன் - யாதுசொல்லிப் புகழ்வேன், எ - று.

க - ரை. ஆகாயமுதலாகிய எல்லாப் பொருள்களாகியும் அவற்றின் உண்மை யின்மைகளாகியும், அவற்றை யியங்குவிப்போனுகியும் இருக்கின்றஉன்னை என்சொல்லிப் புகழ்வேன் என்பதாம்.

வி - ரை. "அகரவுயிர்போ லறிவாகியெங்கும் நிகரிலிறைநிற்குநிறைந்து" என்கிறபடியே, எவ்விடத்தும், எக்காலத்தும், எப்பொருளினும் இறைவன் நிறைந்து நிற்றலால் "வானாகி" எனத் தொடங்கி, "என் சொல்லி வாழ்த்துவனே" என முடித்தார். கோன் என்றமையால் இறைவற்குத் தலைமையும், கூத்தாட்டுவான் என்றமையால் சுதந்திரத்துவமும், ஆன்மாவுக்குப் பாரதந்திரியமும் கொள்ளப்படும். யான் அகங்காரம். எனது மமகாரம். இவற்றை முறையே அகப்பற்று புறப்பற்று எனவுங் கூறுவர். மெய்யர்க்கு உண்மையாயும் பொய்யர்க்கு இன்மையாயும் விளங்குகின்றமையால் "உண்மையுமா யின்மையுமாய்" என்றார். ஒளியையுடைய தீயை ஒளி யென்றார். ஏனைய பூதங்களின் தோற்ற வொடுக்கங்களுக்கிடமா யிருத்தலால் வானை முதற்கட்கூறினார். ஒருபொருளே யிவ்வாறு பலபொருளாதல் இயையுமோவெனின், "கோனாகியானெனதென்றவரவரைக் கூத்தாட்டுகின்ற சர்வசக்தியுள்ள சுதந்திரனாதலால் இயையுமென்க. சுதந்திரத்துவம்-தன்வயத்தனாதல். அவரவரை எனத் தலைமைபற்றி உயர்திணையைக் கூறினாரேனும் அஃறிணையும் கொள்ளப்படும். (கரு)

வாழ்த்துவதும் வானவர்க டாம்வாழ்வான் மனநின்பால், தாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழ வேண்டிச், சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன், பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே.

ப - ரை. வானவர்கள் - தேவர்கள், வாழ்த்துவதும் - உன்னைத்துதித்தலும், தாம்வாழ்வான் - தாங்கள் சுகவாழ்க்கை வாழும் பொருட்டே, மனம்நின்பால் தாழ்த்துவதும் - மனத்தை யுன்னிடத்துத் தங்கப்பண்ணுவதும், தாம் உயர்ந்து - தாங்கள் உயர்வை யடைந்து, தம்மை - தங்களை, எல்லாம் தொழவேண்டி - யாவரும் வணங்கவிரும்பியே, மதுகரம் - வண்டுகள், சூழ்த்துமுரலும் - சூழ்ந்தொலிக்கின்ற, தாரோய் உன்னை - மலர்மாலையை யணிந்தவனாகிய உன்னை, நாயடியேன்யானும் - நாயடியேன்ஆகிய நானும், பாழ்த்த பிறப்பு அறுத்திடுவான் - பாழாகிய பிறவித்தளையை யறுக்கும் பொருட்டு, பரவுவன் - துதித்து வணங்குகின்றேன், எ - று.

க - ரை. தேவர் உன்னைத் துதிப்பது தாம் உயர்வடைந்து தம்மை எல்லாரும்தொழ விரும்பியேயாம், யான் அப்படி யின்றி என் பிறவித்தளையை யறுத்துக்கொள்ள விரும்பியே உன்னைத் துதிக்கின்றேன் என்பதாம்.

வி - ரை. வான் - விண். வானவர் - விண்ணுலகத்தார், அவர் இந்திரன் முதலானோர். வாழ்தல் - செல்வப்பெருக்கோடிருத்தல். தாழ்த்துதல் - பணிவித்தல். மது - தேன். கரம் - செய்வது. மதுகரம்-தேனைச்சேர்ப்பது. அறுத்திடுவோன் என்றதற்கேற்ப பிறவியைத் தளையாக்கி யுரைக்கலாயிற்று. தாரோயை என்பதில் ஐ சாரியை. பயனடைவோன் பயனளிப்பவனை வாழ்த்துத லியல்பாதலால்,தாம் வாழ்வான் வாழ்த்துவதும் என்றார். மனநின்பால்தாழ்த்துவதும் என்னுந்தொடரை, மன்ன - நின்பால் - தாழ்த்துவதும் எனப்பிரித்து இறைவனே உன்னிடத்தெமது மனத்தையுஞ் சிரத்தையுந் தாழப்பண்ணுவதும் எனப்பொருளுரைத்தலுங் கூடும். சூழ்த்து - வலித்தல் விகாரம். (கசு)

பரவுவா ரிமையோர்கள் பாடுவன நால்வேதம்
குரவுவார் குழன்மடவாள் கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பி னடியார்கண் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள் காண்பாரோ வரியானே.

ப - ரை. இமையோர் - தேவர்கள், பரவுவார் - வாழ்த்தி வணங்குவாரா யிருந்தார்கள், நால்வேதம் - நான்கு வேதங்கள், பாடுவன - உன் புகழைப் பாடுவனவாயிருந்தன, குரவு - குராமலரையணிந்த, வார் - கடையொக்கநீண்ட, குழல்மடவாள் - கூந்தலையுடையவுமாதேவி, ஒருபாகம் கூறு உடையாள் - ஒரு புறத்தைக் கூறுடையளாயிரா நின்றாள், மெய்யன்பின் அடியார்கள் - உண்மையன்பினையுடைய அடியார்கள், மேல்மேல்-மேலுமேலும், விரவுவார் - குழாங்கூடித் திரள்வாராயிராநின்றார்கள், (இங்ஙனமாக) அரியானே - மநாதிகட்கரியவனே, அரவு - அராவிய, உன் வார்கழல் இணைகள் - உன்நீண்டவீரக்கழலையணிந்த திருவடிகளை, காண்பு - காண்டற்குரியார், ஆரோ - யாவரோ, (ஒருவருமில்லை.) எ - று.

க - ரை. கடவுளே, உன் அருமைநோக்கித் தேவர் உன்னைப் பரவுகின்றனர், வேதங்கள் பாடாநின்றன, உமாதேவி ஒரு பாகத்தை நீங்காதிருக்கின்றனள், மெய்யடியார்கள்கூடித் தரிசியாநின்றனர். யான் ஒன்றுஞ்செய்திலேன், ஆயினும் என்னை உன் பெருங் கருணையால் ஆட்கொள்ளவேண்டும் என்பதாம்.

வி - ரை. அரியான்-மநோவாக்குக்காயங்கட்கெட்டாதவன். உமாதேவி மலையரையன் மகளாதலால் "குரவுவார் குழன்மடவாள் என்றார்" நிலவளம் போதரற்கு. அரவு - சாதிவிசேடணம். இமை

யாதவரை இமையோர் என்றது மங்கலவழக்கு. வேதங்கள் அளவில்லனவாயினும் பயிற்சிமிகுதிபற்றி நால்வேதம் என்றார். நால்வேதம் பாடுதலாவது எல்லாத் தேவரினும் சிறந்தவன் எனப் புகழ்தல். மடவாள் - இளமையுள்ளவள். மடப்பம் - இளமை. அன்றிப் பெண்குணம் நான்கினுள் ஒன்று எனினுமாம். "கூறுடையாளொருபாகம்" என்ற குறிப்பால் மடவாள் உமாதேவியை யுணர்த்திற்று. குரவு - நறுமணம் எனினுமாம். மேன்மேல் - மிகுதியாக. ஒ - அசை. தேவர் முதலானோர் உன் கழலிணைகள் காண்பாரோ, மெய்யன்பினடியார்கள் விரவுவார் என்றியைத்துக் கூறலும் பொருந்தும்.

கூறுடைய வரலாறு:—பிருங்கிமுனிவர் சிவபிரானை மாத்திரம் வலம் வருவதைக் கண்ட உமாதேவியார் தம் நாயகனை நோக்கி, முனிவர் என்னை வலம் வராமைக்குக் காரணம் யாதென்று கேட்க, சிவபெருமான் இஷ்டசித்தி பெற விரும்புவோர் உன்னையும் மோக்ஷத்தைப் பெற விரும்புவோர் என்னையும் வலம் வருவார் என்றார். அஃதுணர்ந்த உமாதேவியாரும் சிவபெருமானோடு பிரியாதிருக்கத் தவஞ்செய்து இடப் பாகம் பெற்றார் என்பது. ()

அரியானே யாவர்க்கு மம்பரவா வம்பலத்தெம்
பெரியானே சிறியேனை யாட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறே னயந்துருகேன்
தரியேனு னுமாறென் சாவேனுன் சாவேனே.

ப - ரை. அரியானே - எவ்வகையார்க்கும் காணுதற் கரியவனே, அம்பரவா - சிதாகாயத்தையுடையவனே, அம்பலத்து எம் பெரியானே - கனகசபையினடிக்கின்ற எம்பெரியோனே, சிறியேனை ஆள்கொண்ட - சிறியவனாகிய வென்னையாட்கொண்டருளிய, பெய்கழல்கீழ் - திருவடிகளின்மீது, விரைஆர்ந்த - மணம் நிரம்பிய, மலர்தூவேன் - மலர்சொரியேன், வியந்து - உன்பெருங் கருணையை வியந்து, அலறேன் - பேரொலிசெய்யேன், நயந்து - விரும்பி, உருகேன் - மனமுருகேன், தரியேன் - (இவைகளைச் செய்யாமல்) அமைந்துமிரேன், நான்ஆம் ஆறுஎன் - அடியேன் உய்யும் வழியாது, நான்சாவேன் சாவேன் - நான் இறப்பேன் இறப்பேன். எ - று.

க - ரை. கடவுளே, சிறியேனை ஆட்கொண்டருளின உன் திருவடியை அருச்சித்தல் முதலியவற்றைச் செய்து உய்யும்வகை யறியாமல் உயிர்வாழ்தலினும் யான் இறப்பதே தகுதியென்பதாம்,

வி - ரை. இறைவனது நிலை சிதாகாயமேயாயினும் அம்பலத்தின்கண் எம்மனோர்க் கெளிவந்தான் என்பார், "அம்பரவா அம்பலத் தெம் பெரியானே" என்றார். இறைவனது பெருமையை நோக்கத்தான் அறச்சிறியனாதலால் தன்னைச் சிறியேன் என்றார். பெய்கழல் - இடப்பட்ட கழலையுடைய திருவடி. இது "பெய்வளை" யென்றாற்போல்வது. அறப்பெரியனாகிய நீ அறச்சிறியனாகிய என்னை யாட்கொண்டதற்கு,மலர்தூவல் முதலியவைகளைக் கைம்மாறாக அன்றி நன்றிபாராட்டலாகச் செய்திலேனாதலால் நாணிறந்து படுவதே நன்றென்றற்கு "நான் சாவேன் சாவேன்" எனறிரங்கினாராயிற்று, மலர்தூவல் காயத்தின்றொழில், அலறுதல் வாக்கின்றொழில், உருகுதல் மனத்தின்றொழில், உன்னைமுக்கரணங்களானும் வழிபடல்வேண்டுமென்பது கருத்து. (கஅ)

வேனில்வேண் மலர்க்கணைக்கும் வெண்ணகைச் செவ்
வாய்க்கரிய, பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும்
பாழ்நெஞ்சே,ஊனெலா நின்றுருகப் புகுந்தாண்டானின்
றுபோய், வானுளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே.

ப - ரை. வேனில்வேள் - வசந்தகாலமன்மதனது, மலர்கணைக்கும் - புஷ்பபாணங்களுக்கும், வெள்நகை - வெள்ளிய பற்களையும், செவ்வாய் - செவந்த அதரத்தையும், கரியபானல்ஆர் - கருங்குவளை மலரின்தன்மை பொருந்திய, கண்ணியர்க்கும் - கண்களையுமுடைய மாதர்களுக்கும், பதைத்து உருகும் - துடித்துருகாநின்ற, பாழ்நெஞ்சே - பாழ்மனமே, ஊன்எல்லாம் - உடம்பு முழுதும், நின்றுஉருக - உருகிநிற்க, புகுந்து - (நாமிருக்குமிடம் தேடி) வந்து, ஆண்டான் - எம்மையாண்டருளின இறைவன், இன்றுபோய் - இன்று சென்று,வான்உளான் - பரமாகாயத்திலிருக்கின்றனன்,(அதை நினைந்து) நீமாளாது - நீ இறந்துபடாமல், வாழ்கின்றாயே - உயிர்வாழ்கின்றனையே. எ - று.

க - ரை. நெஞ்சமே; மலர்க்கணைக்கும் மாதர்க்கும் பதைத்துருகாநின்ற நீ இறைவனது பிரிவுக்காற்றாதுருகி யிறந்து பட்டாயில்லையாதலால் நீ பயனடையா தொழிகின்றனையென்பதாம்.

வி - ரை. காணாய் - முன்னிலையசை. மன்மதனுக்கு வேனிற்காலம் மிகச் சிறந்ததாகையால் "வேனில்வேள்" என்றார். மன்மதன் பாணங்கள் ஐந்து அவை - தாமரை, மா,அசோகு, முல்லை, நீலம் என்பன. இவற்றைமுறையே உந்மத்தம்,மதநம்,சம்போகம், சந்தாபம், வசிகரணம் என்பர் வடநூலார். இவை போய்ப்படும்

இடங்கள்முறையே நெஞ்சு, தனம், விழி, சிரம், குய்யம் என்பன. இவைசெய்யும் அவத்தைகள், முறையே நினைப்புண்டாதல்,பசலை போர்த்தல், உண்டிவெறுத்தல், கிடத்தல், இறத்தல் என்பன. இவற்றை சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பர் வடநூலார். இவற்றின் விரிவெல்லாம் மதனாகமங்களிற் காண்க. நின்றுருக என்பதனை உருகிநிற்க எனமாறுக. இன்றுபோய் வானுளான் என்றமையால் ஆண்டது அன்று என்பது பெறப்பட்டது. அது திருப்பெருந்துறையில் குருந்தமர நிழலில் குருமூர்த்தமாயெழுந்தருளி யாட்கொண்டநாள். இறைவனைக் காணாது உயிர்வாழ்கின்றமையால் பாழ்நெஞ்சே யென்றார். இறைவன் ஆகாயத்தில் மறைந்தமையால் வானுளான் என்றார். மாளாது என்பது மாளா என ஈறுதொகுத்தலாயிற்று. மன்மதன் பாணப்பிரயோகஞ் செய்த பின்னர் உயிர்களுக்கு மாதர் மேல் விருப்பமுண்டாதல்இயல்பாதலால், "வேனில்வேண் மலர்க்கணைக்கும் வெண்ணகைச் செவ்வாய்க்கரிய பானலார் கண்ணியர்க்கும்" எனக்காரண காரியமுறை பிறழாது வைத்தார். (ககூ)

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றா யாழாமற் காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக் கடலாய வெள்ளத்தே.

ப - ரை. வாழ்கின்றாய் வாழாத - நித்தியவாழ்வினையுடையையாகி வாழாத, நெஞ்சமே - மனமே, வல்வினைப்பட்டு - வலியவினையி லகப்பட்டு, ஆழ்கின்றாய் - அழுந்துகின்றனை, ஆழாமல்- அழுந்தாமல், காப்பானை - நம்மை யெடுத்தாண்டருள்வானை, ஏத்தாதே - துதியாதே, உனக்குக் கேடுசூழ்கின்றாய் - உனக்குக் கேடு பயக்கும் வினையையே எண்ணுகின்றனை, பல்காலும் சொல்கின்றேன் - பலமுறையும் நான் சொல்லாநின்றேன், (அவ்வாறு சொல்லியும்)அவலக்கடல் ஆயவெள்ளத்து - துன்பமாகிய சாகரத்தில், நீ வீழ்கின்றாய் - நீ விழுந்தழுந்துகின்றனை. எ - று.

க - ரை. நெஞ்சமே, யான் வற்புறுத்திச் சொல்லியும் இறைவனை வழிபட்டுய்யாமல் உனக்கு நீயே கேடுசூழ்ந்து துன்பக் கடலில் விழுந்து அழுந்துகின்றாய், உன் அறியாமைக்கு நான் என் செய்வேன் என்பதாம்.

வி - ரை. ஆழ்கின்றாய் ஆழாமல் என்னும்வினைகளுக்கேற்ப வினையைக் கடலாக்கியுரைக் கலாயிற்று. கேடுசூழ்தல்-கேடடைய நினைத்தல். வாழ்கின்றாய் - முற்றெச்சம். (உ0)

## ௩-வது சுட்டறுத்தல்.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையினேற்கே.

ப - ரை. வெள்ளம்தாழ் - கங்கை தங்குதற்குப் போதுமான, விரி சடையாய் - படர் சடையை யுடையவனே, விடையாய் - இடபவாகனத்தையுடையவனே, விண்ணோர்பெருமானே - தேவர் பிரானே, என - என்று உன் மெய்யடியார்சொல்ல, கேட்டு - கேட்டு, வேட்டநெஞ்சுஆய் - விருப்பங்கொண்ட மனமுடையராய், பள்ளம்தாழ்உறுபுனலின் - பள்ளத்திற்சென்று வீழ்கின்ற நீர் போல, கீழ்மேல் ஆக பதைத்து - கீழ்மேலாம்படி பதைத்து, உருகுமவர் நிற்க - உருகாநின்றவர்களிருக்க, என்னை ஆண்டாய்க்கு - என்னையாண்டருளின வுன்பொருட்டு, உள்ளந்தாள்நின்று-உள்ளங்கால்முதல், உச்சிஅளவும்-உச்சிவரையும், நெஞ்சுஆய்-நெஞ்சின்றன்மையடைந்து, உருகாதால் - உருகாமையாலும், உடம்பு எல்லாம் - உடல் முழுதும், கண்ஆய் - கண்களாகப் பெற்று, அண்ணா - நெருங்கமுடியாத, வெள்ளம்பாயாதால் - நீர்பெருகிப் பாயாமையாலும், தீவினையினேற்கு - தீவினையையுடைய எனக்கு, நெஞ்சம் கல்ஆம் - மனம் கல்லாகும், கண் இணையும் - இருகண்களும், மரம் ஆம் - மரமாகும். எ - று.

க - ரை. உன்மெய்யன்பரிருக்க என்னைத் தடுத்தாட்கொண்ட உன்பெருங்கருணையை நினைந்து மனமுருகிக் கண்ணீர் பெருக்கேன், இதற்குக் காரணம் என் தீவினையேயாம் என்பதாம்.

வி - ரை. கீழ்மேலாதல் - முறைமாறல். கல்லாம் மரமாம் என்றமையால் ஒப்பிட்டதன்று, கல்லாவியன்றதேயாம், மரத்தானியன்றனவே யாம் என்றாராயிற்று. அண்ணா விளி யெனினுமாம். உரியாரிருக்க உரிமையிலேனை யாண்டருளினவுன் பெருங்கரு

ணையை நினைந்துருகச் சிறிய இடத்தையுடைய இந்த நெஞ்சும் பற்றாது நீர் பெருக்க இந்த இரண்டு கண்களும் பற்றா என்றற்கு, "உள்ளந்தாணின் றுச்சியளவு நெஞ்சாய்" எனவும், "உடம்பெல்லாங்கண்ணாய்" எனவும் கூறினார். வெள்ளம் இங்கு கங்கையை யுணர்த்திற்று. அது அடங்குதற்குரிய இடமுடையது என்றற்கு "தாழ் விரிசடையாய் என்றார். சடையாய், விடையாய், பெருமானே என்று பிறர் கூறக் கேட்டலும் மன்முருகாநின்ற அடியாரிருக்க,சிறியேனை ஆண்டருளின உன்பெருங்கருணையை நினைந்து உள்ளங்கால்முதல் உச்சியளவும் நெஞ்சாகப்பெற்றுருக வேண்டும், உடம்பெல்லாம் கண்களாகப் பெற்று நீர் பெருக்கவேண்டும், அப்படி செய்யாமையால் என் மனம் கல்லாற் செய்யப்பட்டதே, என் கண்கள் மரத்தாற் செய்யப் பட்டனவே யென்றாராயிற்று.

சிவபெருமான் தமது சடையில் கங்கை வைத்தருளிய வரலாறு:—சூரியவமிசத் தரசர்களில் ஒருவனாகிய பகீரதன் கபில முனிவருடைய சாபத்தால் சாம்பராய்ப்போன தமது மூதாதைகள் நற்கதி யடையும்பொருட்டுத் தவஞ்செய்து சுவர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டு வருகையில் அதன் வேகத்தைத் தடுப்பதற்காகச் சிவபெருமான் தமது சடையில் அதை வைத்தருளினர் என்பது. (உக)

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேட னென்பாய் போல
இனையனா னென்றுன்னை யறிவித் தென்னை
யாட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை
அனையநான் பாடேனின் றாடே னந்தோ
வலறிடே னுலறிடே னாவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயி னானே.

ப - ரை. வினையிலேகிடந்தேனை - வினைக்கயிற்றிற் பிணிப்புண்டு கிடந்த என்னை, புகுந்து - வலாத்காரமாய் வந்து, நின்று - நிலைபெற்றிருந்து; போது - வா, நான்வினைக்கேடன் - நான் பாவநாசன், என்பாய்போல - என்று சொல்வாய்போல, நான் இனையன் - நான் இத்தன்மையேன், என்று - என்று, உன்னை அறிவித்து - உன்னை யுள்ளவாறெனக்குணர்த்தி, என்னை ஆட்கொண்டு - என்னை யடிமைகொண்டு, எம்பிரான் ஆனாய்க்கு - எம்பெருமானாகிய வுன்பொருட்டு, இரும்பின்பாவைஅனையநான் -

இருப்புப்பாவைபோன்ற யான், பாடேன் - பாடுதல் செய்யேன், நின்றுஆடேன் - நின்று ஆடுதல் செய்யேன், அந்தோ - ஐயோ, அலறிடேன் - அரற்றுதல் செய்யேன்,உலறிடேன் - வாய்வெருவுதல்செய்யேன், ஆவிசோரேன் - உயிர்வாடுதல்செய்யேன், முனைவனே - முன்னோனே, முறையோ - முறையோ, நான்ஆனஆறு - நான் இப்படியுளனாயிருக்கு முறைமையின், முடிவு அறியேன் - முடியுமாறு அறிந்திலேன், முதல் அந்தம் ஆயினானே - முதலும் இறுதியுமாயிருப்பவனே. எ - று.

க - ரை. வலியவந்து என்னையும் உன்னையும் எனக்குணர்த்தி என்னையடிமைகொண்ட உன்னைப்பாடுதல் முதலாயின செய்யேன், நான் ஆம்வழியும் அழியும்வழியும் அறியேன், உனக்கே அபயம் என்பதாம்.

வி - ரை. "இருவினைப்பாசக்கயிற்றின்வழி" எனப்பிறவிடத்து மிவ்வாறு கூறப்படுதலின் வினையைக் கயிறாக்கியும், கிடந்தேனை யென்புழிச் செயலறுதி பெறப்படுதலின் பிணிப்புண்டு கிடந்த என்னையெனவும் உரைக்கலாயிற்று. முதலந்தமாயினானே என்பதற்கேற்ப,"முன்னவன் பின்னவன்" என்றார் திருக்கோவையாரினும். இரும்பின்பாவை - இரும்பினாற்செய்யப்பட்ட பாவை. உலறுதல் - வற்றுதல் எனினுமாம். (உஉ)

ஆயநான் மறையவனு நீயே யாத
லறிந்தியா னியாவரினுங் கடைய னாய
நாயினே னாதலையு நோக்கிக் கண்டு
நாதனே நானுனக்கோ ரன்ப னென்பேன்
ஆயினே னாதலா லாண்டு கொண்டா
யடியார்தா மில்லையே யன்றி மற்றோர்
பேயனே னிதுதானின் பெருமை யன்றே
யெம்பெருமா னென்சொல்லிப் பேசு கேனே.

ப - ரை. ஆய-ஆராயின், நான் மறையவனும்-நான்குவேதங்களாலும் சொல்லப்பட்டவனும், நீயேஆதல்அறிந்து - நீயேயாகியிருத்தலைத்தெரிந்துகொண்டு, யான்-நான், யாவரினும் கடையன் ஆய-எல்லாரினும் கடைப்பட்டவனாகிய, நாயினேன் ஆதலையும் - நாய்போல்பவனாயிருத்தலையும், நோக்கிக்கண்டு - ஆராய்ந்துபார்த்து,நாதனே - இறைவனே, நான் - அடியேன், உனக்கு - தேவரீருக்கு, ஓர்அன்பன் என்பேன் ஆயினேன் - ஒரு அன்பன் என்று நினைப்பேனாயினேன், ஆதலால் - ஆகையால், ஆண்டுகொண்டாய்-

ஆட்கொண்டருளினை, அன்றி - என்னை அல்லது, அடியார் இல்லையே - (உனக்குவேறு) அடியார்களில்லையோ, மற்று ஓர் பேயனேன் - நான் வேறொரு பேயின்தன்மை யுடையேன், இதுதான்- (இப்படிப்பட்ட என்னையடிமைகொண்ட) இந்நீர்மையே, நின் பெருமைஅன்றே - உன்பெருமை அல்லவா, எம்பெருமான் - எம் பெருமானே, என் சொல்லிப் பேசுகேன் - (உன் பெருமையை) என்னென்றுசொல்லித் துதிப்பேன். எ - று.

க - ரை. நான்குவேதப் பொருளாயிருப்பவன் நீயென்பதையும், எல்லாரினும் இழிந்தவன் நான் என்பதையும் அறிந்து உனக்கு நானும் ஓரடியவன் என்றெணுதலால் ஆண்டுகொண்டனை. அத்தனையேயன்றி உனக்கு அடியாரில்லாத குறையினு லன்று. உன்பெருங்குணத்தைக்குறித்து நான் யாதுசொல்லிப் புகழ்வேன் என்பதாம்.

வி - ரை. நான்மறையவன் - வேதியன் எனினுமாம். இறைவன் பிராமண வடிவங்கொண்டுவந்து இவரை யாட்கொண்டருளின செய்தி இவரது புராணத்தால் நன்கு விளங்கும். மற்றோர் பேயன் என்றது மாநுடவுருக்கொண்ட பேயன் என்றபடி. பேய் அன்னேன் எனப்பிரித்துப் பேயையொப்பேன் எனினுமாம். பேயனேனுதலால் உன் பெருமையையும் என் சிறுமையையும் அறிந்திலேன் என்றாராயிற்று. என் சொல்லிப் பேசுகேன் என்றது இறைவனது நீர்மை மேன்மைகள் ஒருவராலெடுத்துப் பேசுதற் கியையாவென்ப துணர்த்தற்கு. இது, "அவன்பூங்கழல் பேசத்திருவார்த்தையிற் பெருநீளம்" என்னும் திருக்கோவையார்வாயிலானும் உணரப்படும். மறை - அந்தணரல்லாதார்க்கு மறுக்கப்பட்டது, அறமுதலிய நாற்பொருளும் மறைந்திருத்தற் கிடமாயிருப்பது எனினுமமையும். நான்மறையவன் என்பதற்குப் பிரமன், எனப்பொருள் கூறுதல் ஒருசிறிதும் பொருத்தமின்று. ()

பேசிற்று மீசனே யெந்தா யெந்தை
பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்றுன் றிருநீறே நிறையப் பூசிப்
போற்றியெம் பெருமானே யென்று பின்று
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
யாண்டானே யவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே யெந்தா யந்தோ
வென்னைநீ யாட்கொண்ட வண்ணந் தானே.

ப - ரை. பேசில் - பேசப்புகின், ஈசனே - சர்வேசுவரனே, எந்தாய் - என்தந்தையே, என் தந்தை பெருமானே - எந்தைக்கும் பெரியோனே, என்றுஎன்றே பேசிபேசி - என்று பலகாற்பேசி, பூசின்-பூசப்புகின்,திரு நீறேநிறைய பூசி-திரு நீற்றையே உடம்பு முழுதும்பூசி, போற்றி - நமஸ்காரம், எம்பெருமானேயென்று - எம்மிறைவனேயென்று, பின்றாநேசத்தால் - பின்னிடாத அன்பினால், பிறப்பு இறப்பை - பிறப்பிறப்புக்களை, கடந்தார்தம்மை - தாண்டினவர்களை, ஆண்டானே-ஆண்டருளினவனே, மாசுஅற்ற-குற்றமற்ற, மணிக்குன்றே - மாணிக்கமலையே, எந்தாய் - எந்தையே, அந்தோ - ஐயோ, அவாவெள்ளம் - ஆசைக்கடலிலமிழ்கின்ற, கள்வனேனை - சோரனாகிய என்னை, நீ ஆட்கொண்டவண்ணம் - நீ யாட்கொண்டருளினபிரகாரம், என்னே - என்ன. எ - று.

க - ரை. இறைவனே, அன்பரை யாண்டருளும் இயல்பினையுடைய நீ, அன்பில்லாத வென்னை யாண்டருளினது வியக்கத் தக்கதாயிருக்கின்றது என்பதாம்.

வி - ரை. தம்மைக்கள்வனென்றது - இறைவனது பொருளாகிய ஆன்மாவைத் தாமாகவும் உடம்பைத்தமதாகவுங் கருதியிருத்தலானென்க.நேசத்தால் என்பதில் ஆல்கருவிப்பொருட்டு.ஈசன்-ஐசுவரியத்தையுடையவன். ஐசுவரியமாவது எல்லாவுலகங்களையும் தன்னுடைமையாகப்பெற்று, அவற்றைத் தான் உடையவனாயிருத்தல். பின்றல் - பின்னிடல். அன்பையே பற்றுக்கோடாகக்கொண்டு பிறப்பிறப்பைக் கடந்தவராதலால் அன்பரை "நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார்" என்றார். அந்தோ - அதிசய விரக்கச்சொல். (உச)

வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்ற
னேகனேக னணுவணுவி லிறந்தா யென்றங்
கெண்ணந்தான் றடுமாறி யிமையோர் கூட்ட
மெய்துமா றறியாத வெந்தா யுன்றன்
வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டா
யெம்பெருமா னென்சொல்லிச் சிந்திக் கேனே.

ப - ரை. வண்ணந்தான் - நிறந்தான், சேயதுஅன்று - செவந்தது அல்ல, வெளிதே - வெள்ளிதா, அன்று - அதுவுமல்ல,

அநேகன் - பலவாயிருப்பவன், அணு - அணுரூபமா யிருப்பவன், அணுவில் இறந்தாய் - அணுவினுமிகச் சிறியை, என்று - என்று பலவாறு வாயாற்சொல்லி, அங்கு - அவ்வாறே, எண்ணம் தடுமாறி - நினைவுந்தடுமாறி, இமையோர் கூட்டம் - தேவர் குழாங்கள், எய்தும்ஆறுஅறியாத - உன்னையடையும்வழி யின்னதென்றறியப்படாத, எந்தாய் - எந்தையே, உன்றன் வண்ணம் அது காட்டி - உன்வண்ணமாகிய அதனைக்காட்டி, வடிவுகாட்டி - திருவுருவைக் காட்டி, மலர்க்கழல்கள் அவைகாட்டி - தாமரைமலர் போன்ற திருவடிகளாகிய அவைகளைக்காட்டி, வழிஅற்றேனை - உய்யும்வழியில்லாத என்னை, திண்ணந்தான் - திடமாகவே, பிறவாமல் - பிறவாத வண்ணம், காத்து - தடுத்து, ஆட்கொண்டாய் - அடிமைகொண்டாய், எம்பெருமான் - எம்மிறைவனே, என்சொல்லிசிந்திக்கேன் - உன்பெருங்கருணையை என்னென்று வாயாற்சொல்லி மனத்தாற் சிந்திப்பேன். எ - று.

க - ரை. தேவர்கள் உன் நிறம் முதலானவற்றை அறியாமல் தடுமாறி நிற்க, என்னைத் தடுத்தாட்கொண்டனையே உன்னைக்குறித்து என்னென்று புகழ்வேன், என்னென்று நினைப்பேன் என்பதாம்.

வி - ரை. அறியாதவண்ணம் என இயையும். அது அவை எனச் சேய்மைச்சுட்டாற் கூறினர், அவற்றின்பெருமை யறிவரிதென்றற்கு. எண்ணம் என மேல் வருவதால் என்று என்பதற்கு வாயாற்சொல்லியெனப் பொருளுரைக்கப்பட்டது. இமையோர் கூட்டம் எய்துமாறறியாதாயின், யானறிய வல்லேனோ, அல்லேன், ஆயினும், எந்தாயும் எம்பெருமானுமா யுள்ளையாதலால், உன்றன் வண்ணமுதலானவற்றைக் காட்டித் தடுத்தாட்கொண்டாயென்பது கருத்து. வண்ணம் இறைவனது திவ்யான்மசொரூபம். வடிவு - அருளிறையா யெழுந்தருளின காலத்துக் கொண்ட மாநுடத் திருவுரு. (௨௫)

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் றிருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.

ப • ரை. நாயினேன்தன் - நாயினேனது, சிந்தனை - சிந்தனையை, நின்தனக்காக்கி - உன்விஷயமாக்கி, கண்ணிணை - கண்களிரண்டையும், நின்திருப்பாதப்போதுக்கு ஆக்கி - உன்திருவடிமலரின்விஷயமாக்கி,வந்தனையும்-வணக்கமும்,அம்மலர்க்கேஆக்கி-அந்தத்திருவடிமலரின் விஷயமேயாக்கி, வாக்கு - வாக்கை, உன் மணிவார்த்தைக்கு ஆக்கி - உன்திருவார்த்தையின் விஷயமாக்கி, ஐம்புலன்கள்ஆர - என்னுடைய ஐம்புலன்களானும் நுகரும்படி, வந்தனை - வந்து, ஆட்கொண்டு - அடிமை கொண்டு, உள்ளே புகுந்த - என்மனத்திற்பிரவேசித்த,விச்சை - வித்தையையுடைய, மால் - யாவரும் விரும்பி மயங்குதற்குரிய, மால் அமுதக்கடலே-பெரிய அமிர்தசாகரமே, மலையே - பொன்மலையே, செந்தாமரைக்காடு அனையமேனி - செந்தாமரை மலர்க்காட்டையொத்த திருமேனியையுடைய, தனிச்சுடரே - ஒப்பற்றவொளியே, இரண்டும் இல் - இகபரமிரண்டுமற்ற, இத்தமியனேற்கு - இந்தத் தமியேனுக்கு, உன்னைத்தந்தனை - உன்னைக்கொடுத்தாய் (உன்பெருங்கருணையிருந்தவாறு என்). எ - று.

க - ரை. கடவுளே, இருமைவகைதெரியாத என்மனம் முதலியவற்றை உனக்குரியனவாகச்செய்து என்னைஅடிமைகொண்ட உன்பெருங்குணத்தை என்னென்று புகழ்வேன் என்பதாம்.

வி - ரை. ஐம்புலன்களார வந்தனை என்றது, ஐம்பொறிகளானும் நுகர்தற்குரியதாகிவந்த அருளிறைவடிவத்தை. இரண்டுமிலேற்கு, தன்னைத்தந்து என்னுட் புகுந்ததொரு மாயவித்தையேயென்பார், "உள்ளேபுகுந்த விச்சை"என்றார். அமுதக்கடல் - பாற்கடலென்றலு மொன்று. திருமுகமுதலியவை செந்தாமரை மலர்கள்போலுதலால்"செந்தாமரைக்காடுஅனையமேனி"என்றார். மலையென்றது சலிப்பின்மைநோக்கி. திருவார்த்தை - இறைவனது கல்யாணகுணப்ரஸ்தாபம். என் மனம் உன்னையே நினைக்கும்படி செய்க என்றற்குச் "சிந்தனை நின்றனக்காக்கி" என்றும். என் இரு கண்களும் உன் திருவடியையே நோக்கச் செய்க என்றற்கு "கண்ணிணை நின்திருப்பாதப்போதுக்காக்கி" என்றும், அத்திருவடியையே நான் வணங்கச்செய்க என்றற்கு "வந்தனையு மம்மலர்க்கேயாக்கி" என்றும், என்வாய் உன் திருவார்த்தையையே பேசச்செய்க என்றற்கு "வாக்குன்மணி வார்த்தைக்காக்கி" என்றும் கூறியருளினர். புலன் என்றது இங்குப் பொறிக்காயிற்று. பொறி ஐந்து-அவை மெய்,வாய்,கண்,மூக்கு,செவிஎன்பன•இவை ஐந்தினும் இறைவனை நுகர்தலாவது தீண்டல், சுவைத்தல்,

காண்டல், கந்தித்தல், கேட்டல் என்பனவற்றால் அநுபவித்தல். வந்தனை என்பது வந்து எனப்பொருள் படுதலால் முற்றெச்சம். நா ஒன்றற்கே இனிமைதரும் அமுதக்கடலை இழித்தற்கும், ஐம் பொறிகளுக்கும் மனத்துக்கும் இனிதாதலை உணர்த்தற்கும் "மால முதப் பெருங் கடலே" என்றார். ஒளியுடைப் பொருள்கள் எல்லாவற்றினு மிக்க ஒளியுருவன் ஆதலால், "தனிச்சுடரே" என்றார். (உ௬)

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
 தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
 கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
 யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
 கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே.

ப - ரை. தனியனேன் - தனியேன்ஆகி, பிறவி - பிறவியாகிய, பெரு பௌவத்து - பெருங்கடலில், எவ்வம் - இருவினைத் துன்பமாகிய, தடம்திரையால் - பேரலைகளால், எற்றுண்டு-அறையப்பட்டு, பற்றுஒன்றுஇன்றி - ஆதாரம் ஒருபொருளுமில்லாமல், கனியைநேர் - கொவ்வைக்கனியை நிகர்த்த, துவர்வாயார் என்னும் - செவ்வாய்ச்சியராகிய மாதரென்கிற, காலால் - பெருங் காற்றால், கலக்குண்டு - கலக்கப்பட்டு, காமம் - காமமென்கிற, வான்சுறவின் - பெருஞ்சுறாவினது, வாய்ப்பட்டு-வாயிலகப்பட்டு, இனிஉய்யும்ஆறு என்னே - இனி உய்யும்வழி யாதோ, என்று என்று எண்ணி - என்று பலமுறை சிந்தித்து, அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேன் - ஸ்ரீபஞ்சாக்ஷரமாகிய மரக்கலத்தைப் பற்றிக்கொண்டு கிடக்கின்றேன், மூர்க்கனேற்கு - (வேறு சற்குணங்கள் சிறிதுமில்லாத) மூர்க்கனாகிய எனக்கு, ஐ- அழகிய, முனைவனே-தலைவனே, முதல் அந்தம் இல்லா - முதலிறுதிகளில்லாத, மல்லல் - வளம்பொருந்திய, கரை - மோக்ஷக்கரையை, காட்டி ஆட்கொண்டாய் - காட்டி யடிமைகொண்டருளினாய், (நின்பெருங்கருணை யிருந்தவா றென்) எ - று.

க - ரை. தனியனாய்ப் பிறவிப் பெருங்கடலில் விழுந்து, பல வகைத்துன்பங்களாகிய அலைகளால் எறியப்பட்டு, மற்றொருதவியுமின்றி மாதர்என்னும்பெருங்காற்றாற் கலங்கி,காமமாகிய பெரு

ஞ்சுறவின் வாயிற்சிக்கி, இனிப்பிழைக்கும்வழி யாதென்று சிந்தித்து, உன் * ஐந்தெழுத்தாகிய புணையைப் பற்றிக் கிடக்கின்ற என்னை முத்தியாகிய கரையிலேற்றி யருளினை என்பதாம்.

வி - ரை. பிறவிப்பெரும் பௌவம் என்பதைப் "பிறவிப் பெருங்கடல்" என்றார் தேவரும். வாய் - அதரம். அஞ்செழுத்தின் என்பதில் இன் அல்வழிச் சாரியை. திரையாலெற்றுண்ணல் முதலியவற்றால் தளர்ந்திருப்பவனாதலால், புணைபிடித்தன் மாத்திரையேயன்றி அதனைச் செலுத்தும் வலியின்றிக்கிடந்தேன் என்றற்குப் "புணைபிடித்துக் கிடக்கின்றேன்" என்றார். முத்தியினுமிக்க தொன்றின்மையின், மல்லற்கரை யாயிற்று. மூர்க்கனேற்கு முத்திக்கரை காட்டல் சுதந்திரனாகியஉனக்கன்றி யேனையர்க்குக் கூடாதென்றற்கு "முனைவன்" என்றார். மரமுதலியவற்றாற் செய்யப்பட்ட புணையைப் பிறரெல்லாம் பற்ற, நான் எழுத்தாற் செய்யப்பட்ட புணையைப்பற்றினேனென்று தமக்குப் பஞ்சாக்ஷரத்திலுள்ள மன வுறுதியை வெளியிட்டவாறு காண்க. முத்திக்கு உற்பத்தி நாசங்கள் இல்லாமையால், அதனை "முதலந்தமில்லா" என்றார். ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகிய புணையைப் பிடித்தல் ஒன்றேயன்றி, இறைவனடியார்க்குரிய இலக்கணங்கள் முற்றும்நிரம்பப் பெற்றிலேன் என்றற்கு"மூர்க்கனேற்கு" என்றார்.()

---

* உயிர்களுக்கு நற்றுணையாய் எல்லா நன்மைகளும் செய்ய வல்லது ஸ்ரீ பஞ்சாக்ஷரமென்பதற்கு வாகீசர் திருப்பதிகம் இங்கு எடுத்துக் காட்டப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணை திருந்தடிபொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவதுநமச்சிவாயவே. (௧)

பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை
யாவினுக்கருங்கலம்அரனஞ்சாடுதல்
கோவினுக்கருங்கலம்கோட்டமில்லது
நாவினுக்கருங்கலநமச்சிவாயவே. (௨)

விண்ணுறவடுக்கியவிறகின்வெவ்வழ
லுண்ணியபுகிலவையொன்றுமில்லையாம்
பண்ணியவுலகினிற்பயின்றபாவத்தை
நண்ணிநின்றறுப்பதுநமச்சிவாயவே, (௩)

இடுக்கண்பட்டிருக்கினுமிரந்தியாரையும்
விடுக்கிற்பிராரென்றுவினவுவோமல்லோம்
அடுக்கற்கீழ்க்கிடக்கினுமருளினுமுற்ற
நடுக்கத்தைக்கெடுப்பதுநமச்சிவாயவே. (௪)

வெந்தநீறருங்கலம்விரதிகட்கெலா
மந்தணர்க்கருங்கலமருமறையாறங்கந்
திங்களுக்கருங்கலந்திகழுநீண்முடி
நங்களுக்கருங்கலநமச்சிவாயவே.

சலமிலன்சங்கரன்சார்ந்தவர்க்கலால்
நலமிலனுடொருநல்குவானலன்
குலமிலராகிலுங்குலத்திற்கேற்பதோர்
நலமிகக்கொடுப்பதுநமச்சிவாயவே. (௬)

வீடினருலகினில்விழுமியதொண்டர்கள்
கூடினரநெறிகூடிச்சென்றலு
மோடினேனுடிச்சென்றுருவங்காண்டலு
நாடினேனுடிற்றுநமச்சிவாயவே. (௭)

இல்லகவிளக்கதுவிருள்கெடுப்பது
சொல்லகவிளக்கதுசோதியுள்ளது
பல்லகவிளக்கதுபலருங்காண்பது
நல்லகவிளக்கதுநமச்சிவாயவே. (௮)

முன்னெறியாகியமுதல்வன்முக்கணன்
தன்னெறியேசரணுதல்திண்ணமே
யந்நெறியேசென்றங்கடைந்தவர்க்கெலாம்
நன்னெறியாவதுநமச்சிவாயவே. (௯)

மாப்பிணைதழுவியமாதோர்பாகத்தன்
பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழ
நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
 கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
 நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே

காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
 கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டா
 னெம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.

ப - ரை. ஆரும் - யாரும், கேட்டு அறியாதான்-கேட்டறியாதவன், கேடொன்று இல்லான் - கேடுசிறிதுமில்லாதவன், கிளைஇல்லான் - உறவினரில்லாதவன், கேளாதே - கேளாமலே, எல்லாம் கேட்டான் - எல்லாவற்றையும் கேட்டவன், நாட்டார்கள் விழித்திருப்ப - நாட்டிலுள்ளார் பார்த்திருக்க, ஞாலத்துள்ளே - உலகத்தில், நாயினுக்கு - நாய்க்கு, தவிசுஇட்டு - ஆசநமிட்டு, நாயினேற்கு - நாயினேனுக்கு, காட்டாதன எல்லாம்காட்டி - காட்டக்கூடாதவைகளையெல்லாம் காட்டி, பின்னும் - மேலும், கேளாதன எல்லாம் கேட்பித்து - கேட்கக்கூடாதவைகளை யெல்லாம் கேட்பித்து, என்னை - அடியேனை, மீட்டேயும் - மறுபடியும், பிறவாமல் - பிறவாவண்ணம், காத்து ஆட்கொண்டான் - தடுத்தாட்கொண்டான், எம்பெருமான் - எம்மிறைவன், செய்திட்ட - செய்தருளிய, விச்சைதான் ஏ - மாயவித்தைதா னென்ன வியப்பு. எ - று.

க - ரை. ஒருவராலும் கேட்டறியாதவனும், தனக் கொரு கேடில்லாதவனும், உறவில்லாதவனும், கேளாமலே எல்லாம் கேட்பவனும் ஆகிய இறைவன், என்சிறுமைநோக்காது நாய்க்குத் தவிசிட்டாற் போலத் தன்னருகிலிருத்தி, காட்டுதற்கரிய தன் உண்மை நிலையைக்காட்டி,நான் எக்காலத்திலுங் கேட்காத வேத சிவாகமங்களின் பொருள்களைக் கேட்பித்து, மீட்டும் நான் பிறவாமல் என்னைத்தடுத்தாட்கொண்டான், இது ஒருவித்தையே யாம் என்பதாம்.

வி - ரை. இறைவன் தன்னுண்மை நிலை முதலியவற்றைக் காட்டி, வேதசிவாகமாதிகளின் பொருள்களை யெல்லா முணர்த்தி, மீட்டும் பிறவாமல் தடுத்தாண்டமையால், "காட்டாதனவெல்லாங்காட்டிப் பின்னுங் கேளாதனவெல்லாங் கேட்பித்தென்னை மீட்டேயும் பிறவாமற் காத்தாட்கொண்டான்" என்றார். "நாயினுக்குத் தவிசிட்டு" என்றது இறைவனது பெருமையும் தமது சிறுமையும் தோன்றுதற்கென்க. ஒன்று - சிறிது என்னும் பொருளது. விழித்தல் - பார்த்தல். ஞாலம் - உலகு. தவிசு-ஆசநம். ஏ - வியப்பின்கண்வந்தது. (உஅ)

விச்சைதா னிதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாத லடியார்தம் மடிய னாக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டா னமுதூ றி
யகநெகவே புகுந்தாண்டா னன்பு கூர
வச்சனாண் பெண்ணலியா காச மாகி
யாரழலா யந்தமா யப்பா னின்ற
செச்சைமா மலர்புரையு மேனி யெங்கள்
சிவபெருமா னெம்பெருமான் றேவர் கோவே.

ப-ரை. கேட்கின்-கேட்குமிடத்து, இதுஒப்பது-இதைநிகர்ப்பதாகிய, விச்சைதான்உண்டோ-வித்தைதானுளதோ,மிகுகாதல்-மிக்கவிருப்பத்தை யுடைய,அடியார்தம்அடியன்ஆக்கி - அடியார்க்கடியனாக்கி, அச்சம்தீர்த்து - பிறவியச்சத்தைத் தவிர்த்து, ஆட்கொண்டான் - அடிமைகொண்டான், (மேலும்) அமுதம்ஊறி - அமுதஞ்சுரந்து, அகம்நெக - உள்ளுருக, புகுந்து - வலியவந்து, ஆண்டான் - ஆண்டருளினன், அன்புகூர - அன்புமிக, அச்சன்-சூக்ஷ்மரூபமாயுள்ளவன், ஆண் - ஆணுருவும், பெண் - பெண்ணுருவும், அலி - அலியுருவும், ஆகாசம் - ஆகாயமும், ஆகி - தானே ஆகி, ஆர்அழல்ஆய் - நிறைந்தஅக்கினியாகி, அந்தம்ஆய் - முடிவாகி, அப்பால்நின்ற - அப்பாலும் நிலைபெற்றிருந்த, செச்சை - வெட்சியினது, மா - அழகிய, மலர் - மலரை, புரையும் - நிகர்க்கின்ற, மேனி - திருமேனியையுடைய, எங்கள் சிவபெருமான் - எங்கள் சிவபிரான், எம்பெருமான் - எம்மிறைவன், தேவர்கோ - தேவர்பிரான். எ - று.

க - ரை. ஆண் பெண் அலி என்னும் உருவங்களில்லாதவனாய் ஐம்பூத வுருவினனாய், அவற்றுக்குக் காரணமாகிய மூலப்பகுதியால், அதனையும் கடந்துநின்ற சிவபெருமான் சிறியேனைத் தன்னடியனாக்கிப் பிறவித்துன்பம் நீங்கும்வண்ணம் ஆட்கொண்டருளி, என்மனமுருகும்படி அதனுள்ளே நுழைந்து நிலைத்திருந்தான். உலகத்தில் இதுபோன்ற வித்தையொன் றுண்டோ என்பதாம்.

வி - ரை. தேவர்கோ புகுந்தாண்டான் எனவியையும். கேட்கின் உண்டோ என்றவினா காணாமையேயன்றிக் கேளாமையையும் உணர்த்த வந்தது. அச்சம் - பிறப்பிறப்புத் துன்பத்துக்கஞ்சுதல். ஒருபொருள் கிடைத்தால் அதனை முந்தி அடுத்தவர்க்குக் கொடுத்துப் பிறகு தாம் நுகர்வது பெருங் குணத்தாரியல் பாத

லால், இறைவன் என்னைமுந்தித் தன்னடியார்க் கடியனாக்கிப் பிறகு தனக்காட்கொண்டான் என்றற்கு, "அடியார்தம்மடியனாக்கி யச்சந்தீர்த்தாட்கொண்டானமுதமூறியகநெகவே புகுந்தாண்டான்" என்றும், அடியார்க்குந் தமக்கும் பொருத்தந்தோன்ற, "அன்புகூர" என்றும் அருளிச்செய்தார். இவ்வாறே "தன்சீரடியார்குலம் பணிகொள்ள வெனைக் கொடுத்தோன்" என்று திருக்கோவையாரில் கூறுதலுங் காண்க. அந்தம் என்றது மூலப்பகுதியை. அப்பால் என்றது அதற்கப்புறத்ததாகிய முத்தியுலகை. நின்ற என்றதுஇறைவனது நிலைபேற்றையும்,அதனாலே முத்தியுலகினது நிலைபேற்றையும் உணர்த்தற்கு. மருமலர் - தாமரைமலர். "செந்தாமரைக் காடனையமேனி" என உகூ-ம் பாடலிற் கூறியதற்கும் இதற்கும் பொருத்த முண்மை காண்க. (உகூ)

தேவர்கோ வறியாத தேவ தேவன்
   செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
   மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
   யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்
மேவினோ மவனடியா ரடியா ரோடு
   மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே.

ப - ரை. தேவர் - சாமாநிய தேவர்களும், கோ - அவர்களுக்கிறைவனும், அறியாத - உணரக்கூடாத, தேவதேவன் - தேவர்பிரான், செழும்பொழில்கள் - செழுமையாகிய வுலகங்களை, பயந்து - சிருஷ்டித்து,காத்து - ரக்ஷித்து, அழிக்கும் அழிக்கின்ற, மற்றை - ஏனையோராகிய, மூவர் - மும்மூர்த்திகளுக்கும், கோன் ஆய் நின்ற - முதல்வனாய்நின்ற, முதல்வன்-முன்னோன், மூர்த்தி- அட்டமூர்த்தமாயிருப்பவன், மூதாதை - (எல்லோர்க்கும்) பாட்டன், மாதுஆளும் பாகத்து - உமாதேவியாலாளப்படுகின்ற பங்கினையுடைய, எந்தை - எமதுதந்தை, யாவர்கோன் - வேறுள்ள எல்லாருக்கும் தலைவன், வந்து - (இப்படிப்பட்ட பெரியோன்) வலியவந்து, என்னையும் - மிகச் சிறியனாகிய என்னையும், ஆண்டு கொண்டான் - ஆண்டருளினன், (ஆகலால் இனி) யாம் - நாம், ஆர்க்கும் - எவர்களுக்கும், குடியல்லோம் - குடியடிமையல்லோம், யாதும் அஞ்சோம் - எதற்கும் அஞ்சோம், அவன் - அவ்விறைவனது, அடியார் அடியாரோடு - அடியார்க்கடியருடன், மேவினோம் - கூடினோம், மேன்மேலும் - மேலுமேலும், குடைந்து -

ஆநந்தசாகரத்திற் குளித்து, ஆடிஆடுவோம் - பலகாலும் கூத்தாடுவோம், எ - று.

க - ரை. இறைவன் தானே யெழுந்தருளி என் சிறுமை கருதாது என்னைத் தடுத்தாட்கொண்டமையால் இனி நாம் யார்க்கும் குடிகளல்லோம்; எதற்கும் அஞ்சோம்; அவனது அடியார்க்கடியாரோடு சேர்ந்தோம்; மேன்மேலும் ஆநந்தக்கடலில் குடைந்தாடுவோம் என்பதாம்.

வி - ரை. மூவர் - பிரம விட்டுணு உருத்திரர்கள். கோன் - தலைவன். பாகம் என்றாராயினும் இடப்பாகமெனக் கொள்க, மாதாளும் பாக மதுவாதலால். யாது மஞ்சோம் என்பதற்குச் சிறிது மஞ்சோம் எனினுமமையும். (௩௦)

## ச - வது ஆத்துமசுத்தி.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென் புருகிப், பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர், சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே, தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே.

ப-ரை. உடையான் கழற்கு - உடையவனது திருவடியையடைதற்பொருட்டு, கூத்துஆடுகின்றிலை - கூத்தாடாநின்றனையில்லை, அன்புஇல்லை - அக்கூத்துக்குக் காரணமாகிய அன்புஉன்னிடத்துடையாயல்லை, என்பு உருகி - எலும்பு நெகிழப் பெற்று, பாடுகின்றிலை - பாடுதலுஞ் செய்திலை, பதைப்பதும் செய்திலை - பதைத்தலுஞ் செய்தாயில்லை, பணிகிலை - பணிகின்றாயில்லை, பாத மலர் - இறைவனது பாத தாமரை மலரை, சூடுகின்றிலை - தரிக்கின்றாயில்லை, சூட்டுகின்றதும் இல்லை - அத்திருவடிகளுக்குப் (பூமாலைகளை) சூட்டுவதும் செய்தா யில்லை, துணையிலி - (பேதைமையில்) இணையிலியாகிய, பிணநெஞ்சே - சவமனமே, தேடுகின்றிலை-(அவ்விறைவன் எங்குளனென்று) தேடுதல் செய்தாயில்லை, தெருவுதோறு - தெருக்கள்தோறும், அலறிலை - அலறித்திரிந்தாயில்லை, (எனக்குத் துணையாயிருத்தற்குரிய நீ யிவ்வாறாயினபின்) செய்வதுஒன்று அறியேன் - (உய்வதற்குச்) செய்ய அடுப்பதாகிய ஒருபாயமு மறிந்திலேன் யான். எ - று.

க-ரை. நெஞ்சே இறைவனது திருவடிக்கு அன்புசெய்கின்றிலை அவ்வன்பின் மிகுதியால் கூத்தாடுதல் முதலியவுஞ் செய்கின்றிலை, நீ இப்படியானபின்பு நான்செய்யும் வகை யொன்றும் அறிந்திலேன் என்பதாம்.

வி-ரை. ஆடுதல் முதலிய காரியங்கள் அன்புகாரணமாக நிகழ்வன வாதலால் காரணத்தை முன் வைக்கவேண்டியிருக்க "ஆடுகின்றிலை" எனக் காரியத்தை முற்கூறினது செய்யுள்நடையாதலாலும் அந்தாதித் தொடையாதலாலும் என்க. "பாதமலர் சூடுகின்றிலை' என்பதற்குத் திருவடியில் அன்பரிட்ட மலரைச் சூடுகின்றிலை யென்றுரைத்தலுமாம். திருவடியாகிய மலரில் மலரைச் சூட்டுதல் பொருத்தமாதலால் அதனை யடுத்துச் சூட்டுகின்றது மிலை என்றார். மேல் பிணநெஞ்சே யென்றாராதலால் துணை யிலி யென்றது இழிவினால் ஒப்பின்மையை விளக்கி நின்றது. பிணநெஞ்சேயென்றது பயனின்மையைக் குறித்தது. (ருக)

அறிவி லாதவெ னைப்புகுந் தாண்டுகொண் டறிவதை யருளிமேல், நெறியெ லாம்புல மாக்கிய வெந்தையைப் பந்தனை யறுப்பானைப், பிறிவிலாதவின் னருள்கள்பெற் றிருந்துமா றுடுதி பிணநெஞ்சே, கிறியெலாமிகக் கீழ்ப் படுத் தாய்கெடுத் தாயென்னைக் கெடுமாறே.

ப-ரை. அறிவுஇல்லாத-ஞானமில்லாத, என்னை - என்னை, புகுந்து ஆண்டுகொண்டு - வலியவந்தாண்டுகொண்டு, அறிவதை அருளி - ஞானத்தை யருள்செய்து, மேல்நெறி எல்லாம் - மேலாகிய மார்க்கங்களை யெல்லாம், புலம்ஆக்கிய - எனக்குப் புலப்படுத்திய, எந்தையை - எமது பிதாவை, பந்தனை அறுப்பானை - பிறவித்தளையைச் சேதிப்பவனை, பிறிவுஇல்லாத - நீக்கமற்ற, இன் அருள்கள் - இனிய திருவருள்களை, பெற்று இருந்தும் - அடைந்திருந்தும், மாறுடுதி - (சிந்தியாது) தடுமாறுகின்றாய், பிண நெஞ்சே - சவமனமே, கிறிஎல்லாம் - பொய்நடைக ளெல்லாம், மிக-மிகாநிற்க, என்னை கீழ்ப்படுத்தாய் - என்னைத் தாழ்வுபடுத்தினாய், கெடுமாறு கெடுத்தாய் - கெடும்வண்ணங் கெடுத்துவிட்டாய். எ - று.

க - ரை. அறிவில்லாத என்னைத்தானே வலியவந் தாண்டருளி மேலாகிய நெறிகளை யெல்லாம் எனக்குப் புலப்படுத்தினவனும், என் பிறவித்தளையை அறுப்பவனும் ஆகிய இறைவனை நினையாமல் மாறுபடுகின்றனை யாதலால் என்னைக் கெடுத்துவிட்டாய் என்பதாம்.

வி-ரை. மேல்நெறி யென்றது முத்திநெறியை. புலமாக்குதல் - அறிவித்தல், கிறி - பொய். கிறியெலாம் மிக என்றமையால் மெய்யெலாம் தாழ என்றாராயிற்று. கெடுமாறு கெடுத்தலாவது கெடுத்தற்குரிய வுபாயத்தாற் கெடுத்தல். என்னைக் கெடுத்து நீயும் கெடுகின்றனை யென்றற்குப் பிணநெஞ்சே யென்றிழித்துக் கூறினார். இறைவனது அருள் பெற்றும் இவ்வாறு நீமாறுதல் உனக்குத் தகுதி யன்றென்று வற்புறுத்தியவாறு. பலபடியாக அருள்செய்தமையால் அருள்கள் எனப் பன்மையாற் கூறினார். ()

மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையையெம் மதியிலி மடநெஞ்சே, தேறு கின்றில மினியுனைச் சிக்கெனச் சிவனவன் றிரடோண்மேல், நீறு நின்றது கண்டனையாயினு நெக்கிலை யிக்காயம், கீறு கின்றிலை கெடுவதுன்பரிசிது கேட்கவுங் கில்லேனே.

ப - ரை. என்னை மாறிநின்று - என்னைப்பகைத்து நின்று, கெடக்கிடந்தனையை-கெடுமாறு கிடந்தாயொத்தாய், எம்மதியிலி மடநெஞ்சே - எம்மறிவிலியாகிய பேதைமனமே, இனி - இனி, உன்னை - உன்னை, சிக்கென - உறுதியாக, தேறுகின்றிலம் - தெளிகின்றிலேம், சிவன் - சிவனாகிய, அவன் - அவ்விறைவனது, திரள்-திரண்ட, தோள்மேல் - புயங்களின் மீதணிந்த, * நீறுநின்றது - திருநீறு நிலைபெற்றிரா நின்றதை, கண்டனை - கண்டாய், ஆயினும் - ஆனாலும், நெக்கிலை - மனநெகிழ்ந்தாயில்லை, இ காயம் கீறுகின்றிலை - இந்த வுடம்பைக் கிழிக்கின்றிலை, உன்பரிசு - உன்தன்மை, கெடுவது - கேட்டுக் கேதுவாயிருக்கின்றது, இது கேட்கவும் கில்லேன் - இது கேட்கவுமாட்டுகிலேன் எ - று.

கு - ரை. நெஞ்சே, நீ யென்னோடு மாறுபட்டு என்னை இவ்வாறு கெடுத்த உன்னை உறுதியாகத்தெளிந்திலேன், சிவபெருமானது திரண்ட தோளின்மீதுள்ள திருவெண்ணீற்றி னழகைத் தரிசித்தும் இன்னமும் உருகினையில்லை, இந்தப் பாழுடம்பைச் கிழித்திலை, உன்தன்மையைக் கேட்கவும் சகியேன் என்பதாம்.

* திருநீற்றின் பெருமை தோன்ற ~~[illegible]~~ திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருநீற்றுப் பதிகம் இங்கே எடுத்துக் காட்டப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்றிருவாலவாயான்றிருநீறே. (௧)

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறுஉண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௨)

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறுபரவவினியதுநீறு
சித்திதருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௩)

காணவினியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம்பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௪)

பூசவினியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறுவந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௫)

அருத்தமாதவதுநீறுவவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமாவதுநீறுபுண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௬)

எயிலதுவட்டதுநீறுவிருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுத்தமதாவதுநீறு
வயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்றிருநீறே. (௭)

இராவணன்மேலதுநீறுஎண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
அராவணங்குந்திருமேனியாலவாயான்றிருநீறே. (௮)

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண்மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவதுநீறு
வாலமுதுண்டமிடற்றெம்மாலவாயான்றிருநீறே. (௯)

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர்கூட்டமுங்கூடாக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையதுநீறு
அண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்றிருநீறே. (௧௦)

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவுபூசுரன்ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

வி-ரை. சிவபெருமானது திரண்ட தோளும் திருநீற்றழகும் யாவருடைய கண்ணையும் மனத்தையும் கவருந்தன்மையவாதலால் அவற்றைக் கண்டும் நீ யுருகாமலும் இவ்வுடம்பைக் கீறாமலும் இருந்தனை, உன்தன்மை கெடுதிக்கே யுரியது, அதனைக் கேட்கவும் சகியேன் என்றற்கு, "சிவனவன்றிரடோண் மேனீறு நின்றது கண்டனையாயினும் நெக்கிலையிக் காயங் கீறுகின்றிலை கெடுவெதுன் பரிசிது கேட்கவுங்கில்லேன்" என்றார். மதியிலி நெஞ்சே என இயையும். கில்ஆற்றற் பொருண்மையை யுணர்த்துவதாதலால், கேட்டுச்சகிக்கும் ஆற்றலுடையேனல்லேன் என்றார் எனக் கொள்க. கீறுதல் - பிளத்தல். (ருரு)

கிற்ற வாமன மேகெடு வாயுடை யானடி நாயேனை, விற்றெ லாமிக வாள்வதற் குரியவன் விரைமலர்த் திருப்பாத, முற்றி லாவிளந் தளிர்பிரிந் திருந்துநீ யுண்டன வெல்லாமுன், அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையு மளவறுக் கில்லேனே.

ப-ரை. கில்தவா - விஷயங்களிலோடும் ஆற்றல் கெடாத, மனமே - நெஞ்சமே, கெடுவாய் - நீகெடக்கடவை, உடையான் - இறைவன், அடிநாயேனை - அடிமையாகிய நாயேனை, விற்று - விலைப்படுத்தி, எல்லாம் - எல்லாவகையானும், மிகஆள்வதற்கு - மிகுதியும் ஆண்டருள்வதற்கு, உரியவன் - தக்கான், (அவனது) விரைமலர் - மணந்தங்கிய தாமரைமலர் போன்ற, திருப்பாதம் - திருவடியாகிய, முற்றிலா இளந்தளிர் - முதிராத இளந்தளிரை, பிரிந்துஇருந்து - நீங்கியிருந்து, நீ உண்டன எல்லாம் - நீ யநுபவித்தனயாவும், முன்அற்ற ஆறும் - முன்பே அற்றொழிந்தவாற்றையும், நின்அறிவும் - உன்னறிவையும், நின்பெருமையும் - உன் பெருமையையும்,அளவுஅறுக்கில்லேன் - அளவை வரையறுக்கும் ஆற்றலுடையேனல்லேன். எ - று.

க-ரை. மனமே, இறைவனது திருவடியைப் பிரிந்து நீயநுபவித்த விடய வின்பங்களையும், அவை அழிந்த விதத்தையும், உன்

அறிவையும், உன் பெருமையையும் அளவுசெய்ய வல்லே னல்லேன் என்பதாம்.

வி-ரை. கெடுவாய் முன்னிலைக்கண் வந்த வியப்பிடைச் சொல். கொள்ளவும் கொடுக்கவும் உரியவன் என்றற்கு "விற்றெல்லாமிக வாள்வதற் குரியவன்" என்றார். தளிர் என்றது திருவடியை, அது தளிர்போலச் செவந்தும் மென்மையாயும் அழகு வாய்ந்தும் இருத்தலால் என்க. இளந்தளிர் என்றதன்மேலும் முற்றிலா விளந்தளிர் என்றது மிகவும் இளந்தளிர் என்றற்கு. அளவு - வரையறை. (ருச)

அளவ றுப்பதற் கரியவ னிமையவர்க் கடியவர்க் கெளியானம், களவ றுத்துநின் றாண்டமை கருத்தினுட் கசிந் துணர்ந் திருந்தேயும்,உளக றுத்துனை நினைந்துளம் பெருங்களன் செய்தது மிலைநெஞ்சே, பளக றுத்துடை யான் கழல் பணிந்திலை பரகதி புகுவானே.

ப-ரை. இமையவர்க்கு-தேவர்களுக்கு,அளவு அறுப்பதற்கு-அளவு வரையறைப்படுத்தற்கு, அரியவன் - அருமையானவன், அடியவர்க்கு - (தனது) அடியார்களுக்கு, எளியான் - எளிதாயிருப்பவன், நம் களவு - நமது கள்ளவழியை, அறுத்து - சேதித்து, நின்று - நிலைபெற்றிருந்து, ஆண்டமை - ஆண்டருளினமையை, கருத்தினுள் - மனத்தின்கண், கசிந்து - நெகிழ்ந்து, உணர்ந்திருந்தேயும் - அறிந்திருந்தும், உள - உன்னையொழிந்துள்ள எல்லாப் பொருள்களையும், கறுத்து - கோவித்து, உன்னை நினைந்துளம் - உன்னையே யெமக்குத் துணைப்பொருளாகக் கருதியிராநின்றேம், பெருகளன் செய்ததும் இல்லை - உன்னைப் பெருவஞ்சகஞ் செய்தது மில்லை, நெஞ்சே - மனமே, பரகதிபுகுவான் - முத்தி உலகிற் புகும்பொருட்டு, பளகு அறுத்து - குற்றங்களை நீக்கி, உடையான்கழல் - உடையவனது திருவடியை, பணிந்திலை - பணிந்தாயில்லை. எ - று.

க - ரை. நெஞ்சே, தேவர்களும் அளவுசெய்தற்கரியவன், அடியார்க்கெளியன், அத்தன்மையனாகிய இறைவன், நம்மை யோர் பொருளாக்கி நமது குற்றங்களைந்து ஆண்டருளினமையை அறிந்திருந்தும், பரகதியடைதற் பொருட்டு அவனது திருவடியை வணங்கினா யில்லை, உன் தன்மை யிருந்தவாறென்னை யென்பதாம்.

வி - ரை. களவு - கள்ளம். அறுத்தல் - அழித்தல். பளகு - குற்றம். பரகதி - மேலாகியகதி, அதுமுத்தி. புகுவான் வினையெச்சம். ஆண்டமை - ஆண்டருளின தன்மை. (௬௫)

புகுவ தாவதும் போதர வில்லதும் பொன்னகர் புகப் போதற், குகுவதாவது மெந்தையெம் பிரானென்னை யாண்டவன் கழற்கன்பு, நெகுவ தாவது நித்தலு மமு தொடு தேனொடு பால்கட்டி, மிகுவ தாவது மின்றெனின் மற்றிதற் கென்செய்கேன் வினையேனே.

ப - ரை. புகுவது ஆவதும்-செல்லுதற் குரியதும், போதரவு இல்லதும் -மீட்டும்வருதலில்லாததும், பொன்நகர்-சிவலோகமே, புகப்போதற்கு (அதில்)புகச்செல்வதற்கு, உகுவதுஆவதும் - மனம் நெகிழ்வதும், எந்தைஎம்பிரான் - எந்தையாகிய எம்பெருமானும், என்னை ஆண்டவன் - என்னை ஆண்டருளினவனுமகிய இறைவனது, கழற்கு - திருவடிகளின்மீது, அன்பு நெகுவது ஆவதும் - அன்பு காரணமாக நெக்குருகுதலும், நித்தலும் - நாள்தோறும், அமுதொடு தேனொடு பால்கட்டி - அமுதுடனும் தேனுடனுங் கூடிய பால் கட்டியினும், மிகுவது ஆவதும் - மேம்படுவதும் ஆகிய பரம்பொருளி னின்பம் கிடைப்பதும், இன்று எனின்- (எனக்கு) இல்லையெனின், வினையேன் - தீவினையை யுடையேன், இதற்கு மற்று என்செய்வேன்-இதற்கு வேறென் செயக்கடவேன், எ-று.

க - ரை. நெஞ்சே, முத்தியுலகில் புகுதற்கு இறைவன் திருவடிக் கன்பு செய்தல் முதலிய குணங்கள் உன்னிடத்தில் இல்லையாதலால் நான் எவ்வாறு உய்வேன்என்பதாம்.

வி - ரை. புகுதற்குரியதும் புகுந்தபின் மீளுதல் இல்லாததும் ஆகையால் முத்திக்குப் "புகுவதாவதும் போதரவில்லதும்" என்னும் அடைகொடுத்தார். பொன் - அழகு, சிவபுரத்தின் மிக்க அழகுள்ளது ஒன்றில்லாமையால் அதனைப் "பொன்னகர்" என்றார். நெஞ்சே, உன்னைத் திருத்தும் வலியிலேன் என்றற்கு, "இதற்கென்செய்கேன்" என்றார். வினையேன் என்றது தீவினையை யுடையேன் என்றவாறு. (௬௬)

வினையென் போலுடை யார்பிற ராருடை யானடி நாயேனைத், தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப் பன்று மற் றதனாலே, முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்து நான் முட்டிலேன் றலைகீறேன், இனையன் பாவனை யிரும்பு கன் மனஞ்செவி யின்னதென் றறியேனே.

ப - ரை. என்போல்-என்னைப்போல, வினை உடையார் பிறர் யார் - தீவினையையுடையவர் பிறர் யாருளர், (ஒருவருமிலர் ஆயினும்) உடையான்-இறைவன், அடி நாயேனை - நாய்போன்றஅடியேனை, தினையின் பாகமும் - தினையளவும், பிறிவது - பிரிந்திருப்பது, திருக்குறிப்பு அன்று - அவனுக்குத் திருவுள மல்ல, அதனாலே - அதைக்கொண்டு, முனைவன் -இறைவனது, பாதம் - திருவடியாகிய, நல்மலர் - நல்ல மலரை, பிரிந்திருந்தும் - என்மனம் பிரிந்திருந்தும், நான் - யான், தலை முட்டிலேன் - (அதைப் பெறுதற்கருமை நோக்கி) தலையைக்கன் முதலியவற்றில் மோதிக் கொள்கிலேன், கீறேன் - பிளந்து கொள்கிலேன், (ஆதலால்) இனையன் - இத்தன்மையேனாகிய என்னுடைய, பாவனை - எண்ணம், இரும்பு - இரும்பாகும், மனம் - மனமானது, கல் - கல்லாகும், செவி - காது, இன்னது என்று அறியேன் -இன்னதென்று சொல்ல அறிந்திலேன். எ - று.

க - ரை. இறைவனது திருவடியைப் பிரிந்திருக்கச் சகியாமல் முட்டுதல், தலை கீறுதல் முதலியவற்றைச் செய்திலேன், ஆதலால் என் பாவனை இரும்பை நிகர்க்கும், மனம் கல்லை நிகர்க்கும், செவி யின்னதை நிகர்க்குமென்று சொல்ல அறியேன் என்பதாம்.

வி - ரை. வினை தீவினைக்காயிற்று. ஆர் என்றவினா இன்மை குறித்த தாதலால் ஒருவருமில்லையென்றபடி. தினை சிறுமைக்குக் காட்டுவதோ ரளவை, "தினைத்துணை நன்றிசெயினும் பனைத்துணையாக்கொள்வார் பயன்றெறிவார்" என்னுந் திருக்குறளுக்குத் தினைபனையென்பன "சிறுமை பெருமைகளுக் கெடுத்துக் காட்டுவதோ ரளவை" என்றுரை கூறினார் பரிமேலழகரும். பிறவியாகிய பெருங்கடலை நீந்துதற்கு மரக்கலம்போல்வ தாதலால் இறைவனது திருவடியைப் "பாதநன்மலர்" என்றார். "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் - நற்றாடொழாஅரெனின்" என்னுந் திருக்குறளுரையில் நல்தாள் என்பதற்கு இவ்வாறு பொருள் கூறல்காண்க. கீறேன் என்பதற்கு உடலைப் பிளந்திலேன் என்றுரைப்பினும் அமையும். (௩எ)

எனை யாவரு மெய்திட லாற்றமற் றின்னதென் றறியாத, தேனை யானெய்யைக் கரும்பினின் றேறலைச் சிவனை யென் சிவலோகக், கோனை மானன நோக்கிதன் கூறனைக் குறுகிலே னெடுங்காலம், ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு வேனுயி ரோயாதே.

ப-ரை. ஏனையாவரும் - (அடியரல்லாத) மற்றைய ரெல்லா ரும், எய்திடல் உற்று - அடையலுற்று, இன்னது என்று அறி யாத - இத்தன்மைய தென்றுணராத, தேனை - தேனை, ஆன் நெய்யை - பசுவினது நெய்யை, கரும்பின் - கரும்பினது, இன் தேறலை - இனிய சாற்றை, சிவனை - சிவபெருமானை, சிவலோகக் கோனை - சிவலோகத்துக்கிறைவனை, மான்அன-மானினது நோக் கத்தை யொத்த, நோக்கி தன் - நோக்கத்தையுடைய உமாதேவி யின், கூறனை-பாகத்தையுடையவனை, நெடுங்காலம் குறுகிலேன் - நெடுங்காலமாக அடைந்திலேன், (மற்றென் செயா நின்றேனெ னின்)யான் இருந்து-நான் உயிரோடிருந்துகொண்டு, ஊனைஓம்பு கின்றேன் - உடம்பைப் பாதுகாவா நின்றேன், கெடுவேன் உயிர் ஓயாதே - கெடுவேனது பிராணன் அழியாதோ. எ - று.

க - ரை. இறைவனை யடையாமல் இப் பொய்யுடம்பைக் காத்திருந்தேன், இவ்வாறு வீணாகிய என் உயிர் அழிந்தொழி யாதோ என்பதாம்.

வி-ரை. மற்று - அசை. தேன்முதல் மானன நோக்கி தன் கூறன் இறுதியாகச் சொல்லப்பட்டவை ஒன்றற் கொன்றினிமை யிற் சிறந்த பொருள்க ளாதலால்,தேன் எனத்தொடங்கி,"மானன நோக்கி தன் கூறனை" எனமுடித்தார். இத்தன்மையனை ஓம்பாது முடைநாற்ற முதலியன பொருந்தி மின்போலத் தோன்றியழியு மியல்பினை யுடைய உடலை ஓம்பாநின்றேன் இதென்ன பேத மையென் றிரங்கினராயிற்று. ஏனை யாவரும் என்றது பிரமன் முதலியதேவர்களை. தேனும் கரும்பின் தேறலும் நாவிற்குச்சுவை தருதலேயன்றி உடம்பிலுள்ள சத்ததாதுக்களுக்கும் உறுதியைத் தருகின்ற நெய்போலச் சிறந்தன அல்லாமையால் அதனை அச்சிற ப்பு நோக்கி இடையே வைத்தார் எனினும் பொருந்தும். அதினும் பசுவின் நெய் சிறந்ததாதலால் "ஆனெயை"என்றருளினர்.ஊன்-தசை. அது மிகுதி பற்றி உடம்பை யுணர்த்திற்று. பெறுதற்கரிய மாநுடப்பிறவியைப் பெற்றும் அதனால் அடைதற்குரிய மோக்ஷ இன்பத்தை அடைய முயலாது நெடுநாள் வீணே கழித்தேன் என் பதற்கு "நெடுங்கால மூனையானிருந்தோம் புகின்றேன் கெடு வேன் உயிர் ஓயாதே" என்றார். (௩அ)

ஓய்வி லாதன வுவமனி லிறந்தன வொண்மலர்த் தாட ந்து, நாயி லாகிய குலத்தினுங் கடைப்படு மென்னை நன் னெறி காட்டித், தாயி லாகிய வின்னருள் புரிந்தவென்

றலைவனை நனிகாணேன், தீயில் வீழ்கிலேன் றிண்வரை யுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே.

ப - ரை. ஒய்வு இல்லாதன - அழிவில்லாதனவும், உவம னில் இறந்தன - உவமையினின்றும் நீங்கினவுமாகிய, ஒள் - ஒள் ளிய, மலர் - தாமரை மலர்போன்ற, தாள்தந்து - திருவடியைக் கொடுத்து, நாயில்ஆகிய குலத்தினும்- நாய்க்குலத்தினும், கடைப் படும் - கடைப்பட்ட, என்னை - எனக்கு, நல்நெறிகாட்டி - சந் மார்க்கத்தைக் காட்டி, தாயில் ஆகிய - தாயினிடத்துண்டாகிய, இன் அருள்புரிந்த - இனிய அருள்போன்ற அருளை (யென்னிடத் துச்) செய்த, என்தலைவனை - என்பரமபதியை, நனிசாணேன் - மிகுதியுங் காணுதிராநின்றேனாகிய நான், தீயில் வீழ்கிலேன் - தீப்பாய்ந்திலேன், திண்வரை உருள்கிலேன் - திண்ணிய மலைமே லிருந்துருள்கிலேன், (ஆதலால்) செழுங்கடல் புகுவேனே - செழு மையாகிய கடலிலாயினும் வீழ்ந்திறப்பேனோ, அதுவும் செய்கி லேன். எ - று.

க - ரை. அழியாததும் உவமை யில்லாததும் ஆகிய தன் திரு வடியை அருள்செய்து நாயினும் கடையேனாகிய என்னை நல்வழி காட்டி ஆண்டருளி, தாயினும் சிறந்த அருள் செய்த இறைவனைக் காணாத நான் தீப்பாய்தல் முதலியவற்றைச் செய்திலேன் என் மன வலியிருந்தவாறென்னை யென்பதாம்.

வி - ரை. ஒய்விலாதன, உவமனிலிறந்தன இரண்டும் தாளு க்கு விசேடணம். தீப்பாய்தல் முதலிய மூன்றும் துயரைப் பொறு க்கல் ஆற்றாதவர் உயிர்விடுதற்குச் செய்யும் தொழில்கள். தாள் என மேல் வருதலால் மலர்தாமரை மலராயிற்று. தந்தையினும் தாய் மிகவும் அன்புடையள் ஆகையால் இறைவன் அருளைத் "தாயினாகிய வின்னருள்" என்றார். (ருக)

வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடு மதுதனை நினை யாதே, மானி லாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயி ராகித், தேனி லாவிய திருவருள் புரிந்தவென் சிவனகர் புகப்போகேன், ஊனிலாவியை யோம்புதற் பொருட்டினு முண்டுடுத் திருந்தேனே.

ப - ரை. வேனில்வேள் - வசந்தகால மன்மதனது, கணை - புஷ்பபாணம், கிழித்திட - நெஞ்சு முதலிய இடங்களைப் பிளந் திட, மதி - சந்திரனும், சுடுமதுதனை - சுடுவதை, நினையாதே -

எண்ணுமல், மான்நிலாவிய - மானினது பார்வையானது நிலை பெற்ற, நோக்கியர் - நோக்கத்தையுடைய மாதரது, படிறு - இடை - வஞ்சனையினிடத்துச் சிக்கி, மத்து இடுதயிர்ஆகி-மத்திட்டுக் கடைந்த தயிரைப்போலக் கலங்கி, தேன்நிலாவிய - தேனினது இனிமைத் தன்மைதங்கிய, திருவருள்-திருவருளை, புரிந்த - என்னிடத்துச்செய்த, என்சிவன் - என் சிவபெருமானது, நகர் - பொன்னகர்க்குள், புகப்போகேன் - நுழையப் போகின்றிலேனாகி, ஊனில் - உடம்பில், ஆவியை-பிராணனை, ஓம்புதற்பொருட்டு - (வைத்துப்) பாதுகாக்கும் பொருட்டு, இன்னும் - இன்னமும், உண்டு உடுத்து இருந்தேன்-உண்டுமுடுத்து மிருந்துளேன்.எ-று.

க-ரை. மாதர் மயக்கத்திற் சிக்கியுழன்ற என்னை ஆட்கொண்டருளின இறைவனது சிவபுரத்தை யடையாமல், உடம்பையும் உயிரையும் காப்பாற்றும் பொருட்டு இன்னமும் உண்டும் உடுத்தும் இருந்தேன் என்பதாம்.

**வி-ரை.** இறைவனது திருவருளுக்குப் பெருந்தடை மாதர் என்பது இதனால் இனிதுவிளங்கும். உண்டுடுத்தலும் அவர் பொருட்டே யென்க. படிறு - பொய்யொழுக்கம். மத்திடுதயிர் - மனச்சுழற்சிக் கெடுத்துக்காட்டுவதோ ருவமை. எல்லார்க்கும் இனிமையைத் தருதலால் "தேனிலாவிய திருவருள்" என்றார்.()

---

## ரு - வது கைம்மாறு கொடுத்தல்.

### கலிவிருத்தம்.

இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெவ்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே.

ப - ரை. இருகையானையை ஒத்திருந்து - நான் இரண்டு கைகளையுடைய யானையை நிகர்த்து இருந்து, என் உள்ளக்கருவை - என் மனத்திலுள்ள சோதியை, யான்கண்டிலேன் - நான் பார்த்திலேன், கண்டது - பார்த்தது, எவ்வமே - துன்பத்தையே, (என்னிலைமையிங்ஙன மாகவும்) வருக என்று பணித்தனை - வாவென்று நியமித்தாய், வான்உளோர்க்கு - தேவர்களுக்குள், ஒருவனே - ஒப்பற்றவனே, உண்ணகிற்றிலேன் - (உன்னை) அநுப

விக்கவலியில்லேன், உண்ணகிற்பன் - (விடயாதிகளை) அநுபவிக்கவலியுள்ளேன். எ - று.

க - ரை. நீ என் மனத்தில் எழுந்தருளியிருந்து நான் துன்பம் நுகர்தற்கிரங்கி வருகவென்று கட்டளையிட்டருளினை, அந்தச்சுகத்தை நான் அநுபவிக்கப் பெற்றிலேன் என்பதாம்.

வி - ரை. யானை மதமயக்கத்தால் தன்னையும் பிறரையும் அறியாததுபோல தாமும் பிரபஞ்ச மாயையால் தம்மையும் தம்முள்ளே எழுந்தருளியிருக்கும் இறைவனையும் அறியாமையால் "இருகையானையை யொத்திருந் தென்னுளக்கருவை யான் கண்டிலேன்" என்றார். இருகை யானை என்றது இல்பொருள் உவமை. இரு கையானை என்பதற்குப் பெரிய துதிக்கையையுடைய யானை எனினு மொக்கும். கரு என்பதற்கு நடு என்றும் பொருள் உண்மையால் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் ஐந்தொழிற்கும் பொதுவாயிருப்பவன் எனினும், கரு-என்பதற்கு பிறப்பிடம் என்பதும் பொருளாதலால், எல்லாப் பொருள்களுக்கும் பிறப்பிடமாயுள்ளவன் எனினும் பொருந்தும். மாநுடச்சட்டைசாத்திக் குருமூர்த்தமா யெழுந்தருளினதைக் கருதி இறைவனை "இருகையானை" என்றருளினர் எனினுமமையும். எவ்வம்-குறை, அது குறைதற் கேதுவாகிய துன்பத்தை யுணர்த்திற்று, உண்ண என்பதை கிற்றிலேன், கிற்பன் என்னும் இரண்டனோடுங் கூட்டுக. (சக)

உண்டொ ரொண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டி ராணலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினய்
கண்டுங் கண்டிலே னென்னகண் மாயமே.

ப - ரை. ஓர்ஒண்பொருள் - ஒரு ஒள்ளிய பொருளானது, உண்டு என்று - உளதென்று, உணர்வார்க்கு எல்லாம் - அறிபவர்கட் கெல்லாம், பெண்டிர் - பெண்ணுரு, ஆண் - ஆணுரு, அலி - பேடியுரு, என்று - என்று நிச்சயித்து, அறிய ஒண்கிலை - அறியக்கூடாம லிருக்கிறாய், தொண்டனேற்கு - அடியேனுக்கு, உள்ள ஆறு - உள்ளபடி, வந்துதோன்றினய் - வந்து பிரத்தியட்சமாயினை, கண்டும் - (இவ்வாறு கண் கூடாகப்) பார்த்தும், கண்டிலேன்-(மீட்டும்) பார்த்திலேன், என்ன கண்மாயம்-(இது) என்ன கண் மயக்கு. எ - று.

க - ரை. மேலான பொருள் ஒன்றுண்டென்று அறிந்தார்க்கும் அறிதற்கரிய நீயென்க்கு உள்ளபடி யெழுந்தருளிக் காட்சி தந்தருளினை, அப்படி காட்சிகொடுத்த உன்னைக் கண்டும் காணாதவன் போல மயங்குகின்றேன் இது என்ன கண்மாயம் என்பதாம்.

"உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச்சிற்றம்பலத்தொருத்தன்-குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ்வாயிக் கொடியிடைதோள் - புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய் - மணந்தாழ் புரிகுழலாளல்குல்போல வளர்கின்றதே." என்னும் இத்திருக்கோவையார் செய்யுளில் உணர்ந்தார்க் குணர்வரியோன் என்பதற்கு ஒருகால் தன்னை உணர்ந்தவர்கட்கு பின் உணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலால் மீட்டுணர்வரியோன் என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறுதல் காண்க.

மேலை வானவ ரும்மறி யாததோர்
கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோம்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே.

ப - ரை. மேலைவானவரும்-மேன்மையுடைய தேவர்களும், அறியாதது - உணரக்கூடாததாகிய, ஓர்கோலமே - ஒரு திருவுருவே, என்னை ஆட்கொண்ட கூத்தனே - என்னை யடிமைகொண்ட நிருத்தனே, ஞாலமே - நிலமே, விசும்பே - வெளியே, இவை - இவைகள், வந்து - தோன்றி,போம் - அழிதற்கிடமாகிய, காலமே - காலதத்துவமா யுள்ளவனே, உன்னை - (இத்தன்மையனாகிய) உன்னை, காண்பது - காணப்பெறுவது. என்றுகொல் - எக்காலமோ. எ - று.

க - ரை. மேன்மையுள்ள தேவர்களும் அறிய வொண்ணாத கடவுளே, உன்னை நான் காணப்பெறுவது எந்நாளோ என்பதாம்.

வி - ரை. சாத்தியப்படாத ஒரு காரியத்தைச் செய்து முடித்தோன் மகிழ்ச்சியாற் கூத்தாடலியற்கை யாதலான், திருத்தக் கூடாத என்னைத்திருத்தி யடிமைகொள்ளப் பெற்ற பெருங் களிப்பால் இறைவன் கூத்தாடினு னென்பார், "என்னை யாட்கொண்ட கூத்தனே" என்றார். ஞாலமே விசும்பே என முதலீறுகளை யெடுத்துக் கூறலால், இடை நின்ற நீர் நெருப்புயிர்களுங் கொள்ளப்படும். மக்கள் முதலியோரினும் சிறந்தவராதலால்

க - ரை. எவ்விடத்தும் சேவல்கள் கூவாநின்றன, பலவகைப் பறவைகளும் ஏழிசைபோலச் சத்தியாநின்றன, வெண்மையாகிய சங்குகள் எவ்விடத்தும் முழங்காநின்றன, இவற்றைக் கேட்டாயில்லையோ, அன்றியும், ஒப்பற்ற பேரொளியாகிய சிவபெருமானது ஒப்பற்ற பெருங் கருணையாகிய உவமையில்லாத மேலான பொருளைக் குறித்து யாம் புகழ்ந்து பாடினோம் இதனையாயினும் கேட்டாயில்லையோ, நீ வாய்திறவாம லிருக்கின்றனையே, இது என்ன உறக்கமோ யாம் அறியோம். சக்கரப் படையை யுடைய திருமால் செய்யும் அன்பும் இத்தன்மைத்தேயோ? விரைந்தெழுந்து, பிரபஞ்சத்துக்கு முதல்வனும் ஏழைபங்காளனும் ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவாயாக என்பதாம்.

வி - ரை. நீ செய்யும் அன்பு இத்தன்மையது ஆகையால், நீ அதிட்டித்திருக்கும் திருமால் செய்யும் அன்பும் இத்தன்மைத்தே ஆமோ என்றற்கு, "ஆழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ" என்றாள். கோழி என்றது சேவலை. ஊழி-பிரபஞ்சம் பல பறவைகளுங் கலந் தொலிக்கும்போது வெவ்வே றொலியாய்க் கேட்பது ஏழிசையுங் கலந் தொலித்தலை நிகர்ப்பதனால், "குருகெங்குமேழிலியம்ப" என்றார். வாழி-அசை யெனினுமாம். ஏழை பங்காளன் - உமா தேவியை யொருபாகத்தினுடையவன் என்றலும் பொருந்தும். (அ)

முன்னைப்பழம்பொருட்குமுன்னைப்பழம்பொருளே
பின்னைப்புதுமைக்கும்பேர்த்துமப்பெற்றியனே
உன்னைப்பிரானாகப்பெற்றவுன்சீரடியோ
முன்னடியார்தாள்பணிவோமாங்கவர்க்கேபாங்காவோ
மன்னவரேயெங்கணவராவாரவருகந்து
சொன்னபரிசேதொழும்பாய்ப்பணிசெய்வோம்
இன்னவகையேயெமக்கெங்கோனல்குதியே
லென்னகுறையுமிலோமேலோரெம்பாவாய்

இது நவசத்திகளும் தம்மிற் சொல்லியது.

ப - ரை. முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம்பொருளே - முன்னையதாகிய பழம்பொருளுக்கும் முன்னையதாகிய பழம்பொருளே, பின்னைப்புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே - பின்னையதாகிய புதுப்பொருளுக்கும் மீட்டும் அத்தன்மையனே, உன்னைப்பிரான் ஆகப்பெற்ற - உன்னைத் தலைவனாகப்

பெற்ற, உன்சீர்அடியோம் - உன் சிறப்பையுடைய அடியோம், உன்அடியார்தாள்பணிவோம் - உன்னடியாரது சீர்பாதங்களைவண ங்குவோம், ஆங்குஅவர்க்கே பாங்கு ஆவோம் - அவ்விடத்து அவர் களுக்கே அநுகூலராய் ஒழுகுவோம், அன்னவரே - அவர்களே, எம்கணவர்ஆவார் - எம் கொழுநராவார், அவர் உகந்துசொன்ன பரிசே - அவர்விரும்பிச்சொன்னவண்ணமே, தொழும்புஆய் பணி செய்வோம் - தொண்டராய் பணிசெய்யக்கடவோம், இன்னவகை யே - இந்தவண்ணமே, எங்கோன் - எம்மிறைவனே, எமக்கு நல் குதியேல் - எமக்குக் கிருபை புரிவையாயின், என்னகுறையும் இல்லோம் - எந்தக்குறையையு முடையோ மல்லோம்,—ஏலோ ———எ - று.

க - ரை அநாதியா யிருப்பவர்களுக்கும் அநாதியா யிருக் கும் பொருளே, பின்புள்ள அநுபவிகளுக்கும் இன்பஞ் செய்வோ னே, உன்னைத் தலைவனுகப் பெற்ற உன் சீரடியோமாகிய யாம் உன் தொண்டர் திருவடிகளை வணங்குவோம், அவர்களுக்கே எல் லாவகையாலும் உரியராவோம், அவர்களே எமக்கு நாயகராவார் கள், அவர் விரும்பிச் சொன்னபடியே அவரது ஏவற் பணிவிடை செய்வோம், இறைவனே, இவ்விதமாக எமக்குக் கிருபை செய் வாயாயின், யாம் யாதொரு குறையும் உடையோ மல்லோம் என் பதாம்.

பழவுரை. இது, அநாதியா யுள்ளவர்களுக்கெல்லாம் அநாதி யாயுள்ளவனுமாய், அநுபவிப்பவர்க்கு மேன்மேலும் புதுமையான ஆநந்தத்தைக்கொடுப்பவனுமா யிருக்கிற உன்னுடைய அடியார் திருவடியைப்பணிதலும், அவர்களை ஆசரித்தலும், அவர்களையே பர்த்தாக்களாக அங்கீகரித்தலும், அவரேவற்பணிசெய்தலும், யாங் கள் உரிமையாய் இந்த முறைமை யொழியாவண்ணம் பிரசாதித் தருளின், ஒரு குறைபாடும் இலோமென்று நவசத்திகளும் தம்மிற் சொல்லியது. உன்னடியார் என்றது விஞ்ஞான கலரில் மலபக் குவராய் அணுசதாசிவர் என்னும் பேர் பெற்றிருப்பார் ஒருவகை யும், அதிகாரமலத்துடனே கூடிய அனந்தாதி அட்ட வித்தியே சுரர் என்னும் பேர்பெற்றிருப்பார் ஒருவகையும், ஆணவமல சகித ராய்ச் சத்தகோடி மகாமந்திரேசுரர் என்று பேர் பெற்றிருப்பார் ஒருவகையும் ஆகவிஞ்ஞானகலர் மூன்றுவகையாம். இனி நிரை நிரையாக அணுசதாசிவர் தாள்பணிவோம், அட்டவித்தியே சுரர் க்கும் பாங்காவோம் சத்தகோடி மகாமந்திரேசுரர் எங்களுக்குப் பர்த்தாக்களாவார்கள், "சொன்னபரிசே தொழும்பாய்ப்பணிசெய்

வோம்'' என்பது அவர்களேவலால் அசுத்தமாயையைப் பிரேரியா நிற்போம். எ - று. (கூ)

பாதாளமேழினுங்கீழ்சொற்கழிவுபாதமலர்
போதார்புனைமுடியுமெல்லாப்பொருண்முடிவே
பேதையொருபாற்றிருமேனியொன்றல்லன்
வேதமுதல்விண்ணோருமண்ணுந்துதித்தாலும்
ஓதவுலவாவொருதோழன்றொண்டருளன்
கோதில்குலத்தரன்றன்கோயிற்பிணாப்பிள்ளைகாள்
ஏதவனூரேதவன்பேராருற்றாராரயலா
ரேதவனைப்பாடும்பரிசேலோரெம்பாவாய்

ப - ரை. பாதமலர் - பாதமலர்கள், பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு - அதோலோகம் ஏழினும் கீழ் என்னுஞ் சொல்லைக் கடந்துநின்றன, போதுஆர்புனைமுடியும் - மலர்கள்நிரம்பி யலங்கரிக்கப்பட்ட திருமுடியும், எல்லாப்பொருள்முடிவே - எல்லாப் பொருள்களுக்கும் முடிவானதே, பேதை ஒருபால் - பெண்ணை யொரு பக்கத்தமைத் துளனாதலால், திருமேனி ஒன்றல்லன் - திருவுருவமொன்று யிருப்பவனுமல்லன், வேதமுதல் - வேதமுதலாக, விண்ணோரும் மண்ணும் துதித்தாலும் - விண்ணுளாரும் மண்ணுளாரும் தோத்திரம் பண்ணினாலும், ஓத உலவா - சொல்ல அடங்காத, ஒருதோழன் - (உயிர்கட்கெல்லாம்) ஒரு உயிர்த்தோழனாயிருப்போன், தொண்டர் உளன் - தொண்டருடைய உள்ளத்தின் கண்ணான், கோதுஇல்குலத்துஅரன் - குற்றமற்ற ஏற்றத்தையுடைய ஹரன், தன் - அவனது, கோயில் - ஆலயத்திலுள்ள, பிணாப்பிள்ளைகாள் - பெண்பிள்ளைகளே, அவன் ஊர் ஏது - அவனது ஊர் யாது, அவன்பேர்ஏது - அவனது பேர்யாது, உற்றார் ஆர் - (அவனுக்கு) உறவினர்யார், அயலார் ஆர் - அயலோர் யார், அவனைப்பாடும் பரிசுஏது - அவனைப்பாடும்விதம்யாது, ஏலோ— எ - று.

க - ரை. திருவடித் தாமரை மலர் பாதாளலோகம் ஏழுக்குங் கீழாய்ச் சொல்லுதற்கு அளவுபடாததா யிருக்கும், மலர்களால் அலங்கரிக்கப் பெற்ற திருமுடியும் மேலுள்ள பொருள்க ளெல்லாவற்றிற்கும் மேலாய் முடிவிடமா யிருக்கும், திருமேனியின் ஒரு பாகத்தில் உமாதேவி வீற்றிருப்பாள், தான் ஒரு வடிவா யிருப்பவனு மல்லன், வேதங்களும், விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்

தாரும் தோத்திரம் செய்தாலும் அந்தத் தோத்திரங்களுக்கு அடங் காதவனும், உயிர்களுக்கெல்லாம் ஒப்பற்ற நண்பனும், அடியார் மனத்தில் இருப்பவனும் ஆகிய சிபெருமானது கோயிலில் இருக் கிற பெண் பிள்ளைகளே, அவனது திருப்பதி யாது? அவனது திருநாமம் யாது? அவனுக்கு உறவினர் யார்? அவனுக்கு அயலார் யார்? அவனைப் பாடும் விதம் யாது? சொல்லுங்கள் என்பதாம்.

பழவுரை. "பாதாளமேழினுங் கீழ் சொற்கழிவு பாதமலர்" என்பது, எண்பதுநூறாயிரம் யோசனையான பூமியின் கனத்துக் கும் சிவஞானமன்றியே தவசு பண்ணுகிறவர்கள் சென்றிருக்கும் இடமாகிய கனிட்ட பாதாளத்துக்கும் அதன்கீழே உண்டாகிய அசுரகண்டம், சர்ப்பகண்டம், இராக்கதகண்டம், இப்படி ஒவ் வொன்று மும்மூன்று கண்டமாய் ஆடகேசுரர்க்குப் புவனமுமா யிருக்கிற எழு பாதாளத்தக்கும், அதின் கீழாக ரவுரவம், கும்பீ பாகம், அவிசிகம் என்று சொல்லப்பட்ட மயிரராச நரகமூன்றும் இவையுட்படப் பதின்மூன்றுநரகம் ஒரு அடுக்காகவும், பத்துநர கம் ஒரு அடுக்காகவும், ஒன்பதுநரகம் ஒரு அடுக்காகவும், ஆக முப்பத்திரண்டு நரகமும் இவர்களைச் சூழ்ந்து சேவித்திருக்கிற நூற்றெட்டு நரகமுமாக நூற்றுநாற்பது நரகமும் கூர்மாண்ட தே வரென்னும் உருத்திரர்க்குப் புவனமாயிருக்கப்பட்ட நரக புவனங் களுக்கும் கீழ் காலாக்கினி உருத்திரர் புவனம் பதினேழுகோடி யோசனையாய் அண்டகடாக மூடப்பட்ட புவனமாயிருக்கும், இப் படி சொல்லப்பட்ட பிரமாண்ட முதலாக அண்டங்களனைத்துக் கும் ஆதார பூதமாய்ச் சிவசத்தியான ஆதாரசத்திக்கும் அப்பாற் சிவனுடைய பூரணத்துக்குள் எல்லைப்படுத்தி இன்னமட்டென்று சொல்லுதற்கு முடியாததலால் சொற்கழிவா யிருக்கப்பட்டது மலர்போன்ற சீபாதமாகையாலும், "போதார் புனைமுடியு மெல் லாப் பொருண்முடிவே" என்பது, இனிப் பிருதிவியண்ட முன் சொன்ன அண்டகடாகமுதல் ஐம்பதுகோடி யோசனை யுட்பட மேற்புவலோகமுதல் சிவலோக மளவாக எழுலோகமுமேல்அண்ட கடாகமுட்பட ஐம்பதுகோடி யோசனையுமாகப் பிரமாண்டம் நூறு கோடி யோசனை, அதற்குமேல் அதிற் பதின்மடங்கு அப்பு அண் டம், அதற்குமேல் அதிற்பதின்படங்கு தேயு அண்டம், அதற்கு மேல் பதின்மடங்கு வாயுஅண்டம், அதற்குமேல் பதின்மடங்கு ஆகாசஅண்டம், அதற்குமேல் பதின்மடங்கு மன அண்டம், அத ற்குமேல் பதின்மடங்கு புத்தி அண்டம், அதற்குமேல் பதின்மட ங்கு ஆங்காரஅண்டம், அதற்குமேல் பதின்மடங்கு குண அண்டம்,

அதின் மேல் நூறு மடங்கு அராக வண்டம், அதின் மேல் நூறுமடங்கு வித்தைஅண்டம்,அதின்மேல் நூறுமடங்கு கலையண்டம், அதின்மேல் நூறுமடங்கு நியதியண்டம், அதின்மேல் நூறு மடங்கு காலஅண்டம், அதின்மேல் ஆயிரமடங்கு அசுத்தமாயை, அதின்மேல் பதினுயிரமடங்கு சுத்தமாயையிற் சுத்தவித்தை, அதற்குமேல் பதினுயிரமடங்கு மகேசுவரம், அதற்குமேல் சாதாக்கியம், அதற்குமேல் பரவிந்து, அதற்குமேல் பரநாதம், அப்பால் சிவனுடைய பூரணம் அளவு எல்லைப்படாதாதலால், எல்லாப்பொருளுக்கு முடிவுமாயிருப்பது திருமுடியாதலால், சிவபாதமுந் திருமுடியு மொருவர்க்கும் அளவுபடுத்த முடியாதாதலாலும்,

“பேதையொருபாற் றிருமேனி யொன்றல்லன்” என்பது முன்சொல்லப்பட்ட லோகங்களிடத்தும் அதற்குமேலுங் கீழுஞ் சத்தி சிவான்மகபூரணமாக விருக்கையாலே ஒருவடிவாய் ஏகதேசியுமா யிரான் ஆதலாலும், “வேதமுதல்விண்ணோரு மண்ணுந் துதித்தாலுமோத வுலவா ஒருதோழன் றொண்டருளன்”என்பது, சதுர்வேதங்களும் பிரம விட்டுணுக்களாகிய தேவர்களும் பூமியிலுள்ளவர்களும் அளவற்ற தோத்திரம் பண்ணினுலும் அந்தத் தோத்திரத்தினு லின்ன மட்டென்று அளவு படுத்தமுடியாமல் முன்சொன்ன தேவர்கள் திரட்சியாகிய வீட்டர்கள் தோன்றலுள் சாத்திரங்களைக்கிளறிக்கிளறிப்பலபடப்பன்னியுந் தெரியாத வஸ்துவை, “கோதில்குலத்தரன்றன்கோயிற் பிணாப்பிள்ளைகாள்” என்பது உபாதிசூனியனுய் நிர்மலனுய் அரனென்னுந் திருநாமத்தையுடையவனுமா யிருக்கிற சிவனுக்கு ஆலயமான சுத்தமாயையிற் சுத்த வித்தையிலிருந்து தம்பிரானுர் பணிவிடையாகப் பிரபஞ்ச காரியத்தைப் பண்ணுமவர் வாமைமுதலாகிய சிவசத்திகள். “ஏதவனூ ரேதவன்பேராருற்று ராரயலாரேதவனைப்பாடும் பரிசேலோரெம்பாவாய்”என்பது,இப்படியே யுணர்ந்தார்க்கும் உணர்வரியோனுகிய சிவபெருமானுக்கு ஊர் ஏது, பேர் ஏது, உற வார், அடுத்தோ ரார், இவைகளொன்று மில்லாமையா லிந்த முறைமையுடைய சிவபெருமானைப் பாடும்வண்ண மெவ்வண்ணமோ தோழி என்றவாறு. (கo)

மொய்யார்தடம்பொய்கைபுக்குமுகேரென்னக்
கையாற்குடைந்துகுடைந்துன்கழல்பாடி
ஐயாவழியடியோம் வாழ்ந்தோங்காணுரழல்போற்
செய்யாவெண்ணீருடிசெல்வாசிறுமருங்குல்

மையார்தடங்கண்மடந்தைமணவாளா
ஐயாநீயாட்கொண்டருளும்விளையாட்டி
னுய்வார்களுய்யும்வகையெல்லாமுய்ந்தொழிந்தோ
மெய்யாமற்காப்பாயெமையேலோரெம்பாவாய்.

ப - ரை. மொய்ஆர் தடம்பொய்கைபுக்கு-கூட்டமாகியபெரியதடங்களிற்சென்று,கையால் முகேர் என்னகுடைந்துகுடைந்து-கையினால் நீரைமுகேரென் றிறைத்துக் குளித்துக் குளித்து, உன்கழல்பாடி - உன்திருவடியைப்பாடி, ஐயா - ஐயனே, வழியடியோம் வாழ்ந்தோம் - வழித்தொண்டினேம் பிழைத்தோம், ஆர் அழல்போல் செய்யா - நிறைந்த நெருப்புப்போலச் செம்மையனே,வெண்ணீறுஆடி - திருவெண்ணீற்றை யுடையானே,செல்வா - பெருஞ்செல்வமுடையானே, சிறுமருங்குல் - சிற்றிடையையும், மைஆர்தடம்கண் - அஞ்சனமெழுதிய பெருங்கண்களையுமுடைய, மடந்தை மணவாளா - உமாதேவி நாயகனே, ஐயா - அழகனே, நீஆட்கொண்டருளும் விளையாட்டின் - நீயடிமைகொண்டருளின திருவிளையாட்டினால், உய்வார்கள் உய்யும்வகை - உய்வோர் உய்யும்வகையாக, எல்லாம்-எல்லாப்படியாலும், உய்ந்தொழிந்தோம்-உய்ந்தேவிட்டோம், எம்மை - எங்களை, எய்யாமல் காப்பாய் - இளைக்காதவண்ணம் காத்தருளவேண்டும், ஏலோ——— எ - று.

க - ரை. இறைவனே, பெரியதடாகத்தில் முழுகி உன் திருவடியைத் தோத்திரம்பண்ணி உய்ந்தோம், எங்களைக் காத்தருளல் வேண்டும் என்பதாம்.

வி - ரை. ஐயா என்னும் இரண்டனுள் முன்னையதில் ஐ தலைமை, பின்னையதில் ஐ அழகு. முகேர் - ஒலிக்குறிப்பு. (கக)

ஆர்த்தபிறவித்துயர்கெடநாமார்த்தாடுந்
தீர்த்தனற்றில்லைச்சிற்றம்பலத்தேதீயாடுங்
கூத்தனிவ்வானுங்குவலயமுமெல்லோமுங்
காத்தும்படைத்துங்கரந்தும் விளையாடி
வார்த்தையும்பேசிவளைசிலம்பவார்கலைக
ளார்ப்பரவஞ்செய்யவணிகுழன்மேல்வண்டார்ப்பப்
பூத்திகழும்பொய்கைகுடைந்துடையான்பொற்பாத
மேத்தியிருஞ்சுனைநீராடேலோரெம்பாவாய்.

ப - ரை. ஆர்த்த - நம்மைப்பிணித்த, பிறவித்துயர்கெட - பிறவித்துன்பமொழிய, நாம்ஆர்த்துஆடும் - நாம் களித்தாடுகின்ற,

தீர்த்தன்-பரிசுத்தகுண சாகரமா யிருப்பவன்,நல் தில்லைச்சிற்றம்பலத்தே தீயாடும்-நல்ல தில்லைச்சிற்றம்பலத்தின்கண்ணே அனலோடாடுகின்ற, கூத்தன் - கூத்தினையுடையான், இவ்வானும் குவலயமும் எல்லோமும் - இவ்வானுலகத் தாரையும் மண்ணுலகத்தாரையும் எல்லோமாகிய நம்மையும், காத்தும்- காப்பாற்றியும், படைத்தும் - படைத்தலைச் செய்தும், கரந்தும் - சங்கரித்தலைச் செய்தும், விளையாடி-விளையாடுதலையுடையவன், வார்த்தையும் பேசி - அவன் புகழையும் சொல்லி, வளைசிலம்ப - வளையல் ஒலிக்கவும், வார்கலைகள் ஆர்ப்புஅரவம் செய்ய - பெரியமேகலைகள் ஆரவாரித்தொலிக்கவும், அணிகுழல் மேல்வண்டு ஆர்ப்ப -அழகிய கூந்தலின் மேல் வண்டுகள்முழங்கவும், பூ திகழும் பொய்கை குடைந்து-மலர்கள் விளங்குகின்ற பொய்கையிற் குளித்து, உடையான் பொற்பாதம் ஏத்தி - இறைவனது பொன்னடியைத் துதித்து, இருஞ்சுனை நீர்ஆடு - பெரிய சுனைநீரின்கண் மூழ்கு. ஏலோ-எ - று.

க - ரை. நமது பிறவித் துன்பம் ஒழியும்படி தில்லைச் சிற்றம்பலத்தில் திருநிருத்தம் செய்வோனாகிய சிவபெருமானது புகழைப் பாடி அவன் திருவடியைத் துதித்துப் பெரிய சுனைநீரில் மூழ்குவாயாக என்பதாம். (கஉ)

பைங்குவளைக்கார்மலராற்செங்கமலப்பைம்போதா
 லங்கங்குருகினத்தாற்பின்னுமரவத்தால்
தங்கண்மலங்கழுவுவார்வந்துசார்தலினு
 லெங்கள்பிராட்டியுமெங்கோனும்போன்றிசைந்த
பொங்குமடுவிற்புகப்பாய்ந்துபாய்ந்துநஞ்
 சங்கஞ்சிலம்பச்சிலம்புகலந்தார்ப்பக்
கொங்கைகள்பொங்கக்குடையும்புனல்பொங்கப்
 பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

ப - ரை. பை குவளை கார் மலரால் - பசிய குவளையின் கரிய மலர்களை யுடைமையாலும், செங்கமலப் பைம்போதால் - பசுமையாகிய செந்தாமரை மலர்களை யுடைமையாலும், அம் குருகு இனத்தால் - அழகிய குருகினத்தை யுடைமையாலும்ா பின்னும் அரவத்தால் - மேலும் அரவத்தை யுடைமையாலும், தங்கண் மலம் கழுவுவார் வந்து சார்தலினல் - தங்கள் மலத்தை யொழிக்க முயல்வார் வந்தடைதலாலும், எங்கள் பிரா ட்டியும் எங்கோனும் போன்று இசைந்த - எங்களுடைய பெரு

மாட்டியும் எங்கள் பெருமானும் போன்று இருந்த, பொங்கு மடுவில் புகப் பாய்ந்து பாய்ந்து - நீர் பொங்குகின்ற மடுவினிடத்துப் புகவீழ்ந்து வீழ்ந்து, நம் சங்கம் சிலம்ப - நமது சங்க வளையல்கள் ஒலிக்கவும், சிலம்பு கலந்து ஆர்ப்ப - சிலம்பொலியும் அதனோடு கூடி யொலிக்கவும், கொங்கைகள் பொங்க - ஸ்தநங்கள் பூரிக்கவும், குடையும் புனல் பொங்க - ஆடுகின்ற நீர் பொங்கவும், பங்கயம்பூ - தாமரை மலர்கள் அடர்ந்த, புனல் - நீரினிடத்து, பாய்ந்து ஆடு - குதித்து ஆடுவாயாக, ஏலோ-எ - று.

க - ரை. குவளைமலர் முதலியவற்றை யுடைத்தாகி, எம்பிராட்டியும் எம்பிரானும் போன்று விளங்குகின்ற பொய்கையில் சங்க வளையல் முதலானவை ஒலிக்க நீராடுவாயாக என்பதாம்.

வி - ரை. மடுவானது கருங்குவளைமலரை யுடைத்தாதலால் எம்பிராட்டியின் திருமேனி போன்றும், செந்தாமரை மலரை யுடைத்தாதலால் எம்பிரான் திருமேனி போன்றும் இருந்தது. குருகைப் பிராட்டிக்கும் பிரானுக்கும் கொள்ளும்போது முறையே வளையல் கொக் கிறகு எனவும், மடுவுக்குக் கொள்ளும் போது பறவைப்பொது எனவும், அரவத்தை இறைவிக்கும் இறைவனுக்கும் கொள்ளும்போது பாம்பு எனவும் மடுவுக்குக்கொள்ளும்போது ஓசைஎனவும், மலங்கழுவுவார் வந்து சார்தலை இறைவிக்கும் இறைவனுக்கும் கொள்ளும்போது ஆன்ம அழுக்காகிய மும்மலங்களைப் போக்க வருவோராகிய அன்பர் அடைதல் என்றும், மடுவுக்குக்கொள்ளும்போது உடம்பழுக்கைப் போக்க நினைப்பவர் வந்து அடைதல் என்றும் கொள்க.

கருங்குவளை மலரைப் பிராட்டியின் கண்ணுக்கும் இறைவன் திருமிடற்றுக்கும், செந்தாமரைமலரை இறைவியின் திருமுகத்திற்கும் உவமையாகக் கொள்ளினுமாம். பின்னும் அரவம் என்பதனை அரவம் போன்ற பின்னலை எனவும் கொள்ளலாம். "குவளைக் களத்தம் பலவன்" என்றார் திருக்கோவையாருள்ளும். (கங)

காதார்குழையாடப்பைம்பூண்கலனாடக்
கோதைகுழலாடவண்டின்குழாமாடச்
சீதப்புனலாடிச்சிற்றம்பலம்பாடி
வேதப்பொருள்பாடியப்பொருளாமாபாடிச்
சோதிதிறம்பாடிச்சூழ்கொன்றைத்தார்பாடி
யாதிதிறம்பாடியந்தமாமாபாடிப்

பேதித்துநம்மைவளர்த்தெடுத்தபெய்வளைதன்
பாதத்திறம்பாடியாடேலோரெம்பாவாய்.

ப - ரை. காதுஆர் குழைஆட - செவியிற் பொருந்திய குண்டலங்கள் ஆடவும், பைம்பூண் கலன்ஆட - பசும் பொன்னுலியன்ற ஆபரணங்க ளாடவும், கோதை குழல்ஆட - பூமாலையை அணிந்த கூந்தலாடவும், வண்டின் குழாம்ஆட - வண்டுக் கூட்டங்கள் ஆடவும், சீதப் புனல் ஆடி - குளிர்ச்சியாகிய நீரில் மூழ்கி, சிற்றம்பலம்பாடி - சிற்றம்பலத்தைப் புகழ்ந்து பாடி, வேதப் பொருள் பாடி - வேதப்பொருளாகிய இறைவனைப்பாடி, அப்பொருள் ஆமாறு பாடி-இறைவன் அந்த வேதப்பொருள்ஆகும் வகையையும் பாடி,சோதி திறம் பாடி - ஒளிப் பிழம்பின் கூறுபாட்டைப் பாடி, சூழ்கொன்றைத் தார்பாடி-முடியில் வளைத்தமைக்கப்பட்ட கொன்றைப் பூமாலையைப் பாடி, ஆதி திறம்பாடி - அவனது முதலாம் தன்மையைப் பாடி, அந்தம் ஆமாறு பாடி - இறுதியாம்தன்மையையும் பாடி,பேதித்து-பிரபஞ்ச வாசனையைக் கெடுத்து, நம்மை வளர்த் தெடுத்த-எங்களைவளர்த் தெடுத்த, பெய்வளை தன்-எம்பிராட்டியது, பாதத்திறம் பாடி-ஸ்ரீபாத மஹிமையைப் பாடி, ஆடு - ஆடுவாயாக, ஏலோ——எ - று.

க - ரை. குண்டலங்கள் முதலியவும் அசையும்படி நீராடி எம்பிரான் எம்பிராட்டி என்னும் இருவரையும் தோத்திரம் பண்ணுவாயாக என்பது. (௧௪)

ஓரொருகாலெம்பெருமானென்றென்றேநம்பெருமான்
சீரொருகால்வாயோவாள்சித்தங்களிகூர
நீரொருகாலோவாநெடுந்தாரைகண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணி[யாள்
பேரரையற்கிங்ஙனேபித்தொருவராமாறு
மாரொருவரிவ்வண்ணமாட்கொள்ளும்வித்தகர்தாள்
வாருருவப்பூண்முலையீர்வாயாரநாம்பாடி
யேருருவப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

ப - ரை. ஓரொருகால் - ஒவ்வொருகால், எம்பெருமான் என்றென்றே - எம்பெருமான் என்று சொல்லா நின்றே, நம்பெருமான் - நம்மிறைவனது, சீர் - பெருமையை, ஒருகால் - ஒருகாலும், வாய் ஓவாள் - வாயா லுச்சரித்தலை நீங்காள், சித்தம் களிகூர - மனங்களி மிக, கண் - விழிகளில் நின்றும், ஒருகால் -

ஒருகாலத்தும, நீர் ஓவா - நீரிடை யறாத, நெடுந்தாரை பனிப்ப - நெடிய நீர்த்தாரைகளைத் துளிக்க, பார் - பூமியின்மேல் விழுந்து நின்று, ஒருகால் - ஒருதரம், வந்தனையாள் - வந்திப்பாள், விண்ணோரைப் பணியாள் - பிற தேவர்களை வணங்காள், பேர் அரையற்கு - பெரிய இறைவன் பொருட்டு, ஒருவர் பித்துஆம் ஆறும் - ஒருவர் பித்தரா மாறும், இங்ஙனே - இவ்வாறே, இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர் ஆர் ஒருவர் - இவ்வாறு அடிமைகொள்ளும் வித்தகர் யார் ஒருவர், தாள் - (ஆதலால் அவ்விறைவனது) திருவடியை, வார் உருவு - கச்சையுருவிச் செல்லாநின்ற, அப்பூண் முலையீர் - அத்தன்மையவான பூணணிந்த கொங்கைகளையுடையீரே, நாம் வாயாரப் பாடி - நாம் வாயார ஸ்தோத்ரம் பண்ணி, ஏர் உருவம் - அழகும் ஒளியு முள்ள, பூ - மலர்கள் செறிந்த, புனல்-நீரில், பாய்ந்தாடு-குதித்து முழுகுதல்செய்வாம், ஏலோ —— எ - று.

க - ரை. ஒருகால் எம்பெருமானே யென்று இறைவனது பெரும் புகழைச் சிறப்பிப்பாள், ஒருகால் மிகுதியாகக் கண்ணீர் சிந்துவாள். இப்படி இறைவன் பொருட்டுப் பித்தேறினார் ஒருவரு மில்லை யென்பதாம். (கரு)

முன்னிக்கடலைச்சுருக்கியெழுந்துடையா
ளென்னத்திகழ்ந்தெம்மையாளுடையாளிட்டிடையின்
மின்னிப்பொலிந்தெம்பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ்சிலம்பிற்சிலம்பித்திருப்புருவ
மென்னச்சிலைகுலவிநந்தம்மையாளுடையா
டன்னிற்பிரிவிலாவெங்கோமானன்பர்க்கு
முன்னியவணமக்குமுன்சுரக்குமின்னருளே
யென்னப்பொழியாய்மழையேலோரெம்பாவாய்.

ப - ரை. மழை-மேகமே, முன்-எதிரே உள்ள, இ கடலைசுருக்கி-இந்தக்கடல் நீரைக் குறைத்து, எழுந்து-மேலெழுந்து, உடையாள் என்னத் திகழ்ந்து - எம்பெருமாட்டிபோல விளங்கி, எம்மை ஆள் உடையாள் - எம்மை யடிமைகளாக வுடையவளது, இட்டு இடையின் மின்னிப் பொலிந்து - சிற்றிடைபோல மின்னிப்ரகாசித்து, எம்பிராட்டி திருவடிமேல் - எம்பெருமாட்டியின் திருவடிமேலணிந்த, பொன்னஞ் சிலம்பின் சிலம்பி - பொன்னினாற் செய்யப்பட்ட சிலம்புபோல ஒலித்து, திருபுருவம் என்ன - திருப்புரு

வம்போல, சிலை குலவி - இந்திரதநுசு விளங்கப்பெற்று, நம்தம்மை ஆளுடையாள் தன்னின் பிரிவு இல்லா - நம்மை யாளுடையாளிடத்து நின்றும் பிரிதலில்லாத, எங்கோமான் - எம்மிறைவன், அன்பர்க்கு முன்னி - அன்பர்கட்கு முந்தி, அவண் - அவ்விடத்து, நமக்கு முன் - நம்மிடத்தில், சுரக்கும் - சுரக்கின்ற, இன் அருளே என்ன - இனிய அருளேபோல, பொழியாய் - மழையைச் சொரிவாய், ஏலோ——,எ - று.

க - ரை. மேகமே நீ கடல்நீரைப் பருகி, கறுத்தெழுந்து எம்பிராட்டிபோல் விளங்கி, அவளது சிற்றிடைபோல மின்னுதல் செய்து, அவளது சிலம்புபோல் சத்தித்து, அவளது திருப்புருவம் போல வானவில்லை யுடையையாகி, அவளைப் பிரியாத எம்பெருமானுடைய அன்பர் மீது சுரக்கின்ற திருவருள்போல நீரைப் பொழிவாயாக என்பதாம்.

வி - ரை. கடலைச் சுருக்குதல் கடலைக் குறைத்தல். "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும், தடிந் தெழிலிதா னல்காதாகிவிடின்" என்னுந திருக்குறளில் "தடிந்தெழிலி" என்பதும் இக்கருத்தே பற்றி வந்தது. நீருண்ட மேகம் கறுத்திருத்தல் இயல்பாதலால் "உடையா ளென்னத் திகழ்ந்து" என்றார். இட்டு - சிறுமை, சிலை - வில், அது இங்கு வானவில்லை யுணர்த்திற்று (கசு)

செங்கணவன்பாற்றிசைமுகன்பாற்றேவர்கள்பா
 லெங்குமிலாததோரின்பநம்பாலதாக்
கொங்குண்கருங்குழலிநந்தம்மைக்கோதாட்டி
 யிங்குநம்மில்லங்கடோறுமெழுந்தருளிச்
செங்கமலப்பொற்பாதந்தந்தருளுஞ்சேவகனை
 யங்கணரசையடியோங்கட்காரமுதை
நங்கள்பெருமானைப்பாடிநலந்திகழப்
 பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்

ப - ரை. கொங்குஉண் கருங்குழலி - மணந்தங்கிய கரிய கூந்தலை யுடையாளே, செங்கணவன்பால் - திருமாலினிடத்தும், திசை முகன்பால் - பிரமனிடத்தும், தேவர்கள்பால் - மற்றைத் தேவர்களிடத்தும், எங்கும் - எஞ்சிநின்ற மற்றெவ்விடத்தும், இல்லாதது - இல்லாததாகிய, ஓர் - ஒப்பற்ற, இன்பம் - ஆநந்தம், நம்பாலதுஆ - நம்மிடத்த தாம்படி, நந்தம்மைக் கோதாட்டி - நம்மைச் சீராட்டி, இங்கு நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளி -

இவ்விடத்தில் நம் வீடுகள்தோறும் எழுந்தருளி, செங்கமலம் - செந்தாமரை மலர்போன்ற, பொன் பாதம் - பொன்னடியை, தந் தருளும் - கொடுத் தருள்கின்ற, சேவகனை - சேவகமுடையானை, அங்கண் அரசை - கிருபா நோக்கத்தை யுடைய இறைவனை, அடியோங்கட்கு ஆர் அமுதை - அடியோங்களுக்கு அரிய அமுது போல்வானை, நங்கள் பெருமானை - எம்பெருமானை, பாடி - பாடு தல் செய்து, நலம் திகழ - நன்மைகள் மேன்மேலுயர, பங்கயப்பூ - தாமரை மலர்கள் செறிந்த, புனல் - நீரில், பாய்ந்து ஆடு - குதித்து மூழ்குவாய், ஏலோ——,எ - று.

க - ரை. திருமால் முதலான தேவர்களுக்கும் கிடையாத இன்பத்தை எமக்கு எளிதிற் கொடுத்தருளின இறைவனைப் புகழ் ந்துபாடி நீராடுவாயாக என்பதாம்.

வி - ரை. "கண்ணுக் கணிகலங் கண்ணோட்டம்" என்கிற படி கண்ணுக்கு அழகாவது கிருபையாதலால் அம்கண் என்பத ற்குக் கிருபா நோக்கம் என்று பொரு ளுரைக்கலாயிற்று. (க௭)

அண்ணாமலையானடிக்கமலஞ்சென்றிறைஞ்சும்
விண்ணோர்முடியின்மணித்தொகைவீறற்றாற்போல்
கண்ணாரிரவிகதிர்வந்துகார்கரப்பத்
தண்ணாரொளிமழுங்கித்தாரகைகடாமகலப்
பெண்ணாகியாணயலியாய்ப்பிறங்கொளிசேர்
விண்ணாகிமண்ணாகியித்தனையும்வேறாகிக்
கண்ணாரமுதமுமாய்நின்றான்கழல்பாடிப்
பெண்ணேயிப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

ப - ரை. அண்ணாமலையான் - அண்ணாமலையானது, அடிக் கமலம் - பாதாரவிந்தங்களை, சென்று இறைஞ்சும் - சென்று பணிகின்ற, விண்ணோர் முடியின் - தேவர்களுடைய முடிகளி லுள்ள, மணித் தொகை - மணித் தொகுதி, வீறு அற்றாற்போல் - மேன்மையற்றாற்போல, கண் ஆர் - பெருமைமிகுந்த, இரவிகதிர் - சூரியனாகிய ஒளியுடைப் பொருள், வந்து கார்கரப்ப - வந்து மேகத்தின்கண்ணே மறையா நிற்கவும், தாரகைகள் - உடுக்கள், தண் ஆர் ஒளிமழுங்கி அகல - குளிர்ச்சி பொருந்திய பிரகாசங் குறைந்து நீங்காநிற்கவும், பெண் ஆகி - பெண்ணுருவாகி, ஆண் ஆய் - ஆணுருவாகி, அலிஆய் - அலியுருவாகி, பிறங்கு - விளங்கு கின்ற, ஒளிசேர் - ஒளிபொருந்திய, விண் ஆகி - ஆகாயமாகி, மண்

ஆகி - பூமியாகி, இத்தனையும் வேறுஆகி-இத்தனைப் பொருள்களினின்றும் வேறுபிரிந்து, கண்ஆர் அமுதமும் ஆய்நின்றான் - பெருமை நிறைந்த அமுதுமாகி நின்றவனது, கழல்-திருவடிகளை, பாடி-பாடுதல்செய்து, பெண்ணே-மாதே, இப்பூம்புனல் பாய்ந்துஆடு - இந்தப் பொலிவாகிய நீரிற் குதித்து மூழ்குவாய். ஏலோ—எ - று.

க - ரை. அண்ணாமலையானது திருவடியை வணங்கவந்த தேவர்களுடைய கிரீடத்திலுள்ள இரத்தினங்கள் ஒளி யிழந்தாற் போலச் சூரியன் ஒளி குறைந்து மேகத்தில் மறையாநிற்கவும், உடுக்கள் ஒளி குறைந்து நீங்காநிற்கவும், பெண்ஆண் அலி முதற்பல வேறுருவாய் விளங்குஞ் சிவ பெருமானது திருவடியைப் புகழ்ந்து இந்த நீரில் குளிப்பாயாக என்பதாம்.

வி - ரை. மார்கழிமாதமாகையால் 'கண்ணாரிரவிகதிர்வந்து கார்கரப்ப' எனவும், விடியற்காலமாகையால் "தண்ணாரொளி மழுங்கித் தாரகைகடாமகல" என்றும் கூறினார். அகலப் புனல் பாய்ந்தாடுக என இசைத்துக் கொள்க. (கஅ)

உங்கையிற்பிள்ளையுனக்கேயடைக்கலமென்
றங்கப்பழஞ்சொற்புதுக்குமெம்மச்சத்தால்
எங்கள்பெருமானுனக்கொன்றுரைப்போங்கே
ளெங்கொங்கைநின்னன்பரல்லார்தோள்சேரற்க
எங்கையுனக்கல்லாதெப்பணியுஞ்செய்யற்க
கங்குல்பகலெங்கண்மற்றொன்றுங்காணற்க
இங்கிப்பரிசேயெமக்கெங்கோனல்குதியே
லெங்கெழிலென்ஞாயிறெமக்கேலோரெம்பாவாய்.

ப - ரை. உம்கையில்பிள்ளை - உம்கையிலுள்ள பிள்ளை, உனக்கே அடைக்கலம்என்ற-உனக்கே யடைக்கலமாமென்ற, அங்கு அப்பழஞ்சொல் - அந்தப் பழமொழியை, புதுக்கும் - புதுக்குகின்ற, எம்அச்சத்தால் - எமது அச்சத்தினால், எங்கள் பெருமான் - எம்பெருமானே, உனக்கு ஒன்று உரைப்போம் கேள் - உனக்கு ஒரு செய்தி சொல்வோம் கேட்பாய், எம்கொங்கை - எம்முடைய ஸ்தனங்கள், நின்அன்பர் அல்லார் தோள்சேரற்க - உன்னடியரல்லாதாருடைய தோள்களைத் தழுவாதொழியக் கடவன, எம்கை - எம்முடைய கைகள், உனக்கு அல்லாது - உனக்கேயன்றி, எப்பணியும் செய்யற்க - எந்தப் பணிவிடையையும் செய்யாதொழியக்கடவன, கங்குல்பகல் - இரவும் பகலும், எம்

கண் - எம்முடைய கண்கள், மற்றொன்றொன்றும் காணற்க - (உன்னையன்றி) வேறெந்தப் பொருளையுங் காணுதொழியக் கடவன, இங்கு - இவ்விடத்து, இப்பரிசே - இவ்வாறே, எங்கோன் - எம்மிறைவனே, எமக்குநல்தியேல் - எமக்குப் பிரசாதிப்பையாயின், ஞாயிறுஎங்கு எழில் எமக்குஎன் - சூரியன் எந்தத்திக்கில் உதித்தாலும் எமக்கென்ன பயம், ஏலோ—எ - று.

க - ரை. கடவுளே, எமது அவயவங்கள் யாவும் உன் திருப்பணிக் குரியவாகும்படிக் கருணை செய்வாயானால், சூரியன் திசை மாறி உதித்தாலும் எமக்கொரு குறையுமில்லை யென்பதாம்.

வி - ரை. சூரியன் திசைமாறித் தோன்றினும் இறைவனடியார் கலங்காரென்பது தோன்ற "எங்கெழிலென் ஞாயிறு எமக்கு" என்றார். உன்னுடைமையைக் காத்தல் உனக்கேஉரியது எனப் பொருள்படும் "உன்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்" என்னும் பழமொழியைப் புதுக்கலாவது யாமும் உன் பொருளே எமது கரணங்களும் உம்மவே என்றல். அச்சத்தால் உரைப்போம் என இயையும். (ககூ)

போற்றியருளுகநின்னாதியாம்பாதமலர்
 போற்றியருளுகநின்னந்தமாஞ்செந்தளிர்கள்
போற்றியெல்லாவுயிர்க்குந்தோற்றமாம்பொற்பாதம்
 போற்றியெல்லாவுயிர்க்கும்போகமாம்பூங்கழல்கள்
போற்றியெல்லாவுயிர்க்குமீறாமிணையடிகள்
 போற்றிமாலுன்முகனுங்காணாதபுண்டரிகம்
போற்றியாமுய்யவாட்கொண்டருளும்பொன்மலர்கள்
 போற்றியாமார்கழிநீராடேலோரெம்பாவாய்.

ப - ரை நின் ஆதியாம் பாதமலர்-உனது எல்லாப்(பொருள்களுக்கும்) முதன்மையாகிய பாதமலர்கள் - போற்றி - எம்மால் வணங்கப்படுவனவாக, அருளுக- அவற்றை) அருள்க, நின் அந்தம் ஆம் செந்தளிர்கள் - உனது (எல்லாப்பொருள்களுக்கும் முடிவிடமாகிய) செய்ய பாதமாகிய தளிர்கள், போற்றி-எம்மால்வணங்கப் படுவனவாக, அருளுக - (அவற்றை) அருள்க, எல்லாவுயிர்க்கும் - எல்லாச் சீவர்களுக்கும், தோற்றம் ஆம் பொற்பாதம் - பிறப்பிடமாகிய பொன்னடிகள், போற்றி - எம்மால் வணங்கப்படுவனவாக எல்லாவுயிர்க்கும் - எல்லாச் சீவர்களுக்கும், போகம்ஆம் பூங்கழல்கள் - போகரூபமாகிய பொன்னடிகள், போற்றி - எம்மால்

வணங்கப் படுவனவாக, எல்லாவுயிர்க்கும் - எல்லாச் சீவர்களுக்கும், ஈறு ஆம் இணை அடிகள் - லயஸ்தானமாகிய இரண்டு திருவடிகள், போற்றி - எம்மால் வணங்கப் படுவனவாக, மால் நான்முகனும் - திருமாலும் நான்முகனும், காணாத - காணவொண்ணாத, புண்டரிகம் - (உன் திருவடித்) தாமரைகள், போற்றி - எம்மால் வணங்கப்படுவனவாக, யாம் உய்ய - யாம் பிழைக்கும் பொருட்டு, ஆட்கொண்டருளும் - எம்மை அடிமைகொண்டருளிய, பொன்மலர்கள் - திருவடித் தாமரைகள், போற்றி - எம்மால் வணங்கப்படுவனவாக, யாம் மார்கழி நீர் ஆடு-யாம் செய்யும் மார்கழிநீராட்டமும், போற்றி - எம்மால்வணங்கப்படுவனவாக, எ - று.

க - ரை. எல்லாவுயிர்களும் தோன்றி யொடுங்குதல் முதலியவைகட்கிடமாகிய உன் திருவடிகளுக்கு வணக்கம் செய்கிறேன் என்பதாம்.

வி - ரை. போற்றியருளுக நின்னாதியாம் பாதமலர் என்பதற்கு நின் - உனது, ஆதிஆம் - எல்லாப்பொருள்களுக்கும் முதன்மையாகிய, பாதமலர் - தாமரைமலர்போன்ற திருவடிகளை, அருளுக - அருள்செய்வாயாக, போற்றி - நமஸ்காரம், எனினுமாம். மற்றத்தொடர்களுக்கும் இவ்வாறே பொருள்கொள்க. "மாலுன் முகனும் காணாதயாமுய்ய வாட்கொண்டருளும்" என்ற விசேடணங்களால் - புண்டரிகம் என்பதும் பொன்மலர் என்பதும் திருவடியைக் குறித்தன. (உ0)

# திருவம்மானை

—o—

ஆனந்தக்களிப்பு.

திருவண்ணாமலையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஒப்புமைபற்றிவந்த
## ஆறடித்தரவுகொச்சகக் கலிப்பா

செங்கணெடுமாலுஞ்சென்றிடந்துங்காண்பரிய
பொங்குமலர்ப்பாதம்பூதலத்தேபோந்தருளி
எங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொண்டு
தெங்குதிரள்சோலைத்தென்னன்பெருந்துறையான்
அங்கணனந்தணனாயறைகூவிவீடருளும்
அங்கருணைவார்கழலேபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. செங்கண்நெடுமாலும்-செந்தாமரைபோலுங் கண்களையுடைய நெடியமாலும், இடந்து சென்றும் - (வராக வருவாய்) நிலத்தைப் பிளந்துசென்றும், காண்பு அரிய - காணுதலருமையாகிய, பொங்கும் - விளங்குகின்ற, மலர்பாதம் - தாமரை மலர்போலுந் திருவடிகள், பூதலத்தே போந்தருளி - நிலத்திற் படும்படி பூமியிலெழுந்தருளி, எங்கள் பிறப்பு அறுத்திட்டு-எமது பிறவிக் கட்டைச் சேதித்து, எம்தரமும் ஆட்கொண்டு - எமது மரபினரையும் அடிமைகொண்டு, தெங்கு திரள்சோலை - தென்னமரங்கள் திரண்ட சோலை சூழ்ந்த, தென்நன் பெருந்துறையான் - அழகிய நன்மை யமைந்த திருப்பெருந்துறையையுடையான், அங்கணன் - கிருபா நோக்கமுள்ளவன், அந்தணன் ஆய் - அந்தணனாகி வந்து, அறைகூவி - வலிய அழைத்து, வீடு அருளும்-முத்தி நெறியை யருள்செய்த, அம்கருணை - அழகிய கருணையையும், வார்கழல் - அவனது நெடிய கழலையணிந்த திருவடியையும், பாடுதும்- (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய் - அம்மானே, எ - று.

க - ரை. திருமாலும் காண்பதற்கரிதாகிய திருவடி இந்தப் பூமியில் படும்படி திருப்பெருந்துறையி லெழுந்தருளி, எம்மை

யும் எம்மினத்தாரையும் ஆட்கொண்டு எமக்கு முத்திநெறியையும் அருள்செய்தமையால் அந்த இறைவனது கருணையையும், திருவடியின் பெருமையையும் யாம் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. அம்மானை - மகளிர் விளையாட்டிலொன்று. அங்கணன் - அழகிய கண்களை யுடையவன் எனினுமாம். அந்தணன் அழகிய தட்பத்தினை யுடையவன் என்றுரைத்தலு மொன்று. கழல் - திருவடியெனினு மமையும். சென்று இடந்தும் என்பதனை இடந்து சென்றும் என மாறுக. செங்கணெடுமாலும் என்றவும்மை உயர்வு சிறப்பு. (க)

பாரார்விசும்புள்ளார்பாதாளத்தார்புறத்தார்
ஆராலுங்காண்டற்கரியானெமக்கெளிய
பேராளன்றென்னன்பெருந்துறையான்பிச்சேற்றி
வாரர்வழியருளிவந்தென்னுளம்புகுந்த
ஆராவமுதாயலைகடல்வாய்மீன்விசிறும்
பேராசைவாரியனைப்பாடுதுங்காணம்மானாய்

ப - ரை. பாரார் - மண்ணுலகத்தாரும், விசும்புஉள்ளார் - விண்ணுலகத்தாரும், பாதாளத்தார் - பாதாள லோகத்தாரும், புறத்தார் - அயலாரும் ஆகிய, ஆராலும் - யாவராலும், காண்டற்கு அரியான் - காண்பதற்கரியவன், எமக்கு எளிய பேராளன் - எமக்கு எளியபெருமையாளன், தென்னன் பெருந்துறையான் - அழகும் நன்மையும்வாய்ந்த திருப்பெருந்துறையையுடையவன், பிச்சு ஏற்றி - எமக்குப்பித்தேறச் செய்து, வாராவழி அருளி வந்து - (மீட்டும் பிறவிக்கு) வாராத முத்திநெறியை யருளாநின்று வந்து, என்உள்ளம் புகுந்த - என்மனத்திற் பிரவேசித்த, ஆராஅமுது ஆய் - தெவிட்டாத அமுதமாகி, அலைகடல்வாய் - அசையாநின்ற கடலின்கண், மீன் - மீனின் பொருட்டு, விசிறும் - வலைவீசிய, பேராசை வாரியனை - (அன்பருக்குப்) பெருங் கருணைக் கடலாயிருப்பவனை, பாடுதும் - (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய் - எ - று.

க - ரை. மண்ணுலகத்தார் விண்ணுலகத்தார் முதலிய எல்லாராலும் காண்பதற்கரிதானவனும், திருப்பெருந்துறையிலெழுந்தருளி என்னைப் பித்தனாக்கினவனும், முத்தி வழியை அறிவித்தவனும், வலைவீசுதல் முதலிய திருவிளையாடல்களைச் செய்தவனும், கருணைக்கடலும் ஆகிய சிவபிரானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. பகிரண்டங்களி லுள்ளாரையும் தழுவிக்கொள்வதற்கு, "பாரார் விசும் புள்ளார் பாதளத்தார்" என்றதமையாது புறத்தார் என்றார். பேராளன் - கீர்த்தியை யுடையவன் எனினுமாம். ஆர்தல் - தெவிட்டுதல். அலைகடல் வாய்மீன் விசிறியதிருவிளையாடல் வருமாறு—

வையைத் துறையைச் சார்ந்த கீழ்ச் சமுத்திரத்துக் கருகிலுள்ள தண்டுறைப் பாக்கத்தில் பரதவர்களுக் கெல்லாம் தலைவனும் சிவபெருமானுடைய திருவடிகளில் மெய்யன்பு பூண்டவனுமாகிய ஒரு வலைஞன் நெடுநாள் மகப்பேறில்லாமல் வருந்துநாளில் ஒருநாள் தன் சுற்றத்தாரோடும் மீன் பிடிக்கச்செல்லுகையில், கடற்கரையினோர் புறத்து சர்வலோக நாயகியாகிய உமாதேவியார் ஒரு பெண்மகவாய்த் திருவுருக் கொண்டு ஒரு புன்னை மரநிழலில் அழுதுகொண் டிருந்தனள். பரதவர்கோன் அக் குழந்தையைக் கண்டு, மதுரைப் பெருமானே மனமிரங்கி அளித்தன னென்று, அடங்காப் பெருமகிழ்ச்சி கொண்டு, தன் வீட்டிற்குக்கொண்டு சென்று மனைவி கையிற்கொடுத்து வளர்த்து வந்தனன். பிராட்டி அவ்வாறு வளர்ந்து வருகையில், நந்திதேவர் ஒரு சுறுமீனுகிக் கடலடைந்து கப்பல் முதலியவைகளைச் சேதப்படுத்திப் பரதவர்க்கு மிகுந்த இடையூறு செய்யுங்கால், அப்பரதவர் கோன் தன்கிளை ஏருடன் கடலிற் சென்று பல தரம் பிடிக்க முயன்றும் அகப்படாமல் தீங்கு விளைக்கக் கண்டு, இக்கொடிய மகரத்தைப் பிடிப்பவன் எவனோ அவனே என்புதல்விக்கு மணாளன் என்று பிரசித்தப்படுத்தி யிருந்தனன். அப்போது சிவபெருமான் ஓர் வலைஞனாகி, தன் கணத்தவரில் ஒருவன் பரதவனாய் மீன் வலையைத் தோளிலிட்டு, பின் தொடர்ந்து வர, தண்டுறைப்பாக்க மடைந்து, பரதவர்கோன் வேண்டுகோளால், சிவபெருமானாகிய வலைஞன் படவேறிச்சென்று வலை வீசியவுடனே அம்மகரம் வலையிற் சிக்கியது. அது கண்ட வலைஞர்கள் யாவரும் சந்தோஷத்தால் ஆரவாரித்தனர். பரதவர் வேடம் பூண்ட சிவபெருமான் அதனைக்கொண்டு கரையிலிட்டனர். பரதவர்கோன் பெருமகிழ்ச்சிகொண்டு தன்புதல்வியை வலைஞனாய் வந்த சிவபெருமானுக்கு மணஞ்செய்வித்தனன். அப்போதே மணமகனும் மணமகளும் பழயவடிவோடு ஆகாயத்தில் விடைமேற்கொண்டு தோன்ற, கரையிலிருந்த மகரமும் நந்திதேவராய்த் தோன்ற, பரதவர்கோன் தரிசித்து துதித்து நிற்கையில், எம்பெருமான் அவனைநோக்கி, நீ குபேரனைப்போல் வாழ்ந்து

நம்முலகமடைவா யென்று கூறி, அங்கிருந்து உத்தரகோச மங்கை யென்னும் திருப்பதியடைந்து, அங்கே உமாதேவிக்கு வேதார்த்தங்களை உபதேசித்தனர். மேலும் சிவபெருமான் அங்கு வந்த அறுபதினாயிரம் லக்ஷஸ்திரீகளுக்கும் உபதேசித்து வீடு தந்து, மதுரையம்பதி யடைந்தனர். (உ)

இந்திரனும்மாலயனுமேனோரும்வானோரும்
அந்தரமேநிற்கச்சிவனவனிவந்தருளி
எந்தரமுமாட்கொண்டுதோட்கொண்டநீற்றனாய்ச்
சிந்தனையைவந்துருக்குஞ்சீரார்பெருந்துறையான்
பந்தம்பறியப்பரிமேற்கொண்டான்றந்த
வந்தமிலாவானந்தம்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. இந்திரனும்-தேவர்பிரானும், மால்அயனும் - திருமாலும் பிரமனும், ஏனோரும் - மற்றையரும், வானோரும் - சாதாரண தேவர்களும், அந்தரமே நிற்க - விண்ணிலே நிற்க, சிவன் அவனிவந்தருளி-சிவபெருமான் பூமிக்கு எழுந்தருளி, எம்தரமும் ஆட்கொண்டு - எம்மரபினரையும் அடிமைகொண்டு, தோள் கொண்ட நீற்றனாய் - திருவெண்ணீற்றைத் தோளின்மீ தணிந்தவனாய், வந்து - எம்மிடத்து வந்து, சிந்தனையை உருக்கும் - எம் மனத்தை யுருக்குகின்ற, சீர்ஆர் பெருந்துறையான் - சிறப்புப் பொருந்திய திருப்பெருந்துறையை யுடையான், பந்தம் பறிய - (சேவிப்போர்களுடைய பிறவிக்) கட்டு நெகிழும்படி, பரிமேல் கொண்டான் - குதிரைமேற் கொண்டு வந்தவன், தந்த - (அவன்) அருள்செய்த, அந்தம்இல்லா - முடிவில்லாத, ஆனந்தம் - இன்பத்தை, பாடுதும்-யாம் புகழ்ந்து பாடுவோம்,அம்மானாய்——,எ-று.

க - ரை. இந்திரன் முதலான தேவர்களும் முனிவர் முதலானோரும் விண்ணிலே நிற்க, எங்களை ஆட்கொள்ளும் பொருட்டுப் பூவுலகில் எழுந்தருளி, எங்கள் மனத்தை யுருகப்பண்ணின திருப்பெருந்துறையான் எமக்குக் கிருபைசெய்த முடிவற்ற இன்பத்தைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. பந்தம் எனவாளா கூறினும் பிறவிக் கட்டென்றுரைக்கலாயிற்று, ஒழியவேண்டியததுவாதலால். குதிரைச் சேவகனாகிக் கூடற்பதியி லெழுந்தருளின வரலாற்றைத் திருவுளம்பற்றி "பரிமேற் கொண்டான்" என்றார். இதனை வாதவூரடிகள் புராணம் குதிரையிட்ட சருக்கத்திற் காண்க. "தோட்கொண்ட

நீற்றனைச் சிந்தனையை வந்துருக்கும" என்றமையால் இறைவனது திருத்தோளிலணிந்த திருவெண்ணீற்றழகில் தமது மனம் பதிந்தமை விளங்குகின்றது. (ரு)

வான்வந்த தேவர்களுமாலயனோடிந்திரனும்
கானின்றுவற்றியும்புற்றெழுந்துங்காண்பரிய
தான்வந்துநாயேனைத்தாய்போற்றலையளித்திட்
டூன்வந்துரோமங்களுள்ளேயுயிர்ப்பெய்து
தேன்வந்தமுதின்றெளிவினொளிவந்த
வான்வந்தவார்கழலேபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. வான்வந்ததேவர்களும் - விண்ணுலகிலுள்ள தேவர்களும், மால்அயனோடு இந்திரனும் - திருமால் பிரமன் இவர்களோடு இந்திரனும், கான் நின்று வற்றியும் - காட்டில் நின்று உலர்ந்தும், புற்றுஎழுந்தும் - தம்மீது புற்றுண்டாக அருந்தவம் செய்தும், காண்பு அரிய - காணுதல் அருமையாகிய, தான்-இறைவன், வந்து - தானே வந்து, நாயேனை - நாயினேனை, தாய்போல் தலையளித்திட்டு - தாய் போலப் பேரன்பு செய்து, உரோமங்கள் ஊன் வந்து - மயிர்கள் உடம்பின்மீது புளகிக்கப் பெற்று, உள்ளே உயிர்ப்பு எய்து - உள்ளே நெட்டுயிர்ப்பு அடைதற்கேதுவாகிய,தேன்வந்து - தேனைப்போன்று, அமுதின்தெளிவின் ஒளிவந்த - அமிர்தத்தின் தெளிவைப்போல ஒளியுருவாய் வந்த, வான்வந்த - பெருமை தங்கிய, வார்கழலே - நெடிய கழலணிந்த திருவடியையே, பாடுதும் - யாம் புகழ்ந்து பாடுவோம், அம்மானாய்———, எ - று.

க - ரை. சாமாநிய தேவர்களும்,திருமால் பிரமன் இந்திரன் முதலான பெரியதேவர்களும், காட்டிற்சென்று கடுந்தவஞ் செய்தும் காண்பதற்கரிதாகிய சிவபெருமான் தானே வலியவந்து, அடியேனைத் தாய்போலக் கிருபைசெய்து என் உடலுயிர்கள் உருகச் செய்தமையால், அவனது திருவடியைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. "புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே யுண்டியாயண்டவாணரும் பிறரும் - வற்றியாருநின் மலரடி காணார்" என செத்திலாப்பத்தில் கூறுவதனை "வான்வந்த தேவர்களு மாலயனோ டிந்திரனும் கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய" என்று இவ்விடத்துங் கூறினார், இவ்வாறு கூறுவதைப் புரோ வாதம் என்பவர் வடநூலார். தலையளி-பேரன்பு. (சு)

கல்லாமனத்துக்கடைப்பட்டநாயேனை
வல்லாளன்றென்னன்பெருந்துறையான்பிச்சேற்றிக்
கல்லைப்பிசைந்துகனியாக்கித்தன்கருணை
வெள்ளத்தழுத்திவினைகடிந்தவேதியனைத்
தில்லைநகர்புக்குச்சிற்றம்பலமன்னும்
ஒல்லைவிடையானைப்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. கல்லாமனத்து - (கற்கவேண்டியவற்றைக்) கல்லாத மனத்தையுடைமையால், கடைப்பட்ட நாயேனை-கடையனாகிய நாயினேனை, வல்லாளன் - வலியனாகிய, தென்னன்பெருந்துறையான்—, பிச்சேற்றி - பித்தேறப்பண்ணி, கல்லைப்பிசைந்து கனியாக்கி - என்மனமாகிய கல்லைப் பிசைந்து கனியாகச் செய்து, தன் கருணை வெள்ளத்து அழுத்தி - தன் கருணைப் பெருக்கில் முழுகப்பண்ணி, வினைகடிந்த வேதியனை - எம்வினைகளை யொழித்த அந்தணனை, தில்லைநகர்புக்கு - தில்லை நகரிற் பிரவேசித்து, சிற்றம்பலம்மன்னும் - சிற்றம்பலத்தில் நிலைபெற்றிருக்கிற, ஒல்லைவிடையானை- விரைந்து செல்லுதலுள்ள இடபத்தையுடையவனை, பாடுதும்- யாம் புகழ்ந்து பாடுவோம், அம்மானாய் - எ-று.

க - ரை. கற்றறிவில்லாமையால் கடையாகிய என்னையும் ஓர் பொருளாய் மதித்தாட்கொண்டு என் கல்லை நிகர்த்த மனத்தைக் குழைத்துத் தன் கருணைக் கடலில் அழுந்தும்படி செய்து என் வினையை யொழித்தருளின தில்லைச் சிற்றம்பலவனைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி-ரை. "கல்லா மனத்துக் கடைப்பட்ட" என்றதனால் கல்லாமையின் இழிவு தோன்றுகின்றது. கல்லைப் பிசைந்து கனியாக்குதல் வலியனுக்கன்றி மற்றையர்க்கு இயலாதென்றற்கு "வல்லாளன் கல்லைப் பிசைந்து கனியாக்கி" என்றார். (௫)

கேட்டாயோதோழீகிறிசெய்தவாறொருவன்
தீட்டார்மதில்புடைசூழ்தென்னன்பெருந்துறையான்
காட்டாதனவெல்லாங்காட்டிச்சிவங்காட்டித்
தாட்டாமரைகாட்டித்தன்கருணைத்தேன்காட்டி
நாட்டார்நகைசெய்யநாமேலைவீடெய்த
வாட்டான்கொண்டாண்டவாபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. தோழீ - தோழியே, ஒருவன் - ஒருத்தன், கிறிசெய்த ஆறு - எமக்கு உய்யும் வழியை உண்டாக்கின விதத்தை,

கேட்டாயோ - நீகேட்டனையோ, தீட்டுஆர் - சித்திரித்தல் அமைந்த, மதில்-மதிலானது, புடைசூழ்-புடைசூழ்ந்த, தென்னன் பெருந்துறையான்-அழகும் நன்மையும்வாய்ந்த திருப்பெருந்துறையையுடையவன், காட்டாதனஎல்லாம்காட்டி-காட்டக்கூடாதனவெல்லாங்காட்டி, சிவம்காட்டி-முத்திநெறியைக் காட்டி, தாள் தாமரை காட்டி - பாததாமரையைக்காட்டி, தன் கருணைத் தேன்காட்டி - தனது கருணையாகிய தேனைக்காட்டி, நாட்டார்நகைசெய்ய - உலகத்தார் சிரிக்கவும், நாம் மேலைவீடுஎய்த - நாம் மேன்மையாகிய வீட்டை யடையவும், ஆள்கொண்டுஆண்டஆறு - அடிமைகொண்டாண்டருளின விதத்தை, பாடுதும் - புகழ்ந்துபாடுவோம், அம்மானாய்———, எ - று.

க - ரை. தோழி, திருப்பெருந்தறையான் காட்டாதனவெல்லாங்காட்டி, சிவகதியைக்காட்டி, தன் திருவடியைக்காட்டி, தன் கருணையாகிய தேனைக்காட்டி, உலகத்தார் நகைக்கவும், யான் மேன்மையாகிய முத்தியை யடையவும் எம்மை யடிமைகொண்ட வரலாற்றைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. கிறி - வழி. தீட்டார்மதில் - எழுதப்பட்ட ஓவியங்களையுடைய அரியமதில் எனினும் பொருந்தும். இறைவனது கருணை எல்லார்க்கும் இனிமை தருதலால் கருணைத்தேன் என்றார். நாட்டார் நகைசெய்தல் பித்தனென் றெண்ணி யென்க. (சு)

ஓயாதேயுள்குவாருள்ளிருக்குமுள்ளானைச்
சேயானைச்சேவகனைத்தென்னன்பெருந்துறையில்
மேயானைவேதியனைமாதிருக்கும்பாதியனை
நாயானநந்தம்மையாட்கொண்டநாயகனைத்
தாயானதத்துவனைத்தானேயுலகேழும்
ஆயானையாள்வானைப்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. ஓயாதே உள்குவார் உள் இருக்கும் உள்ளானை - இடையறாது நினைப்பவர்களுடைய உள்ளத்தின்கண் வீற்றிருக்கும திருவுள்ளமுடையானை, சேயானை - (அல்லாதவர்க்குத்) தூரமாயிருப்பவனை, சேவகனை - மகாவீரனை, தென்னன் பெருந்துறையில் மேயானை-தென்னன்பெருந்துறையிற் பொருந்தியிருப்பவனை, வேதியனை - வேதப்பிரதிபாத்தியனை, மாதிருக்கும் பாதியனை - உமாதேவியார் இருக்கும்பாதிசரீரத்தை யுடையானை, நாயான நந்தம்மை - நாய்க்குச் சமானமாகிய நம்மை, ஆட்கொண்டநாயகனை-

அடிமைகொண்ட இறைவனை, தாயான தத்துவனை-தாய்போன்ற உண்மை யுள்ளவனை, தானே உலகு எழும் ஆயானை - தானே ஏழுலகங்களுமாகி யிருப்பவனை, ஆள்வானை - (அவற்றை) ஆண்டருள்வானை, பாடுதும் - யாம் புகழ்ந்துபாடுவோம், அம்மானாய்— எ - று.

க - ரை. இடைவிடாமல் நினைப்பவர்களுடைய மனத்தில் தங்கியிருப்பவனும், நினையாதவர்க்குத் தூரமாயிருப்பவனும், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவனும், வேதப்பிரதிபாத்தியனும், பெண்பாகனும், எம்மையாட்கொண்ட தலைவனும், தாய் போலும் மெய்யன்புடையவனும், உலகேழிலும் தானே நிறைந்து அவற்றையாள்பவனும், ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம். (எ)

பண்சுமந்தபாடற்பரிசுபடைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தின்பெம்மான்பெருந்துறையான்
விண்சுமந்தகீர்த்திவியன்மண்டலத்தீசன்
கண்சுமந்தநெற்றிக்கடவுள்கலிமதுரை
மண்சுமந்துகூலிகொண்டக்கோவான்மொத்துண்டு
புண்சுமந்தபொன்மேனிபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. பண் சுமந்த பாடல் பரிசு படைத் தருளும் - பண்ணைக்கொண்ட பாடலாகிய பரிசைப்படைத்தருளிய, பெண்சுமந்த பாகத்தின் பெம்மான் - பெண்ணைத்தாங்கிய பாகத்தையுடைய பெருமான்,பெருந்துறையான்-திருப்பெருந்துறையையுடையவன், விண்சுமந்தகீர்த்தி - விண்ணுலகத்தார் கொண்டாடுங் கீர்த்தியையுடைய, வியன்மண்டலத்து ஈசன் - பெரிய மண்ணுலகத்துக்கும் இறைவன், கண்சுமந்த நெற்றிக் கடவுள் - நெற்றிக் கண்ணையுடைய கடவுள், கலிமதுரை - கீர்த்திபொருந்திய மதுரைப் பதியில், மண்சுமந்து - மண்ணைச்சுமந்து, கூலிகொண்டு - (பிட்டைக்) கூலியாகப்பெற்று, அக்கோவால் மொத்துண்டு - அந்தப் பாண்டிய ராசனால் அடியுண்டு, புண்சுமந்த - புண்பட்ட, பொன் மேனி - பொன்போலும் திருமேனியைக் குறித்து, பாடுதும் - யாம் புகழ்ந்துபாடுவோம், அம்மானாய்,— எ - று.

க - ரை. அன்பர் பாடும் பாடலைப் பரிசிலாகக்கொண்டருள்கின்ற பெண்பாகனும்,திருப்பெருந்துறையை யுடையவனும்,தேவலோகத்தவரும் புகழும்படியான கீர்த்தியை யுடையவனும், மண்

ணுலகத்தலைவனும், நெற்றிக்கண்ணனும் ஆகிய கடவுள் கூடற் பதியில் மண்சுமந்து, பாண்டியன் கைப்பிரம்படியால் புண்பட்ட பொன்போலுந் திருமேனியைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. பாடற்பரிசு - பாடல்வகை யெனினுமாம். கலி - கீர்த்தி. மொத்துண்ணல் - அடியுண்ணல். இறைவனுக்கு மூவர் முதலிய அன்பர் பாடிய பாடலே பரிசிலாதலால், "பண்சுமந்த பாடற்பரிசு படைத்தருளும் பெண்சுமந்த பாகத்தின் பெம்மான்" என்றருளினர். அக்கோ என்பதில் அகரம் பண்டறிசுட்டு.

மண்சுமந்த வரலாற்றைத் திருவாதவூரடிகள் புராணம் மண்சுமந்த சருக்கத்திற் கண்டுகொள்க. (அ)

துண்டப்பிறையான்மறையான்பெருந்துறையான்
கொண்டபுரிநூலான்கோலமாவூர்தியான்
கண்டங்கரியான்செம்மேனியான்வெண்ணீற்றான்
அண்டமுதலாயினானந்தமிலாவானந்தம்
பண்டைப்பரிசேபழவடியார்க்கீந்தருளும்
அண்டம்வியப்புறுமாபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. துண்டப்பிறையான் - சந்திரகண்டத்தை யுடையவன், மறையான் - வேதப்பொருளானவன், பெருந்துறையான் - திருப்பெருந்துறையான், கொண்டபுரிநூலான் - முப்புரிநூலைத் தரித்தவன், கோலம் ஆ ஊர்தியான் - அழகிய இடபவாகனத்தை யுடையவன், கண்டம்கரியான் - நீலகண்டத்தை யுடையவன், செம்மேனியான் - செவந்ததிருமேனியை யுடையவன், வெண்ணீற்றான் - திருவெண்ணீற்றை யுடையவன், அண்டமுதல் ஆயினான்—ஆகாயமுதலிய பஞ்சபூதங்களுமாயினவன், (அந்தச்சிவபிரான்), அந்தம்இல்லாஆனந்தம் - முடிவற்ற ஆநந்தத்தை, பண்டைப்பரிசே - பழையமுறைமைப்படியே, பழஅடியார்க்கு ஈந்தருளும் - பழவடியார்க்குத் தந்தருள்வான், (ஆதலால் அவனது பெருங்குணத்தை) அண்டம் வியப்புறுமாறு - உலகங்களெல்லாம் வியந்து புகழும்வண்ணம், பாடுதும் - யாம் புகழ்ந்துபாடுவோம், அம்மானாய்———, எ - று.

க - ரை. பிறைச்சந்திரனையுடையவனும், வேதப்பொருளானவனும், திருப்பெருந்துறையானும், முப்புரிநூலை யுடையவனும், இடபவாகநனும், நீலகண்டனும், செவந்த திருமேனியை யுடையவனும், திருவெண்ணீற்றையுடையவனும், பஞ்சபூதமயனும் ஆகிய சிவபெருமான் தன்பழவடியார்க்கு முடிவற்ற இன்பத்தைக் கொ

டுத்தருள்வன், ஆதலால் அவனது பெருங்குணத்தை உலகமெல்லாம் அதிசயிக்கும்படிப் புகழ்ந்துபாடுவோம் என்பதாம்.

வி - ரை. துண்டம் - கண்டம் (துண்டு). புரிநூல்-முறுக்கப்பட்டநூல். (உபவீதம்). ஆ இவ்விடத்து எருதுக்காயிற்று. ஆ-பசுப் பொதுப்பெயர். அந்தமிலா வானந்தம் பழவடியார்க்கு ஈந்தருளும் என்றமையால் அடியரல்லாதார்க்கு ஈந்தருளான் என்றவாறாயிற்று. பண்டை என்பதில் ஐசாரியை. வியப்புறுமாறு என்பது வியப்புறுமா என் ஈறு தொகுத்தது. (கூ)

விண்ணாளுந்தேவர்க்குமேலாயவேதியனை
மண்ணாளுமன்னவர்க்குமாண்பாகிநின்றானைத்
தண்ணார்தமிழளிக்குந்தண்பாண்டிநாட்டானைப்
பெண்ணாளும்பாகனைப்பேணுபெருந்துறையில்
கண்ணார்கழல்காட்டிநாயேனையாட்கொண்ட
அண்ணாமலையானைப்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. விண்ஆளும்தேவர்க்கும் - விண்ணுலகத்தை யாள்கின்றதேவர்களுக்கும், மேலாயவேதியனை-மேலாகிய அந்தணனை, மண்ஆளும் மன்னவர்க்கும் - மண்ணுலகத்தை யாள்கின்ற வேந்தர்களுக்கும், மாண்புஆகிநின்றானை - பெருமையையுடையவனாய் நின்றவனை, தண்ஆர்தமிழ்அளிக்கும் - குளிர்ந்த தமிழை வளர்க்கின்ற, தண்பாண்டிநாட்டானை - தண்ணியபாண்டிநாட்டையுடையவனை, பெண்ஆளும்பாகனை - (உமாதேவியாகிய) பெண்ணினால் ஆளப்படுகிற பாகத்தை யுடையவனை, பேணுபெருந்துறையில்-யாவரும் விரும்புகின்ற திருப்பெருந்துறையின்கண், கண்ஆர்கழல் காட்டி - பெருமைநிறைந்த தன் திருவடியைக்காட்டி, நாயேனை ஆள்கொண்ட - நாயினேனை அடிமை கொண்ட, அண்ணாமலையானை - திருவண்ணாமலையானை, பாடுதும் - யாம் புகழ்ந்து பாடுவோம், அம்மானாய்——, எ - று.

க - ரை. தேவதேவனும், அரசர்க்கரசனும், திருப்பாண்டிநாட்டை யுடையவனும், பெண்பாகனும், திருப்பெருந்துறையில் தன் திருவடியைக் காட்டி அடியேனை யாட்கொண்டவனும் ஆகிய சிவபிரானைப் புகழ்ந்துபாடுவோம் என்பதாம்.

வி - ரை. விண் இடவாகுபெயராய்விண்ணுலகத்தை யுணர்த்திற்று. மண் என்பதும் அது. தமிழ் என்பதற்கு இனிமை யென்பது பொருள்.

சிவபெருமானைத் தண்பாண்டி நாட்டான் என்ற வரலாறு: உமாதேவியார் மதுராபுரியில் திருவவதாரஞ்செய்து தடாதகைப் பிராட்டியார் என்னும் திருநாமம்பூண்டு பாண்டிநாட்டை அரசு புரிந்துவருங் காலத்தில், இவரது மணப்பருவத்தைத் தாயாகிய காஞ்சனமாலைகண்டு இன்னும் நமது திருமகளுக்கு மணப்பேறு வாய்க்கவில்லையே யென்று சொல்லும்போது தடாதகைப்பிராட்டியார் அதுகேட்டு தாயே நீ நினைத்தகாரியம் நிறைவேறுங் காலம் வந்தால் முடியும், அதின்பொருட்டு நீமனம் வருந்தல் வேண்டாம் நான் உலகெங்கும் போய் திக்குவிஜயஞ்செய்து வெற்றியடைந்து மீண்டு வருகின்றேனென்று சொல்லிப் புறப்பட்டு, தேரின்மேலேறி நால்வகைச் சேனைகளும் தம்மைச்சூழ்ந்துவரச் சென்று திக்குப் பாலகரைவென்று திறைபெற்று கைலையைச் சென்று கிட்டுதலும் தன் சேனைத் தலைவர்கள் அக்கயிலைச் சூழ்ந்து ஆரவாரிக்க, அதை நந்திதேவர் அறிந்து கணங்களோடு வந்து போர்புரிந்து வெல்லமாட்டாது, நாணிச் சிவபெருமானுக்கறிவிக்க, அவர் போர்க்களத்தில் வந்து பெண்சிங்கம்போல் நிற்கும் பிராட்டியாரைக் கண்டனர். பிராட்டியாரும் சிவபெருமானை நோக்கினர். உடனே ஒரு தனம் மறைய நாணங்கொண்டு அன்போடு தன் புறவடியை நோக்கி, மண்கிளைத்து நின்றனள். இதைக்கண்ட சுமதிஎன்னும் மந்திரி இவரை நோக்கி அன்னாய் இவரே நின் மணவாளனுமென்று சொல்ல, சிவபெருமானும் பிராட்டியை நோக்கி, பெண்ணே நீ திக்குவிஜயஞ்செய்ய நினைத்து என்று புறப்பட்டனையோ அது முதல் நாம் நம் மதுராநகரத்தைவிட்டு நின்னை விடாது பின்பற்றி வந்தோம். நாம் சோமவாரத்தில் நின்னை மணஞ்செய்ய வருவோம். நீ நின் நகருக்குப் போவென்று கட்டளையிட, பிராட்டியு மதுராநகரம் வந்துசேர்ந்தனர். சிவபிரானும் தாம் சொன்னவண்ணம் சோமவாரம்வந்து தடாதகைப்பிராட்டியாரை மணம்புரிந்து சோமசுந்தரபாண்டியன் என்னும் திருநாமம் பூண்டு பாண்டிநாட்டில் அரசு செலுத்திவந்தனர் என்பது. (௪0)

செப்பார்முலைபங்கன்றென்னன்பெருந்துறையான்
தப்பாமேதாளடைந்தார்நெஞ்சுருக்குந்தன்மையினன்
அப்பாண்டிநாட்டைச்சிவலோகமாக்குவித்த
அப்பார்சடையப்பனானந்தவார்கழலே
ஒப்பாகவொப்புவித்தவுள்ளத்தாருள்ளிருக்கும்
அப்பாலைக்கப்பாலைப்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. செப்புஆர் முலைபங்கன் - செப்புப்போன்ற தனங்களையுடைய உமாதேவியைப் பாகத்திலுடையவனும், தென்னன் பெருந்துறையான் - தென்னன்பெருந்துறையை யுடையவனும், தப்பாமேதாள்அடைந்தார் - தவறாமல் தன் திருவடியை யடைந்தவர்களுடைய,நெஞ்சுஉருக்கும் தன்மையினன் - மனத்தையுருக்குகின்ற குணத்தையுடையவனும், அப்பாண்டிநாட்டை - அந்தப் பாண்டிநாட்டை, சிவலோகம்ஆக்குவித்த - சிவலோகமாகப் பண்ணின, அப்பு ஆர் சடை - கங்கைதங்கியசடையையுடைய, அப்பன் - என் தந்தையும்,ஆனந்தம் - இன்பத்தைத் தருகின்ற, வார்கழலே - நெடியகழலையணிந்த தன் திருவடிகளுக்கே, ஒப்புஆக ஒப்புவித்த உள்ளத்தார் - ஈடாக ஒப்புவித்த மனத்தையுடையவர்களுடைய, உள்இருக்கும் - உள்ளீடாயிருக்கின்ற, அப்பாலைக்கு அப்பாலை - அப்பாலுக்கு அப்பாலாய் நின்றவனும் ஆகிய சிவபிரானை, பாடுதும் - யாம் புகழ்ந்து பாடுவோம், அம்மானாய்——.

க - ரை. உமாதேவிபங்கனும், திருப்பெருந்துறையானும், திருவடியையடைந்தவரைமனமுருக்குங்குணத்தையுடையவனும், பாண்டிநாட்டைச் சிவலோக மாக்கினவனும், தன் திருவடியில் மனம்வைத்த அன்பர்மனத்திலிருப்பவனும் ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. செப்பார் முலை அன்மொழித்தொகை. அப்பு-நீர் (கங்கை). அப்பன் - உபகாரகன் எனினுமமையும். ஒப்பாக-சம்மதிப் பொருளாக. அப்பாலைக் கப்பாலையென்றது மூலப்பகுதிக்கப்புறத்தானை யென்றபடி. அப்பாலைக்கு என்பதில் ஐ சாரியை. அப்பால் - அந்தப்பகுதி. இறைவன் சோமசுந்தர பாண்டியனாய் இருந்து அரசுபுரிந்தமையால் "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த" என்றார். (கக)

மைப்பொலியுங்கண்ணிகேண்மாலயனோடிந்திரனும்
எப்பிறவியுந்தேடவென்னையுந்தன்னின்னருளால்
இப்பிறவியாட்கொண்டினிப்பிறவாமேகாத்து
மெய்ப்பொருட்கட்டோற்றமாய்மெய்யேநிலைபேறாய்
எப்பொருட்குந்தானேயாயாவைக்கும்வீடாகும்
அப்பொருளாஞ்சிவனைப்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. மைபொலியும்கண்ணி - அஞ்சனத்தாற்பொலியப் பெற்ற கண்களை யுடையாளே, கேள் - கேட்பாயாக, மால் அயனோடு இந்திரனும் - திருமால் பிரமன் இவர்களோடு இந்திரனும்,

எப்பிறவியும்தேட - எல்லாப்பிறவிகளிலுந் தேடாநிற்க, என்னையும் தன் இன் அருளால் - (ஒன்றுக்கும் பற்றாத) அடியேனையும் தனது இனிய அருளினால், இப்பிறவி ஆட்கொண்டு - இந்தச் சனனத்தில் அடிமைகொண்டு, இனிப்பிறவாமேகாத்து - இனிமேலும் பிறவாமல் காத்தருளி, மெய்ப்பொருள்கண் தோற்றம்ஆய் - உண்மையாகிய பொருளின்கண்ணே தோன்றுதலுடையனாய், மெய்யே நிலைபேறுஆய் - உண்மையே நிலைபேறாகி, எப்பொருட்கும்தானே ஆய் - எப்பொருட்கு முதல்வன் தானேயாகி, யாவைக்கும் வீடு ஆகும் அப்பொருள்ஆம் - எல்லாவற்றுக்கும் மோக்ஷநிலமாகின்ற அப்பொருளாகிய, நம்சிவனை - நம்சிவபெருமானை, பாடுதும் - (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய்——, எ - று.

க - ரை. திருமால் முதலியோர் தேடாநிற்க, என்னையுந் தனது இனிய அருளால் இந்தப்பிறப்பில் ஆட்கொண்டு, இனிமேலும் பிறவாமல் காத்து, உண்மையாகிய இடத்தில் தோற்றமவனாய், எல்லாப் பொருள்களுக்கும் தானே ஒருமுதற்பொருளாய், எல்லா வுயிர்களுக்கும் வீடுபேற்றுக்கு எதுவாயுமிருக்கிற சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. அயன்-அஜன் என்னும் வடமொழித்திரிபு. பிறப்பில்லாதவன் என்பது பொருள். இது மங்கலவழக்கு. இந்திரன்-பெருஞ்செல்வன். நிலைபேறு - நிலைபெறுமிடம். அப்பொருள் என்பதில் அகரம் பலரறிசுட்டு. 'தமது சொல்லுக் கடங்காமையால் அப்பொருள் எனச் சேய்மைச் சுட்டாற் சுட்டினார் எனினுமமையும். (கஉ)

கையார்வளைசிலம்பக்காதார்குழையாட
மையார்குழல்புரளத்தேன்பாயவண்டொலிப்பச்
செய்யானைவெண்ணீறணிந்தானைச்சேர்ந்தறியாக்
கையானையெங்குஞ்செறிந்தானையன்பர்க்கு
மெய்யானையல்லாதார்க்கல்லாதவேதியனை
ஐயாறமர்ந்தானைப்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. கைஆர்வளைசிலம்ப - கையிலணிந்த வளையல்கள் ஒலிக்கவும், காதுஆர்குழைஆட-காதிலணிந்த குண்டலம் அசையாநிற்கவும், மைஆர் குழல்புரள - கருமையாகிய கூந்தல் புரளவும், தேன்பாய - தேன் பெருகவும், வண்டுஒலிப்ப - வண்டுகள் சத்திக்கவும், செய்யானை - செம்மையாகிய நிறத்தையுடையவனை, வெண்ணீறு அணிந்தானை - திருவெண்ணீறு தரித்தவனை, சேர்

ந்து அறியாக்கையானை-சேர்ந்துணரக்கூடாத ஒழுக்கத்தையுடையவனை, எங்கும் செறிந்தானை-எவ்விடத்தும் நிறைந்திருப்பவனை, அன்பர்க்கு மெய்யானை - தன்னன்பர்கட்கு மெய்யாயிருப்பவனை, அல்லாதார்க்கு அல்லாதவேதியனை - (அன்பர்) அல்லாதவர்களுக்குப் பொய்யாயிருப்பவனாகிய அந்தணனை, ஐயாறு அமர்ந்தானை-திருவையாற்றில் எழுந்தருளி யிருக்குமவனை, பாடுதும் - (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய்——எ - று.

க - ரை. செந்நிறமுடையவனும், திருவெண்ணீ றணிந்தவனும், ஒருவராலும் அறியவொண்ணாதவனும்,எங்கும் நிறைந்திருப்பவனும், அன்பர்க்கு மெய்யனும், அன்பரல்லாதார்க்குப் பொய்யனும், அந்தணனும், திருவையாற்றில் வீற்றிருப்பவனும் ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. மலரணிந்திருத்தலால் "தேன்பாய" என்றார். "நூலொத்த நேரிடை நொய்ம்மை யெண்ணாது நுண்டேனசையால், சாலத்த காதுகண்டீர்வண்டுகாள் கொண்டைசார்வதுவே" என்னுந் திருக்கோவைச் செய்யுளில் நுண்டேன் என்றதும் இக்கருத்துப்பற்றியே வந்தது. மலர்த்தேனை விரும்பியே வண்டுவந்து ஒலிப்பதூஉ மென்க. கை - ஒழுக்கம் அது மெய்யொழுக்கம், "பொறிவாயிலைந்தவித்தான் பொய் தீரொழுக்க நெறிநின்றார் நீடுவாழ்வார்" என்னுந் திருக்குறளிலும் "பொய்தீரொழுக்கம்" என்பது காண்க. (கரு)

ஆனையாய்க்கீடமாய்மானுடராய்த்தேவராய்
ஏனைப்பிறவாய்ப்பிறந்திறந்தெய்த்தேனை
ஊனையுநின் றுருக்கியென்வினையையோட்டுகந்து
தேனையும்பாலையுங்கன்னலையுமொத்தினிய [ருளும்
கோனவன்போல்வந்தென்னைத்தன்றொழும்பிற் கொண்ட
வானவன்பூங்கழலேபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. ஆனையாய் - யானையாகியும், கீடம்ஆய் - புழுவாகியும், மாநுடராய் - மனிதராகியும், தேவராய் - தேவர்களாகியும், ஏனைப்பிறவு ஆய் - மற்றைப் பிறவிகளாகியும், பிறந்து இறந்து - பிறந்தும் இறந்தும், எய்த்தேனை - இளைத்தேனை, ஊனையும் நின்றுருக்கி - உடம்பையும் நின்றுருகப்பண்ணி, என்வினையை ஓட்டுகந்து - என்வினைகளை யோட்டுதற்கண் விருப்பமுடையனாய், தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து - தேனையும் பாலையும் கருப்பஞ்சாற்றையும் நிகர்த்து, இனியகோன்அவன் போல்

வந்து-இனிமையைத் தருகிற இறைவனைப் போல்வந்து, என்னை-அடியேனை, தன் தொழும்பின் கொண்டருளும் - தன் தொண்டுக் குரியனுக்கிக் கொண்டருளின, வானவன் - தேவனது, பூங்கழலே - தாமரைமலர்போலும் திருவடிகளையே, பாடுதும் - (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய்——— எ - று.

க - ரை. யானை முதலாகிய எல்லாப் பிறவிகளிலும் பிறந்தும் இறந்தும் இளைத்த என்னை, உடலுருகப்பண்ணி, என்வினைகளை யொழித்து, தேன் முதலியபோல எனக்கினிமையைத்தந்து, என்னைத் தன் திருத்தொண்டுக் குரியனுக்கின சிவபெருமானது திருவடியைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. ஆனை - யானை யென்பதன் மரூஉ. மாநுடர்-மநு வழியாய்ப் பிறந்தவர். வான் - பெருமையாதலால் வானவன் பெரியோன் எனினுமாம். "ஏனைப் பிறவாய், என்றது நாகர் முதலியோரது பிறவியை, பிறவு - பிறவி (பிறத்தல்). இறவு - இறவி, (இறத்தல்) எனவும் வரும். இதனை "இறவிலெப்பதமும் பெற வேண்டிலே னென்றும் பிறவி வேண்டுவெனின் றிருப்பணி செயப் பெறினே" என்பதனுலறிக. கன்னல் - சர்க்கரை யெனினுமாம்.

சந்திரனைத்தேய்த்தருளித்தக்கன்றன்வேள்வியினில்
இந்திரனைத்தோணெரித்திட்டெச்சன்றலையரிந்
தந்தரமேசெல்லுமலர்கதிரோன்பற்றகர்த்துச்
சிந்தித்திசைதிசையேதேவர்களையோட்டுகந்த [ன்
செந்தார்ப்பொழில்புடைசூழ்தென்னன்பெருந்துறையா
மந்தாரமாலையேபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. தக்கன் தன்வேள்வியினில் - தக்கனதுயாகத்தில், சந்திரனைத் தேய்த்தருளி - சந்திரனை நிலத்துத் தேய்த்தருளியும், இந்திரனைத் தோள் நெரித்திட்டு - இந்திரன் தோளை நெரித்தும், எச்சன்தலை அரிந்து - யாககர்த்தாவின் சிரசை அறுத்தும், அந்தரமே செல்லும் - ஆகாயத்திற் செல்லுமியல்புள்ள, அலர் - பரந்த, கதிரோன் - கிரணங்களை யுடையவனுகிய சூரியனது, பல்தகர்த்து - பல்லை உடைத்தும், தேவர்களை திசைதிசையே சிந்தி - மற்றைத் தேவர்களைத் திக்குகள்தோறும் சிதறடித்து, ஓட்டு உகந்த - அவர்கள் ஓடுதற்கு மகிழ்ந்த, செந்தார்ப்பொழில் - செழுமையாகிய பூஞ்சோலைகள், புடைசூழ் - பக்கத்தில் சூழப்பெற்ற, தென்னன் பெருந்துறையான் - தென்னன் பெருந்துறையை

யுடையவன், (அவனது) மந்தாரமாலையே - மந்தாரமாலையையே, பாடுதும் - (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய்——— எ-று.

க - ரை. சந்திரன் முதலானோரைத் தக்கன் யாகத்தில் அவமானப்படுத்தித் தண்டித்த சிவபெருமானது மந்தாரமலர் மாலையைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. சந்திரனைத் தேய்த்தருளல் முதலியவை தக்கன் யாகத்தில் நிகழ்ந்த செய்திகள், இவை வீரபத்திரனால் நிகழ்ந்தன வாயினும் ஒற்றுமைபற்றி இறைவன்மேல் வைத்துக் கூறலாயிற்று. தார்-மலர். மந்தாரம் - பஞ்சதருவில் ஒன்று. மந்தாரமாலை- செம்பரத்தை மலர்மாலை யெனினும் அமையும். (கரு)

ஊனாயுயிராயுணர்வாயென்னுட்கலந்து
தேனாயமுதமுமாய்த்தீங்கரும்பின்கட்டியுமாய்
வானோரறியாவழியெமக்குத்தந்தருளும்
தேனார்மலர்க்கொன்றைச்சேவகனார்சீரொளிசேர்
ஆனாவறிவாயளவிறந்தபல்லுயிர்க்கும்
கோனாகிநின்றவாகூறுதுங்காணம்மானாய்.

ப - ரை. ஊன்ஆய் - உடம்பாகி, உயிர்ஆய்-உயிராகி, உணர்வுஆய் - அறிவாகி, என்னுள் கலந்து - என்னுள்ளே கலந்திருந்து, தேன்ஆய் - தேனாகி, அமுதமும்ஆய் - அமுதமுமாகி, தீங்கரும்பின் கட்டியும்ஆய் - மதுரமாகிய கருப்பங்கட்டியுமாகி, வானோர் அறியாவழி - தேவர்கள் அறியாத முத்திநெறியை, எமக்குத் தந்தருளும் - எமக்குத் தந்தருளிய, தேன்ஆர் - தேன்பொருந்திய, கொன்றைமலர் - கொன்றைமலர் மாலையை யணிந்த, சேவகனார் - வீரத்தன்மையுள்ளவர், சீர் ஒளிசேர் - சிறப்புப் பொருந்திய ஒளி சேர்ந்த, ஆனாஅறிவுஆய் - நீங்காத அறிவுருவாகி, அளவு இறந்த பல் உயிர்க்கும் - அளவற்ற பலவுயிர்களுக்கும், கோன்ஆகி நின்ற ஆறு - தலைவனாகிநின்ற விதத்தை, கூறுதும் - (யாம் புகழ்ந்து) பேசுவோம்——— எ-று.

க - ரை. உடல் உயிர் உணர்வு உருவங்களாகி, என்னுள்ளே கலந்திருந்து, தேன் முதலியபோல இனிமைதந்து, முத்திநெறியை எமக்குணர்த்தி யருளின சிவபெருமான் அளவற்ற பலவுயிர்களுக்குந் தலைவனாய் நின்றவிதத்தைப் புகழ்ந்து பேசுவோம் என்பதாம்.

வி - ரை. கரும்பின் கட்டி - வெல்லம். ஆனாமை - நீங்காமை, கெடாமை யெனினுமாம். ஆனல் - நீங்கல், இறத்தல் -

கடத்தல், ஊனுக்கு உயிரும் உயிருக்கு உணர்வும் உள்ளீடாதலால் "ஊனுயுயிராயுணர்வாய்" என்றார். தேன் கருப்பின் கட்டி என்பவற்றிற்கு இடையே அமுதத்தை வைத்தது சிறப்பு நோக்கி என்க. (கசு)

சூடுவேன்பூங்கொன்றைசூடிச்சிவன்றிரடோள்
கூடுவேன்கூடிமுயங்கிமயங்கிநின்
றூடுவேன்செவ்வாய்க்குருகுவேனுள்ளுருகித்
தேடுவேன்றேடிச்சிவன்கழலேசிந்திப்பேன்
வாடுவேன்பேர்த்துமலர்வேனனலேந்தி
ஆடுவான்சேவடியேபாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. பூங்கொன்றை சூடுவேன் - பொலிவாகிய கொன்றைமலர் மாலையை அணிவேன், சூடி - அணிந்து, சிவன் - சிவபெருமானது, திரள்தோள் - திரண்ட தோள்களை, கூடுவேன் - தழுவுவேன், கூடி - தழுவி, முயங்கி - புணர்ந்து, மயங்கிநின்று ஊடுவேன் - மயங்கிநின்று பிணங்குவேன், செவ்வாய்க்கு உருகுவேன் - செவந்தவாய்க்கு மனம் உருகுவேன், உள்ளுருகி தேடுவேன் - மனமுருகித் தேடுவேன், தேடி - தேடாநின்று, சிவன் கழலே சிந்திப்பேன் - சிவபெருமானது திருவடியையே சிந்தனை பண்ணுவேன், வாடுவேன் - வாட்டமடைவேன், பேர்த்தும் - மீண்டும், மலர்வேன் - மகிழ்வேன், (என்னோடு நீயும் கூடுவையாயின்) அனலேந்தி ஆடுவான் - நெருப்பைக் கையிலேந்தி யாடுகின்ற சிவபெருமானது, சேவடியே - திருவடியையே, பாடுதும் - (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய்——எ - று.

க - ரை. கொன்றைமலர் மாலையைச் சூடிச் சிவபெருமானது திருத்தோள்களைக் கூடித் தழுவி மயங்கிநின்று பிணங்குவேன், அவனது செவ்வாயின் பொருட்டு உருகுவேன், மனமுருகி அவன் திருவடியைத் தேடிச் சிந்திப்பேன், வாடுவேன், மகிழ்வேன், நீயும் என்னோடு சேர்ந்தாயாயின் அவனது திருவடியை யாம் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. முயங்குதல் - தழுவுதல் (புணர்தல்). வாடுவேன் மலர்வேன் என்பதற்கு முகம் வாடுவேன் முகமலர்வேன் என்றுரைத்தலுமாம். மலர்தல் இவ்விடத்துக் களித்தலுக்காயிற்று. ()

கிளிவந்தமென்மொழியாள்கேழ்கிளரும்பாதியனை
வெளிவந்தமாலயனுங்காண்பரியவித்தகனைத்
தெளிவந்ததேறலைச்சீரார்பெருந்துறையில்

எளிவந்திருந்திரங்கியெண்ணரியவின்னருளால்
ஒளிவந்தென் னுள்ளத்தி னுள்ளேயொளிதிகழ
அளிவந்தவந்தணனைப்பாடுதுங்கா ணம்மானாய்.

ப - ரை. கிளிவந்த மெல்மொழியாள் - கிளிபோன்ற மெல்லிய மொழியினை யுடையவுமா தேவியின்,கேழ்கிளரும் பாதியனை- ஒளிவிளங்கும் அர்த்தபாகத்தை யுடையவனை, வெளிவந்த-(யாம் காண்போம் என்று) புறப்பட்ட, மால்அயனும் - திருமாலும் பிரமனும், காண்பு அரியவித்தகனை - காண்டலரிதாகிய ஞானவுருவனை, தெளிவந்த தேறலை - தெளிந்ததேனை, சீர் ஆர்பெருந்துறையில் - சிறப்புப் பொருந்திய திருப்பெருந் துறையில், எளிவந்திருந்து - எளிதாக வந்திருந்து, இரங்கி-இரக்கம் செய்தருளி, எண் அரிய - மதித்தற்கரிய, இன் அருளால் - தனது இனிய அருளினால், ஒளிவந்து - ஒளியுருவமாய் வந்து, என் உள்ளத்தினுள்ளே - என்மனத்தினுள்ளே, ஒளிதிகழ - ஒளிவிளங்க, அளிவந்த அந்தணனை - கிருபையோடெழுந்தருளின வேதியனை, பாடுதும்- (யாம் புகழ்ந்து) பாடுவோம், அம்மானாய்——எ - று.

க - ரை. கிளிமொழியாளாகிய உமாதேவிபாகனும், மால் அயன் என்பவர் காண்பதற் கரிதாகிய அறிவுருவனும், அன்பர்க்குத் தெளிந்த தேன்போல்பவனும், திருப்பெருந் துறையில் எளிதில் வந்து எனக்குக் கிருபைசெய்த அந்தணனும் ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. கேழ் - நிறம், கிளர்தல் - விளங்குதல், தெளி - முதனிலைத் தொழிற்பெயர். அளி - கிருபை, கிளிவந்த என்பதில் வந்த உவமவுருபு. கிளிவந்த-கிளிமொழியின் தன்மை யமைந்த எனினுமாம். (கஅ)

முன்னானைமூவர்க்குமுற்றுமாய்முற்றுக்கும்
பின்னானைப்பிஞ்ஞகனைப்பேணுபெருந்துறையின்
மன்னானைவானவனைமாதியலும்பாதியனைத்
தென்னானைக்காவானைத்தென்பாண்டிநாட்டானை
என்னானையென்னப்பனென்பார்கட்கின்னமுதை
அன்னானையம்மானைப்பாடுதுங்காணம்மானாய்,

ப - ரை. மூவர்க்கும் முன்னானை-மும்மூர்த்திகளுக்கும் முன்னவனை,முற்றும் ஆய்-எல்லாப்பொருள்களும் தானேயாகி,முற்றுக்கும்-அவை முழுதினுக்கும், பின்னானை - பின்னவனை,பிஞ்ஞகனை-

பிஞ்ஞகன் என்னுந்திரு நாமத்தை யுடையவனை, பேணு - யாவரும் விரும்புகின்ற, பெருந்துறையில் மன்னனை - திருப்பெருந்துறையில் நிலைபேறுடையானை, வானவனை - சிதாகாயத்திலுறைபவனை, மாது இயலும் பாதியனை - பெண்ணோடு கூடிய அர்த்தபாகத்தை யுடையவனை, தென் ஆனைக்காவானை - தென் திருவானைக்காவை யுடையவனை, தென்பாண்டி நாட்டானை - தென்பாண்டிநாட்டை யுடையவனை, என் ஆனை-என் இடபத்தை, என் அப்பன் என்பார்கட்கு - என்னப்பனென்று சொல்வார்க்கு, இன் அமுதை அன்னானை - இனிய அமிர்தத்தை நிகர்த்திருப்பவனை, அம்மானை - எமது தந்தையை, பாடுதும் - யாம் புகழ்ந்து பாடுவோம், அம்மானாய்—, எ - று.

க - ரை. மூவர்க்கும் முதல்வனும், எல்லாம் தானேயானவனும், அவை யழிந்த பின்னே யிருப்பவனும், திருப்பெருந்துறையில் நிலைபெற்றவனும், சிதாகாயத்தில் வாழ்வோனும், பெண்பாகனும், திருவானைக்காவி லெழுந்தருளியிருப்பவனும், பாண்டிநாட்டையுடையவனும், என் காளைபோல்பவனும், என்னப்பனென்று புகழ்வோர்க்கு இனிய அமிர்தம்போல்பவனும், எமது தந்தையும் ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடுவோம் என்பதாம்.

வி - ரை. பிஞ்ஞகன் - பிஞ்ஞகம்என்னும் தலைக்கோலத்தை யுடையவன். ஆன் - இடபம் (காளை). இது உவமையாகுபெயராய் இறைவனது நித்திய யவ்வனத்தைக் குறித்தது. (கக)

பெற்றிபிறர்க்கரியபெம்மான்பெருந்துறையான்
கொற்றக்குதிரையின்மேல்வந்தருளித்தன்னடியார்
குற்றங்களீக்கிக்குணங்கொண்டுகோதாட்டிச்
சுற்றியசுற்றத்தொடர்வறுப்பான்றொல்புகழே
பற்றியிப்பாசத்தைப்பற்றறநாம்பற்றுவான்
பற்றியபேரானந்தம்பாடுதுங்காணம்மானாய்.

ப - ரை. பெற்றி - தன்குணங்கள் (இத்தன்மையவென்றறிதற்கு), பிறர்க்கு அரிய - (தன்னன்பர்க்கேயன்றிப்) பிறர்க்கு அரிதாகிய, பெம்மான் - பெருமான், பெருந்துறையான் - திருப்பெருந்துறையையுடையவன், கொற்றக் குதிரையின்மேல் வந்தருளி - வெற்றியையுடைய குதிரையின்மேலேறி யெழுந்தருளி, தன்னடியார் குற்றங்கள்நீக்கி - தன்னடியவர்களுடைய குற்றங்களை யகற்றி, குணங்கொண்டு - குணத்தை யங்கீகரித்து, கோதாட்டி -

சீராட்டுதல்செய்து, சுற்றிய - சூழ்ந்திருக்கிற, சுற்றத்தொடர்வு அறுப்பான் - உறவினரது சம்பந்தத்தை யறுத் தருள்வோனது, தொல்புகழே பற்றி - பழமையாகிய புகழையேபற்றி, இப்பாசத்தைப் பற்றற - இந்தப்பாசத்தின் தொடர்பு பற்றற்றுப் போக, நாம்பற்றுவான் - நாம்பற்றும்பொருட்டு, பற்றிய - நம்மைப் பற்றிய, பேராநந்தம் - பேரின்பத்தை, பாடுதும் - யாம் புகழ்ந்துபாடுவோம், அம்மானாய்—, எ - று.

க - ரை. தன் அடியார்க்கன்றித் தன் குணங்களை யளவிடற்குப் பிறர்க்கரிதாகிய திருப்பெருந்துறையானும், குதிரைச் சேவகனாயெழுந்தருளித் தன்னடியாரது குற்றங்களை யொழித்துக்குணத்தை யேற்றுக்கொண்டு எம்மைச் சீராட்டி, சுற்றத்தார் தொடர்பை விடுவித்தவனுமாகிய சிவபெருமானது புகழையேபற்றி, இப்பாசப் பற்றறும்படி நாம் பற்றின பேரின்பத்தைப் புகழ்ந்துபாடி இன்பமடைவோம் என்பதாம். (உ௦)

# திருப்பொற்சுண்ணம்.

ஆனந்தமனோலயம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

**அறுசீரடியாசிரியவிருத்தம்.**

முத்துநற்றாமம்பூமாலைதூக்கி
முளைக்குடந்தூபநற்றீபம்வைம்மின்
சத்தியுஞ்சோமியும்பார்மகளும்
நாமகளோடுபல்லாண்டிசைமின்
சித்தியுங்கௌரியும்பார்ப்பதியுங்
கங்கையும்வந்துகவரிகொண்மின்
அத்தனையாறனம்மானைப்பாடி
யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. நல்முத்துதாமம் - அழகாகிய முத்துமாலைகளையும், பூமாலை - மலர்மாலைகளையும், தூக்கி - தொங்கக்கட்டி, முளைக்குடம் - முளைக்குடங்களையும், தூபம் - தூபகலசங்களையும், நல்தீபம் - நல்ல தீபங்களையும், வைம்மின் - வையுங்கள், சத்தியும், சத்தியும், சோமியும் - சோமியும், பார்மகளும் - நிலமகளும் ஆகிய நீங்கள், நாமகளோடு - சரசுவதியோடு, பல்லாண்டு இசைமின் - திருப்பல்லாண்டு பாடுங்கள், சித்தியும் - சித்தியும், கௌரியும் - கௌரியும், பார்ப்பதியும் - பார்வதியும், கங்கையும் - கங்கையும் ஆகிய நீங்கள், வந்துகவரிகொண்மின் - வந்து சாமரை கொண்டு வீசுங்கள், அத்தன் - கடவுளும், ஐயாறன் - திருவையாற்றனும், அம்மானை - நமது தந்தையுமாகிய இறைவனை, பாடிஆட - பாடியாடும்பொருட்டு, நாம்பொற்சுண்ணம் இடித்தும் - நாம் அழகாகிய கதம்பப்பொடியை யிடிப்போம், எ - று.

க - ரை. முத்துமாலைகளையும் பூமாலைகளையும் தொங்கவிட்டு, முளைக்குடத்தையும் தூபத்தையும் தீபத்தையும் வையுங்கள், சத்தி முதலானவர்களே; நீங்கள்வந்து பல்லாண்டுபாடுங்கள்,சித்தி முதலானவர்களே; நீங்கள்வந்து கவரி வீசுங்கள்,எமது கடவுளும்,

திருவையாற்றில் எழுந்தருளி யிருப்பவனுமாகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடி, நாம் பொற்சுண்ணம் இடிப்போம் என்பதாம்.

வி - ரை. சத்தி, சோமி, சித்தி என்பன சத்திபேதங்கள்.(க)

பூவியல்வார்சடையெம்பிராற்குப்
பொற்றிருச்சுண்ணமிடிக்கவேண்டும்
மாவின்வடுவகிரன்னகண்ணீர்
வம்மின்கள்வந்துடன்பாடுமின்கள்
கூவுமின்றொண்டர்புறநிலாமே
குனிமின்றொழுமினெங்கோனெங்கூத்தன்
தேவியுந்தானும்வந்தெம்மையாளச்
செம்பொன்செய்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. பூஇயல் - அழகுவாய்ந்த, வார்சடை எம்பிராற்கு - நீண்டசடையையுடைய எம்பிரானுக்கு, பொன் திருச்சுண்ணம் இடிக்கவேண்டும் - அழகாகிய கதம்பப்பொடி யிடிக்கவேண்டும், மாவின் வடுவகிர் அன்ன - மாம்பிஞ்சின் பிளவை யொத்த, கண்ணீர் - கண்களையுடையீர், வம்மின்கள் - வாருங்கள், வந்துஉடன் பாடுமின்கள் - வந்து எம்மோடு கூடப்பாடுங்கள், இன்தொண்டர் - இனியதொழும்பர்கள், புறம்நில்லாமே - புறத்துநில்லாவண்ணம், கூவுமின் - அழையுங்கள், குனிமின் - கூத்தாடுங்கள், தொழுமின் - பணியுங்கள், எம்கோன் - எம்மிறைவனும், எம்கூத்தன் - எம்கூத்தனுமாகிய சிவபெருமான், தேவியும் தானும்வந்து - தேவியுந் தானுமாக எழுந்தருளி, எம்மைஆள - எம்மை யாளும்பொருட்டு, செம்பொன் செய்சுண்ணம் - செம்பொன்னிறமுள்ள கதம்பப் பொடியை, நாம் இடித்தும் - நாம் இடிப்போம், எ - று.

க - ரை. அழகிய நீண்ட சடாபாரத்தையுடைய சிவபெருமானுக்குப் பொற்சுண்ணம் இடிக்கவேண்டும், பெண்களே, நீங்கள் வந்துசேருங்கள், சேர்ந்துபாடுங்கள், அடியவர் புறத்தில் நில்லாமல் அவர்களையும் அழையுங்கள், கூத்தாடுங்கள், வணங்குங்கள், இறைவன் தன் தேவியாரோடு எழுந்தருளி எம்மை யாட்கொள்ளும் பொருட்டுப் பொற்சுண்ணம் இடிப்போம் என்பதாம்.

சுந்தரநீறணிந்தும்மெழுகித்
தூயபொன்சிந்திநிதிபரப்பி
இந்திரன்கற்பகநாட்டியெங்கு
மெழிற்சுடர்வைத்துக்கொடியெடுமின்

அந்தரர்கோனயன் றன்பெருமா
ஞழியானுதனல்வேலன்றாதை
எந்தரமாளுமையாள்கொழுநற்
கேய்ந்தபொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. சுந்தரம் - அழகாகிய. நீறுஅணிந்து - திருவெண்ணீற்றைத் தரித்து, மெழுகி - மெழுகுதல்செய்து, தூயபொன் சிந்தி - பரிசுத்தமாகிய பொற்பொடிகளைச் சிதறி, நிதிபரப்பி - நவநிதிகளையும் பரப்பி, இந்திரன் கற்பகம்நாட்டி - இந்திரனது கற்பகத்தைநாட்டி, எங்கும்-எவ்விடத்தும், எழில்சுடர்வைத்து - அழகிய தீபங்களை வைத்து, கொடி எடுமின் - கொடிகளை யுயர்த்துங்கள், அந்தரர்கோன் - விண்ணுலகத்தார்க் கிறைவனாகிய இந்திரனும், அயன் - பிரமனும்ஆகிய இவர்களுக்கு, பெருமான் - தலைவனும், ஆழியான்நாதன்-சக்கரப்படையானாகிய திருமாலுக்கு நாயகனும், நல்வேலன்தாதை - அழகிய முருகவேளுக்குத் தந்தையும், எம்தரம்ஆள் - எம்மரபினரையும் ஆண்டருள்கின்ற, உமையாள் கொழுநற்கு - உமாதேவி நாயகனுமாகிய சிவபெருமானுக்கு, ஏய்ந்த - இசைந்த, பொற்சுண்ணம் இடித்தும்நாம்——,எ - று.

க - ரை. திருநீறு தரித்துவந்து, மெழுகி,பொற்பொடிசிதறி, நிதிகளைப்பரப்பி, கற்பகமரத்தைநாட்டி, எங்கும் தீபம்வைத்துக் கொடியெடுங்கள், இந்திரன்முதலிய தேவர்களுக் கரசனும், திருமாலுக்குத் தலைவனும், முருகவேளுக்குத் தந்தையும், எம்மினத்தாரை ஆட்கொண்டருள்கின்ற உமாநாயகனும் ஆகிய சிவபெருமானுக்குப் பொற்சுண்ணம் இடிப்போம் என்பதாம்.

வி - ரை. இறைவனது திருப்பணி செய்வோர் தம் நெற்றியில் திருநீறு தரித்தே செய்யவேண்டுமென்னும் நியதி யுண்மையால் "சுந்தரநீறணிந்துமெழுகி" என்றார். கொடி யெடுத்தலாவது கொடியை உயர்த்திப்பிடித்தல். நிதி - பலவகையாகிய மங்கல திரவியங்கள் எனினுமாம். ஆழியான் - பாற்கடலையிடமாகவுடையவன் எனினுமமையும். "சுந்தரநீறணிந்தும் மெழுகி" என்பதில் மகரம் விரித்தல். (௩)

காசணிமின்களுலக்கையெல்லாங்
காம்பணிமின்கள்கறையுரலை
நேசமுடையவடியவர்க
ணின்றுநிலாவுகவென்றுவாழ்த்தித்

தேசமெல்லாம்புகழ்ந்தாடுங்கச்சித்
திருவேகம்பன்செம்பொற்கோயில்பாடிப்
பாசவினையைப்பறித்துநின்று
பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. உலக்கையெல்லாம் - உலக்கைகளுக் கெல்லாம், காசுஅணிமின்கள் - மணிவடங்களை யணியுங்கள், கறை உரலை காம்புஅணிமின்கள் - நிறமுள்ள உரல்களுச்குப் பட்டுச்சீலையைத் தரியுங்கள், நேசம் உடையஅடியவர்கள் - நேசமுள்ள அன்பர்கள், நின்றுநிலாவுக என்றுவாழ்த்தி - நிலைபெற்று விளங்குகவென்று துதித்து, தேசமெல்லாம் புகழ்ந்தாடும் - உலகங்களெல்லாம்புகழ்ந்து கொண்டாடுகின்ற, கச்சித்திருவேகம்பன்-கச்சித்திருவேகம்பமுடையானது, செம்பொன்கோயில்பாடி - செம்பொன்னாற்செய்யப்பட்ட ஆலயத்தைப் புகழ்ந்துபாடி, பாசவினையைப் பறித்து நின்று - நமது பாசத்துக்கேதுவாகிய வினைகளைக் களைந்துநின்று, பாடி - பாடாநின்று, பொற்சுண்ணம் இடித்தும்நாம்,— எ - று.

க - ரை. உலக்கைகளுக்கு மணிவடம் புனையுங்கள், உரலுக்குப்பட்டாடை சுற்றுங்கள், அன்புள்ளஅடியார் நிலைபெற்றுவாழ்கவென்று வாழ்த்தி, உலகமுழுதும் புகழும்படியான திருவேகம்பமுடையானது திருக்கோயிலைப் புகழ்ந்துபாடி, நமது பாசவினைகளைக் களைந்து நின்று பாடிக்கொண்டே பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம். (ச)

அறுகெடுப்பாரயனும்மரியு
மன்றிமற்றிந்திரனோடமரர்
நறுமுறுதேவர்கணங்களெல்லா
நம்மிற்பின்பல்லதெடுக்கவொட்டோம்
செறிவுடைமும்மதிலெய்தவில்லி
திருவேகம்பன்செம்பொற்கோயில்பாடி
முறுவற்செவ்வாயினீர்முக்கணப்பற்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. அயனும்அரியும் - பிரமனும் திருமாலும், அறுகு எடுப்பார் - குடவிளக்கேந்துவார், அன்றி - அல்லாமல், மற்று - (அவர்களின்) வேறாகிய, இந்திரனோடு அமரர் - இந்திரனுடன் தேவர்களும், நறும் உறுதேவர்கணங்களெல்லாம் - நன்மைமிக்க தேவ சமூகங்களெல்லாம், நம்மின்பின்புஅல்லது - நம்மினும் பின்

பேயன்றி, எடுக்கவொட்டோம் - எடுக்க இசையோம், செறிவு உடைமும் மதில்எய்தவில்லி-நெருக்கத்தையுடைய திரிபுரங்களை யெய்த வில்லையுடையானும், திருவேகம்பன் - திருவேகம்பமுடை யானுமாகிய சிவபெருமானது; செம்பொன்கோயில்பாடி - செம் பொன்னாலயத்தைப்பாடி, முறுவல் செவ்வாயினீர் - நகையோடு கூடிய செவ்வாயையுடையீர், முக்கண்அப்பற்குஆட - முக்கண் களையுடைய எமது தந்தைக்கு ஆடும்பொருட்டு, பொற்சுண்ணம் இடித்தும்நாம்——, எ - று,

க - ரை. பிரமவிட்டுணுக்கள் நம்மினும் முந்திக் குடவிளக் கேந்தச் சம்மதிப்பதன்றி மற்றைத் தேவர்கள் நம்மிற் பின்பன்றி முந்தி ஏந்தச் சம்மதியோம், பெண்களே, முப்புரமெய்த வில்லாள னாகிய திருவேகம்பனது செம்பொற் கோயிலைப் புகழ்ந்து பாடிப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம். (௫)

உலக்கைபலவோச்சுவார்பெரிய
ருலகமெல்லாமுரல்போதாதென்றே
கலக்கவடியவர்வந்துநின்றார்
காணவுலகங்கள்போதாதென்றே
நலக்கவடியோமையாண்டுகொண்டு
நாண்மலர்ப்பாதங்கள்சூடத்தந்த
மலைக்குமருகனைப்பாடிப்பாடி
மகிழ்ந்துபொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. பெரியர் - பெரியோர்கள். உலகம்எல்லாம் உரல் போதாது என்று - உலகமெல்லாம் உரலாகக் கொண்டமையால் உள்ள உலக்கைகள் பற்றாதென்று, உலக்கைபல ஓச்சுவார் - பல வுலக்கைகளை வரவிடுவார்கள், காண - காண்பதற்கு, உலகங்கள் போதாது என்றே - உலகங்கள் பற்றாதென்றே சொல்லும்படி, அடியவர் கலக்கவந்துநின்றார் - அடியார்சள் கூடவந்து நின்றார் கள், நலக்க - நன்மையுண்டாக, அடியோமை ஆண்டுகொண்டு - அடியேங்களை யடிமைகொண்டு, நாள் - புதிய, மலர்ப்பாதங்கள் - தன்னுடைய மலர்ப்பாதங்களை, சூடத்தந்த - எங்களுக்கு அணி யத்தந்த, மலைக்குமருகனை - மலையரையனுக்கு மருமகனாகிய சிவ- பெருமானை, பாடிப்பாடிமகிழ்ந்து - பாடிப்பாடிக்களித்து, பொற் சுண்ணம் இடித்தும் நாம்——,எ - று.

க - ரை. உலகமெல்லாம் உரலாதலால் உள்ளவுலக்கைகள் போதாதென்று பெரியவர் பலவுலக்கைகளை வர விடுவார்கள்,

காணவுலகங்கள் பற்றுவென்று பல அடியவர் கூடிவந்து நின்றூர்கள், நன்மையுண்டாக அடியோங்களை யாட்கொண்டு தன் திருவடிகளை எமது சிரசில் சூட்டத்தந்த மலையரையன் மருகனுகிய சிவபெருமானைப் பாடிக் களித்துப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

**சிவபிரான் மலையரையனுக்கு மருமகனுகிய வரலாறு:—** தக்கன் தன் புத்திரியாகிய தாக்ஷாயணியையும், அவள் நாயகனுகிய சிவபெருமானையும் அவமதித்து யாகஞ்செய்ய, இறைவி அது பொறுமல் சிவபெருமானைக்கொண்டு அந்த யாகத்தை அழித்துத் தன்னைத் தக்கன் மகள் என்று பிறர் சொல்லக்கேட்குங் கருத்தில்லாதவளாய், அவ்வுடலைத் துறந்து இமயமலையின் பொய்கையில் ஓர் இளங்குழந்தையாய்த் தோன்றி மலையரசனுல் வளர்க்கப்பட்ட காரணத்தால் "மலைக்கு மருகனே" என்றனர். (சு)

சூடகந்தோள்வளையார்ப்பவார்ப்பத்
தொண்டர்குழாமெழுந்தார்ப்பவார்ப்ப
நாடவர்நந்தம்மையார்ப்பவார்ப்ப
நாமுமவர்தம்மையார்ப்பவார்ப்பப்
பாடகமெல்லடியார்க்குமங்கை
பங்கினனெங்கள்பராபரனுக்
காடகமாமலையன்னகோவுக்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. சூடகம் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்ப-கைவளைகளும் தோள்வளைகளும் மிக்கொலிக்கவும், தொண்டர் குழாம் எழுந்து ஆர்ப்ப ஆர்ப்ப - அடியார் குழாங்கள் எழுந்துமிக்கொலிக்கவும், நாடவர்-நாட்டிலுள்ளார், நந்தம்மை ஆர்ப்பஆர்ப்ப - நம்மைப் பரிஹசித்து மிக்கொலிக்கவும், நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப - நாமும் அவர்களைப் பரிஹசித்து மிக்கொலிக்கவும், மெல்அடி - மிருதுவாகிய பாதங்களில், பாடகம் ஆர்க்கும் - பாடகம் ஒலிக்கப்பெற்ற, மங்கை - உமாதேவியை, பங்கினன் - தன்பாகத்திலுடையவனுகிய, எங்கள் பராபரனுக்கு - எம்பராபரனுக்கு, மாஆடகம் மலை அன்னகோவுக்கு-பெரிய பொன்மலையையொத்த இறைவனுக்கு, ஆட-ஆடும்பொருட்டு, பொற்சுண்ணம் இடித்தும் நாம், எ - று.

க - ரை. கைவளை முதலானவை ஒலிக்கப் பொன்மலை போலும் சிவ பெருமானுக்குப் பொற்சுண்ணமிடிப்போம் என்பதாம்.

வி - ரை. ஆடகம் - நால்வகைப் பொன்னில் ஒன்று. நால்வகைப் பொன்னுவன-ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்பன. நாடவர் ஆர்த்தல் இவரைப் பித்தரெனக் கருதி, இவர் ஆர்த்தல் நாடவர்பித்தரெனக் கருதி. ஆர்க்கஆர்க்க என்னும் அடுக்கு மிகுதிப் பொருளது. (எ)

வாட்டடங்கண்மடமங்கைநல்லீர்
வரிவளையார்ப்பவண்கொங்கைபொங்கத்
தோட்டிருமுண்டந்துதைந்திலங்கச்
சோத்தெம்பிரானென்றுசொல்லிச்சொல்லி
நாட்கொண்டநாண்மலர்ப்பாதங்காட்டி
நாயிற்கடைப்பட்டநம்மையிம்மை
யாட்கொண்டவண்ணங்கள் பாடிப்பாடி
யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. வாள்தடம்கண் - வாள்போலும் பெரிய கண்களையும், மடம் - மடத்தையும், மங்கை - மங்கைப் பருவத்தையும் உடைய, நல்லீர் - பெண்களே, வரிவளை ஆர்ப்ப-நெடியவளைகள் ஒலிக்கவும், வண்கொங்கைபொங்க-வளவிய தனங்கள் பூரிக்கவும், தோள் திருமுண்டம்-தோள்களும் தலைகளும், துதைந்து இலங்க-நெருங்கிப் பிரகாசிக்கவும், எம்பிரான் - எம்பிரானே, சோத்தம் என்று சொல்லிச் சொல்லி - அஞ்சலி யென்று பலகாற்சொல்லி, நாள்கொண்ட - புதுமையைக் கொண்ட , மலர்நாண் - தாமரை மலரும் நாணுதற்குரிய, பாதம்காட்டி - திருவடியைக் காட்டி, நாயின்கடைப்பட்ட நம்மை-நாயினும் கடைப்பட்டிருந்த நம்மை, இம்மை - இப்பிறப்பில், ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி-அடிமைகொண்ட விதங்களைப் பாடிப்பாடி, ஆட - அவ்விறைவன் ஆடுதற்கு, பொற்சுண்ணம் இடித்தும்நாம். எ - று.

க - ரை. மாதர்களே, வளையல் முதலியன ஒலிக்கும்படி இறைவனுக்கு அஞ்சலிசெய்து, தன் திருவடியைக் காட்டி எம்மை இப்பிறப்பில் ஆட்கொண்ட விதங்களைப் புகழ்ந்து பாடிப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. நாள்கொண்ட நாண்மலர்பாதம் என்பதற்கு மலரும் பருவம்கொண்ட புதிய தாமரைமலர்போன்ற திருவடி யென்றுரைப்பினும் பொருந்தும். மடம் - பெண்மைக்குணம் நான்கினுள் ஒன்று, பெண்மைக்குணம் நான்காவன - நாணம், மடம்,

அச்சம், பயிர்ப்பு என்பன. மங்கை-பருவம் ஏழனுள் ஒன்று, பருவம் ஏழாவன. பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்பன. இவற்றுள் மங்கைப்பருவம் பன்னிரண்டு வயதுள்ள பருவம். (அ)

வையகமெல்லாமுரலதாக
மாமேருவென்னுமுலக்கைநாட்டி
மெய்யெனுமஞ்சணிறையவட்டி
மேதகுதென்னன்பெருந்துறையான்
செய்யதிருவடிபாடிப்பாடிச்
செம்பொனுலக்கைவலக்கைபற்றி
ஐயனணிதில்லைவாணனுக்கே
யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. வையகம் எல்லாம் - உலகமெல்லாம், உரல்தாக - உரலாக, மாமேருவென்னும் உலக்கைநாட்டி-மஹாமேருவென்கிற உலக்கையை நாட்டி, மெய்என்னும் மஞ்சள் நிறைய அட்டி-உண்மை யென்கிற மஞ்சளை நிறையப் பூசி, மேதகுதென்னன் பெருந்துறையான் - மேன்மை பொருந்தியதென்னன் பெருந்துறையையுடையவனது, செய்யதிருவடி பாடிப்பாடி - செவந்த திருவடியைப் பாடிப்பாடி, செம்பொன் உலக்கை வலக்கைபற்றி-செம்பொன்னு னியன்ற வுலக்கையை வலக் கையினுற் பிடித்து, ஐயன் - எமது இறைவனுகிய, அணிதில்லைவாணனுக்கே-அழகிய தில்லை வாணனுக்கே, ஆட - ஆடும்பொருட்டு, பொற்சுண்ணம் இடித்தும் நாம். எ - று.

க - ரை. உலகமுழுதும் உரலாக மகாமேரு மலை யென்னும் உலக்கையை நாட்டி, சத்தியமாகிய மஞ்சளைப் பூசி, திருப்பெருந்துறையானது திருவடியைப் புகழ்ந்து பாடித் தில்லைச் சிவபெருமானுக்குப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம். (கூ)

முத்தணிகொங்கைகளாடவாட
மொய்குழல்வண்டினமாடவாடச்
சித்தஞ்சிவனொடுமாடவாடச்
செங்கயற்கண்பனியாடவாடப்
பித்தெம்பிரானொடுமாடவாடப்
பிறவிபிறரொடுமாடவாட
அத்தன்கருணையோடாடவாட
வாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. முத்து அணிகொங்கைகள் ஆடஆட-முத்துமாலையை யணிந்த தனங்கள் அசையவும், மொய்குழல்வண்டு இனம் ஆடஆட - நெருங்கிய கூந்தலின் கண்ணே வண்டின் தொகுதி ஒலி செய்யவும், சித்தம் சிவனொடும் ஆடஆட - மனமானது சிவபெருமானுடன் கலந்துநிற்கவும், செங்கயல்கண்-செவந்த கெண்டைமீன் போலுங் கண்கள், பனிஆடஆட - -நீரரும்பவும், பித்து எம்பிரானொடும் ஆடஆட - என்பித்தென்பது எம்மிறைவனோடு பொருந்தியிருக்கவும், பிறவிபிறரொடும் ஆடஆட-பிறவியென்பது பிறரோடு கூடிஇடையறாது நிற்கவும், அத்தன்-எமது தந்தையாகிய சிவபெருமான், கருணையோடு ஆடஆட - கிருபையோடு கூடி விளங்கவும், ஆட - அவன் ஆடும்பொருட்டு, பொற்சுண்ணம் இடித்தும் நாம். எ - று.

க - ரை. முத்துவடமணிந்த தனங்களும் கூந்தலும் முதலாயின அசையும்படி இறைவனுக்குப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. ஆடஆட என்பதற்கு அவ்வவ்விடங்களுக் கேற்ப அசைய, ஒலிசெய்ய, கலந்துநிற்க, அரும்ப, பொருந்தியிருக்க, இடையறாது நிற்க, கூடிவிளங்க எனப்பொருளுரைக்கலாயிற்று. கண்களில் செவ்வரி படர்ந்திருத்தலால "செங்கயலை உவமையாக்கினர். "பிறவி பிறரொடு மாடவாட, என்றமையால் எம்மிடத்துப் பிறவித் தொடர்பற்றொழிந்தது என்றாராயிற்று. (கo)

மாடுநகைவாணிலாவெறிப்ப
வாய்திறந்தம்பவளந்துடிப்பப்
பாடுமினந்தம்மையாண்டவாறும்
பணிகொண்டவண்ணமும்பாடிப்பாடித்
தேடுமினெம்பெருமானைத்தேடிச்
சித்தங்களிப்பத்திகைத்துத்தேறி
யாடுமினம்பலத்தாடினானுக்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. மாடு - பக்கத்தில், நகை - சிரிப்பென்கிற, வாள் நிலா எறிப்ப - ஒளிபொருந்திய நிலா வீசவும், அம்பவளம் துடிப்ப-அழகிய பவளம்போன்றஅதரம் பதைக்கவும், வாய்திறந்துபாடுமின் - வாய்திறந்து பாடுங்கள், நந்தம்மை ஆண்டவாறும் - நம்மையாண்டருளின விதத்தையும், பணிகொண்ட வண்ணமும் - நமது

பணியை யேற்றுக்கொண்ட விதத்தையும், பாடிப்பாடி - பலகால் பாடி, எம்பெருமானைத் தேடுமின் - எம்பெருமானைத் தேடுங்கள், தேடி-தேடி, சித்தம் களிப்ப - மனங்களிக்க, திகைத்து - பிரமித்து, தேறி - தெளிந்து, ஆடுமின் - ஆடுங்கள், அம்பலத்து ஆடினனுக்கு - தில்லையம்பலத்தின்கண் நிருத்தம் செய்தவனுக்கு, ஆட - ஆடும்பொருட்டு, பொற்சுண்ணம் இடித்தும் நாம். எ - று.

க - ரை. பக்கங்களில் நகைநிலா வீசவும், அழகிய பவளம் போலும் அதரம் துடிக்கவும் வாய்திறந்து பாடுங்கள், நம்மை யாண்ட விதத்தையும் நமது பணிவிடையை யேற்றுக்கொண்ட விதத்தையும் பாடிப்பாடித் தேடுங்கள், இறைவனைத் தேடி மனங் களித்துத் திகைத்துத் தெளிந்து ஆடுங்கள், அம்பலத்திலாடுஞ் சிவபெருமானுக்குப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

சிவபெருமான் நடனஞ்செய்த இடமும் - அதற்குக் காரணமும்: —தேவர்களுக்காகக் கயிலாசத்தில் நடனஞ்செய் தருளினார்-அதற்குத் தெற்காகிய திருவாலங்காட்டில் காளிக்காக நடனஞ்செய்தருளினார்-இதற்கு ஊர்த்துவ தாண்டவமென்றும் சண்ட தாண்டவமென்றும் பெயர் - அதற்குத் தெற்காகிய சிதம்பரத்தில் பதஞ்சலி பகவானுக்கும் வியாக்கிரபாத முனிவருக்கும் அருள் செய்யும்பொருட்டு நடனஞ் செய்தருளினார் - இதற்கு ஆனந்தத் தாண்டவமென்று பேர் - அதற்குத் தெற்காகிய மதுரையில் தடாதகைப் பிராட்டியாரது திருக்கல்யாண மகோற்சவ தரிசனத்துக் குவந்த மேற்சொல்லிய முனிவர்களுக்காக நடனஞ்செய்தருளினார். (கக)

மையமர்கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக்கூத்தன் றன்னை
ஐயனை யையர்பிரானை நம்மை
யகப்படுத்தாட்கொண்டருமைகாட்டும்
பொய்யர்தம்பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதரிக்கண்ணிணைப்பொற்றொடித்தோள்
பையரவல்குன்மடந்தைநல்லீர்
பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. மைஅமர்கண்டனை - கருமை தங்கிய கண்டத்தை யுடையவனை, வானநாடர் மருந்தினை - தேவர்களுக்கு அமுதாயிருப்பவனை, மாணிக்கக்கூத்தன் தன்னை - மாணிக்கக் கூத்தனை,

ஐயனை - தேவனை, ஐயர்பிரானை - தேவர் பெருமானை, நம்மை அகப்படுத்து - நம்மையுட்படுத்தி, ஆட்கொண்டு - அடிமைகொண்டு, அருமைகாட்டும் - தன்னருமையைக் காட்டுகின்ற, பொய்யர்தம் பொய்யனை - பொய்யர்கட்குப் பொய்யாயிருப்பவனை, மெய்யர் மெய்யை - மெய்யர்கட்கு மெய்யாயிருப்பவனை, போது-தாமரைமலர்போன்ற, அரி - செவ்வரி பரந்த, கண்இணை - இரண்டு கண்களையும், பொன்தொடிதோள் - பொற்றொடியை யணிந்த தோள்களையும், அர பை அல்குல்-பாம்பின்படம்போலும் அல்குலையு முடைய, மடந்தை நல்லீர் - இளம்பெண்களே, பாடி - புகழ்ந்து பாடி, பொற்சுண்ணம் இடித்தும் நாம், எ - று.

க - ரை. நீலகண்டனும், தேவர்க்கு அமிர்தமா யிருப்பவனும், மாணிக்கக் கூத்தனும், தேவனும், தேவர் பெருமானும், நம்மை வலிந் தாட்கொண்டவனும், பொய்யர்க்குப் பொய்யனும், மெய்யர்க்கு மெய்யனும் ஆகிய சிவபிரானைப் பாடிப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. அமர்தல் விரும்புதல் எனினுமாம். மருந்து - ஔடதம் எனினு மமையும். மாணிக்கக் கூத்தன் - மாணிக்கம்போலும் கூத்தினையுடையவன். இதனை "சேணிற்பொலி செய்பொன் மாளிகைத் தில்லைச் சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தன்" என்னும் திருக்கோவையார் உ௬-ம் செய்யுளுரையிற் காண்க. மாணிக்கத்தைக் கூத்திற் குவமையாக வுரைப்பினு மமையும். அரபை என்பது பைஅர என மாறி நின்றது. (கஉ)

மின்னிடைச்செந்துவர்வாய்க்கருங்கண்
வெண்ணகைப்பண்ணமர்மென்மொழியீர்
என்னுடையாரமுதெங்களப்ப
னெம்பெருமானிமவான்மகட்குத்
தன்னுடைக்கேள்வன்மகன்றகப்பன்
றமையனெம்மையன்றாள்கள்பாடிப்
பொன்னுடைப்பூண்முலைமங்கைநல்லீர்
பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. மின்இடை - மின்னற்கொடி போலும் இடையையும், செந்துவர்வாய் - செம்பவளம்போலும் அதரத்தையும், கருங்கண் - கரியகண்களையும், வெள்நகை - வெண் பல்லையும், பண் அமர்மெல் மொழியீர் - பண்ணும் விரும்பும்படியான மெல்லிய

மொழியையும் உடையீர், என்னுடை ஆர்அமுது - என்னுடைய அரிய அமிர்தம், எங்கள் அப்பன்-எங்கள்தந்தை, எம்பெருமான்-எம்பிரான், இமவான்மகள்கு தன்னுடைக் கேள்வன் - மலையரையன் மகளாகிய பார்வதி தேவிக்கு மணாளன், மகன் - புதல்வன், தகப்பன் - தந்தை, தமையன் - முன்பிறந்தான், எம்மையன் - எம்மிறைவன், (அவனது) தாள்கள் பாடி - திருவடிகளைப் பாடி, பொன்னுடைப்பூண் - சொன்னாபரணங்களை யணிந்த, முலை - தனங்களை யுடைய, மங்கைநல்லீர் - மங்கைப் பருவப் பெண்களே, பொற்றிருச்சுண்ணம் இடித்தும்நாம். எ - று.

க - ரை. மின்போலும் இடைமுதலிய அவயவங்களை யுடைய பெண்காள், எனக்கு அரிதாகிய அமுதம் முதலிய போன்றுள்ள சிவபெருமானுக்குப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. வாய் - இங்கு அதரத்துக்காயிற்று. பண் என்றது இந்தளம், குறிஞ்சி, சீகாமரம், கொல்லி, கௌசிகம், நட்டபாடை பஞ்சுரம் முதலியவற்றை. ஒருருவாய்க் கூடியிருத்தலால் "கேள்வன்" என்றும், பராசத்தியிற் சிவம் தோன்றிற்று என்னு முறைமையால் "மகன்" என்றும், சத்திக்குப் பிறப்பிடமாதலால் "தகப்பன்" என்றும், சத்திக்கு முன்னோனாதலால் "தமையன்" என்றும் கூறினர். (கரு)

சங்கமரற்றச்சிலம்பொலிப்பத்
தாழ்குழல்சூழ்தருமாலையாடச்
செங்கனிவாயிதழுந்துடிப்பச்
சேயிழையீர்சிவலோகம்பாடிக்
கங்கையிரைப்பவராவிரைக்குங்
கற்றைச்சடைமுடியான்கழற்கே
பொங்கியகாதலிற்கொங்கைபொங்கப்
பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. சங்கம் அரற்ற - சங்கவளையல்கள் முழங்கவும், சிலம்பு ஒலிப்ப - சிலம்புகள் ஒலிக்கவும், தாழ்குழல் சூழ்தரும்மாலை ஆட - நெடிய கூந்தலில் சுற்றிய பூமாலையசையவும்; செங்கனி வாய் இதழும் துடிப்ப - செவந்த கொவ்வைக் கனிபோலும் வாயிலுள்ள அதரம் துடிக்கவும், சேயிழையீர் - பெண்களே, சிவலோகம் பாடி - சிவநகரத்தைப் பாடி, கங்கை இரைப்ப - கங்கை ஒலிக்க,

அரா இரைக்கும் - சர்ப்பம் ஒலித்தற் கிடமாகிய, கற்றை - திரட்சியாகிய, சடைமுடியான் கழற்கே - சடைமுடியையுடையானது திருவடிக்கே, பொங்கிய காதலின் - மிக்க அன்போடு, கொங்கை பொங்க - தனங்கள் விம்ம, பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாம்——எ - று.

க - ரை. சங்கவளையல் முதலியவை சத்திக்கும்படி, கங்கைச்சடையனாகிய சிவபெருமானுக்கு மிக்க அன்போடு பொற்சுண்ணமிடிப்போம் என்பதாம். கரு (கச)

ஞானக்கரும்பின்றெளியைப்பாகை
நாடற்கரியநலத்தைநந்தாத்
தேனைப்பழச்சுவையாயினானைச்
சித்தம்புகுந்துதித்திக்கவல்ல
கோனைப்பிறப்பறுத்தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும்பேறவாழ்த்திப்
பானற்றடங்கண்மடந்தைநல்லீர்
பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப-ரை. ஞானக்கரும்பின் தெளியை-ஞானமாகிய கருப்பஞ்சாற்றின் தெளிவை, பாகை - அதின் பாகை, நாடற்கு அரியநலத்தை - தேடுதற்கரிய நன்மையை, நந்தா தேனை - சுவைகெடாத தேனை, பழச்சுவையாயினானை - முக்கனிகளின் சுவையாகியிருப்பவனை, சித்தம் புகுந்து தித்திக்க வல்ல கோனை - அன்பர் மனத்துட் புகுந் தினிக்கவல்ல இறைவனை, பிறப்பு அறுத்து ஆண்டு கொண்ட - பிறவிப்பிணிப்பைச் சேதித்து ஆண்டுகொண்டருளிய, கூத்தனை - கூத்தப்பிரானை, நாதழும்பு ஏறவாழ்த்தி - நாவில் வடு உண்டாகும்படி தோத்திரம் பண்ணி, பானல் - கருங்குவளை மலர் போன்ற, தடம்கண் - விசாலமான கண்களையுடைய, மடந்தை நல்லீர் - இளமாதரே, பாடி - பாடாநின்று, பொற்சுண்ணம் இடித்தும் நாம்——எ - று.

க - ரை. கருங்குவளை மலர்போலுங் கண்களையுடைய மாதர்களே, ஞானக்கரும்பின் தெளிவு முதலானவைபோன்று எமக்கு இனிமையாயிருப்பவனும்,எமது பிறப்பினையறுத்தாண்டுகொண்ட கூத்தப்பிரானும் ஆகிய சிவபிரானை நாவில் தழும்புண்டாம்படிப் புகழ்ந்துபாடிப் பொற்சுண்ணமிடிப்போம் என்பதாம்.

வி - ரை. பழச்சுவை யென்பதில் பழம் முக்கனிகளையும் உணர்த்துகின்றது. முக்கனி - வாழைக்கனி, பலாக்கனி, மாங்

கனி என்பன. "வாழைக்கனி பலவின்கனி மாங்கனி தாஞ்சிறந்த, கூழைச்சுருள் குழையப்ப மெள்ளுண்டை யெல்லாந் துறுத்தும், பேழைப்பெருவயிற்ரேடும் புகுந்தென்னுளம் பிரியான், வேழத் திருமுகத்துச் செக்கர்மேனி விநாயகனே" என்னும் கபிலதேவர் திருவாக்கானும் உணர்க. (கரு)

ஆவகைநாமும்வந்தன்பர்தம்மோ
டாட்செயும்வண்ணங்கள்பாடிவிண்மேல்
தேவர்கனவிலுங்கண்டறியாச்
செம்மலர்ப்பாதங்கள்காட்டுஞ்செல்வச்
சேவகமேந்தியவெல்கொடியான்
சிவபெருமான்புரஞ்செற்றகொற்றச்
சேவகனுமங்கள்பாடிப்பாடிச்
செம்பொன்செய்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. ஆவகை - பிழைக்கும் வகை, நாமும் வந்து - நாமும் வந்து, அன்பர் தம்மோடு - அன்பர்களுடன் கூடி, ஆள் செய்யும் வண்ணங்கள் பாடி - அடிமைசெய்யும் விதங்களைப்பாடி, விண்மேல் தேவர் - விண்ணுலகத்துள்ள தேவர்கள், கனவிலும் கண்டு அறியா - கனவிலுங் கண்டறியாத, செம்மலர் பாதங்கள் காட்டும்-செந்தாமரை மலர்போலும் பாதங்களை (எமக்கு)க்காட்டு கின்ற, செல்வச் சேவகம் ஏந்திய வெல்கொடியான் - வளமாகிய இடபவுருவத்தைத் தன்னிடங் கொண்டுயர்த்த வெல்கொடியை யுடையவன், சிவபெருமான் - சிவபிரான், புரம்செற்ற கொற்றம் சேவகன் - திரிபுரங்களை யழித்த வெற்றித் தொழிலை யுடைய வன், நாமங்கள் பாடிப்பாடி - (அவனது) திருநாமங்களைப் பாடிப் பாடி, செம்பொன் செய் சுண்ணம் இடித்தும் நாம்——எ-று.

க - ரை. நாமும் உய்யும் வண்ணம் அன்பரோடு கூடி அடிமைசெய்யும் விதங்களையும், தேவர்கள் கனவிலுங் கண்டறி யாத தன் திருவடியை எமக்குக் காட்டுகின்ற இடபக்கொடியை யுடையவனும், முப்புரத்தை யழித்தவனுமாகிய சிவபெருமானது திருநாமங்களையும் புகழ்ந்து பாடிப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. கனவிலும் என்ற வும்மை நனவிற் கண்டறியா ராதலேயன்றி யெனப்பொருள்படுதலால், நனவிற் கண்டறியாமை சொல்லாமே யமையும். காட்டும் எனவாளா கூறினமையால் எமக்கு நனவு கனவு என்னும் நியதியின்றி எப்பொழுதும் காட்டும் என்றவாருயிற்று. (கசு)

தேனகமாமலர்க்கொன்றைபாடிச்
சிவபுரம்பாடித்திருச்சடைமேல்
வானகமாமதிப்பிள்ளைபாடி
மால்விடைபாடிவலக்கையேந்தும்
ஊனகமாமழுச்சூலம்பாடி
யும்பருமிம்பருமுய்யவன்று
போனகமாகநஞ்சுண்டல்பாடிப்
பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. தேன் அகம்ஆம் - தேனைத் தன்னிடத்துக்கொண்ட, கொன்றைமலர் பாடி - கொன்றை மலர்களைப் பாடி, சிவபுரம் பாடி - சிவபுரத்தைப் பாடி, திருச்சடைமேல் - திருச்சடைமீதிருக்கிற, வானகம்ஆம் - ஆகாயத்தை யிடமாகக்கொண்ட, மதிப்பிள்ளைபாடி - இளம்பிறையைப் பாடி, மால்விடைபாடி - மால்விடையையும் பாடி, வலக்கையேந்தும் - வலக்கையிலேந்திய, ஊனகம்ஆம் - மாமிசத்துக் கிடமாகிய, மழுசூலம் பாடி - மழுச்சூலங்களைப் பாடி, உம்பரும் இம்பரும் உய்ய - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் பிழைக்கும் பொருட்டு, அன்று - அக்காலத்தில், நஞ்சு - விஷத்தை, போனகமாக உண்டல்பாடி - அமுதாகக் கொண்டுண்ணலையும்பாடி, பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாம் —— எ - று.

க - ரை. இறைவனது கொன்றை மலரைப் புகழ்ந்து, அவனது சிவபுரத்தைப் புகழ்ந்து, அவன் சடைமேலதாகிய இளம்பிறையைப் புகழ்ந்து, அவனது இடபவாகனத்தைப் புகழ்ந்து, அவனது மழுச்சூலங்களைப் புகழ்ந்து, தேவர் முதலானவர்கள் பிழைக்கும்படி நஞ்சுண்ட செய்தியைப் புகழ்ந்து அவனுக்குப் பொற்சுண்ணமிடிப்போம் என்பதாம். (கஎ)

அயன்றலைகொண்டு செண்டாடல்பாடி
யருக்கனெயிறுபறித்தல்பாடிக்
கயந்தனைக்கொன்றுரிபோர்த்தல்பாடிக்
காலனைக்காலாலுதைத்தல்பாடி
இயைந்தனமுப்புரமெய்தல்பாடி
யேழையடியோமையாண்டுகொண்ட
நயந்தனைப்பாடிநின்றாடியாடி
நாதற்குச்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. அயன் தலைகொண்டு - பிரமனது தலையைக்கொண்டு, செண்டாடல் பாடி-பந்தாடுதலைப்பாடி, அருக்கன் எயிறு

பறித்தல் பாடி - சூரியன் பல்லைத் தகர்த்தலைப்பாடி, கயந்தனைக் கொன்று - யானையைக் கொன்று, உரிபோர்த்தல் பாடி - அதனது தோலைப் போர்த்துக் கொண்டமையைப் பாடி, காலனைக் காலால் உதைத்தல் பாடி - யமனைத் திருவடியா லுதைத்தமையைப் பாடி, இயைந்தன முப்புரம் எய்தல்பாடி - ஒன்றாகக் கூடிவந்த முப்புரங்களை (ஒருகணையால்) எய்தமையைப் பாடி, ஏழை அடியோமை ஆண்டுகொண்ட - அறிவிலிகளாகிய அடியோங்களையாண்டு கொண்டருளிய, நயம்தனைப்பாடி - நன்மையைப் பாடி, நின்று ஆடிஆடி - நின்றசைந் தசைந்து, நாதற்கு - இறைவன் பொருட்டு, சுண்ணம் இடித்தும் நாம் —— எ - று.

க - ரை. பிரமன் சிரத்தைச் செண்டாடுதல் முதலிய இறைவன் பெருமைகளைப் புகழ்ந்துபாடிப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

பிரமகபாலம் கரத்தேந்திய வரலாறு :—தன்னைப் பிரமமென்று அகங்கரித்த பிரமனுடைய செருககடங்கும்பொருட்டு சிவபெருமான் வைரவமூர்த்தியை உண்டாக்க, அவ்வைரவமூர்த்தியைக் கண்டு பிரமனுடைய நடுச்சிரம் நகைக்க, வைரவர் அதனைக் கொய்து கரத்தேந்தி முனிவர் முதலியோர்பால் பலி ஏற்றனர் என்பது. (கஅ)

வட்டமலர்க்கொன்றைமாலைபாடி
மத்தமும்பாடிமதியும்பாடிச்
சிட்டர்கள்வாழுந்தென்றில்லைபாடிச்
சிற்றம்பலத்தெங்கள்செல்வம்பாடிக்
கட்டியமாசுணக்கச்சைபாடிக்
கங்கணம்பாடிக்கவித்தகைம்மேல்
இட்டுநின்றாடுமரவம்பாடி
யீசற்குச்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. வட்டமலர்க் கொன்றைமாலைபாடி - வட்டமாகிய கொன்றைமலர் மாலையைப்பாடி, மத்தமும்பாடி - ஊமத்த மலரையும் பாடி, மதியும்பாடி - பிறையையும்பாடி, சிட்டர்கள் வாழும் - அன்பர்கள் வாழ்கின்ற, தென்தில்லைபாடி - தென்றில்லையையும் பாடி, சிற்றம்பலத்து எங்கள் செல்வம்பாடி - திருச்சிற்றம்பலத்திலுள்ள எமது செல்வத்தைப் பாடி, கட்டியமாசுணக்கச்சை பாடி - கட்டின சர்ப்பக் கச்சையைப் பாடி, கங்கணம் பாடி-(சர்ப்ப) கங்கணத்தைப்பாடி, கவித்த - மூடின, கைமேல் - இறைவனது கையின்மேல், இட்டு - வைக்கப்பட்டு, நின்றுஆடும் -

படமெடுத்து நின்ருடுகின்ற, அரவம்பாடி - பாம்பைப்பாடி, ஈசற்கு - சர்வேசுவரனுக்கு, சுண்ணம் இடித்தும்நாம்—— எ - று.

க - ரை. இறைவன் அணிந்திருக்கிற சொன்றைமலர்மாலை யையும், பிறைச்சந்திரனையும், அவனது தில்லைப் பதியையும், சிற்றம்பலத்திலுள்ள எமது செல்வமாகிய சிவபெருமானையும், அரவக் கச்சையையும், கங்கணத்தையும், பாம்பையும் புகழ்ந்துபாடிப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. ஊமத்தம் மத்தம் என முதற்குறையாயிற்று. சிட்டர் - சிஷ்டர் என்னும் வடமொழித்திரிபு. (கக)

வேதமும்வேள்வியுமாயினுர்க்கு
மெய்ம்மையும்பொம்மையுமாயினுர்க்குச்
சோதியுமாயிருளாயினுர்க்குத்
துன்பமுமாயின்பமாயினுர்க்குப்
பாதியுமாய்முற்றுமாயினுர்க்குப்
பந்தமுமாய்வீடுமாயினுருக்
காதியுமந்தமுமாயினுருக்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ப - ரை. வேதமும் - வேதங்களும், வேள்வியும்- (அவற்றிற் சொல்லப்படுகிற) யாகங்களும், ஆயினுர்க்கு - ஆகியிருந்தவர்க்கு, மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினுர்க்கு - மெய்யும் பொய்யு மானவர்க்கு, சோதியும்ஆய் இருள் ஆயினுர்க்கு - ஒளியுமாகி இருளு மாயினவர்க்கு, துன்பமும்ஆய் இன்பம் ஆயினுர்க்கு - துக்கமுமாகிச் சுகமுமானவர்க்கு, பாதியும் ஆய்முற்றும் ஆயினுர்க்கு - பாதியுமாகி முழுதுமாயினவர்க்கு, பந்தமும் ஆய்வீடும் ஆயினுருக்கு - பந்தமுமாகி மோக்ஷமுமாயினவர்க்கு, ஆதியும் அந்தமும் ஆயினுருக்கு - முதலும் இறுதியும் ஆயினவர்க்கு, ஆட - ஆடும்பொருட்டு, பொற்சுண்ணம் இடித்தும் நாம்—— எ - று.

க - ரை. வேதம், வேள்வி, மெய்ம்மை, பொய்ம்மை, ஒளி, இருள், துன்பம், இன்பம், பாதி, முழுமை, பந்தம், வீடு, ஆதி, அந்தம் என்னும் இவையாவும் தானேயாய் நின்ற சிவபெருமானுக்குப் பொற்சுண்ண மிடிப்போம் என்பதாம்.

வி - ரை. மெய்ம்மை பொய்ம்மை - உண்மை யின்மைகள். பந்தம்-பிறவிக்கட்டு. இறைவனது மகிமையை யெடுத்துச் சொல்லுவதில் வேதம் சிறந்ததாதலால் முதலில் "வேதமும்" என்றும், அவ்வேதங்களாலன்றிச் சற்கருமங்களின் கூறுபாடுகள் அறிய வொண்ணுமையால் அடுத்து "வேள்வியும்" என்றும் கூறினுர். "மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினுர்க்கு என்னும் தொடக்கத்தன இறைவனது பரிபூர்ண வியாபகத்தை விளக்கிநின்றன. (உ0)

# திருக்கோத்தும்பி.

சிவனோடைக்கியம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா.

பூவேறுகோனும்புரந்தரனும்பொற்பமைந்த
நாவேறுசெல்வியுநாரணனுநான்மறையும்
மாவேறுசோதியும்வானவருந்தாமறியாச்
சேவேறுசேவடிக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. பூஏறுகோனும் - மலர்மீதேறிய இறைவனாகிய பிரமனும், புரந்தரனும் - இந்திரனும், பொற்பு அமைந்த - அழகமைந்த, நாவேறு செல்வியும் - பிரமனது நாவிலேறிய செல்வியாகிய சரசுவதியும், நாரணனும் - திருமாலும், நான்மறையும் - சதுர்வேதங்களும், மாஏறு சோதியும் - பெருமை மிகுந்த சுடர்களும், வானவரும் - பிற தேவர்களும், அறியா - அறியவொண்ணாத, சேஏறு சேவடிக்கே - இடபத்தின் மீதேறுகின்ற திருவடிக்கண்ணே, சென்று ஊதாய் - போயூதுவாயாக, கோத்தும்பீ - அரசவண்டே. எ - று.

க - ரை. அரசவண்டே, நீ; பிரமன், இந்திரன், சரசுவதி, திருமால், நான்கு வேதங்கள், முச்சுடர்கள், மற்றைத்தேவர்கள், ஆகிய எல்லாரும் அறியவொண்ணாத இடபவாகனனாகிய சிவபெருமானது திருவடியிற்போய் ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. கோன் என்பது பூவேறு என்ற விசேடணத்தால் பிரமனையும், செல்வி என்பது நாவேறு என்ற விசேடணத்தால் சரசுவதியையும் உணர்த்தின. சோதி என்றது முச்சுடர்களை, அவை சூரியன், சந்திரன், அக்கினி என்பன. மாஏறுசோதி என்பதில் ஏறு என்பது மிகுதல் என்னும் பொருளது. திருவடிதாமரை போலுதலால் வண்டணுகி ஊதுதற்குப் பொருத்த முடைத்தென்பதறிக. (க)

நானுரென்னுள்ளமார்ஞானங்களாரென்னையாரறிவார்
வானோர்பிரானென்னையாண்டிலனேன்மதிமயங்கி
ஊனுருடைதலையிலுண்பலிதேரம்பலவன்
தேனுர்கமலமேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. வானோர்பிரான் - தேவர் பெருமான், என்னை ஆண்டிலனேல் - என்னை யாண்டிலனுயின், நான்ஆர் - நான்யார், என்உள்ளம்ஆர் - என்மனம்யார், ஞானங்கள்ஆர் - ஞானங்கள் யார், என்னை அறிவார்யார் - என்னையறிபவர் யாவர், மதிமயங்கி - புத்திமயங்கி, ஊன்ஆர்உடை தலையில் - மாமிசம் பொருந்திய உடைந்ததலையில், உண்பலிதேர் - உண்ணுதற்குரிய பலியேற்கின்ற, அம்பலவன் - அம்பலவாணனது, தேன்ஆர்கமலமே சென்று ஊதாய் - தேன்பொருந்திய தாமரைமலரை யொத்த திருவடியின்கண்ணே போய் ஊதுவாயாக, கோத்தும்பீ—— எ - று.

க - ரை. அரசவண்டே; தேவர் பெருமானுகிய இறைவன் வலியவந்து என்னை யாண்டருளாவிடின், நான் யார், என்மனம் யார், ஞானங்கள் யார், என்னையறிவார் யார், ஒன்றுமில்லையாய் முடியும், ஆதலால், நீ பிரம கபாலத்தில் உணவேற்கின்ற அம்பலவாணனது திருவடிக்கண்ணே சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. நானுர், என்னுள்ளமார், ஞானங்கள்யார் என்பன வழுவமைதிகள். உடைதலை - உடைந்ததலையோடு, பலி-பிக்ஷை. அம்பலவன் தேனுர்கமலம் என்றதனுல் கமலம் திருவடியைக் குறித்தது. அம்பலவன் கமலம் என இயையும். இந்தப்பாட்டிலும் தேனுர்கமலமே சென்றூதாய் என்றது மேலைப்பாட்டில் சேவடிக்கே சென்றூதாய் என்றதை வற்புறுத்தற்கென்க. (௨)

தினைத்தனையுள்ளதோர்பூவினிற்றேனுண்ணுதே [ம்
நினைத்தொறுங்காண்டோறும்பேசுந்தோறுமெப்போது
அனைத்தெலும்புண்ணெகவானந்தத்தேன்சொரியும்
குனிப்புடையானுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. தினைத்தனை உள்ளது - தினையளவினதா யுள்ளதாகிய, ஓர் பூவினில் தேன்உண்ணுது - ஒரு பூந்தேனை யுண்ணுமல், நினைத்தொறும் - நினைக்குந்தோறும், காண்டோறும் - காணுந்தோறும், பேசுந்தோறும் - சொல்லுந்தோறும், எப்போதும் - மற்றெந்தக் காலத்தும், அனைத்து எலும்பு - எல்லா எலும்புகளும், உள்நெக - உள்ளேநெகிழ, ஆனந்தத்தேன் சொரியும் - இன்பத்தேனைப் பொழிகின்ற, குனிப்புஉடையானுக்கே - கூத்துடையா

னிடத்தே, சென்றுஊதாய் - போய் ஊதுவாயாக, கோத்தும்பீ —— எ - று.

க - ரை. அரசவண்டே; நீ, மிகவும் சிறிதாகிய மலர்த் தேனை யுண்ணுமல், நினைத்தல், காண்டல், பேசுதல், என்னும் இம்மூன்றைச் செய்கிற எல்லாக் காலங்களிலும் வலிய எலும்புகளும் உருகும்படி இன்பத்தேனைப் பொழிகின்ற கூத்தப்பிரானிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. நீ உண்ணுந் தேன் மிகச் சிறிது, அதற்குப் பல மலரினுஞ் சென்றுழலாநின்றனை, அதுவேண்டா,நினைக்க இனிப்பதும், காண இனிப்பதும், பேச இனிப்பதுமாகிய இன்பத் தேனைப் பெரிதும் பொழியாநின்ற கூத்தப்பிரானிடஞ்சென் றூது வாயாக என்றற்கு, "தினைத்தனை யுள்ளதோர் பூவினிற் றேனுண்ணாதே, நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும், அனைத்தெலும்புண்ணெக வானந்தத் தேன் சொரியும், குனிப்புடையானுக்கே சென்றூதாய்" என்றார். எலும்புண்ணெக என்பதற்கு உடம்பும் மனமும் உள்ளுருக என்றுரைத்தலுமாம். குனிப்பு - கூத்தாடல். (கூ)

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பி லென்னையு மாட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

ப-ரை. கண்ணப்பன் ஒப்பது-கண்ணப்பனன்பை யொப்பதாகிய, ஓர் அன்பின்மை கண்டபின்-ஒப்பற்ற அன்பில்லாமையை என்னிடத்துக்கண்ட பிறகு, என் அப்பன் - என்தகப்பன், என் ஒப்பில் - எனக்குச் சமானமில்லாத, என்னையும் ஆட்கொண்டருளி - என்னையும் அடிமைகொண்டருளி, வண்ணப்பணித்து-குணவானாகப்பணித்து, என்னை வாவென்ற - என்னை வாவென்றழைத்த, வான் கருணை - மேலாகிய கருணையையுடைய, சுண்ணம் - துகளுருவாகிய, பொன்நீற்றற்கே - திருவெண்ணீற்றை யுடையானிடத்தே, சென்றுஊதாய்-போய் ஊதுவாயாக, கோத்தும்பீ ——, எ - று.

க - ரை. அரசவண்டே, கண்ணப்பனது அன்புபோன்ற அன்பு என்னிடத் தில்லையாதலைக் கண்டும், என்மீதுள்ள பெருங் கருணையால் வாவென்று கூவியாட்கொண்ட சிவபெருமானிடம் சென்று ஊதுவாயாக என்பதாம்.

கண்ணப்பநாயனர் வரலாறு:—தொண்டை வளநாட்டிற் சேர்ந்த திருக்காளத்தி யென்னும் ஸ்தலத்துக்குச் சமீபித்திருக்கின்ற உடுப்பூரில் வாழும் வேடர்குல ராசனுகிய நாகனென்பவன் செய்த தபோபலத்தினுல் புத்திரராகத் திருவவதாரஞ் செய்து திண்ணனுரென்று திருநாமம் பெற்று வில்வித்தை கற்றுணர்ந்து தம்முடைய பிதாவினுல் தங்கள் குலத்தலைமை பெற்றுக்கொண்டு வேடர்களுடன் போய்க் காட்டில் மிருகவேட்டை யாடும்போது ஒருபன்றியானது வேடர்களையும் வலைகளையுந் தப்பி யோடுவதைக் கண்டு துரத்திக்கொண்டு போய் அதனைச் சுரிகையாற் குத்திக் கொன்றபோது தம்முடன் தொடர்ந்து வந்த நாணன், காடன், என்னும் இரண்டு வேடரும் அதிசயித்து அச்சனே? இந்தப் பன்றி யிறைச்சியைத் தேவர் சிறிதுண்டு, எங்களுக்குங் கொடுத்தால் நாங்களும் உண்டு பசியாறுவோமென்று சொல்லி நீரிருக்குமிடமுங் காட்ட அவர்களுடன் சென்று பொன்முகலி யாற்றில் நடந்து அந்த நதிக்கரையில் பன்றியை யிட்டபோது நாணன் திண்ணனுரை நோக்கி இந்த மலையின்மேல் குடுமித்தேவ ரிருக்கின்றூர் அங்கே போனுல் கும்பிடலா மென்றுன்; அப்படியானுற் செல்லுவோமென்று மலையி லேறும்போதே சத்தினிபாதம் பதிந்ததுபோல அன்பு வளரச் சுவாமியைக் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் பெருகிப் புளகம் போர்ப்பப் பரவச மடைந்து சுவாமியை நோக்கித் தேவர் வேடுவர்போலத் தனியே யிருக்கின்றீர் இறைச்சி கொண்டுவந்து கொடுப்பாரு மில்லை யாதலால், நான் கொண்டுவருவே னென்று சென்று, கரையிலிட்ட பன்றியின் தசையை அம்பினுற் கொத்தி யெடுத்துக் காடன் மூட்டி வைத்த தீயிற் காய்ச்சி வாயிலிட்டுப் பக்குவம் பார்த்துத் தேக்கிலையைத் தைத்து அதில் வைத்துத் தேனும் விட்டுப் பொன்முகலிநீர் வாயினிடத்தும், திருப்பள்ளித்தாமம் சிரசினிடத்தும் வைத்துக் கொண்டுவந்து சுவாமி திருமுடியில் சிவகோசரியார் அருச்சனை செய்த பத்திர புட்பங்களைத் தமது காலில் தொடுத்திருக்கும் பாதரக்ஷையால் மாற்றி வாய்நீர் மஞ்சனஞ்செய்து முடியிலிருந்த பத்திர புட்பங்களைச் சாத்தித் தையலிலைத் தொன்னையை எதிரில் வைத்து - சுவாமீ இது பக்குவமுள்ள இறைச்சி, நானும் மென்று பார்த்தேன் தேனுங் கலந்திருக்கின்றது அமுது செய்தருளுமென்று சொல்லி அமுது செய்வித்தவுடன் அந்திப் பொழுதாக அவ்விரவு முழுவதும் நித்திரையின்றிக் காவலிருந்து மறுநாள்சென்று வேட்டையாடி இறைச்சிகளைப் பக்குவஞ்செய்து முன்னுட்போல் திருமஞ்சன முதலானது ஐந்துதினத் தளவுஞ் செய்து வருகை

யில், இச்செய்கை சிவகோசரியாருக்கு அநுசிதமா யிருப்பதினால் சுவாமீ இது தேவரீர் திருவுளத்திற்குப் பாங்குதானோ வென்று வருந்துகின்றமையால், அவருக்குத் தம்முடைய தொண்டனார் அன்பி னுறுதிப்பாட்டினைத் தெரிவிக்கும்பொருட்டு, ஏழாநாள் ஒரு திருக்கண்ணில் உதிர மொழுகும்படி யிருக்க, அதனை ஊன முதுகொண்டு வருகிற நாயனார் கண்டு மிகவும் வருந்திப் பச்சிலை மூலிகைகளைப் பிசைந்து விட்டும் நிற்காமையால் தம்முடைய வலக்கண்ணைப் பெயர்த்து அப்பினார். உடனே உதிரம் நிற்கக் கண்டு மகிழும்போது சிவகோசரியார் நாயனார் உறுதியை அறியும்பொருட்டு மற்றொரு திருக்கண்ணிலும் உதிரம் பெருகும்படி சுவாமி திருவுளங் கொண்டிருக்கக் கண்டு இதற்கு நானஞ்சேன் என்னிடத்தில் மருந்திருக்கின்றதென்று உதிரம் பெருகுங் கண்ணில் அடையாளத்துக்காகத் தம்முடைய காலைத் தூக்கி அக்கண்ணிடத்தில் வைத்துக்கொண்டு தம்முடைய மற்றொரு கண்ணினைப் பாணத்தினாற் குத்திப் பெயர்க்கத் தொடங்கினபோது காளத்திநாயனார் திருவுள மிரங்கி அன்பர் கையைத் தமது திருக்கரத்தாற் பற்றிக்கொண்டு கண்ணப்ப நிற்க என்று திருவாய் மலர்ந்தருளி எப்போதும் நம்முடைய வலப்புறத்தி லிருக்கக் கடவையென்று அருள் செய்தனர். [இந்தச் சுவாமிகள் சிவலிங்கத்தினால் முத்தி யடைந்தது.]—கண்ணப்பி வைத்த காரணத்தினால் கண்ணப்ப சுவாமிகளென்று யாவருந் துதிக்கின்றனர். [இந்தத் தலத்தில் சுவாமிக்குத் திருப்பெயர் காளத்தீசர். தேவியார் ஞானப் பூங்கோதை.]

வி - ரை. திண்ணனாரது அன்புதலையாய அன்பாதலால், "கண்ணப்ப னொப்பதோரன்பு" என்றார். என்னொப்பில் என்னையும் என்றது இழிவினால் எனக்கு நிகரில்லாத என்னையும் என்றபடி. வாவென்றமையால், அடுத்து "வான் கருணை" என்றார். பொன்னீற்றன் என்பதற்குப் பொன்மயமாகிய நீற்றை யுடையவன், பொன் நிறமாகிய நீற்றை யுடையவன், அழகாகிய நீற்றை யுடையவன் எனப் பல படப்பொருள் கூறுவர் (ச)

அத்தேவர்தேவரவர்தேவரென்றிங்ஙன்
பொய்த்தேவுபேசிப்புலம்புகின்றபூதலத்தே
பத்தேதுமில்லாதென்பற்றறநான்பற்றிநின்ற
மெய்த்தேவர்தேவர்க்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. அத்தேவர் தேவர்-அந்தத் தேவரே தேவர், அவர் தேவர் - அவரே தேவர், என்று - என்றுசொல்லி, இங்ஙன் பொ

ய்த்தேவு பேசி - இவ்வாறு பொய்யாகிய தேவர்களைப் புகழ்ந்து, புலம்புகின்ற - புலம்பாநின்ற, பூதலத்தே - பூலோகத்தில், பத்து ஏதும் இல்லாது - பற்று சிறிதுமின்றி, என்பற்று அற - என்பற்றற்றொழிய, நான்பற்றிநின்ற - நான்பற்றி நிற்கிற; மெய்த்தேவர் தேவர்க்கே-உண்மையாகிய தேவர்பிரானுக்கே, சென்றூதாய்-போய் ஊதுவாயாக, கோத்தும்பீ,—— எ - று.

க - ரை. அரசவண்டே; அந்தத் தேவரே தேவர் என்று பொய்த்தேவரைப் புகழ்ந்துபேசிப் புலம்புகின்ற இவ்வுலகத்தில் என்பிறவித்தொடர்பு சிறிது மில்லாமல் ஒழியும்படி நான்பற்றி நிற்கின்ற மெய்த்தேவனாகிய சிவபிரானுக்கே சென்று ஊதுவாயாக என்பதாம். (ரு)

வைத்தநிதிபெண்டீர்மக்கள்குலங்கல்வியென்னும்
பித்தவுலகிற்பிறப்போடிறப்பென்னும்
சித்தவிகாரக்கலக்கந்தெளிவித்த
வித்தகத்தேவர்க்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. வைத்தநிதி - ஈட்டிவைத்த செல்வம், பெண்டீர்-மனைவியர், மக்கள் - புதல்வர், குலம் - குலம், கல்வி - கல்வி, என்னும் - என்கிற, பித்தவுலகில் - பித்துப்பிடித்தவுலகில், பிறப்போடு இறப்பு என்னும் - பிறப்போடு இறப்பு என்கிற, சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த - மனோவிகாரக் கலக்கத்தைத் தெளிவித்தருளிய, வித்தகத் தேவர்க்கே - ஞானவுருவினனாகிய கடவுளிடத்தே, சென்றூதாய் - போய் ஊதுவாயாக, கோத்தும்பீ—— எ - று.

க - ரை. அரசவண்டே; செல்வம், மாதர், மக்கள், குலம், கல்வி என்று பிதற்றித்திரிகின்ற இந்தப் பித்தவுலகில், பிறப்பு இறப்பு என்கிற மனோவிகாரக் கலக்கத்தை எனக்கு ஒழித்தருளின ஞானவுருவனாகிய இறைவனிடத்திற்சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. பிறப்பிறப்புக்களுக் கேதுவாகிய சித்தவிகாரத்தைத் தெளிவித்தருள் செய்தற்குரிய ஞானவுருவனாகிய இறைவனிருக்க, அவனை விட்டுச் செல்வ முதலியவற்றை உறுதிப் பொருள்களாக நம்பி யுழல்வதனால் இந்த வுலகைப் பித்த வுலகு என்றார். குலம் - உயர்குலம். வித்தகம் - ஞானம். நன்மையெனினுமாம். (சு)

சட்டோநினைக்கமனத்தமுதாஞ்சங்கரனைக்
கெட்டேன்மறப்பேனோகேடுபடாத்திருவடியை
ஒட்டாதபாவித்தொழும்பரைநாமுருவறியோம்
சிட்டாயசிட்டற்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. மனத்து அமுதுஆம் சங்கரனை - உள்ளத்திற்கு அமுதம் போன்ற சிவபெருமானை, நினைக்க சட்டோ - நினைக்கில் சேத முண்டாமோ (இல்லை), கேடுபடாத் திருவடியை - அழியாத இறைவனது திருவடியை, மறப்பேனோ-நான் மறந்துவிடுவேனோ, ஒட்டாத - அதனை நினைக்க இணங்காத, பாவித்தொழும்பரை - ஐம்புலன்களுக்கு அடிமைகளாகிய பாவிகளை, நாம் - யாம், உரு அறியோம் - உருவத்தைக் காணவும் மனம் இசையோம், சிட்டாய சிட்டற்கே - மேன்மையாகிய பெரியோனுக்கே, சென்று ஊதாய் —— எ - று.

க - ரை. அரசவண்டே; மனத்துக்கு அமுதம்போலுஞ் சிவபெருமானை நினைத்தால் எமக்குச் சேதமுண்டாமோ, உண்டாகாது ஆதலால், அவனை மறவேன், அவனை நினைத்தற் கிசையாத துட்டரை யாம் காணவும் அருவருப்போம், அந்தப் பெரியோனிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. சட்டு என்பது திசைச்சொல், கெட்டேன்-வியப்பிடைச் சொல், ஒட்டுதல் - சம்மதித்தல், சிட்டன்ஆய என்பது சிட்டாய எனத் தொகுத்தது. சிட்டன் - மேலோன். இது சிஷ்டன் என்னும் வடமொழிச் சிதைவு. (எ)

ஒன்றாய்முளைத்தெழுந்தெத்தனையோகவடுவிட்டு
நன்றாகவைத்தென்னைநாய்சிவிகையேற்றுவித்த
என்றாதைதாதைக்குமெம்மனைக்குந்தம்பெருமான்
குன்றாதசெல்வற்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. ஒன்றாய் முளைத்தெழுந்து-தானொரு முதற்பொருளாகவே முளைத்துத் தோன்றி, எத்தனையோ கவடுவிட்டு-எத்தனையோ கிளைகள்விட்டு, என்னை - அடியேனை, நன்று ஆகவைத்து - நன்மையுண்டாகவைத்து, நாய்சிவிகை ஏற்றுவித்த - நாயைச் சிவிகையில் ஏற்றுவித்ததுபோல அடியார் நடுவில் இருக்கவைத்த, என்தாதை - என்தந்தையானவனும், எம்தாதைக்கும் - எமதுதந்தைக்கும், எம்மனைக்கும் - எமது குடும்பத்துக்கும், பெருமான் - பெருமானாகிய, குன்றாதசெல்வற்கே - அழியாத செல்வமுடையானுக்கே, சென்று ஊதாய்-போய்ஊதுவாயாக, கோதும்பீ—எ-று.

க - ரை. அரசவண்டே ; பிரபஞ்சத்திற்கு முதற்பொருளும், பிரபஞ்சரூபியும், ஒன்றுக்கும் பற்ருத சிறியேனைத்தன் அடியார் நடுவில் இருக்கச்செய்த என் தந்தையும், என் குடும்பத்திற்குத் தலைவனும், அழியாத செல்வமுடையவனு மாகிய சிவபெருமானிடத்துச் சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. இறைவன்தான் ஒன்றில் தோன்ருத சுயம்பு ஆகையால் "ஒன்ருய் முளைத்தெழுந்து" என்றும், தானின்றிப் பிரபஞ்சவிரிவு இன்மையின் "எத்தனையோக வடுவிட்டு" என்றும் கூறினர். நன்ருக வைத்தென்னை நாய் சிவிகை ஏற்றுவித்த என்ருதை" என்றது இறைவன் தமது சிறுமை நோக்காது அடியார் நடுவில் இருக்கச் செய்த உபகாரம் கருதியென்க. (அ)

கரணங்களெல்லாங்கடந்துநின்றகறைமிடற்றன்
சரணங்களேசென்றுசார்தலுமேதானெனக்கு
மரணம்பிறப்பென்றிவையிரண்டின்மயக்கறுத்த
கருணைக்கடலுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. கரணங்களெல்லாம் கடந்துநின்ற - எல்லாக் கரணங்களையும் கடந்துநின்ற, கறைமிடற்றன் - விஷகண்டனது, சரணங்களே - திருவடிகளையே, சென்று சார்தலும் - போயடைந்தவுடன், தான் - தானே, எனக்கு - எனக்கிருந்த, மரணம் பிறப்பு என்ற-சாதல் பிறத்தல் என்று சொல்லப்பட்ட, இவை இரண்டின் மயக்குஅறுத்த - இவ்விரண்டினது மயக்கத்தைச் சேதித்தருளிய, கருணைக் கடலுக்கே-கருணுசமுத்திரத்துக்கே, சென்று ஊதாய் - போய் ஊதுவாயாக, கோத்தும்பீ——,எ - று.

க - ரை. அரசவண்டே, கரணங்களை யெல்லாங் கடந்து நின்றவனும், தன் திருவடியை யடைதலும் என் இறப்புப் பிறப்புக்களை யொழித்தவனும், கருணைக்கடலும் ஆகிய சிவபெருமானிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. கரணங்களெல்லாம் என்றமையால் அகக்கரணம் புறக்கரணங்களெல்லாவற்றையும் கொள்க. அகக்கரணமாவன-மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்பன. புறக்கரணமாவன-மெய், வாய், கண், மூக்கு, செவிமுதலியன. கரணங்களெல்லாம் கடந்து நிற்றலாவது கரணுதீதனுய் நிற்றல். கரணம் எனினும் கருவியெனினு மொக்கும். (கூ)

நோயுற்றுமூத்துநானுந்துகன்ருயிங்கிருந்து
நாயுற்றசெல்வநயந்தறியாவண்ணமெல்லாம்
தாயுற்றுவந்தென்னையாண்டுகொண்டதன்கருணைத்
தேயுற்றசெல்வற்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. நோய்உற்று - பிணியை யடைந்து, மூத்து - முதிர்ந்து, நான்நுந்துகன்றாய் இங்குஇருந்து - நான் தாய்ப்பசுவால் தள்ளப்பட்ட கன்றையொத்தவனாய் இவ்விடத்திருந்து, நாய்உற்ற செல்வம் நயந்து அறியாவண்ணம் எல்லாம் - நாயினேனடைந்த செல்வத்தை விரும்பியறியாதவகைகளை யெல்லாம்தந்து, தாய் உற்றுவந்து - தாய்போல எழுந்தருளி, என்னை ஆண்டுகொண்ட - என்னை யடிமை கொண்டருளின, தன்கருணைத்தே யுற்ற செல்வற்கே - தன் கருணையாகிய அழகு பொருந்திய செல்வத்தை யுடையவற்கே, சென்று ஊதாய் - போய் ஊதுவாயாக. கோத்தும்பி——,எ - று.

க - ரை. அரசவண்டே; பிறவிப் பிணியை யடைந்து முதிர்ந்து, பசுவினால் தள்ளப்பட்ட கன்றுபோல இவ்வுலகத்திலிருந்து வருந்தாநின்ற என்னைத் தாய்போலக் கருணைசெய்தாண்டருளின இறைவனிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. நுந்துகன்று-தாய்ப்பசுவால் தள்ளப்பட்ட கன்று. செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாம் என்றது முன்னொருகால் நான் கண்டறியாத செல்வத்தை யெல்லாம் என்றபடி. தேசு - அழகு. இது வடமொழிச்சிதைவு. திருக்கோவையார் ௩கூ-ம் செய்யுளில், "தேயத்ததாய்" என வந்தமைகாண்க. தேசு - ஒளி.

வன்னெஞ்சக்கள்வன்மனவலியனென்னாதே
கன்னெஞ்சுருக்கிக்கருணையினாலாண்டுகொண்ட
அன்னந்திளைக்குமணிதில்லையம்பலவன்
பொன்னங்கழலுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. வன்னெஞ்சக் கள்வன் - வலிய நெஞ்சினையுடைய சோரன், மனவலியன் என்னாது - மனோசுபாவத்தாலும் வலியனே யென்னாமல், கல்நெஞ்சு உருக்கி - கல்மனத்தை யுருகப் பண்ணி, கருணையினால் ஆண்டுகொண்ட - கருணையா லடிமை கொண்ட, அன்னம் திளைக்கும் - அன்னங்கள் நெருங்கின (வயல் சூழ்ந்த), அணிதில்லை அம்பலவன் - அழகிய தில்லையம்பலவாணனது, பொன்னங்கழலுக்கே - பொன்போலுந் திருவடிகளுக்கே, சென்று ஊதாய்-போய்ஊதுவாயாக,கோத்தும்பி——,எ-று.

க - ரை. அரசவண்டே, வலிய கல்லைநிகர்த்த மனத்தை யுடையவனென்று வெறுக்காமல் என் வன் மனத்தை யுருக்கித் தன் கருணையினால் என்னை ஆண்டுகொண்டருளின தில்லையம்பல

வாணனது பொன்போலுந் திருவடியின்கண்ணே சென்று ஊது வாயாக என்பதாம்.

வி - ரை. மனவலியன் என்பதில் மன என்பதை மன்ன வென்பதின் தொகுத்தல் விகாரமெனக்கொண்டு, மிகவும் வலியன் என்றுரைப்பினும் பொருந்தும். வன்னம் திளைக்கும் எனப்பிரித்து அழகுநிறைந்த எனக்கொள்ளினும் பொருந்தும். இப்பொருட்கு மணி யென்றதற்கு மணிமயமாகிய என்றுரைக்க. நெஞ்சு - இட மாகவும், மனம் இடத்துநிகழ் பொருளாகவும் கொள்க. வன் னெஞ்சன் மனவலியன் என்னுமல் கன்மனத்தை யுருக்கி என்னை யாண்டுகோடற்குக் காரணம் தன் பெருங் கருணையே யென்றற்கு "வன்னெஞ்சக் கள்வன் மனவலியனென்னாதே கன்னெஞ் சுருக் கிக் கருணையினாலாண்டுகொண்ட" என்றார். (கக)

நாயேனைத்தன்னடிகள்பாடுவித்தநாயகனைப்
பேயேனதுள்ளப்பிழைபொறுக்கும்பெருமையனைச்
சீயேதுமில்லாதென்செய்பணிகள்கொண்டருளும்
தாயானவீசற்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. நாயேனை - நாயினேனைக்கொண்டு, தன் அடிகள் பாடுவித்த - தன்திருவடிகளைப் பாடுவித்துக்கொண்ட, நாயகனை- இறைவனை, பேயேனது - பேயினேனது, உள்ளப்பிழை பொறுக் கும் - மனக்குற்றங்களைப் பொறுத்தருள்கின்ற, பெருமையனை - பெருமையையுடையானை, சீஏதும்இல்லாது - இகழ்தல் சிறிது மில்லாமல், என்செய் பணிகள் கொண்டருளும் - என்செய்பணி களை ஏற்றருள்கின்ற, தாயான ஈசற்கே - தாயைநிகர்த்த சர்வேசுர னுக்கே, சென்றூதாய் கோத்தும்பீ—, எ - று.

க - ரை. அரசவண்டே; நாயினேனைக்கொண்டு தன்னைப் புகழ்வித்துக்கொண்டவனும், பேயினேனது மனக்குற்றங்களைப் பொறுக்கின்ற பெருமையுடையவனும் ஆகிய என்பணிவிடையை யிகழாமல் ஏற்றுக்கொண்டருள்கின்ற தாய்போலும்இறைவனிடத் தேசென்று ஊதுவாயாக என்பதாம். (கஉ)

நான்றனக்கன்பின்மைநானுந்தானுமறிவோம்
தானென்னையாட்கொண்டதெல்லாருந்தாமறிவார்
ஆனகருணையுமங்குற்றேதானவனே
கோனென்னைக்கூடக்குளிர்ந்தூதாய்கோத்தும்பீ.

ப - ரை. நான்தனக்கு அன்பு இன்மை-நான் இறைவனுக்க ன்பில்லாதிருத்தல், நானும் தானும் அறிவோம் - நானும் அவனு

மே அறிவோம், தான் என்னை ஆட்கொண்டது - அவன் என்னை யடிமை கொண்டதை, எல்லாரும் அறிவார்-எல்லாருமே யறிவார்கள், ஆனகருணையும் - உண்டாகிய கருணையும், அங்குஉற்றே-அவ்விடத்ததே,(ஆதலால்) தான் அவனே-அச்சிவபெருமானே,கோன் என்னைக்கூட - இறைவனுய் என்னைக்கூடும்படி, குளிர்ந்து-மெத்தெனச் சென்று, ஊதாய் கோத்தும்பீ———,எ - று.

க - ரை. அரசவண்டே; இறைவனிடத்து நான் அன்புடையே னல்லாமை நானும் அவனும் அறிவோம், மற்றையர் அறியார். அவன் என்னை யாட்கொண்டதை யெல்லாரும் அறிவார். ஆதலால் என்னிடத்துண்டாகிய கருணையும் அவனதே. அவன் என்னை வந்து சேரும்படி நீ சென்று ஊதுவாயாக என்பதாம்.

கருவாயுலகினுக்கப்புறமாயிப்புறத்தே
மருவார்மலர்க்குழன்மாதினெடும்வந்தருளி
அருவாய்மறைபயிலந்தணனுயாண்டுகொண்ட
திருவானதேவற்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. உலகினுக்கு - உலகத்துக்கு, கருஆய் - பிறப்பிடமாய், அப்புறமாய்-அப்பாற்பட்டதுமாகி, இப்புறத்து-இவ்வுலகில், மருவார்மலர் குழல்மாதினெடும் வந்தருளி - மணந்தங்கிய நீண்ட கூந்தலையுடைய உமாதேவியோடும் எழுந்தருளி, அருஆய்-அருவமாகி, மறைபயில்-வேதங்களை ஓதுகின்ற, அந்தணனுய் - வேதியனுய், ஆண்டுகொண்ட - என்னை யடிமைகொண்ட, திருஆன தேவற்கே-அழகிய தேவனுக்கே, சென்றூதாய் கோத்தும்பீ——, எ - று.

க - ரை. அரசவண்டே, உலகத்துக்குப் பிறப்பிடமாய், அப்பாலாய், இவ்விடத்து எம்பெருமாட்டியோடும் எழுந்தருளி, அருவாய், அந்தணனுகி, என்னை யடிமைகொண்ட அழகிய சிவபெருமானிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம். (கசு)

நானுமென்சிந்தையுநாயகனுக்கெவ்விடத்தோம்
தானுந்தன்றையலுந்தாழ்சடையோனண்டிலனேல்
வானுந்திசைகளுமாகடலுமாயபிரான்
தேனுந்துசேவடிக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. தாழ்சடையோன் - தொங்குகின்ற சடையையுடைய சிவபெருமான், தானும் தன் தையலும் - தானும் தன் தேவியுமாக வந்து, ஆண்டிலனேல் - ஆண்டிலனுயின், நானும் என் சிந்தையும் - நானும் என் மனமும், நாயகனுக்கு எவ்விடத்

தோம் - இறைவனுக்கு எவ்விடத்தினும், வானும் திசைகளும் மாகடலும் ஆயபிரான் - ஆகாயமும் திக்குகளும்பெரியகடல்களுந் தானேயாகிய பிரானது, தேன் உந்து சேவடிக்கே - தேனைச்சொரி கின்ற கமலமலர் போன்ற திருவடிகளுக்கே, சென்றூதாய் கோத் தும்பீ——,எ - று.

க - ரை. அரசவண்டே; சிவபெருமான் தானும் எம்பிராட் டியுமாக எழுந்தருளி என்னை யாட்கொள்ளாவிடின், நானும் என் மனமும் இறைவனுக்கு உரியராதல் கூடாதி. ஆதலால் ஆகாய முதலிய எல்லாப் பொருள்களும் தானேயாகிய சிவபெருமானது திருவடிக் கண்ணே சென்று ஊதுவாயாக என்பதாம். (௧௫)

உள்ளப்படாததிருவுருவையுள்ளுதலும்
கள்ளப்படாதகளிவந்தவான்கருணை
வெள்ளப்பிரானெம்பிரானென்னைவேறேயாட்
கொள்ளப்பிரானுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. உள்ளப்படாத - நினைக்கப்படாத, திருவுருவை உள்ளுதலும் - தன் திருவுருவத்தை யான் நினைத்தலும், கள்ளப் படாத - ஒளிக்கப்படாத, களிவந்த - களிப்புடன் என்னெதிரே வந்த, வான்கருணை வெள்ளம் - மேலாகிய கருணை சமுத்ரமாகிய, பிரான் - உபகாரகன்,எம்பிரான் - எம்பெருமான், என்னை வேறே ஆட்கொள்-என்னைத்தனித்தடிமை கொள்கின்ற,அப்பிரானுக்கே- அந்த இறைவனுக்கே, சென்று ஊதாய் - போய் ஊதுவாயாக, கோத்தும்பீ———,எ - று.

க - ரை. அரசவண்டே ; ஒருவராலும் நினைத்தறியப்படாத தன் திருவுருவத்தை நான் நினைத்தலும், கருணை வெள்ளமாகிய சிவபிரான் என்னைத் தனித்தடிமை கொண்டானாதலால், அந்த உபகாரகனிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம்.

வி - ரை. கள்ளப்படாத - பொய்ப்படாத எனினுமாம். கள் ளம்-பொய். வான்-மேன்மை. வேறே யாட்கொள்ளலாவது வேறு முறைமையாக ஆட்கொள்ளல், அது இறைவனுக் கடிமையாதற் குரிய பக்குவம் எனக்கு வாய்க்குமுன்னே யாட்கொள்ளல். (௧௬)

பொய்யாயசெல்வத்தேபுக்கழுந்திநாடோறும்
மெய்யாக்கருதிக்கிடந்தேனையாட்கொண்ட
ஐயாவென்னாருயிரேயம்பலவாவென்றவன்றன்
செய்யார்மலரடிக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. பொய்யாய செல்வத்தே - பொய்யாகிய செல்வத்தின்கண்ணே, புக்கு அழுந்தி - போயழுந்தி, நாள்தோறும் - தினந்தோறும், மெய்யாக் கருதிக்கிடந்தேனை - அப்பொய்ச் செல்வமேநிலையுள்ளதென்று எண்ணிக்கிடந்தஎன்னை, ஆட்கொண்ட - அடிமைகொண்ட, ஐயா - ஐயனே, என் ஆர் உயிரே - என் அரியவுயிரே, அம்பலவா - அம்பலவாணு, என்ற - என்று என்னால் தோத்திரம் பண்ணப்பட்ட, அவன் தன் - அவனது, செய்ஆர் - செம்மையாகிய, மலர் அடிக்கே - தாமரை மலர்போலுந்திருவடிகளுக்கே, சென்றூதாய் கோத்தும்பீ————,எ-று.

க - ரை. அரசவண்டே; பொய்யாகிய செலவத்தின்கண்ணே சென்றழுந்தி அதனை மெய்யாகிய செல்வமென்று மதித்துக் கிடந்த என்னை அடிமைகொண்ட ஐயனே, என் அரியவுயிரே, அம்பலவனே என்று என்னால் தோத்திரம் பண்ணப்பட்ட அவனது செந்தாமரைமலர்போலுந் திருவடிக்கண்ணே சென்று ஊதுவாயாக என்பதாம். (௧௭)

தோலுந்துகிலுங்குழையுஞ்சுருடோடும்
பால்வெள்ளைநீறும்பசுஞ்சாந்தும்பைங்கிளியும்
சூலமுந்தொக்கவளையுமுடைத்தொன்மைக்
கோலமேநோக்கிக்குளிர்ந்தூதாய்கோத்தும்பீ.

ப - ரை. தோலும் - தோலையும், துகிலும் - ஆடையையும், குழையும் - குண்டலத்தையும், சுருள்தோடும் - சுருண்ட காதணியையும், பால்வெள்ளைநீறும் - மிகு வெண்மையாகிய திருநீற்றையும், பசுஞ் சாந்தும் - பசுமையாகிய சந்தனத்தையும், பைங்கிளியும் - பசுங்கிளியையும், சூலமும்-சூலத்தையும், தொக்கவளையும் - தொகுதியாகிய வளையலையும், உடை - உடைய, தொன்மைக் கோலமே - பழமையாகிய கோலத்தையே, நோக்கி - பார்த்து, குளிர்ந்து ஊதாய் - குளிர்ந்தூதுவாயாக———,எ - று.

க - ரை. அரசவண்டே, தோல், துகில், குழை, தோடு, நீறு, சாந்து, கிளி, சூலம், வளை, என்பவற்றையுடைய இறைவனது திருக்கோலத்தை நோக்கிக் குளிர்ந்தூதுவாயாக என்பதாம்.

வி - ரை. இது இறைவனது அர்த்தநாரீசுவர கோலத்தைக் கூறிய தாதலால், தோல், தோடு; நீறு, சூலம் என்பவற்றைஇறைவனுக்கும், துகில், குழை, சாந்து, கிளி, வளை, என்பவற்றை இறைவிக்கும் அமைத்துக் கொள்க. வளை பலவாதலால் தொக்கவளை என்றூர். (௧௮)

கள்வன்கடியன்கலதியிவனென்னுதே
வள்ளல்வரவரவந்தொழிந்தானென்மனத்தே
உள்ளத்துறுதுயரொன்றொழியாவண்ணமெல்லாம்
தெள்ளுங்கழலுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப-ரை. இவன் கள்வன் - இவன் சோரன், இவன் கடியன்- இவன்கொடியவன், இவன் கலதி-இவன் மூதேவி, என்னுதே-என்னுமல், வள்ளல் வரவரவந் தொழிந்தான் என் மனத்தே, வள்ளன்மையையுடைய சிவபிரான்நாளுக்குநாள்என் மனத்தின்கண்வந்து புக்கிருந்தான், உள்ளத்து உறுதுயர்-என் மனத்தின்கண் மிகுந்த துயரம்,ஒன்று ஒழியாவண்ணம் - சிறிதும் தவருதபடி,எல்லாம் - முழுதும், தெள்ளும் கழலுக்கே - தெளிந்த திருவடிக்கே, சென்றூதாய் கோத்தும்பீ——,எ - று.

க - ரை. அரசவண்டே, என்னைக் கள்வனுகிய மூதேவியென்றிகழாமல் வள்ளலாகிய சிவபெருமான் என் மனத்தின்கண்ணே யெழுந்தளினுன், ஆதலால் என் மனத்துயர மெல்லாவற்றையும் அவனது திருவடிக்கண்ணே சென்று விண்ணப்பஞ் செய்து ஊதுவாயாக என்பதாம். (௧௯)

பூமேலயனேடுமாலும்புகலரிதென்
றேமாறிநிற்கவடியேனிறுமாக்க
நாய்மேற்றவிசிட்டுநன்றுய்ப்பொருட்படுத்த
தீமேனியானுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

ப - ரை. பூமேல் அயனேடு - தாமரைமலரில் வாழ்கின்ற பிரமனேடு, மாலும் - திருமாலும், புகல் அரிது என்று - புகழ்ந்து சொல்லுதல் அருமையாமென்று, ஏமாறிநிற்க - ஏமாறியிருக்கவும், அடியேன் இறுமாக்க - அடியேன் கர்விக்கவும், நாய் - நாயினேனுக்கு, மேல் தவிசுஇட்டு-மேலாகிய ஆசநமளித்து, நன்றுய் பொருள்படுத்த - நன்முகப் பொருள் படுத்திக் கொண்ட, தீமேனியானுக்கே - நெருப்பையொத்த திருமேனியை யுடையவனுக்கே, சென்றூதாய் கோத்தும்பீ———,எ - று.

க - ரை. அரசவண்டே; பிரமவிட்டுணுக்கள் தடுமாறவும், நான் இறுமாந்திருக்கவும், நாய்க்கு ஆசநமிட்டாற்போல என்னைப் பொருள்படுத்தி யடிமைகொண்ட நெருப்புப்போலுந் திருமேனியையுடைய சிவபெருமானிடத்தே சென்று ஊதுவாயாக என்பதாம். (௨௦)

# திருத்தெள்ளேணம்.

சிவனுடைடைவு.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

---

திருச்சிற்றம்பலம்.

நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா.

திருமாலும்பன்றியாய்ச்சென்றுணராத்திருவடியை
உருநாமறியவோரந்தணனாயாண்டுகொண்டான்
ஒருநாமமோருருவமொன்றுமில்லாற்காயிரம்
திருநாமம்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. திருமாலும் - ஸ்ரீமஹா விஷ்ணுவும், பன்றி ஆய் சென்று - வராகரூபமாகி நிலத்தைப் பிளந்து சென்றும், உணரா - அறியாத, திருவடிஉருவை - தன்திருவடியின் உருத்தை, நாம் அறிய - யாம் அறியலாம்படி, ஓர் அந்தணன்ஆய் - ஒரு வேதியனுருவங் கொண்டுவந்து, ஆண்டுகொண்டான் - ஆண்டு கொண்டவனும், ஒரு நாமம் - ஒரு பெயர், ஓர் உருவம் - ஒருரூபம், (என்பவற்றுள்) ஒன்றும் இல்லான்கு - ஒன்றாயினு மில்லாதவனுமாகிய இறைவனுக்கு, ஆயிரம் திருநாமம்பாடி - ஆயிரம் திருப்பெயர்கள் சொல்லி, நாம் தெள்ளேணம் கொட்டாமோ - யாம் தெள்ளேணம் கொட்டுவோம் —, எ - று.

க - ரை. திருமாலும் வராகவுருவங் கொண்டு நிலத்தைப் பிளந்து சென்றும் அறியாத திருவடியை யாம் அறிந்துய்யும்படி ஒரு அந்தணனா யெழுந்தருளி எம்மை யாண்டுகொண்டவனும், நாமரூபங்க ளில்லாதவனுமாகிய சிவபெருமானுக்கு ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. தெள்ளேணம் - மகளிர் விளையாட்டுள் ஒன்று. கொட்டாமோ என்பதில் ஆ ஓ என்னும் இரண்டு எதிர்மறை விகுதிகள் கூடிவந்து கொட்டுவோம் என உடன்பாட்டுப் பொருளுணர்த்தின. (௧)

திருவார்பெருந்துறைமேயபிரானென்பிறவிக்
கருவேரறுத்தபின்யாவரையுங்கண்டதில்லை
அருவாயுருவமுமாயபிரானவன்மருவும்
திருவாரூர்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. திரு ஆர் - அழகுபொருந்திய, பெருந்துறை - திருப்பெருந்துறையில், மேய - (என்பொருட்டு) எழுந்தருளியிருந்த, பிரான் - உபகார சீலனாகிய சிவபெருமான், என்பிறவிக்கரு - என் பிறவி யென்கிற கர்ப்பவாசத்தை, வேர் அறுத்தபின் - நிர்மூலமாக்கின பிறகு, யாவரையும் கண்டது இல்லை - ஒருவரையும் பார்த்த தில்லை, அரு ஆய் - அருவமாகி, உருவமும் ஆய பிரான் - உருவமுமாகி நின்ற உபகாரசீலனாகிய, அவன் - அவ்விறைவன், மருவும் - திருக்கோயில் கொண்டெழுந் தருளியிருக்கிற, திரு ஆரூர்பாடி - திருவாரூர் என்னுந் திருப்பதியைப் புகழ்ந்துபாடி, நாம் தெள்ளேணம் கொட்டாமோ——,எ - று.

க - ரை. திருப்பெருந் துறையில் எழுந்தருளின சிவபெருமான் என்பிறவியை வேரறுத்தபின்பு, யான் அவனையன்றி வேறொருவரையும் கண்டதில்லை, அருவாகியும் உருவாகியும் நின்ற அந்த இறைவன் எழுந்தருளியிருக்கிற திருவாரூரைப் புகழ்ந்து பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. தேவர் முதலியோர்க்குக் காண வொண்ணுமல் எல்லாவற்றிலும் நிறைந்திருத்தலால் அருவாய் என்றும், அன்பர்க்குப் பிரத்தியக்ஷமாகி அவரை யாண்டருளுதலால் உருவாய் என்றும் கூறினர். (உ)

அரிக்கும்பிரமற்குமல்லாததேவர்கட்கும்
தெரிக்கும்படித்தன்றிநின்றசிவம்வந்துநம்மை
உருக்கும்பணிகொள்ளுமென்பதுகேட்டுலகமெல்லாம்
சிரிக்குந்திறம்பாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

இ - ள். அரிக்கும் - திருமாலுக்கும், பிரமற்குஉம் - பிரமனுக்கும், அல்லாத தேவர்கட்கும் - அவர்களை யொழிந்த மற்றைத் தேவர்கட்கும், தெரிக்கும்படித்து அன்றிநின்ற - அறிவிக்கும்படியான தன்மையதல்லாமல் நின்ற, சிவம் - பரம்சிவம், வந்து - (நம்முயற்சி யளவன்றித் தம் பெருங்கருணை காரணமாக) எழுந்தருளி, நம்மை உருக்கும் - எம்மை மனமுருகப் பண்ணும், பணி கொள்ளும் -அடிமை கொள்ளும், என்பது கேட்டு - என்பதைக்

கேட்டு, உலகம் எல்லாம்-எல்லாவுலகங்களும், சிரிக்கும் திறம்பாடி-நகைக்கும் விதத்தைப் பற்றிப்பாடி, தெள்ளேணம்——, எ - று.

க - ரை. திருமால் பிரமன் முதலியோர்க்கும் இன்னபடியென்று தெரிவிக்கலாகாமல் நின்றபரமசிவமே எழுந்தருளி நம்மை மனமுருகப் பண்ணி யாண்டுகொள்ளும் என்னுஞ் செய்தியைக் கேட்டு உலகத்தாரெல்லாரும் நகைக்கும் விதத்தைப்பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. அல்லாத தேவர் என்றது இந்திரன் முதலானோரை. தெரிவிக்கும் என்பது தெரிக்கும் எனத் தொகுத்தலாயிற்று.

அவமாயதேவரவகதியிலழுந்தாமே
பவமாயங்காத்தென்னையாண்டுகொண்டபரஞ்சோதி
நவமாயசெஞ்சுடர்நல்குதலுநாமொழிந்து
சிவமானவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. பவமாயம் காத்து - பிறவியாகிய மாயாகாரியத்தினின்றும் காத்து, என்னை ஆண்டு கொண்ட - என்னையாண்டருளின, பரஞ்சோதி - பரஞ்சோதியாகிய சிவபெருமான், நவமாயசெஞ்சுடர் - (தனது) நூதநமாகிய திவ்ய தேஜஸ்ஸை, நல்குதலும் - அருள்செய்தலும், நாம் - யாம், அவம் ஆயதேவர் - பயனற்ற தேவர்களுடைய, அவகதியில் அழுந்தாமே ஒழிந்து - கேட்டுக் குரிய அற்பகதிகளில் அழுந்தா தொழிந்து, சிவம் ஆனவாபாடி-சிவரூபமாகியதன்மையைப்பாடி, தெள்ளேணம்,— எ-று.

க - ரை. பிறவியை யொழித்து என்னையாண் டருளின சிவபெருமான் தனது புதுமையாகிய ஒளியை எனக்குக் காட்டியருளுதலும், நாம் பயனற்ற தேவர்களுடைய துர்க்கதிகளில் அழுந்தாமல் சிவரூபமான விதத்தைப் பாடித் தெள்ளேணங்கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. பரஞ்சோதி - மேலானஒளி. நாம் ஒழிந்து - அச்சமொழிந்து எனினுமாம், அன்றி நாம் என்னுஞ் சீவத்துவம் ஒழிந்து எனினும் பொருந்தும், அகங்காரம் ஒழிந்து என்றலுமொன்று. நல்குதல் - கிருபை செய்தல். (௪)

அருமந்ததேவரயன்திருமாற்கரியசிவ
உருவந்துபூதலத்தோருகப்பெய்தக்கொண்டருளிக்
கருவெந்துவீழக்கடைக்கணித்தென்னுளம்புகுந்த
திருவந்தவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. அருமந்ததேவர் - அருமருந்தை யொத்த தேவர்களாகிய, அயன் திருமாற்கு - பிரமன் திருமால் என்னுமிவர்களுக்கும், அரியசிவம் - காண்டற்கரிய பரமசிவம், உருவந்து - மானுடவுருக்கொண்டுவந்து, பூதலத்தோர் உகப்பு எய்த - உலகத்தார் வியக்கும்படி, கொண்டருளி - என்னையடிமை கொண்டருளி, கருவெந்துவீழ - என்பிறவிக்காடு வெந்துவீழும்படி, கடைக்கணித்து - கடைக் கண்ணால் நோக்கி, என் உள்ளம் புகுந்த - என் மனத்திற் புகுந்ததனால், திருவந்த ஆறுபாடி - எனக்குப் பெரும்பாக்கிய முண்டானவாற்றைப்பாடி, தெள்ளேணம்——, எ - று.

க - ரை. திருமால் பிரமன் என்னும் அருமையாகிய தேவர்களுக்கும் அருமையாகிய பரமசிவம் உலகத்துள்ளோர் வியப்படையும் வண்ணம் மானுடவுருவமா யெழுந்தருளி என்னையடிமை கொண்டு என்பிறவிக் காடுவெந்து நீறும்படி கடைக்கணித்து என்மனம் புகுந்ததனால் எனக்குளதாகிய பெருஞ்செல்வத்தைப் புகழ்ந்து பாடித் தெள்ளேணங் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. அருமந்த என்பது அருமருந்தன்ன என்பதன் மரூஉ. மருந்து - அமிர்தம். உகப்பு மகிழ்ச்சியெனினுமாம். வெந்துவீழ என்றமையால் பிறவியைக் காடாக்கி யுரைக்கலாயிற்று. கடைக் கணித்தல் - கடைக் கண்ணால் நோக்குதல். (௫)

அரையாடுநாகமசைத்தபிரானவனியின்மேல்
வரையாடுமங்கைதன்பங்கொடும்வந்தாண்டதிறம்
உரையாடவுள்ளொளியாடவொண்மாமலர்க்கண்களினீர்
திரையாடுமாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. அரை - திருவரையில், ஆடும் - படம்விரித்தாடுமியற்கையுள்ள, நாகம் - பாம்பை, அசைத்தபிரான் - கச்சையாகக் கட்டிய சிவபெருமான், அவனியின்மேல் - நிலவுலகின் மீது, வரை ஆடும் மங்கை தன்பங்கொடும்வந்து - பார்வதீ பாகத்தோடும் எழுந்தருளி, ஆண்டதிறம் - எம்மையாண்டருளின வகையை, உரைஆட - சொற்கள் தடுமாறவும், உள்ஒளிஆட - (அவனது) திவ்யதேஜஸ்ஸு என்மனத்தில் நிரம்பவும், ஒள் - ஒள்ளிய, மா - பெருமை பொருந்திய, மலர்க்கண்களில் - தாமரை மலர்போலுங் கண்களில், நீர்த்திரை ஆடும் ஆறு - நீர் அலையெறியும் வண்ணம், பாடி - பாடுதல் செய்து, தெள்ளேணம்——, எ - று.

க - ரை. திருவரையில் பாம்பைக் கச்சையாகக் கட்டின சிவபெருமான் பார்வதி தேவியாரோடும் பூமியில் எழுந்தருளி, எம்மை யாண்டருளின விதத்தைச் சொற்கள் தடுமாறவும், அவனது பேரொளி என்மனத்தில் நிறையவும், கண்களில் நீர்ததும்பவும் பாடித்தெள்ளேணங் கொட்டுவோம் என்பதாம். (சு)

ஆவாவரியயனிந்திரன்வானோர்க்கரியசிவன் [ண்டான்
வாவாவென்றென்னையும்பூதலத்தேவலித்தாண்டுகொ
பூவாரடிச்சுவடென்றலைமேற்பொறித்தலுமே
தேவானவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. ஆவா - அந்தோ, அரி - திருமால், அயன் - பிரமன், இந்திரன் - தேவராஜன், வானோர்க்கு - மற்றைத் தேவர்கள் ஆகிய இவர்களுக் கெல்லாம், அரிய - காண்டற்கரிய, சிவன் - சிவபெருமான், என்னையும் - அறிவிலியாகிய என்னையும், வாவா என்று - வாவாவென்று, பூதலத்தே - மண்ணுலகில், வலித்து ஆண்டு கொண்டான் - தடுத்தாட்கொண்ட இறைவன், பூஆர் அடி சுவடு - தாமரை மலர்போலும் அரியதிருவடிச் சுவட்டை, என்தலைமேல் பொறித்தலும் - என் சிரத்தின் மீதுபதித்தலும், தே ஆன ஆறுபாடி - அச்சிரத்துக் கோரழகுண்டான விதத்தைப் பாடி, ' தெள்ளேணம்————, எ-று.

க - ரை. திருமால் பிரமன் முதலியோர்க்கும் அருமையாகிய பரமசிவம், ஒன்றுக்கும்பற்றாத சிறியேனையும் வலிந்தாண்டு கொண்டு, என்தலைமேல் தன் திருவடியைப் பதித்தலும் என் தலைக்கோரழ குண்டான விதத்தைப் பாடித் தெள்ளேணங் கொட்டுவோம் என்பதாம். (எ)

கறங்கோலைபோல்வதோர் காயப்பிறப்போ டிறப்பென்னும்,அறம்பாவமென்றிரண்டச் சந்தவிர்த்தென்னை யாண்டுகொண்டான், மறந்தேயுந்தன்கழலன் மறவாவண்ணநல்கியவத், திறம்பாடல்பாடிநாந் தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. கறங்கு ஓலைபோல்வது - ஓலைச் சுருள்போல்வதாகிய, ஓர் - உவமையற்ற, காயப்பிறப்போடு இறப்பு என்னும் - சரீரத்தின்தோற்றக் கேடுகளென்கிற, அறம் பாவம் என்ற - புண்ணிய பாவங்களென்று சொல்லப்பட்ட, இரண்டு அச்சம்தவிர்த்து - இரண்டு பயங்களையும் நீக்கி, என்னை ஆண்டுகொண்டான்-

என்னை யாண்டுகொண்டவனாகிய சிவபெருமான், மறந்தேயும் - மறந்தேனாயினும், தன்கழல் - தன்திருவடியை, நான் மறவாவண்ணம்-நான் மறவாதிருக்கும்படி,நல்கிய - கிருபைசெய்த, அத்திறம் பாடல்பாடி-அவ்விதத்தைப் பாடலாகப்பாடி,நாம்தெள்ளேணம்— எ - று.

க - ரை. ஓலைச் சுருள்போல்வதாகிய சரீரத்தின் உற்பத்தி நாசங்களால் நேரிடுகிற புண்ணிய பாவங்கள் என்கிற இரண்டுச் சங்கிலியும் ஒழித்து என்னை யாண்டுகொண்டவனாகிய சிவபெருமான் தன் திருவடியை நான்மறவாதபடி கிருபைசெய்த அவ்விதத்தைப்பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. கறங்கு ஓலை - சுழல்கின்ற ஓலைச் சுருள் எனினுமாம். என்றிரண்டு என்பதில் நிலைமொழியீற் றகரம் தொகுத்தல். இருவினைகளே பிறப்பிறப்புக்களுக்குக் காரணமாதலால், "பிறப்போடிறப் பென்னுமறம்பாவம்" என்றார். (அ)

கன்னாருரித்தென்னவென்னையுந்தன்கருணையினால்
பொன்னார்கழல்பணித்தாண்டபிரான்புகழ்பாடி
மின்னேர்நுடங்கிடைச்செந்துவர்வாய்வெண்ணகையீர்
தென்னாதென்னாவென்றுதெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. கல் - கல்லின்கண், நார் உரித்தென்ன - நாருரித்தாற்போல, என்னையும் - அடியேனையும், தன் கருணையினால் - தன் கிருபையினால், பொன் ஆர்கழல்பணித்து - (தனது) பொன்போலும் அரிய திருவடியைப் பணிவித்து, ஆண்டபிரான் - ஆண்டருளின இறைவனது, புகழ்பாடி - கீர்த்தியைப்பாடி, மின் - மின்போலும், ஏர் - அழகுள்ள, நுடங்கு இடை - துவளாநின்ற இடையினையும், செம் துவர்வாய் - செவந்த பவளம் போலும் வாயையும், வெள்நகையீர் - வெள்ளிய பற்களையு முடையீர், தென்னா தென்னாவென்று தெள்ளேணம்——,எ - று.

க - ரை. கல்லில் நாருரித்தாற்போல என்னையும் தன் பெருங் கருணையினால் தனது பொன்போலும் அருமையாகிய திருவடியைப் பணிவித்து ஆட்கொண்ட எம்பெருமானது பெரும் புகழைப் பாடி அக்களிப்பால் தென்னா தென்னாவென்று தெள்ளேணங் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. "கன்னாருரித்தென்ன" என்றது அரிய செயலுக் கெடுத்துக் காட்டுவதோருவமை. மின்னேர் எனப் பிரித்து மின்

னலை நிகர்த்த எனினுமாம். செந்துவர் என்பதில் செம்மைசாதியடை. (கூ)

கனவேயுந்தேவர்கள்காண்பரியகனைகழலோன்
புனவேயனவளைத்தோளியொடும்புகுந்தருளி
நனவேயெனைப்பிடித்தாட்கொண்டவாநயந்துநெஞ்சம்
சினவேற்கணீர்மல்கத்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. கனவேயும் - சொப்பநத்திலாயினும், தேவர்கள் - பிரமன் முதலிய தேவர்கள், காண்பு அரிய - காண்பதற்கு அருமையாகிய, கனை - ஒலிக்கின்ற, கழலோன் - வீரக்கழலை யணிந்த திருவடியையுடைய சிவபெருமான், புனம் - காட்டிலுள்ள, வேய் அன்ன - மூங்கிலையொத்த, வளை - வளையலை யணிந்த, தோளியொடும் - தோள்களையுடைய உமாதேவியோடும், புகுந்தருளி - எழுந்தருளி, நனவே - சாக்கிராவத்தையின் கண்ணே, என்னைப் பிடித்து - என்னைத் தடுத்து, ஆட்கொண்டஆறு - அடிமைகொண்ட விதத்தை, நெஞ்சம் நயந்து - மனத்தினால் விரும்பி, சினம் - கோபத்தையுடைய, வேல் - வேல்போன்ற, கண் - கண்களில் - நீர்மல்க - நீர் துளும்ப, தெள்ளேணம்——, எ - று.

க - ரை. தேவர்கள் கனவிலும் காண்பதற்கு அரிதாகிய திருவடியையுடைய இறைவன் உமாதேவியாரோடும் எழுந்தருளி நனவின்கண்ணே என்னை வலிந்து ஆட்கொண்ட விதத்தை மனத்தால் சிந்தித்து கண்களில் நீர் ததும்பத் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம். (கo)

கயன்மாண்டகண்ணிதன் பங்கனெனைக் கலந்தாண்டலுமே, அயன்மாண்டருவினைச் சுற்றமுமாண்டவனியின்மேல், மயன்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய, செயன்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

ப - ரை. கயல் - சேல்போலும், மாண்ட - மாட்சிமைப்பட்ட, கண்ணிதன்பங்கன் - கண்களையுடைய உமாதேவியை தன் பாகத்தி லுடையவன், என்னை - அடியேனை, கலந்து - வலிய வந்து கூடி, ஆண்டலும் - ஆட்கொண்டருளலும், அயல்மாண்டு - அயலார் மாளப்பெற்று, அருவினை சுற்றமும் மாண்டு - அரிய வினைத்தொடர்பால்வந்த சுற்றத்தாரும் மாளப்பெற்று, அவனியின் மேல்மயல்மாண்டு - பிரபஞ்சத்தின்மீதுள்ள ஆசையும் மாளப்பெற்று, மற்றுள்ள வாசகம் மாண்டு - வேறுள்ள சொற்களும்

மாளப்பெற்று, என்னுடைய செயல் - என்செய்கையும், மாண்ட ஆறு - மாண்ட பிரகாரத்தை, பாடி - பாடுதல்செய்து, தெள்ளேணம்——, எ - று.

க - ரை. உமாதேவி பங்கஞகிய சிவபெருமான் என்னை ஆட்கொள்ளுதலும் நான் அவனுக்கு அயலாம் தன்மையொழிந்து, சுற்றத்தாரை நீங்கி, பிரபஞ்ச ஆசை அற்று, மற்றுள்ள சொற்களெல்லாம் ஒழிந்து, என்னுடைய செயலற்றொழிந்த விதத்தைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. அயல்மாண்டு என்பதற்குமேல் அருவினைச் சுற்றமும் மாண்டு என வருதலால் பகைமையொழிந்து என்றுரைத்தலுமாம். செயல்மாளலாவது தற்போத மிழந்து நிற்றல். (கக)

முத்திக்குழன்றுமுனிவர்குழாநனிவாட
அத்திக்கருளியடியேனையாண்டுகொண்டு
பத்திக்கடலுட்பதித்தபரஞ்சோதி
தித்திக்குமாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. முனிவர் குழாம் - முனிவர் கூட்டம், முத்திக்கு - மோட்சத்தின் பொருட்டு, உழன்று - தவஞ்செய்துமலைவனம் முதலிய இடங்களில் திரிந்து, நனிவாட - (அது கிடையாமையால்) வாட்டமடைய, அத்திக்கு அருளி - யானைக்கு அருள்செய்து, அடியேனை ஆண்டுகொண்டு - அடிமையை ஆட்கொண்டருளி, பத்திக்கடலுள் - பத்தியாகிய கடலினுள், பதித்த - அழுந்துவித்த, பரஞ்சோதி - மேலானஒளி, தித்திக்கும் ஆறு - (எனக்கு) இனிக்கும் விதத்தை, பாடி - பாடுதல் செய்து, தெள்ளேணம்—— எ-று.

க - ரை. முனிவர் கூட்டம் முத்தியை விரும்பி உழலாநிற்க, யானைக்கு அருள்செய்து, அடியேனையும் ஆண்டுகொண்டருளி, என்னை பத்தியாகிய கடலில் அழுந்துவித்த சிவபெருமான் எனக்கு இனிக்கும் விதத்தைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. அத்திக்கருளினது திருக்காளத்தியில். பத்திக்கடல் என்றமையால் பதித்த என்பதற்கு அழுந்துவித்த என்றுரைத்தலாயிற்று. தித்திக்குமாறு என்பது தித்திக்குமா என ஈறு தொகுத்தலாய் நின்றது.

**அத்திக்கு வரமளித்த வரலாறு:**—முன்னொரு காலத்தில் திருக்கைலாயத்தின் கண் சிவபெருமான் உமாதேவியாருடன்தனித்திருக்கையில், சிவகணங்களுக்குத்தலைவனுகியஅத்தியென்பவன்

இறைவனைத் தரிசிக்கச் செல்லுகையில், வாயில் காப்பாளர் இறைவன் அந்தப்புரத்தி லிருக்கின்றமையால் செல்லத்தகாது என்று தடுக்கவும், அவர் மொழி தள்ளிச் செல்லக்கண்ட உமாதேவியார் கடுங்கோபமுற்று, அத்திஎன்னும் பெயரையுடைய நீ அத்தியாகக் கடவைஎனச்சபித்தனர்.அவ்வாறு சாபமேற்ற கணநாதனாகிய அத்தியென்பவன் இறைவனையும் தேவியையும் வணங்கி அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று துதிக்க,இறைவன் நீ யானையாய்ப் பிறந்து தென்கைலாய மாகிய திருக்காளத்தியில் முத்திலிங்கத்தினை அருச்சித்து, பிறப்பு நீங்கி முத்தியடைவையென்று வரமளித்தனர் என்பது. (கஉ)

பார்பாடும்பாதாளர்பாடும்விண்ணோர்தம்பாடும்
ஆர்பாடுஞ்சாராவகையருளியாண்டுகொண்ட
நேர்பாடல்பாடிநினைப்பரியதனிப்பெரியோன்
சீர்பாடல்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. பார்பாடும் - மண்ணுலகத்தாரிடத்தும், பாதாளர் பாடும் - பாதாளலோகத்தாரிடத்தும், விண்ணோர்தம்பாடும்- விண்ணுலகத்தாரிடத்தும், ஆர் பாடும் - மற்று யாவரிடத்தும், சாராவகை - நான் சென்றடையா வண்ணம், அருளி - கிருபைசெய்து, ஆண்டுகொண்ட - ஆண்டு அருளின, நேர்பாடல் பாடி - நேர்மையைப் பாடலாற் பாடி, நினைப்பு அரிய - நினைத்தற்கரிய - தனி பெரியோன் - ஒப்பற்ற பெரியோனது, சீர் பாடல். பாடி - சீர் பாடலைப் பாடி, நாம் தெள்ளேணம்——,எ - று.

க - ரை. மண்ணுலகம், பாதாளம், விண்ணுலகம் என்னும் மூன்றுலகத்தாரிடத்தும் வேறுள்ள எவ்வுலகத்தாரிடத்தும் யான் சென்று பிறவாமல் என்னை யாட்கொண்டருளின சிவபெருமானது நேர்மையையும் சீர்பாடலையும் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. மக்கட்கதி, நரககதி, தேவகதி என்னும் முக்கதியினும் சென்று பிறவாமல் அருள்செய்து என்றற்கு "பார்பாடும் பாதாளர் பாடும் விண்ணோர்தம் பாடும் ஆர்பாடும் சாராவகை யருளி" என்றார். நேர்பு ஆடல்பாடி எனப் பிரித்து நேர்மையாகிய திருவிளையாடலைப் பாடி என்றுரைத்தலுமாம். (கங)

மாலேபிரமனேமற்றொழிந்ததேவர்களே
நூலேநுழைவரியானுண்ணியனாய்வந்தடியேன்
பாலேபுகுந்தபரிந்துருக்கும்பாவகத்தாற்
சேலேர்கண்ணீர்மல்கத்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. மாலே - திருமாலும், பிரமனே - பிரமனும், ஒழிந்த தேவர்களே - ஒழிந்த தேவர்களும், நூலே - சாத்திரங்களும், நுழைவு அரியான் - நுழைதற் கரியவன், நுண்ணியனாய்வந்து - சூக்குமரூபியாய்வந்து, அடியேன்பாலே புகுந்து - அடியேனிடத்திற் பிரவேசித்து, பரிந்து உருக்கும் பாவகத்தால் - நேசித்து மனமுருக்கும் பெருங்குணத்தினால், சேல் - சேல்போன்ற, ஏர் - அழகைக் கொண்ட, கண் - கண்களில், நீர்மல்க - நீர்நிறைய, தெள்ளேணம்——,எ - று.

க - ரை. திருமால் முதலியோருக்கும் அரியனாகிய சிவபெருமான் என்னிடத்தே யெழுந்தருளி என்மனத்தை யுருகப்பண்ணின பெருங்கருணையை நினைந்து கண்களில் நீர்ததும்பத் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம். (கசு)

உருகிப்பெருகியுளங்குளிரமுகந்துகொண்டு
பருகற்கினியபரங்கருணைத்தடங்கடலை
மருவித்திகழ்தென்னன்வார்கழலேநினைந்தடியோம்
திருவைப்பரவிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. உருகி - மனமுருகி, பெருகி - பெருக்கமடைந்து, உள்ளம் குளிர் - மனங்குளிர, முகந்துகொண்டு - மொண்டுகொண்டு, பருகற்கு இனிய - பருகுதற் கினிதாகிய, பரம் - மேலான, தடம் - பெரிய, கருணைக்கடலை - கருணாசாகரத்தை, மருவி - அடைந்து, திகழ் - விளங்குகின்ற, தென்னன்வார் கழலே நினைந்து-தென்னவனதுநீண்ட திருவடியையே நினைந்து, அடியோம் - அடியோங்களுடைய, திருவைப்பரவி-புண்ணியத்தைப்புகழ்ந்து, நாம் தெள்ளேணம்——,எ - று.

க - ரை. உருகுதல் முதலியவற்றைச் செய்து பருகுதற்கினிதாகிய பெருங் கருணைக் கடலாகிய சிவபெருமானது திருவடியையே சிந்தித்து, சிந்தித்தற்குரிய அடியோங்களுடைய பெரும் புண்ணியத்தைத் துதித்து நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. இறைவனது கருணையாகிய கடல் மனவுருக்கத்தோடும் மனக்குளிர்ச்சியோடும் முகந்து பருகுதற்கினிதாகி யிருக்கும் என்றற்கு "உருகிப் பெருகி யுளங்குளிர முகந்துகொண்டு பருகற்கினிய பரங்கருணைத் தடங்கடல்" என்றார். கழலே என்ற ஏகாரம் தேற்றம். நினைந்தடியோம் திரு என்பதனை நினைந்த அடி

யோம் எனப் பிரித்து நினைந்த அடியோமுடைய புண்ணியம் என்றுரைத்தலுமாம். "கழலே நினைந்தடியோம் திருவைப்பரவி என்றமையால் கழலைநினைத்தற்குக் காரணம் திருஎன்றதாயிற்று. தென்னன் என்றது சோமசுந்தரபாண்டியனை. (கரு)

புத்தன்புரந்தராதியரயன்மால்போற்றிசெயும்
பித்தன்பெருந்துறைமேயபிரான்பிறப்பறுத்த
அத்தனணிதில்லையம்பலவனருட்கழல்கள்
சித்தம்புகுந்தவாதெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. புத்தன் - புதுமையானவன், புரந்தராதியர் - இந்திரன் முதலாகிய சாமாநிய தேவர்களும், அயன்-பிரமனும், மால்-திருமாலும், போற்றிசெய்யும் - வணக்கஞ்செய்கின்ற, பித்தன் - பித்தன், பெருந்துறை மேயபிரான் - திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் இறைவன், பிறப்பு அறுத்த அத்தன் - எம்பிறவிகளை யறுத்த எமது தந்தை, அணி - அழகிய, தில்லை அம்பலவன் - தில்லையம்பலத்தின் கண்ணுன், (அவனது) அருள் கழல்கள் - அருளுருவமான திருவடிகள், சித்தம் புகுந்த ஆறு - என்மனம் புகுந்த வண்ணஞ் சொல்லி, தெள்ளேணம்——,எ - று.

க - ரை. புதுமையானவனும், இந்திராதியர் வணங்கும்படியாகிய பித்தனும், திருப்பெருந்துறையை யுடையவனும், எமது பிறவியை யொழித்தருளின அத்தனும், தில்லையம்பலத்தை யுடையவனுமாகிய சிவபெருமானது அருளுருவமாகிய திருவடிகள் என் மனத்தில் பிரவேசித்த விதத்தைப் புகழ்ந்து நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. புரந்தராதியர் போற்றிசெய்தற் குரியவன் பெருந்துறை மேவியதும் அம்பலத்தானதும் பித்தத்தின் காரியம் என்றற்குப் பித்தன் என்றும், இப்படி செய்தல் அவனது உபகார குணத்தின் தன்மை யென்றற்குப் பிரான் என்றும் கூறினார். ()

உவலைச்சமயங்களொவ்வாதசாத்திரமாம்
சவலைக்கடலுளனாய்க்கிடந்துதடுமாறும்
கவலைக்கெடுத்துக்கழலிணைகடந்தருளும்
செயலைப்பரவிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. உவலைச் சமயங்கள் - பொய்ச்சமயங்களின், ஒவ்வாத சாத்திரம் ஆம் - ஒன்றையொன்றொவ்வாத சாத்திரங்களாகிய, சவலைக்கடல் உளன் ஆய்க்கிடந்து - சவலைக்கடலினுள்ளகப்ப

ட்டுக் கிடந்து, தடுமாறும்-தடுமாறுகின்ற, கவலைக்கெடுத்து-துன்பத்தைக் கெடுத்து, கழலிணைகள் தந்தருளும் - தன்னிரண்டு திருவடிகளைக் கொடுத்தருள்கின்ற, செயலை - திருவருட் செய்கையை, பரவி - புகழ்ந்து, நாம் தெள்ளேணம்,——எ - று.

க - ரை. பொய்ச்சமய சாத்திரக்கடலில் வீழ்ந்து தடுமாறுகின்ற என் துன்பத்தை யொழித்துத் தன் திருவடியை எனக்குக் கொடுத்தருளின இறைவனது திருவருட்செயலைப் புகழ்ந்து நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. உவலை - பொய். சமய சாத்திரங்கள் ஒன்றற்கொன்றொவ்வாமையால், "உவலைச் சமயங்களொவ்வாத சாத்திரம்" என்றார். சவலை - மெலிவு. எதுகை யின்பம் நோக்கிக் கவலைக்கெடுத்து என வந்தது. (கஎ)

வான்கெட்டுமாருதமாய்ந்தழனீர்மண்கெடினும்
தான்கெட்டலின்றிச்சலிப்பறியாத்தன்மையனுக்
கூன்கெட்டுயிர்கெட்டுணர்வுகெட்டென்னுள்ளமும்போய்
நான்கெட்டவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. வான் கெட்டு - ஆகாய மழிந்து, மாருதம் மாய்ந்து - வாயு வழிந்து, அழல்நீர் மண்கெடினும் - நெருப்புநீர் மண் என்பவைகள் அழிந்தாலும், தான் கெட்டல் இன்றி - தான் அழிதலில்லாமல், சலிப்பு அறியா - சலநமென்பதை யறியாத, தன்மையனுக்கு - தன்மையையுடையானுக்கு, ஊன் கெட்டு - உடலழிந்து, உயிர்கெட்டு - உயிரழிந்து, உணர்வு கெட்டு - அறிவழிந்து, என் உள்ளமும் போய் - என் மனமுமழிந்து, நான் கெட்ட ஆறுபாடி - நான் என்பது அழிந்தவாற்றைப்பாடி, தெள்ளேணம்,——எ - று.

க - ரை. ஆகாய முதலாகிய பஞ்சபூதங்களும் அழிந்த காலத்தும் தான் அழியாதிருப்பவனாகிய சிவபெருமானைக் குறித்து உடல் உயிர் உணர்வு என்பவை யழிந்து நான் என்பதும் அழிந்த விதத்தைப்பாடித் தெள்ளேணங் கொட்டுவோம் என்பதாம்.

வி - ரை. ஆகாயம் மற்றை நான்கு பூதங்களினும் சிறந்தமைபற்றி வான் என முதற்கண் வைத்தார். நான் கெட்ட என்றது அகங்காரம் அழிந்த என்றபடி. கெடலின்றி யென்பது எதுகையின்பப் பொருட்டு கெட்டலின்றியென வந்தது. (கஅ)

விண்ணோர்முழுமுதல் பாதாளத்தார்வித்து
மண்ணோர்மருந் தயன்மாலுடையவைப்படியோம்
கண்ணாரவந்துநின்றான்கருணைக்கழல்பாடித்
தென்னாதென்னாவென்றுதெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. விண்ணோர் முழுமுதல் - தேவர்களுக்கு முழுமுதல், பாதாளத்தார் வித்து - பாதாள லோகத்தார்க்கு விதை, மண்ணோர் மருந்து - மண்ணுலகத்தார்க்கு மருந்து, அயன் மால் உடைய வைப்பு - பிரமவிஷ்ணுக்கள் தமக்கெனவுடைய நிக்ஷேபம், அடியோம் கண் ஆரவந்து நின்றான் - அடியோங்களுடைய கண்ணிரம்பவந்து நின்றவன், கருணைக் கழல்பாடி - அவனது அருளுருவாகிய திருவடிகளைப் புகழ்ந்துபாடி, தென்னா தென்னா என்று - தென்னா தென்னா வென்று, தெள்ளேணம்;——எ - று.

க - ரை. தேவர் முதலானோர்க்கு முதல்வனும் பிரமவிட்டுணுக்களுக்கு நிதிபோல்பவனும் எமது கண்ணுக்குப் புலப்பட்டு நின்றவனும் ஆகிய சிவபெருமானது திருவடியைப்பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம். (கக)

குலம்பாடிக்கொக்கிறகும்பாடிக்கோல்வளையாள்
நலம்பாடிநஞ்சுண்டவாபாடிநாடோறும்
அலம்பார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
சிலம்பாடல்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

ப - ரை. குலம்பாடி - (இறைவனது) மேன்மையைப்பாடி, கொக்கு இறகும்பாடி - (அவன் தலையிலணிந்த) கொக்கிறகையும் பாடி, கோல் வளையாள் நலம்பாடி - உமாதேவியினது நன்மையைப்பாடி, நஞ்சு உண்ட ஆறுபாடி - நஞ்சுண்ட வரலாற்றைப் புகழ்ந்துபாடி, நாள்தோறும் - தினந்தோறும், அலம்பு ஆர் - ஒலித்தலைப் பொருந்திய, புனல் - நீர் சூழ்ந்த, தில்லையம்பலத்தே ஆடுகின்ற - தில்லையம்பலத்தின் கண்ணே நடிக்கின்ற, சிலம்பாடல் பாடி - சிலம்பாடலைப் புகழ்ந்துபாடி, நாம் தெள்ளேணம்,—எ-று.

க - ரை. இறைவனது மேன்மையையும் கொக்கிறகையும் பாடி, உமாதேவியினது நன்மையைப்பாடி, இறைவன் நஞ்சுண்ட செய்தியைப்பாடி, தில்லையம்பலத்தில் நடிக்கின்ற திருவடிச்சிலம்பினது வெற்றியைப்பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதாம். (உ0)

திருச்சிற்றம்பலம்.

# திருச்சாழல்பாடிய வரலாறு.



சிவபத்தியிற் சிறந்த ஒரு தபசியானவர் பூமியிலுள்ள நாடுகள் எல்லாவற்றையும் பார்க்கவேண்டு மென்னும் விருப்பமுடையவராய்ச் சோழநாட்டைக் கண்டு, தில்லைமாநகரை வணங்கி, ஈழநாட்டுக்குப்போய், அந்த நாட்டுக்கு அரசனானவன் இருக்கின்ற நகரைச் சேர்ந்து, தான் இருக்குமிடந்தோறும் பொன்னம்பலம் வாழ்கவென்று சொல்லியிருக்கும் நாளில், அவ்விடத்திலுள்ள புத்தர் இந்தத் தபசியின் செய்தியை அரசனுக்கு அறிவிக்க, அரசன் இந்தத் தபசியை வரவழைத்து, நீர் பொன்னம்பலம் என்று சொல்வதற்குக் காரணமென்னென்று கேட்க, தபசியானவர், அரசனே; சோழநாட்டில் சிதம்பரம் என்று ஒரு ஸ்தலம் உண்டு, அது முன்னே தில்லைவனம் என்று சொல்லப்பட்டிருந்தது. அதில் உமாதேவியார் காணும்படி சபாநாயகர் நிருத்தம் செய்வார். மநுச்சக்கரவர்த்தியின் குமாரனாகிய இரணியவன்மனுடைய சரீரத்திலிருந்த குட்டநோயைத் தன்னிடத்தில் மூழ்கினவுடனே நீக்கின சிவகங்கை யென்னும் ஒரு தடாகமும் அந்த ஸ்தலத்தில் உண்டு, அதில் மூழ்கினவர்கள் மறுபடியும் பிறவார்கள். அந்த ஸ்தலத்தில் வந்து சிவபெருமானை வணங்கி, ஒருதரம் பொன்னம்பலம் என்று சொன்னால், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத் தறுநூறுதரம் சொல்வதற்கு நிகராகும் என்றார். அரசனுக்கு அருகேயிருந்து அதைக்கேட்ட புத்த குருவானவன், பிடகாகமம் மூன்றும் சொன்ன தலைவனல்லாமல் வேறு ஒரு தெய்வமும் உண்டோவென்று கோவித்துச் சொல்லி. அந்தத் தில்லை நகருக்குப் போய் வாதுசெய்து வென்று அந்த ஸ்தலத்தை எமது புத்த தேவனுடைய கோயிலாகும்படி மூன்று தினத்தில் செய்கிறேனென்று சிவிகையில் ஏறிக்கொண்டு தன் கூட்டத்துடன் சிதம்பரத்துக்குப் போனான். புத்தராசனும் தன் புதல்விக்கு முன்னமே யிருந்த ஊமைத்தன்மை நீங்கவேண்டுமென்று நினைத்துத் தன் சேனைகளுடன் சிதம்பரத்தை அடைந்தான். இந்தப் புத்தராசன் வருவதற்கு முன்னே வந்த புத்த குருவானவன் பரமசிவனது ஆலயத்தில் ஒரு பொன் மண்டபத்தில் வந்திருந்தான், பிறகு

வந்த புத்த ராசனும் அவனை வணங்கித் துதித்து அவனோடுகூட இருந்தான். இவர்கள் வந்திருப்பதை அவ்விடத்துக் கோயிற் பணிவிடை செய்பவர்கள் கண்டு, புத்தனே; எமது கடவுளுடைய ஆலயத்தைவிட்டுச் சிக்கிரத்தில் ஓடிப்போவென்று சொன்னார்கள். புத்தகுருவானவன், யாம் போவதில்லை, எங்கள் புத்தனே தெய்வம் வேறு தெய்வமில்லை யென்று நிலைநாட்ட வந்தோம் என்றான். இதைக் கேட்ட பணிவிடைக்காரர்கள் விரைந்து போய்த்தில்லை மூவாயிரவர்க்கும் பரிகலத்தார்க்கும் இந்தச்செய்தியைத் தெரிவித்தார்கள். அவர்கள் உடனே ஓலை எழுதியனுப்பிச் சோழராசனை வரவழைத்தார்கள். மற்றுஞ் சில வேதியரையும், தபோதநரையும், கலைஞானிகளையும் வரவழைத்தார்கள். அன்று இரவில் இவர் எல்லாருடைய கனவிலும் சபாநாயகர் போய், நீங்கள் வருந்த வேண்டியதில்லை, நமது தில்லை நகரத்தின் எல்லையில் திருவாதவூர னென்னும் மாணிக்கவாசகன் இருக்கிறான், அவனை அழைத்தால் அவன் வந்து அந்தப் புத்தரை வாதுசெய்து வெல்லுவான் என்றுசொல்லி மறைந்தவுடனே, தில்லை மூவாயிரவர் விழித்துக்கொண்டு, சபாநாயகர் சொன்னபடியே மாணிக்கவாசகரைக் கண்டு இந்தச் செய்தியைத் தெரிவித்தவுடனே, பௌத்தர்கள் இருந்த மண்டபத்தில் வந்து அவர்களைப் பார்க்க விருப்பமில்லாதவராய்த் திரைபோட்டுக்கொண்டு ஆசநத்தில் எழுந்தருளியிருந்து புத்தகுருவை வாதில் வென்று, அந்தப் புத்தரெல்லாரும் ஊமைகளாகும்படி செய்ய, அதுகண்ட ஈழதேசத்தரசன் மாணிக்க வாசகரை நோக்கி, பேசிக்கொண்டிருந்தவர்களை ஊமைகளாகச் செய்தீர், ஊமையாயிருக்கிற என் புதல்வியைப் பேசும்படி செய்வீரானால் நானும் உமக்கு அடிமையாவேன் என்று சொல்ல, அப்படியே அவளை யழைப்பித்து, அருகே யிருத்திக்கொண்டு, பெண்ணே; இந்தப் புத்தன் பேசுகிற தர்க்கங்களுக்கெல்லாம் நீ விடை சொல்லக் கடவாயென்றார். அப்படியே அவளும் விடை சொன்னாள். அந்தவினாவிடைகளை, மங்கையர் செய்யும் திருச்சாழல் விளையாட்டாக மாணிக்க வாசகர் பாடலாகச் செய்தருளினார்.

---

# திருச்சாழல்.

## சிவனுடையகாருணியம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

இதுவுமது.

பூசுவதும்வெண்ணீறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதுந்திருவாயான்மறைபோலுங்காணேடீ
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
ஈசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ.

ப - ரை. பூசுவதும் - (இறைவன் தன் திருமேனியின்மீது) பூசிக்கொள்வதும், வெள்நீறு - திருவெண்ணீறும், பூண்பதுவும் - அணியாக அணிவதும், பொங்கு அரவம் - சீறுகின்ற பாம்பாம், திருவாயால் பேசுவதும் - திருவாக்கினால் பேசுவதும், மறை - வேதங்களே, ஏடீ - இது என்னேடீ, பூசுவதும் - பூசுவதையும், பேசுவதும் - பேசுவதையும், பூண்பதுவும் - பூணுவதையும், கொண்டு - பற்றி, (பேசி) என்னை - என்னலாபம், ஈசன் அவன் - ஈசனாகிய அவன், எவ்வுயிர்க்கும் இயல்பு ஆனான் - எல்லாவுயிர்களுக்கும் தக்க பயனளிப்பவனா யிருக்கிறான், சாழலோ—— எ - று.

க - ரை. பூசுவது வெண்ணீறு, அணிவது பாம்பு, பேசுவது வேதம், உங்கள் தெய்வத்தின் தன்மை யிருந்தபடி யென்னேடி என்று புத்தன் வினவ, பூசுவது, பூண்பது, பேசுவது, என்னும் இவற்றைக் கொண்டு உனக்காகுங் காரியம் ஒன்றுமில்லை, அந்த பரமசிவன் எல்லா வுயிர்களுக்கும் தக்கபய னளிப்பவனாய் இருக்கிறான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள்என்பதாம். (க)

என்னப்பனெம்பிரானெல்லார்க்குந்தானீசன்
துன்னம்பெய்கோவணமாக்கொள்ளுமதுவென்னேடீ
மன்னுகலைதுன்னுபொருண்மறைநான்கேவானசரடாத்
தன்னையேகோவணமாச்சாத்தினனகாண்சாழலோ.

ப - ரை. என் அப்பன் - என் தந்தை, எம்பிரான் - எம்மிறைவன், எல்லார்க்கும் தான் ஈசன் - எல்லாருக்குந்தானே யீசன், (அங்ஙனமாக) துன்னம் பெய் - தைத்தல் அமைந்த, கோவணமா கொள்ளுமது - கோவணமாகக் கொள்வது, என்னேடீ - என்னேயடீ, மன்னு கலை - நிலைபெற்ற கலைகளும், துன்னுபொருள் - மிகுந்த பொருட்செறிவுள்ள, மறை நான்கே - நான்கு வேதங்களும் ஆகிய இவைகளே, வான் சரடு ஆ - பெரிய சரடாகக்கொண்டமைந்திருக்க, தன்னையே - அப்படி அமைந்ததாகிய பொருளையே, கோவணம் ஆ சாத்தினன் - கோவணமாக அணிந்தனன், சாழலோ——எ - று.

க - ரை. என் அப்பன், எம்பிரான், எல்லார்க்குந் தலைவன், அப்படிப்பட்டவன் தைத்த துணியைக் கோவணமாகக் கொண்டதற்குக் காரணம் யாது என்று புத்தன் வினவ, கலைகளையும் வேதங்களையும் சரடாகக் கொண்டமைந்த பொருளாகிய கோவணத்தைச் சாத்திக்கொண்டான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். வேதசாஸ்திரங்களே இறைவனுக்குக் கோவணம் என்பதுகருத்து. (உ)

கோயில்சுடுகாடுகொல்புலித்தோனல்லாடை
தாயுமிலிதந்தையிலிதான்றனியன்காணேடீ
தாயுமிலிதந்தையிலிதான்றனியனாயிடினும்
காயிலுலகனைத்துங்கற்பொடிகாண்சாழலோ.

ப - ரை. சுடுகாடு கோயில் - சுடுகாடு கோயிலாம், நல் ஆடை கொல்புலித்தோல் - சிறந்த ஆடை கொல்லுகின்ற புலியினது தோலாம், தாயும் இலி - தாயும் இல்லாதவன், தந்தை இலி - தந்தையும் இல்லாதவன், தான் தனியன் - தான் தனியனாயிருப்பவன், ஏடீ-இது என்னேடீ, தாயும் இலி-தாயுமில்லாதவன், தந்தை இலி-தந்தையும் இல்லாதவன், தான் தனியன் ஆயிடினும் - தான் தனியனாயிருப்பினும், காயில் - (அவன்) கோபித்தால், உலகு அனைத்தும் - உலகமெல்லாம், கல் பொடி - கற்பொடிபோல நீறும், சாழலோ——எ - று.

க - ரை. சுடுகாட்டைக் கோயிலாகவும், புலித்தோலை ஆடையாகவும் கொண்டான், அன்றியும் அவனுக்குத் தாய் தந்தையரும் இல்லை, இத்தன்மையனோ உங்கள் கடவுள் என்று புத்தன் வினவ, எங்கள் கடவுளுக்குத் தாய் தந்தையர் இல்லாவிடினும், அவன் கோவித்தால் உலகமுழுதும் கற்பொடியாய் விடும் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். (௩)

அயனையனங்கனையந்தகனைச்சந்திரனை
வயனங்கண்மாயாவடுச்செய்தான்காணேடீ
நயனங்கண்மூன்றுடையநாயகனே தண்டித்தால்
சயமன்றோவானவர்க்குத்தாழ்குழலாய் * சாழலோ.

ப - ரை. அயனை - பிரமனையும், அனங்கனை - மன்மதனையும், அந்தகனை - யமனையும், சந்திரனை - சந்திரனையும், வயனங்கள் மாயா - வழி யழியாத,வடுச்செய்தான் - வடுவுண்டாக்கினான், ஏடீ - என்னேடீ, (என்றுவினவ) நயனங்கள் மூன்று உடைய - மூன்றுகண்களையுடைய, நாயகனே - இறைவனே, தண்டித்தால் - ஒறுத்தால், (அவ்வொறுப்பு) வானவர்க்கு - தேவர்களுக்கு, சயம் அன்றோ - வெற்றியல்லவோ, தாழ்குழலாய் - (என்றுவிடைகூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. பிரமனையும், மன்மதனையும், யமனையும், சந்திரனையும் வடுப்படுத்தினான், இதுதானோ உங்கள் கடவுளின் தன்மை என்று புத்தன் வினவ, முக்கண்ணனாகிய எமது கடவுளே தண்டித்தால், தேவர்களுக்கு அதுவும் வெற்றியன்றோ என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. தேவர்களைத் தண்டித்தல் அவர்கள் நன்மைக்கே என்பது தோன்ற "நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால் சயமன்றோ வானவர்க்கு" என்றனர். வயனங்கள் மாயாவடு என்றது எக்காலத்திலும் மறையாத வடுவென்றபடி. வயனம்-வழி.

தக்கனையு மெச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணம், தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதா னென்னேடீ, தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி யருள்கொடுத்தங், கெச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன்காண் சாழலோ.

ப - ரை. தக்கனையும் - தக்ஷனையும், எச்சனையும் - யாகத்துக் கதிதேவதையாகிய எச்சன் என்பவனையும், தலை அறுத்து - தலையைச் சேதித்து, தேவர் கணம் தொக்கன வந்தவர் தம்மை - கூட்டமாய்க் கூடிவந்த தேவர்களை, தொலைத்தது - முடித்தது, என்னேடீ - என்னையடி, (என்றுவினவ) தொக்கன வந்தவர் தம்

* இது புத்தனை நோக்கிக் கூறியதாதலால் தாழ்குழலாய் என்னும் பெண்பாலுக்குரிய விளி பொருத்தமாய்த் தோன்றவில்லை. ஆயினும் அச்சிட்ட எல்லாப் பிரதிகளிலும் இப்படியேயிருக்கின்றது. இது தாழ்குழையாய் என்றிருந்திருக்கலாம்.

மை - கூடிவந்த தேவர்களை, தொலைத்தருளி-முடித்தருளி, அருள் கொடுத்து - அருள் செய்து, அங்கு - அப்பொழுதே, எச்சனுக்கு-யாக கர்த்தாவாகிய தக்கனுக்கு, மிகைத்தலை அருளினன்-மாறு பாடாகிய (ஆட்டுத்தலையை) அருள் செய்தான், (என்று விடை கூறினள்) சாழலோ, — எ - று.

க - ரை. தக்கனையும், யாகத்துக்கு அதிதேவதையையும் தலை அரிந்து, கூடிவந்த தேவர்களையும் அழித்தது என்ன காரியம் என்று புத்தன் வினவ, தேவர்களை அழித்தாலும் மறுபடியும் அவர்களை உயிர் பெறச்செய்து யாக கர்த்தாவாகிய தக்கனுக்கு ஆட்டின் தலையை அருள்செய்தான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. எச்சன் என்பதற்கு யாகத்துக்கு அதிதேவதை யென்றும், யாகத்தைச் செய்கிறவன் என்றும் பொருள் படுதலால், முதலடியிலுள்ள எச்சன் என்பதற்கு யாகத்துக்கு அதிதேவதை யென்றும், நான்கா மடியிலுள்ள எச்சன் என்பதற்கு யாக கர்த்தாவாகிய தக்கன் என்றும் பொருளுரைக்கலாயிற்று. யாக சங்காரகாலத்தில் எச்சன் என்னும் அதிதேவதை மானுருக் கொண்டு ஓட, வீரபத்திரன் ஒருகணை தொடுத்து அவன் தலையை யறுத்தான் என்பதனை, கந்தபுராணம் தக்ஷகாண்டம் யாக சங்காரப்படலம், ௯௭ - ௯௮ - ம் செய்யுட்களாகிய,

"மணனயர்சாலையின்மகத்தின்றெய்வதம்
பிணையெனவெருக்கொடுபெயர்ந்துபோதலும்
குணமிகுவரிசிலைகுனித்துவீரனோர்
கணைதொடுத்தவன்றலைகளத்தில்வீட்டினான்.
இரிந்திடுகின்றதோரெச்சனென்பவன்
சிரந்துணிபடுதலுஞ்செய்கையிவ்வெலாம்
அரந்தையொடேதெரிந்தயன்றன்காதலன்
விரைந்தவணெழுந்தனன்வெருக்கொள்சிந்தையான்.
என்பவற்றாலுணர்க.

தக்கன் தலை அற்று வீழ்தலும் அதனை அக்கினிக் குணவாக்கினான் என்பதனை ஷை படலம் - ௫௧ - ம் செய்யுளாகிய,

"அற்றதோர்சென்னிவீழுமுனிறைவனங்கையினால்
பற்றியாயிடையலமரும்பாவகற்பாராத்
திற்றியீதெனக்கொடுத்தனன்கொடுத்தலுஞ்செந்தீ
மற்றோர்மாத்திரைப்போதினின்மிசைந்ததுமன்னோ"
என்பதனாலும்.

ஆட்டின் தலையைப் பொருத்தினன் என்பதனை, ஷை படலம் ௧௬உ - ௧௬௩ - ம் செய்யுட்களாகிய,

இறையருள்கண்டுவீரனெல்லையங்கதனிலெந்தை
அறைகழல்கண்டுபோற்றியவற்றியல்வினவித்தாழாப்
பொறியுளதென்றுதக்கன்புன்றலைபுகுத்தவுன்னுக்
குறையுடலதனைப்பானுகம்பனேக்கொணர்தியென்றான்.

"வித்தகவலிகொள்பூதன்வீரபத்திரன்றன்முன்னர்
உய்த்தலுமதன்மேல்வேள்விக்குண்டியாம்பசுவுள்வீர்த
மைத்தலைகண்டுசேர்த்தியெழுகென்றான்மறைகள்போற்றும்
அத்தனையிகழுநீரராவரிப்பரிசேயென்று"

என்பவற்றாலுணர்க. (௫)

அலரவனுமாலவனுமறியாமேயழலுருவாய்
நிலமுதற்கீழண்டமுறநின்றதுதானென்னேடீ
நிலமுதற்கீழண்டமுறநின்றிலனேலிருவருந்தம்
சலமுகத்தாலாங்காரந்தவிரார்காண்சாழலோ.

ப - ரை. அலரவனும் - பிரமனும், மாலவனும் - திருமாலும், அறியாமே - அறியாவண்ணம், அழல் உரு ஆய் - நெருப்புருவமாகி, நிலமுதல் - நிலவுலக முதலாகிய, கீழ் அண்டம் உற நின்றது - கீழுலகங்களை பொருந்தும்படி நின்றதும், (மேல்) அண்டம் உறநின்றது - சுவர்க்கமுதலாகிய மேலுலகங்களைப் பொருந்தும்படி நின்றதும், என்னேடி - என்னையடி, (என்று வினவ) நிலமுதற் கீழ் அண்டம் உறநின்றிலனேல்-நிலமுதலாகிய எல்லா உலகங்களையும் பொருந்தும்படி நின்றிலனாயின், இருவரும் - பிரம விஷ்ணுக்களிருவரும், தம் சலம் முகத்தால் - தமது கோபம் காரணமாக வுண்டான, ஆங்காரம் தவிரார் - அஹங்காரத்தை ஒழியார், (என்று விடைகூறினள்)சாழலோ,——எ - று.

க - ரை. பிரம விட்டுணுக்கள் அறிய வொண்ணாமல் நெருப்புருவாய் நின்றது யாதுக்கு என்று புத்தன்வினவ, அப்படி எம்மிறைவன் நில்லாவிடின், அவ்விருவரும் தமது ஆங்காரத்தை விடார் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். ()

மலைமகளையொருபாகம்வைத்தலுமேமற்றொருத்தி
சலமுகத்தாலவன்சடையிற்பாயுமதுவென்னேடீ[லாம்
சலமுகத்தாலவன்சடையிற்பாய்ந்திலளேற்றரணியெல்
பிலமுகத்தேபுகப்பாய்ந்துபெருங்கேடாஞ்சாழலோ.

ப - ரை. மலைமகளை - பார்வதி தேவியை, ஒருபாகம் வைத்தலும் - ஒருபங்கில் இருத்துதலும், மற்றொருத்தி - மற்றொரு பெண், சலமுகத்தால் - நீர்உருவாக, அவன் சடையில்பாயுமது - அவன் சடையின் கண்ணே பாய்வது, என்னேடீ - என்னையடீ - (என்றுவினவ) சலமுகத்தால் - நீர்உருவாக, அவன்சடையில், அவ்விறைவனது சடையின்கண்ணே, பாய்ந்திலளேல் - பாய்ந்திலளாயின், எல்லாம் - உலகமெல்லாம், பிலமுகத்தே புகப்பாய்ந்து - பாதாளத்தின்கண் விழும்படி பாய்ந்து, பெருங்கேடு ஆம் - பெரிய கெடுதியுண்டாகும், (என்று விடைகூறினள்), சாழலோ, ——— எ - று.

க - ரை. பார்வதியை ஒரு பாகத்தில் அமைத்துக் கொள்ளுதலும் மற்றொருத்தியாகிய கங்கை நீருருவாகி அவன் சடையில் பாய்வதற்குக் காரணம் யாதென்று புத்தன் வினவ, நீருருவாகி அவ்விறைவனது சடையில் பாயாவிடின், பூமி முழுதும் பாதாளத்தில் வீழ்ந்து பெருங்கேடு அடையும் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். (எ)

கோலாலமாகிக்குரைகடல்வாயன்றெழுந்த
ஆலாலமுண்டானவன்சதுர்தானென்னேடீ
ஆலாலமுண்டிலனேலன்றயன்மாலுள்ளிட்ட
மேலாயதேவரெல்லாம்வீடுவர்காண்சாழலோ.

ப - ரை. அன்று - அக்காலத்தில், குரை - ஒலிக்கின்ற, கடல்வாய் - பாற்கடலின்கண், கோலாலமாகி எழுந்த - ஆரவாரத்தோடுண்டாகிய, ஆலாலம் உண்டான் - ஆலாஹல விஷத்தைப் பருகினான், அவன் சதுர் என்னேடி - அவ்விறைவனது சதுரப்பாடு என்னையடீ, (என்று வினவ) ஆலாலம் உண்டிலனேல் - ஆலாஹல விஷத்தைப் பருகிலனாயின், அன்று - அப்பொழுதே, அயன்மால் உள்ளிட்ட - பிரமவிஷ்ணுக்களை யுள்ளிட்ட, மேலாய தேவர் எல்லாம் - மேன்மையாகிய தேவர்களெல்லாரும், வீடுவர் - அழிவார்கள், (என்று விடை கூறினள்), சாழலோ, ——— எ - று.

க - ரை. அக்காலத்தில் பாற்கடலில் உண்டாகிய நஞ்சையுண்டான், அதற்குக் காரணம் யாதென்று புத்தன் வினவ, அந்த நஞ்சை எம்மிறைவன் உண்டிலனாயின் பிரம விட்டுணுக்கள் முதலான தேவர்களெல்லாரும் அன்றே மடிந்தொழிவார்கள் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். (அ)

தென்பாலுகந்தாடுந்தில்லைச்சிற்றம்பலவன்
பெண்பாலுகந்தான்பெரும்பித்தன்காணேடி
பெண்பாலுகந்திலனேற்பேதாயிருநிலத்தோர்
விண்பாலியோகெய்திவீடுவர்காண்சாழலோ.

ப - ரை. தென்பால்உகந்து - தென்றிசையை நோக்கி, ஆடும்-நடிக்கின்ற, தில்லைச்சிற்றம்பலவன்-தில்லைச்சிற்றம்பலத்தை யுடையான், பெண்பால் உகந்தான் - பெண்பாகத்தை விரும்பினான், பெரும்பித்தன்ஏடீ - (இவன்) பெரும்பித்தன் போலுமேடீ, (என்று வினவ) பெண்பால் உகந்திலனேல் - பெண்பாகத்தை விரும்பிலனாயின், பேதாய் - அறிவில்லாதவனே, இருநிலத்தோர்- பெரியநில வுலகத்தார் யாவரும், இயோகு எய்தி - யோகத்தைப் பொருந்தி, விண்பால் வீடுவர் - விண்ணுலகை யடைந்து விடுவர், (என்றுவிடைகூறினள்) சாழலோ,———எ - று.

க - ரை. தென்றிசை நோக்கி நடிக்கின்ற தில்லைச் சிற்றம்பலத்தான் பெண் பாகத்தை விரும்பினான், இவன் பெரும் பித்தனோ என்று புத்தன் வினவ, எம்மிறைவன் பெண்பாகத்தை விரும்பிலனாயின், நிலவுலகத்தோர் யாவரும் யோகத்தை அடைந்து மேலுலகத்தைச் சேர்வார்கள் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. இறைவன் பெண்பாகத்தை விரும்பிலனாயின் எல்லாரும் யோகமடைந்து சிவசாரூப மடைவார்கள், அடைந்தால் பிரபஞ்சவிர்த்தி யில்லாமல் ஒழியும் என்றற்கு "பெண்பாலுகந்திலனேற் பேதாயிரு நிலத்தோர் விண்பாலியோ கெய்திவீடுவர்" என்றார். (கூ)

தானந்தமில்லான்றனையடைந்தநாயேனை
ஆனந்தவெள்ளத்தழுந்துவித்தான்காணேடீ
ஆனந்தவெள்ளத்தழுந்துவித்ததிருவடிகள்
வானுந்துதேவர்கட்கோர்வான்பொருள்காண்சாழலோ.

ப - ரை. தான் அந்தம் இல்லான் - தான் முடிவில்லாதவனாதலால், தன்னை அடைந்த நாயேனை - தன்னையடுத்த நாயினேனை, ஆனந்தவெள்ளத்து - இன்பவெள்ளத்தின்கண், அழுந்துவித்தான்-எம்மை அழுந்தப்பண்ணினான், ஏடீ - என்னடீ, (என்று வினவ) ஆனந்தவெள்ளத்து அழுந்துவித்த திருவடிகள் - எம்மை இன்ப வெள்ளத்தின்கண் அழுந்தப்பண்ணின திருவடிகள், வான்

உந்து தேவர்கட்கு - விண்ணுலகில் வாழ்கின்ற தேவர்களுக்கு, ஓர் - ஒப்பற்ற, வான்பொருள் - மேலான பொருள், (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. தான் முடிவில்லாதவனுயிருந்து தன்னை யடைந்த என்னை ஆநந்தசாகரத்தில் அழுந்தச் செய்தான், இது என்ன புதுமையென்று புத்தன் வினவ, ஆநந்தசாகரத்தில் அழுந்தச் செய்த திருவடிகள் தேவர்களுக்கு மேன்மையான பொருளாகும் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். (௧0)

நங்காயிதென்ன தவநரம்போடெலும்பணிந்து
கங்காளந்தோண்மேலேகாதலித்தான்காணேடீ
கங்காளமாமாகேள்காலாந்தரத்திருவர்
தங்காலஞ்செய்யத்தரித்தனன்காண்சாழலோ.

ப - ரை. நங்காய் - பெண்ணே, இதுஎன்ன தவம் - இது என்னவிதமாகிய தபசு, நரம்போடு - நரம்புடன் கூடிய, எலும்பு அணிந்து - எலும்பைத் தரித்து, கங்காளம் - முழுவெலும்பை, தோள்மேலே காதலித்தான்ஏடீ - தோளின் மீது விரும்பியணிந்தானேடீ, (என்று வினவ) கங்காளம் ஆம் ஆறு கேள் - முழுவெலும்பு வந்த விதத்தைக் கேள், காலாந்தரத்து - காலபேதத்தால், இருவர் - பிரம விட்டுணுக்களாகிய இருவரும், தம் காலம் செய்ய - தம்முடைய வாணாளை முடிவுசெய்ய, தரித்தனன் - மிகு விருப்பத்தோடு அணிந்துகொண்டான், (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. நரம்போடுகூடிய எலும்பை அணிந்து முழுவெலும்பைத் தோளில் சுமந்தான், இது என்ன தவமோ என்று புத்தன் வினவ, முழுவெலும்பு வந்த விதத்தைக் கேள், கால வேற்றுமையால் பிரம விட்டுணுக்கள் இறக்க, அவர்கள் எலும்பைத் தரித்தான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். (௧௧)

கானார்புலித்தோலுடைதலையூண்காடுபதி
ஆனாலவனுக்கிங்காட்படுவாராரேடீ
ஆனாலுங்கேளாயயனுந்திருமாலும்
வானாடர்கோவும்வழியடியார்சாழலோ.

ப - ரை. கான்ஆர் - காட்டில் வாழ்கின்ற, புலி-புலியினது, தோல் - சருமமே, உடை - ஆடையும், தலை - கபாலமே, ஊண் - உண்கலமும், காடு - மயானமே, பதி - உறைவிடமும், ஆனால் -

ஆயின், அவனுக்கு - அந்தச் சிவபெருமானுக்கு, இங்கு - இவ்வுலகத்தில், ஆட்படுவார் - அடிமைப்படுவார், ஆர்ஏடீ - யாரேடீ, (என்று வினவ) ஆனாலும் - அவ்வாறே ஆயினும், கேளாய் - கேட்பாய், அயனும் - பிரமனும், திருமாலும் - விஷ்ணுவும், வான் நாடர் கோவும் - விண்ணாட்டினராகிய தேவர்களுக் கரசனாகிய இந்திரனும், வழிஅடியார் - பரம்பரையாகிய அடியவர்கள்; (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. புலித்தோலே ஆடையும், தலைஓடே உண்கலமும், மயானமே இடமும் ஆனால், அவனுக்கு அடிமைப்படுவோர் யாவர் என்று புத்தன் வினவ, புலித்தோல் முதலியவற்றை உடையவனாயினும் பிரமன் திருமால் இந்திரன் என்பவர் அவனுக்கு வழித் தொண்டர் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. கான் - காடு. உடை - ஆடை. ஊண் - உணவு. அது இங்கு உண்கலத்துக்காயிற்று. பதி - இடம். இடுகாடு, சுடுகாடு என்னு மிரண்டு மடங்கக் காடு என்றார். (௧௨)

மலையரையன்பொற்பாவைவாணுதலாள்பெண்டிருவை
உலகறியத்தீவேட்டானென்னுமதுவென்னேடீ
உலகறியத்தீவேளாதொழிந்தனனேலுலகனைத்தும்
கலைநவின்றபொருள்களெல்லாங்கலங்கிடுங்காண்சாழலோ

ப - ரை. மலைஅரையன்-பர்வத ராஜனீன்ற, பொன்பாவை-பொன்னினாற் செய்யப்பட்ட பிரதிமை போல்பவளும், வாள்நுதலாள் - ஒளிபொருந்திய நெற்றியையுடையவளும் ஆகிய, பெண் திருவை - அழகாகியபெண்ணை, உலகுஅறிய - உலகத்தார் அறியும்படி, தீவேட்டான் என்னும் அது-மணம் புணர்ந்தானென்பது, என்னேடீ - என்ன காரியமேடீ, (என்று வினவ) உலகறிய - உலகினர் அறியுமாறு, தீவேளாது ஒழிந்தனன் ஏல் - மணம்புணராதொழிந்தனனாயின், உலகு அனைத்தும் - எல்லா வுலகங்களும், கலைநவின்ற - நூல்களாற் சொல்லப்படுகிற, பொருள்கள் எல்லாம் - எல்லா அர்த்தங்களும், கலங்கிடும் - கலங்கிவிடும், (என்று விடை கூறினள் சாழலோ,——எ - று.

க - ரை. மலையரையன் மகளாகிய உமாதேவியை, உலகமறியத்தீமுன்னே மணஞ்செய்தனன் என்பது என்ன காரியம் என்றுபுத்தன் வினவ, இறைவன் உலகமறிய மணஞ்செய்து கொள்ளாதொழிந்தால் உலகமுழுதும் சாத்திரப்பொருள்களும் நிலைமாறிவிடும் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. கூ - ம்பாட்டின் விடையிலுள்ள பொருளே இப் பாட்டின் விடையிலும் அமைந்துளது. (கரு)

தேன்புக்கதண்பணைசூழ்தில்லைச்சிற்றம்பலவன்
தான்புக்குநட்டம்பயிலுமதுவென்னேடீ
தான்புக்குநட்டம்பயின்றிலனேற்றரணியெல்லாம்
ஊன்புக்கவேற்காளிக்கூட்டாங்காண்சாழலோ.

ப - ரை. தேன்புக்க - தேன்பெருக்குப் பரந்த, தண்பணை சூழ் - குளிர்ந்தவயல்கள் சூழ்ந்த, தில்லை - திருத்தில்லையின் கண்ணுள்ள, சிற்றம்பலவன் - திருச்சிற்றம்பல முடையான், தான்புக்கு - தான் திருவாலங்காட்டிற் சென்று, நட்டம் பயிலுமது - திருநடநம் பண்ணுவது, என்னேடீ - என்ன நிமித்தமேடீ, (என்று வினவ) தான்புக்கு - தான் அங்குச்சென்று, நட்டம் பயின்றிலனேல் - திருநடநஞ் செய்யானாயின், தரணி எல்லாம் - உலகமெல்லாம், ஊன்புக்க - மாமிசம்பொருந்திய, வேல் - வேலாயுதத்தைத் தாங்கிய, காளிக்கு - காளிக்கு, ஊட்டு ஆம் - உணவாகிவிடும், (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. தில்லைச் சிற்றம்பலத்தான் நடநஞ் செய்தற்குக் காரணம் யாதென்று புத்தன் வினவ, இறைவன் நடநஞ் செய்யாதொழிந்தால், உலகமுழுதும் காளிக்கு உணவாய் விடும் என்று ஊமைப்பெண் விடைசொன்னாள் என்பதாம். (கசு)

கடகரியும்பரிமாவுந்தேருமுகந்தேறாதே
இடபமுகந்தேறியவாறெனக்கறியவியம்பேடீ
தடமதில்களவைமூன்றுந்தழலெரித்தவந்நாளில்
இடபமதாய்த்தாங்கினான்றிருமால்காண்சாழலோ.

ப - ரை. கடகரியும் - மதயானையையும், பரிமாவும் - குதிரையையும், தேரும் - இரதத்தையும், உகந்து ஏறாது - விரும்பியேறாமல், இடபம் உகந்து - எருதை விரும்பி, ஏறிய ஆறு - ஏறின விதத்தை, எனக்கு அறிய - எனக்கு அறியலாம்படி, இயம்பேடீ - சொல்லடி, (என்று வினவ) தடம்மதில்கள் - பெரிய மதில்களாகிய, அவை மூன்றும் - அவை மூன்றனையும், தழல் எரித்த அந்நாளில் - நெருப்பினாற் சுட்ட அந்தக் காலத்தில், திருமால் - திருமாலானவன், இடபமதாய் - இடபவுருக் கொண்டு, தாங்கினான் - சுமந்தான், (என்று விடை கூறினள்) சாழலோ,——எ-று.

க - ரை. மதயானை, குதிரை, தேர், இவற்றின் மீது ஏறாமல், இடபத்தின் மீது ஏறினதற்குக் காரணம்யாது என்று புத்தன்

வினவ, முப்புரங்களை எரித்தகாலத்தில் தேரின் அச்சுமுறியத்திரு மால் இடப வுருவாய்த் தாங்கினான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம். (கரு)

நன்றாகநால்வர்க்குநான்மறையினுட்பொருளை
அன்றாலின்கீழிருந்தங்கறமுரைத்தான்காணேடீ
அன்றாலின்கீழிருந்தங்கறமுரைத்தானாயிடினும்
கொன்றான்காண்புரமூன்றுங்கூட்டோடேசாழலோ.

ப - ரை. அன்று - அக்காலத்தில், ஆலின்கீழ் இருந்து - கல்லாலின் கீழே யிருந்து, அங்கு - அவ்விடத்தில், நால்வர்க்கும் - சநகாதி நால்வருக்கும், நான்மறையின் உட்பொருளை - நான்கு வேதங்களின் ரகஸ்யார்த்தத்தை, நன்றாக - விசதமாக, அறம் உரைத்தான் ஏடீ - தர்ம மார்க்கமாகச் சொல்லினனேடீ, (என்று வினவ) அன்று ஆலின்கீழ் இருந்து - அக்காலத்தில் கல்லா லின்கீழே யிருந்து, அங்கு - அவ்விடத்தில், அறம் உரைத்தான் ஆயிடினும் - தர்மோபதேசம் செய்தானாயினும், புரம் மூன்றும் - முப்புரங்களையும், கூட்டோடே கொன்றான் - நிர்மூலமாக அழித் தான், (என்று விடை கூறினாள்) சாழலோ,——எ - று.

க - ரை. சநகர் முதலிய நால்வருக்கும் நான்கு வேதங்களின் உட்பொருளை ஆலமர நிழலிலிருந்து பரமதர்மமாகச் சொன்னான், அது என்னவென்று புத்தன் வினவ, அன்று ஆலநிழலிலிருந்து அறங்கூறினனாயினும், முப்புரங்களை வேரோடழித்தான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. இறைவன் தர்மோபதேசம் செய்த சாந்தமூர்த் தியாயினும், துஷ்ட நிக்கிரகன் என் றறிவித்தற்கு, "கொன்றான் காண் புரமூன்றும் கூட்டோடே" என்றார். (கசு)

அம்பலத்தேகூத்தாடியமுதுசெயப்பலிதிரியும்
நம்பனையுந்தேவனென்றுநண்ணுமதுவென்னேடீ
நம்பனையுமாமாகேளுன்மறைகடாமறியா
எம்பெருமானீசாவென்றேத்தினகாண்சாழலோ.

ப ரை. அம்பலத்தே கூத்து ஆடி - தில்லை யம்பலத்தின் கண்ணே கூத்தாடலைச் செய்து, அமுதுசெய்ய - உண்ண, பலி திரியும் - பலியேற்றுத் திரிகின்ற, நம்பனையும் - சிவபெருமானை யும், தேவன் என்று நண்ணுமது - தேவனென்று நினைத்து அவ னையடைவது, என்னேடீ - என்ன அறியாமையேடீ, (என்று (வினவ) ஆம் ஆறு கேள் - ஆனவிதத்தைக் கேட்பாய், நம்பனை

யும் - (அப்படிப்பட்ட) சிவபெருமானையும், நான்மறைகள் அறியா - நான்குவேதங்களும் அறியாதனவாகி, எம்பெருமான் - எம்பெருமானே, ஈசா - ஈசனே, என்று ஏத்தின - என்று துதித்தன, (என்று விடை கூறினள்) சாழலோ.——எ - று.

க - ரை. அம்பலத்தில் கூத்தாடி, பிச்சை யெடுத்துண்டுழல்கின்ற சிவனையும் தேவனென்று அடைவது என்ன அறியாமை யென்று புத்தன் வினவ, அவனை நான்மறைகள் அறியாதவைகளாய், எம்பெருமானே, ஈசனே என்று துதித்தன என்று ஊமைப் பெண் விடை சொன்னாளென்பதாம். (களஎ)

சலமுடையசலந்தரன்றனுடறடிந்தநல்லாழி
நலமுடையநாரணற்கன்றருளியவாறென்னேடீ
நலமுடையநாரணன்றனயனமிடந்தரனடிக்கீழ்
அலராகவிட.வாழியருளினன்காண்சாழலோ.

ப - ரை. சலம் உடைய - தணியாக் கோவத்தை யுடைய, சலந்தரன் தன் உடல் - சலந்தராசுரனது உடலை, தடிந்த - அழித்த, நல் ஆழி - நல்ல சக்ராயுதத்தை, நலம் உடைய நாரணன்கு - நன்மையை யுடைய திருமாலுக்கு, அன்று அருளியஆறு - அக்காலத்தில் பிரசாதித்த விதம், என்னேடீ - என்னையேடீ (என்று வினவ) நலம் உடைய நாரணன் - நன்மையை யுடைய திருமால், தன் நயநம் இடந்து - தன் கண்ணைத் தோண்டி யெடுத்து, அரன் அடிக்கீழ் - சிவபெருமானது திருவடியின் மேல், அலர் ஆக இட - மலராக அர்ச்சிக்க, (மகிழ்ந்து) ஆழி அருளினன் - சக்ராயுதத்தைப் பிரசாதித்தான், (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. சலந்தரனுடம்பைச் சேதித்த சக்கரத்தைத் திருமாலுக்குக் கொடுத்ததற்குக் காரணம் யாது என்று புத்தன் வினவ, திருமால்தன் கண்ணைப்பறித்து மலராகத் திருவடியிற் சாத்தினதனால் கொடுத்தான் என்று ஊமைப்பெண் விடை சொன்னாளென்பதாம்.

சிவபெருமான் சலந்தரனை உடல்தடிந்ததும், திருமாலுக்கு ஆழிகொடுத்தருளியதுமாகிய வரலாறு:—இந்திரன் சிவதரிசனஞ் செய்தற்காகத் தருக்குடையவனாய்க் கைலாயமலைக்குப்போனான். அதை யறிந்த பரமசிவன் பூதவீரனைப்போல் வடிவங் கொண்டெதிர்ந்து நிற்க, இந்திரன் நீ யாரென்று கேட்கவும் பேசாமலிருந்தனன்; அதனாற் கோபங்கொண்டு வச்சிராயுதமெறிய, அது

துகளாய்ப்போயிற்று; உடனே பரமசிவன் தன்னுருக்கொண்டு கோபத்தோடு நிற்க, இந்திரன் நடுநடுங்கி இறைவனை வணங்கித் தன் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று விண்ணப்பித்தான். இறைவனிரங்கி அக்கோபத்தீயை மேற்கடலில் விடுப்ப, அது சலந்தரனென்னும் குழந்தையாயிற்று. பின்பு ஒரு காலத்தில் பிரமன் அவ்விடத்தை அடைந்து, இவனைச் சிவனை யல்லது கொல்லுவாரில்லையென்று வருணனுக்குச் சொல்விப்போக அவனை அன்பாக வளர்த்து வந்தான், அவன் பருவமடைந்தகாலத்தில் எல்லா வுலகங்களையும் வெற்றிகொண்டு ஆந்தரமென்னு நகரினை யுண்டாக்கி, அதையாண்டு, காலநேமிமகளான விருந்தையை விவாகஞ் செய்துகொண்டு, தேவர்கள் மேருவிற் சென்றிருக்கின்றன ரென்பதறிந்து அவரோடு போர்செய்யப்போக, தேவர்கள் சிங்கத்தைக்கண்ட யானையேபோல் வருந்தித் திருமாலை வேண்டினர். திருமால் நெடுங்காலம் அவனுடன் போர்செய்து ஜெயிக்க முடியாமல் அவனைப் புகழ்ந்து சென்றனர். தேவர்கள் கயிலையை யடைந்து பரமசிவனிடத்தில் முறையிட்டனர். அப்பொழுது ஜலந்தரன், இனி நாம் பரமசிவனோடு போர்செய்ய வேண்டுமென்று ஆயத்தமாகிப் புறப்பட, அதைக் கண்ட அவன் மனைவியாகிய விருந்தை தடுக்கவும் கேளாமல் கயிலைவரையை யணுக, அதனை யறிந்த சிவபெருமான் விருத்த வேதியனாக எதிர்வந்து பூமியிலோர் சக்கராகாரமான கோட்டைக் கிழித்து இதற்குட்பட்ட நிலத்தைப் பேர்த்தெடு என்று சொல்ல, அவ்வாறே பேர்க்கையில் அந்நிலமே சக்கரமாய் அச்சலந்தரனைக் கொன்று சென்றது. அச்சக்கரத்தைத் திருமால் சிவபெருமானிடத்திருந்து பெற்ற வரலாற்றைத் திருத்தோணோக்கம் ௧0 - ஆம் செய்யுளால் அறிக. ()

அம்பரமாம்புள்ளித்தோலாலாலமாரமுதம்
எம்பெருமானுண்டசதுரெனக்கறியவியம்பேடீ
எம்பெருமானேதுடுத்தங்கேதமுதுசெய்திடினும்
தம்பெருமைதானறியாத்தன்மையன்காண்சாழலோ.

ப - ரை. புள்ளித்தோல் - புள்ளிகளையுடைய புலித்தோல், அம்பரம் ஆம்-ஆடையாகும், (இதுநிற்க) எம்பெருமான் - எம்பெருமானனவர், ஆலாலம் - ஆலாகல விஷத்தை, ஆர் அமுதம் உண்ட சதுர் - அரிய உணவாகக் கொண்டுண்ட சதுரப்பாட்டை; எனக்கு அறிய இயம்பேடீ - எனக்கறியலாம்படி சொல்லேடீ (என்று வினவ) எம்பெருமான் - எம்பெருமானனவர், எது உடுத்து - எதை யுடுத்து, அங்கு - அவ்வாறே, எது அமுது செய்தி

டினும் - எதையுண்டாலும், தம்பெருமை தான் அறியாத் தன்மை யன் - தமது மஹிமையைத் தாமுணராத தன்மையை யுடையர் - (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. புலித்தோல் ஆடையாகும், அமுது ஆலாகல விஷமாம், இது என்ன தன்மை யென்று புத்தன் வினவ, எம்பெருமான் எதைஉடுத்து எதை அமுது செய்தாலும், தன் பெருமையைத்தான் அறியாத தன்மையன் என்று ஊமைப்பெண் விடை சொன்னாள் என்பதாம்.

வி - ரை. மிக்க பெருமையை யுடையவன் என்றற்கு, "தம் பெருமை தானறியாத் தன்மையன்" என்றார். (கக)

அருந்தவருக்காலின்கீழறமுதலாநான்கனையும்
இருந்தவருக்கருளுமதுவெனக்கறியவியம்பேடீ
அருந்தவருக்கறமுதனன்கன்றருளிச்செய்திலனேல்
திருந்தவருக்குலகியற்கைதெரியாகாண்சாழலோ.

ப - ரை. அருந்தவருக்கு - அருந்தவத்தை யுடைய சநகாதியர் பொருட்டு, ஆலின்கீழ் இருந்து - கல்லாலின்கீழே யெழுந்தருளி யிருந்து, அவருக்கு - அவர்களுக்கு, அறம்முதல் ஆம் நான்கனையும் - அறம் முதலாகிய நாற்பொருளையும், அருளுமது - பிரசாதித்தது, என்னேடீ - என்னையேடீ, (என்று வினவ) அருந்தவருக்கு-அருந்தவத்தை யுடையார்க்கு, அறமுதல் நான்கு-அறமுதலாகிய நாற் பொருளையும், அன்று அருளிச் செய்திலனேல் - அக்காலத்தில் அருளிச்செய்திலனாயின், அவருக்கு-அவர்களுக்கு, திருந்த - திருத்தமாக, உலகு இயற்கை - உலகவியல்புகள், தெரியா - தெரியமாட்டா, (என்று விடை கூறினள்) சாழலோ,——எ - று.

க - ரை. சநகாதியர்க்கு ஆலநிழலிலிருந்து அறமுதலியவற்றை அருள்செய்த வரலாறென்னென்று புத்தன் வினவ, அறமுதலியவற்றை இறைவன் அருள்செய்யாவிடின் அவர்க்கு உலக இயற்கைகள் தெரியமாட்டா என்று ஊமைப்பெண் விடைசொன்னாள் என்பதாம். (உ0)

# திருப்பூவல்லி.

மாயாவிசயநீக்குதல்.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

இதுவுமது.

இணையார்திருவடியென்றலைமேல்வைத்தலுமே
துணையானசுற்றங்களத்தனையுந்துறந்தொழிந்தேன்
அணையார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
புணையாளன்சீர்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. இணை ஆர் திருவடி - இரண்டாகிய அரிய திருவடியை, என் தலைமேல் வைத்தலும் - என் தலையின்மீது வைத்தவுடன், துணையான சுற்றங்கள் அத்தனையும் - (இதுவரையில்) துணையென்று நினைத்திருந்த உறவின ரெல்லாரையும், துறந்து ஒழிந்தேன் - விட்டு நீங்கினேன், அணை ஆர் புனல் - கரைகோலித் தடுக்கப்பட்ட நீர் சூழ்ந்த, தில்லை - தில்லைநகர்க் கண்ணதாகிய, அம்பலத்தே ஆடுகின்ற - அம்பலத்தில் நடிக்கின்ற, புணையாளன் சீர்பாடி - (நமது பிறவிக் கடலுக்கு) ஓர் மரக்கலம் போல்பவனாகிய சிவபெருமானது பெருமையைப் புகழ்ந்து பாடி, பூவல்லி கொய்யாமோ - அல்லி மலர்களைப் பறிப்போம். எ - று.

க - ரை. இறைவன் தன்திருவடியை என் தலைமேல் வைத்தலும், இதுவரையும் எனக்குத் துணையென்று நினைத்திருந்த உறவினர் யாவரையும் விட்டு நீங்கினேன், இனித் தில்லையம்பலத்தில் ஆடுகின்ற நமது பிறவிக்கடலுக்கு ஓர் மரக்கலம் போல்பவனாகிய சிவபெருமானது பெருமையைப் புகழ்ந்து பாடி அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம்,

வி - ரை. இது அல்லி மலர்களைப் பறித்து விளையாடுகின்ற பெண்களை நோக்கிச் சொல்லியது. இணையென்பதற்கு ஒன்றற்கொன்று நிகரான என்றுரைப்பினும் பொருந்தும். துறந்தேன் என்னாது துறந்தொழிந்தேன் என்றமையால் பற்றறத் துறந்தேன்

என்றாராயிற்று. புணை - மரக்கலம். அல்லிப்பூ எனற்பாலது பூ வல்லி என முன் பின்னாய் மாறி நின்றது. கொய்யாமோ என்பதில் ஆ ஓ இரண்டும் எதிர்மறைப் பொருளனவாதலால் உடன்பாட்டுப் பொருளில் வந்தது. (க)

எந்தையெந்தாய்சுற்றமற்றுமெல்லாமென்னுடைய
பந்தமறுத்தென்னையாண்டுகொண்டபாண்டிப்பிரான்
அந்தவிடைமருதிலானந்தத்தேனிருந்த
பொந்தைப்பரவிநாம்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. எந்தை - எனது தந்தையும், எந்தாய் - எனது தாயும், சுற்றம் - உறவினரும், மற்றும் எல்லாம் - மற்றெல்லாப் பொருள்களும், என்னுடைய பந்தம் அறுத்து - என்னுடைய பிறவிக் கட்டைச் சேதித்து, என்னை ஆண்டுகொண்ட - என்னை யாண்டருளின, பாண்டிப்பிரான் - பாண்டிப்பிரானே, (ஆதலால்) அந்த இடைமருதில் - அந்தத்திருவிடை மருதூரின்கண், ஆனந்தத் தேன் இருந்த - இன்பத்தேன் தங்கியிருந்த, பொந்தைப்பரவி - பொந்தினைத் துதித்து, நாம் பூவல்லி கொய்யாமோ——எ - று.

க - ரை. என் தந்தை தாய் முதலான எல்லாம் என் பிறவித்தளையை யறுத்து என்னை யாண்டருளின பாண்டிப்பிரானே யாதலால், திருவிடைமருதூரிற் சென்று அவனைத் துதித்து அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம்.

வி - ரை. தேன் என்றதற் கேற்பப் பொந்து என்றார். இறைவனைப் பொந்தாகவும் அவன்தரும் இன்பத்தைத் தேனாகவும் கொள்க. மரப்பொந்துகளிலும் புதல்கள் முதலியவைகளிலும் தேன் கூடு கட்டப்படுதலால் இறைவனை "ஆனந்தத் தேனிருந்த பொந்து" என உருவகம் செய்தார். இடை மருது என்பதனை மத்யார்ஜுநம்என்பர் வடநூலார். இது சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று, இத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருநாமம் மருதீசர். தேவியார் திருநாமம் நலமுலைநாயகியம்மை. (உ)

நாயிற்கடைப்பட்டநம்மையுமோர்பொருட்படுத்துத்
தாயிற்பெரிதுந்தயாவுடையதம்பெருமான்
மாயாப்பிறப்பறுத்தாண்டானென்வல்வினையின்
வாயிற்பொடியட்டிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. நாயின்கடைப்பட்ட - நாயினுங்கடையான, நம்மையும் - எங்களையும், ஓர் பொருள்படுத்து - ஒரு பொருளாக்கி,

தாயின் - தாயினும், பெரிதும் தயாவுடைய-மிகவும் தயை யுள்ளவனை, தம்பெருமான் - தம்பிரான், என் வல்வினையின் வாயில் - எனது வலிய இருவினைகளின் வாயில், பொடி அட்டி - புழுதியைக் கொட்டி, மாயப்பிறப்பு அறுத்து ஆண்டான் - மாயப்பிறவியைச் சேதித்து ஆண்டருளினன், (ஆதலால்) பூவல்லி கொய்யாமோ——எ - று.

க - ரை. நாயினும் தாழ்ந்த எம்மையும் ஓர் பொருளாக்கி தாயினுஞ் சிறந்த கருணைசெய்த சிவபெருமான் என்வலிய வினைகளின்வாயில் புழுதியைக் கொட்டி எமது பிறவியை ஒழித்தருளினான், யாம் அல்லிமலர்களைப்பறிப் போம் என்பதாம்.

வி - ரை. தயா என்னும் வடமொழி திரியாது வந்தது. உலக வழக்கில் வாயில் மண்போட்டு என்பது போல, "வாயிற்பொடியட்டி" யென்றார். அட்டுதல் - வார்த்தல். அது இங்கு இடுதல் என்னும் பொருளது. (௩)

பண்பட்டதில்லைப்பதிக்கரசைப்பரவாதே
எண்பட்டதக்கனருக்கனெச்சனிந்துவனல்
விண்பட்டபூதப்படைவீரபத்திரராற்
புண்பட்டவாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. எண்பட்ட - மதிப்புப்பெற்ற, தக்கன் - தக்கனும், அருக்கன் - சூரியனும், எச்சன் - எச்சன் என்பவனும், இந்து - சந்திரனும், அனல் - அக்கினியும், பண்பட்ட - அலங்கரித்தலமைந்த, தில்லைப்பதிக்கு அரசை - தில்லைநகர்க் கிறைவனாகிய சிவபெருமானை, பரவாது - துதியாதவர்களாய், விண்பட்ட - மேன்மை பொருந்திய, பூதப்படை - பூதப்படையையுடைய, வீரபத்திரரால் - வீரபத்திரக் கடவுளால், புண்பட்ட ஆறுபாடி - காயப்பட்ட விதத்தை யெடுத்துப்பாடி, பூவல்லி கொய்யாமோ —— எ - று.

க - ரை. தில்லைப்பதிக் கிறைவனாகிய சிவபெருமானைத் துதியாமல் தக்கன் முதலானோர் வீரபத்திரரால் புண்பட்ட செய்தியைப் பாடி அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம். (௪)

தேனுடுகொன்றைசடைக்கணிந்தசிவபெருமான்
ஊனாடிநாடிவந்துள்புகுந்தானுலகர்முன்னே
நானாடியாடிநின்றோலமிடநடம்பயிலும்
வானாடர்கோவுக்கேபூவல்லிகொய்யாமோ.

ப - ரை. தேன்ஆடுகொன்றை - தேன்பொருந்திய சொன்றை மலர்மாலையை, சடைக்கு அணிந்த - சடையின்கண் தரித்த, சிவபெருமான் - சிவபிரான், ஊன்நாடி வந்து - பலகால் மாநுடவுடம்பெடுத்து வந்து, உலகர் முன்னே - உலகத்தார்க் கெதிரில் உள்புகுந்தான் - என்மனத்திற் புகுந்தான், (ஆதலால்) நான்ஆடி ஆடிநின்று - நான் ஆடியாடி நின்று, ஓலம்இட - முறையிட, நடம்பயிலும் - நடநஞ் செய்கிற, வானுடர் கோவுக்கே - தேவர் பிரானுக்கே, பூவல்லி கொய்யாமோ—— எ - று.

க - ரை. கொன்றை மாலையைத்தரித்த சிவபெருமான் உலகத்தார்க் கெதிரில் மாநுடத் திருவுருவா யெழுந்தருளி என்மனத்திற் புகுந்தான், ஆதலால், நான் ஆடியாடி நின்று முறையிடும் வண்ணம் திருநடநஞ் செய்பவனுகிய அந்தப்பெருமான் பொருட்டு அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம். (ரு)

* எரிமூன்றுதேவர்க்கிரங்கியருள்செய்தருளிச்
சிரமூன்றறத்தன்றிருப்புருவமெரித்தருளி
உருமூன்றுமாகியுணர்வரிதாமொருவனுமே
புரமூன்றெரித்தவாபூவல்லிகொய்யாமோ. (சு)

வணங்கத்தலைவைத்துவார்கழல்வாய்வாழ்த்தவைத்
திணங்கத்தன்சிரடியார்கூட்டமும்வைத்தெம்பெருமான்
அணங்கொடணிதில்லையம்பலத்தே யாடுகின்ற
குணங்கூரப்பாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. எம்பெருமான் - எம்மிறைவன், வணங்க - தன்னை வணங்கும் பொருட்டு, தலை வைத்து - எனக்குச் சிரசை அமைத்து, வார்கழல் வாழ்த்த - தன் பெரிய திருவடியைத் துதிக்கும் பொருட்டு, வாய் வைத்து - எனக்கு வாயை அமைத்து, இணங்க - அடியேன் சினேகிக்கும் பொருட்டு, தன் சீர் அடியார் கூட்டமும் வைத்து - தன் சிறப்பமைந்த அடியார் குழாத்தையும் அமைத்து, அணங்கொடு - அழகோடு, அணி தில்லை அம்பலத்தே ஆடுகின்ற - அழகாகிய தில்லை யம்பலத்தில் நடநம் பண்ணுகின்ற, குணம் - கல்யாண குணத்தை, கூரப்பாடி - மிகுதியாகப் பாடி, நாம் பூவல்லி கொய்யாமோ—— எ - று.

க - ரை. இறைவன் தன்னை வணங்கும் பொருட்டுத் தலையை அமைத்து, வாழ்த்துதற்கு வாயைஅமைத்து, அடியேன் கூடி

* இச்செய்யுட்குப் பொருள் நன்கு விளங்கவில்லை.

யிருக்கத் தன்னடியார் கூட்டத்தையும் அமைத்து, அம்பலத்தில் அழகாக நடிக்கின்ற பெருங் குணத்தைப் பாடி நாம் அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம். (எ)

நெறிசெய்தருளித்தன்சீரடியார்பொன்னடிக்கே
குறிசெய்துகொண்டென்னையாண்டபிரான்குணம்பரவி
முறிசெய்துநம்மைமுழுதுடற்றும்பழவினையைக்
கிறிசெய்தவாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. நெறிசெய்தருளி - எனக்கு நல்வழியை யுண்டாக்கி யருளி, தன் சீர் அடியார் பொன்னடிக்கே - தன் சிறப்பையுடைய அடியார்களுடைய பொன்னடிகளுக்கே, குறிசெய்துகொண்டு - இலக்காக்கிக்கொண்டு, என்னை ஆண்டபிரான் - என்னை யாண்டருளின இறைவனது, குணம் பரவி - மங்கள குணங்களைப் புகழ்ந்து, நம்மை முழுது முறிசெய்து - எம்மை முழுமையும் அடிமையாக்கி, உடற்றும் - வருத்துகின்ற, பழவினையை - பழவினைகளை, கிறிசெய்த ஆறு - பொய்யாக்கின விதத்தை (இல்லையாகச்செய்த விதத்தை), பாடி - புகழ்ந்துபாடி, பூவல்லி கொய்யாமோ—எ - று.

க - ரை. என்னை நன்னெறியிற் செலுத்தித் தன்னடியார் திருவடிக்கு ஆட்படுத்தி யாண்டருளின சிவபெருமானது மங்கள குணங்களைத் துதித்து, என் பழவினையை ஒழித்தருளின விதத்தைப் புகழ்ந்து அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம். (அ)

பன்னாட்பரவிப்பணிசெய்யப்பாதமலர்
என்னாகந்துன்னவைத்தபெரியோனெழிற்சுடராய்க்
கன்னாருரித்தென்னையாண்டுகொண்டான்கழலிணைகள்
பொன்னானவாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. பல்நாள் பரவி - யான் அநேகநாள் துதித்து, பணிசெய்ய - பணிவிடை செய்யும்படி, பாதமலர் - தன் திருவடி மலரை, என் ஆகம் துன்னவைத்த - என் மனத்திற் பொருந்தவமைத்த, பெரியோன் - பெருமையை யுடையான், எழில் சுடர் ஆய் - அழகிய சோதியாகி, (முற்பட) கல்நார் உரித்து - கல்லில் நார் உரித்து, என்னை ஆண்டுகொண்டான் - (பிறகு) என்னை யாட்கொண்டருளினவனுடைய, கழலிணைகள் - இரண்டு திருவடிகள், பொன் ஆன ஆறுபாடி - அழகினவா யிருந்த விதத்தைப் புகழ்ந்து பாடி, பூவல்லிகொய்யாமோ,—எ - று.

க - ரை. எந்நாளும் துதித்துப் பணிவிடை செய்யும் வண்ணம் தன் திருவடித் தாமரையை என் மனத்திற் பொருந்தவைத்த பெரியோனாகிய சிவபெருமான் என் கல்லை நிகர்த்த மனத்தைக் குழைத்து, என்னை யாண்டருளினான் ஆதலால், அவனது பொன்போலும் அழகமைந்த திருவடியைப் புகழ்ந்துபாடி அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம்.

வி - ரை. "கல்நார் உரித்து என்னை யாண்டுகொண்டான்" என்றமையால் கல்லினும் நான் வலியன் என்றதாயிற்று. இதனை "கன்னா ருரித்தென்ன" என்னும் திருத்தெள்ளேணம் - கூ -ம் செய்யுளிலுங் காண்க. பொன்னான வா என்பதற்கு பொன் போல அரியனவா யிருந்தவாறு எனினுமாம். (கூ)

பேராசையாமிந்தப்பிண்டமறப்பெருந்துறையான்
சீரார்திருவடியென்றலைமேல்வைத்தபிரான்
காரார்கடனஞ்சையுண்டுகந்தகாபாலி
போரார்புரம்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. பேராசைஆம் - பேராசையா லுண்டாகிய, இந்தப் பிண்டம் அற - இந்த வுடம்பின் தொடர்பு அற்றுப்போம்படி, பெருந்துறையான் - திருப்பெருந் துறையை யுடையானும், சீர் ஆர் திருவடி - சிறப்பமைந்த திருவடியை, என் தலைமேல் வைத்த பிரான் - என்சிரசின்மேல் வைத்த பெருமானும், கார் ஆர் - கருமை நிறைந்த, கடல் நஞ்சை உண்டு உகந்த - பாற்கடலிற் றோன்றிய நஞ்சை யுண்டு மகிழ்ந்த, காபாலி - காபாலியும் ஆகிய சிவபெருமானது, போர் ஆர் புரம்பாடி - போர்க்கிலக்கா யிருந்த முப்புரத்தின் வரலாற்றைப் பாடி, பூவல்லி கொய்யாமோ—— எ - று.

க - ரை. மிகுந்த ஆசையா லுண்டாகிய இந்தச் சரீரத்தின் தொடர்பு அற்றொழியும்படி என்றலையில் தன் திருவடியை வைத்தருளின சிவபெருமான் முப்புரத்தை யழித்த செய்தியைப் புகழ்ந்துபாடி அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம்.

வி - ரை. "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும் - தவாவுப்பிறப்பீனும் வித்து" என்றபடி, பிறப்புக்குக் காரணம் அவாவாதலால், பேராசையாமிந்தப் பிண்டமற எனக்காரண காரிய முறைப்படி கூறினார். கார் ஆர் நஞ்சை என இயையும். (கo)

பாலுமமுதமுந்தேனுடனும்பராபரமாய்க்
கோலங்குளிர்ந்துள்ளங்கொண்டபிரான்குரைகழல்கள்
ஞாலம்பரவுவார்நன்னெறியாமந்நெறியே
போலும்புகழ்பாடிப்பூவல்லிகொய்யாமோ

ப - ரை. பாலும் அமுதமும் தேனுடன் ஆம்பராபரமாய் - பாலையும் அமிர்தத்தையும் தேனையும் ஒத்த பராபரப் பொருளாகி, கோலம் குளிர்ந்து - குளிர்ச்சியாகிய திருவுருக்கொண்டுவந்து, உள்ளம்கொண்டபிரான் - என்மனத்தைக் கவர்ந்துகொண்ட இறைவனது, குரைகழல்கள் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளை, ஞாலம் - உலகத்தில், பரவுவார் - வழிபடுவோர்களுடைய, நல்நெறிஆம் - நல்வழியாகிய, அந்நெறியே போலும் - அவ்வழியையே நிகர்ப்பதாகிய, புகழ்பாடி - இறைவனது புகழைக் கீர்த்தித்து, பூவல்லி கொய்யாமோ——எ - று.

க - ரை. பால் அமுதம் தேன் என்பவைபோல இனித்து சாந்தமூர்த்தியாய் வந்து என்மனத்தைக் கவர்ந்துகொண்ட சிவபெருமானது புகழைப்பாடி அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம். (கக)

வானவன்மாலயன்மற்றுமுள்ளதேவர்கட்கும்
கோனவனாய்நின்றுகூடலிலாக்குணக்குறியோன்
ஆனநெடுங்கடலாலாலமமுதுசெய்யப்
போனகமானவாபூவல்லிகொய்யாமோ.

ப - ரை. வானவன் - இந்திரன், மால் - திருமால், அயன் - பிரமன், மற்றுமுள்ள தேவர்கட்கும் - மற்றுமுண்டாகிய தேவர்கள் ஆகிய எல்லார்க்கும், கோனவனாய் நின்று-அரசனாயிருந்தும், கூடல் இல்லா - ஒருவருஞ் சென்றணுக வொண்ணாத, குணக்குறியோன் - குணங்குறிகளை யுடையவன், நெடுங்கடல் ஆன - நெடியபாற் கடலிலுண்டாகிய, ஆலாலம் - ஆலாஹலவிஷத்தை, அமுதுசெய்ய - திருவமுது செய்யவே, (அது) போனகம் ஆன ஆறு - உணவாயினவாறென்ன வியப்பு, பூவல்லி கொய்யாமோ——எ - று.

க - ரை. இந்திரன் முதலிய தேவர்களுக்கெல்லாம் இறைவனாயிருந்தும், ஒருவரும் சென்று சேர்தற்கரிதாகிய குணங்குறிகளை யுடையவனாகிய சிவபெருமான் நெடிய பாற்கடலி லுண்டான நஞ்சைப் பருக, அது உணவான விதத்தை வியந்து அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம். (கஉ)

அன்றாலநீழற்கீழருமறைகடானருளி
நன்றாகவானவர்மாமுனிவர்நாடோறும்
நின்றாரவேத்துநிறைகழலோன்புனைகொன்றைப்
பொன்றாதுபாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. அன்று - அக்காலத்தில், ஆலநிழல் கீழ் - கல்லாலின் நிழலின் எழுந்தருளி, அருமறைகள் அருளி - அருமையாகிய வேதப் பொருள்களை யருளிச்செய்து, நன்றாக - செம்மையாக, வானவர் - தேவர்களும், மாமுனிவர் - பெரிய முனிவர்களும், நாள்தோறும் நின்று - தினந்தோறும் நிலைத்திருந்து, ஆர ஏத்தும் - வாயாரத் துதிக்கும்படியான, நிறைகழலோன் - நிறைகழலை யணிந்த திருவடிகளை யுடையோன், புனை - அணிந்த, கொன்றைப் பொன் தாது பாடி - கொன்றைப்பூவின் பொற்பராகத்தைப் புகழ்ந்துபாடி, நாம் பூவல்லி கொய்யாமோ——எ - று.

க. ரை. அக்காலில் கல்லால நிழலின் எழுந்தருளி, வேதப் பொருளை யருள்செய்து, தேவர்களும் முனிவர்களும் எப்பொழுதும் நின்று வாயாரத் தோத்திரம் பண்ணுகின்ற சிவபெருமான் அணிந்த கொன்றை மலரின் பொன்போலும் பராகத்தைப் புகழ்ந்துபாடி அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம்.

வி - ரை. ஆலநிழற்கீழ் என்றாயினும் மேல் அருமறைகள் அருளி என்றமையால் சனகாதியர்க்கு உபதேசித்தருளின கல்லால நிழல் எனப் பொருள் கூறலாயிற்று. (க௫)

படமாகவென்னுள்ளேதன்னிணைப்போதவையளித்திங்
கிடமாகக்கொண்டிருந்தேகம்பமேயபிரான்
தடமார்மதிற்றில்லையம்பலமேதானிடமா
நடமாடுமாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. என் உள்ளே - என்மனமே, படம்ஆக - எழுதுபடமாக, தன் இணைப்போது அவை அளித்து - தன்னிரண்டு சிறந்த மலர்களைப் பதியவைத்து, இங்கு இடம் ஆகக்கொண்டிருந்து - இவ்விடத்தை யிடமாகக் கொண்டிருந்தும், ஏகம்பம் மேயபிரான் - திருவேகம்பத்திலும் பொருந்தியிருந்த பெருமான், தடம் ஆர் - விசாலம் பொருந்திய, மதில் - மதில்சூழ்ந்த, தில்லை அம்பலமே இடம் ஆ - தில்லையம்பலத்தையே யிடமாகக்கொண்டு, நடம் ஆடும் ஆ பாடி - நடனஞ் செய்யும் பிரகாரத்தைப்பாடி, பூவல்லி கொய்யாமோ——எ - று.

க - ரை. இடபவாகநனுகிய சிவபெருமான், சிவபுரத்தார்க்குத் தலைவன், அவன் மதுரைப் பதியி லெழுந்தருளிப் பிட்டமுது செய்தருளி, பாண்டியனது பிரம்படியேற்ற வரலாற்றைப் புகழ்ந்து பாடி நாம் அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம்.

வி - ரை. பாண்டியன் தன்னைப் பணிகொண்ட புண்ணின் வரலாற்றைத் திருவாதவூரடிகள் புராணம்-மண்சுமந்தசருக்கத்தில் கண்டுகொள்க. (கசு)

முன்னாயமாலயனும்வானவருந்தானவரும்
பொன்னார்திருவடிதாமறியார்போற்றுவதே
என்னாகமுள்புகுந்தாண்டுகொண்டானிலங்கணியாம்
பன்னாகம்பாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. முன்ஆய - (தேவர்களுக்குள்) முன்னவாகளாகிய, மால் அயனும் - திருமாலும் பிரமனும், வானவரும் - தேவர்களும், தானவரும் - அவுணரும், பொன் - பொன்போலும், ஆர் - அரிய, திருவடி - திருவடியை, தாம் அறியார் - தாம் அறியமாட்டார்கள், (அப்படியிருக்க) போற்றுவதே-அது எம்மால் வணங்கப்படுவதோ, என் ஆகம் உள்புகுந்து ஆண்டுகொண்டான்-என்மனத்தினுள்ளே புகுந்து என்னை யாண்டுகொண்டவனது, இலங்குஅணிஆம் - பிரகாசியா நின்ற ஆபரணமாகிய, பல்நாகம் பாடி - பல நாகங்களைப் புகழ்ந்துபாடி, நாம் பூவல்லி கொய்யாமோ—எ - று.

க - ரை. திருமால் முதலியோர் இறைவனது பொன்போலும் திருவடியை யறியார், அப்படியிருக்க, அந்தத் திருவடியை யான் வணங்குதல் கூடுமோ, கூடாது, ஆயினும் என்மனம் புகுந்து என்னை யாட்கொண்ட அவனது நாகாபரணத்தைப் புகழ்ந்து அல்லி மலர்களைப் பறிப்போம் என்பதாம். (கஎ)

சீரார்திருவடித்திண்சிலம்புசிலம்பொலிக்கே
ஆராதவாசையதாயடியேனகமகிழத்
தேரார்ந்தவீதிப்பெருந்துறையான்றிருநடஞ்செய்
பேரானந்தம்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

ப - ரை. சீர்ஆர் - சிறப்புப் பொருந்திய, திருவடி - திருவடிமேலணிந்த, திண்சிலம்பு - திடமான சிலம்புகள், சிலம்பு ஒலிக்கே - ஒலிக்கின்ற ஒலிக்கே, ஆராத ஆசையதாய் - வெறுக்காத ஆசைகொண்டு, அடியேன் - அடிமையாகிய நான், அகம்மகிழ - மன மகிழுமாறு, தேர்ஆர்ந்த வீதி - தேரோடுகிற தெருக்களோடு

கூடிய, பெருந்துறையான் - திருப்பெருந் துறையை யுடையவன் திருநடம்செய் - திருநடனம் பண்ணுவதனு லுண்டாகிற, பேரானந்தம்பாடி - பேரின்பத்தைப் புகழ்ந்து பாடி, பூவல்லிகொய்யாமோ——எ - று.

க - ரை. இறைவன் தன் திருவடிமே லணிந்த சிலம்பொலிக்கே அடியேன் மனங் களிக்கும்படி திருநடனம் செய்வதனு லுண்டாகின்ற பேரின்பத்தைப் புகழ்ந்துபாடி அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம். (கஅ)

அத்தியுரித்ததுபோர்த்தருளும்பெருந்துறையான்
பித்தவடிவுகொண்டிவ்வுலகிற்பிள்ளையுமாம்
முத்திமுழுமுதலுத்தரகோசமங்கைவள்ளல்
புத்திபுகுந்தவாபூவல்லிகொய்யாமோ.

ப - ரை. அத்தி உரித்து - யானையை யுரித்து, அது போர்த்தருளும்-அந்தத் தோலைப்போர்த்தருளிய,பெருந்துறையான்-திருப்பெருந் துறையை யுடையான், பித்தவடிவுகொண்டு - பித்த வேடங்கொண்டு, இவ்வுலகில் பிள்ளையும்ஆம் - இந்த லோகத்தில் சிலர்க்குப் பிள்ளையுமாகிய, முத்தி முழுமுதல் - முத்தி முழுமுதற் பொருள், உத்தரகோசமங்கை வள்ளல் - திருவுத்தரகோச மங்கையில் எழுந்தருளி யிருக்கிற உதாரசீலன், (அவன்) புத்தி புகுந்த ஆறு - என் மனத்துட் புகுந்த பிரகாரத்தைப் புகழ்ந்து, பூவல்லிகொய்யாமோ——எ - று.

க - ரை யானையை யுரித்து அத்தோலைப் போர்த்தருளின திருப்பெருந் துறையான், பித்த வருக்கொண்டு இவ்வுலகில் சிலர்குப் பிள்ளையுமாகிய முத்தி முதல்வன், திருவுத்தரகோச மங்கையில் எழுந்தருளியிருக்கிற வள்ளல், அவன் என் மனம் புகுந்த பிரகாரத்தைப் புகழ்ந்து அல்லிமலர்களைப் பறிப்போம் என்பதாம்.

வி - ரை. அத்தி - ஹஸ்தி என்னும் வடமொழித் திரிபு. இவ்வுலகில் பிள்ளையுமாம் என்றது இவ்வுலகில் தன்னைப் புதல்வனுகப்பெற விரும்பி வரங்கிடந்தார் சிலர்க்கு இறைவன் புதல்வன் போல வந்து நடித்தமை-அவற்றுள் ஒன்று வருமாறு:—இறைவன் திருவிடை மருதூர் நந்தவனத்தில் வில்வ மரத்தடியில் திருவவதாரஞ் செய்து, மருதவாணர் என்னும் திருநாமம் பூண்டு திருவெண்காடர் என்னும் பட்டணத்தடிகளுக்குப் புத்திரனுய் நடித்தமை. (கக)

# திருவுந்தியார்.

ஞானவெற்றி.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கலித்தாழிசை.

வளைந்ததுவில்லுவிளைந்ததுபூசல்
உளைந்தனமுப்புரமுந்தீபற
ஒருங்குடன்வெந்தவாறுந்தீபற.

ப - ரை. வில்லு வளைந்தது - (இறைவனது மேருமலையாகிய) வில்லானது வளர்ந்தது, பூசல் விளைந்தது - போர் மூண்டது, முப்புரம் உளைந்தன - திரிபுரங்கள் வருந்தின, உடன் - தக்ஷணமே, (அவை) ஒருங்கு வெந்தவாறு - ஒருமிக்க வெந்து நீறானவாறு என்ன வியப்பு, உந்தீபற——எ - று.

க - ரை. இறைவனது வில் வளைந்தது, வளைதலும் போர் மூண்டது, மூளுதலும் முப்புரங்களும் ஒருமிக்க வெந்து நீறாயின, அந்தத் திரிபுரதகனச் செய்தியை நினைத்தால் வியக்கத்தக்கதாயிருக்கின்றது என்பதாம்.

வி - ரை. மலை வளைந்தது ஓர் வியப்பாமென்பது தோன்ற "வளைந்தது வில்லு" என்றார். வில் வில்லு என உகரச்சாரியை பெற்றது. புரம் மூன்றாதலால் உளைந்தன எனப் பன்மையாற் கூறினார். உந்திபறத்தல் - மகளிர் விளையாட்டினொன்று. (க)

ஈரம்புகண்டிலமேகம்பர்தங்கையில்
ஓரம்பேமுப்புரமுந்தீபற
ஒன்றும்பெருமிகையுந்தீபற.

ப - ரை. ஏகம்பர் தம் கையில் - திருவேகம்ப முடையார் திருக்கரத்தில், ஈர் அம்பு கண்டிலம் - இரண்டுபாணங்க ளிருக்கப் பார்த்திலேம், (மற்றென்னெனின்) முப்புரம் ஓரம்பே - திரிபுர தகனத்துக்குக் காரணமாயிருந்தது ஒரு பாணமே, ஒன்றும்-(அந்த) ஒரு பாணமும், பெருமிகை - மிகவும் அதிகம், உந்தீபற,——எ - று.

க - ரை. இறைவர் திருக்கரத்தில் இரண்டு அம்பிருக்கக் கண்டிலேம், கண்டது ஓரம்பே, அந்த ஒரு அம்பும் திரிபுரதகனத்துக்கு அதிகமேயாயிற்று என்பதாம்.

வி - ரை. மூன்றன்றிப் பல புரங்களையும் எரித்தற் குரியது என்பதை விளக்குதற்கு "ஒன்றும் பெருமிகை" என்றார். "ஒருங்கடமூ வெயிலொற்றைக் கணைகொள் சிற்றம்பலவன்" என்பது திருக்கோவையார். "முன்னு மாடம் மதின்மூன் றுடனே யெரியாய் விழத், துன்னுவார் வெங்கணை யொன் று செலுத்திய சோதியான்" என்பது முத்தமிழ்விரகர் தேவாரம். (உ)

தச்சுவிடுத்தலுந்தாமடியிட்டலும்
அச்சுமுறிந்ததென் றுந்தீபற
அழிந்தனமுப்புரமுந்தீபற.

ப-ரை. தச்சுவிடுத்தலும்-தச்சவேலை கழலுதலும், தாம் அடியிட்டலும் - தாம் அடிவைத்தலும், அச்சுமுறிந்தது என்று - தேரினது அச்சு முறிந்தது என்று, உந்தீபற——,முப்புரம் அழிந்தன என்று - திரிபுரங்களும் அழிந்தன என்று, உந்தீபற——,எ - று.

க - ரை. தச்சவேலை நெகிழ்தலும்,இறைவன் திருவடிவைத்தேறுதலும், தேரினது அச்சுமுறிந்தது, முப்புரம் அழிந்தன என்பதாம்.

வி - ரை. தச்சு - தச்சவேலை, அடியிடல் என்பது அடியிட்டல் என டகரம் இரட்டித்தது. தச்சுவிட்டு, அச்சுமுறிதலும் சாரதியாகிய பிரமன் விநாயகபூசை செய்து தேரை நடத்தினன்.

உய்யவல்லாரொருமூவரைக்காவல்கொண்
டெய்யவல்லானுக்கேயுந்தீபற
இளமுலைபங்கனென் றுந்தீபற.

ப - ரை. உய்யவல்லார் ஒருமூவரை காவல்கொண்டு-பிழைக்கவல்லவராயிருந்த ஒருமூவரையும் தன் கோயில்வாயிலில் காவலராகச் செய்து, எய்ய வல்லானுக்கே-அம்பு எய்ய வல்லவனுக்கே, உந்தீபற——இளமுலை பங்கன் என்று - (அவன்) இளமுலைகளையுடைய உமாதேவியை ஒருபாகத்திலுள்ளவன் என்று, உந்தீபற——,எ - று.

க-ரை. பிழைக்க வல்லவராயிருந்த மூவரையும் கயிலைக்குத் துவாரபாலகராகச்செய்து முப்புரத்தை அம்பேவி யெரிக்க வல்லவனாகிய உமாதேவி பாகனைக் குறித்து உந்தீபற என்பதாம்.

வி - ரை. ஒருமூவர் என்றது திரிபுரதகந காலத்தில் பிழைக்க வல்லவராயிருந்த வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூன்றசுரர்களை. எல்லாம் அழிதற்குரிய திரிபுரதகந காலத்தில் இறைவனை வணங்கி பிழைக்க வல்லவராயிருந்தது ஓர் வன்மை யென்பது தோன்ற "உய்ய வல்லாரொரு மூவர்" என்றார். (௪)

சாடியவேள்விசரிந்திடத்தேவர்கள்
ஓடியவாபாடியுந்தீபற
உருத்திரநாதனுக்குந்தீபற.

ப - ரை. சாடியவேள்வி சரிந்திட - வீரபத்திரனால் சாடப்பட்டவேள்வியானது கலங்கிட, தேவர்கள் ஓடிய ஆறுபாடி உந்தீபற-தேவர்கள் ஓடினவிதத்தைச் சொல்லி உந்தீபற, உருத்திர நாதனுக்கு உந்தீபற - ருத்ரமூர்த்தியாகிய இறைவன் பொருட்டு உந்தீபற,——எ - று.

க - ரை. தக்கனது யாகம் குலைதலும் தேவர்கள் ஓடினவிதத்தைப் பாடி உந்தீபற, உருத்திரமூர்த்தியாகிய இறைவன் பொருட்டு உந்தீபற என்பதாம். (௫)

ஆவாதிருமாலவிப்பாகங்கொண்டன்று
சாவாதிருந்தானென் றுந்தீபற
சதுர்முகன்றாதையென் றுந்தீபற.

ப - ரை. ஆவா - அந்தோ, திருமால் - திருமாலானவன், அவிப்பாகம்கொண்டு - அவிர்ப்பாகத்தை யேற்று, அன்று - அப்பொழுதே, சாவாதிருந்தான் என்று உந்தீபற-இறவாது மூர்ச்சித்திருந்தானென்று உந்தீபற, (அத்திருமால் யாவன் எனின்) சதுர்முகன் தாதையென்று உந்தீபற-நான்முகன் தந்தையென்று உந்தீபற,——எ - று.

க - ரை. திருமால் அவிர்ப்பாகங்கொண்டு அன்று இறவாது மூர்ச்சித்திருந்தானென்று உந்தீபற, அத்திருமால் யாரெனின், பிரமனுக்குத் தந்தை யென்று உநதீபற என்பதாம்.

வி - ரை. ஆவா - இரக்கக்குறிப்பு. அவி - தேவருணவு. பாகம் - பங்கு. எல்லாரும் இறக்கத்திருமால் இறவாதிருந்தமை வியப்பென்றற்கு "ஆவாதிருமா லவிப்பாகங்கொண்டன்று சாவாதிருந்தான்" என்றார். (௬)

வெய்யவனங்கிவிழுங்கத்திரட்டிய
கையைத்தறித்தானென்றுந்தீபற
கலங்கிற்றுவேள்வியென்றுந்தீபற.

ப - ரை. வெய்யவன் - கொடியவனாகிய, அங்கி - அக்கினி தேவன், விழுங்கத் திரட்டிய கையை - அவிப்பாகத்தை விழுங்கும்பொருட்டு வளைத்த கரத்தை, தறித்தான் என்று உந்தீபற - வெட்டினான் என்று உந்தீபற, வேள்வி கலங்கிற்று என்று உந்தீபற - யாகம் கலக்க மடைந்ததென்று உந்தீபற,——எ - று.

க - ரை. கொடியவனாகிய அக்கினிதேவன் அவியுண்ண வளைத் தகையை வெட்டினான் என்று உந்திபற, வெட்டுதலும் யாகம் கலங்கிற்றென்று உந்திபற என்பதாம். (எ)

பார்ப்பதியைப்பகைசாற்றிய தக்கனைப்
பார்ப்பதென்னேயேடியுந்தீபற
பணைமுலைபாகனுக்குந்தீபற.

ப - ரை. பார்ப்பதியை - பார்வதிதேவியை, பகைசாற்றிய-பகைத்துப் பேசின, தக்கனை - தக்ஷனை, பார்ப்பதுஎன் - மாமன் என்று கண்ணோட்டஞ் செய்து உயிரோடு வைத்துப் பார்ப்பதனால் என்ன பயன், (ஒன்றுமில்லை) (யாருக்கெனின்) பணைமுலை பாகனுக்கு - பருமையாகிய தனங்களையுடைய உமாதேவி பங்கனுக்கு, உந்தீபற——,எ - று.

க - ரை. பார்வதி தேவியைப் பகைத்துப் பேசின தக்கனை உயிரோடு வைத்துப் பார்ப்பதனால் சிவபெருமானுக்கு என்ன பயன் என்று உந்தீபற என்பதாம்.

வி - ரை. பார்ப்பதியைப் பகைசாற்றியதாவது-தக்கன் கயிலைக்குச் சென்றபோது அவமானஞ் செய்து நந்திதேவர் முதலானோரால் தடுக்கப்பட்டதற்குச் சீறி, தன் யாகத்துக்கு வந்த இறைவியைப் பலவாறு நிந்தித்தது. பார்ப்பதி பார்வதி யென்னும் வடமொழித்திரிபு, மலைமகள் என்பதுபொருள். (அ)

புரந்தரனாரொருபூங்குயிலாகி
மரந்தனிலேறினாருந்தீபற
வானவர்கோனென்றேயுந்தீபற.

ப - ரை. புரந்தரனார் - தேவேந்திரன், ஒரு பூகுயில் ஆகி - ஒரு அழகிய குயில் வடிவுகொண்டு, மரந்தனில் ஏறினார் - மரத்

தின்மீதேறினர், (அவர் யாரெனின்) வானவர்கோன் என்று உந்தீ பற - தேவர்களுக் கரசன் என்று உந்தீபற,——எ - று.

க - ரை, இந்திரன் ஒரு குயிலுருக்கொண்டு ஒரு மரத்தி லேறினார், அவன் தேவர்களுக்கரசன் என்று உந்திபற என்பதாம்.

வி - ரை. புரந்தரன் குயிலாகி மரத்திலேறின செய்தி, தக்கன் யாகத்தை வீரபத்திரன் அழித்து அங்கு வந்திருந்த தேவர்களைத் தண்டித்தபோது நிகழ்ந்தது. (கூ)

வெஞ்சினவேள்வியாத்திரனார்தலை
துஞ்சினவாபாடியுந்தீபற
தொடர்ந்தபிறப்பறவுந்தீபற.

ப - ரை. வெஞ்சினம் - வெவ்விய கோபத்தையுடைய, வேள்வி வியாத்திரனார் தலை-யாகத்துக் கதிதேவதையாகிய எச்சன் என்பவரது சிரசானது,துஞ்சின ஆறுபாடி உந்தீபற-அழிந்த விதத்தைப்பாடி உந்தீபற, தொடர்ந்த பிறப்பு அற உந்தீபற-நம்மைத் தொடர்ந்த பிறவிகளற்றொழியும்படி உந்தீபற,——எ - று.

க - ரை. கடுஞ்சினத்தையுடைய யாகத்துக் கதிதேவதையின் தலையற்ற விதத்தை, நமது பிறவித்தொடர் அற்றொழியும் வண்ணம் பாடி உந்தீபற என்பதாம். (கo)

ஆட்டின்றலையைவிதிக்குத்தலையாகக்
கூட்டியவாபாடியுந்தீபற
கொங்கைகுலுங்கநின்றுந்தீபற.

ப - ரை. ஆட்டின் தலையை - ஆட்டினது சிரசை, விதிக்குத்தலையாக - தக்ஷப்ரஜாபதிக்குச் சிரசாக, கூட்டிய ஆறுபாடி உந்தீபற - பொருத்தின விதத்தைப்பாடி உந்தீபற, கொங்கை குலுங்க நின்று உந்தீபற-தநங்கள் குலுங்கும்படி நின்று உந்தீபற, எ - று.

க - ரை. சிறுவிதியின் தலையற்றுப்போக அதற்குப் பிரதியாக ஆட்டின் தலையைப் பொருத்தின விதத்தைப்பாடித் தனங் குலுங்க நின்று உந்தீபற என்பதாம். (கக)

உண்ணப்புகுந்தபகனொளித்தோடாமே
கண்ணைப்பறித்தவாறுந்தீபற
கருக்கெடநாமெலாமுந்தீபற.

ப - ரை. உண்ணப்புகுந்த - அவிர்ப்பாகத்தை யுண்ணவந்த, பகன் - பகன் என்னும் சூரியன், ஒளித்து ஓடாமே - மறைந்து



ஓடாதவகை, கண்ணைப்பறித்த ஆறு - அவனது கண்ணைப் பிடுங்கினவிதம் என்ன வியப்பு, நாம் எல்லாம் - நாமெல்லாரும், கருக்கெட - பிறவிநசிக்கும் பொருட்டு, உந்தீபற——,எ - று.

க - ரை. நமது பிறவியொழியும் வண்ணம், அவிர்ப்பாகத்தை யுண்ணவந்த பகனது கண்ணை அவன் ஓடாமற் பறித்த விதத்தைப்பாடி உந்தீபற என்பதாம்.

வி - ரை. உண்ணவென்பதற்கு அவிர்ப்பாகத்தை யுண்ண என இவ்விடத்துக்கேற்ப உரை கூறலாயிற்று. பகன் - பன்னிரு சூரியரில் ஒருவன். (கஉ)

நாமகணாசிசிரம்பிரமன்படச்
சோமன்முகனெரித்துந்தீபற
தொல்லைவினைகெடவுந்தீபற.

ப - ரை. நாமகள் நாசிபட - சரசுவதி மூக்கற்று விழவும், பிரமன் சிரம்பட - பிரமன்சிரசு அற்றுவிழவும், சோமன் முகன் நெரித்து - சந்திரன் முகத்தைத் தேய்த்து அழித்ததைக் குறித்து, உந்தீபற——,தொல்லைவினைகெட-நமது பழவினையானது நசிக்கும்படி, உந்தீபற——,எ - று.

க - ரை. நமது பழவினை யொழிய, சரசுவதியின் மூக்கும் பிரமன் சிரமும் அற்றுவிழச் செய்து, சந்திரனைத் தேய்த்து, யாகபங்கம் பண்ணின செய்தியைக் குறித்துப் பாடி உந்திபற என்பதாம். (கங)

நான்மறையோனுமகத்தியமான்படப்
போம்வழிதேடுமாறுந்தீபற
புரந்தரன்வேள்வியிலுந்தீபற.

ப - ரை. நான்மறையோனும்-பிரமனும், மகத்து இயமான் பட - யாகாதிபனும் பட்டு வீழவே, வேள்வியில் - யாகத்தில், புரந்தரன் - இந்திரன், போம்வழி தேடும்ஆறு - போகும் நெறியைத் தேடும் விதத்தைக் குறித்து, உந்தீபற——,எ - று.

க - ரை. பிரமனும் யாகாதிபனாகிய தக்கனும் இறந்து வீழ்தலும் இந்திரன் ஓடிப்போம் வழியைத் தேடுகிறவிதத்தைக் குறித்து உந்தீபற என்பதாம்.

வி - ரை. இயமான் என்பது யசமானன், எசமானன், எசமான் என வழங்கும். (கச)

சூரியனார்தொண்டைவாயினிற்பற்களை
வாரிநெரித்தவாறுந்தீபற
மயங்கிற்றுவேள்வியென்றுந்தீபற.

ப - ரை. சூரியனார் - சூரியனது, தொண்டை வாயினில் - செவந்த வாயிலுள்ள, பற்களை வாரி நெரித்த ஆறு - பற்களைவாரி நெரித்த விதத்தைக் குறித்து, உந்தீபற——, வேள்வி மயங்கிற்று என்று - யாகம் கலக்கமடைந்த தென்று, உந்தீபற——எ - று.

க - ரை. சூரியனது பற்களைத் தகர்த்த விதத்தைக் குறித்தும், வேள்வி கலக்கமடைந்ததைக் குறித்தும் உந்தீபற என்பதாம்.

வி - ரை. சூரியனார் என்றது இழிவுதோன்ற நின்றது. தொண்டை-கொவ்வைக்கனி, ஆதொண்டங்கனி. இங்கு செம்மை நிறத்துக் காயிற்று. தொண்டைவாய் - தொண்டையோடு கூடியவாய் எனினுமாம். (கரு)

தக்கனாரன்றே தலையிழந்தார் தக்கன்
மக்களைச்சூழநின்றுந்தீபற
மடிந்ததுவேள்வியென்றுந்தீபற.

ப - ரை. தக்கன் மக்களைச் சூழ நின்று - தக்கன் தன் மக்களால் சூழப்பட்டிருந்தும், தக்கனார் - தக்ஷப்ரஜாபதியானவர், அன்றே - அப்பொழுதே, தலை யிழந்தார் - சிரசை யிழந்து விட்டார், வேள்வி மடிந்தது என்று - யாகம் அழிந்தது என்று, உந்தீபற,——எ - று.

தக்கன் தன் மக்களால் சூழப்பட்டிருந்தும் தலை யிழக்கப் பெற்றானென்றும் வேள்வி யழிந்த தென்றும் உந்தீபற என்பதாம்.

வி - ரை. மக்களால் சூழ்ந்து காக்கப்பட்டிருந்தும் அழிந்தான் என்பதை யுணர்த்துதலால் தக்கனார் என்றது இழிவின்கண் வந்தது. மக்களை யென்றது மூன்றுவதன் பொருளில் வந்தது. மக்கள் வேள்வியைக் காக்கவல்லரல்லர் என்றற்கு "தக்கன் மக்களைச் சூழநின்று வேள்வி மடிந்தது" என்றார். (கசு)

பாலகனார்க்கன்றுபாற்கடலீந்திட்ட
கோலச்சடையற்கேயுந்தீபற
குமரன்றன்றாதைக்கேயுந்தீபற.

ப - ரை. அன்று - அக்காலத்தில், பாலகனார்க்கு - முனி புத்ரனுக்கு, பால்கடல் ஈந்திட்ட - பாற்கடலைக் கொடுத்தருளின, கோலச்சடையற்கே - அழகிய சடையையுடையவன் பொருட்டே, உந்தீபற,—குமரன் தன் தாதைக்கே உந்தீபற - முருகவேள் தந்தையின் பொருட்டே உந்தீபற,——எ - று.

க - ரை. முன்னாளில் ஒரு பாலகனுக்குப் பாற்கடலைத் தந்தருளின சிவபெருமான் பொருட்டு உந்தீபற, குமரவேள் தந்தையின் பொருட்டு உந்தீபற என்பதாம்.

பாலகனார்க்குப் பாற்கடலீந்த வரலாறு:—வசிட்ட ராச்சிரமத்தில் காமதேனுவின் பாலைக் குறைவற உண்டு வளர்ந்துவந்த உபமந்யுவாகிய குழந்தையைப் பிதாவாகிய கௌதமர் சிதம்பரத்திலுள்ள தமதாச்சிரமத்திற் கொண்டுவந்து வளர்க்கையில் ஓர்நாள் அக்குழந்தை பசியால் பாலுக்கழுதபோது அதன் பசியைத் தீர்க்கும்பொருட்டுச் சிவபெருமான் திருப்பாற்கடலை அங்குவரச் செய்தனர் என்பது.

வி - ரை. பாலகனார் என்பதில் ஆர் விகுதி உயர்த்தற்கண் வந்தது. (௧௭)

நல்லமலரின்மேனான்முகனார்தலை
ஒல்லையரிந்ததென் றுந்தீபற
உகிரால்ரிந்ததென் றுந்தீபற.

ப - ரை. நல்ல மலரின் மேல் - அழகிய தாமரைமலரின் மேலுள்ள, நான் முகனார் தலை - பிரமதேவரது சிரசு, ஒல்லை அரிந்தது என்று உந்தீபற - விரைவாயரியப்பட்டது என்று உந்தீபற, (அது சிவபெருமானது) உகிரால் அரிந்தது என்று - நகத்தினால் அரியப்பட்டதென்று, உந்தீபற,——எ - று.

க - ரை. பிரமனது சிரம் விரைவில் அரியப்பட்டதென்றும், அதுவும் சிவபெருமானது நகத்தால் அரியப்பட்டதென்றும் உந்தீபற என்பதாம்.

வி - ரை. நான் முகனார் என்பதில் ஆர் விகுதி இழிவின்கண் வந்தது. தாமரைமலரினுஞ் சிறந்த மலரின்மையால் அதனை "நல்லமலர்" என்றார். நான்முகனார் தலை அரிந்த வரலாறு. ௧௩௬ - ஆம் பக்கத்திற்காண்க. (௧௮)

தேரைநிறுத்திமலையெடுத்தான்சிரம்
ஈரைந்துமிற்றவா றுந்தீபற
இருபதுமிற்றதென் றுந்தீபற.

ப - ரை. தேரை நிறுத்தி - தனது ரதத்தை நிறுத்திவிட்டு, மலை எடுத்தான் - கைலாய மலையைத் தூக்கினவனாகிய ராவணனுடைய, சிரம் ஈரைந்தும் - தலைகள் பத்தும், இற்ற ஆறு - நெரிந்த விதத்தைக் குறித்து, உந்தீபற,— இருபதும் - (தோள்கள்) இருபதும், இற்றது என்று - நெரிந்த தென்று, உந்தீபற,——எ-று.

க - ரை. தன் தேரை நிறுத்திக் கயிலாய மலையைத் தூக்கின ராவணனுடைய பத்துத் தலைகளும் இருபது தோள்களும் நெரிந்த விதத்தைக் குறித்து உந்தீபற என்பதாம். (ககூ)

வி - ரை. "மலையெடுத்தான் சிரமீரைந்து" என்ற குறிப்பால் ராவணன் என்றுரைக்கலாயிற்று, சிரமீரைந்தும் என்றதை யடுத்து இருபதும் என்றமையால் அவை தோள்கள் என்பது பெறப்பட்டது.

"வாளமர்வீர நினைந்த விராவணன் மாமலையின்கீழ்த்
தோளமர்வன்றலை குன்றத் தொல்விரலூன்று துணைவர்
தாளமர்வேய் தலைப்பற்றித் தாழ்கரிவிட்ட விசைபோய்க்
காளமதார் முகில்கீறுங்கற் குடிமா மலையாரே"

"மஞ்சோங்குயர முடையான் மலையை மாறுயெடுத்தான்றோ
ளஞ்சோ டஞ்சுமாறு நான்குமடர வூன்றினார்
நஞ்சார் சுடலைப்பொடி நீறணிந்த நம்பன் வம்பாரும்
பைந்தாமரைகள் கழனி சூழ்ந்த பழனநகராரே"

"இரக்கமில் குணத்தொ டுலகெங்கு நலிவெம்போ
ரரக்கன் முடியத்தலை புயத்தொடு மடங்கத்
துரக்கவிரலிற் சிறிது வைத்தவ ரிடஞ்சீர்
வரக்கருணை யாளர் பயில்வண் டிருவையாறே"

"தண்ணா வரக்கன் றோள்சாய்த்து கந்ததாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச்சுர மமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கடம் மட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய்"

என்பன முத்தமிழ் விரகர் தேவாரம்.

"பொறித்தேரரக்கன் பொருப்பெடுப் புற்றவன் பொன்முடிதோள்
இறத்தா ளொருவிரலூன்றிட் டலறவிரங்கி யொள்வாள்
குறித்தே கொடுத்தாய் வினையேன் செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய் திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே"

என்பது வாகீசர் தேவாரம். (உ0)

# திருத்தோணோக்கம்.

பிரபஞ்சசுத்தி
தில்லையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

**நாலடித்தரவுகோச்சகக்கலிப்பா.**

பூத்தாரும்பொய்கைப்புனலிதுவேயெனக் ருதிப்
பேய்த்தேர்முகக்குறும்பேதைகுணமாகாமே
தீர்த்தாய்திகழ்தில்லையம்பலத்தேதிருநடஞ்செய்
கூத்தாவுன்சேவடிகூடும்வண்ணந்தோணோக்கம்.

ப - ரை. இது - காணப்படுகின்றஇது, பூத்து ஆரும் - மலர்கள் பூத்து நிரம்பியிருக்கிற, பொய்கைப் புனலே எனக்கருதி - தடாக நீரேயென்றெண்ணி, பேய்த்தேர் - கானலை, முகக்குறும் - முகக்கத்தொடங்குகின்ற, பேதை - அறிவிலியாகிய ஒருவனது, குணம்ஆகாமே - குணம்போன்ற குணம் எனக்குண்டாகாமல், தீர்த்தாய் - நீக்கினை, திகழ் - விளங்குகின்ற, தில்லையம்பலத்தே - தில்லையம்பலத்தின் கண்ணே, திருநடம்செய் - திருத்தாண்டவமாடுகின்ற, கூத்தா - கூத்தனே, உன் சேவடி கூடும்வண்ணம் - உன்திருவடியை யடையுமாறு, தோணோக்கம் - தோணோக்கமாடுவோம் யாம், எ - று.

க - ரை. பொய்யாகிய கானற் சலத்தை மெய்யாகிய பொய்கைச் சலமெனக்கருதி யலைகின்றபேதையர் குணத்தை யானடையாமல் என்னைத் தெளிவித்தருளினை, தில்லையம்பலத்தில் திருநடஞ் செய்கின்ற சிவபிரானே,உன் திருவடியைச் சேரும் வண்ணம் யாம் தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. தோணோக்கம் - மகளிர்விளையாட்டி லொன்று.

என்றும்பிறந்திறந்தாழாமேயாண்டுகொண்டான்
கன்றால்விளவெறிந்தான்பிரமன்காண்பரிய
குன்றாதசீர்த்தில்லையம்பலவன்குணம்பரவித்
துன்றார்குழலினீர்தோணோக்கமாடாமோ.

ப - ரை. என்றும்-எக்காலத்தும், பிறந்துஇறந்து ஆழாமே - பிறந்தும் இறந்தும் துன்பக்கடலில் அழுந்தாவண்ணம், ஆண்டு கொண்டான் - என்னை யடிமைகொண்டவன், கன்றால் விள எறிந்தான் - கன்றைக்கொண்டு விளாங்கனியை யெறிந்தவன்ஆகிய திருமாலும், பிரமன் - பிரமனும், காண்புஅரிய - காணுதல் அருமையாகிய, குன்றாதசீர்-குறையாத பெருமையையுடைய, தில்லையம்பலவன் - தில்லையம்பலத்தின் கண்ணுன், (அவனது) குணம் பரவி - மங்களகுணத்தைப் புகழ்ந்து, துன்றுஆர் குழலினீர்-நெருக்கமுள்ள கூந்தலையுடையீர், தோணோக்கம் ஆடாமோ—,எ-று.

க - ரை. எந்நாளும் யாம் பிறந்திறந் துழலாமல் எம்மையாண்டுகொண்டான் ஆதலால், திருமாலும் பிரமனும் காணவொண்ணுத தில்லையம்பலவனது மங்களகுணங்களைப் புகழ்ந்து யாம் தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. அறிஞர் பிறப்பிறப்புக்களைக் கடலென்பராதலால் "ஆழாமே" என்றார். திருமால் கன்றால் விள வெறிந்தது கிருஷ்ணுவதாரத்தில். (உ)

பொருட்பற்றிச்செய்கின்றபூசனைகள்போல்விளங்கச்
செருப்புற்றசீரடிவாய்க்கலசமூனமுதம்
விருப்புற்றுவேடனார்சேடறியமெய்குளிர்ந்தங்
கருட்பெற்றுநின்றவாதோணோக்கமாடாமோ.

ப - ரை. பொருள் பற்றிச் செய்கின்ற - பூசைக்கு வேண்டிய பொருள்களெல்லாவற்றையும் அமைத்துக்கொண்டு செய்கின்ற, பூசனைகள்போல் விளங்க - பூசைகள்போலப் பிரகாசிக்க, செருப்பு உற்ற சீர் அடி - செருப்பணிந்த சிறந்த அடியையும், வாய்க்கலசம் - வாயாகிய நீர்க் குடத்தையும், ஊன் அமுதம் - மாமிசமாகிய உணவையும், விருப்புற்று - விரும்பி, வேடனார் - வேடனாகிய கண்ணப்பர், சேடு அறிய - வீட்டின்பத்தை யுணருமாறு, மெய் குளிர்ந்து - சரீரங் குளிர்ச்சி யடைந்து, அங்கு - அப்பொழுதே, அருள் பெற்று நின்ற ஆறு - திருவருள் பெற்று நின்ற வரலாற்றை வியந்து, தோணோக்கமாடாமோ,——எ - று.

க - ரை. திருக்கண்ணப்ப தேவர் தம் வாய்நீர் முதலியவற்றைக்கொண்டு பூசைசெய்து திருவருள் பெற்ற வரலாற்றைப் புகழ்ந்து தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. இறைவன் மனமுவந்தேற்றமையால் கண்ணப்பரது பாதத்தைச் "சீரடி" என்றார். கலசம் - நீர்க்குடம். வேட

ஞர் சேடு அறிய - வேடனுர் பெருமை அறிய எனினுமாம். இவர் பூசனை செய்தது பாதத்தாலுதைத்து நிர்மாலியத்தைக் கழித்ததும், வாய் நீரால் அபிஷேகம் செய்ததும், சுவைத்த எச்சிலை இறைவனுக்குணவாக நிவேதித்ததும் முதலியவை. இவர் சரித்திரம் முன்னே கூறப்பட்டது. மெய் குளிர்தலாவது முத்தாபந் தணியப் பெறுதல். (ரு)

கற்போலுநெஞ்சங்கசிந்துருகக்கருணையினல்
நிற்போனைப்போலவென்னெஞ்சினுள்ளேபுகுந்தருளி
நற்பாற்படுத்தென்னைநாடறியத்தானிங்ஙன்
சொற்பாலதானவாதோணோக்கமாடாமோ.

ப - ரை. (இறைவன்) கல்போலும் நெஞ்சம் - (வன்மையால்) கல்லைநிகர்க்கின்ற என்மனமானது, கசிந்து உருக - கசிந்துருகாநிற்க, கருணையினல் - கிருபையினல், நிற்போனைப்போல- (என்னெதிரில்) நிற்பவன்போலவேயிருந்து, என் நெஞ்சினுள்ளே புகுந்தருளி - (நான் அறியாவகை) என்மனத்தின்கண்ணே நுழைந்தருளி - என்னை நற்பால்படுத்து - என்னை நன்மைப்பகுதியிலகப்படுத்தி, நாடு அறிய - உலகமறியும்வண்ணம், இங்ஙன் - இவ்விடத்தில், தான் சொற்பாலது ஆன ஆறு - தான் என்சொல்லின் பகுதிப்பட்டு நின்றவகை என்னவியப்பு, தோணோக்கமாடாமோ ——எ - று.

க - ரை. இறைவன் கல்லைநிகர்த்த என்மனமானது உருகும்படி தன்கருணையினல் என்நெஞ்சிற்புகுந்து என்னை நன்னெறிக்கட்செலுத்தி நாட்டார் அறியும்படி புகழ்தற்கேதுவான விதத்தைக் குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பதாம். (சு)

நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன் [ன்
புலனுயமைந்தனேடெண்வகையாய்ப்புணர்ந்துநின்று
உலகேழெனத்திசைபத்தெனத்தானெருவனுமே
பலவாகிநின்றவாதோணோக்கமாடாமோ.

ப - ரை. நிலம் - பூமியும், நீர் - நீரும், நெருப்பு - அக்கினியும், உயிர் - வாயுவும், நீள்விசும்பு - பெரிய ஆகாயமும், நிலா - சந்திரனும், பகலோன் - சூரியனும், புலன் ஆய மைந்தன் ஒடு - அறிவுருவாகிய புருடனுடன்கூடி, எண்வகை ஆய் - எண்வகைப்பட்டு, புணர்ந்துநின்றுன் - (எங்கும்) கலந்துநின்றுன், உலகுஏழ் என - ஏழுலகங்களெனவும், திசைபத்து என - திக்குகள் பத்தெ

னவும், தான் ஒருவனுமே - தான் ஒருவனே, பலஆகிநின்ற ஆறு-பலரூபங்களாய் நின்றவரலாற்றைப் புகழ்ந்து, தோணோக்கமாடாமோ—— எ - று.

க - ரை. இறைவனொருவனே நிலமுதலாகிய அட்டமூர்த்தமாகவும், எழுலகாகவும், பத்துத்திக்குகளாகவும் நிறைந்துநின்ற விதத்லதக்குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. சொற்பாலதாதலாவது - நான் புகழும்படி யிருத்தல். திசைபத்தென்றது - அஷ்டதிசைகளோடு மண்ணையும் விண்ணையும் கூட்டி யென்க. (௫)

புத்தன்முதலாயபுல்லறிவிற்பல்சமயம்
தத்தமதங்களிற்றட்டுளுப்புப்பட்டுநிற்கச்
சித்தஞ்சிவமாக்கிச்செய்தனவேதவமாக்கும்
அத்தன்கருணையினாற்றோணோக்கமாடாமோ.

ப - ரை. புத்தன்முதல் ஆய - புத்தன் முதலான, புல் அறிவின் - அற்பவுணர்ச்சியுள்ள, பல்சமயம் - பலசமயவாதிகள், தத்தம்மதங்களில் - தங்கள்தங்கள் மதவிஷயங்களில், தட்டுளுப்புப்பட்டுநிற்க - தடுமாற்றமடைந்துநிற்க, சித்தம்சிவம்ஆக்கி - (என்) மனத்தைச் சிவரூபமாகச்செய்து, செய்தனவே - யான் செய்த பலவகைத்தொழில்களையே, தவம்ஆக்கும் - தவமாகச்செய்த, அத்தன்கருணையினால் - எம்மிறைவனது கிருபையினால், தோணோக்கமாடாமோ— எ - று.

க - ரை. புத்தன் முதலாகிய பலசமயத்தார் தமது அற்ப அறிவினால் தத்தம்மதங்களையேஉண்மையாகநம்பித்தடுமாறிநிற்க, எனது மனத்தைச் சிவமாக்கி நான்செய்த பலதொழில்களையே தவத்தொழில்களாக்கி யருள்செய்த எம்மிறைவனது கருணையால் தோணோக்கமாடுவோம் என்பதாம்,

வி - ரை. தட்டுளுப்பு-தடுமாற்றம், சித்தம்சிவமாக்கி யென்றது சீவகரணத்தைச் சிவகரணமாக்கி யென்றபடி. (௬)

தீதில்லைமாணிசிவகருமஞ்சிதைத்தானைச்
சாதியும்வேதியன்றாதைதனைத்தாளிரண்டும்
சேதிப்பஈசன்றிருவருளாற்றேவர்தொழப்
பாதகமேசோறுபற்றினவாதோணோக்கம்.

ப - ரை. மாணி-பிரமசாரியாகிய சண்டேசுரநாயனார், சிவகருமம் சிதைத்தானை - (தன்) சிவகருமத்தை அழித்தவனை, சாதி

யும் வேதியன்-சாதியினாலும் அந்தணன், தாதைதன்னை தந்தையை, தீது இல்லை - (அவனிடத்து) ஒருதீமையில்லையாகவும், தாள் இரண்டும் சேதிப்ப - (அவனது) கால்கள் இரண்டையும்வெட்ட, ஈசன் திருவருளால் - சிவபிரானது திருவருளினால், தேவர்தொழ-தேவர்கள் வணங்க, பாதகமேசோறுபற்றின ஆறு - (அவனது) பாவத்தையே புண்ணியமாக ஏற்றுக்கொண்டருளின வரலாற்றைக்குறித்து, தோணேக்கம்,——எ - று.

க - ரை. பிரமசாரியாகிய சண்டேசுரநாயனார்தாம்செய்த சிவ கருமத்தை யழித்த வேதியனாகிய தந்தையின் இரண்டுகால்களையும் வெட்ட, இறைவன் தேவர்கள்வணங்க அந்தப்பாவத்தைப் புண்ணியமாக ஏற்றுக்கொண்டருளின வரலாற்றைக் குறித்துத் தோணேக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. மாணியென்றது - தண்டியடிகளை, சிவகருமம் - சிவபுண்ணியம். இதனால், தந்தையைவெட்டின பாவத்தையும் புண்ணியமாக இறைவன் ஏற்றுக்கொண்டமையால் சிவகருமம் செய்வோர்களுடைய தீமையும் நன்மையாய்விடும் என்றவாறாயிற்று. சண்டேசுரநாயனாரின் மனோபாவமறியாமற் செய்தமையால் "தீதில்லை" என்றார்.

சண்டேசுர நாயனார் வரலாறு:—சோழநாட்டுள்ள திருச்சேய்ஞலூர்ப் பிராமண குலத்தில் காசிபகோத்திரத்தவனாகிய எச்சதத்த னென்பவன் திருமைந்தராகத் திருவவதாரஞ்செய்து விசாரசருமனாரென்னும் பிள்ளைத் திருநாமம்பெற்று ஐந்துவயதான பருவத்தில் பூர்வசென்ன உணர்ச்சியினால் வேதாகம சாஸ்திரங்களெல்லாம் ஓதாதுணர்ந்து ஏழுவயதான காலத்தில் உபநயனச் சடங்கு தந்தை செய்வித்து வேதமோதுவிக்க, உபாத்தியாயர் எடுத்து ஓதுவிப்பதற்குமுன் உணர்ந்துகொள்வதைஅவ்வுபாத்தியாயர் முதலானவர்கள் கண்டு அதிசயித்து மகிழ்ச்சி யடையும்படி யாவுமுணர்ந்து, இவ்வேத முதலான பயிற்சியி னடையும் பயன் பரமசிவனுடைய திருவடிக் கன்பு செய்வதென் றுள்ளத்திற் கொண்டு வளரும்நாளில், ஒருநாள் வேதாத்தியயனச் சிறுவர்களுடன் வேதப் பள்ளிக்கூடத்துக்குப் போம்பொழுது மார்க்கத்தில் பசுக்களை மேய்க்க ஒட்டிக்கொண்டு போகும் இடையனை ஒரு பசுவானது முட்டினதினால் அவனப்பசுவைத் தடியால் அடிக்கக் கண்டு மனம்வருந்தி அவனைநோக்கி, நீ பசுக்களை யென்னென்று நினைத்தாய், திரிமூர்த்தி முதலான தேவசொரூப முள்ளது மன்றிப் பரமசிவத்தின் திருமஞ்சனத்துக்குரிய பஞ்சகவ்வி

யத்தையும் விபூதிக்குக் காரணமான சாணத்தையும் தருவதனுல், அதனை யடித்தால் மகாபாதகம் நேரிடும் ஆனதால் நீ யவை களை மேய்க்க வேண்டுவதில்லை, இன்றுமுதல் நானே மேய்க்கிறே னென்று சொல்லி, அப்பசுக்களுக்குரிய பிராமணர்களுடைய சம்மதமும் பெற்றுக்கொண்டு, அன்று முதல் மேய்த்துவருகை யில், பசுக்களெல்லா மிகவும் பெருகிப் பால் மடிசுரந்து பொழி வதை நாயனுர் கண்டு பூர்வ செனனத்தில் சிவார்ச்சனை செய்த தொடர்ச்சியினுல் பரமசிவத்துக்குத் திருமஞ்சனஞ் செய்யவேண் டுமென்கிற விருப்பமுண்டாக, அங்கிருக்கு மண்ணியாற்றங் கரை யில் ஆத்திமரத்தின்கீழ் மணலினுல் சிவலிங்கப் பெருமானைப் பிர திஷ்டைசெய்து, ஆலய முதலானவைகளும் அம்மணலா லமை த்து, திருப்பள்ளித் தாமமுங் கொய்து வைத்துக் கொண்டு, குடங் களையேந்தி ஒவ்வொரு பசுவினிடத்துஞ் சென்று சுரப்பு மடியின் கீழ்ப் பிடிக்க, அவைகள் தாமேபால்பொழிய, அந்ததிருமஞ்சனத் தைக் கொண்டுவந்து அபிஷேகஞ்செய்து துதித்து, அன்று முதல் அதுவே ஒரு விளையாட்டாகச் செய்து வருகையில், ஒருநாளந்த மார்க்கமாகப் போகின்ற ஒரு பிராமணன் பார்த்து நாயனுருடைய உள்ளன்பு தெரியாமல் இவன் சிறுபிள்ளைத் தன்மையால் பாலைக் கறந்து மணலிலூற்றி விடுகிறுனென்று நினைத்து ஊரிற்சென்று பிராமணர்களுக்குச் சொன்னுன், அவர்கள் தங்களுடையபசுக்கள் குறைவில்லாமல் பால் கறப்பது தெரிந்திருந்தும் எச்சதத்தனுடன் சொன்னுர்கள். அந்தப் பிராமணன் நாளையதினம் நான் போய்ப் பார்த்துச் சொல்லுகிறேனென்று அவர்களுக்குச் சொல்லி மறு நாள் மண்ணியாற்றங் கரையிற்சென்று குராமரத்தின்மேல் மறை ந்திருந்து நாயனுர் முன்போலத் திருமஞ்சனஞ் செய்வதனைக் கண்டு கோபமூண்டு இழிந்துவந்து கோலால் முதுகிலடிக்கவும் அன்பின் மிகுதியால் அவனடித்ததுந் தெரியாமல் அர்ச்சனைத் தொழில் விடாதிருக்க, பின்னுங் கோபங்கொண்டு திருமஞ்சனப் பாற்குடங்களைக் காலினுலிடறிச் சிந்தினுன், அதைக்கண்ட நாய னுர் மனம்பொருமல் தம்மருங்கிருந்த கோலையெடுத்து அதுவே மழுவாயுதமாக அவனுடைய இரண்டு கால்களையும் தறிக்க, அவன் மண்மேல் விழுந்தான், அவ்வாறு அவன்விழுந்தது கண்டும் சிவார் ச்சனை விடாதுசெய்யப் பரமசிவம் ரிஷபவாகனத்துடன் பார்வதி சமேதரா யெழுந்தருளித் தம்மை வணங்கின அன்பரை யெடுத்து நோக்கி, நீ நம்பொருட்டு ஈன்றதாதைவிழ எறிந்தனை ஆதலாலினி நாமே யுனக்குத் தந்தையென்று அணைத்து, உச்சிமோந்து மகிழ் ந்து, தொண்டர்களுக்கெல்லாம் தலைவ ராகு மூறைமையளித்து

நாமுண்டபரிகலமும்,உடுப்பவைகளும், சூடும் பூமாலைகளும், உன க்கே தக்கதாகக் கடவதென்று தண்டீசனென்னும் பதமுந் தந் தோமென்று தம்முடைய திருமுடியில் அணிந்திருந்த கொன்றை மாலையினை அன்பர் முடியிற் சூடிச் சிவலோகத்துக் கெழுந்தருள, தண்டீச நாயனாரும் பரமசிவத்தைத் தொழுதுடன் சென்றனர், எச்சதத்தன் தண்டீசநாயனார் வழுவால் தண்டிக்கப் பட்டமை யால் சிவாபராதம்நீங்கிச் சுற்றத்தாருடன்முத்தியடைந்தனன்.(எ)

மானமழிந்தோமதிமறந்தோமங்கைநல்லீர்
வானந்தொழுந்தென்னன்வார்கழலேநினைந்தடியோம்
ஆனந்தக்கூத்தனருள்பெறினமவ்வணமே
ஆனந்தமாகிநின்றாடாமோதோணோக்கம்

ப - ரை. மங்கைநல்லீர்-மங்கைப்பருவத்தையுடைய பெண் களே, வானம்தொழும் - விண்ணுலகமெல்லாம் வணங்குகின்ற, தென்னன் - தென்னனது, வார்கழலேநினைந்து - பெரியவீரக்க ழலேயணிந்த திருவடிகளையே நினைந்து, மானம்அழிந்தோம்-மான ங்கெட்டோம், மதிமறந்தோம் - அறிவழிந்தோம், அடியோம் - அடியேங்கள், ஆனந்தக்கூத்தன்-ஆனந்தத்தாண்டவனது, அருள் பெறின் - திருவருளைப்பெற்றால், நாம் - யாம், அவ்வண்ணமே அவ்வாறே, ஆனந்தம்ஆகிநின்று - ஆநந்தரூபமாய் நின்று, தோ ணோக்கமாடாமோ—— எ - று.

க - ரை. பெண்களே, சிவபெருமானது திருவடியை நினை ந்து மானத்தையும் அறிவையும் இழந்தோம், அடியோம் அந்த ஆநந்தக்கூத்தனது திருவருளைப் பெற்றால் ஆநந்தவுருவமாய்த் தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. இறைவன் ஆநந்தக் கூத்தனுதலால் அவனருள் பெற்றால் யாமும் ஆநந்தரூபமாவோம் என்றற்கு, "ஆநந்தக்கூத்த னருள்பெறி மவ்வணமே யாநந்தமாகி" என்றார்.　　(அ)

எண்ணுடைமூவரிராக்கதர்களெரிபிழைத்துக்
கண்ணுதலெந்தைகடைத்தலைமுனின்றதற்பின்
எண்ணிலியிந்திரரொத்தனையோபிரமர்களும்
மண்மிசைமால்பலர்மாண்டனர்காண்டோணோக்கம்.

ப - ரை. எண் உடை மூவர் இராக்கதர்கள் - மதிப்பை யுடைய மூன்று ராக்ஷஸர்கள், எரிபிழைத்து - நெருப்பிற்பிழை த்து, கண்ணுதல் எந்தை - நெற்றிக்கண்ணையுடைய எமது தந்தை யின், கடைத்தலைமுன் - வாயிற்படியில், நின்றதற்பின் - (துவார பாலகராக)நின்றபிறகு, எண்இலி இந்திரர் - அளவுகடந்த இந்திரர்

களும், எத்தனையோ பிரமர்களும்-எத்தனையோ பிரமதேவர்களும், மண்மிசை - மண்ணுண்ட, மால்பலர் - அநேக விட்டுணுக்களும், மாண்டனர் - மடிந்தார்கள், தோணோக்கம் —— எ - று.

க - ரை. இராக்கதர் மூவர் திரிபுரதகனத்தில் இறைவனை வணங்கி, கயிலையின்வாயிலில் துவாரபாலகராக நின்றபின்பு, அளவற்ற இந்திராதிதேவர்கள் மடிந்தார்கள் என்பதைக் குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. மூவரிராக்கதர்கள் எரிபிழைத்தது திரிபுரதகந காலத்தில். கண்ணுதல் என்பதை நுதற்கண் எனமாறுக. திரிபுர தகநம் நிகழ்ந்தபிறகுஅநேகம் பிரமாதிகள் மாண்டார்கள் என்பதற்கு, "எண்ணுடை மூவரிராக்கதர்களெரி * * * மாண்டனர்" என்றார். (கூ)

பங்கயமாயிரம்பூவினிலோர்பூக்குறையத்
தங்கணிடந்தரன்சேவடிமேற்சாத்தலுமே
சங்கரனெம்பிரான்சக்கரமாற்கருளியவா
றெங்குமபரவிநாந்தோணோக்கமாடாமோ.

ப - ரை. ஆயிரம் பங்கயப்பூவினில் - ஆயிரந் தாமரைமலர்களில், ஓர்பூகுறைய - ஒருமலர்குறைய, தம்கண்இடந்து - தமது கண்ணைத்தோண்டி, அரன்சேவடிமேல் சாத்தலும் - சிவபெருமானது திருவடிமீது சாத்தலும், சங்கரன் - சங்கரன் ஆகிய, எம்பிரான் - எம்மிறைவன், மாற்கு - விட்டுணுவுக்கு, சக்கரம் அருளிய ஆறு - சக்கரத்தை யருள்செய்தபிரகாரத்தை, நாம் எங்கும்பரவி - யாம் எங்கும்புகழ்ந்துபேசி, தோணோக்கமாடாமோ.——எ-று.

க - ரை. ஆயிரம் தாமரைமலரில் ஒருமலர் குறைதலும், அக்குறையை நிறைத்தற்பொருட்டுத் திருமால் தன்கண்ணைத்தோண்டி இறைவன் திருவடிமேல் சாத்துதலும், இறைவன் அந்தத் திருமாலுக்குச் சக்கரத்தை யருள்செய்த வரலாற்றைக் குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பதாம். (௧0)

காமனுடலுயிர்காலன்பற்காய்கதிரோன்
நாமகணாசிசிரம்பிரமன்கரமெரியைச்
சோமன்கலைதலைதக்கனையுமெச்சனையும்
தூய்மைகள்செய்தவாதோணோக்கமாடாமோ.

ப - ரை. காமன்உடல்-மன்மதனுடம்பையும், காலன்உயிர்-யமனுயிரையும், காய்கதிரோன்பல் - சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியன்பல்லையும், நாமகள்நாசி - சரசுவதிமூக்கையும், பிரமன்சிரம் - பிரமன்தலையையும், எரியைகரம் - அக்நியைக்கையை

யும், சோமன்கலை - சந்திரனைக்கலையையும், தக்கனையும் எச்சனையும் - தக்கனையும் எச்சனையும், தலை - சிரத்தையும், தூய்மைகள் செய்தஆறு - சுத்தப்படுத்தினவிதம் என்னவியப்பு, தோணோக்கமாடாமோ.——எ - று.

க - ரை. காமனுடம்பையும், யமனுயிரையும், சூரியன்பல்லையும், சரசுவதிமூக்கையும், பிரமன்தலையையும், அக்நிதேவனது கைகளையும், சந்திரனது கலைகளையும், தக்கன் எச்சன் என்பவருடைய சிரங்களையும் சுத்தப்படுத்தின வரலாற்றைப் புகழ்ந்து தோணோக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. காமன் - காமத்துக்கு அதிதேவதை. காலன் - காலத்துக்கு அதிதேவதை. காய்கதிரோன் என்றதனால் சூரியனென்றுரைக்கப்பட்டது. நாமகள் - வாக்குக்கு அதிதேவதை. தூய்மை செய்தல் - இல்லையாகச்செய்தல், (அழித்தல்). **காமனை அழித்த வரலாறு**:—முன்னொரு காலத்தில் சிவபெருமான் யோகத்திலிருக்க அதனைக்கெடுக்க முயன்றதேவர்கள் ஏவுதலால் மன்மதன்சிவபெருமான்மேல் மலர்க்கணை தொடுத்தனன் அப்பொழுது இறைவன் சினங்கொண்டு விழிக்க மன்மதன் எரிந்து சாம்பராயினன் என்பது. இதனால் இறைவனுக்குக் காமதகனன் எனப் பெயருண்டாயிற்று. (கக)

பிரமனரியென்றிருவருந்தம்பேதைமையால்
பரமமியாம்பரமமென்றவர்கள்பதைப்பொடுங்க
அரனாரழலுருவாயங்கேயளவிறந்து
பரமாகிநின்றவாதோணோக்கமாடாமோ.

ப - ரை. தம்பேதைமையால் - தமது அறியாமையால், யாம்பரமம்பரமம் என்றவர்கள் - யாம்பரம்பொருள் யாம் பரம்பொருள் என்று வாதுபேசினவர்களாகிய, பிரமன் - பிரமதேவன், அரி - திருமால், என்றஇருவரும் - என்றுசொல்லப்பட்ட இருவரும், பதைப்புஒடுங்க - தம்பதைத்தல் அடங்கும்படி, அரனார் - பரமசிவனார், அழல்உருஆய் - நெருப்புருவாகி, அங்கே அளவு இறந்து - அவ்விடத்தில் அளவுகடந்து, பரம்ஆகிநின்றஆறு - பரம்பொருளாகி நின்ற வரலாற்றைக்குறித்து, தோணோக்கமாடாமோ——எ - று.

க - ரை. பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் தம் அறிவுகேட்டால் யாம் பெரியம் யாம் பெரியம் என்று அகங்கரித்தலும், அவர்களுடைய அகங்காரமொடுங்கச் சிவபெருமான் நெருப்புருவாய் நின்ற வரலாற்றைக்குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பதாம். (கஉ)

ஏழைத்தொழும்பனேனெத்தனையோகாலமெல்லாம்
பாழுக்கிறைத்தேன்பரம்பரனைப்பணியாதே
ஊழிமுதற்சிந்தாதநன்மணிவந்தென்பிறவித்
தாழைப்பறித்தவாதோணோக்கமாடாமோ.

ப - ரை. ஏழைத்தொழும்பனேன்-ஏழைத்தொண்டனேன், எத்தனையோகாலமெல்லாம் - எவ்வளவோகாலங்களெல்லாம், பரம்பரனைப்பணியாதே - பராபரனைப்பணியாமல், பாழுக்குஇறைத்தேன் - பாழுக்கு நீர் இறைப்பவனானேன், (அங்ஙனமாகியும்) ஊழிமுதல் - ஊழிக்காலத்திலும், சிந்தாத - நசிக்காத, நல்மணி - அழகிய மாணிக்கம் (இறைவன்), வந்து - எழுந்தருளி, என் பிறவித்தாழைப்பறித்த ஆறு - என் பிறவியின் தாழைப்பறித்த விதம் என்னவியப்பு, தோணேக்கமாடாமோ——எ - று.

க - ரை. ஏழைத்தொழும்பனாகிய நான் சிவபெருமானை வணங்காமல் எத்தனையோகாலம் பாழுக்கிறைத்தேன் அப்படியிருக்க, ஊழிமுதல்வனாகிய இறைவன் தானேயெழுந்தருளி என் பிறவித்தாழைப் பிடுங்கினவிதத்தைக் குறித்துத் தோணேக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. ஏழை - அறிவிலி. தொழும்பு - தொண்டு. பாழுக்கு இறைத்தலாவது பயனற்ற நிலத்துக்கிறைத்தல். (பாசச்சுழாந்களாகிய மனைவிமக்கள் முதலானோர் பொருட்டு உழைத்தல்)

உரைமாண்டவுள்ளொளியுத்தமன்வந்துளம்புகலும்
கரைமாண்டகாமப்பெருங்கடலைக்கடத்தலுமே
இரைமாண்டவிந்திரியப்பறவையிரிந்தோடத்
துரைமாண்டவாபாடித்தோணேக்கமாடாமோ.

ப - ரை. உரைமாண்ட - பேச்சிறந்த, உள்ஒளி - உள்ளொளியாகிய, உத்தமன்வந்து உள்ளம்புகலும் - உத்தமன் வந்து என் மனத்திற்புகுதலும், கரைமாண்ட - கரையற்ற, காமம் - காமமாகிய, பெருங்கடலைக் கடத்தலும் - பெரியகடலைத் தாண்டுதலும், இரைமாண்ட - உணவொழிந்த, இந்திரியப்பறவை - இந்திரியமாகிய பறவைகள், இரிந்துஓட - அஞ்சிஓட, துரைமாண்ட ஆறு பாடி - நமதுநெறிமாட்சிமையடைந்த விதத்தைப்பாடி, தோணேக்கமாடாமோ——எ - று.

க - ரை. வாக்குக்கெட்டாத உள்ளொளியாகிய சிவபெருமான் வந்து என்மனத்திற்புகுதலும், யாம் கரையற்றகாமமாகிய பெருங்கடலைக் கடக்கலாயிற்று, கடத்தலும் உணவொழிந்த இந்திரியப்பறவைகள் அஞ்சியோடும்படி நமது நன்னெறிமாட்சிமையடைந்தவிதத்தைப்பாடித் தோணேக்கமாடுவோம் என்பதாம்.

வி - ரை. புறவொளியைப் பிரித்தற்கு உள்ளொளியென்றார். இரை - விடயங்களாகிய உணவு. துறை - எதுகை யின்பப்பொருட்டுத் துரை என வந்தது. துரை - அதிகாரி, அதாவது தற்போதம் எனக்கொண்டு துரைமாண்டவா என்பதற்குத் தற்போத மிறந்தவிதத்தைக் குறித்து என்றுரைத்தலுமாம். (கச)

---

# திருப்பொன்னூசல்.

அருட்சுத்தி.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றுமைபற்றிவந்த
ஆறடித்தரவு கொச்சககலிப்பா.

சீரார்பவளங்கான்முத்தங்கயிறாக
வேராரும்பொற்பலகையேறியினிதமர்ந்து
நாராயணனறியாநாண்மலர்த்தாணாயடியேற்
கூராகத்தந்தருளுமுத்தரகோசமங்கை
ஆராவமுதினருட்டாளிணைபாடிப்
போரார்வேற்கண்மடவீர்பொன்னூசலாடாமோ.

ப - ரை. சீர்ஆர்பவளம் - மேன்மைபொருந்திய பவளத்தை, கால் ஆக - கால்களாகவும், முத்தம்கயிறுஆக - முத்தமாலைகளைக் கயிறாகவும் கொண்ட, ஏர்ஆரும் - அழகுபொருந்திய, பொன்பலகைஏறி - பொற்பீடத்தில்ஏறி, இனிதுஅமர்ந்து - இனிதாயமைந்திருந்து, நாராயணன் அறியா - திருமால் அறியாத, நாள்மலர்தாள் - புதியதாமரைமலர்போலுந் திருவடியை, நாயடியேன் - அடியனாகியநாயினேனுக்கு, ஊர்ஆக-உறைவிடமாக, தந்தருளும்-தந்தருளின, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையிலெழுந்தருளியிருக்கிற, ஆராஅமுதின் - தெவிட்டாத அமிர்தத்தின், அருள்தாள்இணைபாடி-அருளுருவாகிய திருவடியிணையைப் புகழ்ந்துபாடி, போர்ஆர்வேல் - போர்த்தொழிலமைந்த வேல்போன்ற,கண் - கண்களையுடைய, மடவீர் - பெண்களே, பொன்னூசல் ஆடாமோ,——எ - று.

க - ரை. பவள முதலானவைகளால் அலங்கரிக்கப்பட்ட பொற்பீடத்திலேறி வீற்றிருந்து, திருமாலறியாத திருவடியை அடியேனுக் குறைவிடமாகத் தந்தருளின உத்தரகோசமங்கையிலெழுந்தருளிய ஆராவமுதின் அருளுருவாகிய திருவடியிணையைப் பாடி நாம் பொன்னூசலாடுவோம் என்பதாம். (க)

மூன்றங்கிலங்குநயனத்தன்மூவாத
வான்றங்குதேவர்களுங்காணுமலரடிகள்
தேன்றங்கித்தித்தித்தமுதூறித்தான்றெளிந்தங்
கூன்றங்கிநின்றுருக்குமுத்தரகோசமங்கைக்
கோன்றங்கிடைமருதுபாடிக்குலமஞ்ஞை
போன்றங்கனநடையீர்பொன்னூசலாடாமோ.

ப - ரை. இலங்கும் - விளங்குகின்ற, மூன்றுநயனத்தன் - மூன்றுகண்களையுடையவனது, மூவாத - கெடாத, வான்தங்கு தேவர்களும் காணு - விண்ணுலகில் தங்கியிருக்கிற தேவர்களுங் காணவொண்ணாத, மலர் அடிகள் - தாமரைமலர்போலுந் திருவடிகளையும், தேன்தங்கி - தேன்பொருந்தி, தித்தித்து - இனித்து, அமுதுஊறி - அமுதஞ்சுரந்து, தெளிந்து - தெளிவடைந்து, அங்கு - அவ்வண்ணமே, ஊன்தங்கிநின்ற உருக்கும் - என்னுடம் பின்கண் தங்கிநின்று (அதனை) உருகச் செய்கின்ற, உத்தரகோச மங்கைக்கோன் - திருவுத்தரகோச மங்கைக் கிறைவனானவன், தங்கு - வாசம்பண்ணுகிற, இடைமருது - திருவிடைமருதூரையும், பாடி - புகழ்ந்துபாடி, அங்கு - அவ்விடத்தே, குலமஞ்ஞை போன்று - (சாயலால்) உயர்வாகிய மயிலையொத்து, அன்னநடையீர் - அன்னத்தின் நடைபோலும் நடையையுடையவரே, பொன்னூசல் ஆடாமோ —— எ - று.

க - ரை. மூன்று கண்களையுடையவனும், உத்தரகோசமங்கைக் கரசனும் ஆகிய இறைவனது திருவடியையும், அவன் வாழ்கின்ற திருவிடைமருதூரையும் புகழ்ந்துபாடிப் பொன்னூசலாடுவோம் என்பதாம். (உ)

முன்னீறுமாதியுமில்லான்முனிவர்குழாம்
பன்னூறுகோடியிமையோர்கடாநிற்பத்
தன்னீறெனக்கருளித்தன்கருணைவெள்ளத்து
மன்னூறமன்னுமணியுத்தரகோசமங்கை
மின்னேறுமாடவியன்மாளிகைபாடிப்
பொன்னேறுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

ப - ரை. முன்-நினைக்கப்பட்ட, ஈறும் ஆதியும் இல்லான் - முடிவு முதலு மில்லாதவன், முனிவர்குழாம் - முனிவர்கூட்டமும், பல்நூறுகோடி இமையோர்கள் - பலவாகிய நூறுகோடிகணக்குள்ள தேவர்களும், நிற்ப - நிற்க, தன் நீறு எனக்குஅருளி -

தனது திருவெண்ணீற்றை யெனக்கருளிச்செய்து, தன்கருணை வெள்ளத்துமன்னூற - தனதுகருணைப்பெருக்கில் நிலைபெறும்படி, மன்னும் - நீங்காத, அணி - அழகிய, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோச மங்கையில் உள்ள, மின்னேறும் - மின்னுதல் அதிகரித்த, மாடவியன்மாளிகைபாடி - வீடுகளும் அரண்மனைகளுமாகிய இவைகளைப் புகழ்ந்துபாடி, பொன்னேறு - அழகுமிக்க, பூண் முலையீர் - ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய பெண்களே, பொன்னூசல் ஆடாமோ —— எ - று.

க - ரை. முடிவு முதலு மில்லாதவனாகிய சிவபெருமான், முனிவர்களும் தேவர்களுமிருக்க, தனது திருவெண்ணீற்றை யெனக்கருளிச் செய்து, தன்கருணைக்கடலில் நானழுந்தும்படி யெழுந்தருளியிருக்கிற திருவுத்தரகோச மங்கையிலுள்ள மாடமாளிகைகளைப் புகழ்ந்துபாடிப் பொன்னூசலாடுவோம் என்பதாம்.

வி - ரை. இறைவன் எழுந்தருளி யிருக்குந் திருப்பதியைப் பாடினால் அவனைப் பாடினதோ டொக்குமாதலால், "திருவுத்தரகோசமங்கை மின்னேறு மாடவியன் மாளிகைபாடி' என்றார். ()

நஞ்சமர்கண்டத்தனண்டத்தவர்நாதன்
மஞ்சுதோய்மாடமணியுத்தரகோசமங்கை
அஞ்சொலாடன்னோடுங்கூடியடியவர்கள்
நெஞ்சுளேநின்றமுதமூறிக்கருணைசெய்து
துஞ்சல்பிறப்பறுப்பான்றூயபுகழ்பாடிப்
புஞ்சமார்வெள்வளையீர்பொன்னூசலாடலாமோ.

ப - ரை. நஞ்சு அமர்கண்டத்தன் - விடம்பொருந்திய திருமிடற்றையுடையான், அண்டத்தவர்நாதன் - தேவர்களுக்கிறைவன், மஞ்சுதோய்மாடம் - மேகங்கள், படிகின்ற மாடங்கள்சூழ்ந்த மணி-அழகிய, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையில், அம்சொல்லாள் தன்னோடும்கூடி - அழகிய சொல்லையுடைய உமாதேவியாரோடுங்கூடி, அடியவர்கள் நெஞ்சுள்ளே நின்று - அடியார்களுடைய மனத்தின்கண்ணே நின்று, அமுதம் ஊறி - அமுதஞ்சுரந்து, கருணைசெய்து - கிருபைசெய்து, துஞ்சல்பிறப்பு அறுப்பான் - இறத்தல் பிறத்தல்களைச் சேதிப்பவன், (அவனது) தூய புகழ்பாடி - பரிசுத்தமாகிய புகழைப்பாடி, புஞ்சம் ஆர்வெள்ளை யீர்-தொகுதியாகிய வெள்ளிய வளையலை யுடையவர்களே, பொன்னூசலாடாமோ,——எ - று.

க - ரை. நஞ்சமர்ந்த கண்டத்தையுடையவனும், தேவர்களுக்குத் தலைவனும், உத்தரகோசமங்கையில் உமாதேவியோடுகூடியெழுந்தருளி யிருப்பவனும், அடியார்களுடைய மனத்தின்கண்ணின்று அமுதஞ்சுரந்து கருணைசெய்து இறப்புப் பிறப்புக்களையறுப்பவனும் ஆகிய சிவபெருமானது பரிசுத்தமாகிய புகழைப் பாடிப் பொன்னூசலாடுவோம் என்பதாம். (ச)

ஆணேயலியோவரிவையோவென்றிருவர்
காணாக்கடவுள்கருணையினாற்றேவர்குழாம்
நாணாமேயுய்யவாட்கொண்டருளிநஞ்சுதனை
ஊணாகவுண்டருளுமுத்தரகோசமங்கைக்
கோணார்பிறைச்சென்னிக்கூத்தன்குணம்பரவிப்
பூணார்வனமுலையீர்பொன்னூசலாடாமோ.

ப - ரை. ஆணே - ஆணுருவோ, அலியோ - அலியுருவோ, அரிவையோ - பெண்ணுருவோ, என்று - என்று, இருவர் காணாக்கடவுள் - பிரம விட்டுணுக்களாகிய இருவரும் காணாத கடவுள், கருணையினால் - தன்கிருபையால், தேவர்குழாம் - தேவர்கூட்டம், நாணாமேஉய்ய - அழியாமல் பிழைக்கும்படி, ஆட்கொண்டருளி - அடிமைகொண்டருளி, நஞ்சுதனை - விஷத்தை, ஊண்ஆக உண்டருளும் - உணவாகவுண்டருளிய, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையி லெழுந்தருளி யிருக்கிற. கோண்ஆர்பிறை - வளைவு பொருந்திய பிறையையணிந்த, சென்னி - சிரத்தையுடைய, கூத்தன் - நிருத்தமாடுவோன், (அவனது) குணம்பரவி - மங்கள குணங்களைப்புகழ்ந்து, பூண்ஆர் - ஆபரணங்கள் நிறைந்த, வனம் - அழகிய, முலையீர் - தனங்களையுடைய மாதர்களே, பொன்னூசலாடாமோ ——, எ - று.

க - ரை. ஆணோ, அலியோ, பெண்ணோ என்று இருவரும் காணாத கடவுளும், தன் பெருங்கருணையால் தேவர் கூட்டங்கள் அழியாமல் ஆட்கொண்டு, அவர்பொருட்டு நஞ்சை உணவாகவுண்டருளின உத்தரகோசமங்கைக் கிறைவனும் ஆகிய சிவபெருமானது மங்கள குணங்களைப்புகழ்ந்து நாம் பொன்னூசலாடுவோம் என்பதாம். (ரு)

மாதாடுபாகத்தனுத்தரகோசமங்கைத்
தாதாடுகொன்றைச்சடையானடியாருள்
கோதாட்டிநாயேனையாட்கொண்டென்றொல்பிறவித்
தீதோடாவண்ணந்திகழப்பிறப்பறுப்பான்

காதாடுகுண்டலங்கள்பாடிக்கசிந்தன்பால்
போதாடுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

ப - உரை. மாதுஆடு பாகத்தன் - உமாதேவி பொருந்திய இடப்பாகமுள்ளவன், உத்தரகோசமங்கை - திருவுத்தரகோச மங்கையி லெழுந்தருளியிருக்கிற; தாதுஆடு கொன்றைச்சடையான் - மகரந்தம் பொருந்திய கொன்றைமலர் மாலையையணிந்த சடையையுடையான், அடியாருள் - தன்னடியார் நடுவில், நாயேனை - நாயினேனை, கோதுஆட்டி - குற்றங்களை யலைத்து, ஆட்கொண்டு - அடிமைகொண்டு, என்தொல்பிறவித்தீது - என் பழையதாகிய பிறவித்துன்பங்கள், ஓடாவண்ணம் - என்மேல் வராதவகை, திகழ - நாம் விளங்க, பிறப்பு அறுப்பான் - பிறவித்தளையைச் சேதிப்பவன், (அவனது) காது ஆடுகுண்டலங்கள் பாடி - திருச்செவிகளி லசையாநின்ற குண்டலங்களைப் புகழ்ந்து பாடி, அன்பால் கசிந்து-அன்பினாலுருகி, போது - தாமரை யரும்புபோன்ற, ஆடுபூண் - அசையாநின்ற ஆபரணங்களோடு கூடிய, முலையீர் - தனங்களையுடைய பெண்களே, பொன்னூசலாடாமோ—,எ-று.

க - ரை. பெண்பாகனும், உத்தரகோசமங்கையி லெழுந்தருளிய கொன்றைச் சடையனும், அடியார்நடுவே என்னை யாட்கொண்டு என்பிறப்பை யறுப்பவனும் ஆகிய சிவபெருமானது குண்டலங்களைப்பாடிப் பொன்னூசலாடுவோம் என்பதாம்.

வி - ரை. பிறவியறவே பிறவித்துன்பமும் அறுமாதலால் "என்றொல்பிறவித் தீதோடாவண்ணந் திகழப்பிறப்பறுப்பான்" என்றார். போதாடு என்பதற்குத் தாமரையரும்புகள் அசைதல்போலசைகின்ற எனினுமாம். போது - பேரரும்பு. (சு)

உன்னற்கரியதிருவுத்தரகோசமங்கை
மன்னிப்பொலிந்திருந்தமாமறையோன்றன்புகழே
பன்னிப்பணிந்திறைஞ்சப்பாவங்கள்பற்றறுப்பான்
அன்னத்தின்மேலேறியாடுமணிமயில்போல்
என்னத்தனென்னையுமாட்கொண்டானெழில்பாடிப்
பொன்னொத்தபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

ப - ரை. உன்னற்குஅரிய-நினைத்தற்கரிய, திருவுத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையில், மன்னிப்பொலிந்திருந்த - நிலைபெற்றுப் பொலிவுற்றிருந்த, மாமறையோன் - பெருமை பொருந்திய அந்தணன், தன்புகழேபன்னி - தன் கீர்த்தியையே

சொல்லி, பணிந்து இறைஞ்ச - பணிந்து வழிபட, பாவங்கள் பற்றறுப்பான் - பாவங்களை நிர்மூலமாக்குவோன், அன்னத்தின்மேல் ஏறி - அன்னத்தின்மீதேறி, ஆடும் - ஆடுகின்ற, மணி - மாணிக்கத்தையும்; மயில் மயிலையும், போல் - போல்கின்ற, என்அத்தன் - என்தந்தை, என்னையும் ஆட்கொண்டான் - என்னையும் அடிமைகொண்டவன், (அவனது) எழில்பாடி - திருக்கோலத்தைப் புகழ்ந்து பாடி, பொன்ஒத்த பூண்முலையீர் - அழகுபொருந்திய ஆபரணங்களையணிந்த தனங்களையுடையீர், பொன்னூசலாடாமோ—.

க - ரை. திருவுத்தரகோசமங்கையில் எழுந்தருளியிக்கும் வேதியனும்,தன்புகழைத் துதித்து வணங்கினல் பாவங்களைப் பற்றறுப்பவனும், அன்னத்தின்மேலேறி யாடுகின்ற மாணிக்கத்தையும் மயிலையும் போல்பவனும், என்தந்தையும், என்னையாட்கொண்டவனும் ஆகிய சிவபெருமானது அழகைப் புகழ்ந்து பாடிப் பொன்னூசலாடுவோம் என்பதாம்.

வி - ரை. வெள்விடைமீதேறுதலால் விடையை அன்னமாகவும், அதன்மேல் மாணிக்கம்போற் ரேன்றலால் இறைவனை மணியாகவும், மயில்போற் ரேன்றலால் இறைவியை மயிலாகவும் உரைத்துக்கொள்க. மணிமயில் - அழகிய மயில் எனினுமாம்.

கோலவரைக்குடுமிவந்துகுவலயத்துக்
சாலவமுதுண்டுதாழ்கடலின்மீதெழுந்து
ஞாலமிகப்பரிமேற்கொண்டுநமையாண்டான்
சீலந்திகழ்திருவுத்தரகோசமங்கை
மாலுக்கரியானைவாயாரநாம்பாடிப்
பூலித்தகங்குழைந்துபொன்னூசலாடாமோ.

ப - ரை. கோலம் - அழகாகிய, வரைக்குடுமி - (கைலாய) மலைச் சிகரத்தினின்றும், குவலயத்துவந்து - உலகத்தில் வந்து, சால அமுது உண்டு - மிகவும் நீரையுண்டு, தாழ்கடலின் - ஆழ்ந்த கடலின் அலைபோல, மீது எழுந்து - மேலே தாவி, ஞாலம் மிகு - உலகம் முழுதும் பரவின, அப்பரிமேற்கொண்டு - அந்தக் குதிரியின் மேலேறிக்கொண்டு,நம்மையாண்டான் - நம்மை யாண்டருளினவனும், சீலம் திகழும் - ஒழுக்கம்விளங்குகின்ற, திருவுத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையி லெழுந்தருளியிருக்கிற, மாலுக்கு அரியானை-திருமாலுக்கரியவனுமாகிய சிவபிரானை, நாம் வாயாரப்பாடி-நாம் வாயாரப்புகழ்ந்துபாடி, பூலித்து அகம் குழைந்து - புளகித்து மனமுருகி, பொன்னூசலாடலாமோ——எ-று.

க - ரை. மலைச்சிகரத்திலிருந்து உலகத்திலெழுந்தருளி, உலகமுய்யும்படி நஞ்சையமுதுசெய்து, குதிரை மேற்கொண்டு நம்மை யாண்டருளினவனாகிய திருவுத்தரகோசமங்கைக் கிறைவனை வாயாரப்பாடி, உடல் புளகித்து, மனங்குழைந்து பொன்னூசலாடுவோம் என்பதாம்.

வி - ரை. வந்து பரிமேற்கொண்டு நம்மை யாண்டான் என்றியைத்துக் கொள்க. (அ)

தெங்குலவுசோலைத்திருவுத்தரகோசமங்கை
தங்குலவுசோதித்தனியுருவம்வந்தருளி
எங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொள்வான்
பங்குலவுகோதையுந்தானும்பணிகொண்ட
கொங்குலவுகொன்றைச்சடையான்குணம்பரவிப்
பொங்குலவுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

ப - ரை. தெங்கு உலவு சோலை - தென்னமரங்கள் நெருங்கியசோலை சூழ்ந்த, திருவுத்தர கோசமங்கை - திருவுத்தர கோசமங்கையில், தம் - தமது, குலவு-விளங்காநின்ற, தனி - ஒப்பற்ற, சோதி உருவம் வந்தருளி - சோதியுருவொடு எழுந்தருளி, எங்கள் பிறப்பு அறுத்திட்டு - எங்கள் பிறவியைச் சேதித்து, எம் தரமும் ஆட்கொள்வான் - எம் வழியாரையும் ஆட்கொள்பவன், பங்கு உலவு கோதையும் தானும் - இடது பாகத்துப் பொருந்திய உமாதேவியும் தானுமாக வந்து, பணிகொண்ட - எம்மை யடிமை கொண்ட, கொங்கு உலவு - வாசனை பொருந்திய, கொன்றை - கொன்றைமலர் மாலையையணிந்த, சடையான் - சடையை யுடையவன், அவனது குணம் பரவி - மங்கள குணங்களைப் புகழ்ந்து, பொங்கு உலவு பூண்முலையீர் - விளக்கமுள்ள பூணணிந்த தனங்களை யுடையீர், பொன்னூசலடாமோ — எ - று.

க - ரை. திருவுத்தரகோசமங்கையில் நிலைபெற்று வாழ்கின்ற ஒளி யுருவமும், தானே வலியவந்து எமது பிறவியையறுத்து எம்மினத்தையும் ஆட்கொள்ளும்பொருட்டுத் தேவியாரோடு கூடியெழுந்தருளி எம்மை யடிமைகொண்டவனுமாகிய சிவபெருமானது குணங்களைப் புகழ்ந்து பொன்னூசலாடுவோம் என்பதாம்.

---

# அன்னைப்பத்து.

ஆத்துமபூரணம்.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

---

திருச்சிற்றம்பலம்.

---

கலிவிருத்தம்.

வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்
நாதப்பறையினரன்னேயென்னும்
நாதப்பறையினர்நான்முகன்மாலுக்கு
நாதரிந்நாதனாரன்னேயென்னும்.

ப - ரை. வேதமொழியர் - வேதமாகிய மொழியை யுடையவர், வெள்நீற்றர் - திருவெண்ணீற்றை யுடையவர், செம்மேனியர் - செவந்த திருமேனியை யுடையவர், நாதப்பறையினர் - நாததத்துவமாகிய பறையை யுடையவர், அன்னே யென்னும் - தாயே என்பாள், நாதப்பறையினர்-அந்த நாதப் பறையினர்ஆகிய, இநாதனார் - இந்தத் தலைவர், நான்முகன் மாலுக்கு - பிரமவிட்டுணுக்களுக்கு, நாதர் - நாயகர், அன்னே யென்னும் - தாயே என்பாள் எ - று.

க - ரை. தாயே இறைவர் வேதமாகிய மொழியையுடையவரும், திருவெண்ணீற்றை யுடையவரும், செவந்த திருமேனியை யுடையவரும், நாத தத்துவமாகிய பறையை யுடையவருமா யிருக்கின்றனர் என்பாள், நாதப்பறையை யுடையவராகிய இவர் பிரமவிட்டுணுக்களுக்குத் தலைவரா யிருக்கிறார், என்பள் என்பதாம்.

வி ரை. வேதம் இறைவர் திருவாக்காதலால் "வேதமொழியர்" என்றும், நாத தத்துவம் இறைவருக்குப் பறையாதலால் "நாதப்பறையினர்" என்றும் கூறினார். இந்தப்பத்து ஒரு சிறு பெண் தனது தாயை நோக்கிச் சொன்னதாகச் சொல்லியது (க)

கண்ணஞ்சனத்தர்கருணைக்கடலினர்
உண்ணின்றுருக்குவரன்னேயென்னும்
உண்ணின்றுருக்கியுலப்பிலாவானந்தக்
கண்ணீர்தருவராலன்னேயென்னும்.

ப - ரை. கண் அஞ்சனத்தர் - கண்ணில் அஞ்சனமுடையவரும், கருணைக் கடலினர் - கருணைக்கடலா யிருப்பவரும் ஆகிய இறைவர், நின்று உள் உருக்குவர் - நிலைபெற்றிருந்து என் மனத்தை உருகப்பண்ணுவர், அன்னே யென்னும் - தாயே என்பாள், நின்று உள் உருக்கி - நின்று மனத்தை உருக்கி, உலப்பு இல்லா - கெடுதலில்லாத, ஆநந்தக்கண்ணீர் - ஆநந்தக்கண்ணீரை, தருவர் - கொடுத்தருள்வர், அன்னே யென்னும் - தாயே என்பாள், எ - று

க - ரை. தாயேஇறைவர்-கண்ணில் அஞ்சனமுடையவரும், கருணைக்கடலா யிருப்பவரும், மனத்தினுள்ளே நின்று அதனை உருகப்பண்ணுவாருமா யிருக்கின்றனர் என்பாள். மனத்தில் நின்றுருக்கி கெடுதலில்லாத ஆநந்தக் கண்ணீரைத் தந்தருளுவர் என்பாள் என்பதாம். (உ)

நித்தமணாளர்நிரம்பவழகியர்
சித்தத்திருப்பராலன்னேயென்னும்
சித்தத்திருப்பவர்தென்னன்பெருந்துறை
அத்தரானந்தராலன்னேயென்னும்.

ப - ரை. நித்தமணாளர் - நாடோறும் மணாளரா யிருப்பவரும், நிரம்ப அழகியர் - மிகவும் அழகினையுடையவரும் ஆகிய இறைவர், சித்தத்து இருப்பர் - என் மனத்தின்கண் இருப்பார், அன்னே யென்னும் - தாயே என்பாள், சித்தத்திருப்பவர் - என் மனத்தின்கண் இருப்பவர், தென்னன் பெருந்துறை அத்தர் - தென்னன் பெருந்துறைக் கடவுள், ஆநந்தர் - இன்பவுருவினர், அன்னே யென்னும்——எ - று.

க - ரை. தாயே இறைவர் எப்பொழுதும் மணவாளரும், மிக்க அழகுள்ளவரும் என் மனத்திலிருப்பவருமா யிருக்கின்றனர் என்பாள், இப்படி என் மனத்திலிருப்பவர் திருப்பெருந்துறை அத்தர், மேலும் இன்பவுருவா யிருப்பவர் என்பள் என்பதாம்.

வி - ரை. நித்தமணாளர் என்றது சாசுவதமாகிய மணவாளர் என்றபடி, மணவாளர் என்பது மணாளர் என மருவியது. தென்னன் பெருந்துறை -அழகும் நன்மையு மமைந்த பெருந்துறை. (ங)

ஆடரப்பூணுடைத்தோல்பொடிப்பூசிற்றோர்
வேடமிருந்தவாறன்னேயென்னும்
வேடமிருந்தவாகண்டுகண்டென்னுள்ளம்
வாடுமிதுவென்னேயன்னேயென்னும்.

ப - ரை. பூண்-ஆபரணம், ஆடுஅர-படமெடுத்தாடா நின்ற பாம்பு, உடை - ஆடை, தோல் - புலித்தோல் யானைத்தோல்கள், பூசிற்று - பூசப்பட்டது, பொடி - திருவெண்ணீறு, ஓர் - ஒப்பற்ற, வேடம் இருந்த ஆறு - (இவரது) வேடமிருந்தவா றுங்கு, அன்னே யென்னும் - தாயே என்பாள், வேடம் இருந்தஆறு - வேடமிருந்த பிரகாரத்தை, கண்டு கண்டு - பார்த்துப் பார்த்து, என் உள்ளம் வாடும் - என் மனம் வாடா நிற்கும், என்னே - இது வென்னோ, அன்னே யென்னும்-தாயே என்பாள்—— எ-று.

க - ரை. தாயே, இறைவருக்கு ஆபரணம் பாம்பு, ஆடை தோல், பூசுவது திருவெண்ணீறு, இவரது வேட மிருந்தவாறென் என்பாள், வேடமிருந்த விதத்தை நோக்கி நோக்கி என்மனம் வாடுகின்றது, இதற்குக் காரண மென்னோ என்பாள் என்பதாம்.

நீண்டகரத்தர்நெறிதருகுஞ்சியர்
பாண்டிநன்னாடராலன்னேயென்னும்
பாண்டிநன்னாடர்பரந்தெழுசிந்தையை
ஆண்டன்புசெய்வராலன்னேயென்னும்.

ப - ரை. (இறைவர்) நீண்டகரத்தர் - நீண்ட கையினை யுடையவர், நெறிதரு குஞ்சியர் - நெறிந்த சிகையை யுடையவர், நல்பாண்டிநாடர் - நன்மையாகிய பாண்டிநாட்டை யுடையவர், அன்னே யென்னும் - தாயே என்பாள், நல்பாண்டிநாடர் - நல்ல பாண்டிநாடர், எழுசிந்தையை ஆண்டு - பரவி யெழுகின்ற என் மனத்தை யாண்டருளி, அன்புசெய்வர் - அன்புசெய்யா நிற்பர், அன்னே யென்னும் - தாயே என்பாள்,—— எ - று.

க - ரை. தாயே; இறைவர் நீண்டகையினை யுடையவரும், நெறிந்த சிகையையுடையவரும், பாண்டிநாட்டை யுடையவருமாயிருக்கின்றனர் என்பாள், பாண்டிநாடர் பரவியெழுகின்ற என் மனத்தைத் தடுத்து என்னை அன்போடு ஆண்டருளுவர் என்பாள் என்பதாம். (ரு)

உன்னற்கரியசீருத்தரமங்கையர்
மன்னுவதென்னெஞ்சிலன்னேயென்னும்
மன்னுவதென்னெஞ்சின்மாலயன்காண்கிலார்
என்னவதிசயமன்னேயென்னும்.

ப - ரை. உன்னற்குஅரிய - நினைத்தற்கரிய, சீர்-சிறப்பமைந்த, உத்தரமங்கையர் - திருவுத்தரகோச மங்கையை யுடையவர், மன்னுவது - நிலைபெற்றிருப்பது, என் நெஞ்சில் - என் மனத்தின் கண்ணே, அன்னேயென்னும் - தாயே யென்பாள், மன்னுவது -

என்நெஞ்சில்——, (ஆயினும்) மால்அயன் காண்கிலார் - திருமாலும் பிரமனும் காணுமாற்றலிலர், என்ன அதிசயம் - இதுவென்னபுதுமை, அன்னே யென்னும் - தாயே யென்பாள், —— எ - று.

க - ரை. தாயே, நினைத்தற்கரிய சிறப்பமைந்த திருவுத்தரகோசமங்கையை யுடையவர் நிலைபெற்றிருப்பது என் மனத்திலே யென்பாள், இப்படி என் மனத்தில் நிலை பெற்றிருப்பவரை திருமாலும் பிரமனும் காணார் இது என்ன அதிசயம் என்பாள் என்பதாம். (கூ)

வெள்ளைக்கலிங்கத்தர்வெண்டிருமுண்டத்தர்
பள்ளிக்குப்பாயத்தரன்னேயென்னும்
பள்ளிக்குப்பாயத்தர்பாய்பரிமேல்கொண்டென்
உள்ளங்கவர்வராலன்னேயென்னும்.

ப - ரை. வெள்ளைக் கலிங்கத்தர் - வெண் பட்டாடையை யுடையவர், வெள் திருமுண்டத்தர் - அழகிய நகு வெண்டலையையுடையவர், பள்ளிக்குப்பாயத்தர் - (ஆநந்த) நித்திரையையே மேற்போர்வையாக வுடையவர், அன்னே யென்னும் - தாயே என்பள், பள்ளிக்குப் பாயத்தர் - ஆநந்தநித்திரையை மேற்போர்வையாக வுடையவராகிய அவ்விறைவர், பாய் பரிமேற்கொண்டு - பாய்ந்து செல்லுகின்ற குதிரை மேற்கொண்டு வந்து, என் உள்ளம் கவர்வர் - என் மனத்தைக் கவர்ந்துகொள்வர், அன்னே யென்னும் - தாயே என்பாள்.

க - ரை. தாயே, இறைவர் வெண்பட்டாடையை யுடையவரும், அழகிய நகுவெண்டலையையுடையவரும், ஆநந்த நித்திரையாகிய மேற் போர்வையை யுடையவருமா யிருக்கின்றனர் என்பாள், அவ்விறைவர் பாய்ந்து செல்லுகின்ற குதிரைமேற்கொண்டு வந்து என் மனத்தைக் கவர்ந்துகொள்வர் என்பாள் என்பதாம்.

தாளியறுகினர்சந்தனச்சாந்தினர்
ஆளெம்மையாள்வராலன்னேயென்னும்
ஆளெம்மையாளுமடிகளார்தங்கையில்
தாளமிருந்தவாறன்னேயென்னும்.

ப - ரை. தாளிஅறுகினர் - தாளியையும் அறுகையும் அணிந்தவர், சந்தனச் சாந்தினர் - சந்தனத்தோடு திருவெண்ணீற்றையுமுடையவர், ஆள் - ஆளாக, எம்மை ஆள்வர் - எம்மை யாண்டருள்வர், அன்னே யென்னும் - தாயே என்பாள், ஆள்எம்மை ஆளும் - ஆளாக எங்களை யாண்டருள்கின்ற, அடிகளார்தம் கையில் - இறைவரது திருக்கரத்தில், தாளம் இருந்தஆறு - தாளமிருந்தபடி யென்ன அதிசயம், அன்னேயென்னும் - தாயே யென்பாள், எ - று.

க - ரை. தாயே, இறைவர் தாளியையும் அறுகையும் உடையவரும், சந்தனத்தோடு திருவெண்ணீற்றையுடையவரும், எம்மை

பாண்டருள்வோருமா யிருக்கின்றனர் என்பாள், எம்மையாளாக வுடைய அவரது திருக்கரத்தில் தாளமிருந்தவாறென் என்பாள் என்பதாம்.

வி - ரை. திருஞானசம்பந்த சுவாமிகள் திருக்கோலக்காவிற் சென்று கையொத்தித் திருப்பதிகமோதக் கண்ட இறைவர் பொற்றாள மருளினமையால், "அடிகளார் தங் கையில் தாளமிருந்தவா றன்னேயென்னும்" என்றார். (அ)

தையலோர்பங்கினர்தாபதவேடத்தர்
ஐயம்புகுவராலன்னேயென்னும்
ஐயம்புகுந்தவர்போதலுமென்னுள்ளம்
நையுமிதுவென்னேயன்னேயென்னும்

ப - ரை. தையல் ஓர் பங்கினர் - பெண்ணமர்ந்த ஒருபாகத்தை யுடையவரும், தாபதவேடத்தர் - தவவேடத்தை யுடையவரும் (ஆகிய இறைவர்,) ஐயம்புகுவர் - பிச்சை புகுவர், அன்னே யென்னும்-தாயே என்பாள், ஐயம்புகுந்தவர் - பிச்சை புகுந்தவர், போதலும் - செல்லுதலும், என் உள்ளம் - என் மனமானது, நையும் - வருந்தும், இது என்னே - இது என்ன வியப்பு, அன்னே யென்னும்-தாயே யென்பாள்,——எ - று.

க - ரை. தாயே! இறைவர் பெண்பாகத்தரும், தவவேடத்தை யுடையவருமா யிருப்பதன்றி பிச்சை புகுவாருமா யிருக்கின்றனர் என்பாள், பிச்சை புகுந்தவர் போதலும் என் மனம் வருந்தாநிற்கும், இதற்குக் காரண மென்னோ என்பாள், என்பதாம். (கூ)

கொன்றைமதியமுங்கூவிளமத்தமும்
துன்றியசென்னியரன்னேயென்னும்
துன்றியசென்னியின்மத்தமுன்மத்தமே
இன்றெனக்கானவாறன்னேயென்னும்.

ப - ரை. (இறைவர்) கொன்றை மதியமும் - கொன்றைமலரோடு சந்திரனும், கூவிளம் மத்தமும் - வில்வத்தோடு ஊமத்தம்பூவும், துன்றிய சென்னியர் - பொருந்திய சிரத்தை யுடைவர், அன்னே யென்னும்——, துன்றிய சென்னியில் மத்தம் - பொருந்திய சிரத்திலுள்ள ஊமத்தமலர், இன்று எனக்கு - இப்பொழுது எனக்கு, உன் மத்தமே ஆனஆறு - உன் மத்தத்துக்குக் காரணமான வாறென்னை, அன்னே யென்னும்,——எ - று.

க - ரை. தாயே, இறைவர் கொன்றைமலர், பிறைச்சந்திரன், வில்வம், ஊமத்தமலர், இவைகளைத் தரித்த சிரத்தையுடையவரா யிருக்கின்றனர் என்பாள், அவரது சிரத்திலுள்ள ஊமத்தமலர் எனக்கு உன்மத்தத்தை யுண்டாக்குகின்றது என்பாள், என்பதாம். (கய)

# குயிற்பத்து.

ஆத்துமவிரக்கம்.

தில்லையி லருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

கீதமினியகுயிலேகேட்டியேலெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற்பாதாளமேழினுக்கப்பால் [மை
சோதிமணிமுடிசொல்லிற்சொல்லிறந்துநின்றதொன்
ஆதிகுணமொன்றுமில்லானந்தமிலான்வரக்கூவாய்

ப - ரை. கீதம் இனியகுயிலே - கீதம் பாடுதலில் இனிமையாகிய குயிலே, கேட்டியேல் - கேட்பையாயின், எங்கள் பெருமான் - எம்மிறைவனது, பாதம் இரண்டும் வினவில் - சீர்பாதங்களிரண்டும் எவ்விடத் தனவென்று வினவுமிடத்து, பாதாளம் ஏழினுக்கு அப்பால் - அதோலோகங்க ளேழுக்கும் அப்பாற்பட்டிருந்தன, சோதி மணிமுடி சொல்லின் - ஒளிபொருந்திய மணிமுடியைச் சொல்லுமிடத்து, சொல் இறந்துநின்ற - சொல்லுஞ் சொல்லளவைக் கடந்து நின்றது, தொன்மை ஆதிகுணம் - பழமை முதலிய குணங்கள், ஒன்றும் இல்லான் - சிறிதுமில்லாதவன், அந்தம் இல்லான் - முடிவில்லாதவன், (அவன்) வர- வரும் வண்ணம், கூவாய் - அழைப்பாயாக,——எ - று.

க - ரை. குயிலே, எம்மிறைவனது பாதமிரண்டும் பாதலமேழுக்கப்பாலன, முடியானது சொல்லளவைக் கடந்து நின்றது, ஆதலால் பழமை முதலிய குணங்க ளில்லாதவனும் முடியில்லாதவனுமாகிய சிவபெருமான் இங்கே வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம். (க)

ஏர்தருமேழுலகேத்தவெவ்வுருவுந்தன்னுருவாய்
ஆர்கலிசூழ்தென்னிலங்கையழகமர்வண்டோதரிக்குப்
பேரருளின்பமளித்தபெருந்துறைமேயபிரானைச்
சீரியவாயாற்குயிலேதென்பாண்டிநாடனைக்கூவாய்

ப - ரை. ஏர்தரும் - அழகைக் கொடுக்கின்ற, ஏழுலகுஏத்த- ஏழுலகத்தாரும் துதிக்க, எவ்வுருவும் - எந்தவுருவமும், தன் உரு

ஆய் - தன்னுருவமாகி, ஆர்கலிசூழ் - கடல் சூழ்ந்த, தென்னிலங்கை - தென்னிலங்கைப் பதியிலுள்ள, அழகு அமர்-அழகமைந்த வண்டோதரிக்கு - வண்டோதரிக்கு, பேர்அருள் - தனதுபெருங் கருணையால், இன்பம் அளித்த - இன்பத்தை யருளிச்செய்த பெருந்துறை மேயபிரானை - திருப்பெருந்துறை மேவிய பெருமானை, தென்பாண்டி நாடனை - தென்பாண்டி நாட்டையுடையானை, குயிலே——, சீரியவாயால் - உன் சிறந்த வாயினால், கூவாய் - அழைப்பாயாக,——எ - று.

க - ரை. ஏழுலகும் துதிக்கும்படி எல்லா வுருவமும் தன்னுருவமாய், தென்னிலங்கையில் வண்டோதரிக்குத் தன் பெருங் கருணையால் இன்பத்தைத்தந்தருளின திருப்பெருந்துறைப் பெருமானை, குயிலே, உன் சிறந்த வாயினால் அழைப்பாயாக என்பதாம். (உ)

நீலவுருவிற்குயிலேநீண்மணிமாடநிலாவும்
கோலவழகிற்றிகழுங்கொடிமங்கையுள்ளுறைகோயில்
சீலம்பெரிதுமினியதிருவுத்தரகோசமங்கை
ஞாலம்விளங்கவிருந்தநாயகனைவரக்கூவாய்.

ப - ரை. நீல உருவின் குயிலே - நீல வுருவத்தையுடைய குயிலே, நீள் - நீண்ட, மணிமாடம் நிலாவும் - மணிமாளிகைகள் விளங்கப் பெற்ற, கோல அழகின் - மிக்க அழகோடு, திகழும் - விளங்குகின்ற, சீலம் பெரிதும் இனிய - ஒழுக்கம் மிகவு மினிதாகிய, திருவுத்தரகோச மங்கை - திருவுத்தரகோச மங்கையில், கொடி - பூங்கொடிபோலும், மங்கை - உமாதேவியோடு, உள் உறை - உள்ளே வாழ்கின்ற, கோயில்-கோயிலில், ஞாலம் விளங்க இருந்த - உலகம் விளங்கும்படி யெழுந்தருளி யிருந்த, நாயகனை-தலைவனை, வரக்கூவாய்,——எ - று.

க - ரை. கருங்குயிலே, மணிமயமான மாளிகைகள் நிறைந்த திருவுத்தரகோச மங்கையில் இவ்வுலகம் நன்மை யடையும்படி யெழுந்தருளி யிருந்த இறைவனை இங்கே வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம். (௩)

தேன்பழச் சோலைபயிலுஞ் சிறுகுயிலே யிதுகேணீ,
வான்பழித் திம்மண்புகுந்து மனிதரை யாட்கொண்ட
வள்ளல், ஊன்பழித்துள்ளம் புகுந்தென் னுணர்வதுவாய
வொருத்தன், மான்பழித் தாண்டமென்னோக்கி மணாளனை நீ வரக்கூவாய்.

ப - ரை. தேன்பழச் சோலைபயிலும் - தேனோடு கூடிய பழச்சோலையில் சஞ்சரிக்கிற, சிறு குயிலே - சிறிய குயிலே, நீ இது கேள் - நீ யிதனைக் கேட்பாயாக, வான் பழித்து - விண்ணை யிகழ்ந்து, இம்மண் புகுந்து - இந்த மண்ணுலகத்திற் கெழுந்தருளி, மனிதரை ஆட்கொண்ட - மனிதரை யாட்கொண்டருளின, வள்ளல் - வள்ளன்மையுள்ளவனும், ஊன் பழித்து - உடம்பை விட்டு, உள்ளம் புகுந்து - மனத்திற் புகுந்து, என் உணர்வது ஆய ஒருத்தன் - என்னறிவுருவாகிய ஒருவனும், மான் பழித்து ஆண்ட - மானை யிகழ்ந்து ஆண்டருளின, மெல் நோக்கி மணாளனை - மெல்லிய பார்வையையுடைய வுமாதேவியின் கொழுநனுமாகிய சிவபெருமானை, நீவரக்கூவாய்-நீவரும்படி அழைப்பாயாக,—— எ - று.

க - ரை. பழச்சோலையிற் சஞ்சரிக்கிற குயிலே, விண்ணுலகத்தை யிகழ்ந்து இம்மண்ணுலகில் எழுந்தருளி மாநுடரை யாட்கொண்ட உதாரசீலனும், என் மனத்திற் புகுந்து என் அறிவுருவா யிருக்கின்ற வொருவனும், மானினது நோக்கத்தைப் பழித்த நோக்கத்தை யுடைய உமாதேவிக்கு நாயகனும் ஆகிய சிவபெருமானை, நீவரும்படி அழைப்பாயாக என்பதாம்.

வி - ரை. தேன்பழச்சோலை - தேன்போலும் பழங்களை யுடைய மாஞ்சோலை எனினு மமையும். இறைவியது நோக்கத்துக்கு மானினது நோக்கம் ஒவ்வாதென்றற்கு "மான்பழித் தாண்டமென்னோக்கி" என்றார். (௪)

சுந்தரத்தின்பக்குயிலேசூழ்சுடர்ஞாயிறுபோல
அந்தரத்தேநின்றிழிந்திங்கடியவராசையறுப்பான்
முந்துநடுவுமுடிவுமாகியமூவரறியாச்
சிந்துரச்சேவடியானைச்சேவகனைவரக்கூவாய்

ப - ரை. சுந்தரத்து - அழகினோடு, இன்பம் - ஓசையாலும் இன்பத்தைச் செய்கிற, குயிலே - குயிலே, சூழ்சுடர் ஞாயிறு போல - வளைந்த கிரணங்களையுடைய சூரியனைப்போல, அந்தரத்தே நின்று இழிந்து - விண்ணினின் றிழிந்து, இங்கு - இவ்வுலகிலுள்ள, அடியவர் ஆசை அறுப்பான் - அடியார்களுடைய ஆசைக்கயிற்றைச் சேதிப்பவன், முந்தும் - முதலும், நடுவும் - இடையும், முடிவும் ஆகிய - இறுதியுமாகிய, மூவர் அறியா - மூவராலுமுணரவொண்ணாத, சிந்துரச் சேவடியானை - செவந்த திருவடிகளை யுடையானை, சேவகனை - மஹா வீரனை, வரக் கூவாய்,— எ - று.

க - ரை. குயிலே, சூரியன்போல் ஆகாயத்தினின்றிறங்கி அடியார்களுடைய ஆசைக் கயிற்றைச் சேதிப்பவனும், முதல்நடு இறுதிகள்ஆகிய மூவரறியாத செவந்ததிருவடியை யுடையவனுமாகிய சிவபெருமானை இங்கே வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம்.

வி - ரை. அந்தரம் - பரமாகாயம் எனினுமாம். ஆசை அறுப்பான் என்பதற்கு குர்றத்தை யறுப்பவன் எனினுமாம். ஆசு - குற்றம். முந்துநடுவு முடிவுமாகிய சிந்துரச் சேவடியான் என்றும் மூவரறியாச் சிந்துரச் சேவடியான் என்றும் இயைத்துக்கொள்க.

இன்பந்தருவன்குயிலேயேழுலகும்முழுதாளி
அன்பனமுதளித்தூறுமானந்தன்வான்வந்ததேவன்
நன்பொன்மணிச்சுவடொத்தநற்பரிமேல்வருவானைக்
கொம்பின்மிழற்றுங்குயிலேகோகழிநாதனைக்கூவாய்.

ப - ரை குயிலே இன்பம் தருவன் - குயிலே உனக்கு இன்பத்தைக் கொடுப்பேன், ஏழுலகும் - ஏழுலகங்களையும், முழுது ஆளி - முழுதும் ஆள்பவன், அன்பன் - ஆன்மாக்கள்மீது அன்புள்ளவன், அமுது அளித்து ஊறும் ஆனந்தன் - அமிர்தச்சுவையைக் கொடுத்துப் பெருகுகின்ற ஆநந்தத்தை யுடையவன், வான் வந்த தேவன் - பரமாகாயத்தினின்றிழிந்த தேவன், நன்பொன் மணிச்சுவடு ஒத்த - உயர்ந்த பொன்மணிகள் போலும் புள்ளிகள் பொருந்திய, நல்பரிமேல் வருவானை - சிறந்த குதிரையின் மீதேறி வருவோனை, கொம்பில் மிழற்றும் குயிலே - மரக்கிளைகளின் மீதிருந்து கூவாநின்ற குயிலே, கோகழிநாதனை - திருவாவடுதுறைச் சிவபெருமானை, கூவாய்,——எ - று.

க - ரை. குயிலே, உனக்கு இதஞ்செய்வேன், ஏழுலகங்களையும் ஆள்பவனும், ஆன்மாக்கள்மீது அன்புள்ளவனும், அமிர்தத்தைப் போன்று சுரக்கின்ற ஆநந்தத்தை யுடையவனும், விண்ணினின்றிறங்கின தேவனும், நல்ல குதிரைமீதேறி வந்தவனுமாகிய சிவபெருமானை இங்கே வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம்.

உன்னையுகப்பன்குயிலேயுன்றுணைத்தோழியுமாவன்
பொன்னையழித்தநன்மேனிப்புகழிற்றிகழுமழகன்
மன்னன்பரிமிசைவந்தவள்ளல்பெருந்துறைமேய
தென்னவன்சேரலன்சோழன்சீர்ப்புயங்கன்வரக்கூவாய்.

ப - ரை. குயிலே உன்னை உகப்பன் - குயிலே உன்னை விரும்புவேன், உன் துணைத்தோழியும் ஆவன் - உன்னுயிர்த் துணைவியாகிய தோழியுமாவேன், பொன்னை அழித்த - பொன்னை அழ

ஈழித்த, நன்மேனி - திருமேனியினாலும், புகழின் - புகழினாலும், திகழும் அழகன் - மிக்குவிளங்குகின்ற அழகை யுடையவன், மன்னன் - தேவாதிபன், பரிமிசைவந்த வள்ளல் - குதிரைமேல் வந்த உதாரசீலன், பெருந்துறைமேய - திருப்பெருந்துறையிற் பொருந்திய, தென்னவன்-பாண்டியன், சேரலன்-சேரன், சோழன் - சோழன், சீர்ப்புயங்கன் - சிறப்புள்ள புயங்கன், (அவன்) வரக்கூவாய்——,எ - று.

க - ரை. குயிலே, உன்னை விரும்புவேன், உனக்குத் தோழியுமாவேன், பொன்போலுந் திருமேனியினாலும் புகழினாலும் விளங்குகின்ற அழகனும், எல்லார்க்கும் இறைவனும், குதிரைமேல்வந்த வள்ளலும், திருப்பெருந்துறையி லெழுந்தருளினவனும் ஆகிய சிவபெருமான் இங்கே வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம்.

வி - ரை. புயங்கம்-ஓர்கூத்து, இதனைச் செய்வோனாதலால் சிவபெருமானுக்குப் புயங்கன் எனப் பெயர் வந்தது, புயங்கம் - பாம்பு, இதனை யணிவோனாதலால் இப்பெயர்வந்த தெனினுமாம்.

வாவிங்கேநீகுயிற்பிள்ளாய்மாலொடுநான்முகன்றேடி
ஓவியவருன்னிநிற்பவொண்டழல்விண்பிளந்தோங்கி
மேவியன்றண்டங்கடந்துவிரிசுடராய்நின்றமெய்யன்
தாவிவரும்பரிப்பாகன்றாழ்சடையோன்வரக்கூவாய்.

ப - ரை. குயிற்பிள்ளாய் - குயிற்பிள்ளையே, நீ இங்கேவா - நீயிவ்விடத்து வருவாயாக, மாலொடு நான்முகன் தேடி - திருமாலோடு பிரமனும் தேடி, ஓவி - தேடுந் தொழிலொழிந்து, அவர் + அவர்கள், உன்னிநிற்ப - ஆலோசித்து நிற்க, ஒள்தழல் - ஒள்ளிய நெருப்பானது, விண்பிளந்து ஓங்கி - ஆகாயத்தைக் கிண்டுயர்ந்து, அன்று - அப்பொழுது, மேவி - பொருந்தி, அண்டம் கடந்து - உலகங்களையெல்லாம் கடந்து, விரிசுடர் ஆய் நின்ற - பரந்த ஒளியுருவாகிநின்ற, மெய்யன் - உண்மையன், தாவிவரும் - குதித்துக்கொண்டு வருகின்ற, பரிப்பாகன் - குதிரைப்பாகன், தாழ்சடையோன் - நீண்ட சடையை யுடையோன், (அவன்) வரக்கூவாய்,——எ - று.

க - ரை. குயிற்பிள்ளையே, நீ இங்கேவா, அரிபிரமர்கள் தேடிக் காணாமல் அயர்ந்துநிற்க, நெருப்புருவமாய் ஆகாயத்தை யளாவிநின்ற மெய்யனும், குதிரைமேற் கொண்டுவந்தவனும், நீண்ட சடையை யுடையவனும் ஆகிய சிவபெருமான் இங்கே வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம். (அ)

காருடைப்பொன் றிகழ்மேனிக் கடிபொழில் வாழுங் குயிலே, சீருடைச் செங்கமலத்திற் றிகழுருவாகிய செல்வன், பாரிடைப் பாதங்கள்காட்டிப் பாசமறுத் தெனை யாண்ட, ஆருடையம் பொனின்மேனி யமுதினை நீவரக் கூவாய்.

ப - ரை. கார் உடைப்பொன் திகழ்மேனி - கருமையை யுடைய பொன்போல விளங்குகின்ற மேனியோடு, கடிபொழில் வாழும் குயிலே - மணம் பொதிந்த சோலையில் வாழ்கின்ற குயிலே, சீர் உடை - சிறப்பையுடைய, செங்கமலத்தின் - செந்தாமரை மலர்போல, திகழ் - விளங்குகின்ற, உரு ஆகிய - திருவுருவைக் கொண்ட, செல்வன் - அழியாமையாகிய செல்வத்தை யுடையவன், பார் இடை - பூமியின்மேல், பாதங்கள் காட்டி - திருவடிகள் காட்டி, பாசம் அறுத்து - ஆசைத்தளையைச் சேதித்து, என்னை ஆண்ட - என்னை யாண்டருளின, ஆர் உடை - ஆத்தி மலர்மாலையையுடைய, அம் - அழகிய, பொன்னின் மேனி - பொன்மேனியையுடைய, அமுதினை - அமிர்தத்தை, நீ வரக்கூவாய்——, எ-று.

க - ரை. கரும் பொன்போல இச்சோலையில் வாழ்கின்ற குயிலே; செந்தாமரை மலர்போலும் திருவுருவைக்கொண்டசெல்வனும், பூமியில் தன் திருவடியைக் காட்டி என்பாசத்தைச் சேதித்து என்னை யாண்டருளினவனும், பொன்போலுந் திருமேனியையுடையவனுமாகிய சிவபெருமான் இங்கேவரும்படி நீ அழைப்பாயாக என்பதாம். (கூ)

கொந்தணவும்பொழிற்சோலைக்கூங்குயிலேயிதுகேணீ
அந்தணனாகிவந்திங்கேயழகியசேவடிகாட்டி
எந்தமராமிவனென்றிங்கென்னையுமாட்கொண்டருளும்
செந்தழல்போற்றிருமேனித் தேவர்பிரான்வரக்கூவாய்.

ப - ரை. கொந்து அணவும் பொழில் சோலை - பூங்கொத்துக்கள் நிறைந்த பெருமை வாய்ந்த சோலையின் கண்ணே, கூவும் குயிலே - கூவாநின்ற குயிலே, நீ இதுகேள் - நீ யிதனைக் கேட்பாயாக, இங்கே அந்தணன் ஆகிவந்து - இங்கு வேதியனாகி வந்து, அழகிய சேவடி காட்டி - அழகிய திருவடியைக் காட்டி, இவன் - இவன், எம் தமர் ஆம் என்று - எம்மடியாரி லொருவனாமென்று, இங்கு - இவ்விடத்து, என்னையும் ஆட்கொண்டருளும் - என்னையும் அடிமை கொண்டருளாநின்ற, செம் தழல்போல் - செவந்த நெருப்புப்போன்ற, திருமேனி - திருமேனியையுடைய, தேவர் பிரான் - தேவர் பெருமான், வரக்கூவாய்——எ - று.

க - ரை. குயிலே, இங்கே ஒரு வேதியனாய் வந்து தன்னுடைய திருவடியைக் காட்டி, இவன் என் அடியவன் என்று என்னை யாட்கொண்டருளின, செவந்த நெருப்புப்போலுந் திருமேனியையுடைய தேவர் பெருமான் வரும்படி நீ அழைப்பாயாக என்பதாம். (சo)

# திருத்தசாங்கம்.

அடிமைகொண்ட முறைமை.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

நேரிசை வெண்பா.

ஏராரிளங்கிளியேயெங்கள்பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந்துரையாய் - ஆரூரன் [போல்
செம்பெருமான்வெண்மலரான்பாற்கடலான்செப்புவ
எம்பெருமான்றேவர்பிரானென்று.

ப - ரை. ஏர்ஆர் - அழகு பொருந்திய, இளங்கிளியே - இளங்கிள்ளையே, எம்பெருமான் - எம்பிரான், தேவர்பிரான் - தேவர்பெருமான், ஆரூரன் - திருவாரூரன், செம்பெருமான் - செவந்த திருமேனியையுடைய இறைவன், என்று - என்று, வெண்மலரான் - பிரமனும், பால்கடலான் - திருமாலும், செப்புவபோல் - புகழ்ந்துரைத்தல்போல, எங்கள் பெருந்துறைக்கோன் - எமது பெருந்துறைக் கிறைவனது, சீர்ஆர் - சிறப்புப்பொருந்திய, திருநாமம் - திருநாமத்தை, தேர்ந்து உரையாய் - தெளிந்து சொல்வாய், எ - று.

க - ரை. அழகுள்ள இளங்கிளியே, எம்பிரானே, தேவர்பிரானே, திருவாரூரனே, செம்பெருமானே என்று பிரமனும் திருமாலும் புகழ்ந்துரைத்தல் போல, எமது திருப்பெருந்துறைக் கிறைவனுகிய சிவபெருமானது சிறப்புப்பொருந்திய திருநாமங்களைத் தெளிந்து சொல்வாயாக என்பதாம்.

வி - ரை. ஏர்ஆர் இளங்கிளியே என்பதற்கு அழகுள்ள அருமையாகிய இளங்கிளியே என்றுரைத்தலும் பொருந்தும். ஆர் என்பதற்கு அருமை பகுதி. எம்பெருமான், தேவர்பிரான், ஆரூரன், செம்பெருமான் என்பன அண்மைவிளிக ளாதலால் இயல்பாயின. இந்தத் திருத்தசாங்கம் கிளியை நோக்கிக் கூறியது.

தசாங்கம் பத்து அங்கங்களைக் கூறுவது. பத்து அங்கங்களாவன- பெயர், நாடு, ஊர், யாறு, மலை, புரவி, படை, முரசு, தார், கொடி, என்பன, இவற்றை முறையே, இப்பத்துப் பாட்டிலுங் காண்க·

இந்தச் செய்யுளில் பெயர் கூறப்பட்டது. (க)

ஏதமிலாவின்சொன்மரகதமேயேழ்பொழிற்கும்
நாதனமையாளுடையானாடுரையாய் - காதலவர்க்
கன்பாண்டுமீளாவருள்புரிவானாடென்றும்
தென்பாண்டிநாடேதெளி.

ப - ரை. ஏதம் இல்லா - குற்றமில்லாத, இன்சொல் - இனிய சொற்களைச் சொல்லுகின்ற, மரகதமே - கிளியே, ஏழ்பொழிற்கும் - ஏழுலகங்களுக்கும், நாதன் - இறைவன், நம்மை ஆள்உடையான் - நம்மை யாளாக வுடையவன், (அவனது) நாடு உரையாய்- நாட்டைப் புகழ்வாயாக, (அவனது நாடு எதுவோ வெனின்-) காதலவர்க்கு - தன்மீ தன்புள்ளவரை, அன்பு ஆண்டு - அன்பினாலாண்டருளி, மீளா அருள் புரிவான் - பிறவிக்கு மீண்டு வராமைக்குக் காரணமாகிய தன்னருளைச் செய்பவனது, நாடு - நாடானது, என்றும் - எப்பொழுதும், தென்பாண்டிநாடே - தென்பாண்டி நாடேயாம், தெளி - நீ தெளிவாயாக, எ - று.

க - ரை. குற்றமற்ற இனிய சொற்களையுடைய கிளியே, ஏழுலகுக்கும் தலைவனும், நம்மை யடிமையாகவுடையவனுமாகிய சிவபெருமானது நாட்டைப் புகழ்ந்து சொல்வாயாக, அவனது நாடு யாதெனின், அன்பரைத் தன் அன்பினால் ஆண்டருளிப் பிறவிக்கு மீண்டு வராமல் அருள் செய்வானது நாடு தென்பாண்டி நாடேயாம், இதனை நீ தெளிவாயாக என்பதாம்.

வி - ரை. மரகதம் - பச்சை, அது அந்நிறத்தை யுடைமையாலும் இன்சொல் என்னும் விசேடணத்தாலும் கிளியை யுணர்த்திற்று. பொழில்-உலகு. இந்தச் செய்யுளில் நாடு கூறப்பட்டது.

தாதாடுபூஞ்சோலைத்தத்தாய்நமையாளும்
மாதாடும்பாகத்தன்வாழ்பதியென் - கோதாட்டிப்
பத்தரெல்லாம்பார்மேற்சிவபுரம்போற்கொண்டாடும்
உத்தரகோசமங்கையூர்.

ப - ரை. தாது ஆடு - மகரந்தம் பொருந்திய, பூசோலை - பூம்பொழிலிலுள்ள, தத்தாய் - கிள்ளையே, நம்மை ஆளும் - நம்மையாண் டருள்கின்ற, மாது ஆடும் பாகத்தன் - பெண்ணமர்ந்த

பாகத்தை யுடையவன், வாழ் - வாழ்கின்ற, பதிஎன் - ஊரைச் சொல்வாய், (அது யாதோ எனின்) பார்மேல் - பூமியில், பத்தர் எல்லாம் - பத்தரெல்லாரும், கோதாட்டி - சீராட்டி, சிவபுரம் போல் கொண்டாடும் - சிவநகர்போலக் கொண்டாடுகின்ற, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோச மங்கையே, ஊர் - அவனது ஊராகும், எ - று.

க - ரை. பூஞ்சோலையிலுள்ள கிளியே, நம்மை யாண்டருளுகின்ற பெண்பாகனாகிய சிவபெருமானது ஊரைச் சொல்வாயாக, அவனது ஊர் யாதெனின், பத்தரெல்லாரும் உலகிலுள்ளோர் சிவபுரம்போலக் கொண்டாடுகின்ற திருவுத்தரகோச மங்கையேயாம் என்பதாம்.

இந்தச் செய்யுளில் ஊர் கூறப்பட்டது. (௩)

செய்யவாய்ப்பைஞ்சிறகிற்செல்வீநஞ்சிந்தைசேர்
ஐயன்பெருந்துறையானாறுரையாய் - தையலாய்
வான்வந்தசிந்தைமலங்கழுவவந்திழியும்
ஆனந்தங்காணுடையானாறு.

ப - ரை. செய்யவாய் - செவந்த வாயையும், பைசிறகின் - பசிய சிறகினையுமுடைய, செல்வீ - பாக்கியவதீ, நம் சிந்தை சேர் ஐயன் - நம் மனத்திற் பொருந்தின ஐயன், பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், (அவனது) ஆறு உரையாய் - நதியை எனக்குக் கூறுவாயாக, (அது யாதோ வெனின்) தையலாய் - பெண்ணே, வான்வந்த - பெருமைபொருந்திய, சிந்தை மலம் கழுவ - எமது மனமாசைக் கழிக்கும்பொருட்டு, வந்திழியும் - வந்திறங்குகின்ற, ஆனந்தம் - ஆநந்தமே, உடையான் ஆறு - எம்மை யுடையானது நதியாம்,——எ - று.

க - ரை. செவ்வாயையும் பசுமையாகிய சிறகையுமுடைய கிளியே, நமது மனத்திற் பொருந்திய ஐயனாகிய பெருந்துறையானது ஆற்றைச் சொல்வாயாக, அவனது ஆறு யாதெனின், பெருமை யமைந்த எமது மனத்தின் மாசை யொழிக்க வந்திறங்குகின்ற பேரானந்தமே அவனது ஆறுவது என்பதாம்.

வி - ரை. செய்யவாய் என்றது செவந்த மூக்கினை, செல்வி புதல்வியெனினுமாம். தையலாய் என்றதனால் பெண்கிளி யென்பது பெறப்பட்டது. வான்வந்த சிந்தை என்றதனால் அன்பரது மனம் என்றதாயிற்று. சிந்தைமலம் - மனவழுக்குகள், அவை

காமவெகுளி மயக்கங்களாகிய முக்குற்றங்கள். ஆணவம், மாயை, காமியம் என்னும் மும்மலங்கள் என்றுங் கூறுவர்.

இந்தச் செய்யுளில் ஆறு கூறப்பட்டது. (ச)

கிஞ்சுகவாயஞ்சுகமேகேடில்பெருந்துறைக்கோன்
மஞ்சன்மருவுமலைபகராய் - நெஞ்சத்
திருளகலவாள்வீசியின்பமருமுத்தி
அருளுமலையென்பதுகாணய்ந்து.

ப - ரை. கிஞ்சுகம் வாய் - செவ்வாயையுடைய, அம்சுகமே - அழகிய கிள்ளையே, ஆய்ந்து - ஆராய்ந்து, கேடுஇல் - அழிவில்லாத, பெருந்துறைக்கோன் - திருப்பெருந் துறைக்கிறைவன், மஞ்சன் - அழகன், மருவும் - (அவன்) வாழ்கின்ற, மலைபகராய் - மலையை யெடுத்துக் கூறுவாயாக, (அது யாதோ வெனின்) நெஞ்சத்து இருள் அகல - மனவிருள் நீங்கும்படி, வாள்வீசி - ஒளிவீசி, இன்பு அமரும் முத்தி - இன்பமமர்ந்த முத்தியை, அருளும் மலையென்பது - (நமக்கு வேண்டியவற்றை) அருளாநின்ற கைலாய மலையென்று சொல்லப்படுவது,——எ - று.

க - ரை. செவ்வாயையுடைய அழகிய கிளியே, அழிவற்ற திருப்பெருந் துறைக் கிறைவனும் அழகனுமாகிய சிவபிரான் வாழ்கின்ற மலையைச் சொல்வாயாக, அவனது மலையாதெனின், எமது மனவிருள் நீங்க ஒளிவீசி, இன்பமமைந்த மோக்ஷத்தை யருள்செய்கின்ற கைலாய மலையேயாம் என்பதாம்.

வி - ரை. கிஞ்சுகம் - முருக்கம்பூ எனினுமாம். இந்தச் செய்யுளில் மலை கூறப்பட்டது. (ரு)

இப்பாடேவந்தியம்புகூடுபுகலென்கிளியே
ஒப்பாடாச்சீருடையானூர்வதென்னே - எப்போதும்
தேன்புரையுஞ்சிந்தையராய்த்தெய்வப் பெண்ணேத்தி
வான்புரவியூருமகிழ்ந்து. [சைப்ப

ப - ரை. என்கிளியே - என்கிள்ளையே, கூடுபுகல் - கூட்டில் நுழையாதே, இப்பாடேவந்து இயம்பு - இவ்விடத்தேவந்து சொல்வாயாக, ஒப்பு ஆடா - உவமையற்ற, சீர்உடையான் - சிறப்பினையுடையான், ஊர்வது - ஊர்தியை, என் - புகழ்ந்துபேசு, (அது யாதோ வெனின்) எப்போதும் - எக்காலத்தும், தேன் புரையும் சிந்தையராய் - தேனையொத்த மனத்தை யுடையராய், தெய்வப்பெண் - தெய்வப்பெண்கள், ஏத்து இசைப்ப - துதிசெ

ய்ய, வான்புரவி - சிதாகாயமாகிய குதிரையை, மகிழ்ந்து உளரும்- மகிழ்ந்து நடத்துவன்,—— எ - று.

க - ரை. என்கிளியே, கூட்டிற் புகாதே இங்கேவந்து ஒப் பற்ற சிறப்புடைய சிவபிரான் ஏறி நடத்துவதைச் சொல்வாயாக, அது யாதெனின், எப்பொழுதும் இனியமன முடையராய்த் தெ ய்வப் பெண்கள் வாழ்த்தச் சிதாகாயமாகிய புரவியை யூர்வன் என்பதாம்.

வி - ரை. தேன்புரையுஞ் சிந்தை என்றது அன்புள்ள மனம் என்றபடி. இந்தச் செய்யுளில் புரவி கூறப்பட்டது. (௬)

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்
மாற்றாரைவெல்லும்படைபகராய் - ஏற்றார் [கோன்
அழுக்கடையாநெஞ்சுருகமும்மலங்கள்பாயும்
கழுக்கடைகாண்கைக்கொள்படை.

ப - ரை. கோல்தேன் மொழி - கொம்புத் தேன்போன்ற மொழியையுடைய, கிள்ளாய் - கிள்ளையே, கோதுஇல் - குற்ற மில்லாத, பெருந்துறைக்கோன் - திருப்பெருந்துறைக் கிறைவன், மாற்றாரை வெல்லும் - பகைவரை வெல்லுகின்ற, படைபகராய்- ஆயுதத்தை யெடுத்துக் கூறுவாய், (அது யாதோ வெனின்) ஏற் றார் - தன்னையிரந்த அன்பர், அழுக்கு அடையா - களங்கத்தை யடையாமல், நெஞ்சு உருக - மனமுருகும்படி, மும்மலங்கள் பாயும் - (அவரது) மும்மலங்களைப் பாய்ந்தழிக்கின்ற, கழுக்கடை- சூலமே, கைக்கொள்படை - (அவன்) கைக்கொண்ட படையாம், —— எ - று.

க - ரை. தேன்போலும் இன்சொல்லையுடைய கிளியே, திருப்பெருந்துறைக் கிறைவனாகிய சிவபெருமான் பகைவரை வெல்லும்படையைச் சொல்வாயாக, அப்படை யாதெனின், தன்னை யிரந்த அன்பர், களங்கத்தை யடையாமல் மனமுருகும் படி அவரது மும்மலங்களைப் பாய்ந்தழிக்கின்ற சூலமேயாம் என் பதாம்.

வி - ரை. சுவைமிகுதி யுடைமையால் கோற்றேன் என்றார். இது "மாற்றேனெனன வந்தகாலனையோல மிடவடர்த்த கோற் றேன்" என்னுந் திருக்கோவைச் செய்யுளுரையால் இனிதுவிள ங்கும். பாய்தல் - குத்தியுருவுதல், இந்தச் செய்யுளில் படை கூற ப்பட்டது. (௭)

இன்பான்மொழிக்கிள்ளா யெங்கள்பெருந் துறைக்கோ
முன்பான்முழங்குமுரசியம்பாய் - அன்பால் [ன்
பிறவிப்பகைகலங்கப்பேரின்பத்தோங்கும்
பருமிக்கநாதப்பறை.

ப - ரை. இன் - இனிய, பால் - பால்போன்ற, மொழி - மதுரமொழியையுடைய, கிள்ளாய் - கிள்ளையே, எங்கள் பெருந்துறைக்கோன் - எங்கள் பெருந்துறை நாயகனுக்கு, முன்பால் - முற்பக்கத்தில், முழங்கும் - ஒலிக்கின்ற, முரசுஇயம்பாய் - முரச வாத்தியத்தை எடுத்துப் புகழ்வாய், (அது யாதோ வெனின்) அன்பால் - அன்பினுல், பிறவிப்பகை கலங்க - பிறவிப்பகையானது கலங்கும்படி, பேரின்பத்து ஓங்கும் - பேரானந்தத்தோ டுயர்ந்த, பருமிக்க - மிகப் பெருத்த, நாதப்பறை - நாதமாகிய பறையே அவனுக் குரியதாம்,——எ - று.

க - ரை. இனிய பால்போலு மொழியையுடைய கிளியே, எங்கள் பெருந்துறைப் பெருமானுக் கெதிரில் முழங்குகின்ற முரசைச் சொல்வாயாக, அம்முரசு யாதெனின், அன்பரது பிறவிப் பகை கலங்கும்படி பேரானந்தத்தோடு கூடி யுயர்ந்த மிகப் பெரிய நாதமேயாம் என்பதாம்.

இந்தச் செய்யுளில் பறை கூறப்பட்டது. (அ)

ஆயமொழிக்கிள்ளாயள்ளூறுமன்பர்பால்
மேயபெருந்துறையான்மெய்த்தாரென் - தீயவினை
நாளுமணுகாவண்ணநாயேனையாளுடையான்
தாளியறுகாமுவந்ததார்.

ப - ரை. ஆயமொழிக் கிள்ளாய் - ஆராய்ந்த மொழிகளையுடைய கிள்ளையே, அள்ளூறும் அன்பர்பால் - அள்ளூறுகின்ற அன்பரிடத்து, மேய - பொருந்துகின்ற, பெருந்துறையான் - பெருந்துறையை யுடையானது, மெய் - உண்மையாகிய, தார் என் - மாலையை யெடுத்துச் சொல்வாயாக, (அது யாதோ வெனின்) தீயவினை - தீவினைகள், நாளும் அணுகாவண்ணம் - நாள் தோறும் சேராவகை, நாயேனை ஆள் உடையான் - நாயினேனை யாளாக வுடையவன், உவந்த - விரும்பி யணிந்த, தார் - மாலை, தாளி அறுகுஆம் - தாளியும் அறுகுமேயாம்,——எ - று.

க - ரை. ஆராய்ந்த மொழியையுடைய கிளியே, அன்பரிடத்திற் பொருந்துகின்ற பெருந்துறைப் பெருமானது மாலையைப்

புகழ்ந்து பேசுவாயாக, அம்மாலை யாதெனின், தீவினையானது எப்போதும் என்னைச் சேராதபடி நாயினேனை யாளாகவுடைய வன் விரும்பினமாலை தாளியும் அறுகுமேயாம் என்பதாம்.

அள்ளூறல் - என்புருகுதல். இந்தச் செய்யுளில் மாலை கூறப்பட்டது. (கூ)

சோலைப்பசுங்கிளியேதூநீர்ப்பெருந்துறைக்கோன்
கோலம்பொலியுங்கொடிகூறாய் - சாலவும்
ஏதிலார்துண்ணென்னமேல்விளங்கியேர்காட்டும்
கோதிலாவேறுங்கொடி.

ப - ரை. சோலைப் பசுங்கிளியே - சோலையில் வாழ்கின்ற பசுங் கிள்ளையே, தூநீர் - பரிசுத்தமாகிய நீர் சூழ்ந்த, பெருந் துறைக்கோன் - திருப்பெருந்துறைக் கிறைவனது, கோலம் பொலியும் - அழகு விளங்காநின்ற, கொடி கூறாய் - கொடியை யெடுத்துச் சொல்வாய், (அது யாதோ வெனின்) சாலவும் - மிகவும், ஏதிலார் - பகைவர், துண்ணென்ன - அஞ்சும்படி, மேல்விளங்கி- மேன்மையாய் விளங்கி, ஏர்காட்டும் - அழகைக் காட்டுகின்ற, கோது இல்லா - குற்றமற்ற, ஏறு - இடபமே, கொடிஆம்- (அவனுக்குக்) கொடியாகும்,—— எ - று.

க - ரை. சோலையில் வாழ்கின்ற பைங்கிளியே, திருப்பெருந்துறைக் கிறைவனாகிய சிவபிரானது அழகிய கொடியைச் சொல்வாயாக, அக்கொடி யாதெனின், பகைவர் அஞ்சும்படி மேன்மையாய் விளங்கி அழகைச் செய்கின்ற குற்றமற்ற இடபக்கொடியேயாம் என்பதாம்.

வி - ரை. தூநீர் - பரிசுத்தமான குணம் எனினுமாம். துண்ணெனல் - அச்சக்குறிப்பு. ஏறுதரும வுருவினதாதலால் "கோதிலாவேறு" என்றார். இந்தச் செய்யுளில் கொடி கூறப்பட்டது.

# திருப்பள்ளியெழுச்சி.

திரோதானசுத்தி.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

போற்றியென்வாழ்முதலாகியபொருளே
புலர்ந்ததுபூங்கழற்கிணை துணைமலர்கொண்
டேற்றிநின்திருமுகத்தெமக்கருண்மலரும்
எழினகைகொண்டுநின்றிருவடிதொழுகோம்
சேற்றிதழ்க்கமலங்கண்மலருந்தண்வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
ஏற்றுயர்கொடியுடையாயெனையுடையாய்
எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. என்வாழ்முதல்ஆகியபொருளே - என்வாழ்ச்சிக்குக் காரணமாகிய பொருளே, போற்றி-(உன்பொருட்டு) நமஸ்காரம், புலர்ந்தது - பொழுதுவிடிந்தது, பூங்கழற்கு - தாமரைமலர்போலுந் திருவடிகளுக்கு, இணை - இசைந்த, துணை - தமக்குத்தாமேயொப்பாகிய, மலர்கொண்டு - மலர்களைக்கொண்டு, ஏற்றி - அருச்சித்து, நின்திருமுகத்து - உன் திருமுகத்துள்ள, எமக்கு அருள்மலரும் - எமக்கு அருளைச்செய்கின்ற, எழில்நகைகொண்டு - அழகிய நகையை யேற்றுக்கொண்டு, நின்திருவடி தொழுகோம் - உன்திருவடியைத் தொழாநின்றோம், சேற்று - சேற்றினிடத்து, இதழ்க்கமலங்கள்மலரும் - இதழ்களோடுகூடிய தாமரைகள் மலர்கின்ற, தண்வயல்சூழ் - தண்ணிய வயல்கள்சூழ்ந்த, திருப்பெருந்துறை உறை - திருப்பெருந்துறையில் நித்யவாசம் பண்ணுகிற, சிவபெருமானே - சிவபிரானே, ஏற்று உயர் - இடபத்தாலுயர்த்த, கொடிஉடையாய் - கொடியையுடையோய், என்னைஉடையாய்- எனனையுடையோய், எம்பெருமான் - எம்பிரானே, பள்ளி எழுந்தருளாய் - பள்ளியெழுந்தருள்வாயாக, எ - று.

க - ரை. இறைவனே, பொழுதுவிடிந்தது, உன்திருவடியை மலர்களைக்கொண்டு அருச்சித்து வணங்க வந்தோம், நீ திருப்பள்ளி யெழுந்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. இணைத்தல் - தொடுத்தல் எனினுமாம்.

அருணனிந்திரன்றிசையணுகினனிருள்போய்
அகன்றதுவுதயநின்மலர்த்திருமுகத்தின்
கருணையின்சூரியனெழவெழநயனக்
கடிமலர்மலரமற்றண்ணலங்கண்ணும்
திரணிரையறுபதமுரல்வனவிவையோர்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
அருணிதிதரவருமானந்தமலையே
அலைகடலேபள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. அருணன்-சூரியன், இந்திரன்திசை அணுகினன் - இந்திரன்திசையாகிய கீட்டிசை யடைந்தான், இருள்போய் அகன்றது - இருள்முழுதும் நீங்கிற்று, உதயம் - உதயகாலத்தில், நின் மலர்திருமுகத்தின்-உனது தாமரை மலர்போலுந் திருமுகத்தில், கருணையின் சூரியன்எழஎழ - கருணையாகிய சூரியன் எழுந்தோறும், நயனம் கடிமலர்மலர - கண்களாகிய வாசனை பொருந்திய தாமரைமலர்கள் மலர, மற்று - மேலும், அண்ணல்-பெரியோய், அம்கண்ஆம் - அழகிய பெருமைபொருந்திய, திரள்நிரை அறுபதம் - திரண்டு வரிசையாகிய வண்டுகள், முரல்வன - சத்தியாநின்றன, இவை - இவைகளை, ஓர் - உணர், திருப்பெருந்துறையுறைசிவபெருமானே——, அருள்நிதிதர வரும்-அருளாகிய நிக்ஷேபத்தைக் கொடுக்க வருகின்ற, ஆனந்தமலையே - இன்பமலையே, அலைகடலே - (இன்ப) சாகரமே, பள்ளியெழுந்தருளாய்——, எ - று.

க - ரை சூரியன் கீழ்த்திசையடைந்தான், இருள் நீங்கிற்று, வண்டுகள் மலர்களில் ஆரவாரிக்கின்றன, நீ திருப்பள்ளி யெழுந்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. சூரியன் கீழ்த்திசையணுகுதல், இருள் நீங்குதல், வண்டுகள் மலர்களில் மொய்த்து ஆரவாரித்தல் முதலியவை பொழுது புலர்தற்குறிகளாதலால் இவ்வாறுகூறலாயிற்று. கருணையோடு கூடிய கண்மலர என்றற்கு, "கருணையின் சூரியனெழவெழ நயனக்கடிமலர் மலர" என்றார். கண் ஆம் என்பதற்கு

மாதர்கண்போல்கின்ற எனினுமாம். வண்டுக்கு ஆறுகால்க ளுண்மையால் அறுபதம் எனப்பட்டது. நிதி - பலவகைத் திரவியங்கள் என்றலுமாம். நிதிதருதற்கு மலையுரியதாதலால், "அருணிதிதர வருமானந்த மலையே" என்றார்.

கூவினபூங்குயில்கூவினகோழி
குருகுகளியம்பினவியம்பினசங்கம்
ஓவினதாரகையொளியொளியுதயத்
தொருப்படுகின்றதுவிருப்பொடுநமக்குத்
தேவநற்செறிகழற்றாளிணைகாட்டாய்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யாவருமறிவரியாயெமக்கெளியாய்
எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. பூங்குயில் கூவின - அழகாகிய குயில்கள் கூவின, கோழிகூவின - கோழிகள் கூவின, குருகுகள் இயம்பின - பறவைகள் ஒலித்தன, சங்கம் இயம்பின - சங்குகள் முழங்கின, தாரகை ஒளிஓவின - உடுக்களின் ஒளி நீங்கின, ஒளி உதயத்து ஒருப்படுகின்றது - உதயகாலத்தின் ஒளி ஒருப்பட்டெழாநின்றது, தேவ - தேவனே, நமக்கு - எமக்கு, விருப்பொடு - அன்புடன், நல் - சிறந்த, செறிகழல் - நெருங்கிய வீரக்கழலையணிந்த, தாள் இணை காட்டாய் - திருவடித்துணையைக் காட்டியருளாய், திருப்பெருந்துறையுறை சிவபெருமானே—, யாவரும் அறிவுஅரியாய்- யாவராயினும் அறிதற்கரியானே, எமக்கு எளியாய் - எமக்கு எளியோனே, எம்பெருமான் பள்ளியெழுந்தருளாய்——, எ - று.

க - ரை. குயில்கள் கூவின, கோழிகள் கூவின, வேறு பறவைகள் சத்தித்தன, சூரியனும் உதித்தான், உடுத்திரள் ஒளி மழுங்கின, உன்திருவடியை யாம்கண்டு சேவிக்க நீ திருப்பள்ளியெழுந்தருள வேண்டும் என்பதாம்.

வி - ரை. கோழி யென்றது இவ்விடத்துச் சேவலுக்காயிற்று. குருகு - பறவைப்பொது.

இன்னிசைவீணையரியாழினரொருபால்
இருக்கொடுதோத்திரமியம்பினரொருபால்
துன்னியபிணைமலர்க்கையினரொருபால்
தொழுகையரழுகையர்துவள்கையரொருபால்

சென்னியிலஞ்சலிகூப்பினரொருபால்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
என்னையுமாண்டுகொண்டின்னருள்புரியும்
எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. இன்இசைவீணையர் - இனிய இசையுள்ள வீணையையுடையவரும், யாழினர் - யாழையுடையவரும், ஒருபால் - ஒருபக்கத்திலும், இருக்கொடு - வேதங்களோடு, தோத்திரம் இயம்பினர் - வேறு தோத்திரங்களைச் செய்பவர், ஒருபால் - ஒருபக்கத்திலும், துன்னிய - நெருங்கிய, பிணைமலர்க்கையினர்-மலர்மாலையை யேந்திய கையினையுடையவர், ஒருபால் - ஒருபக்கத்திலும், தொழுகையர் - தொழுவோரும், அழுகையர் - அழுவோரும், துவள்கையர் - துவள்வோரும், ஒருபால் - ஒருபக்கத்திலும், சென்னியில் - சிரசின்மேல், அஞ்சலி கூப்பினர் ஒருபால் - அஞ்சலியாகக் கைகுவித்தவர் ஒரு பக்கத்திலும் நிறைந்து நின்றார்கள், திருப்பெருந்துறை உறை சிவபெருமானே——,என்னையும் ஆண்டுகொண்டு - என்னையும் ஆண்டுகொண்டு, இன் அருள்புரியும் - இனிய அருள்புரிகின்ற, எம்பெருமான் - எமபிரானே, பள்ளியெழுந்தருளாய்——,எ - று.

க - ரை. வீணை, யாழ், வாத்தியக்காரர், வேதமுலானவற்றைக்கொண்டு தோத்திரஞ்செய்வோர், பூமாலை யேந்தியகையினையுடையவர், வணங்கிக் கூப்பின கையினையுடையவர் முதலாகிய எல்லாரும் வந்திருக்கிறார்கள், நீ திருப்பள்ளி யெழுந்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. பலவகை வாத்தியங்களினுஞ் சிறந்தன வீணை யாழ் என்பனவாதலால் "இன்னிசைவீணையரியாழினர்" என அவற்றை முதற்கண் வைத்தும் இன்என விசேடித்தும் கூறினர். வீணையர் யாழினர் என்றது கந்தருவரை எனினுமாம்.

பூதங்கடோறுநின்றாயெனினல்லால்
போக்கிலன்வரவிலனெனநினைப்புலவோர்
கீதங்கள்பாடுதலாடுதலல்லால்
கேட்டறியோமுனைக்கண்டறிவாரைச்
சீதங்கொள்வயற்றிருப்பெருந்துறைமன்னு
சிந்தனைக்கும்மரியாயெங்கண்முன்வந்
தேதங்களறுத்தெம்மையாண்டருள்புரியும்
எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. பூதங்கள்தோறும் - எல்லாப்பூதங்களிலும், நின்றுயெனின் அல்லால் - நிலைத்திருக்கிறுயென் றுரைப்பினல்லது, போக்கு இலன் வரவு இலன்என - போதல் இல்லாதவன் வருதல் இல்லாதவன் என்று, நின்னை - உன்னை, புலவோர் - அறிவுடையார், கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால் - கீதங்களைப்பாடுதலும் ஆடுதலும் அன்றி, உன்னைக் கண்டறிவாரை - உன்னைக்கண்டறிவோரை, கேட்டறியோம்-கேட்டறிந்திலோம், சீதம்கொள் - குளிர்ச்சியைக் கொண்ட, வயல் - வயல்சூழ்ந்த, திருப்பெருந்துறை மன்னு - திருப்பொருந்துறைக்கரசனே, சிந்தனைக்கும் அரியாய்-நினைத்தற்கும் அரியானே, எம்கண்முன் வந்து - எமது கண்ணுக்கெதிரில் எழுந்தருளி, ஏதங்கள் அறுத்து - குற்றங்களைக் கண்டித்து, எம்மைஆண்டு அருள்புரியும்-எங்களை யாட்கொண்டு அருள்செய்கின்ற, எம்பெருமான் பள்ளி எழுந்தருளாய்——,எ - று.

க - ரை. எல்லாப் பூதங்களிலும் நிறைந்து நின்றவன், போக்குவரவற்றவன் என்று அறிஞர் உன்னைக் கீதங்கள் பாடிகளித்தாடுவதல்லாமல் உன்னைக் கண்டறிவாரைக் கேட்டுமறியோம், திருப்பெருந்துறை யிறைவனே, எமது பிறவித் துயரறுத்து ஆண்டுகொண்டருள வல்ல எம்பெருமானே, நீ திருப்பள்ளியெழுந்தருள வேண்டும் என்பதாம்.

வி - ரை. பூதங்கள் என்றது இங்கு உயிர்களை, பாடுதல் ஆடுதல்களுக்கு ஒற்றுமை யுண்மையால் "பாடுதலாடுதல்" என்றுர்.

பப்பறவீட்டிருந்துணருநின்னடியார்
பந்தனைவந்தறுத்தாரவர்பலரும்
மைப்புறுகண்ணியர்மானுடத்தியல்பின்
வணங்குகின்றூரணங்கின்மணவாளா
செப்புறுகமலங்கண்மலருந்தண்வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
இப்பிறப்பறுத்தெமையாண்டருள்புரியும்
எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை, பப்பற - மனப்பரப்பில்லா தொழிய, வீட்டிருந்து-மோனநிலைத்திலிருந்து, உணரும் - உள்ளவாறு உணர்கின்ற, நின்அடியார் - உன்னடியாராய், பந்தனை அறுத்தார் - பிறவிக்கட்டைச் சேதித்தவராகிய, பலரும் - அநேகரும், மைப்புஉறுகண்ணியர் - கறுத்தல்மிக்க கண்களையுடைய மாதரும், மானுடத்து இயல்பின் - மானுட வியல்பினோடு வந்து, வணங்குகின்றூர் -

வணங்கா நின்றனர், அணங்கின் மணவாளா - உமாதேவிக்கு மணவாளனே, செப்பு உறுகமலங்கள் - செவத்தல் மிகுந்த தாமரைகள், மலரும் - மலர்தற்கிடமாகிய, தண்வயல்சூழ் - தண்ணிய வயல் சூழ்ந்த, திருப்பெருந்துறையுறை சிவபெருமானே——,இப்பிறப்பு அறுத்து - இப்பிறவிப் பிணிப்பைச் சேதித்து, எம்மை ஆண்டு அருள்புரியும் - எங்களையாட்கொண்டருள் செய்கிற, எம்பெருமான் பள்ளியெழுந்தருளாய்,——எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னடியார் முதலியயாவரும் வந்து வணங்காநின்றனர். நீ திருப்பள்ளியெழுந்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. பப்பு - ஒப்பு எனினுமாம். வீடு - துறவு எனினுமாம் (விடுதல்). மானுடத்தியல்பின் வணங்குகின்றார் என்றதனால் வீட்டு நிலத்திலிருந்து வந்து வணங்குகின்றார் என்றதாயிற்று. மைப்புறு கண்ணியர் என்றது தெய்வப் பெண்களை. அணங்கு - தெய்வப் பெண் பொதுப் பெயராயினும் இவ்விடத்து உமாதேவியை யுணர்த்திற்று. செப்பு புகழ்தற்குரிய எனினுமாம். சேப்பு என்பது செப்பு எனக்குறுகிற்று, இதற்குப் பகுதி செம்மை. (சு)

அதுபழச்சுவையெனவமுதெனவறிதற்
கரிதெனவெளிதெனவமரருமறியார்
இதுவவன்றிருவுருவிவனவனெனவே
யெங்களையாண்டுகொண்டிங்கெழுந்தருளும்
மதுவளர்பொழிற்றிருவுத்தரகோச
மங்கையுள்ளாய்திருப்பெருந்துறைமன்னா
எதுவெமைப்பணிகொளுமாறதுகேட்போ
மெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. அது - அந்தப்பொருள், பழச்சுவை யென - முக்கனிகளின் சுவை யெனவும், அமுது என - அமுதெனவும், அறிதற்கு அரிது என - அறிதற் கரிதெனவும், எளிது என - எளிதெனவும், அமரரும் அறியார் - தேவருமறியார்கள், இது அவன் திருவுரு - இது அவனது திருவுருவம், இவன் அவன் - இவனேயவன், எனவே - என்று சொல்லும்படியாகவே, எங்களை ஆண்டு கொண்டு - எங்களை யாண்டுகொண்டு, இங்கு எழுந்தருளும்-இவ்விடத் தெழுந்தருளின, மதுவளர் பொழில் - தேன் பெருகுகின்ற

சோலை சூழ்ந்த, திருவுத்தரகோசமங்கை உள்ளாய் - திருவுத்தர கோசமங்கையி லெழுந்தருளி யிருப்பவனே, திருப்பெருந்துறை மன்னா - திருப்பெருந்துறைக் கரசனே, எம்மைப்பணி கொள்ளும் ஆறு எது-எங்களைப் பணிகொள்ளும் விதம்யாது, அது கேட்போம் - அதனைக் கேட்போம், எம்பெருமான் பள்ளி யெழுந்தருளாய்,——எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, தேவரும் உள்ளவாறறியாத உன்னை யாம் அறிந்துய்யும்படி எம்மையாட் கொண்டு திருவுத்தரகோசமங்கையில் எழுந்தருளினவனே, எம்மைப் பணிகொள்ளும் வழியாது, சொல்லுவாயாக, அந்தப்படி கேட்போம், நீ திருப்பள்ளி யெழுந்தருளவேண்டும் என்பதாம். ()

முந்தியமுதனடுவிறுதியுமானாய்
மூவருமறிகிலர்யாவர்மற்றறிவார்
பந்தணைவிரலியுநீயுமினடியார்
பழங்குடிதொறுமெழுந்தருளியபரனே
செந்தழல்புரைதிருமேனியுங்காட்டித்
திருப்பெருந்துறையுறைகோயிலுங்காட்டி
அந்தணனாவதுங்காட்டிவந்தாண்டா
யாரமுதேபள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. முந்திய-முற்பட்ட, முதல் நடு இறுதியும் ஆனாய் - முதலிடை கடைகளுமாயினை, மூவரும் அறிகிலர்-மூவரும் அறியு மாற்றலிலர், மற்று அறிவார் யாவர் - வேறு அறிபவர் யாவர், பந்து அணைவிரலியும் நீயும் - உமாதேவியும் நீயுமாக, இன் அடியார் - இனிய அடியார்களுடைய, பழங்குடில் தொறும் - பழவீடுகள்தோறும், எழுந்தருளிய பரனே - எழுந்தருளின பரமனே, செந்தழல் புரை - செவந்த நெருப்பை யொத்த, திருமேனியும் காட்டி - திருமேனியையுங் காட்டி, திருப்பெருந் துறையுறை - திருப்பெருந் துறையில் வசிக்கின்ற, கோயிலுங் காட்டி - கோயிலையுங் காட்டி, அந்தணன் ஆவதும் காட்டி - வேதியனாவதையுங் காட்டி, வந்து ஆண்டாய் - வந்து ஆண்டருளினை, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, பள்ளியெழுந்தருளாய்,——எ - று.

க - ரை. முதல் இடை கடைகளானவனே, உன்னை மூவரறியாரெனின் வேறு யாவரறிய வல்லார், எம்பிராட்டியும் நீயுமாக எம்மில்லங்கள் தோறும் எழுந்தருளினவனே, உன் திருமேனியையும் திருப்பெருந்துறைக் கோயிலையும், வேதிய வேடத்தை

யும் காட்டி வந்து எங்களை யாண்டருளின அரிய அமிர்தமே, நீ திருப்பள்ளி யெழுந்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. மூவர் என்றது திரிமூர்த்திகளை, பந்தணை விரலி-பந்து பொருந்திய விரலையுடையவள். பந்து-திரட்சி யெனினுமாம். இப்பொருட்குத் திரட்சியாகிய விரல்களையுடையவள் என்க.

விண்ணகத்தேவருநண்ணவுமாட்டா
விழுப்பொருளேயுனதொழுப்படியோங்கள்
மண்ணகத்தேவந்துவாழச்செய்தானே
வண்டிருப்பெருந்துறையாய்வழியடியோம்
கண்ணகத்தேநின்றுகளிதருதேனே
கடலமுதேகரும்பேவிரும்படியார்
எண்ணகத்தாயுலகுக்குலகானு
மெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. விண்ணகம் தேவரும் - விண்ணிடத்துள்ள தேவர்களும், நண்ணவும் மாட்டா - அணுகவுமொண்ணாத, விழுப்பொருளே - மேலாகிய பொருளே, உன் - உன்னுடைய, தொழும்பு அடியோங்கள் - தொண்டைச் செய்கிற அடியேங்களை, மண்ணகத்தே வந்து வாழச்செய்தானே - மண்ணிடத் தெழுந்தருளி வாழ்வித்தவனே, வள் - வளமாகிய, திருப்பெருந்துறையாய்-திருப்பெருந்துறையிலுள்ளவனே, வழியடியோம் - வழியடியோமாகிய எம்முடைய, கண்ணகத்தே நின்று - கண்ணிடத்தே நின்று, களிதரு தேனே - களிப்பைத் தருகின்ற தேனே, கடல் அமுதே - பாற்கடலுள் தோன்றிய அமிர்தமே, கரும்பே - கரும்பின் சுவையே, விரும்பு அடியார் - விரும்புகின்ற அடியவரது, எண்ணகத்தாய் - மனத்திலிருப்பவனே, உலகுக்கு உலகுஆனாய் - உலகிற்கோருலகானவனே, எம்பெருமான் பள்ளியெழுந்தருளாயே——, எ - று.

க - ரை. தேவர்களும் அணுகவுமொண்ணாத மேலாகிய பொருளே, உன்தொண்டராகிய யாம் வாழும்பொருட்டு இம்மண்ணுலகில் எழுந்தருளினவனே, திருப்பெருந்துறையானே, எமது கண் களிக்க வருந்தேனே, அமுதே, கரும்பின் சுவையே, அடியார் மனத்திருப்பவனே, உலகுக்குலகா யிருப்பவனே, நீ திருப்பள்ளி யெழுந்தருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. தொழும்பு - தொழுப்பு என வலித்தல் பெற்றது. வழியடிமை - வமிச பரம்பரையான அடிமை. உலகுக் குலகாதலாவது, எல்லா வுலகுக்குந் தானிடமா யிருத்தல். (௬)

புவனியிற்போய்ப்பிறவாமையினாணும்
போக்குகின்றேமவமேயிந்தப்பூமி
சிவனுய்யக்கொள்கின்றவாறென்றுநோக்கித்
திருப்பெருந்துறையுறைவாய்திருமாலாம்
அவன்விருப்பெய்தவுமலரவனாசைப்
படவுநின்னலர்ந்தமெய்க்கருணையுநீயும்
அவனியிற்புகுந்தெமையாட்கொள்ளவல்லா
யாரமுதேபள்ளியெழுந்தருளாயே.

ப - ரை. திருப்பெருந்துறையுறைவாய்-திருப்பெருந்துறையில் வாழ்பவனே, திருமால்ஆம் அவன் - திருமாலாகிய அவன், புவனியில் போய்ப் பிறவாமையின் - பூமியிற்சென்று பிறவாமையினால், நாம் - யாம், அவமே - வீணாகவே, நாள்போக்குகின்றேம் - நாள் கழியாநின்றேம், இந்தப்பூமி - இந்தப்பூமியை, சிவன் - சிவபெருமான், உய்யக்கொள்கின்ற ஆறுஎன்று நோக்கி-யாவரையும் உய்யக்கொள்ளும் இடமென்று பார்த்து, விருப்பு எய்தவும் - விருப்பத்தையடையவும், மலரவன் ஆசைப்படவும் - பிரமனும் அவ்வாறே ஆசைப்படவும், நின் - உனது, அலர்ந்த - பரந்த, மெய்க்கருணையும் நீயும் - உண்மையாகிய கருணையும் நீயுமாக, அவனியில் புகுந்து - பூமியிலெழுந்தருளி, எம்மை ஆட்கொள்ள வல்லாய் - எங்களை யாட்கொள்ள வல்லானே, ஆர் அமுதே - அரிய அமுதமே, பள்ளி யெழுந்தருளாய் —, எ - று

க - ரை. இறைவனே, திருமாலும் பிரமனும் நாம் பூமியிற் போய்ப் பிறவாமையால் வீணே காலங் கழிக்கின்றேம், இறைவன் ஆன்மாக்களை உய்யக்கொள்ளுமிடம் இந்தப் பூமியே ஆகுமென்று நோக்கி ஆசைப்படா நிற்க, பூமியிலெழுந்தருளி எம்மையாட்கொள்ள வல்லவனே, நீ திருப்பள்ளி யெழுந்தருள வேண்டும் என்பதாம்.

வி - ரை. கருணையும் நீயும் என்றது இறைவன் எப்பொழுதும் கருணையோடு கூடியே யிருப்பன் என்பதை வற்புறுத்தற்கென்க. அலர்ந்த மெய்க்கருணை யென்றதனால் மிகப் பெரியதும் ஒரு காலத்தும் அழியாததும் ஆகியகருணை யென்றாராயிற்று.

# கோயின்மூத்ததிருப்பதிகம்.

அநாதியாகிய சற்காரியம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

உடையாளுன்றனடுவிருக்கு
முடையாணடுவுணீயிருத்தி
அடியேனடுவுளிருவீரு
மிருப்பதானாலடியேனுன்
அடியார்நடுவுளிருக்குமரு
ளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்து
முடியும்வண்ணமுன்னின்றே.

ப - ரை. உடையாள் - உமையவள், உன்றன்நடு இருக்கும் - உன்னிடையே யிருப்பள், உடையாள் நடுவுள் - உமையவளிடையே, நீ இருத்தி - நீயிருக்கின்றனை, அடியேன் நடுவுள் - அடியேனிடையே, இருவீரும் இருப்பது ஆனால் - நீங்கள் இருவீரும் எழுந்தருளி யிருப்பதாயின், பொன்னம்பலத்து - பொற்சபையிவிருக்கிற,எம்முடியாமுதலே - எமது முடிவற்ற முதற்பொருளே, என்கருத்து முடியும் வண்ணம் - என் எண்ணம் முடியும்படி, முன்நின்று - என்னெதிர் நின்று, அடியேன் - அடியனேன், உன் அடியார் நடுவுள் இருக்கும் - உன்னடியாரிடையே யிருத்தற்குரிய, அருளைப் புரியாய் - அருள்செய்வாய், எ - று.

க - ரை. பொன்னம்பலவனே, உடையவள் உன்னிடையே இருப்பள், நீ அவ்வுடையவளிடையே யிருப்பாய். நீங்கள் இருவீரும் அடியேனிடை யிருப்பது மெய்யாயின், நான் உன்னடியாரிடை யிருக்கும்படி அருள்செய்து, என் கருத்தை முற்றுவிக்க வேண்டும் என்பதாம். (க)

முன்னின்றாண்டாயெனைமுன்ன
மியானுமதுவேமுயல்வுற்றுப்
பின்னின்றேவல்செய்கின்றேன்
பிற்பட்டொழிந்தேன்பெம்மானே
என்னின்றருளிவரநின்று
போந்திடென்னாவிடிலடியார்
உன்னின்றிவனாரென்னாரோ
பொன்னம்பலக்கூத்துகந்தானே

ப - ரை. முன்னம் - முன்னே, என்னை - அடியேனை, முன்னின்று ஆண்டாய் - எதிரில் நின்று ஆண்டருளினை, யானும் - அடியேனும், அதுவே முயல்வுற்று - அதனையே முயன்று, பின்னின்று ஏவல் செய்கின்றேன் - பின்னே நின்று ஏவல் செய்யாநின்றேன், பிற்பட்டு ஒழிந்தேன்-அதிலும் பிறகிட்டொழிந்தேன், பெம்மானே - பெருமானே, என் - என்னை, இன்று - இப்பொழுது, அருள் இவர நின்று - அருள் பற்றுமாறு நின்று, போந்திடு என்னாவிடில் - வாவென்றருளாவிடின், அடியார் - உன்னடியவர், உன் நின்று - உன்னெதிர் நின்று, இவன் ஆர் என்னாரோ - (உன் அருளுக்குரியனல்லாத) இவன் யாரென்று கேளாரோ, பொன்னம்பலக்கூத்து உகந்தானே - பொற்சபையில் நடிக்கும் கூத்தை விரும்பினவனே,எ - று.

க - ரை. பொன்னம்பலக் கூத்தனே, முன்னின்று என்னை யாண்டருளினை, யானும் அதுபற்றியே பின்னின்றேவல் செய்கின்றேன், அதிலும் பிறகிட்டேன், ஆயினும் என்னை உன்னருளால் வாவென்றழையாவிடின், அடியார் இவன் யாரென்று உன்னைவினவாரோ என்பதாம். (௨)

உகந்தானேயன்புடையடிமைக்
குருகாவுள்ளத்துணர்விலியேன்
சகந்தான்றியமுறையிட்டாற்
றக்கவாறன்றென்னாரோ
மகந்தான்செய்துவழிவந்தார்
வாழவாழ்ந்தாயடியேற்குன்
முகந்தான்றாராவிடின்முடிவேன்
பொன்னம்பலத்தெம்முழுமுதலே.

ப - ரை. அன்பு உடை அடிமைக்கு - அன்புள்ள அடிமைத் திறத்தை, உகந்தானே-ஏற்றுக்கொண்டவனே, உருகா உள்ளத்து- உருகாத மனத்தையுடைய, உணர்வு இலியேன் - அறிவிலியாகிய நான், சகந்தான் அறிய - உலகமறியும்படி, முறையிட்டால் - முறையிட்டுக்கொண்டால், தக்கவாறு அன்று என்னாரோ - இது தக்கவழி யன்றென்று சொல்லாரோ, மகந்தான் செய்து - யாகம் செய்து, வழி வந்தார் - வழிப்பட்டு வந்தவர், வாழ - வாழும்படி, வாழ்ந்தாய்-வாழ்ந்தனை, அடியேற்கு-அடியேனுக்கு, உன்-உனது, முகந்தான் தாராவிடின் - முகத்தைக்கொடாவிடின், முடிவேன்- இறந்து படுவேன், பொன்னம்பலத்து - பொற்சபையிலுள்ள, எம் முழு முதலே - எம்முழு முதற்பொருளே, எ - று.

க - ரை. பொன்னம்பலவனே, அன்புள்ள அடிமைத் திறத் துக்கு மகிழ்ந்தவனே, மனவுருக்கமில்லாத அடியேன் உலகறிய முறையிட்டால், இது தகாதென்று சொல்லார்களோ, வேள்வி முதலான நற்கருமங்கள் செய்து வழிவந்தவர் வாழும்படி எழுந்த ருளி யிருந்தனை, நீ யெனக்குமுகந்தாராவிடின் யான் இறந்து படு வேன் என்பதாம்.

வி - ரை. என் மனமுருகிலேன் அறிவிலேன் என்றற்கு, "உருகாவுள்ளத் துணர்விலியேன்" என்றார். சகம் - உலகு. இத ற்கு தோன்றியழியு மியல்புடையது என்பது பொருள். "உருகா வுள்ளத் துணர்விலியேன்" ஆதலால், "சகந்தானறிய முறையிட் டால் தக்கவாறன்றென்னாரோ" என்றார். (௫)

முழுமுதலேயைம்புலனுக்கு
மூவர்க்குமென்றனக்கும்
வழிமுதலேநின்பழவடியார்
திரள்வான்குழுமிக்
கெழுமுதலேயருடந்திருக்க
விரங்குங்கொல்லோவென்
றழுமதுவேயன்றிமற்றென்
செய்கேன்பொன்னம்பலத்தரைசே.

ப - ரை. முழுமுதலே - முழுமுதற்பொருளே, ஐம்புலனுக் கும் - ஐம்புலன்களுக்கும், மூவர்க்கும் - மூவருக்கும், என்றனக் கும் - எனக்கும், வழிமுதலே - நன்னெறிக்கண் முதற்பொருளா யிருப்பவனே, நின்பழ அடியார் திரள் - உன் பழவடியார் கூட்ட மும், வான் - விண்ணுலகமும், குழுமி - கூட்டங்கூடி, கெழு -

பொருந்துகின்ற, முதலே - முதல்வனே, அருள் தந்து இருக்க - அருள்புரிந்திருக்க, இரங்குங் கொல்லோ என்று - இரங்குமோ வென்று, அழும் அதுவேயன்றி - அழுவதே யல்லது, மற்றென் செய்கேன் - வேறென்செய்யவல்லேன், பொன்னம்பலத்தரசே - பொற்சபாநாயகனே,—— எ - று.

க - ரை. கனகசபாபதியே, முழுமுதற்பொருளே, ஐம்புலன் முதலானவைகட்கும் காரணனே, இறைவன் எப்பொழுது நமக் கருள்புரிய இரங்குவனோ வென்று அழுதலேயன்றி, யான் வேறெ ன்செய்யக்கடவேன் என்பதாம். (௪)

அரைசேபொன்னம்பலத்தாடு
மமுதேயென்றுன்னருணோக்கி
இரைதேர்கொக்கொத்திரவுபக
லேசற்றிருந்தேவேசற்றேன்
கரைசேரடியார்களிசிறப்பக்
காட்சிகொடுத்துன்னடியேன்பால்
பிரைசேர்பாலினெய்போலப்
பேசாதிருந்தாலேசாரோ.

ப - ரை. அரைசே - அரசனே, பொன்னம்பலத்து ஆடும் அமுதே - பொற்சபையில் நடிக்கின்ற அமிர்தமே, என்று-என்று துதித்து, உன் அருள் நோக்கி - உன் திருவருளை நோக்கி, இரை தேர் கொக்கு ஒத்து - உணவைத் தேடுகின்ற கொக்குப்போன்று, இரவு பகல் - இரவும் பகலும், ஏசற்று இருந்து வேசற்றேன் - துக்கித்திருந்து இளைத்தேன், கரைசேர் - (பிறவிக்கடலைக் கடந்து) முத்திக்கரையை யடைந்த, அடியார்-உன்னடியவர், களிசிறப்ப - களிப்புமிகும்படி, காட்சி கொடுத்து - காட்சி கொடுத்தருளி, உன் அடியேன் பால் - உன்னடியேனாகிய என்னிடத்தில், பிரைசேர் பாலில் நெய்போல - பிரைதோய்ந்த பாலின் கண்ணுள்ள நெய் போல, பேசாது இருந்தால் - பேசாமலிருந்தால், ஏசாரோ - உல கத்தார் வையாரோ,—— எ - று.

க - ரை. அரைசே, பொன்னம்பலத்தாடு மமுதே யென்று துதித்து உன்னருளை நாடியிருந்து இளைத்தேன், உன் அடியார் களிப்பு மிகுந்திருக்க அவர்களுக்குக் காட்சிக்கொடுத்து, அடியே னிடத்தில் மறைந்திருந்தால் உன்னை உலகத்தார் வையாரோ என்பதாம்.

வி - ரை. இரைதேர் கொக்கு தனக்குத் தருந்த வுணவாகிய மீன்வாய்க்கு மளவும் அசைவற நிற்றல்போல, உன்னருள் வாய்க்க வேண்டுமென்று மனமுதலியவை அசைதலில்லையாக இருந்தேன் என்றற்கு, "இரைதேர் கொக்கொத்திரவு பகலே சற்றிருந்தேவே சற்றேன்" என்றார். வேசறுதல் - மெலிதல்- இளைத்தல். (ரு)

ஏசாநிற்பரென்னையுனக்
கடியானென்றுபிறரெல்லாம்
பேசாநிற்பரியான்றானும்
பேணாநிற்பேனின்னருளே
தேசாநேசர்சூழ்ந்திருக்குந்
திருவோலக்கஞ்சேவிக்க
ஈசாபொன்னம்பலத்தாடு
மெந்தாயினித்தானிரங்காயே.

ப - ரை. ஏசாநிற்பர் - வையாநிற்பர், என்னை - அடியேனை, உனக்கு அடியான் என்று - உனக்கடியவனென்று, பிறர் எல்லாம் - அயலாரெல்லாரும்; பேசாநிற்பர் - பேசாநிற்பர்கள், யான் தானும் - அடியேனும், நின் அருளே பேணா நிற்பேன் - உன்னருளையே விரும்பா நிற்பேன், தேசா - ஒளியுருவானவனே, நேசர் சூழ்ந்திருக்கும் - அன்பர் சூழ்ந்திருக்கிற, திருவோலக்கம் சேவிக்க - உன் திருச்சபையைச் சேவிக்க, ஈசா - ஈசனே, பொன்னம்பலத்து ஆடும் - பொற்சபையில் நடிக்கின்ற, எந்தாய் - எந்தையே, இனித்தான் இரங்காய் - இனியாயினு மிரங்கி யருள்வாயாக, எ - று.

க - ரை. பொன்னம்பலத்தாடுகின்ற எந்தையே, என்னை வைவார் சிலரும் உன்னடியவனென்று சொல்லுவார் சிலருமாயிருக்கின்றனர், யாரெப்படி யிகழினும் புகழினும் யான் உன்னருளையே விரும்பாநின்றேன், இனியாயினும் உன்னன்பர் சேவிக்கும் உன் திருவோலக்கத்தை நான் சேவிக்கும்படி இரங்கி யருளவேண்டும் என்பதாம். (சு)

இரங்குநமக்கம்பலக்கூத்த
னென்றென்றேமாந்திருப்பேனை
அருங்கற்பனைகற்பித்தாண்டா
யாள்வாரிலிமாடாவேனோ

நெருங்குமடியார்களுநீயு
நின்றுநிலாவிவிளையாடு
மருங்கேசார்ந்துவரவெங்கள்
வாழ்வேவாவென்றருளாயே.

ப - ரை. அம்பலக்கூத்தன் - பொதுநடஞ்செய்வோன், நமக்கு-நம்பொருட்டு, இரங்கும் -இரங்குவன், என்றென்று - என்று பலகாற்கூறி, ஏமாந்திருப்பேனை - (இரங்காமையால்) திகைத்திருக்கும் அடியேனை, அரு - இதுவரையில் இல்லாத, கற்பனை - ஒரு புதிய ஏற்பாட்டை, கற்பித்து - ஏற்படுத்தி, ஆண்டாய் - ஆண்டருளினை, ஆள்வார் இலி-காப்பாற்றுவாரில்லாத, மாடு ஆவேனோ - மாட்டுக்கு நிகராவேனோ, நெருங்கும் - நெருங்கிய, அடியார்களும் நீயும் - அடியவர்களும் நீயும், நின்று நிலாவி - நின்று விளங்கி, விளையாடும் - விளையாடுகின்ற, மருங்கே சார்ந்துவர - பக்கத்திலே சேர்ந்துவரும்படி, எங்கள்வாழ்வே - எங்கள்வாழ்ச்சியே, வா என்றுஅருளாய் - என்னை வாவென்றருள்செய்வாய்,எ-று.

க - ரை. பொன்னம்பலத்தாடும் இறைவன் நமக்கிரங்குவனென்று ஏமாந்திருக்கிற என்னை, இதுவரையில் இல்லாத புதிய கற்பனையொன்றையுண்டாக்கி ஆண்டருளினை, நான் ஆள்வாரில்லாத மாடுபோலாவேனோ, உன்னடியார்களும் நீயும் நின்று விளையாடுமிடத்தின் பக்கத்தில் சேர்ந்துவரும்படி, என்னை வாவென்றழைத்தருள வேண்டும் என்பதாம்.

வி - ரை. அருங்கற்பனை யென்பதில் அருமை அருங்கேடன் என்பதிற்போல இன்மை குறித்துநின்றது. கற்பனை - கற்பித்தல், (இல்லாததை யுண்டுபண்ணுதல்) அருங்கற்பனை கற்பித்தாளுதலாவது - தனக்காட்படுந்தன்மை எனக்குண்டாவதன்முன்னே ஆட்கொள்ளுதல். ஆள்வாரிலி மாடு - பட்டி மாடு. (எ)

அருளாதொழிந்தாலடியேனை
யஞ்சேலென்பாராரிங்குப்
பொருளாவென்னைப்புகுந்தாண்ட
பொன்னேபொன்னம்பலக்கூத்தா
மருளார்மனத்தோடுனைப்பிரிந்து
வருந்துவேனைவாவென்றுன்
றெருளார்கூட்டங்காட்டாயேற்
செத்தேபோனாற்சிரியாரோ.

ப - ரை. அருளாது ஒழிந்தால் - அருள்செய்யாதொழிந்தனையாயின், அடியேனை - அடியனேனை, இங்கு - இவ்வுலகில், அஞ்சேல் என்பார் - அஞ்சாதே யென்பவர், ஆர் - யாவர், (ஒருவருமில்லை) என்னைப் பொருளா - என்னை யொருபொருளாகக் கொண்டு, புகுந்து ஆண்ட - வலியவந்தாண்டருளின, பொன்னே - சுவர்ணமே, பொன்னம்பலக்கூத்தா - பொற்சபையில் நடிப்பவனே, மருள் ஆர்மனத்தோடு - மருட்சி நிறைந்த மனத்துடன் - உன்னைப்பிரிந்து வருந்துவேனை - உன்னை நீங்கிவருந்தா நின்ற என்னை, வாவென்று - வாவென்றழைத்து, உன் - உனது, தெருள் ஆர் - தெளிவுபொருந்திய, கூட்டம் - அன்பர்கூட்டத்தை, காட்டாயேல் - காட்டாதொழிந்தால், செத்தேபோனால் - (அடியேன்) இறந்தேபோனால், சிரியாரோ - உலகத்தார் நகையாரோ, எ-று.

கு - ரை. பொன்னம்பலக் கூத்தனே, நீயென்னை யருளாதொழிந்தால் அஞ்சாதே யென்பவர் ஒருவருமில்லை யாதலால், மருண்டமனத்தோடு உன்னைப் பிரிந்து வருந்துவேனை வாவென்றழைத்து தெளிவையுடைய உன் அன்பர் கூட்டத்தைக் காட்டாவிடில் யான் சாவேன், யான் செத்தால் நாட்டிலுள்ளார் நகையாரோ என்பதாம்.

வி - ரை. தெருளார் என்ற விசேடணத்தால் கூட்டம் அடியார் கூட்டத்தை யுணர்த்திற்று. (அ)

சிரிப்பார்களிப்பார்தேனிப்பார்
திரண்டுதிரண்டுன்றிருவார்த்தை
விரிப்பார்கேட்பார்மெச்சுவார்
வெவ்வேறிருந்துன்றிருநாமந்
தரிப்பார்பொன்னம்பலத்தாடுந்
தலைவாவென்பாரவர்முன்னே
நரிப்பாய்நாயேனிருப்பேனோ
நம்பீயினித்தானல்காயே.

ப - ரை. சிரிப்பார் - சிரிப்பவரும், களிப்பார் - களிப்பவரும், தேனிப்பார் - தியானிப்பவருமாய் - திரண்டு திரண்டு - கூடிக் கூடி, உன் திருவார்த்தை - உன் திருவார்த்தையை, விரிப்பார் - விஸ்தரிப்பவரும், கேட்பார் - கேட்பவரும், மெச்சுவார் - மெய்ச்சுவாரும், வெவ்வேறு இருந்து - தனித்தனியிருந்து, உன் திருநாமம் தரிப்பார் - உன் திருநாமத்தைத் தரிப்பவரும், பொன்

னம்பலத்து ஆடும் - பொற்சபையின் கண்ணே நிருத்தஞ்செய்கி ன்ற, தலைவா என்பார் - இறைவாவென்பவருமாகிய, அவர் முன்னே - அவர்களுக் கெதிரில், நரிப்புஆய் - இகழ்தற் குரியே னாகி, நாயேன் இருப்பேனோ - நாயினே னிருப்பேனோ, நம்பீ - கல்யாணகுண பூர்ணனே, இனித் தான் நல்காயே - இனியேனுங் கிருபை செய்யமாட்டாயோ,——எ - று.

க - ரை. பொன்னம்பலத்தி லாடுகின்ற இறைவனே, உன் அன்பர் சிரித்தல் முதலான காரியங்களைச் செய்து களித்திருப் பார், அவர்களுக் கெதிரில் இகழ்தற்குரியவனாகி நாயே னிருக்கலா மோ, மங்கள குணங்கள் நிறைந்தவனே இனியாயினும் கிருபை செய்யமாட்டாயோ என்பதாம். (௯)

வி - ரை. தேனித்தல் - தியானித்த லின்மரூஉ.

நல்காதொழியானமக்கென்றுன்
 னாமம்பிதற்றிநயனநீர்
மல்காவாழ்த்தவாய்குழறா
 வணங்காமனத்தானினைந்துருகிப்
பல்காலுன்னைப்பாவித்துப்
 பரவிப்பொன்னம்பலமென்றே
ஒல்காநிற்குமுயிர்க்கிரங்கி
 யருளாயென்னையுடையானே.

ப - ரை. நமக்கு நல்காதொழியான் என்று - நமக்கருள் புரி யாதொழியா னென்று துணிந்து, உன் நாமம் பிதற்றி - உன் திரு நாமத்தைப் பிதற்றி, நயனம் - கண்களில், நீர்மல்கா - நீரை நிறை த்து, வாழ்த்தா - வாழ்த்தி, வாய்குழறா - வாய்குழறி, வணங்கா - வணங்கி, மனத்தால் நினைந்து உருகி - மனத்தினால் நினைத்துருகி, பல்கால் உன்னைப் பாவித்து - பலகாலு முன்னைப் பாவித்து, பரவி - துதித்து, பொன்னம்பலம் என்றே ஒல்காநிற்கும் உயிர் க்கு - பொன்னம்பல மென்றே வாடாநிற்கும் என் உயிர்க்கு, இர ங்கி யருளாய் - இரங்கி யருள்வாயாக, என்னை உடையானே - என்னை யுடையவனே,——எ - று.

க - ரை. இறைவன் நமக்குக் கிருபைசெய்யா தொழியான் என்று உன் திருநாமங்களைப் பலகாற்சொல்லி, கண்ணீர் மல்கு தல் முதலிய செயல்களைச் செய்து தளராநிற்கிற என்னுயிர்க் கிர ங்கி யருளவேண்டும் என்பதாம். (௧௦)

———

# கோயிற்றிருப்பதிகம்.

அனுபோகவிலக்கணம்.
தில்லையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

மாறிநின்றென்னை மயக்கிடும்வஞ்சப்
புலனைந்தின்வழியடைத்தமுதே
ஊறிநின்றென்னுளெழுபரஞ்சோதி
யுள்ளவாகாணவந்தருளாய்
தேறலின்றெளிவேசிவபெருமானே
திருப்பெருந்துறையுறைசிவனே
ஈறிலாப்பதங்களியாவையுங்கடந்த
வின்பமேயென்னுடையன்பே.

ப - ரை. மாறி நின்று - பகைத்து நின்று, என்னை மயக்கிடும் - என்னை மயங்கச் செய்கிற, வஞ்சப்புலன் ஐந்தின் - வஞ்சப் புலன்கள் ஐந்தனுடைய, வழிஅடைத்து - வாயில்களையடைத்து, அமுதே ஊறி நின்று - அமுதமே சுரந்து நின்று, என் உள் எழு பரஞ்சோதி - என் மனத்தின்கண் தோற்றுகிற மேலான ஒளியே, உள்ளவாறுகாண - நான் உன்னை உள்ளபடி காணும்பொருட்டு, வந்தருளாய் - வந்தருள்வாயாக, தேறலின்தெளிவே - தேனினதுதெளிவே, சிவபெருமானே - சிவபிரானே, திருப்பெருந்துறையுறை சிவனே - திருப்பெருந்துறையில் வாழ்கின்றசிவனே, ஈறு இல்லா - முடிவில்லாத, பதங்கள் யாவையும் கடந்த - பதவிகளெல்லாவற்றையுங் கடந்து நின்ற, இன்பமே - ஆநந்தமே, என்னுடை அன்பே - என்னுடைய அன்புருவமே, எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, என்னைப் பகைத்து மயக்குகின்ற ஐம்புலன்களின் வழியையடைத்து, உள்ளவாறு உன்னை நான் சேவிக்கும்படி எழுந்தருள வேண்டும் என்பதாம். (க)

அன்பினாலடியேனாவியோடாக்கை
யானந்தமாய்க்கசிந்துருக
என்பரமல்லாவின்னருடந்தா
யானிதற்கிலனோர்கைம்மாறு
முன்புமாய்ப்பின்புமுழுதுமாய்ப்பரந்த
முத்தனேமுடிவிலாமுதலே
தென்பெருந்துறையாய்சிவபெருமானே
சீருடைச்சிவபுரத்தரைசே.

ப - ரை. அன்பினால் - அன்பின் மிகுதியால், அடியேன் - அடியேனது, ஆவியோடு - உயிரோடு, ஆக்கை - உடம்பும், ஆநந்தமாய் - இன்பவுருவாகி, கசிந்து உருக - கசிந்துருகும்படி, என் பரம் அல்லா - என் தகுதிக்குப் பொருத்தமில்லாத, இன் அருள் தந்தாய் - இனிய அருளைச்செய்தனை, இதற்கு - இந்த நன்றிக்கு, யான் - நான், ஓர் கைம்மாறு இலன் - ஒரு பிரதியுபகார மில்லாதேன், முன்புமாய் - முன்னுமாகி, பின்பும் - பின்னும், முழுதுமாய் - முழுவதுமாகி, பரந்த - வியாபித்த, முத்தனே - பாசவிமுக்தனே, முடிவு இல்லா - முடிதலில்லாத, முதலே - முதல்வனே, தென்பெருந்துறையாய் - தென்றிருப்பெருந்துறையையுடையானே, சிவபெருமானே - சிவபிரானே, சீர் உடை சிவபுரத்து அரைசே - சிறப்புப்பொருந்திய சிவபுரத்துக் கிறைவனே, எ - று.

கு - ரை. முன்பின் என்பவைகளாகி, முழுதுமாகி வியாபித்த பாசவிமுக்தனே, முடிவில்லாத முதல்வனே, திருப்பெருந்துறையானே, சிவபுரத்தரசனே, அன்பின் மிகுதியால் அடியேனது உயிருடம்புகள் இன்பவுருவாகிக் கசிந்துருகும்படி என் தகுதிக்குப் பொருத்தமில்லாத இனிய அருளைத் தந்தாய், இதற்கு யான் செய்யவேண்டிய கைம்மாறு ஒன்றுமில்லை யென்பதாம். (௨)

அரைசனேயன்பர்க்கடியனேனுடைய
வப்பனேயாவியோடாக்கை
புரைபுரைகனியப்புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள்கடிந்தமெய்ச்சுடரே
திரைபொராமன்னுமமுதத்தெண்கடலே
திருப்பெருந்துறையுறைசிவனே

உரையுணர்விறந்துநின்றுணர்வதோருணர்வே
யானுன்னையுரைக்குமாறுணர்த்தே.

ப - ரை. அன்பர்க்கு அரைசனே - அன்பர்க்கிறைவனே, அடியனேனுடைய அப்பனே - அடியேனுடைய அப்பனே, ஆவியோடு ஆக்கை - உயிரோடுடம்பு, புரைபுரைகனிய - மயிர்க்கால்கள்தோறும் கனியும்படி, புகுந்து நின்று உருக்கி - புகுந்து நின்றுருகப் பண்ணி, பொய் இருள் கடிந்த - பொய்யாகிய அஞ்ஞான அந்தகாரத்தை நீக்கின, மெய்ச்சுடரே - உண்மையாகிய ஒளியே, திரைபொரா - அலைமோதி, மன்னும் - நிலைபெற்ற, அமுதத்தெண்கடலே - தெளிவாகிய அமிர்தசாகரமே, திருப்பெருந்துறையுறை சிவனே——, உரை உணர்வு - சொல்லும் அறிவும், இறந்து நின்று - நசித்து நின்று, உணர்வது - அறியத்தகுவதாகிய, ஓர் உணர்வே - ஒப்பற்ற அறிவே, யான் - நான், உன்னை உரைக்குமாறு - உன்னைப் புகழ்ந்துரைக்கும்படி, உணர்த்து - அறிவுறுத்துவாயாக, எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, நான் உன்னைப்புகழும்படி எனக்கு அறிவுறுத்த வேண்டும் என்பதாம். (௩)

உணர்ந்தமாமுனிவரும்பரோடொழிந்தா
ருணர்வுக்குந்தெரிவரும்பொருளே
இணங்கிலியெல்லாவுயிர்கட்குமுயிரே
யெனைப்பிறப்பறுக்குமெம்மருந்தே
திணிந்ததோரிருளிற்றெளிந்ததூவெளியே
திருப்பெருந்துறையுறைசிவனே
குணங்கடாமில்லாவின்பமேயுன்னைக்
குறுகினேற்கினியென்னகுறையே.

ப - ரை. உணர்ந்த - அறிந்த, மாமுனிவர் - பெரியமுனிவரும், உம்பரோடு - தேவருடன், ஒழிந்தார் - ஒழிந்து நின்றவர்களுடைய, உணர்வுக்கும் - அறிவுக்கும், தெரிவு அரும்பொருளே - தெரிதல் அருமையாகியபொருளே, இணங்கு இலி - ஒப்பிலியே, எல்லாவுயிர்கட்கும் உயிரே - எல்லாச் சீவர்களுக்குள்ளும் உயிராயிருப்பவனே, என்னை - அடியேனை, பிறப்பு அறுக்கும் - பிறவிப பிணியைச் சேதிக்கிற, எம்மருந்தே - எமது மருந்தே, திணிந்தது -

நெருங்கினதாகிய, ஓர் இருளில் - ஒரு இருளின்கண், தெளிந்த - தெளிவடைந்த, தூவெளியே - பரிசுத்தமாகிய ஒளியே, திருப் பெருந்துறையுறை சிவனே——, குணங்கள் தாம்இல்லா-குணங் கள் இல்லாத, இன்பமே - ஆநந்தமே, உன்னைக் குறுகினேற்கு - உன்னையடைந்த எனக்கு, இனி என்ன குறை - இனியென்ன குறையுளது, எ-று.

க - ரை. முனிவர் தேவர் முதலியோரும் உணர்தற்கரிய பொருளே, எல்லா வுயிர்களுக்கும் உயிரா யிருப்பவனே, என் பிறவிப்பிணியை யொழிக்கு மருந்தே, வலிய அஞ்ஞான விருளை யழிக்கின்ற ஒளியே, திருப்பெருந்துறைச் சிவபெருமானே, குண ரகிதமான ஆநந்தமே, உன்னைச்சேர்ந்த எனக்கு என்ன குறை யுளது என்பதாம்.

வி - ரை. இறைவன் "உணர்ந்தார்க் குணர்வரியோன்" ஆதலால், "உணர்ந்த மாமுனிவரும்பரோ டொழிந்தாருணர்வுக் குந் தெரிவரும்பொருளே" என்றார். இறைவனது பெருங்கருணை யாலன்றி நீக்கப்படாமையால் அஞ்ஞானத்தைத் "திணிந்ததோ ரிருள்" என்றார். (௬)

குறைவிலாநிறைவேகோதிலாவமுதே
யீறிலாக்கொழுஞ்சுடர்க்குன்றே
மறையுமாய்மறையின்பொருளுமாய்வந்தென்
மனத்திடைமன்னியமன்னே
சிறைபெறுநீர்போற்சிந்தைவாய்ப்பாயுந்
திருப்பெருந்துறையுறைசிவனே
இறைவனேநீயென்னுடலிடங்கொண்டா
யினியுன்னையென்னிரக்கேனே.

ப - ரை. குறைவு இல்லா நிறைவே-குறைவற்ற நிறைவே, கோது இல்லா அமுதே - குற்றமற்ற அமிர்தமே, ஈறு இல்லா - இறுதியில்லாத, கொழுஞ்சுடர்க் குன்றே - செழுமையாகிய ஒளிக் குன்றமே, மறையுமாய் - வேதமுமாகி, மறையின் பொருளுமாய்- வேதத்தின் பொருளுமாகி, வந்து - வந்து, என்மனத்திடை - என் மனத்தின்கண், மன்னிய - நிலைபெற்ற, மன்னே - இறை வனே, சிறைபெறு நீர்போல் - கரையயற்ற நீர்போல், சிந்தை வாய் - என்மனத்தின்கண், பாயும் - பாயாநின்ற, திருப்பெருந் துறையுறை சிவனே——, இறைவனே - தலைவனே, நீ - நீ, என் உடலிடம்கொண்டாய் - என்னுடம்பை யிடமாகக் கொண்டனை,

இனி - இனி, உன்னை - நின்னை, என் இரக்கேன் - யாது இரத்தற்குரியேன், எ-று.

க - ரை. திருப்பெருந்துறை யிறைவனே, நீ என்னுடம்பையே இடமாகக்கொண்டாய், இனி நான் உன்னை என்னபொருளை யிரக்கக்கடவேன் என்பதாம். (௫)

இரந்திரந்துருகவென்மனத்துள்ளே
யெழுகின்றசோதியேயிமையோர்
சிரந்தனிற்பொலியுங்கமலச்சேவடியாய்
திருப்பெருந்துறையுறைசிவனே
நிரந்தவாகாயநீர்நிலந்தீகா
லாயவையல்லையாயாங்கே
கரந்ததோருருவேகளித்தனனுன்னைக்
கண்ணுறக்கண்டுகொண்டின்றே.

ப-ரை. இரந்து இரந்து உருக - வேண்டிவேண்டி யுருகும்படி, என் மனத்துள்ளே - என்மனத்தினுள், எழுகின்றசோதியே - எழுகின்ற ஒளியே, இமையோர் சிரந்தனில் பொலியும் - தேவர்களுடைய சிரத்தின்மேல் விளங்குகின்ற, கமலம் - தாமரைமலர்போன்ற, சேவடியாய் - திருவடியை யுடையவனே, திருப்பெருந்துறையுறை சிவனே——, நிரந்த - வரிசைப்பட வைக்கப்பட்ட, ஆகாயம் - ஆகாசமும், நீர் - நீரும், நிலம் - பூமியும், தீ - நெருப்பும், கால் - காற்றும், ஆய் - ஆகி, அவை அல்லையாய் - அவைகளல்லையாகி, ஆங்கே - அவ்வாறே, கரந்தது - ஒளித்ததாகிய, ஓர் உருவே-ஒருருவமே, இன்று - இப்பொழுது, உன்னை - நின்னை, கண்ணுறக் கண்டுகொண்டு - கண்ணாரக்கண்டு, களித்தனன் - மகிழ்ந்தேன், எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, இன்று உன்னைக் கண்ணாரக்கண்டு களித்தேன் என்பதாம்.

வி - ரை. இறைவன் திருவடியைத் தேவர்கள் தம் சிரத்திற் சூடி வணங்குதலால், "இமையோர் சிரந்தனிற்பொலியுங் கமலச்சேவடியாய்" என்றார். (௬)

இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்
தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தே
னீயலாற்பிறிதுமற்றின்மை

சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந் தொன்றாந
திருப்பெருந்துறையுறைசிவனே
ஒன்றுநீயல்லையன்றியொன்றில்லை
யாருன்னையறியகிற்பாரே.

ப - ரை. இன்று - இப்பொழுது, எனக்கு அருளி - எனக்கருள்புரிந்து, இருள்கடிந்து - அஞ்ஞான இருளைப்போக்கி, உள்ளத்து எழுகின்ற - மனத்தின்கண்ணே உதிக்கின்ற, ஞாயிறே போன்று நின்ற - சூரியனையே நிகர்த்து நின்ற, நின்தன்மை - உன் தன்மையை, நினைப்பு அற நினைந்தேன் - நினையாமல் நினைந்தேன், நீ அல்லால் பிறிது இன்மை - நீயன்றி வேறுபொருளில்லையாக, சென்றுசென்று - போய்ப்போய், அணு ஆய்தேய்ந்து தேய்ந்து, அணு ரூபமாகித் தேய்ந்துதேய்ந்து, ஒன்று ஆம் - ஒரு ரூபமாகின்ற, திருப்பெருந்துறையுறை சிவனே-—, ஒன்றும் நீயல்லை - ஒரு பொருளும் நீயல்லை, அன்றி - நீயன்றி, ஒன்று இல்லை - ஒரு பொருளுமில்லை, உன்னை அறியகிற்பார் யார் - உன்னையறிய வல்லார் யாவர். எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன் நிலைமையை நினைப்பற நினைந்தேன், ஒருபொருளும் நீயல்லை, நீயன்றி ஒருபொருளு மில்லை யாதலால் உன்னை அறியவல்லார் யாவர் என்பதாம்.

வி - ரை. நினைப்பற நினைத்தல் - நினையாமல் நினைத்தல். "சொல்லாமற் சொன்னவரை நினையாமனினைந்து பவத்தொடக்கை வெல்வாம்" என்றார் பிறரும். (எ)

பார்பதமண்டமனைத்துமாய்முளைத்துப்
பரந்ததோர்படரொளிப்பரப்பே
நீருறுதீயேநினைவதேலரிய
நின்மலாநின்னருள்வெள்ளச்
சீருறுசிந்தையெழுந்ததோர்தேனே
திருப்பெருந்துறையுறைசிவனே
யாருறவெனக்கிங்காரயலுள்ளா
ரானந்தமாக்குமென்சோதீ.

ப - ரை. பார் - பூமி, பதம் - இடத்தையுடைய, அண்டம் - விண்ணுலகம், அனைத்தும் ஆய் - மற்றெல்லாப் பொருள்களுமாகி, முளைத்து - தோன்றி, பரந்தது - வியாபித்ததாகிய, ஓர் - ஒப்

பற்ற, படர் ஒளிப்பரப்பே - பரந்த ஒளிப்பரப்பே, நீர் உறு தீயே-நீரோடுகூடிய நெருப்பே, நினைவதேல் - நினைப்பதானால், அரிய-(அந்த நினைப்புக்கும்) அரிய, நின்மலா-நிர்மலனே, நின்-உனது, அருள்வெள்ளம் - அருட்பெருக்கின், சீர் உறு - சிறப்பமைந்த, சிந்தை - மனத்தின்கண், எழுந்தது - உண்டாகிய, ஓர்தேனே - ஒப்பற்றதேனே, திருப்பெருந்துறையுறை சிவனே-—, எனக்கு - அடியேனுக்கு, இங்கு - இவ்விடத்தில், உறவு ஆர் - உறவாயிருப்பவர்யார், அயல் உள்ளார் - அயலாரா யிருப்பவர், (ஆர் - யார்). ஆனந்தம் ஆக்கும் - எனக்கு இன்பத்தை யுண்டாக்குகின்ற, என் சோதீ - என்னொளியுடைப் பொருளே, எ-று.

க - வுரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னையடைந்த எனக்கு உறவு பகை என்பவை யில்லை யென்பதாம்.(அ)

சோதியாய்த்தோன்றுமுருவமேயருவா
மொருவனேசொல்லுதற்கரிய
ஆதியேநடுவேயந்தமேபந்த
மறுக்குமானந்தமாகடலே
தீதிலாநன்மைத்திருவருட்குன்றே
திருப்பெருந்துறையுறைசிவனே
யாதுநீபோவதோர்வகையெனக்கருளாய்
வந்துநின்னிணையடிதந்தே.

ப - ரை. சோதியாய்த் தோன்றும் உருவமே - ஒளியாய்க் காணப்படுகின்ற உருவே, அருவம் ஆம் ஒருவனே - அருவமாயிருக்கிற வொருத்தனே, சொல்லுதற்கு அரிய ஆதியே - சொல்லுதற்கருமையாகிய முதற்பொருளே, நடுவே - இடையே, அந்தமே - முடிவே, பந்தம் அறுக்கும் - பிறவித்தளையைச் சேதிக்கிற, மா ஆனந்தம் கடலே - பெரிய இன்பக்கடலே, தீது இல்லா நன்மை - தீமை கலவாத நன்மையையுடைய, திருவருள் குன்றே-திருவருண்மலையே, திருப்பெருந்துறையுறை சிவனே——, நீ போவது ஓர்வகையாது-நீ யென்னைவிட்டு நீங்கும் வகையெது-(ஒன்றுமில்லை ஆதலால்) எனக்கு - அடியேனுக்கு, வந்து - வந்து, நின் இணை அடிதந்து - உன் இரண்டு திருவடிகளைக் கொடுத்து, அருளாய் - அருள்புரியவேண்டும், எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, என்னைவிட்டு நீ பிரியும் வகையில்லை ஆதலால் நீ உன் திருவடியையெனக்குக் கொடுத்தருள வேண்டும் என்பதாம்.

வி - ரை. இறைவனது திருவருள் எப்பொழுதும் சலித்த லில்லாமையால் "திருவருட்குன்றே" என்றார். (௯)

தந்ததுன் றன்னைக்கொண்டதென் றன்னைச்
சங்கராவார்கொலோசதுரர்
அந்தமொன்றில்லாவானந்தம்பெற்றே
னியாதுநீபெற்றதொன்றென்பால்
சிந்தையேகோயில்கொண்டவெம்பெருமான்
றிருப்பெருந்துறையுறைசிவனே
எந்தையேயீசாவுடலிடங்கொண்டா
யானிதற்கிலனோர்கைம்மாறே.

ப - ரை. தந்தது - எனக்குக் கொடுத்தது, உன்றன்னை - உன்னை, கொண்டது-அதற்குப் பிரதியாக ஏற்றுக்கொண்டதோ, என்றன்னை - என்னை, சங்கரா - சங்கரனே, சதுரர் ஆர் - (நம்மிருவரில்) சதுரப்பாடுள்ளார் யாவர், அந்தம் ஒன்று இல்லா - முடிவென்பது சிறிதுமில்லாத, ஆனந்தம் பெற்றேன் - இன்பமடைந்தேன், நீ என்பால் பெற்றது ஒன்றுயாது - நீ யென்னிடத்துப் பெற்றுக்கொண்டதோர் பொருள்யாது, சிந்தையே - என் மனத்தையே,கோயில்கொண்ட-திருக்கோயிலாகக் கொண்டெழுந்தருளின,எம்பெருமான் - எம்பிரானே, திருப்பெருந்துறையுறை சிவனே——, எந்தையே-எமது தந்தையே, ஈசா-ஈசனே, உடலிடம்கொண்டாய் - என்னுடம்பையே இடமாகக்கொண்டாய், இதற்கு - இந்த நன்றிக்கு, யான் ஒரு கைம்மாறு இலன் - நான் செய்ய அடுப்பதாகிய ஒரு கைம்மாற்றை யுடையேனல்லேன்,எ-று

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னை யெனக்குக் கொடுத்து என்னை நீ வாங்கிக்கொண்டனை, நம்மிருவரில் சதுரர்யார், உன்னால் நான் பெற்றது முடிவற்ற இன்பம், என்னால் நீ பெற்றது யாது? எந்தையே, நீ யென்னுடலிடங் கொண்டதற்கு யான் என்ன கைம்மாறு செய்வேன் என்பதாம்.

வி - ரை. அறச் சிறிய பொருளாகிய என்னைக்கொண்டு, அறப்பெரிய பொருளாகிய உன்னை யெனக்குத் தந்தமையால், நானே சதுரன் என்பது தோன்ற, "தந்ததுன் றன்னைக் கொண்டதென்றன்னைச் சங்கராவார்கொலோ சதுரர்" என்றார்.

# செத்திலாப்பத்து.

சிவானந்தமளவறுக்கொணாமை.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

பொய்யனேனகநெகப்புகுந்தமுதூறும்
புதுமலர்க்கழலிணையடிபிரிந்தும்
கையனேனின்னுஞ்செத்திலேனந்தோ
விழித்திருந்துள்ளக்கருத்தினையிழந்தேன்
ஐயனேயரசேயருட்பெருங்கடலே
யத்தனேயயன்மாற்கறியொண்ணாச்
செய்யமேனியனேசெய்வகையறியேன்
றிருப்பெருந்துறைமேவியசிவனே

ப - ரை. பொய்யனேன் - பொய்யனேனது, அகம்நெக - உள்ளம் நெகிழும்படி, புகுந்து - அதின்கண் பிரவேசித்து, அமுது ஊறும் - அமுதம் சுரக்கின்ற, புது - நூதனமாகிய, மலர் - தாமரை மலர்போன்ற, கழல் - வீரகண்டையணிந்த, இணையடி பிரிந்தும் - இரண்டு திருவடிகளைப் பிரிந்தும், கையனேன் - சிறியனேன், இன்னும் செத்திலேன் - இன்னும் இறந்திலேன், அந்தோ - ஐயோ, விழித்திருந்து - விழித்திருந்தும், உள்ளக்கருத்தினை யிழந்தேன் - மனக்கருத்தை யிழந்து விட்டேன், ஐயனே - ஐயா, அரசனே - அரசனே, அருட்பெருங்கடலே - பெரிய அருட்கடலே, அத்தனே-எமதுதந்தையே, அயன்மால்கு - பிரமவிட்டுணுக்களுக்கும், அறியொண்ணா - உணரவொண்ணாத, செய்யமேனியனே - செவந்த திருமேனியை யுடையானே, செய்வகை அறியேன் - செய்யவேண்டிய விதம் இன்னதென்றறிந்திலேன், திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையிலெழுந்தருளி யிருக்குஞ் சிவபெருமானே. எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, பொய்ய னேனது மனம் நெக்குருகும்படி புகுந்து அமிர்தம்போலச் சுரக்கின்ற உன்திருவடியைப் பிரிந்தும், பிரிவாற்ருமையால் இன்னும் இறந்திலேன், விழித்திருந்தும் மனக் கருத்தினை யிழந்தேன், இனிச்செய்யும் வகையின்ன தென்றறிந்திலேன் என்பதாம். (க)

புற்றுமாய்மரமாய்ப்புனல்காலே
யுண்டியாயண்டவாணரும்பிறரும்
வற்றியாருநின்மலரடிகாணு
மன்னவென்னையோர்வார்த்தையுட்படுத்துப்
பற்றினுய்பதையேன்மனமிகவுருகேன்
பரிகிலேன்பரியாவுடறன்னைச்
செற்றிலேனின்னுந்திரிதருகின்றேன்
றிருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. புற்றும் ஆய் - புற்றுருவாகியும், மரம் ஆய் - மரவுருவாகியும், புனல்காலே உண்டியாய் - நீரையும் காற்றையுமே உணவாகக் கொண்டு, அண்டவாணரும் - தேவர்களும், பிறரும் - மற்றையரும், வற்றி - (தவஞ்செய்து) உடல்குறைந்து, யாரும் - ஒருவரும், நின் மலர் அடி - உன்தாமரைமலர்போலுந் திருவடிகளை, காணு - காண வொண்ணுத, மன்ன - இறைவனே, என்னை - அடியேனை, ஓர்வார்த்தை யுட்படுத்து - ஒரு வார்த்தையிலகப்படுத்தி, பற்றினுய் - பற்றிக்கொண்டனை, (அதை நினைத்து) பதையேன் - பதைத்திலேன், மனம் மிகவுருகேன் - மனமானது மிகவும் உருகப்பெற்றிலேன், பரிகிலேன் - அன்பு செய்திலேன், பரியா உடல் தன்னை - அன்புசெய்யப் பெருதவுடம்பை, செற்றிலேன் - வெறுத்திலேன், இன்னும் திரிதருகின்றேன் - இன்னமும் திரியா நின்றேன், திருப்பெருந்துறை மேவியசிவனே—எ-று

க - ரை. திருப்பெருந்துறைச்சிவபெருமானே; தேவர்முதலியோர் அருந்தவஞ் செய்தும் உன் திருவடியைக்கண்டிலர், அப்படியிருக்க, என்னை ஒருவார்த்தையாலகப் படுத்திச் சேர்த்துக்கொண்டனை, அதுபற்றி நான்பதைத்தல் முதலியன செய்யாது இன்னும் உழலாநின்றேன் என்பதாம். (உ)

புலையனேனையும்பொருளெனநினைந்துன்
னருள்புரிந்தனைபுரிதலுங்களித்துத்
தலையினுனடந்தேன்விடைப்பாகா
சங்கராவெண்ணில்வானவர்க்கெல்லாம்

நிலையனேயலைநீர்விடமுண்ட
நித்தனேயடையார்புரமெரித்த
சிலையனேயெனைச்செத்திடப்பணியாய்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. புலையனேனையும் - புலையனாகிய என்னையும், பொருள் என நினைந்து - ஒருபொருளாயெண்ணி, உன் அருள் புரிந்தனை - உன்னருள் செய்தனை, புரிதலும் - செய்தலும், களித்து - களிப்படைந்து, தலையினால்நடந்தேன் - தலையாலே நடந்தேன், விடைப்பாகா - இடபவாகனனே, சங்கரா - சங்கரனே, எண் இல்வானவர்க்கு எல்லாம் - எண்ணிறந்த தேவர்களுக்கெல்லாம், நிலையனே - நிலையிடமாயுள்ளவனே, அலைநீர்விடம் உண்ட - அலைகளையுடைய கடலிற் பிறந்த நஞ்சை யருந்தின, நித்தனே - சாசுவதனே, அடையார்புரம் எரித்த - பகைவரது திரிபுரத்தை நீறாக்கின, சிலையனே - வில்லையுடையானே, என்னை - அடியேனை, செத்திடப்பணியாய் - சாவப்பணிக்க வேண்டும், திருப்பெருந்துறை மேவிய சிவனே ——, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, புலையனேனையும் ஓர் பொருளாயெண்ணி உன்னருள் செய்தனை, செய்தலும் களிப்படைந்து தலைகீழாக நடந்தேன், இனியாயினும் அடியேனை இறக்கும்படி கட்டளையிட வேண்டும் என்பதாம். (௩)

அன்பராகிமற்றருந்தவமுயல்வா
ரயனுமாலுமற்றழலுறுமெழுகாம்
என்பராய்நினைவாரெனைப்பலர்
நிற்கவிங்கெனையெற்றினுக்காண்டாய்
வன்பராய்முருடொக்குமென்சிந்தை
மரக்கணென்செவியிரும்பினும்வலிது
தென்பராய்த்துறையாய்சிவலோகா
திருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. அன்பர் ஆகி - அன்புடையராகி, அரு - செய்தற்கரிய, தவம்முயல்வார் - தவ முயல்வாராகிய, அயனும் மாலும் - பிரமனும் திருமாலும், அழல் உறும் மெழுகு ஆம் - நெருப்பைச் சேர்ந்த மெழுகுபோன்ற, என்பர் ஆய் - எலும்பை யுடையராய், நினைவார் - நினைப்பவராகிய, எனைப்பலர் - வேறுபலரும், நிற்க - நிற்கச்செய்தே, இங்கு - இவ்விடத்து, என்னை - அடியேனை, எற்

றினுக்கு ஆண்டாய் - யாதுக்கு ஆண்டருளினை, என் சிந்தை - என்மனமானது, வன்பராய் முருடு ஒக்கும் - வலிய பராய்க் கட்டையை நிகர்க்கும், மரக்கண் - (என்கண்) மரக்கணுவை நிகர்க்கும், என்செவி இரும்பினும் வலிது - என்செவி இரும்பினும் வலிதாயிருக்கின்றது, தென்பராய்த் துறையாய் - தென்பராய்த்துறையை யுடையானே, சிவலோகா - சிவபுரத்தானே, திருப்பெருந்துறைமேவிய சிவனே——; எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னிடத்து அன்புடையராகிப் பிரமனும் திருமாலும் பிறரும் என்புருகி நிற்க, இங்கு அன்புமுதலிய வொன்றுமில்லாத என்னையாதுகாரணமாக ஆண்டருளினை, என்மனம் பராய்க்கட்டைபோலவலிது, என்கண் மரக்கண்ணை நிகர்க்கும், என்செவி இரும்பினும் வலிது என்பதாம்.

வி - ரை. என்பர் - எலும்பை யுடையவர், அஃதாவது எலும்பேயன்றித் தசை முதலியவை யில்லாதவர் என்க. பராய் - ஓர் மரம், இது வன்மையிற் சிறந்ததாதலால் "வன்பராய்" என்றார். முருடு - கட்டை- பராய்த்துறை - ஓர் திருப்பதி. (௪)

ஆட்டுத்தேவர்தம்விதியொழித்தன்பா
லையனேயென்றுன்னருள்வழியிருப்பேன்
நாட்டுத்தேவருநாடரும்பொருளே
நாதனேயுனைப்பிரிவுறுவருளைக்
காட்டித்தேவநின்கழலிணைகாட்டிக்
காயமாயத்தைக்கழித்தருள்செய்யாய்
சேட்டைத்தேவர்தந்தேவர்பிரானே
திருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. ஆட்டுத் தேவர் தம்விதி ஒழித்து - பொய்த்தேவர்களுடைய கட்டளையை யொழித்து, அன்பால் - அன்பினால், ஐயனே என்று - ஐயாவென்று, உன் அருள்வழி யிருப்பேன், உன்னருணெறியி லிருப்பேன், நாட்டுத் தேவரும் - பூசுரராகிய பிரமவித்துக்களும், நாடு அருபொருளே - நாடுதற்கரிதாகிய பொருளே, நாதனே - இறைவனே, உன்னைப் பிரிவுறு அருளை - உன்னைவிட்டு நீங்காத திருவருளை, காட்டி - காட்டி, தேவ - தேவனே, நின்கழல் இணைகாட்டி - உன்னிணையடி காட்டி, காயமாயத்தைக் கழித்து - சரீரமாகிய மாயப்

பொருளைக்கழித்து, அருள்செய்யாய்-அருள் புரியவேண்டும், சேடு ஐதேவர்தம்தேவர்பிரானே-பெருமையும் அழகுமுள்ள தேவ தேவருக்குந்தலைவனே, திருப்பெருந்துறைமேவியசிவனே——,எ-று.

க - ரை. திருப்பெருந் துறைச் சிவபெருமானே, பொய்த் தேவரது தொடர்பைவிட்டு, ஐயனேயென்று உன் அருள்வழியி லிருப்பேன், ஆதலால் உன்னைப்பிரியாம லிருக்கக் கிருபைசெய்து, உன் திருவடியைக் காட்டி, இப்பொய்யுடம்பை யொழித்தருள வேண்டும் என்பதாம்.

வி - ரை. ஆட்டு - விளையாட்டு, அதாவது பொய்யென்றபடி. ஆட்டுத்தேவர் - பிரமனுதியர். விதி - யொழித்தலாவது-பிறப்பு முதலியவற்றினின்று நீங்குதல். சேட்டைத்தேவர்-இந்திராதி தேவர்கள். (௬)

தனை - சாக்கிலேனுடறுணிபடத்தீப்புக்
கார்க்கிலேன்றிருவருள்வகையறியேன்
பொறுக்கிலேனுடல்போக்கிடங்காணேன்
போற்றிபோற்றியென்போர்விடைப்பாகா
இறக்கிலேனுனைப்பிரிந்தினிதிருக்க
வென்செய்கேனிதுசெய்கவென்றருளாய்
சிறைக்கணேபுனனிலவியவயல்சூழ்
திருப்பெருந்துறைமேவியசிவனே

ப - ரை. உன்னைப்பிரிந்து - உன்னைப்பிரிதலால், உடல் - உடம்பு, துணிபட - துண்டுகளாம்படி, அறுக்கிலேன் - சேதித்திலேன், தீப்புக்கு ஆர்கிலேன் - தீப்புகுந் திருக்கிலேன், திருவருள்வகை அறியேன்-திருவருளின் வகையை யுமுணர்ந்திலேன், உடல் பொறுக்கிலேன் - உடம்பைத் தாங்கிலேன், போக்கிடம் காணேன் - போமிடமுங் கண்டிலேன், போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், என்போர் விடைப்பாகா - என்போர்க்குரிய இடபவாகநனே, இறக்கிலேன் - இறக்கின்றிலேன், இனிது இருக்க - சுகமாயிருத்தற்கு, என்செய்கேன் - யாது உபாயம் செயக் கடவேன், இது செய்க என்று அருளாய் - இதனைச்செய்யென்று நியமித்தருள்வாயாக, சிறைக்கணே - கரையின் கண்ணே, புனல் - நீர், நிலவிய - நிலைபெற்ற, வயல்சூழ் -வயல் சூழ்ந்த, திருப்பெருந்துறை மேவிய சிவனே——,எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, என் உடம்பைத் துண்டுகளாக அறுக்கிலேன், நெருப்பில் வீழ்கிலேன், வேறுபோக்கிடங் காணேன், இறந்திலேன், சுகமாயிருத்தற்கு

என்னஉபாயம் செய்வேன், இன்னது செய்கவெனக் கட்டளை யிட்டருள்வாயாக என்பதாம். (எ)

மாயனேமறிகடல்விடமுண்ட
வானவாமணிகண்டத்தெம்மமுதே
நாயினேனுனைநினையவுமாட்டே
னமச்சிவாயவென்றுன்னடிபணியாப்
பேயனாகிலும்பெருநெறிகாட்டாய்
பிறைகுலாஞ்சடைப்பிஞ்ஞகனேயோ
சேயனாகிநின்றலறுவதழகோ
திருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. மாயனே - மாயனே, மறி-அலைகள் மடங்கி விழுகின்ற, கடல் - கடலின் கட்டோன்றிய, விடம் - விஷத்தை, உண்ட - உட்கொண்டருளின, வானவா - தேவனே, மணிகண்டத்து - நீலகண்டத்தையுடைய, எம்அமுதே - எம்அமிர்தமே, நாயினேன் - நாயேன், உன்னைநினையவும் மாட்டேன் - உன்னை நினைக்கவுமாட்டேன், நமச்சிவாய என்று - நமச்சிவாயவென்று, உன் அடிபணியா - உன்திருவடியைய வணங்காத, பேயனாகிலும் - பேயனேயாயினும், பெருநெறிகாட்டாய்-முத்திநெறியைக் காட்டுவாய், பிறைகுலாம் - பிறைவிளங்குகின்ற, சடை - சடையையுடைய, பிஞ்ஞகனே - பிஞ்ஞகனே, ஓ - ஓ, சேயன்ஆகிநின்று - குழந்தையை யொத்துநின்று, அலறுவது அழகோ - நான் அலறுவது அழகாமோ, திருப்பெருந்துறை மேவியசிவனே——, எ-று.

க-ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, நாயேன் உன்னை நினைக்கவுமாட்டேன், நமச்சிவாயவென்று உன் திருவடியை வணங்காத பேயனேயாயினும் பெருநெறியைக் காட்டவேண்டும் குழந்தைபோல நின்று நான் அலறுவது அழகாமோ என்பதாம்.

போதுசேரயன்பொருகடற்கிடந்தோன்
புரந்தராதிகணிற்கமற்றென்னைக்
கோதுமாட்டிநின்குரைகழல்காட்டிக்
குறிக்கொள்கென்றுநின்றொண்டரிற்கூட்டாய்
யாதுசெய்வதென்றிருந்தனன்மருந்தே
யடியனேனிடர்ப்படுவதுமினிதோ
சீதவார்புனனிலவியவயல்சூழ்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. போதுசேர்அயன் - தாமரைப் பூவைச் சேர்ந்த பிரமன், பொருகடல் கிடந்தோன் - அலைகள் மோதுகின்ற கடலிற்

றுயின்றோனுகிய திருமால், புரந்தராதிகள் - இந்திரன் முதலிய தேவர்கள், நிற்க - நிற்கச்செய்தே, என்னை - அடியேனை, கோது மாட்டி-குற்றங்களை மாள்வித்து, நின்குரைகழல் காட்டி-உன் ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியைக் காட்டி, குறிக்கொள்க என்று - குறிக்கொள்வாயென்று, நின்தொண்டரின் கூட்டாய் - உன்தொண்டரோடு சேர்ப்பாயாக, யாதுசெய்வதுஎன்று - யாது செய்யத்தக்கது என்று, இருந்தனன் - இருந்தேன், மருந்தே-அமிர்தமே, அடியனேன் - அடியேன், இடர்ப்படுவதும் - துன்பப்படுவதும், இனிதோ - உனக்கினிதாமோ, சீதம் - குளிர்ச்சி பொருந்திய, வார்புனல் - பெரும்புனல், நிலவிய-நிலைபெற்ற, வயல்சூழ் - வயல்சூழ்ந்த, திருப்பெருந்துறை மேவியசிவனே——, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, பிரமன் திருமால் முதலானோரிருக்க, என்குற்றங்களை யொழித்து, எனக்கு உன்திருவடியைக் காட்டி, இதனை உறுதியாய்ப் பற்றென்று உன் தொண்டரோடு கூட்டவேண்டும், அடியேன் துன்புறுவது உனக்கினிதாயிருக்கின்றதோ என்பதாம். (௬)

ஞாலமிந்திரனுன்முகன்வானவர்
நிற்கமற்றெனைநயந்தினிதாண்டாய்
காலனுருயிர்கொண்டபூங்கழலாய்
கங்கையாயங்கிதங்கியகையாய்
மாலுமோலமிட்டலறுமம்மலர்க்கே
மரக்கணேனையும்வந்திடப்பணியாய்
சேலுநீலமுநிலவியவயல்சூழ்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

ப - ரை. ஞாலம் - உலகம், இந்திரன் - தேவர்கோன், நான்முகன் - பிரமன், வானவர் - தேவர்கள், நிற்க - நிற்கச்செய்தே, என்னை நயந்து - என்னை விரும்பி, இனிதுஆண்டாய்-இனிதாக ஆண்டருளினை, காலன் - யமனது, ஆர்உயிர்கொண்ட - அரியஉயிரைக் கவர்ந்த, பூங்கழலாய் - தாமரைப் பூப்போலுந் திருவடியை யுடையவனே, கங்கையாய் - கங்கையை யுடையவனே, அங்கிதங்கிய கையாய் - நெருப்புத் தங்கிய கையை யுடையானே, மாலும் - திருமாலும், ஓலம் இட்டு - (அறியாமல்) முறையிட்டு, அலறும் - அலறுதற்குரிய, அம்மலர்க்கே - அந்தப் பாததாமரைக்கே, மரக்கணேனையும் - மரக்கண்போன்ற கண்ணையுடைய என்னையும், வந்திடப்பணியாய் - வந்திடும்படிப் பணித்தருளாய், சேலும் - சேல்மீன்களும், நீலமும் - நீலப் பூக்களும்,

நிலவிய - நிலைபெற்ற, வயல்சூழ் - வயல்சூழ்ந்த, திருப்பெருந் துறை மேவியசிவனே——,எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே,இந்திராதிய ரிருக்க என்னை விரும்பிவந்து ஆண்டருளினை, திருமாலும் அறி யாத அந்தத் திருவடியை அடையும்படி எனக்குக் கிருபைசெய்ய வேண்டும் என்பதாம்.

வி - ரை. கங்கையாய்என்பதனை கம் கையாய் எனப்பிரித்து, பிரம கபாலத்தையேந்திய கையை யுடையவனே யெனினும், நகு வெண்டலையை யேந்திய கையையுடையவனே யெனினுமாம்.

அளித்துவந்தெனக்காவவென்றருளி
யச்சந்தீர்த்தநின்னருட்பெருங்கடலில்
திளைத்துந்தேக்கியும்பருகியுமுருகேன்
றிருப்பெருந்துறைமேவியசிவனே
வளைக்கையானொடுமலரவனறியா
வானவாமலைமாதொருபாகா
களிப்பெலாமிகக்கலங்கிடுகின்றேன்
கயிலைமாமலைமேவியகடலே.

ப - ரை. எனக்கு - அடியேனுக்கு. அளித்து வந்து-கிருபை செய்துவந்து, ஆவஎன்று அருளி - ஐயோவென்றிரங்கி யருளி, அச்சம் தீர்த்த - பயந்தவிர்த்த, நின் அருட்பெருங் கடலில் - உன் னருளாகிய பெரிய கடலினிடத்து, திளைத்தும் - முழுகியும், தேக்கியும் - அநுபவம் நிறையப்பெற்றும், பருகியும் - உண்டும், உருகேன் - (இன்னமும் மனம்) உருகாதவனுனேன், திருப்பெருந் துறைமேவியசிவனே——,வளைக்கையானொடும்-சங்கையேந்தின கையானாகிய திருமாலோடு, மலரவன்- பிரமனும், அறியா -அறிய வொண்ணாத, வானவா - தேவனே, மலைமாது - மலைமகளை, ஒரு பாகா - ஒருபாகத்திலுடையானே, களிப்பு எல்லாம்மிக-(குலம் செல்வம்கல்வி முதலிய) களிப்பெல்லாம் அதிகரித்தலால், கலங் கிடுகின்றேன் - மனம் கலங்காநின்றேன், கயிலைமாமலை மேவிய - பெரிய கைலாய மலையின் கண்ணெழுந்தருளி யிருக்கிற, கடலே- கருணைக் கடலே, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, கருணை செய்து வந்து எனக்கிரங்கி, என் அச்சத்தை நீக்கின உன்னருட் கடலில் மூழ்கியும் தேக்கெறிந்தும் உருகமாட்டேன், என் மன மகிழ்ச்சி யெல்லாம் நிலைகலங்கின, உன்னையன்றி எனக்கு வேறு புகலிடமில்லை யென்பதாம்.

---

# அடைக்கலப்பத்து.

பக்குவநிண்ணயம்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கலவைப்பாட்டு.

செழுக்கமலத்திரளன நின்சேவடிசேர்ந்தமைந்த
பழுத்தமனத்தடியருடன்போயினர்யான்பாவியேன் [லா
புழுக்கணுடைப் புன்குரம்பைப்பொல்லாக்கல்விஞானமி
அழுக்குமனத்தடியேனுடையாயுன்னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, செழு - செழுமையாகிய, கமலத்திரள் அன்ன - தாமரைமலர்த் தொகுதிபோன்ற, நின் சேவடி சேர்ந்து அமைந்த - உன்திருவடியையடைந்தமைந்த, பழுத்தமனத்து அடியர் - கனிந்த மனத்தையுடைய அடியார்கள், உடன் போயினர் - உன்னுடன் சென்றார்கள், யான் பாவியேன் - நான் பாவியேனாயினேன், (அன்றியும்) புழுக்கண் உடை - புழுக்கள் தமக்கிடமாக உடைய, புன்குரம்பை - புல்லியவுடம்பையும், கல்விஞானம் இல்லா - கல்விஞானங்களில்லாத, பொல்லா - பொல்லாத, அழுக்குமனத்து - களங்கமாகிய மனத்தையுமுடைய, அடியேன் - அடியனேன், உன் அடைக்கலம் - உனக்கடைக்கலப் பொருள், எ - று.

க - ரை. இறைவனே, தாமரை மலர்போன்ற உன்திருவடியைச் சேர்ந்த அடியார் உன்னோடு சென்றார்கள், பாவியேனாகிய நானும் உன் அடைக்கலமே என்பதாம்.

வி - ரை. புழுக்கள் நுடை எனப்பிரித்து புழுக்கள் நெளிகின்ற என்றுரைப்பினுமாம். நுடைதல் - நெளிதல். குரம்பை - கூடு, அது இங்கு உடம்பைக் குறித்தது. பழுத்தமனத்தடியர் என்றது திருப்பெருந்துறையில் குருமூர்த்தமா யெழுந்தருளின சிவபெருமானோடு வந்த சிவகணங்களை. உடன்போயினர் என்றது அவர்கள் நெருப்பிற் புகுந்து மறைந்தமையை. (க)

வெறுப்பனவே செய்யுமென் சிறுமையைநின் பெரு மையினல், பொறுப்பவனேயராப்பூண்பவனே பொங்கு கங்கைசடைச், செறுப்பவனே நின்றிருவருளா லென் பிறவியைவேர், அறுப்பவனே யுடையா யடியேனுன் னடைக்கலமே.

ப - ரை. உடையாய்-இறைவனே, வெறுப்பனவே செய்யும் - வெறுக்கத்தக்கவைகளாகிய தீமைகளையே செய்கின்ற, என் சிறுமையை - எனது இழிவை, நின்பெருமையினல் - உன் பெருங்குணத்தால், பொறுப்பவனே - க்ஷமிப்பவனே, அரா பூண்பவனே - பாம்பை யணிவோனே, பொங்கு-பெருகுகின்ற, கங்கை-கங்கையை, சடை-சடையின்கண், செறுப்பவனே - அடக்குவோனே, நின் திருவருளால் - உன்திருவருளாகிய வாளால், என்பிறவியை - என்பிறவியாகிய மரத்தை, வேர் அறுப்பவனே - வேரோடறுப்பவனே, அடியேன் - அடியனேன், உன்அடைக்கலம் ——, எ - று.

க - ரை. இறைவனே, தீமைகளையே செய்கின்ற என் இழிவை உன் பெருங்குணத்தால் பொறுப்பவனே, சர்ப்பாபரணனே, கங்கைச் சடையனே, உன்திருவருளென்னும் வாளால் என்பிறவியை வேரறுப்பவனே, அடியேன் உன்அடைக்கலம்.

வி - ரை. யாவரும் வெறுத்தலால் தீமைகளை வெறுப்பன என்றார். என்பிறவியை வேரறுப்பவனே என்றதனல் திருவருள் வாளாக்கி யுரைக்கப்பட்டது. (௨)

பெரும்பெருமா னென்பிறவியை வேரறுத்துப் பெரும்பிச்சுத், தரும்பெருமான் சதுரப்பெருமா னென்மனத்தினுள்ளே, வரும்பெருமான் மலரோ னெடுமா லறியாமனின்ற, அரும்பெருமா னுடையா யடியேனுன் னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, பெரும்பெருமான் - பெரிய பெருமானே, என்பிறவியை - என் பிறப்பை, வேர் அறுத்து - வேரோடறுத்து, பெரும்பிச்சு - உன்மீது பெரிய பைத்தியத்தை, தரும்பெருமான் - எனக்குத் தரும்பெருமானே, சதுரப்பெருமான் - சதுரதையையுடைய பெருமானே, என்மனத்தினுள்ளே - என் சித்தத்தினுள்ளே, வரும் பெருமான் - வருகின்ற பெருமானே, மலரோன் நெடுமால்-பிரமனும் விட்டுணுவும்,

அறியாமல்நின்ற - அறியவொண்ணுமல் நின்ற, அரும்பெருமான்- அரியபெருமானே, அடியேன்உன் அடைக்கலம்——,எ - று.

க - ரை. இறைவனே, பெரியபெருமானும், என் பிறவியை வேரறுத்து எனக்குப் பெரும்பித்தேற்றும் பெருமானும், சதுரப் பெருமானும், என்மனத்தில் எழுந்தருளும் பெருமானும், பிரம விட்டுணுக்கள் அறியவொண்ணுமல் நின்ற அரும்பெருமானும் ஆகிய தலைவனே, அடியேன் உன்அடைக்கலம் என்பதாம். (ங.)

பொழிகின்ற துன்பப் புயல்வெள்ளத்தினின் கழற்பு ணைகொண், டிழிகின்ற வன்பர்களே றினர்வான்யா னிட ர்க்கடல்வாய்ச், சுழிசென்றுமாதர்த் திரைபொரக்காமச் சுறவெறிய,அழிகின்றன னுடை யாயடியேனுன் னடைக் கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, பொழிகின்ற - சொரி கின்ற, துன்பம் - துன்பமாகிய, புயல் - மழையினுலுண்டாகிய, வெள்ளத்தில் - பெருக்கில், நின்கழல்-உன்திருவடியாகிய, புணை கொண்டு - தெப்பத்தைக்கொண்டு, இழிகின்ற - இறங்குகின்ற, அன்பர்கள் - அடியார்கள், வான்ஏறினர் - பரமாகாயத்தில் ஏறி ஞர்கள், யான் - அடியேன், இடர்க்கடல்வாய் - துன்பக்கடலி னிடத்து, சுழிசென்று - சுழித்துக்கொண்டு போய்,மாதர்த்திரை பொர - மாதர்களாகிய அலைகள்மோத, காமச்சுறவு எறிய - காம மாகிய சுருமீன் எறிதலால், அழிகின்றனன் - நசியாநின்றேன், அடியேன் உன்அடைக்கலம்——,எ - று,

க - ரை. இறைவனே; துன்பப்பெருக்கில் உன்திருவடியா கிய புணையைப்பற்றிக்கொண் டிறங்கின அன்பர்வானேறினர், நான் துன்பப்பெருக்கின் சுழியிலகப்பட்டு, மாதராகிய அலை மோத, காமமாகிய மகரமீன் எறிய அழியாநின்றேன், அடியேன் உன் அடைக்கலம் என்பதாம். (ச)

சுருள்புரிகூழையர் சூழலிற்பட்டுன் றிறமறந்திங், கிரு ள்புரியாக்கையி லேகிடந்தெய்த்தனன் மைத்தடங்கண், வெருள்புரி மானன்னநோக்கிதன் பங்கவிண்ணேர்பெரு மான், அருள்புரியாயுடையா யடியேனுன் னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, சுருள்புரி கூழையர் - சுருண்ட கட்டப்பட்ட கூந்தலையுடையமாதரது, சூழலில் பட்டு- கபடத்திலகப்பட்டு, உன் திறம் மறந்து - உன்திறத்தை மறந்து,

இங்கு - இவ்விடத்து, இருள்புரி - அஞ்ஞானாந்தகாரத்தை யுண்டாக்குகின்ற, யாக்கையிலே கிடந்து - சரீரத்தில் தங்கி, எய்த்தனன் - இளைத்தேன், மை - அஞ்சனமெழுதிய, தடம் - விசாலமான, கண் - கண்களையும், வெருள் புரிமான் அன்ன - வெருட்சியையடைந்த மானினது நோக்கம்போன்ற, நோக்கி - நோக்கத்தையுமுடைய உமாதேவியின், பங்க - பாகத்தை யுடையானே, விண்ணோர் பெருமான் - தேவர் பெருமானே, அருள் புரியாய் - அருள் செய்வாயாக, அடியேன் உன் அடைக்கலம்——, எ - று.

க - ரை. இறைவனே, மாதர் வஞ்சனையிற் சிக்கி உன்னை மறந்து இவ்வுடம்பிற் கிடந்து இளைத்தேன், இனியாயினும் அருள் செய்யவேண்டும் என்பதாம். (ரு)

வி - ரை. சுருள்புரிகூழையர் என்பதற்கு சுருளாகச் செய்யப்பட்ட கூந்தலை யுடையவர் என்றுரைத்தலும் பொருந்தும். சுருள் - மாதர் ஐவகை மயிர் முடியினொன்று, அது பின்னே செருகப்படுவது. ஐவகை மயிர் முடியாவன - முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்பன.

மாழைமைப்பாவியகண்ணியர்வன்மத்திடவுடைந்து
தாழியைப்பாவுதயிர்போற்றளர்ந்தேன்றடமலர்த்தாள்
வாழியெப்போதுவந்தெந்நாள்வணங்குவன்வல்வினையேன்
ஆழியப்பாவுடையாயடியேனுன்னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, மாழை - மாம்பிஞ்சின் பிளவை யொத்து, மைபாவிய - அஞ்சனம் பரவிய, கண்ணியர் - கண்களையுடைய மாதர், வல்மத்து இட - வலிய மத்தை யிடுதலும், உடைந்து - சிதைந்து, தாழியைப்பாவு-தாழியிற் பரவிய, தயிர்போல் - தயிரைப்போல், தளர்ந்தேன் - தளர்ச்சி யடைந்தேன், தடமலர்த்தாள் - பெருமைபொருந்திய தாமரை மலர்போன்ற திருவடிகளை, வல்வினையேன் - வலிய பாவத்தையுடையேன், எப்போது வந்து - எப்பொழுது வந்து, எந்நாள் வணங்குவன் - எக்காலத்து வணங்கப் பெறுவேன், ஆழி அப்பா - கருணைக் கடலாகிய எமது தந்தையே, வாழி - நீ வாழ்வாயாக, அடியேன் உன் அடைக்கலம்——, எ - று.

க - ரை. இறைவனே, மாதர் மத்திட்டுக்கடையச் சிதறி மிடாவில் பரவிச் சுழலாநின்ற தயிர்போலச் சுழன்று தளர்ந்தேன், இனி எக்காலம் வந்து உன் திருவடியை வணங்குவேன், அடியேன் உன் அடைக்கலம் என்பதாம்.

வி - ரை. மாழை - மா. அது இங்குக் கண்ணுக்குவமை யாகப் புணர்க்கப்பட்டமையால் வடுவைக் குறித்தது. வினை இங் குப் பாவத்துக்காயிற்று. (௬)

மின்கணினார் நுடங்குமிடையார் வெகுளிவலையி லகப் பட்டுப், புன்கணனாய்ப் புரள்வேனைப் புரளாமற் புகுந்த ருளி, என்கணிலே யமுதூறித் தித்தித்தென் பிழைக் கிரங்கும், அங்கணனே யுடையாயடியேனுன் னடைக்க லமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, மின்கணினார் - மின்னு கின்ற கண்களையுடையவரும், நுடங்கும் இடையார் - துவள்கின்ற இடையை யுடையாருமாகிய மாதரது, வெகுளி வலையில் அகப் பட்டு - கோவமாகிய வலையிற் சிக்கி, புன் கணன் ஆய் - துன்ப த்தை யுடையேனாய், புரள்வேனை - புரளா நின்ற என்னை, புர ளாமல் - புரளாவண்ணம், புகுந்தருளி - வலியவந் தருள்செய்து, என்கணில் - என்னிடத்தில், அமுது ஊறி - அமிர்தம் சுரந்து, தித்தித்து - இனித்து, என் பிழைக்கு இரங்கும் - என் குற்றங் களுக்காக இரங்குகின்ற, அம்கணனே - கிருபைக் கண்ணனே, அடியேன் உன் அடைக்கலம்——, எ - று.

க - ரை. இறைவனே, மாதர்வசத்தி லகப்பட்டுத் துன்பப் படுகிற என்னைத் துன்பத்தை யொழித்து ஆண்டருளி, என் பிழைக் கிரங்காநின்ற கிருபாநோக்க முடையவனே, அடியேன் உன் அடைக்கலம் என்பதாம். (எ)

மாவடுவகிரன்னகண்ணிபங்காநின் மலரடிக்கே
கூவிடுவாய்கும்பிக்கேயிடுவாய்நின் குறிப்பறியேன்
பாவிடையாடுகுழல்போற்கரந்துபரந்ததுள்ளம்
ஆகெடுவேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, மாவடு வகிர் அன்ன கண்ணி - மாவடுவின் பிளவையொத்த கண்களையுடைய உமா தேவியின், பங்கா - பங்கனே, நின்மலர் அடிக்கே கூவிடுவாய் - உன் மலர்த்தாளுக்கே அழைத்துக்கொள்வாயாக, (அன்றி) கும் பிக்கே இடுவாய் - நரகத்தில் தள்ளக்கடவாய், நின் குறிப்பு அறி யேன் - உன் திருவுளக்குறிப்பை யானறிந்திலேன், பா இடை ஆடு குழல்போல் - இழையினிடத் தாடுகின்ற மூங்கிற் குழல்போல, உள்ளம் - என் மனமானது, கரந்து பரந்தது - மறைந்து பரவி

யது, ஆகெடுவேன் - ஐயோ கெடுவேன், அடியேன் உன் அடைக்கலம்——, எ - று.

க - ரை. இறைவனே, மாவடு வகிர்போலுங் கண்களையுடைய உமாதேவி பங்கனே; என்னை உன் திருவடிக்கீழ் சேர்த்துக்கொள், அன்றி நரகுக்கு ஆளாக்கு, உன் திருவுளக்குறிப்பை நானறிந்திலேன், பாவின்கண் ஆடுகின்ற குழல்போல என் மனம் அலையாநின்றது, அடியேன் உன் அடைக்கலம் என்பதாம்.

வி - ரை. பா - நூற்பா, குழல் - நெய்வோருடைய கருவிகளிலொன்று, குழலுக்குள் மறையும் பாவைப்போல என்மனம் விடய விச்சையில் மறைந் துழலாநின்றது என்றற்கு, "பாவிடையாடு குழல்போற் கரந்து பரந்ததுள்ளம்" என்றார். (அ)

பிறிவறியாவன்பர்நின்னருட்பெய்கழற்றாளிணைக்கீழ்
மறிவறியாச்செல்வம்வந்துபெற்றாருன்னை வந்திப்பதோர்
நெறியறியேனின்னையேயறியேனின்னையேயறியும்
அறிவறியேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, பிறிவ அறியா அன்பர் - உன்னைவிட்டு நீங்குதல் அறியாத அன்பர்கள், நின் அருள் - உன்னருளால், பெய்கழல் - கழலையணிந்த, தாள் இணைக்கீழ் - திருவடியிணைக்கீழ், வந்து - வந்து, மறிவுஅறியா செல்வம் பெற்றார் - நசித்தலறியாத பெரும் பாக்கியத்தை யடைந்தார்கள், (யான்) உன்னை வந்திப்பது - உன்னை வாழ்த்துதலாகிய, ஓர் - ஒப்பற்ற, நெறி அறியேன் - நல்வழியை யறியேன், நின்னையே யறியேன் - உன்னையோ அறிந்திலேன், நின்னையே அறியும் - உன்னையே யறிகின்ற, அறிவு அறியேன் - ஞானத்தையு முணர்ந்திலேன், (ஆயினும்) அடியேன் உன் அடைக்கலம்——, எ - று.

க - ரை. இறைவனே, உன்னைப்பிரியாத அன்பர் உன் திருவடிப்பேற்றோடு முத்திச் செல்வத்தையும் அடைந்தார்கள், நான் உன்னைப் புகழும்வழி யறியேன், உன்னையும் அறியேன், உன்னை யறியும் அறிவுமிலேன், ஆயினும் அடியேன் உன் அடைக்கலம் என்பதாம். (கூ)

வழங்குகின்றாய்க் குன்னருளா ரமுதத்தைவாரிக்கொண்டு, விழுங்கின் றன் விக்கினேன் வினையேனென் விதியின்மையால், தழங்கருந்தே னன்னதண்ணீர் பருகத்தந்துய்யக்கொள்ளாய், அழுங்குகின்றேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

ப - ரை. உடையாய் - இறைவனே, வழங்குகின்றாய்க்கு - (அன்பர் வேண்டியவெல்லாம் ஒருங்கே) வழங்குகின்ற உன்னை யடைதற்பொருட்டு, உன்அருள் - உன் திருவருளாகிய, ஆர் அமுதத்தை வாரிக்கொண்டு - அரிய அமிர்தத்தை அள்ளிக்கொண்டு, விழுங்குகின்றேன் - விழுங்கா நின்றேனாய், விக்கினேன் - விக்கினேன், வினையேன் - தீவினையை யுடையேனாகிய நான், என் விதியின்மையால் - எனது நல்லூழில்லாமையால், தழங்கு - ஒலிக்கின்ற, அரு - அருமையாகிய, தேன் அன்ன - தேனை யொத்த, தண்ணீர் - தண்ணிய நீரை, பருகத்தந்து - யான் பருகக்கொடுத்து, உய்யக்கொள்ளாய் - உய்யக் கொள்வாயாக, அழுங்குகின்றேன் - அலையாநின்றேன், அடியேன் உன் அடைக்கலம்——, எ - று.

க - ரை. இறைவனே, உன் அருளாகிய அமிர்தத்தை நீ கொடுக்க, நான் அள்ளியுண்டு நல்லூழின்மையால் விக்கி வருந்துகின்றேன், ஆதலால் எனக்குத் தண்ணீரைக் கொடுத்து உய்யக் கொண் டருளவேண்டும், அடியேன் உன் அடைக்கலம் என்பதாம்.

வி - ரை. விக்குதல்-தண்ணீர் முதலியவை யுண்ணும்போது தடைபடல். தண்ணீர் - தண்ணிய குணம், அதாவது கிருபைக் குணம். (௧0)

# ஆசைப்பத்து.

ஆத்துமவிலக்கணம்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

---

திருச்சிற்றம்பலம்.

---

ஆசிரியவிருத்தம்.

கருடக்கொடியோன் காணமாட்டாக் கழற்சேவடி யென்னும், பொருளைத்தந்திங் கென்னையாண்ட பொல்லாமணியேயோ, இருளைத்துரந்திட்டிங்கேவாவென்றங் கேகூவும், அருளைப்பெறுவா னாசைப்பட்டேன் கண்டா யம்மானே.

ப - ரை. கருடக்கொடியோன் - கருடக்கொடியை யுடையானாகிய திருமாலும், காணமாட்டா - காணவொண்ணாத, கழல் - வீரக்கழலையணிந்த, சேவடியென்னும் - உன் திருவடியென்கிற, பொருளை - பாக்கியத்தை, தந்து - கொடுத்து, இங்கு - இவ்விடத்தில், என்னையாண்ட - என்னை யாண்டருளின, பொல்லா மணியே - தொளைக்காத மாணிக்கமே, ஓ - ஆ, இருளைத்துரந்திட்டு - (எனது அவிச்சையாகிய) அந்தகாரத்தை யோட்டி, இங்கே வாவென்று - இவ்விடத்தே வருவாயென்று, அங்கே கூவும் - அவ்விடத்தே அழைக்கின்ற, அருளைப்பெறுவான் - உன்னருளைப் பெறுதற்கு, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எனது தந்தையே, எ - று.

க - ரை. அம்மானே, திருமாலும் காணவொண்ணாத திருவடியென்னும் பொருளை எனக்குக் கொடுத்து என்னை யாண்டருளின பொல்லாமணியே, எனது அஞ்ஞானவிருளைப் போக்கி இங்கே வாவென்று உன்னிடத்துக் கழைக்கும்படியான உன் அருளைப் பெறுதற்கு ஆசைப்பட்டேன் என்பதாம்.

வி - ரை. கருடன் என்பதற்குச் சிறகுகளைக்கொண்டு பறப்பவன் என்றும், பாம்பைத் தின்பவன் என்றும் இருவகையாகப் பொருள் கூறுவர் வடநூலார். (௧)

மொய்ப்பானரம்புகயிறுகமூளையென்புதோல்போர்த்த
குப்பாயம்புக்கிருக்ககில்லேன்கூவிக்கொள்ளாய்கோவே
எப்பாலவர்க்குமப்பாலாமென்னாரமுதேயோ [யோ
அப்பாகாணவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

ப - ரை. மொய் - நெருங்கிய, பால் நரம்பு - வெள்ளிய நரம்புகள், கயிறு ஆக - கயிறுகளாகக் கட்டி, மூளை யென்பு தோல்போர்த்த - மூளை எலும்பு தோல் என்பவைகளால் மூடப்பட்டிருக்கிற, குப்பாயம் புக்கு இருக்க கில்லேன் - சட்டையிற் புகுந்திருக்கிலேன், கூவிக்கொள்ளாய் - அழைத்துக் கொள்வாயாக, கோவே - இறைவனே, ஓ - ஆ, எப்பாலவர்க்கும் அப்பாலாம் - எவ்வகையார்க்கும் அப்பாற்பட்டவனாகிய, என் ஆர் அமுதே - என்னரிய அமிர்தமே, ஓ - ஆ, அப்பா - அப்பனே, காண - உன்னைக் காணும்பொருட்டு, ஆசைப்பட்டேன் அம்மானே——, எ - று.

க - ரை. அம்மானே, நரம்பு முதலானவற்றால் செய்யப்பட்ட இந்த வுடம்பிற் றங்கியிருக்கமாட்டேன், என்னை அழைத்துக்கொள்ளவேண்டும், எவ்வகைப் பெருமை யுடையார்க்கும் அறியவொண்ணாத என் ஆரமுதே, அப்பனே, உன்னைக் காண ஆசைப்பட்டேன் என்பதாம். (௨)

சீவார்ந்தீமொய்த்தழுக்கொடுதிரியுஞ்சிறுகுடிலிதுசிதைய
கூவாய்கோவேகூத்தாகாத்தாட்கொள்ளுங்குருமணியே[க்
தேவாதேவர்க்கரியானேசிவனேசிறிதென்முகநோக்கி
ஆவாவென்னவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

ப - ரை. சீவார்ந்து - சீயொழுகி, ஈமொய்த்து - ஈக்கள் மொய்த்து, அழுக்கொடு திரியும் - மலங்களுடன்கூடித் திரிகின்ற, சிறுகுடில் - சிறுவீடாகிய, இது - இந்தவுடம்பு, சிதைய - நசிக்க, கூவாய் - அழைத்திடாய், கோவே-இறைவனே, கூத்தா - கூத்தனே, காத்து ஆட்கொள்ளும் குருமணியே - காத்து ஆட்கொள்ளுகின்ற நாயகமணியே, தேவா - தேவனே, தேவர்க்கு அரியானே - தேவர்கட் கருமையானவனே, சிவனே - சிவபெருமானே, சிறிது - சற்று, என் முகம்நோக்கி - என் முகத்தைப் பார்த்து, ஆவாஎன்ன - நீ ஐயோவென்றிரங்க, ஆசைப்பட்டேன் அம்மானே——, எ - று.

க - ரை. அம்மானே, சீயொழுகி, ஈக்கள்மொய்த்து, மலங்களுடன் கூடித்திரிகின்ற இந்த வுடம்பழிய என்னை நீ யழைத்துக்கொள்ளவேண்டும், நீ யென் முகத்தைப் பார்த்து ஐயோ வென்றிரங்கும்படி ஆசைப்பட்டேன் என்பதாம். (௩)

மிடைந்தெலும்பூத்தை மிக்கழுக்கூறல் வீறிலிநடைக் கூடம், தொடர்ந்தெனைநலியத் துயருறுகின்றேன் சோத்தமெம்பெருமானே, உடைந்துநைந்துருகி யுன்னொளி நோக்கி யுன் றிரு மலர்ப்பாதம், அடைந்து நின்றிடுவா னாசைப்பட்டேன் கண்டா யம்மானே.

ப - ரை. எலும்பு ஊத்தை மிடைந்து - எலும்பும் ஊத்தையும் நெருங்கி, அழுக்கு ஊறல்மிக்கு - அழுக்கூறுதல் மிகுந்து, வீறுஇலி - மேன்மையில்லாததாகிய, நடைக்கூடம் - நடைவீடு, தொடர்ந்து - பற்றி, என்னைநலிய - என்னை வருத்த, துயர்உறுகின்றேன் - துன்பமடையாநின்றேன், சோத்தம் - அஞ்சலி, எம்பெருமானே - எம்மிறைவனே, உடைந்து - மனம் நெகிழ்ந்து, நைந்துஉருகி - கனிந்துருகி, உன்ஒளிநோக்கி - உன்னொளியைப் பார்த்து, உன்திருமலர்ப்பாதம் - உனது அழகிய மலர்ப்பதத்தை, அடைந்துநின்றிடுவான் - அடைந்து நின்றிடும்பொருட்டு, ஆசைப்பட்டேன் அம்மானே——,எ - று.

க - ரை. அம்மானே; இந்தவுடம்பு என்னைத்தொடர்ந்து வருத்துதலால் வருந்தாநின்றேன், உனக்கு நமஸ்காரம், மனம் நெகிழ்ந் துருகி உன்னொளியை நோக்கி உன் திருவடியை யடைந்து நிற்க ஆசைப்பட்டேன் என்பதாம். (௬)

அளிபுண்ணகத்துப் புறந்தோன் மூடியடியேனுடை யாக்கை, புளியம்பழமொத் திருந்தேனிருந்தும் விடையாய்பொடியாட, எளிவந் தென்னை யாண்டுகொண்ட வென்னாரமுதேயோ, அளியேனென்னவாசைப்பட்டேன் கண்டாயம்மானே.

ப - ரை. அகத்து அளிபுண் - உட்புறத்தே அளிந்த புண் போல்வது, புறம்தோல் மூடி - புறத்தே தோலால் மூடப்பட்டிருப்பது, (ஆதலால்) அடியேனுடை யாக்கை - அடியேனுடைய உடம்போடு, புளியம்பழம் ஒத்துஇருந்தேன் - புளியம்பழத்தையொத்திருந்தேன், இருந்தும் - அப்படியிருந்தும், விடையாய் - இடபவாகனனே, பொடியாட - திருவெண்பொடியைப் பூசுவோனே, எளிவந்து - எளிதாக வந்து, என்னையாண்டுகொண்ட - என்னையாண்டுகொண்டருளின, என்ஆர்முதே - என்அரிய அமிர்தமே, ஒ - ஆ, அளியேன் என்ன - (என்னை) எளியவனென்று கண்டோர் சொல்லும்படி, ஆசைப்பட்டேன் அம்மானே——; எ - று.

க - ரை. அம்மானே, இந்தவுடம்பினை அருவருத்துப் புளியம்பழம்போன்று பிரிந்தேயிருந்தேன், எளிதாக வந்து என்னையாண்டருளின என் ஆர்அமுதே, நான் உன்னால் காக்கப்படுதற்குரியவனாகிய எளியவன் என்று கண்டோர் சொல்ல ஆசைப்பட்டேன் என்பதாம்.

வி - ரை. புளியம்பழ மொத்திருத்தலாவது - புளியும் ஓடும் பற்றின்றி யிருத்தல்போல, உடம்போடு பற்றின்றியிருத்தல். இருந்தும் எளியனென்ன என்றியைத்துக்கொள்க. (௫)

எய்த்தேனாயேனினியிங்கிருக்ககில்லேனிவ்வாழ்க்கை
வைத்தாய்வாங்காய்வானோரறியாமலர்ச்சேவடியானே
முத்தாவுன்றன்முகவொளிநோக்கிமுறுவன்னகைகாண
அத்தாசாலவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

ப - ரை. எய்த்தேன் - இளைத்தேன், நாயேன்-நாயினேன், இனி இங்கு இருக்ககில்லேன் - இனியிவ்விடத்திருக்கிலேன், இவ்வாழ்க்கை வைத்தாய் - இந்தப்பொய்வாழ்க்கையில் வைத்துவிட்டனை, வாங்காய் - (அதினின்றும் என்னை) எடாதிருக்கின்றனை, வானோர் அறியா - தேவர்கள் அறியாத, மலர்சேவடியானே - தாமரைமலர்போலுந் திருவடியை யுடையானே, முத்தா - முத்தனே,உன்றன்முகவொளி நோக்கி-உன்முகவொளியைப் பார்த்து, முறுவல் நகை காண - பல்லொளியையுங் காணும்பொருட்டு, அத்தா - எந்தையே, சாலஆசைப்பட்டேன் - மிகவும் ஆசைப்பட்டேன், அம்மானே——, எ - று.

க - ரை. அம்மானே, நாயேன் இளைத்தேன், இனி யிங்கு இருக்கிலேன், இந்தப் பொய்வாழ்க்கையினின்றும் என்னை நீக்க வேண்டும், தேவர்களும் அறியாத திருவடியையுடையவனே, உன் முகவொளியையும், உன் திருப்புன்னகையையுங்காண ஆசைப்பட்டேன் என்பதாம். (௬)

பாரோர்விண்ணோர்பரவியேத்தும்பரனேபரஞ்சோதீ
வாராய்வாராவுலகந்தந்துவந்தாட்கொள்வானே
பேராயிரமும்பரவித்திரிந்தெம்பெருமானெனவேத்த
ஆராவமுதேயாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

ப - ரை. பாரோர் - பூமியிலுள்ளாரும், விண்ணோர் - விண்ணுலகிலுள்ளாரும், பரவியேத்தும் - வழிபட்டுத் துதிக்கின்ற, பரனே-மேலானவனே, பரஞ்சோதீ - மேலான சோதியே, வாராய்- வருவாய், வாரா உலகம்தந்து - மீட்டும் பிறவிக்கு வாராமைக்குர்

காரணமாகிய முத்தி யுலகைக் கொடுத்து, வந்து ஆட்கொள்வானே - வந்தாட்கொண்டருள்வோனே, பேர்ஆயிரமும் - உன் ஆயிரந் திருநாமங்களையும், பரவித் திரிந்து - துதித்துத் திரிந்து, எம்பெருமான் என ஏத்த - எம்பெருமானே யென்று தோத்திரம் பண்ணுதற்கு, ஆராஅமுதே - தெவிட்டாத அமிர்தமே, ஆசைப்பட்டேன் - ஆசைகொண்டேன், அம்மானே - எந்தையே, எ-று.

க - ரை. மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் வழிபட்டுத் துதிக்கின்ற மேலோனே, முத்தியுலகைத் தந்து வந்தாட்கொள்வோனே, உன் திருநாமங்களாயிரத்தையும் உச்சரித்து எம்பெருமானே யென்று துதிக்க ஆசைப்பட்டேன் என்பதாம்.

வி - ரை. முத்தியுலகம் புகுந்தவர் அங்கு நின்றும் மீளார் ஆதலால் அதனை வாரா வுலகம் என்றும், இறைவனுகிய இவ்வமுதத்தை யனுபவிக்குந்தோறும் புதிதாகவே தோன்றுமாகையால் "ஆராவமுதே" என்றும் கூறினர். (எ)

கையாற்றொழுதுன் கழற்சேவடிகள் கழுமத்தழுவிக்
கொண், டெய்யாதென்றன் றலைமேல்வைத் தெம்பெரு
மான் பெருமானென், றையாவென்றன் வாயாலரற்றி
யழல்சேர் மெழுகொப்ப, ஐயாற்றரசே யாசைப்பட்டேன்
கண்டாயம்மானே.

ப - ரை. உன்கழல் சேவடிகள் - உன் வீரக்கழலை யணிந்த திருவடிகளை, கையால் தொழுது - கையினால் வணங்கி, கழுமத் தழுவிக்கொண்டு - பொருந்தத் தழுவிக்கொண்டு, எய்யாது - இளைக்காமல், என்றன் தலைமேல் வைத்து - என் சிரசின்மேல் வைத்து, எம்பெருமான் பெருமான் என்று - எம்மிறைவனே இறைவனே யென்று, ஐயா - ஐயனே, என்றன் வாயால் அரற்றி - என்வாயால் அரற்றி, அழல்சேர் மெழுகு ஒப்ப - அழலைச் சேர்ந்த மெழுகை நிகர்க்கும்படி, ஐயாற்று அரசே - திருவையாற்றுக்கிறைவனே, ஆசைப்பட்டடேன் அம்மானே——, எ - று.

க - ரை. அம்மானே, உன்திருவடியைக் கையால் தழுவிக்கொண்டும், என்தலைமேல் வைத்துக்கொண்டும், எம்பெருமானே, ஐயனே, என்று அரற்றி, தீயைச் சேர்ந்த மெழுகை நிகர்த்துருக ஆசைப்பட்டேன் என்பதாம். (அ)

செடியாராக்கைத்திறமறவீசிச்சிவபுரநகர்புக்குக்
கடியார்சோதிகண்டுகொண்டென் கண்ணிணைகளிகூரப்
படிதானில்லாப்பரம்பரனேயுன்பழவடியார்கூட்டம்,
அடியேன்காணவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

ப - ரை. செடிஆர் - குற்றம் பொருந்திய, ஆக்கைத்திறம் - யாக்கையின் திறத்தை, அறவீசி - அறவெறிந்து, சிவபுரநகர்புக்கு - சிவபுரமாகிய நகரத்திற் பிரவேசித்து, கடிஆர்சோதி கண்டுகொண்டு - விளக்கமாகிய ஒளியைக்கண்டுகொண்டு, என்கண் இணை களிகூர - என்னிரு கண்களும் களிப்பு மிகும்படி, படிதான் இல்லா - ஒப்பில்லாத, பரம்பரனே - பரம்பரனே, உன்பழஅடியார் கூட்டம் - உன்பழவடியார் கூட்டத்தை, அடியேன் காண - அடியேன் காணும்பொருட்டு, ஆசைப்பட்டேன் அம்மானே—,எ-று.

க - ரை. அம்மானே, குற்றம் நிறைந்த இந்த வுடம்பின் தொடர்பைப்பற்றற வெறிந்து, சிவநகரிற் புகுந்து, விளக்கமாகிய ஒளியைக் கண்டுகொண்டு என் இரண்டு கண்களும் களிகூரவும், உன் பழவடியார் கூட்டத்தைக் காணவும் அடியேன் ஆசைப்பட்டேன் என்பதாம்.

வி - ரை. களிகூரக் காண என இயையும். (௯)

வெஞ்சேலனையகண்ணார்தம்வெகுளிவலையிலகப்பட்டு
நைஞ்சேனாயேன்ஞானச்சுடரேநானோர்துணைகாணேன்
பஞ்சேரடியாள்பாகத்தொருவாபவளத்திருவாயால்
அஞ்சேலென்னவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

ப - ரை. வெம் சேல்அனைய - விருப்பத்தைத் தருகிற (அழகாகிய) சேல் மீனை யொத்த, கண்ணார் - கண்களையுடைய மாதரது, வெகுளி வலையில் அகப்பட்டு-கோவமாகிய வலையிற் சிக்கி, நாயேன் நைஞ்சேன் - நாயினேன் நைந்தேன், ஞானச்சுடரே - ஞானசூரியனே, நான் ஓர் துணைகாணேன் - நானொரு சகாயத்தையுங் கண்டிலேன், பஞ்சு - செம்பஞ்சூட்டிய, ஏர் - அழகிய, அடியாள் - பாதத்தை உடையாளாகிய உமாதேவியின், பாகத்து - பங்கினையுடைய, ஒருவா - ஒப்பற்றவனே, பவளத்திருவாயால் - பவளம்போன்ற உன் திருவாயினால், அஞ்சேல் என்ன-நீ என்னை அஞ்சேல் என்று சொல்ல, ஆசைப்பட்டேன் அம்மானே——, எ - று.

க - ரை. அம்மானே, மாதரது வெகுளி வலையிலகப்பட்டு நாயினேன் நைந்தேன், ஞானசூரியனே, உமாதேவிபங்கனே, நான் ஒருதுணையையுங் காணேன், ஆதலால், உன் பவளத்திருவாயால் அஞ்சவேண்டாமென்று நீ சொல்லும்படி நான் ஆசைப்பட்டேன் என்பதாம். (௧0)

# அதிசயப்பத்து.

முத்தியிலக்கணம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

வைப்புமாடென்று மாணிக்கத்தொளியென்று மனத்திடையுருகாதே, செப்புநேர்முலை மடவரலியர்தங்கடிறத்திடை நைவேனை, ஒப்பிலாதன வுவமனிலிறந்தன வொண்மலர்த் திருப்பாதத், தப்பனாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. வைப்பு மாடு என்றும் - (நமக்கு) இடமும் செல்வமுமாமென்றும், மாணிக்கத்து ஒளியென்றும் - மாணிக்கத்தில் ஒளியாமென்றும், மனத்திடை - மனத்தின்கண், உருகாதே - (இறைவனை நினைத்து) உருகாமல், செப்பு நேர் முலை - செப்புச் சிணையாகிய கொங்கைகளையுடைய, மடவரலியர் தங்கள் திறத்திடை - மாதர்களுடைய விஷயத்தில், நைவேனை - நைகின்ற என்னை, ஒப்பில்லாதன - ஒப்பற்றனவும், உவமனில் இறந்தன - (வலிந்து சொல்லினும்) உவமிக்கப்படு பொருள்களினின்றும் கடந்தனவும் ஆகிய, ஒள்மலர்-அழகாகிய தாமரைமலர்போன்ற, திருப்பாதத்து - திருவடியையுடைய, அப்பன் - எமது தந்தையாகிய சிவபெருமான், ஆண்டு - என்னையாண்டருளி, தன் அடியரில் கூட்டிய - தன்னடியார்களிற் சேர்த்த, அதிசயம் - புதுமையை, கண்டாம் - கண்டோம்,——எ - று,

கு - ரை. எமக்கு இடம் செல்வம் முதலியவையா யிருப்பவன் சிவபெருமானே யென்று மனத்தி லெண்ணியுருகாமல், மாதர்வஞ்சனையிலகப்பட்டு வருந்துகின்றவனாகிய என்னை, உவமையில்லாத திருவடியையுடைய எமது தந்தையாகிய இறைவன் ஆண்டு கொண்டு தன்னடியார் கூட்டத்திற் சேர்த்த அதிசயத்தைக்கண்டோம் என்பதாம். (க)

நீதியாவனயாவையுநினைக்கிலேனினைப்பவரொடுங்கூடேன்,ஏதமேபிறந்திறந்துழல்வேன்றனையென்னடியானென்று,பாதிமாதொடுங்கூடியபரம்பரனிரந்தரமாய்நின்ற,ஆதியாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

ப - ரை. நீதி ஆவனயாவையும் நினைக்கிலேன்-நீதியாயிருப்பன எவற்றையும் நினைக்கிலேன், நினைப்பவரொடும் கூடேன் - அவற்றை நினைப்பவர்களோடுங் கூடமாட்டேன், ஏதமே - துன்பமநுபவித்தற்பொருட்டே, பிறந்து இறந்து உழல்வேன் தன்னை - பிறந்தும் இறந்தும் உழலாநின்ற என்னை, என் அடியான் என்று-(இவன்) என் தொண்டனென்று, பாதிமாதொடும் கூடிய பரம்பரன் - பாதிதிருமேனி பெண்ணுடன்கூடி யிருக்கப்பெற்ற பரம்பரன், நிரந்தரமாய் நின்ற ஆதி - எக்காலத்தும் அழிவின்றி நிலைத்திருந்த முதல்வன், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரிற் கூட்டிய - தன் தொண்டரோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைக் கண்டோம்——, எ - று.

க - ரை. நீதியாயிருப்பனவற்றை நினையேன், அவற்றை நினைப்பவர்களோடும் கூடேன், துன்பத்துக்கே யாளாகிப் பிறந்திறந்துழல்வேன், இப்படிப்பட்ட என்னையும் இறைவன் தன்னடியானெனக்கொண்டு ஆண்டருளித் தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம். (௨)

முன்னையென்னுடைவல்வினைபோயிடமுக்கணதுடையெந்தை, தன்னையாவரு மறிவதற்கரியவ னெளியவனடியார்க்குப், பொன்னைவென்றதோர் புரிசடைமுடிதனிிளமதியதுவைத்த, அன்னையாண்டுதன் னடியரிற்கூட்டிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. முன்னை - பழையதாகிய; என்னுடைய வல்வினை போயிட-என் வலியவினை நசிக்கும்படி, முக்கண் உடை எந்தை-மூன்று கண்களையுடைய எமது தந்தை, தன்னையாவரும் அறிவதற்கு அரியவன் - தன்னை எல்லாரும் அறிதற்கருமையானவன், (அங்ஙனமாயினும்) அடியார்க்கு எளியவன்-தன்னடியார்களுக்கு எளியனாயிருப்பவன், பொன்னை வென்றது - சுவர்ணகாந்தியை வென்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, புரி - கட்டப்பட்ட, சடைமுடி தனில் - சடைமுடியின்கண், இளமதி வைத்த-இளம்பிறையைச் செருகின, அன்னை-எமது மாத்ருஸ்த்தாநமாயிருப்பவன், ஆண்டு-ஆண்டருளி, தன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாம்.——

க - ரை. நான் முற்சனனங்களிற் செய்த வலியவினைகள் நசிக்கும்படி, முக்கண்ணுடைய எந்தையும், யாவரும் அறிதற்கரியவனும், அடியார்க் கெளியவனும், சடைமுடியின்கண் இளம் பிறையை வைத்த எம்மன்னைபோல்பவனும் ஆகிய சிவபெருமான் ஆண்டருளித் தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம்.

வி - ரை. இறைவனருளினாலன்றி யொழித்தலருமை நோக்கி வினையை "வல்வினை" என்றார். ஆன்மாக்களுக்கு அழியாத் தந்தை தாயாயிருப்பவன் இறைவனாதலால் "எந்தை" என்றும் "அன்னை" என்றும் கூறினர். (௫)

பித்தனென்றெனை யுலகவர்பகர்வதோர்காரணமிதுகேளீர்
ஒத்துச்சென்று தன்றிருவருள்கூடிடுமுபாயமதறியாமே
செத்துப்போயருநரகிடைவீழ்வதற்கொருப்படுகின்றேனை
அத்தனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

ப - ரை. கேளீர் - கேட்பீராக, ஒத்து சென்று - மனமிசைந்துபோய், தன் திருவருள் - இறைவனது திருவருளை, கூடிடும் - பெறுதற்குரிய, உபாயம் அறியாமே - உபாயத்தை அறியாமல், செத்துப்போய்-(அரும்பெறல் யாக்கையின் பயனாகிய முத்தியை யடையாமல்) இறந்துபோய், அரு - (துன்பம் சகித்தற்கு) அரிய. நரகிடை - நரகத்தில், வீழ்வதற்கு-விழுந்து வருந்துதற்கு, ஒருப்படுகின்றேனை - இசையாநின்ற என்னை, அத்தன் - எமது தந்தையாகிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரின் கூட்டிய - தன் அடியாரோடு சேர்த்த, அதிசயம் கண்டாமே - அதிசயத்தைக் கண்டோமன்றே, இது-இதுவே, என்னை-என்னை, உலகவர் - உலகத்தார், பித்தன் என்று பகர்வது - பித்தனென்று சொல்லுவதற்கு, ஓர்காரணம் - ஒருகாரணமா யிருந்தது,——எ - று.

க - ரை. இறைவன் தனது திருவருளையடைதற்குரிய உபாயத்தை யறியாமல் வீணாயிறந்துபோய் நரகத்தில் வீழ்வதற்கு மனமிசைந்திருந்த என்னைஅங்ஙனம்வீழவொட்டாமல் தடுத்தாட்கொண்டு தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோமல்லவா, இதுதான் உலகத்தார் என்னைப் பித்தனென்று சொல்லுவதற்குக் காரணமாயிருந்தது என்பதாம்.

வி - ரை இறைவனுக் கடிமைப்பட்ட மெய்யடியார்க்கு வேடம் குணம் முதலியவை மாறுபடுதலியல்பாதலால், இறை

வன் தம்மை ஆட்கொண்டமையே உலகத்தார் தம்மைப் பித்த னென்று சொல்லுதற்குக் காரணம் என்றற்கு, "பித்தனென் றெனை யுலகவர் பகர்வதோர் காரணமிது' என்றார். இதனை அடியில்வருஞ் செய்யுட்களானுணர்க.

திருவாதவூரர் புராணம் - திருப்பெருந்துறைச் சருக்கம்.

தம்பெருமுதல்வர்சொல்லுந்தகுமொழிப்படியேயுள்ள
செம்பொருளியாவுமன்பின்றிறத்துளார்தொலைத்தபின்னர்
அம்பரனளித்தஞானமருந்தினையருந்திப்பாச
வெம்பிணியகற்றுமிந்தவித்தகர்முத்தரானார். (எஅ)

திருத்திசழ்கவிகைக்கீழுஞ்சிறந்தபொற்சிவிகைமேலும்
வரத்திருமேவுதானைமன்னவனென்னவந்தார்
உருத்தெரியாதநீறுங்கோவணவுடையுங்குஞ்சி
விரித்துளசிரமுங்கண்ணீர்மிகப்பொழிவிழியுமானார். (எகூ)

அன்புடனேக்கிநிற்பரழுவர்கைதொழுவர்வீழ்வர்
இன்புறவெழுவர்பின்பாலேகுவரிரங்கிமீள்வர்
நன்பகற்சங்குல்கானார்ஞானநல்லறிவேகொண்டு
கொன்புனைபித்தர்பாலர்பிசாசர்தங்கொள்கையானார். (அ0)

பரவுவாரவர்பாடு சென்றணைகிலேன் பன்மலர்பறித் தேத்தேன், குரவுவார்குழலார் திறத்தேநின்றுகுடிகெடு கின்றேனை, இரவுநின்றெரியாடியவெம்மிறையெரிசடை மிளிர்கின்ற, அரவனண்டுதன் னடியரிற்கூட்டிய வதிச யங்கண்டாமே.

ப - ரை. பரவுவார் - இறைவனைத் துதிப்பவராகிய, அவர்பாடு - அவர்களிடத்தில், சென்று அணைகிலேன் - போய்ச்சேரேன், பல்மலர் பறித்து ஏத்தேன் - பலவகைமலர்களைப் பறித்து அர்ச்சித்துத் துதியேன், குரவு - குராமலரை யணிந்த, வார் - நீண்ட, குழலார் திறத்தே நின்று - கூந்தலையுடைய மாதர் வசமாகி நின்று, குடிகெடுகின்றேனை-குடிகெடுகின்ற என்னை, இரவு நின்று-சர்வசங்காரகாலமாகிய மகாராத்ரியில் நின்று, எரியாடிய - அழலாடிய, எம்மிறை - எம்மிறைவன், எரிசடை-விளங்குகின்ற சடையின்கண், மிளிர்கின்ற - பிரகாசியா நின்ற, அரவன் - சர்ப்பத்தையுடையவன், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரிற்கூட்டிய அதிசயம் கண்டாம்——.எ - று.

க - ரை. அடியாரிடத்துச் சென்று சேர்கிலேன், பலமலர்களைப்பறித்து அருச்சித்துத் துதியேன், மாதர் விடயத்திற்சிக்கிக் குடிகெடாநின்ற என்னை, சிவபெருமான் ஆண்டருளித் தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம்.

வி - ரை. பன்மலர் - பலவகைமலர். அவை கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்பன. குரவு - நறுமணம் எனினுமாம். குடிகெடுதல் - குடும்பத்தோடு நசித்தல். இரவு - இராத்திரி, அது சர்வசங்கார காலத்துக்காயிற்று. (௫)

எண்ணிலேன்றிரு நாமவஞ்செழுத்துமென் னேழைமையதனாலே, நண்ணிலேன்கலை ஞானிகடம்மொடு நல்வினைநயவாதே, மண்ணிலேபிறந் திறந்துமண்ணாவதற் கொருப்படுகின்றேனை, அண்ணலாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. என் ஏழைமையதனாலே - எனது அறியாமையாலே, திருநாமம் அஞ்சுஎழுத்தும்-இறைவன் திருநாமமாகிய ஐந்தெழுத்தையும், எண்ணிலேன் - நினைத்திலேன், கலைஞானிகள் தம்மொடும் - கலைகளையுணர்ந்த ஞானிகளோடும், நண்ணிலேன்-சேர்ந்திலேன், நல்வினை நயவாதே-சற்கருமத்தை விரும்பாமலே, மண்ணிலே - பூமியிலே, பிறந்து - ஜந்மித்து, இறந்து - மரித்து, மண் ஆவதற்கு - மண்ணாய்ப்போவதற்கு, ஒருப்படுகின்றேனை - இசையாநின்ற என்னை, அண்ணல் - பெரியோனாகிய சிவபிரான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரிற்கூட்டிய அதிசயம் கண்டாம்,—எ - று.

க - ரை. இறைவனது திருநாமமாகிய ஐந்தெழுத்தையும் என் அறியாமையால் நினைத்திலேன், அன்பரோடும் சேர்ந்திலேன், நற்கருமங்களை விரும்பாமல் இவ்வுலகத்தில் பிறந்திறந்து மண்ணாவதற்கு இசைகின்ற என்னை, பெரியோனாகிய சிவபெருமான் ஆண்டருளித் தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம். (௬)

பொத்தையூன்சுவர் புழுப்பொதிந்துளுத்தசும் பொழுகியபொய்க்கூரை, இத்தைமெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப்படுவேனை, முத்துமாமணிமாணிக்கவயிரத்த பவளத்தின் முழுச்சோதி, அத்தனாண்டுதன் னடியரிற்கூட்டிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. பொத்தை ஊன் சுவர் - துவாரங்களையுடைய மாமிசச்சுவர், புழுப்பொதிந்து - புழுக்கள் பொருந்தி, உளுத்து - சிதைந்து, அசும்பு ஒழுகிய - நிணநீர் கசிந்தொழுகாநின்ற, பொய்க்கூரை - பொய்யாகிய கூரைவீடு, இத்தை - இதனை, மெய்யெனக் கருதிநின்று - மெய்யென்று நினைத்து நின்று, இடர்க்கடல்-துன்பக்கடலின், சுழித்தலை - சுழியின்கண், படுவேனை - சிக்கிக் கிடப்பேனை, முத்து - முத்தினுடையவும், மாமணி - பெருமை கொண்ட ரத்நத்தினுடையவும், மாணிக்கம்-மாணிக்கத்தினுடையவும், வயிரத்த - வயிரத்தினுடையவும், பவளத்தின் - பவளத்தினுடையவும், முழுச்சோதி - முழுவொளியையுடைய, அத்தன் - எமதுதந்தை, ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரிற்கூட்டிய அதிசயம் கண்டாம்,——எ - று.

க - ரை. இந்தப் பொய்யுடம்பை மெய்யென நினைத்து துன்பக்கடலில் அழுந்தின என்னை, எமது தந்தையாகிய சிவபெருமான் ஆண்டருளித் தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம்.

வி - ரை. பொத்தை - பருத்தது எனினுமாம். முத்து வயிரம் என்பவற்றின் ஒளியைத் திருவெண்ணீற்றி னொளிக்கும், மாமணி மாணிக்கம் பவளம் என்பவற்றினொளியைத் திருமேனியி னொளிக்கும் உவமையாக்குக. (எ)

நீக்கிமுன்னெனைத் தன்னொடுநிலாவகை குரம்பையிற் புகப்பெய்து, நோக்கிநுண்ணிய நொடியனசொற்செய்து நுகமின்றிவிளாக்கைத்துத், தூக்கிமுன்செய்தபொய்யறத்துகளறுத்தெழுதரு சுடர்ச்சோதி, ஆக்கியாண்டுதன்னடியரிற்கூட்டிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. முன் - முன்னே, தன்னொடு நில்லாவகை - தன்னுடன் சேர்ந்திரா வண்ணம், என்னை நீக்கி - என்னை விலக்கி, குரம்பையில் புகப்பெய்து - (இந்தச் சரீரமாகிய) சிறு குடிலில் புகுத்தி, நோக்கி - (பரிபக்குவகாலத்தைப்) பார்த்து, நுண்ணிய - நுட்பமாகிய, நொடியன சொல்செய்து - நொடியளவிற் சொல்லப்படுவதாகிய ஒரு சொல்லையெனக் கறிவுறுத்தி, நுகம் இன்றி-நுகத்தடியில்லாமலே, விளாக்கைத்து - பூட்டி, தூக்கி - பிறவிக் கடலினின்று மேலெடுத்து, முன் செய்த - முன்னே செய்த, பொய் அற-வீண்காரியங்கள் அற்றொழியுமாறு, துகள் அறுத்து-குற்றங்களைச் சேதித்து, எழுதரு - எழுகின்ற, சுடர் - காந்தியையுடைய, சோதி - ஒளிபுருவனாகிய இறைவன், ஆக்கி - என்னை

யோர் பொருளாக்கி, ஆண்டு-ஆண்டருளி, தன் அடியரிற்கூட்டிய அதிசயம்கண்டாம்,——எ - று.

க - ரை. என்னை ஆதியிற் பிரிவித்து, இந்த வுடம்பிற்புகுத்தி, பரிபாககாலம் பார்த்து ஒரு சொல்லைச்சொல்லி என் பிறவித் துன்பங்களைப்போக்கின ஒளியுருவனாகிய சிவபெருமான் என்னையும் ஓர் பொருளாக்கி யாண்டருளித் தன் அடியாரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம்.

வி - ரை. நுண்ணிய நொடியன சொற்செய்து என்றது குருமுகத்தாலறிதற்குரிய உபதேசமொழியை. (அ)

உற்றவாக்கையி னுறுபொருணறுமல ரெழுதருநாற் றம்போல், பற்றலாவதோர் நிலையிலாப்பரம்பொரு ளப் பொருள்பாராதே, பெற்றவாபெற்ற பயனதுநுகர்ந்திடும் பித்தர்சொற் றெளியாமே, அத்தனாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. நறுமலர்-நல்லமலரின்கண், எழுதரு - உண்டாகின்ற, நாற்றம்போல் - நறுமணம்போல, உற்ற-வினைவசத்தால் பொருந்திய, ஆக்கையின் உறுபொருள்-சரீரத்திலுள்ள பொருளானது, பற்றலாவது ஓர்நிலை - பற்றப் படுவதாகிய ஓர் தன்மை, இல்லா - இல்லாத, பரம்பொருள்-மேலாகிய பொருளேயாம், அப்பொருள் - அந்தப் பொருளாகிய இறைவனை, பாராதே - நோக்காமல், பெற்றவாறு பெற்ற பயன் - தமது வினைக்கீடாகத் தாம் அடையவேண்டிய வழியாக அடைந்த சுகதுக்கங்களாகிய பயனை, நுகர்ந்திடும் - அநுபவிக்கின்ற, பித்தர்சொல் தெளியாமே-அறிவிலிகளாகிய பித்தர்களுடைய சொல்லை நான் நம்பாதிருக்க, அத்தன் - எமது தந்தையாகிய சிவபிரான், ஆண்டு - என்னை ஆண்டருளி, தன் அடியரிற்கூட்டிய அதிசயம் கண்டாம்.——எ - று,

க - ரை. பூவில் மணம்போல இந்தச் சரீரத்திலுள்ள மனோவாக்குக் காயங்களுக் கெட்டாத இறைவனை நோக்காமல் இம்மைப்பயனையே நுகரும் பித்தர்சொல்லை நான் நம்பாதிருக்கும்படி, என்னை யாண்டருளித் தன் அடியரோடு சேர்த்த அதிசயத்தைக் கண்டோம் என்பதாம்.

வி - ரை. பற்றலாவதோர் நிலையிலாப்பரம்பொருள்-மனோவாக்குக்காயங்களுக் கெட்டாத மேலாகிய பொருள். (கூ)

இருடிணிந்தெழுந்திட்டதோர் வல்வினைச்சிறு குடிலி துவித்தைப், பொருளெனக்களித்தரு நரகத்திடைவிழப் புகுகின்றேனைத், தெருளுமும்மதினொடிவரை யிடிதரச் சினப்பதத் தொடுசெந்தீ, அருளுமெய்ந்நெறி பொய்ந் நெறிநீக்கிய வதிசயங்கண்டாமே.

ப - ரை. இருள் திணிந்து - அஞ்ஞானவிருள் மிகுந்து, எழுந்திட்டது - எழுந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, வல்வினை - வலிய வினைகளாலாகிய, சிறு குடில் இது - சிறு குடில் இதுவாகும், இத்தை - இதனை, பொருள் என - மெய்ப்பொருளெனக்கொண்டு, களித்து - மகிழ்ந்து, அரு - (துன்பம் சகித்தற்கு) அரிய, நரகத்திடை-நரகத்தில், விழப்புகுகின்றேனை-விழப்போகின்ற என்னை, தெருளும் - யாவராலும் தெளியப்பட்ட, மும்மதில் - மும்மதில்கள், நொடிவரை - நொடியளவில், இடிதர - தகர்ந்துபோம்படி, சினப்பதத்தொடு - கோவக்குறியோடு, செந்தீ அருளும் - செந்தீயையும் அருள்செய்த, மெய்ந்நெறி - உண்மை நெறியுடையவனாகிய இறைவன், பொய்ந்நெறி நீக்கிய - (எனது) பொய்ந்நெறியை நீக்கிவிட்ட, அதிசயம் கண்டாம்,—— எ - று.

க - ரை. அஞ்ஞானவிருள் செறிந்து வலியவினைகளாலெடுக்கப்பட்ட இந்தப் பொய்யுடம்பை மெய்யாகக் கருதிக் களித்து நரகுக்காளாகிய என்னை, திரிபுராந்தகனாகிய சிவபெருமான் பொய்ந்நெறியினின்று நீக்கி யாண்டருளின அதிசயத்தைக் கண்டோம் என்பதாம். (௧௦)

# புணர்ச்சிப்பத்து.

அத்துவிதவிலக்கணம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

### ஆசிரியவிருத்தம்.

சுடர்பொற்குன்றைத் தோளாமுத்தை வாளாதொழும் புகந்து, கடைபட்டேனையாண்டுகொண்டகருணாலயனைக் கருமால்பிரமன், தடைபட்டின்னுஞ்சாரமாட்டாத்தன்னைத் தந்த வென்னாரமுதைப், புடைபட்டிருப்பதென்றுகொல்லோவென்பொல்லாமணியைப்புணர்ந்தே.

ப - ரை. சுடர் - ஒளிர்கின்ற, பொற் குன்றை - பொன்மலையை, தோளா முத்தை - தொளைக்கப்படாத முத்தை, வாளா தொழும்பு உகந்து - பயனற்ற என்தொண்டை யேற்றுக்கொண்டு, கடைபட்டேனை - கடையான வென்னை, ஆண்டுகொண்ட - ஆட்கொண்டருளின, கருணாலயனை - கருணைக்குப் பிறப்பிடமானவனை, கருமால் பிரமன் - கருமாலும் பிரமனும், தடைபட்டு - தடையாகி, இன்னும் சாரமாட்டா - இன்னமும் அடையவொண்ணாத, தன்னைத் தந்த - தன்னை எனக்குக்கொடுத்த, என் ஆர் அமுதை - என்னரிய அமிர்தத்தை, புடைபட்டிருப்பது - அணுகியிருப்பது, என்று கொல் - என்றோ, என் பொல்லாமணியைப் புணர்ந்து-எனது முழுமணியைச் சேர்ந்து——, எ - று,

க - ரை. எனக்குப் பொன்மலை முதலானவைபோலப் பெரும்பயனா யிருக்குஞ் சிவபிரானை நான் சேர்ந்து அவனுக் கயலிலிருப்பது எந்நாளோ என்பதாம்.

வி - ரை. சலியாநிலைமைய னாதலாலும், எல்லா வுலகத்தாராலும் புகழப்படுவோ னாதலாலும், அளக்கலாகாத அளவினனாதலாலும், என்றும் அடுத்தார்க்குப் பலவளங்களைத் தந்து காப்போனாதலாலும், இறைவனை "சுடர்பொற்குன்று" என்றார். தோளா முத்து - தொளைக்கப்படாத முத்து. தோளுதல் - தொளைத்தல். அன்றித் தொள்ளல் தொளைத்தலெனக் கொண்டு இதுவே நீண்டு தோளலாயிற்றெனினுமாம். பொள்ளாமணி - தொளைக்கப்படாத

மணி. பொள்ளல் - தொளைத்தல், அது வடநூலார் மதம்பற்றிப் பொல்லாமணியென வந்தது. இறைவன் தம் வயமானமை நோக்கி மமகரித்து "என் பொல்லாமணி" என்றார். மமகரித்தல் - எனதென்றல். (க)

ஆற்றகில்லேனடியேனரசேயவனி தலத்தைம்புலனாய, சேற்றிலழுந்தாச்சிந்தைசெய்து சிவனெம்பெருமானென்றேத்தி, ஊற்றுமணல்போனெக்குநெக்குள்ளேயுருகியோலமிட்டுப், போற்றிநிற்பதென்றுகொல்லோவென்பொல்லாமணியைப்புணர்ந்தே.

ப - ரை. அரசே - இறைவனே, அடியேன் ஆற்றகில்லேன் - அடியேன் பொறுக்ககில்லேன், அவனிதலத்து - பூதலத்தில், ஐம்புலன் ஆயசேற்றில் அழுந்தா - ஐம்புலன்களாகிய சேற்றின்கண்ணழுந்தி (துன்புற்று), சிந்தை செய்து - (பிறகு) சிந்தித்து, சிவன் - சிவபெருமானே, எம்பெருமான் என்று ஏத்தி - எம்மிறைவனேயென்று துதித்து, மணல் ஊற்றுபோல் - மணற்கேணிபோல, நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து, உள்உருகி - மனமுருகி, ஓலம் இட்டு - முறையிட்டு, என் பொல்லாமணியைப் புணர்ந்து - என் முழுமணியாகிய உன்னைச் சேர்ந்து, போற்றி நிற்பது என்று கொல்லோ - வணங்கிநிற்பது எந்தக்காலமோ, எ-று.

க - ரை. இறைவனே, பூமியில் ஐம்புலச்சேற்றி லழுந்தியாற்றேன், சிவபெருமானே யென்றும், எம்பெருமானே யென்றும், மனம் நெகிழ்ந்துருகி யோலமிட்டுப் பொல்லாமணியாகிய வுன்னை நான் வணங்கிநிற்பது எந்தக்காலமோ என்பதாம்.

வி - ரை. ஊற்றுமணல் என்பதனை மணலூற்று எனமாறுக. "தொடுமணற் கேணி" எனவும், "தொட்டனைத் தூறு மணற்கேணி" எனவும் பிற அறிஞர் கூறுதலுங் காண்க. (உ)

நீண்டமாலுமயனும்வெருவநீண்ட நெருப்பை விருப்பிலேனை, ஆண்டுகொண்டவென்னாரமுதை யள்ளூறுள்ளத் தடியார்முன், வேண்டுந்தனையும்வாய்விட்டலறிவிரையார் மலர்தூவிப்,பூண்டுகிடப்பதென்றுகொல்லோவென்பொல்லாமணியைப் புணர்ந்தே.

ப - ரை. நீண்ட - (வாமனனாய் வந்து) திரிவிக்கிரமனாய் நெடுகின, மாலும் - திருமாலும், அயனும் - பிரமனும், வெருவ - (தமது செருக்கழிந்து) அஞ்சும்படி, நீண்ட - ஓங்கிநின்ற, நெருப்பை - நெருப்பு மலையை, விருப்பு இல்லேனை - (தன்னிடத்துச் சற்றும்)

விருப்பமில்லாத வென்னை, ஆண்டுகொண்ட - ஆண்டுகொண்டருளின, என் ஆர் அமுதை - என் அரிதாகிய அமிர்தத்தை, அள்ளூறு உள்ளத்து - மிகுதியாயுருகாநின்ற மனத்தினையுடைய, அடியார்முன் - அடியவர்கள் திருமுன்பே, வேண்டுந்தனையும் - வேண்டுமளவும், வாய்விட்டு அலறி - வாய்திறந்தரற்றி, விரை ஆர் மலர் தூவி - மணம்பொருந்திய மலர்களைத் தூவி, என் பொல்லாமணியைப் புணர்ந்து——, பூண்டுகிடப்பது என்றுகொல்லோ - அவனது அடிமைத்திறம்பூண்டு கிடப்பது எந்தக்காலமோ, எ - று.

க - ரை. அரிபிரமர்கள் அஞ்சும்படி நீண்ட நெருப்புமலையை, அன்பில்லாத என்னை யாண்டுகொண்ட ஆரமிர்தத்தை, நான் மணமலர்களால் அருச்சித்து அவ்விறைவனது தொண்டு பூண்டு கிடப்பது எந்நாளோ என்பதாம்.

வி - ரை. மால்நீண்டது திரிவிக்கிரமாவதாரத்தில். இறைவன் நெருப்பாய்நீண்டது திருவண்ணமலையில் பிரம விட்டுணுக்களாகிய இருவரும் வாதுசெய்த காலத்தில். பூண்டுகிடப்பது - திருவடியைப் பூண்டுகிடப்பது எனினுமாம். (௫)

அல்லிக்கமலத்தயனுமாலுமல்லாதவருமமரர்கோனும்,
சொல்லிப்பரவுநாமத்தானைச்சொல்லும்பொருளு மிறந்த
சுடரை, நெல்லிக்கனியைத் தேனைப்பாலை நிறையின்னமுதையமுதின்சுவையைப், புல்லிப்புணர்வ தென்றுகொல்
லோவென் பொல்லாமணியைப்புணர்ந்தே.

ப - ரை. அல்லிக்கமலத்து அயனும் - அகவிதழ்களையுடைய தாமரைமலரை யிடமாகவுடைய பிரமனும், மாலும் - திருமாலும், அல்லாதவரும் - அவர்களொழிய நின்றோரும், அமரர்கோனும் - தேவராஜனாகிய இந்திரனும், சொல்லிப்பரவும் - துதித்து வணங்குதற்குரிய, நாமத்தானை - திருநாமத்தை யுடையவனை, சொல்லும் பொருளும் இறந்த - சொற்பொருள்களைக் கடந்துநின்ற, சுடரை - தேஜோமயமனை, நெல்லிக்கனியை - நெல்லிப்பழத்தை, தேனை - தேனை, பாலை - பாலை, நிறை இன் அமுதை - நிறைந்த இனிய அமிர்தத்தை, அமுதின் சுவையை - அமிர்தத்தின் சுவையினை, என் பொல்லாமணியை——, புல்லிப்புணர்வது என்றுகொல்லோ - தழுவிப்புணர்வது எந்தக்காலமோ, எ - று.

க - ரை. பிரமன் முதலியோர் சொல்லித் துதிக்கின்ற திருநாமத்தையுடையவனும், சொற்பொருள்களைக் கடந்த சோதியும், நெல்லிப்பழ முதலானவைபோல் இனிதா யிருப்பவனும்ஆகிய சிவபெருமானைத் தழுவிப் புணர்வது எக்காலமோ என்பதாம்.

வி - ரை. சுவைக்குந்தோறும் இனிமை தருதலால் நெல்லிக்கனியை முன்வைத்துத் தேன் பால் அமிர்தங்களைப் பின்வைத்தார். இது நோக்கியன்றே "இனியவுளவாக வின்னாதகூறல்-கனியிருப்பக் காய் கவர்ந்தற்று" என்னுந் திருக்குறளுரையில் "ஔவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாவனவற்றை" என்றார் பரிமேலழகர். (ச)

திகழத்திகழுமடியு முடியுங்காண்பான்கீழ்மே லயனும் மாலும், அகழப்பறந்துங்காணமாட்டாவம்மானிம்மாநில முழுதும், நிகழப்பணிகொண் டென்னையாட்கொண்டா வாவென்ற நீர்மையெல்லாம், புகழப்பெறுவ தென்றுகொல்லோ வென்பொல்லா மணியைப்புணர்ந்தே.

ப - ரை. திகழத்திகழும்-மிக்கு விளங்குகின்ற, அடியும் முடியும் - திருவடியையும் திருமுடியையும், காண்பான் - காணும்பொருட்டு, கீழ்மேல் - கீழும் மேலும் ஆக, மாலும் அயனும் - திருமாலும் பிரமனும், அகழப்பறந் தும்-மண் அகழ்ந்தும் விண் பறந்தும், காண மாட்டா - காண வொண்ணாதிருந்த, அம்மான் - அழகிய பெரியோன், இம்மாநிலமுழுதும் - இந்தப் பெரிய வுலகமுழுதும், நிகழப்பணிகொண்டு - நிகழுமாறு பணிகொண்டருளி, என்னை ஆட்கொண்டு - என்னை யாட் கொண்டருளி, ஆவாஎன்ற - அந்தோ வென்றிரங்கி யருளின, நீர்மையெல்லாம் - மங்கள குணங்களை யெல்லாம், புகழப்பெறுவது என்று கொல்லோ-புகழப்பெறுவது எந்தக்காலமோ, என் பொல்லா மணியைப்புணர்ந்து-——,எ-று.

க - ரை. அரிபிரமர்கள் அடிமுடிகளைக் கண்டறிய வொண்ணாத இறைவன் இவ்வுலகறிய என்னை யாண்டருளின மங்கள குணங்கள் முழுதும் நான் புகழ்வது எந்தக்காலமோ என்பதாம்.

பரிந்துவந்து பரமானந்தம் பண்டேயடியேற் கருள் செய்யப், பிரிந்துபோந்துபெருமாநிலத்திலருமாலுற்றே னென்றென்று, சொரிந்தகண்ணீர் சொரியவுண்ணீரு ரோமஞ்சிலிர்ப்ப வுகந்தன்பாய்ப், புரிந்துநிற்ப தென்று கொல்லோ வென்பொல்லா மணியைப்புணர்ந்தே.

ப - ரை. பரிந்துவந்து-இறைவன் பரிவுசெய்துவந்து, பரமானந்தம் - மேலான இன்பத்தை, பண்டே - முன்னமே, அடியேற்கு அருள் செய்ய - அடியேனுக்கருள் செய்திருக்க, பிரிந்துபோந்து - அவனை நீங்கிவந்து, பெருமாநிலத்தில்-மிகப்பெரியநிலத்தில், அருமால் உற்றேன் - நீக்குதற்கரிய மயக்கத்தை யடைந்தேன், என்றென்று - என்று பலகாற் சொல்லி, சொரிந்தகண்ணீர் - சிந்தின

கண்ணீரோடு, உள் நீர்சொரிய - ஆத்ம குணங்களுஞ் சிந்த, உரோமம் சிலிர்ப்ப - மயிர்க்குச்செறிய, உகந்து அன்புஆய்-விரும்பி யன்புருவமாகி, புரிந்துநிற்பது என்று கொல்லோ - நேசித்து நிற்பது எந்தக்காலமோ, என் பொல்லாமணியைப் புணர்ந்து——, எ-று.

க - ரை. இறைவன் எம்மைப் பரிந்துவந் தாண்டருள் செய்ய, அவனை நீங்கிவந்து பூமியில் மயங்கினேன் என்று பல காற்சொல்லி, பொழிகின்ற கண்ணீரோடு மனோகுணங்களும் சிந்த, மயிர் சிலிர்க்க, விரும்பி அன்புருவாய் இறைவனை நேசித்து நிற்பது எந்தக்காலமோ என்பதாம். (௬)

நினையப்பிறருக் கரியநெருப்பை நீரைக்காலை நிலனைவிசும்பைத், தனையொப்பாரை யில்லாத்தனியை நோக்கித் தழைத்துத் தழுத்தகண்டம், கனையக்கண்ணீ ரருவிபாயக் கையுங்கூப்பிக் கடிமலரால், புனையப்பெறுவ தென்று கொல்லோ வென்பொல்லா மணியைப்புணர்ந்தே.

ப - ரை. பிறருக்கு நினைய அரிய நெருப்பை - ஏனையர்க்கு நினைத்தற்கரிதாகிய நெருப்பினை, நீரை-நீரினை, காலை - காற்றை, நிலனை - மண்ணை, விசும்பை - ஆகாயத்தை, தனை ஒப்பாரை இல்லாதனியை - தன்னை யொப்பாரை யுடையதல்லாத தனிமைப் பொருளை, நோக்கி - நாடி, தழைத்து - பூரித்து, தழுத்தகண்டம் கனைய - தழுதழுத்த கண்டத்தொனி மிக, கண்ணீர் அருவிபாய - கண்ணீரானது அருவியாறுபோலப் பாயாநிற்க, கையும்கூப்பி-கைகளையுங் குவித்து, கடிமலரால்-மணந்தங்கிய மலர்களைக்கொண்டு, புனையப் பெறுவது என்றுகொல்லோ - அலங்கரிக்கப் பெறுவது எந்தக்காலமோ, என் பொல்லாமணியைப் புணர்ந்து——,எ-று.

க - ரை. நினைத்தற்கரியவனும் ஐம்பெரும் பூதங்களாய்த் தன்னை நிகர்ப்பா ரொருவருமில்லாதவனும் ஆகிய சிவபெருமானை நோக்கி, தழுதழுத்தகண்டம், பொழிகண்ணீர், கைகுவித்தல், என்பனவற்றை யுடையேனய், மலர்களைக்கொண்டு அவனை யலங்கரிக்கப்பெறுவது எந்தக்காலமோ என்பதாம்.

வி - ரை. தழுதழுத்தல் - நாத்தடுமாறல். இதனை, கத்கதம் என்பர் வடநூலார். (எ)

நெக்குநெக் குள்ளுருகி யுருகிநின்று மிருந்துங்கிடந்து மெழுந்தும், நக்குமழுதுந்தொழுதும்வாழ்த்தி நானாவிதத் தாற்கூத்துநவிற்றிச், செக்கர்போலுந் திருமேனிதிகழ நோக்கிச் சிலிர்சிலிர்த்துப், புக்குநிற்பதென்றுகொல்லோ வென்பொல்லா மணியைப்புணர்ந்தே.

ப - ரை. நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து, உள்உருகி உருகி - மனமுருகி யுருகி, நின்றும் - நிற்றலைச்செய்தும், இருந்தும் - இருத்தலைச் செய்தும், கிடந்தும் - கிடத்தலைச் செய்தும், எழுந்தும் - எழுதலைச்செய்தும், நக்கும் - நகைத்தலைச்செய்தும், அழுதும் - அழுதலைச்செய்தும், தொழுதும் - தொழுதலைச்செய்தும், வாழ்த்தி - துதித்து, நானாவிதத்தால் - நாநாவிதமாக, கூத்துநவிற்றி - கூத்தாடி, செக்கர்போலும் திருமேனி - செவ்வானம் போன்ற திருமேனியானது, திகழ - விளங்காநிற்க, நோக்கி - பார்த்து, சிலிர் சிலிர்த்து - உடல் புளகித்து, புக்குநிற்பது - அடைந்து நிற்பது, என்றுகொல்லோ - எந்தக்காலமோ, என் பொல்லா மணியைப் புணர்ந்து——, எ - று,

க - ரை. மனம் நெகிழ்ந்துருகி நின்றும், இருந்தும், கிடந்தும், எழுந்தும், சிரித்தும், அழுதும், தொழுதும், வாழ்த்தியும், நானாவிதமாகிய கூத்தாடியும், மயிர் சிலிர்த்தும், இறைவனது திருமேனியழகை நோக்கி உடல்புளகித்து நிற்பது எந்தக்காலமோ என்பதாம்.

வி - ரை. நெக்கு நெக்கு என்ற அடுக்கு மிக நெகிழ்ந்து என்னும் பொருளது. (அ)

தாதாய்மூ வேழுலகுக்குந்தாயேநா யேன்றனையாண்ட,
பேதாய்பிறவிப் பிணிக்கோர்மருந்தே பெருந்தேன்பில்க
வெப்போதும், மேதாமணியே யென்றென்றேத்தி யிர
வும்பகலு மெழிலார்பாதப், போதாய்ந்தணைவ தென்று
கொல்லோ வென்பொல்லா மணியைப்புணர்ந்தே.

ப - ரை. மூஏழு உலகுக்கும் - பழமையாகிய ஏழு லோகங்களுக்கும், தாதாய் - தந்தையே, தாயே - மாதாவே, நாயேன்றனை யாண்டபேதாய் - நாயினேனையாண்டருளின பேதையே, பிறவிப் பிணிக்கு-பிறவியாகிய நோய்க்கு, ஓர் மருந்தே - ஒப்பற்ற ஔஷதமே, பெருந்தேன் பில்க - பெருந்தேன் சிந்த, எப்போதும் - எக்காலத்திலும், மேதாமணியே - மேதாரத்நமே, என்று என்று ஏத்தி - என்று பலகால் துதித்து, இரவும் பகலும் - இரவினும் பகலினும், எழில் ஆர் - அழகு நிறைந்த, பாதப்போது - திருவடித் தாமரையை, ஆய்ந்து அணைவது - ஆராய்ந்து அணுகப்பெறுவது, என்று கொல்லோ—, என் பொல்லாமணி——, எ-று.

க - ரை. பழமையாகிய ஏழுலகுக்குந் தந்தை தாயாயிருப்பவனே, நாயேனை யாண்டருளின பேதையே, பிறவிப்பிணிக்குமரு

ந்தே, மேதாமணியே, என்று பலகால் துதித்து, இரவினும் பகலினும் இறைவனது திருவடித்தாமரையை நான் ஆராய்ந்தணுகப் பெறுவது எந்தக்காலமோ என்பதாம்.

வி - ரை. பரிபக்குவகாலம் வாய்க்கு முன்னே யாண்டமை தோன்ற "பேதாய்" என்றார். "என்னைமுன்னாளுழுடையான்" என்பதனானும் இது இனிதுவிளங்கும். பில்குதல் - சிந்துதல். மேதா - அறிவு. மேதாமணி - அறிவுருவாகியமணி, அறிவுள்ள மணி யெனினுமாம். அறிவில்லாதமணியோ டிறைவற்கு வேற்றுமை தோன்ற மேதாமணி யென்றதென்க. (௯)

காப்பாய்படைப்பாய் கரப்பாய்முழுதுங் கண்ணார்விசும்பின் விண்ணோர்க்கெல்லாம், மூப்பாய்மூவா முதலாய்நின்ற முதல்வாமுன்னே யெனையாண்ட, பார்ப்பானேயெம் பரமாவென்று பாடிப்பாடிப் பணிந்துபாதப், பூப்போதணைவ தென்றுகொல்லோ வென்பொல்லா மணியைப்புணர்ந்தே.

ப - ரை. முழுதும் - உலகமுழுதையும், காப்பாய் - ரக்ஷிப்பாய், படைப்பாய் - சிருட்டிசெய்வாய், கரப்பாய் - சங்கரிப்பாய், கண் ஆர் - பெருமை யமைந்த, விசும்பின் - சுவர்க்கலோகத்திலுள்ள, விண்ணோர்க்கு எல்லாம் - தேவர்களெல்லார்க்கும், மூப்பாய் - முதிர்ந்தவனாய், மூவா முதலாய் - முதிராத முதல்வனாய், நின்ற - நிலைபெற்றிருந்த, முதல்வா - முதல்வனே, முன்னே என்னையாண்ட-(ஆட்படுந்தன்மையுளதாதற்கு) முன்னே என்னை யாண்டருளின, பார்ப்பானே - வேதியனே, எம்பரமா - எம்பரமனே, என்று பாடிபாடி - என்று பலகாற்பாடி, பணிந்து - வணங்கி, பாதம் - திருவடியாகிய, பூப்போது - பொலிவினையுடைய தாமரைமலரை, அணைவது - அணுகப்பெறுவது, என்று கொல்லோ—, என் பொல்லாமணியைப் புணர்ந்து,—எ - று.

க - ரை. முத்தொழிலையுடையவனே, தேவர்களுக்காதியானவனே, அழியாத முதற்பொருளே, முன்னே யென்னை யாண்டருளின அந்தணனே, பரமனே என்று பலகாற்பாடி இறைவனது திருவடித்தாமரையை யடைவது எந்தக்காலமோ என்பதாம்.

வி - ரை கரத்தல் - மறைத்தல், அது இங்குச் சங்காரத்தைக் குறித்தது. கண் - இடம் எனினுமாம். பூ - அழகு எனினுமாம். முன்னவனும் பின்னவனுமானாய் என்றற்கு, "மூப்பாய் மூவா முதலாய் நின்ற முதல்வா" என்றார். (௧0)

# வாழாப்பத்து.

முத்தியுபாயம்.
திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

**ஆசிரியவிருத்தம்.**

பாரொடுவிண்ணாய்ப்பரந்தவெம்பரனே
 பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
சீரொடுபொலிவாய்சிவபுரத்தரசே
 திருப்பெருந்துறையுறைசிவனே
யாரொடுநோகேனார்க்கெடுத்துரைக்கே
 னாண்டநீயருளிலையானால்
வார்கடலுலகில்வாழ்கிலேன்கண்டாய்
 வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பாரொடுவிண் ஆய்பரந்த - மண்ணொடு விண்ணாகி வியாபித்த, எம்பரனே - எம் பரமனே, நான் மற்று பற்று இலேன் - நான் வேறுபற் றுடையேனல்லேன், சீரொடு பொலிவாய் - சிறப்போடு விளங்குகின்றவனே, சிவபுரத்து அரசே - சிவநகர்க் கிறைவனே, திருப்பெருந்துறை உறை - திருப்பெருந் துறையில் நித்யவாசம் பண்ணுகிற, சிவனே - சிவபெருமானே, ஆண்டநீ - என்னை யாண்டருளின நீயே, அருளிலையானால் - அருள்செய் திலையாயின், யாரொடு நோகேன் - யாரோடு சொல்லி நொந்து கொள்வேன், ஆர்க்கு எடுத்து உரைக்கேன் - யார்க்கு எடுத்துச் சொல்லுவேன், (மற்றென் செய்வாயெனின்) வார்கடல் உலகில் - நெடியகடலாற் சூழப்பட்ட இவ்வுலகின்கண், வாழ்கிலேன் - உயிர்வாழ கில்லேன், (ஆதலால்) வருகவென்று - வருவாய் என் றழைத்து, அருள்புரியாய் - அருள் செய்வாய்,——எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னை யன்றி வேறு பற்றிலேன், இதனை யாரோடு சொல்லி நோவேன், என்னை ஆண்டருளின நீயே யருள்செய்யாவிடில் இவ்வுலகில் வாழ் கிலேன், ஆதலால் என்னை வாவென் றருள்செய்ய வேண்டும் என்பதாம். (க)

வம்பனேன்றன்னையாண்டமாமணியே
மற்றுநான்பற்றிலேன்கண்டாய்
உம்பருமறியாவொருவனேயிருவர்க்
குணர்விறந்துலகமூடுருவும்
செம்பெருமானேசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
எம்பெருமானேயென்னையாள்வானே
யென்னைநீகூவிக்கொண்டருளே.

ப - ரை. வம்பனேன் தன்னை - துட்டனாகிய என்னை, ஆண்ட - ஆண்டருளின, மாமணியே - மாணிக்கமே, நான்மற்று பற்று இலேன்—, உம்பரும் அறியா ஒருவனே-தேவர்களும் அறிய வொண்ணாத ஒப்பற்றவனே, இருவர்க்கு - அரிபிரமர்களாகிய இருவருக்கும், உணர்வு இறந்து-(அவர்களுடைய) உணர்ச்சியைக் கடந்து, உலகம் - எல்லா வுலகங்களையும், ஊடுருவும் - ஊடுருவிச் சென்ற, செம்பெருமானே - செவந்த திருமேனியையுடைய இறைவனே, சிவபுரத்து அரசே - சிவநகர்க் கதிபனே, திருப்பெருந்துறை யுறை சிவனே—, எம்பெருமானே - எம் தலைவனே, என்னை ஆள்வானே - என்னை யாள்பவனே, என்னை - அடியேனை, நீ கூவிக்கொண்டு அருள் - நீ யழைத்துக்கொண் டருள்வாயாக,——எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னையன்றி வேறொரு பற்றிலேன், ஆதலால் என்னை நீ கூவிக்கொண்டருளவேண்டும என்பதாம். (௨)

பாடிமால்புகழும்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
தேடிநீயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
ஊடுவதுன்னோடுவப்பதுமுன்னை
யுணர்த்துவதுனக்கெனக்குறுதி
வாடினேனிங்குவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. மால் - திருமால், பாடி புகழும் - புகழ்ந்து பாடுதற்குரிய, பாதமே அல்லால் - உன் திருவடியை யன்றி, நான்

மற்று பற்று இலேன்—, தேடி நீ ஆண்டாய்-என்னைத் தேடிவந்து நீ யாண்டருளினை, சிவபுரத் தரசே—, திருப்பெருந்துறை யுறை சிவனே—, ஊடுவது உன்னோடு-பிணங்குவது உன்னுடனே, உவப்பதும் உன்னை - மகிழ்வது முன்னையே, எனக்கு உறுதி உணர்த்துவது உனக்கு - எனக்குறுதி கருதி அறிவித்துச்சொல்வதும் உனக்கே, வாடினேன் - வாட்டமடைந்தேன், இங்கு வாழ்கிலேன் - இவ்வுலகத்தில் உயிர் வாழகில்லேன், வருகவென்று அருள்புரியாய்,——எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன் திருவடியே யன்றி வேறொரு பற்றிலேன், நான் பிணங்குவதும் உன்னோடே, உவப்பதும் உன்னையே, எனக்குறுதியைக் கொடுக்க அறிவித்துக்கொள்வதும் உனக்கே, இங்கு வாழ்கிலேன், என்னை நீவாவென் றழைத்துக் கொண்டருள வேண்டும் என்பதாம். (௩)

வல்லைவாளரக்கர்புரமெரித்தானே
மற்றுநான்பற்றிலேன்கண்டாய்
தில்லைவாழ்கூத்தாசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
எல்லைமூவுலகுமுருவியன்றிருவர்
காணுநாளாதியீறின்மை
வல்லையாய்வளர்ந்தாய்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. வல்லை - விரைவில், வாள் - வாளையேந்திய, அரக்கர் - அரக்கரது, புரம் - முப்புரங்களை, எரித்தானே - நீறாக்கினவனே, நான் மற்று பற்று இலேன்—, தில்லைவாழ்-திருத்தில்லையில் வாழ்கின்ற, கூத்தா-கூத்தனே, சிவபுரத்தரசே—, திருப்பெருந்துறையுறை சிவனே—, எல்லை-எல்லையையுடைய, மூவுலகும்-மூன்றுலகங்களையும், உருவி - ஊடுருவி, அன்று - அந்நாளில், இருவர் - பிரமவிட்டுணுக்க ளென்கிற இருவரும், காணும் நாள்-காணப்புக்கபோது, ஆதி ஈறு இன்மை - முத லிறுதிகள் இல்லாமையாய், வல்லையாய் - விரைவாய், வளர்ந்தாய் - வளர்ந்தவனே, வாழ்கிலேன்—, வருகவென்று அருள்புரியாய்,—— எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னையன்றி வேறொரு பற்றிலேன், இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வாவென் றழைத்துக்கொண் டருளவேண்டும் என்பதாம். (௪)

பண்ணிணேர்மொழியாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
திண்ணமேயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
எண்ணமேயுடல்வாய்மூக்கொடுசெவிகண்
ணென்றிவைநின்கணேவைத்து
மண்ணின்மேலடியேன்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பண்ணின் - பண்போல, ஏர் - அழகாகிய, மொழியாள் - சொல்லையுடையாளாகிய உமாதேவியின், பங்க - பங்கினையுடையானே, நீ அல்லால் - நீ யன்றி, நான் மற்று பற்று இலேன் ——, திண்ணமே ஆண்டாய் - உறுதியாகவே யாண்டருளினை, சிவபுரத்தரசே ——, திருப்பெருந்துறையுறை சிவனே —, எண்ணம்-என்மனம், உடல்-உடம்பு, வாய்-வாக்கு, மூக்கொடு - நாசியோடு, செவி - காது, கண் - விழி, என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவைகளை, நின் கண்ணே வைத்து - உன்னிடத்தில் வைத்து, (அதின் பிறகு) மண்ணின்மேல் - பூமியின்மேல், அடியேன் வாழ்கிலேன் —, வருகவென்று அருள்புரியாய், — எ-று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னையன்றி வேறொரு பற்றிலேன், என் கருத்து முதலியவற்றை உன்னிடத்தே வைத்து அதின் பிறகு இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வாவென்றழைத்துக் கொண்டருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. பண் - இந்தளம் முதலியன. உடல் முதலாகிய ஐந்தும் பஞ்சேந்திரியங்கள் எனப்படும். இவற்றுக்குத் தலையாயிருப்பது மனமாதலால் எண்ணம் என அதனை முதற்கண் வைத்தார். (ரு)

பஞ்சின்மெல்லடியாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செஞ்செவேயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
அஞ்சினேனாயேனாண்டுநீயளித்த
வருளினைமருளினான்மறந்த
வஞ்சனேனிங்குவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பஞ்சின் - பஞ்சினும், மெல் அடியாள்-மென்மையாகிய பாதங்களையுடையாளாகிய உமாதேவியின், பங்க-பங்கனே, நீயல்லால்-நீயன்றி, நான் மற்று பற்று இலேன்——, (ஆதலால்) செஞ்செவே ஆண்டாய் - செவ்வையாய் ஆண்டுகொண்டருளினை, சிவபுரத்தரசே—, திருப்பெருந்துறையுறை சிவனே—, நாயேன் அஞ்சினேன்-நாயினேன் வெருவினேன், நீ ஆண்டு அளித்த - நீயாண்டு ரக்ஷித்தற்குக் காரணமாகிய, அருளினை - உன் பெருங் கருணையை, மருளினால் மறந்த - மயக்கத்தால் மறந்த, வஞ்சனேன்-வஞ்சகனாகிய நான், இங்கு வாழ்கிலேன்—, வருகவென்றருள்புரியாய்——, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னையன்றி வேறொரு பற்றிலேன், அஞ்சினேன், அதனையறிந்து நீயாண்டருளின அருளை என் மருளினால் மறந்த வஞ்சனேன் இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வாவென்றழைத்துக் கொண்டருள வேண்டும் என்பதாம். (௬)

பருதிவாழொளியாய்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
திருவுயர்கோலச்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
கருணையேநோக்கிக்கசிந்துளமுருகிக்
கலந்துநான்வாழுமாறறியா
மருளனேனுலகில்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பருதிவாழ் ஒளியாய் - சூரியனிடத்துத் தங்கிய வொளிபோன்ற ஒளியை யுடையானே, பாதமே அல்லால் - உன் பாதமேயன்றி, நான் மற்றுபற்று இலேன்——, திருவுயர் கோலம் - செல்வமிகுந்த அழகையுடைய, சிவபுரத்தரசே——, திருப்பெருந்துறையுறை சிவனே——, கருணையே நோக்கி - உன் கருணையையே நோக்கி, உள்ளம் கசிந்து உருகி - மனங்கசிந்துருகி, கலந்து வாழுமாறு அறியா - உன்னோடு கூடிவாழும் வகையறியாத, மருளனேன் - மயக்கத்தை யுடையேனாகிய நான், உலகில் - உலகத்தில், வாழ்கிலேன்——, வருகவென்று அருள் புரியாய்——, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உனது திருவடியை யன்றி வேறொரு பற்றிலேன், உன் கருணையையே

நோக்கி மனமுருகி உன்னைக்கூடி வாழும்வழி யறியாத மருள னேன் இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வாவென்றழைத்துக் கொண்டருளவேண்டும் என்பதாம். (எ)

பந்தணை விரலாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செந்தழல்போல்வாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
அந்தமிலமுதேயரும்பெரும்பொருளே
யாரமுதேயடியேனை
வந்துயவாண்டாய்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பந்து அணைவிரலாள் - பந்தணைந்த விரலையுடை யாளாகிய உமாதேவியின், பங்க - பங்கனே, நீ அல்லால்-நீயன்றி, நான் மற்று பற்று இலேன்——, செந்தழல் போல்வாய்-செவந்த நெருப்பை நிகர்ப்பவனே, சிவபுரத்தரசே—, திருப்பெருந்துறை யுறை சிவனே—,அந்தம் இல் அமுதே-முடிவில்லாத அமிர்தமே, அரும்பெரும் பொருளே-அரிய பெரிய பொருளே, ஆர் அமுதே- அரிய அமிர்தமே, வந்து - வலிய வந்து, அடியேனை-அடியனேனை, உய்ய ஆண்டாய் - உய்யும்படி யாண்டருளினை, வாழ்கிலேன்—, வருகவென்று அருள்புரியாய்——,எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னை யன்றி வேறொரு பற்றிலேன், நீயே வலியவந்து என்னையாண்ட ருளினை, இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வாவென்றழைத்துக் கொண்டருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. அந்தமில் என்ற விசேடணம் அமுது என்னும் வடமொழிப் பொருளை யுணர்த்தி நின்றது. அமுது அமிர்தம் என்னும் வடமொழிச் சிதைவு. அமுது இரண்டனுள் முன்னை யது அழிவில்லாதவன் என்றும், பின்னையது தன்னை யுண்போர் சாவாமைக் கேதுவாகிய மருந்து என்றும் பொருள் கொள்ளக் கிடந்தன. (அ)

பாவநாசாவுன்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
தேவர்தந்தேவேசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே

மூவுலகுருவவிருவர்கீழ்மேலாய்
முழங்கழலாய்நிமிர்ந்தானே
மாவுரியானேவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பாவநாசா - பாவங்களை யழிப்பவனே, உன்பாத மே யல்லால் - உன் திருவடிகளே யன்றி, நான் மற்று பற்று இலேன்—, தேவர்தம் தேவே-தேவதேவனே, சிவபுரத்தரசே—, திருப்பெருந் துறையுறை சிவனே—, மூவுலகு உருவ - மூன்றுல கங்களையு முருவும்படி, இருவர்கீழ் மேலாய் முழங்க - அரிபிரமர்க ளாகிய இருவரும் கீழ்மேலாகி யோலமிட, அழலாய் நிமிர்ந்தா னே - நெருப்புருவமாகி யோங்கி நின்றவனே, மாவுரியானே - யானைத்தோலை யுடையானே, வாழ்கிலேன்—, வருகவென்று அருள் புரியாய், — எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னை யன்றி வேறொரு பற்றிலேன், அரிபிரமர்களாகிய இருவரும் கீழ் மேலா யோலமிட நெருப்புருவாய் நிமிர்ந்தவனே, ஆனைத்தோ லுடையானே, இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வாவென்றழை த்துக் கொண்டருளவேண்டும் என்பதாம்.

வி - ரை. பாபம் - என்னும் வடமொழி யிடைப்பகரம் வகரமாய்த் திரிந்தது. தேவர்தம் என்பதில் தம் சாரியை. மாவுரி- புலித்தோல் எனினுமாம். மா - விலங்கின் பொதுப்பெயர். முழங் கழலாய் என்பதில் நிலைமொழி யீற்றகரம் தொகுத்தல். கீழ்மே லாய் என்பதற்குக் கீழ்மேலாய் நின்று தேட என்றும், முழங்கு அழலாய் என்பதற்கு ஒலிக்கின்ற நெருப்புருவமாய் என்றும் பொ ருள் கூறினும் அமையும். (௬)

பழுதில்தொல்புகழாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செழுமதியணிந்தாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
தொழுவனோபிறரைத்துதிப்பனோவெனக்கோர்
துணையெனநினைவனோசொல்லாய்
மழவிடையானேவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

ப - ரை. பழுதுஇல் - பழுதில்லாத, தொல் - அநாதியாகிய, புகழாள்-புகழையுடையாளாகிய உமாதேவியின், பங்க-பாகனே, நீ அல்லால் - நீயன்றி, நான் மற்றுபற்றுஇலேன்——, செழுமதி அணிந்தாய் - செழுமையாகிய பிறைச்சந்திரனை யணிந்தவனே, சிவபுரத்தரசே——, திருப்பெருந்துறை யுறை சிவனே——, பிறரை - பிறதேவரை, தொழுவனோ - வணங்குவேனோ, துதிப்பனோ - வாழ்த்துவேனோ, எனக்கு ஓர் துணையென நினைவனோ - எனக்கொரு சகாயமென்று எண்ணுவேனோ, சொல்லாய் - சொல்வாயாக, மழவிடையானே - இளமையாகியஏற்றை யுடையானே, வாழ்கிலேன்——,வருகவென்று அருள்புரியாய்——, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னையன்றி வேறொரு பற்றிலேன், நான் உன்னையன்றிப் பிறரை வணங்கிலேன், துதியேன், துணையென்றும் நினையேன், இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை வருகவென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. தொல்புகழ் - தொன்றுதொட்டு வரும் புகழ். தொழுவனோ, துதிப்பனோ, நினைவனோ என்றமையால் முக்கரணங்களாலும் வழிபடேனென்றாராயிற்று. மழவு - இளமை.(௧0)

# அருட்பத்து.

மகாமாயாசுத்தி.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

சோதியேசுடரேசூழொளிவிளக்கே
சுரிகுழற்பணைமுலைமடந்தை
பாதியேபரனேபால்கொள்வெண்ணீற்றாய்
பங்கயத்தயனுமாலறியா
நீதியேசெல்வத்திருப்பெருந்துறையி
னிறைமலர்க்குருந்தமேவியசீர்
ஆதியேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. சோதியே - ஒளியே, சுடரே - சுவாலையே, சூழ் ஒளிவிளக்கே - சூழ்ந்த ஒளியையுடைய தீபமே, சுரிகுழல் - சுரிந்த கூந்தலையும், பணைமுலை-பருமையாகிய தனங்களையுமுடைய, மடந்தை - மடவரலாகிய உமாதேவியின், பாதியே - பங்கனே, பரனே - மேலானவனே, பால்கொள் - பாலினது நிறத்தைக் கொண்ட, வெள் நீற்றாய் - திருவெண்ணீற்றை யுடையவனே, பங்கயத்து அயனும் - தாமரைமலரை யிடமாகவுடைய பிரமனும், மால் - திருமாலும், அறியா - அறியவொண்ணாத, நீதியே - நீதியாயிருப்பவனே, செல்வம் - செல்வம் நிறைந்த, திருப்பெருந்துறையில்—, நிறைமலர் குருந்தம் - நிறைந்த மலர்களையுடைய குருந்தமரத்தடியில், மேவிய - எழுந்தருளியிருந்த, சீர் ஆதியே - சிறப்புப் பொருந்திய முதற்பொருளே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் விரும்பியழைத்தால், அதெந்து என்று அருளாய் - அஞ்சாதே யென்று அருள்செய்யக்கடவாய், எ - று.

க - ரை. திருப்பெருந்துறைக் குருந்தநிழலி லமர்ந்த முதல்வனே. அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள் செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. சோதிமுதலிய மூன்றும் முச்சுடர்களை யுணர்த்தினவெனக் கோடலும் அமையும். அன்றி மிக்க ஒளியை யுடையன் எனக் கொள்ளினு மிழுக்காது. மடந்தை - மடப்பத்தை யுடைய பெண். மடப்பமாவது-தன் கொழுநனுக்கு ஏற்க நடத்தலன்றி மற்றையர்க்கு அவ்வாறு நடக்க அறியாமை. இது பெண்மைக்குணம் நான்கனுள் ஒன்று. அதெந்து - திசைச்சொல். (க)

நிருத்தனே நிமலா நித்தனே நெற்றிக்
 கண்ணனே விண்ணுளோர்பிரானே
ஒருத்தனே யுன்னை யோலமிட்டலறி
 யுலகெலாந்தேடியுங்காணேன்
திருத்தமாம்பொய்கைத்திருப்பெருந்துறையிற்
 செழுமலர்க்குருந்தமேவியசீர்
அருத்தனேயடியேனுதரித்தழைத்தா
 லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. நிருத்தனே - கூத்தனே, நிமலா - நிர்மலனே, நெற்றிக்கண்ணனே - நெற்றிக்கண்ணை யுடையானே, விண் உள்ளோர் பிரானே - தேவர்பிரானே, ஒருத்தனே - ஒப்பற்றவனே, ஓலமிட்டு அலறி - முறையிட்டரற்றி, உலகு எல்லாம் தேடியும் - உலகமுழுதும் தேடியும், உன்னைக் காணேன் - உன்னைக் காண்கிலேன், திருத்தம் ஆம் - திருத்தமாகிய, பொய்கை - தடாகங்கள் சூழ்ந்த, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையென்னும் திருப்பதியில், செழு - செழிய, மலர்க்குருந்தம் மேவிய - மலர்களையுடைய குருந்தமரத்தின்கீழ் எழுந்தருளிய,அருத்தனே- பொருளாயிருப்பவனே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் விரும்பி அழைத்தால், அதெந்துஎன்றருளாய் - அஞ்சாதேயென்று அருள்செய்யக் கடவாய், எ-று.

க - ரை. திருப்பெருந்துறைக் குருந்த நிழலில் அமர்ந்த கடவுளே, உலகெலாந் தேடியும் உன்னைக் காணேன், அடியேன் விரும்பி யழைத்தால், அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. சிவபெருமான் தேவர்களுக்காகக் [illegible]யத்திலும், காளிக்காகத் திருவாலங்காட்டிலும், பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்களுக்காகச் சிதம்பரத்திலும், தடாதகைப்பிராட்டியாரது திருக்கலியாண மகோற்சவத்திற்கு வந்தமேற் சொல்லிய முனிவர்களுக்காக மதுரையிலும் திருநடனஞ்செய்தருளின ராத

லால் "நிருத்தனே" என்றார். மலம் - பாசம். நிமலன் - பாசமில்லாதவன். இறைவன் இயல்பாகவே பாசநீக்க முள்ளானாதலால் "நிமலா" என்றார். திருத்தம் - வேலையின்பூர்த்தி.

**பரமசிவம் அந்தணர் திரு உருவங்கொண்டு திருவாதவூரடிகளை அடிமைகொள்ளத் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் எழுந்தருளிய செய்தி:**—சிவபெருமான் திருவாதவூரடிகளை ஆட்கொள்ளக் கருதி, திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் தொண்ணூற்றொன்பது அந்தணர் தம்மைச் சூழ்ந்து நிற்க, கையில் ஓர் புத்தகம் ஏந்தி வீற்றிருந்தனர். பாண்டியனுக்குக் குதிரைவாங்க அவ்வழியாகச்சென்ற திருவாதவூரடிகள் அம்மர நிழலில் வீற்றிருந்த பெருமானைத் தரிசித்து அவர் திருக்கரத்தில் உள்ள புத்தகத்தை யென்ன புத்தகம் என்று வினவ, அப்பெருமானும் சிவஞானபோதம் என்றனர். அப்பொழுது திருவாதவூரடிகள் பெருமானை அத்தொடர்க்குப் பொருள்வினவ, அப்பெருமான் உபதேசம்பண்ணியருள, ஞானம் விளங்கித் துறவாச்சிரமமடைந்தனர் என்பது. இவருக்குத் தீக்ஷாநாமம் மாணிக்கவாசகர்.

எங்கணாயகனேயென்னுயிர்த்தலைவா
வேலவார்குழலிமாரிருவர்
தங்கணாயகனே தக்கநற்காமன்
றனதுடறழலெழவிழித்த
செங்கணாயகனே திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர்
அங்கணாவடியேனா தரித்தழைத்தா
லதெந்துவேயென் றருளாயே.

ப - ரை. எங்கள் நாயகனே - எம்மிறைவனே, என் உயிர்த் தலைவா - என் பிராணநாதனே, ஏலம் - மயிர்ச்சாந்தணிந்த, வார்- நீண்ட, குழலிமார் - கூந்தலையுடையாராகிய, இருவர் தங்கள் நாயகனே - பார்வதி கங்கையென்னும் இருவருக்கு மணாளனே, தக்க - தகுதியாகிய, நல்காமன் தனது உடல் - சிறந்த மன்மதனது உடம்பானது, தழல் எழ - நெருப்பெழும்படி, விழித்த - திறந்துநோக்கின, செங்கண் - செவந்த நெருப்புக் கண்ணையுடைய, நாயகனே - நாதனே, திருப்பெருந்துறையில்—, செழுமலர்க்குருந்தம் மேவிய—, சீர் - சிறப்புவாய்ந்த, அம்கணா - கிருபைக்கண்ணனே, அடியேன் ஆதரித்துஅழைத்தால்—, அதெந்துஎன் றருளாய்——, எ - று.

க - ரை. திருப்பெருந்துறைக் குருந்தநீழலி லமர்ந்த கரு ணைக்கண்ணனே, அடியேன் விரும்பி யழைத்தால், அஞ்சாதே யென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. அம்-அழகு,இது இங்குக் கருணையைக் குறித்தது, கண்ணுக்கழகு அதுவாதலால். (௩)

கமலநான்முகனுங்கார்முகினிறத்துக்
கண்ணனுநண்ணுதற்கரிய
விமலனேயெமக்குவெளிப்படாயென்ன
வியன்றழல்வெளிப்பட்டவெந்தாய்
திமிலநான்மறைசேர்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர்
அமலனேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. கமலம் - தாமரைமலரி லிருக்கின்ற, நான்முக னும் - பிரமனும், கார்முகில் நிறத்து - கரிய மேகநிறத்தையு டைய, கண்ணனும் - திருமாலும், நண்ணுதற்குஅரிய - பொருந் துதற்கரிய, விமலனே - நின்மலனே, எமக்கு - எங்கள் பொரு ட்டு, வெளிப்படாய் என்ன - வெளிப்படவேண்டுமென்று பிரம விட்டுணுக்கள் வேண்ட, வியன்தழல் வெளிப்பட்ட - பெரியஅழ லுருவமாகி வெளிப்பட்ட, எந்தாய் - எந்தையே, திமிலம் - பே ரொலியையுடைய, நான்மறைசேர் - நான்கு வேதங்கள் சேர்ந்த, திருப்பெருந்துறையில்—, செழுமலர்க்குருந்தம் மேவிய—, சீர்-, அமலனே - மலவிமுக்தனே, அடியேன் ஆதரித்தழைத்தால் அதெ ந்து என்றருளாய்——,எ - று.

க - ரை. பிரமவிட்டுணுக்கள், காண்டற்கரிய விமலனே, எமக்கு வெளிப்பட வேண்டுமென்றலும் நெருப்புருவாய் வெளி ப்பட்ட எந்தையே, வேதமுழக்கம் நீங்காத திருப்பெருந்துறைக் குருந்தநிழற் கடவுளே, அடியேன் உன்னை விரும்பி யழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம். (௪)

துடிகொணேரிடையாள்சுரிகுழன்மடந்தை
துணைமுலைக்கண்கடோய்சுவடு
பொடிகொள்வான்றழலிற்புள்ளிபோலிரண்டு
பொங்கொளிதங்குமார்பினனே [யிற்
செடிகொள்வான்பொழில்சூழ்திருப்பெருந்துறை
செழுமலர்க்குருந்தமேவியசீர்

அடிகளேயடியேனுதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. துடிகொள் - துடியினது உருவத்தைக்கொண்ட, நேர் - நேரான, இடையாள் - இடை யினை யுடையாளாகிய, சுரி குழல் மடந்தை - சுரிந்தகூந்தலையுடைய உமாதேவியின், துணை-தமக்குத்தாமே நிகர்த்திருக்கிற, முலைக்கண்கள் தோய் - முலைக் கண்களழுந்திய, சுவடு - தழும்புகள், பொடிகொள் - சாம்பலைக் கொண்ட, வான் - பெரிய, தழலில் - நெருப்பின்மீதுள்ள, இரண்டு புள்ளிபோல் - இரண்டு புள்ளிகள்போல, பொங்கு ஒளி தங்கும் - மிக்க விளக்கத்துடன் தங்கிய, மார்பினனே - திரு மார்பை யுடையானே, செடிகொள் - புதல்களைக் கொண்ட, வான்பொழில்சூழ் - பெரிய சோலைகள் சூழ்ந்த, திருப்பெருந்துறையில்—, செழுமலர்க்குருந்தம் மேவிய—, சீர்அடிகளே - சிறப் பமைந்த கடவுளே, அடியேன் ஆதரித்தழைத்தால் அதெந்து என் றருளாய்,——எ - று.

க - ரை. உமாதேவியின் தமக்குத்தாமே நிகராகிய முலைக் கண்கள் அழுந்தின சுவடுகள், நீறுபூத்த நெருப்பின்மேலுள்ள இரண்டுபுள்ளிகளை நிகர்த்திருத்தற்கிடமாகிய திருமார்பை யுடை யவனே, திருப்பெருந்துறைக் கடவுளே, அடியேன் விரும்பி யழை த்தால், அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. துடி - இடைசுருங்கு பறை. (உடுக்கை) துணை-இரண்டு எனினுமாம். (௫)

துப்பனே தூயாய் தூயவெண்ணீறு
துதைந்தெழுதுளங்கொளிவயிரத்
தொப்பனேயுன்னையுள்குவார்மனத்தி
னுறுசுவையளிக்குமாரமுதே
செப்பமாமறைசேர்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர்
அப்பனேயடியேனுதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. துப்பனே - பவளம் போல்வானே, தூயாய் - பரி சுத்தனே, தூயவெண்ணீறுதுதைந்து - பரிசுத்தமாகிய திருவெ ண்ணீறு படிந்து, எழு - உண்டாகிய, துளங்கு ஒளி - விளங் குகின்ற வொளியையுடைய, வயிரத்து ஒப்பனே - வயிரத்தை யொப்பவனே, உன்னை உள்குவார் மனத்தின் - உன்னை நினைப்ப

வர்களுடைய மனத்தின்கண், உறுசுவை அளிக்கும்-மிக்க சுவையைத் தருகின்ற, ஆர்அமுதே - அரிய அமிர்தமே, செப்பம் ஆம் - செம்மையாகிய, மறைசேர் - வேதங்கள் தொக்கு முழங்குகின்ற, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையென்னும் திருப்பதியில், செழுமலர்க்குருந்தம் மேவிய - வளப்பமுள்ள மலர்களையுடைய குருந்தமரத்தடியில் எழுந்தருளிய, சீர் - சிறப்பமைந்த, அப்பனே - உபகாரசீலனே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் விரும்பி அழைத்தால், அதெந்து என்று அருளாய், ——எ - று.

க - ரை. திருப்பெருந்துறைக் கடவுளே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென்றருள்செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. இறைவனது திருமேனி இயற்கையில் செந்நிறமும், திருவெண்ணீறு பூசி மறைக்கப்பட்டபோது வெண்ணிறமுமுடையதாதலால், "துப்பனே தூயவெண்ணீறு துதைந்து எழுதுளங்கொளி வயிரத்தொப்பனே" என்றார். நாவிற்குச் சுவையைத் தரும் அமிர்தத்தை விலக்குதற்கு "மனத்தி னுறுசுவையளிக்கு மாரமுதே" என்றார். செப்பம்-ஒருபாற் கோடாமை.()

மெய்யனேவிகிர்தாமேருவேவில்லா
மேவலர்புரங்கண்மூன்றெரித்த
கையனேகாலாற்காலனைக்காய்ந்த
கடுந்தழற்பிழம்பன்னமேனிச்
செய்யனேசெல்வத்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர்
ஐயனேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. மெய்யனே - மெய்யனே, விகிர்தா - பொய்யனே, மேருவேவில்ஆ - மேரு மலையையே வில்லாகக்கொண்டு, மேவலர் புரங்கள் மூன்றுஎரித்த - பகைவருடைய புரங்கள் மூன்றையும் நீறாக்கின, கையனே - திருக்கரத்தையுடையானே, காலால்- காலினால், காலனைக்காய்ந்த - யமனைக்கடிந்த, கடுந்தழல் பிழம்பு அன்ன - கொடிய நெருப்புத்திரள்போன்ற, மேனி - திருமேனியையுடைய, செய்யனே - செம்மையனே, செல்வம் - செல்வம் நிறைந்த, திருப் பெருந்துறையில்—, செழுமலர்க்குருந்தம் மேவிய—, சீர் - மேலான, ஐயனே - தந்தையே, அடியேன் ஆதரித்தழைத்தால் அதெந்து என்றருளாய் ,——எ - று.

க - ரை. உண்மையின்மைகளாயிருப்பவனே, மேருவை வில்லாகக்கொண்டு முப்புரங்களை யழித்தவனே, காலகாலனே, நெருப்புருவனே, திருப்பெருந்துறைக் கடவுளே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. இறைவன் தன் அன்பர்க்கு மெய்யாயும் அல்லாதார்க்குப்பொய்யாயு மிருத்தலால் "மெய்யனே விகிர்தா" என்றார்.

முத்தனேமுதல்வாமுக்கணுமுனிவா
மொட்டறுமலர்பறித்திறைஞ்சிப்
பத்தியாய்நினைந்துபரவுவார்தமக்குப்
பரகதிகொடுத்தருள்செய்யும்
சித்தனேசெல்வத்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர்
அத்தனேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. முத்தனே-இயல்பாகவே பாசவிமுக்தனே, முதல்வா-முதல்வனே, முக்கணு-மூன்றுகண்களையுடையானே, முனிவா - முனிவனே, மொட்டுஅறு-அரும்புத்தன்மை நீங்காத, மலர் பறித்து - மலர்களைக்கொய்து, இறைஞ்சி - (அவற்றைக்கொண்டு அருச்சித்து) வணங்கி, பத்தியாய் நினைந்து - பத்திமையோடு கருதி, பரவுவார் தமக்கு - வழிபடுவோர்க்கு, பரகதி கொடுத்து - மோட்சத்தைத் தந்து, அருள்செய்யும் - அருள்செய்கிற, சித்தனே-ஞானமயனே, செல்வத் திருப்பெருந் துறையில்-செல்வம் நிறைந்த திருப்பெருந்துறை என்னும் திருப்பதியில், செழுமலர்க் குருந்தம்மேவிய-செழிப்பான மலர்களையுடைய குருந்தமரத்தடியிலெழுந்தருளிய, சீர் அத்தனே - சிறப்பையுடைய தந்தையே, அடியேன் ஆதரித்துஅழைத்தால் - அடியேன் விரும்பி அழைத்தால், அதெந்துவே என்று அருளாய்,——எ - று.

க - ரை. முத்தனே, முதல்வனே, மலர்கொண்டருச்சித்து வழிபடுவோர்க்கு பரகதி கொடுக்கும் திருப்பெருந்துறைக் கடவுளே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள் செய்யவேண்டும்என்பதாம்.

வி - ரை. தன்வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பி

லின்பமுடைமை என்னும் எட்டும் இறைவற்குக் குணங்களாகை யால், அவற்றுள் ஒன்ருகிய பாசநீக்கத்தைச் சுட்டி, "முத்தனே" என்ருர். கதி-அடைதற்குரிய இடம். மோக்ஷம் எல்லாரும் மேன் மையாகக்கருதி யடையுமிடமாதலால் பரகதியெனப்பட்டது.(அ)

மருளனேன்மனத்தைமயக்கறநோக்கி
மறுமையோடிம்மையுங்கெடுத்த
பொருளனேபுனிதாபொங்குவாளரவங்
கங்கைநீர்தங்குசெஞ்சடையாய்
தெருளுநான்மறைசேர்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர
அருளனேயடியேனுதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

ப - ரை. மருளனேன் மனத்தை - மருட்சியை யுடையே னது மனத்தை, மயக்கு அறநோக்கி - (அதின்) மயக்கமறப் பார்த்து, மறுமையோடு இம்மையும் கெடுத்த - மறுமையில் ஆசையையும் இம்மையில் ஆசையையும் அழித்த, பொருளனே - மெய்யனே, புனிதா - பரிசுத்தனே, பொங்கு - சீறுகின்ற, வாள் - ஒளிபொருந்திய, அரவம் - பாம்பும், கங்கைநீர் - கங்காநதியும், தங்கு - தங்கிய, செஞ்சடையாய் - செஞ்சடையையுடையவனே, தெருளும் - (ஆன்மாக்கள்) தெளிவடைதற் கேதுவாகிய, நான் மறைசேர் - நான்குவேதங்களும் சேர்ந்து முழங்குகிற, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறை யென்னும் திருப்பதியில், செழுமலர்க்குருந்தம் மேவிய - செழித்த மலர்களையுடைய குருந்தமரத்தின்கீழ் எழுந்தருளிய, சீர்அருளனே - பெருங் கருணையாளனே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் விரும்பி யழைத்தால், அதெந்துவேயென்று அருளாய்-அதென்னவென்று அருள்செய்யக்கடவாய், எ - று.

க - ரை. என் மனமயக்க மறியும்படி நோக்கி, மறுமை யிம்மைகளின் ஆசையைக் கெடுத்த மெய்யனே, பரிசுத்தனே, பாம்பும் கங்கையும் தங்கிய சடையனே, திருப்பெருந்துறைக் கடவுளே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள் செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. நோக்கியென்றது சட்சுதீட்சை செய்தலை. அதாவது பார்த்து அருள்செய்தல். பொருள் - மெய்ம்மை. திருக்குறளில் "பொருள்சேர்புகழ்" என்பதற்கு மெய்ம்மைசேர்ந்த புகழ்

எனப் பரிமேலழகர் கூறிய உரையாலுமறிக. இங்கு மறுமையோடிம்மையுங் கெடுத்தலாவது, சுவர்க்காதி போகங்களிலும் இவ்வுலக வின்பங்களிலும் ஆசையை ஒழித்தல். சிவபெருமான் அரவணிந்த செய்தி.—தாருகாவனத்து முனிவர்களும், அம்முனிவர் மடைந்தையரும் கொண்டிருந்த இறுமாப்பை அடக்கும்பொருட்டுச் சிவபெருமான் பிட்சாடன வேடங்கொண்டு சென்று, அம்முனிவர் பத்தினிகளைக் கற்பழிக்க, அது பொருது அம்முனிவர்கள் சிவபிரானைக் கொல்ல யாகஞ்செய்து அந்த யாகத்திற்பிறந்த அரவை அப்பெருமான்மேல் விடுக்க, அவர் அதை ஆபரணமாக அணிந்து கொண்டனர் என்பது.

திருந்துவார்பொழில்சூழ்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீர்
இருந்தவாறெண்ணியேசறுவினைந்திட்
டென்னுடையெம்பிரானென்றென்
றருந்தவாநினைந்தேயாதரித்தழைத்தா
லலைகடலதனுளேநின்று
பொருந்தவாகயிலைபுகுநெறியிதுகாண்
போதராயென்றருளாயே.

ப - ரை. திருந்து - திருத்தமாகிய, வார்பொழில்சூழ்-பெரியசோலைகள் சூழ்ந்த, திருப்பெருந்துறையில்—, செழுமலர்க்குருந்தம் மேவிய—, சீர் - சிறப்பு, இருந்த ஆறு - இருந்தவிதத்தைப்பற்றி, எண்ணி - ஆலோசித்து, ஏசறு- உன் பிரிவாற்றுமல்) துக்கித்து, இனைந்திட்டு - வருந்தி, என்னுடைய எம்பிரான்-என்னுடையதலைவனே, அருந்தவா - அரிய தவவுருவத்தையுடையவனே, என்று என்று நினைந்து-என்று பலதரஞ் சொல்லித்துதித்து, ஆதரித்து அழைத்தால் - விரும்பியழைத்தால், அலைகடல் அதனுளே நின்று-அலையாநின்ற பிறவிக் கடற்குள்ளே நின்று, பொருந்தவா - என்னை அடையவா, கயிலைபுகும் நெறி இதுகாண் - கைலைக்குச் செல்லும் நெறியாகிய இதனைப்பார், போதராய் என்று அருளாய் - புகுவாய்என் றழைத்தருளவேண்டும், எ - று.

க - ரை. திருப்பெருந்துறையில் நீ யெழுந்தருளியிருந்தவிதத்தை யெண்ணி விரும்பி யழைத்தால், அலையாநின்ற பிறவிக்கடலில் நின்று என்னைக்கூட, கயிலையை யடையும்வழி இது என்றருள் செய்யவேண்டும் என்பதாம். (௬௦)

# திருக்கழுக்குன்றப்பதிகம்.

சற்குருதரிசனம்.

திருக்கழுக்குன்றத்திலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆ சி ரி ய வி ரு த் த ம்.

பிணக்கிலாதபெருந்துறைப்பெரு
மானுன்னுமங்கள்பேசுவார்க்
கிணக்கிலாததோரின்பமேவருந்
துன்பமேதுடைத்தெம்பிரான்
உணக்கிலாததோர்வித்துமேல்விளை
யாமலென்வினையொத்தபின்
கணக்கிலாத்திருக்கோலநீவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

ப - ரை. பிணக்கு இல்லாத - மாறுபாடில்லாத, பெருந்துறைப் பெருமான் - திருப்பெருந்துறைப் பெருமானே, உன் நாமங்கள் பேசுவார்க்கு - உன் திருநாமங்களை யுச்சரிப்பவர்க்கு, இணக்கு இல்லாதது - ஒப்பில்லாததாகிய, ஓர் இன்பமே - ஒரு சுகரூபமே, வரும் - மேல்வரக்கடவதாகிய, துன்பம் துடைத்து - துக்கங்களைக் கெடுத்து, எம்பிரான் - எம்பிரானே, உணக்கு இல்லாதது - வற்றுதலில்லாததாகிய, ஓர் - ஒப்பற்ற, வித்து - பிறவி விதையானது, மேல்விளையாமல் -இனிமேல் முளையாதவண்ணம், என் வினை ஒத்த பின் - என்னிருவினைக ளொத்துவந்தபின்னே, நீ கழுக்குன்றிலேவந்து - நீ திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி, கணக்கு இல்லா - அளவற்ற, திருக்கோலம் காட்டினாய் - திருக்கோலங்களைக் காட்டியருளினாய், எ - று.

க - ரை. பெருந்துறைப்பெருமானே, உன் திருநாமங்களைப் புகழ்ந்து பேசுவார்க்கு ஒப்பற்ற ஆநந்தமே, என் இருவினையொத்தபிறகு, என் பிறவி வித்து இனிமேல் முளையாதபடி, நீ திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய், உன் பெருங்கருணை யிருந்தவாறென் என்பதாம்.

வி - ரை. "பிணக்கிலாத பெருந்துறை" என்றது அவ்விடத்துள்ளார் பிணங்குங் குணமுடையரல்லர் என்பதைக் குறித்தது. இருவினையொப்பு - நல்வினை தீவினைகளின் பயனாகிய சுகதுக்கங்களைச் சமமாகப் பாவித்தலாகிய நிலை. (௪)

பிட்டுநேர்படமண்சுமந்த
        பெருந்துறைப்பெரும்பித்தனே
சட்டநேர்படவந்திலாத
        சழக்கனேனுனைச்சார்ந்திலேன்
சிட்டனேசிவலோகனேசிறு
        நாயினுங்கடையாயவெம்
கட்டனேனையுமாட்கொள்வான்வந்து
        காட்டினாய்கழுக்குன்றிலே.

ப - ரை. பிட்டுநேர்பட - பிட்டுக் கிடைக்கும்படி, மண்சுமந்த - மண் சுமந்தருளின, பெருந்துறை - திருப்பெருந்துறையிலுள்ள, பெரும் பித்தனே - பெரிய பிச்சனே, சட்டம் நேர்பட வந்திலாத - உனது கட்டளையாகிய வேதாகம முறைமைக் கிணங்கவராத, சழக்கனேன் - குற்றத்தையுடைய நான், உன்னைச் சார்ந்திலேன் - உன்னை யடைந்திலேன், சிட்டனே - பெரியோனே, சிவலோகனே - சிவலோகத்தை யுடையானே, சிறு நாயினும் கடைஆய - சிறு நாயைப்பார்க்கினும் கடைப்பட்ட, வெம்-குரூரமாகிய, கட்டனேனையும் - துன்பங்களை யுடையேனையும், ஆட்கொள்வான் - ஆட்கொள்ளும் பொருட்டு, கழுக்குன்றிலே வந்து காட்டினாய் - திருக்கழுக்குன்றத்தின் கண்ணே வந்து உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய், எ - று.

க - ரை. பிட்டுக்கு மண்சுமந்த பெருந்துறைப்பெருமானே, உன் கட்டளைக் கிணங்கிவராத குற்றத்தையுடைய நான் உன்னை யடைந்திலேன், ஆயினும், நாயினுங் கடைப்பட்ட என்னையும் ஆட்கொள்ளும்பொருட்டுத் திருக்கழுக்குன்றில் எழுந்தருளி உன் திருக்கோலத்தைக் காட்டி யருளினாய், உன் பெருங்கருணை யிருந்தவாறென்னென்பதாம்.

வி - ரை. சிற்றுண்டியாகிய பிட்டுக்கு மண் சுமந்ததனால் "பித்தன்" என்றார். சட்டம் - கட்டளை. (அது வேத சிவாகமங்கள்.) கட்டம் - துன்பம். இது கஷ்டம் என்னும் வடமொழித் திரிபு. (௨)

மலங்கினேன்கண்ணினீரைமாற்றி
மலங்கெடுத்தபெருந்துறை
விலங்கினேன்வினைக்கேடனேனினி
மேல்விளைவதறிந்திலேன்
இலங்குகின்றநின்சேவடிக
ளிரண்டும்வைப்பிடமின்றியே
கலங்கினேன்கலங்காமலேவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

ப - ரை. மலங்கினேன் - சலித்தேனது, கண்ணில் நீரை மாற்றி - கண்ணீரைத் துடைத்து, மலம்கெடுத்த - எனது மும்மல சம்பந்தத்தைக் கெடுத்த, பெருந்துறை - திருப்பெருந்துறையை, விலங்கினேன் - விட்டு நீங்கினேன், வினைக்கேடனேன் - தீவினையை யுடையேன், இனிமேல்விளைவது அறிந்திலேன்-இனிமேல் உண்டாகும் காரியத்தை யுணர்ந்திலேன், இலங்குகின்ற - விளங்குகின்ற, நின்சேவடிகள் இரண்டும் - உன் திருவடிகளிரண்டையும், வைப்பு இடம் இன்றியே - வைத்தற்குரிய பரிசுத்தமான இடமில்லாமல, கலங்கினேன் - கலக்க மடைந்தேன், கலங்காமலே - அப்படி நான் கலங்காதிருக்கும் வண்ணமாகவே, கழுக்குன்றிலே வந்து - திருக்கழுக்குன்றி லெழுந்தருளி, காட்டினாய்- உன் திருக்கோலத்தைக் காட்டி யருளினாய், எ - று.

க - ரை. என் கண்ணீர் துடைத்து என் மலத்தை நாசம் பண்ணின திருப்பெருந்துறையை விட்டு நீங்கினேன், இனிமேல் விளையுங் காரியத்தை யறிந்திலேன், உன்திருவடி யிரண்டையும் வைக்கப் பரிசுத்தமான இடமில்லாமல் கலங்கினேன், நான்கலங்காதபடி நீ திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய், உன் பெருங்கருணை யிருந்தவாறென் என்பதாம்.

வி - ரை. நின் திருவடி வைத்தற்குரிய பரிசுத்தமான மனமுடையே னல்லேனாய்க் கலங்கினேன் என்றற்கு, "நின்சேவடிகளிரண்டும் வைப்பிடமின்றியே கலங்கினேன்" என்றார். (௫)

பூணொணாததொரன்புபூண்டு
பொருந்திநாடொறும்போற்றவும்
நாணொணாததொர்நாணமெய்தி
நடுக்கடலுளழுந்திநான்

பேணுதபெருந்துறைப்பெருந்
    தோணிபற்றியுகைத்தலும்
காணுத்திருக்கோலநீவந்து
    காட்டினுய்கழுக்குன்றிலே.

ப - ரை. (உன்அன்பர்) பூணுதது-பிறர்செய்யவொண்ணுததாகிய, ஓர்அன்பு பூண்டு - ஒப்பற்ற அன்பைச்செய்து, நாள்தொறும் - தினந்தோறும், பொருந்தி போற்றவும் - பொருந்தி வணங்கவும், (அதைக்கண்டு) நான்-அடியேன், நாணுதது ஓர் நாணம் எய்தி-நாணவொண்ணுததாகிய மிக்க நாணத்தை யடைந்து, நடுக்கடலுள் அழுந்தி-துன்பக் கடல்நடுவில் முழுகி, பேணுத-விரும்பவொண்ணுத, பெருந்துறை - திருப்பெருந்துறையாகிய, பெருந்தோணிபற்றி உகைத்தலும்-பெரிய தெப்பத்தைப்பற்றிச்செலுத்துதலும், நீ கழுக்குன்றிலே வந்து—, காணுு-நான் காணவொண்ணுத, திருக்கோலம் காட்டினுய்——, எ - று.

க - ரை. உன் அன்பர் உன்னிடத்திற் பேரன்புபூண்டு வணங்கக்கண்டு, நான் மிக்க நாணமடைந்து, துன்பக்கடலி லழுந்தி, நான் விரும்பக்கூடாத திருப்பெருந்துறையாகிய பெருந் தெப்பத்தைப்பற்றிச் செலுத்தலும், நீ திருக்கழுக்குன்றிலேயெழுந்தருளி, காணவொண்ணுத உன் திருக்கோலத்தைக்காட்டி யருளினுய், உன் பெருங்கருணை யிருந்தவாறென் என்பதாம்.

வி - ரை. பெருந்துறையை நான் விரும்புந்தகுதி யில்லேன் என்றற்கு "பேணுத பெருந்துறை" என்றும், உன் திருக்கோலத்தை நான் காணுந்தகுதி யில்லேன் என்றற்கு "காணுத் திருக்கோலம்" என்றும் கூறினுர். (௬)

கோலமேனிவராகமேகுண
    மாம்பெருந்துறைக்கொண்டலே
சீலமேதுமறிந்திலாதவென்
    சிந்தைவைத்தசிகாமணி
ஞாலமேகரியாகநானுனை
    நச்சிநச்சிடவந்திடும்
காலமேயுனையோதநீவந்து
    காட்டினுய்கழுக்குன்றிலே.

ப - ரை. கோலம் - அழகானது, மேல்சிவர் - மேலோங்கிய, ஆகமே - திருவுருவமுடையானே, குணம் ஆம் - மங்களகுணங்களுண்டாதற்குரிய, பெருந்துறை - திருப்பெருந்துறையி லுள்ள,

கொண்டலே - மேகமே, சீலம் ஏதும் அறிந்திலாத - ஒழுக்கம் சிறிது முணர்ந்திலாத, என் சிந்தைவைத்த - என் மனத்தில் வைக்கப்பட்ட, சிகாமணி - சூளாமணியே, ஞாலமேகரியாக - உலகமே சாக்ஷியாக, நான் உன்னை நச்சிநச்சிட - நான் உன்னை மிகவும் விரும்ப, வந்திடும் - வந்தருள்செய்கிற, காலமே - கால ரூபமாயுள்ளவனே, உன்னைஓத - உன்னைப் புகழ, நீ கழுக்குன்றி லேவந்து காட்டினாய்——, எ - று.

க - ரை. அழகிய திருவுருவமுடையானே, திருப்பெருந்துறைக் கொண்டலே, சற்றும் நல்லொழுக்கத்தை யறியாத என் மனத்தில் வைக்கப்பட்டிருக்கிற சிகாமணியே, உலகமே சாக்ஷியாக நான் உன்னை மிகவும் விரும்பவந் தருள்செய்கிற காலரூபியே, உன்னைப் புகழும்படி திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி, எனக்கு உன் திருக்கோலத்தைக்காட்டி யருளினாய், உன் பெருங் கருணை யிருந்தவாறென் என்பதாம்.

வி - ரை. கோலம் மேனிவராகமே என்பதற்கு அழகிய திருவுருவத்தையுடைய மலையேஎன் றுரைத்தலுமாம். (௩)

பேதமில்லதொர்கற்பளித்த
பெருந்துறைப்பெருவெள்ளமே
ஏதமேபலபேசநீயெனை
யேதிலார்முனமென்செய்தாய்
சாதல்சாதல்பொல்லாமையற்ற
தனிச்சரண்சரணாமெனக்
காதலாலுனையோதநீவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

ப - ரை. பேதம் இல்லது - பேதமற்றதாகிய, ஓர் கற்பு அளித்த - ஒரு கல்வியை எனக்கு அருள்செய்த, பெருந்துறை - திருப்பெருந்துறையிலுள்ள, பெருவெள்ளமே - பெரிய (இன்ப) வெள்ளமே, பலஏதம்பேச - பல தீமைகளைப் பேசும்படி, என்னை - என்னை, ஏதிலார்முனம் - அயலார்முன்னே, நீ என்செய்தாய் - நீ யென்னகாரியஞ் செய்தனை, சாதல் சாதல் - அழிவின்மையை யுடைய, பொல்லாமையற்ற - தீங்கற்ற, தனிச்சரண் - ஒப்பற்ற உன் திருவடிகளே, சரண்ஆம் என - எனக்குப் புகலிடமாமென்று, காதலால் உன்னைஓத-ஆசையால் உன்னைப் புகழ, நீ கழுக்குன்றிலேவந்து காட்டினாய்——, எ - று.

க - ரை. வேறுபடுதலில்லாத ஒப்பற்ற கல்வியை யருள்செய்த திருப்பெருந்துறை இன்பப்பெருக்கே, பல தீமைகள் பேசும்

படி என்னை அயலார்முன்னே நீ யென்னகாரியஞ் செய்துவைத்தாய். முடிவற்றனவும், தீங்கற்றனவுமாகிய உன் திருவடிகளே எனக்குப் புகலிடமெனக் கருதி ஆசையோடு உன்னைப் புகழும் வண்ணம் நீ திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி உன் திருக்கோலத்தைக்காட்டி யருளினாய், உன் பெருங்கருணை யிருந்தவாறென் என்பதாம்.

வி - ரை. "பேதமற்றதொர் கல்வி" என்றது இறைவனை அறிதற்குரிய வீட்டுநூற்கல்வியை. (௬)

இயக்கிமாரறுபத்துநால்வரை
யெண்குணஞ்செய்தவீசனே*
மயக்கமாயதொர்மும்மலப்பழ
வல்வினைக்குளழுந்தவும்
துயக்கறுத்தெனையாண்டுகொண்டுநின்
றூமலர்க்கழறந்தெனைக்
கயக்கவைத்தடியார்முனேவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

ப - ரை. இயக்கிமார் அறுபத்து நால்வரை எண்குணம் செய்த ஈசனே—, மயக்கம் ஆயது - மயக்கமானதாகிய, ஓர் - ஒப்பற்ற, மும்மலம் - மும்மல சம்பந்தமாகிய, பழவல் வினைக்குள் - பழமையாகிய வலிய வினைக்கடற்குள், அழுந்தவும் - நான் மூழ்கவும், துயக்கு அறுத்து - என் தளர்ச்சி நீக்கி, என்னை ஆண்டு கொண்டு - என்னை யாண்டுகொண்டருளி, நின் - உனது, தூ - பரிசுத்தமாகிய, மலர்க்கழல் - தாமரை மலர்போலுந்திருவடிகளை, தந்து - கொடுத்து, என்னைக் கயக்கவைத்து - என்னைச் சிறக்கவைத்து, அடியார் முன்னே - அடியார்களுக் கெதிரில், கழுக்குன்றிலேவந்து காட்டினாய்——, எ - று.

க - ரை. இயக்கிமார் அறுபத்து நால்வரை எண்குணஞ் செய்த ஈசனே, மயக்கத்துக் கேதுவாகிய மும்மல சம்பந்தமாகியவல்வினைக் கடலில் அழுந்தாநிற்கவும் என் தளர்ச்சியையொழித்து, என்னை யாண்டுகொண்டருளி, உன் திருவடிகளைத் தந்து என்னைச் சோரவைத்து, அடியார்களுக்கெதிரில் திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி, உன் திருக்கோலத்தைக்காட்டி யருளினாய், உன் பெருங்கருணை யிருந்தவாறென் என்பதாம். (௭)

---

* இயக்கிமார் அறுபத்துநால்வரை எண்குணம்செய்தவீசனே. இத்தொடர்க்குப் பொருள் விளங்கவில்லை.

# கண்டபத்து.

நிருத்ததரிசனம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கொச்சகக்கலிப்பா.

இந்திரியவயமயங்கியிறப்பதற்கேகாரணமாய்
அந்தரமேதிரிந்துபோயருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கியெனையாண்ட
அந்தமிலாவானந்தமணிகொடில்லைகண்டேனே.

ப - ரை. இந்திரியவயம் - பஞ்சேந்திரிய வசத்தில் சிக்கி, மயங்கி - மயக்கமடைந்து, இறப்பதற்கே காரணமாய் - இறந்தொழிதற்கே ஹேதுவாகி, அந்தரமே திரிந்துபோய்-வேறுபாட்டு நடையோடுகூடியே திரிந்துசென்று, அருநரகில் வீழ்வேற்கு - அரியநரகத்தில் வீழ்கின்ற எனக்கு, சிந்தைதனைத் தெளிவித்து - மனதைத் தெளிவித்து, சிவம்ஆக்கி - சிவமயமாக்கி, என்னை ஆண்ட - என்னையாண்டருளின, அந்தம் இல்லா - முடிவில்லாத, ஆனந்தம் - இன்பரூபத்தை, அணிகொள் தில்லைகண்டேன் - அழகைக்கொண்ட தில்லைநகரிற் கண்டுகொண்டேன், எ - று.

க - ரை. இந்திரிய வசத்திற் சிக்கிமயங்கி இறந்து படுதற்கே ஏதுவாகி வேறுபட்டே திரிந்து சென்று சகித்தற்கரிய நரகத்தில் வீழ்கின்ற எனக்கு, மனந்தெளியச்செய்து, சிவமயமாக்கி என்னை யாண்டருளின முடிவற்ற இன்பவடிவைத் தில்லைநகரில் கண்டு கொண்டேன் என்பதாம். (க)

வினைப்பிறவியென்கின்றவேதனையிலகப்பட்டுத்
தனைச்சிறிதுநினையாதேதளர்வெய்திக்கிடப்பேனை [யை
எனைப்பெரிதுமாட்கொண்டென்பிறப்பறுத்தவிணையிலி
அனைத்துலகுந்தொழுந்தில்லையம்பலத்தேகண்டேனே.

ப - ரை. வினைப்பிறவியென்கின்ற - வினையினாலுண்டாகின்ற பிறப்பென்கிற, வேதனையில் அகப்பட்டு - துன்பத்திற் சிக்கி, தனை - தன்னை, சிறிதும் நினையாதே - சிறிதும் நினையா

மலே, தளர்வு எய்தி கிடப்பேனை - சோர்வடைந்து கிடக்கிற என்னை, எனை-இது என்ன வியப்பு, பெரிதும் ஆட்கொண்டு-மிக வும் ஆட்கொண்டருளி, என் பிறப்பு அறுத்த - என் பிறவித்தளை யைச்சேதித்த, இணையிலியை - ஒப்பற்றவனை, அனைத்து உலகும் தொழும் - எல்லாவுலகும் வணங்குதற்கிடமாகிய, தில்லையம்பல த்தேகண்டேன் - தில்லை மன்றுட்கண்டுகொண்டேன், எ-று.

க - ரை. பிறவித்துன்பத்திலகப்பட்டுத் தன்னைச் சற்றும் நினையாமல்தளர்வடைந்து கிடக்கின்ற என்னைஆட்கொண்டு என் பிறவியை யொழித்த சிவபெருமானை, எல்லாவுலகும் வந்து வண ங்குகின்ற தில்லையம்பலத்தில் கண்டுகொண்டேன் என்பதாம்.

வி - ரை. பிறவிக்குக்காரணம் வினையாதலால் "வினைப்பி றவி" என்றார், தன்னையென்றது சிவபெருமானை. இணையிலி - ஒப்பில்லாதவன். கிடப்பேனை எனை என்பதற்கு கிடப்பேனாகிய என்னை என்றுரைத்தலும் பொருந்தும், இப்பொருட்கு ஐ சாரியை. (உ)

உருத்தெரியாக்காலத்தேயுள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தியூன்புக்குக்கருணையினாலாண்டுகொண்ட
திருத்துருத்திமேயானைத்தித்திக்குஞ்சிவபதத்தை
அருத்தியினாயடியேனணிகொடில்லைகண்டேனே.

ப - ரை. கருத்து இருத்தி - என்னிடத்து அன்புவைத்து, உருத்தெரியாக்காலத்தே - உருவறியாத காலத்திற்றானே, உள் புகுந்து - என் உணர்வினுள்ளே பிரவேசித்து, என் உள்ளம் மன்னி - உயிரினுள்ளே நிலைபெற்று, ஊன்புக்கு - என் உடம்பி ற்புகுந்து, கருணையினால் ஆண்டு கொண்ட - கிருபையினால் ஆண்டுகொண்டருளின, திருத்துருத்திமேயானை - திருத்துருத்தி யிற் பொருந்தி யிருப்பவனை, தித்திக்கும் சிவபதத்தை - இனிக் கின்ற சிவபதவியை, அருத்தியினால் - ஆசையினால், நாயடியேன் - நாய்போலு மடியனேன், அணிகொள் தில்லை கண்டேன். எ - று.

க - ரை. உருவறியாக் காலத்திலே என் மனத்திற் புகுந் து நிலைபெற்றிருந்து தன் கருணையினால் என்னை யாண்டுகொண் டருளின சிவபெருமானை ஆசையால் தில்லை நகரில் கண்டுகொ ண்டேன் என்பதாம்.

வி - ரை. உருத்தெரியாக் காலம் - மிக்க இளமைப்பருவம். அன்றி சிவ சொரூபத்தை யறியாதகாலம் எனினுமாம். திருத்துரு த்தி - ஓர் திருப்பதி. (௩)

கல்லாதபுல்லறிவிற்கடைப்பட்டநாயேனை
வல்லாளனாய்வந்துவனப்பெய்திபிருக்கும்வண்ணம்
பல்லோருங்காணவென்றன்பசுபாசமறுத்தானை
எல்லோருமிறைஞ்சுதில்லையம்பலத்தேகண்டேனே.

ப - ரை. கல்லாத புல் அறிவின் - கற்காத அற்பவுணர்வை யுடைமையால், கடைபட்ட - கடையாகிய, நாயேனை - நாயினேனை, வல்லாளனாய்வந்து - வலியனாய்வந்து, வனப்பு எய்தியிருக்கும் வண்ணம் - நான் அழகையடைந் திருக்குமாறு, பல்லோரும்காண - பலரும் காணும்படி, என்றன் பசுபாசம் அறுத்தானை - எனது பசுபாச சம்பந்தங்களைச் சேதித்தவனை, எல்லோரும் இறைஞ்சு - யாவரும்வணங்குகின்ற, தில்லையம்பலத்தே கண்டேன். எ-று.

க - ரை. கல்லாத புல்லறிவால் கடைப்பட்ட நாயேனை, எல்லாம் வல்லவனாய்வந்து, நான் அழகுபெற்று வாழும்வண்ணம் எல்லாருங்காண என் பசுபாசங்களை யறுத்தருளின சிவபெருமானை, எல்லாரும் வந்து வணங்குகின்ற தில்லை யம்பலத்தில் கண்டுகொண்டேன் என்பதாம்.

வி - ரை. வல்லாளனாய் வந்து என்பதற்குத் தானேவலிய வந்து என்றுரைத்தலுமாம். பசு - சீவன், பாசம் - சிவசீவர்களுக்கிடையே தோன்றி சீவனுக்குச் சிவனைத் தெரியாது மறைப்பதோரிருள். பதி, பசு, பாசம், என்பவற்றுள் பதி - இறைவன், பசு - ஆன்மா, பாசம், இருள். (௪)

சாதிகுலம்பிறப்பென்னுஞ்சுழிப்பட்டுத்தடுமாறும்
ஆதமிலிநாயேனையல்லலறுத்தாட்கொண்டு
பேதைகுணம்பிறருருவம்யானெனதென்னுரைமாய்த்துக்
கோதிலமுதானானைக்குலாவுதில்லைகண்டேனே.

ப - ரை. சாதிகுலம் பிறப்பு என்னும் - சாதிகுலம் குடிப்பிறப்பு என்கிற, சுழிப்பட்டு - சுழியிலகப்பட்டு, தடுமாறும் - தடுமாறு நின்ற, ஆதம் இலி - ஆதரவற்றவனாகிய, நாயேனை - நாயினேனை, அல்லல் அறுத்து ஆட்கொண்டு-துன்பத்தைளையைச்சேதித்து ஆட்கொண்டருளி, பேதை குணம்-பேதைமைக்குணத்தையும், பிறர்உருவம் - பிறதேவருடைய ரூபதரிசனத்தையும், யான் எனது என் - யான் எனது என்கிற, உரை - சொல்லையும், மாய்த்து - கெடுத்து, கோது இல் - குற்றமில்லாத, அமுது ஆனானை- அமிர்தமாயினவனை, குலாவு - விளங்குகின்ற, தில்லைகண்டேன். எ - று.

க - ரை. சாதிகுலம் பிறப்பென்கிற சுழியிலகப்பட்டுத் தடுமாறுகின்றஆதரவற்றஅடியேனைத் துன்பமொழித்தாட்கொண்டு, பேதைமை முதலியவற்றைக் கெடுத்து, எனக்கு அமுதம் போலினிதாயிருப்பவனைத் தில்லைநகரிற்கண்டு கொண்டேனென்பதாம்.

வி - ரை. சாதி - குலத்தின் உட்பிரிவு, குலம்-வருணம். ()

பிறவிதனையறமாற்றிப்பிணிமூப்பென்றிவையிரண்டும்
உறவினொடுமொழியச்சென்றுலகுடையவொருமுதலைச்
செறிபொழில்சூழ்தில்லைநகர்த்திருச்சிற்றம்பலமன்னி
மறையவரும்வானவரும்வணங்கிடநான்கண்டேனே.

ப - ரை. பிறவிதனை - பிறவியை, அறமாற்றி - முற்றக்கெடுத்து, பிணி மூப்பு என்ற - பிணி முதுமையென்று சொல்லப்பட்ட, இவை யிரண்டும் - இவ்விரண்டும், உறவினொடும் ஒழிய-சுற்றத்தோடு மொழியுமாறு, சென்று - போய், உலகு உடைய ஒரு முதலை - உலகமானது தனக்கென்றுடைய ஒரு முதற்பொருளை, செறிபொழில்சூழ் - நெருங்கிய பொழில்சூழ்ந்த, தில்லைநகர் - தில்லை நகரின் கண்ணதாகிய, திருச்சிற்றம்பலம்மன்னி - திருச்சிற்றம்பலத்தை யடைந்து, மறையவரும் - வேதியரும், வானவரும் - தேவர்களும், வணங்கிட - தொழாநிற்க, நான் கண்டேன் ——, எ - று.

க - ரை. பிறவியைநீக்கிப் பிணி மூப்பு என்பன அற்றொழியும்வண்ணம் போய், எல்லாவுலகங்களையுமுடைய வொரு முதற்பொருளை, தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் வேதியரும் தேவரும் வணங்காநிற்க நான் கண்டுகொண்டேன் என்பதாம். (௬)

பத்திமையும்பரிசுமிலாப்பசுபாசமறுத்தருளிப்
பித்தனிவனெனவென்னையாக்குவித்துப்பேராமே
சித்தமெனுந்திண்கயிற்றாற்றிருப்பாதங்கட்டுவித்த
வித்தகனார்விளையாடல்விளங்குதில்லைகண்டேனே.

ப - ரை. பசுபாசம் அறுத்தருளி - என் பசுபாசங்களைச் சேதித்தருளி, பத்திமையும் - பத்தியும், பரிசும் - நற்குணமும், இல்லா - இல்லாத, பித்தன் இவன் என - பித்தன் இவனென்று கண்டோர் சொல்லுமாறு, என்னை ஆக்குவித்து - என்னைச்செய்து, பேராமே - அசையாமல், சித்தம் எனும்-என் மனமென்கிற, திண்கயிற்றால் - வலியகயிற்றினால், திருப்பாதம் கட்டுவித்த - தன் திருவடியைக் கட்டுவித்தருளின, வித்தகனார் விளையாடல் - ஞானமயனாரது திருவிளையாட்டைஉடை, விளங்கு - பிரகாசியாநின்ற, தில்லைகண்டேன்——,எ - று.

க - ரை. பத்திமைமுதலியவை யில்லாத என் பசுபாசங்களைச் சேதித்து, என்னைக்கண்டோர் பித்தனென்று சொல்லும்படி செய்து, அசையாமல் என் மனமென்கிறவலிய கயிற்றால் தன் திருவடியைக் கட்டுவித்தருளின சிவபெருமானது திருவிளையாடலைத் தில்லைநகரில் கண்டுகொண்டேன் என்பதாம்.

வி - ரை. தில்லையில் பொற்சபை மணிச்சபை சிற்சபை முதலியவை உண்மையால் "விளங்குதில்லை" என்றார். (எ)

அளவிலாப்பாவகத்தாலமுக்குண்டிங்கறிவின்றி
விளைவொன்றுமறியாதேவெறுவியனாய்க்கிடப்பேனுக்
களவிலாவானந்தமளித்தென்னையாண்டானைக்
களவிலாவானவருந்தொழுந்தில்லைகண்டேனே

ப - ரை. அளவுஇல்லா-அளவற்ற, பாவகத்தால் - எண்ணங்களால், அமுக்குண்டு - அழுத்தப்பட்டு, இங்குஅறிவுஇன்றி - இவ்விடத்தில்அறிவில்லாமல், விளைவுஒன்றும் அறியாதே - மேல்விளைவொன்று மறியாமலே, வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு-பயனற்றவனாய்க் கிடப்பவனாகியஎனக்கு, அளவுஇல்லா ஆனந்தம்அளித்து-எல்லையில்லாத இன்பத்தைத்தந்து, என்னை ஆண்டானை - என்னையாண்டருளினவனை, களவுஇல்லாவானவரும் தொழும்-கபடமற்ற தேவர்களும் வணங்கும்படியான, தில்லை கண்டேன்——,எ - று.

க - ரை. அளவில்லாத எண்ணங்கள் கொண்டு இவ்வுலகத்தில், மேல்விளைவையறியாமல் வீணனாய்க்கிடப்பவனாகிய எனக்கு, எல்லை யில்லாத இன்பத்தைக் கொடுத்து என்னை ஆண்டருளினவனைத் தில்லை நகரில் கண்டுகொண்டேன் என்பதாம். (அ)

பாங்கினொடுபரிசொன்றுமறியாதநாயேனை
ஓங்கியுளத்தொளிவளரவுலப்பிலாவன்பருளி
வாங்கிவினைமலமறுத்துவான்கருணைதந்தானை
நான்குமறைபயிறில்லையம்பலத்தேகண்டேனே.

ப - ரை. பாங்கினொடு பரிசு ஒன்றும் அறியாத நாயேனை - பாங்கு பரிசு என்பவைகள் சிறிது மறியாத நாயினேற்கு, உள்ளத்து - மனத்தின்கண், ஒளி - ஒளியானது, ஓங்கிவளர - ஓங்கியுயர, உலப்பு இல்லா அன்பு அருளி - கெடுதியில்லாத அன்பைத்தந்து, வினைவாங்கி - வினைகளை என்னிடத்து நின்றும் கழித்து, மலம் அறுத்து - மலத்தடையைச் சேதித்து, வான்கருணை தந்தானை - தனது மேலாகிய கிருபையைத் தந்தருளினவனை, நான்கு மறைபயில் - நான்கு வேதங்களும் வழங்குகின்ற, தில்லையம்பலத்தே கண்டேன்——,எ - று.

க - ரை. பாங்கு முதலியவற்றை யறியாத நாயினேற்கு மனத்தில் ஒளிவளரும்படி அழியாத அன்பினையருள் செய்து, என் வினையைக்கெடுத்து, மலத்தைச் சேதித்துத் தன்பெருங் கருணையைத் தந்தவனை, நால்வேத முழக்கமுறுத தில்லையம்பலத்தில் கண்டு கொண்டேன் என்பதாம். (கூ)

பூதங்களைந் தாகிப்புலனாகிப்பொருளாகிப்
பேதங்களனைத்துமாய்ப்பேதமிலாப்பெருமையனைக்
கேதங்கள்கெடுத்தாண்டகிளரொளியைமரகதத்தை
வேதங்கடொழுதேத்தும்விளங்குதில்லைகண்டேனே.

ப - ரை. ஐந்து பூதங்கள் ஆகி - பஞ்சபூதங்களாகி, புலன் ஆகி - ஐம்புலன்களாகி, பொருள் ஆகி - உலகிலுள்ள எல்லாப் பொருள்களுமாகி, பேதங்கள் அனைத்தும் ஆய் - அப்பொருள்களின் வேறுபாடுகளெல்லாமாகி, பேதம் இல்லா பெருமையனை - தான் வேறுபடுதலில்லாத பெருமையையுடையானை, கேதங்கள் கெடுத்தாண்ட - என் பிறவித் துன்பங்களைக் கெடுத்து என்னை யாண்டருளின, கிளர் ஒளியை - மிக்க ஒளியை, மரகதத்தை - மரகதமணியை, வேதங்கள் தொழுது ஏத்தும் - வேதங்கள் வணங்கித் துதிக்கின்ற, விளங்கு-பிரகாசியாநின்ற, தில்லை கண்டேன் - சிதம்பரத்தில் தரிசித்தேன்,——எ - று.

க - ரை. பஞ்சபூதங்கள் முதலாகிய எல்லாப் பொருள்களுமாய் நின்ற பெரியோனை, என் துன்பமொழித் தாண்டருளின ஒளியுருவனை, மரகதமணியை வேதங்கள் வணங்கித் துதிக்கின்ற தில்லைநகரில் கண்டு கொண்டேன் என்பதாம்.

வி - ரை. பொருள்களாவன உயர்திணை அஃறிணை என்னும் இருவகைப் பொருள்கள். வேறுபாடு - ஒவ்வொன்றிலுமுள்ள பிரிவு. பிறவித்துன்பங்கள் - ஆதியான் மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என மூவகை. இவை முறையே தன்னாலும் பிறவுயிர்களாலும் தெய்வத்தாலு முண்டாவன.

இறைவன் இன்றி எப்பொருளும் இல்லை என்றற்கு "பூதங்களைந் தாகி" முதலியவாகக் கூறினார். பூதங்கள் ஐந்தாவன:— நிலம், நீர், தீ, காற்று, வான் என்பன. புலன் ஐந்தாவன:— சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. இவ்வைம்புலன்களும் முறையே வாய், கண், மெய், செவி, மூக்கு என்னும் ஐம்பொறிகளின் விடயங்களாம். இறைவன் பூதங்கள் முதலிய பேத வஸ்துக்களாயிருந்தும், தான் பேதப்படாமல் இருத்தலால் "பேதமிலாப் பெருமையன்" என்றார். பச்சை நிறமுடைய பார்வதியை வாமபாகத்திலுடையவனாதலால் "மரகதத்தை" என்றார். வாமபாகம் - இடப்பாகம். (௧0)

# பிரார்த்தனைப்பத்து.

சதாமுத்தி.

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

கலந்துநின்னடியாரோடன்று
வாளாகளித்திருந்தேன்
புலர்ந்துபோனகாலங்கள்
புகுந்துநின்றதிடர்பின்னாள்
உலர்ந்துபோனேனுடையானே
யுலவாவின்பச்சுடர்காண்பான்
அலந்துபோனேனருள்செய்யா
யார்வங்கூரவடியேற்கே.

ப - ரை. அன்று - அந்நாளில், நின் அடியாரோடு கலந்து - உன்னடியவருடன் கூடி, வாளாகளித்து இருந்தேன் - சும்மா களிப்படைந் திருந்தேன், காலங்கள் புலர்ந்துபோன - காலங்களெல்லாம் கழிந்தேபோயின, பின் நாள் - பிற்காலத்தில், இடர் - துன்பம், புகுந்து நின்றது - புகுந்து நிலைத்திருந்தது, உலர்ந்து போனேன் - வாடிப்போனேன், உடையானே - உடையவனே, உலவா இன்பம் - கெடாத இன்பத்தைத் தருகிற, சுடர்காண்பான் - உன் சோதியைக் காணும்பொருட்டு, அலந்துபோனேன் - துன்பப்பட் டொழிந்தேன், அடியேற்கு - அடியேனுக்கு, ஆர்வம் கூர - உன்னிடத் தன்பு மிகும்படி, அருள்செய்யாய் - அருள் புரிவாயாக. எ-று.

க - ரை. அன்று உன்னடியாருடன் கூடிக் களித்திருந்தேன், காலங்கள் சென்றன, பிறகு துன்பம் வந்தது இதனால் வாடினேன், ஆதலால் அழியாத இன்பவொளியைக் காணும் பொருட்டுத் துன்பப்பட்டேன், அடியேனுக்கு உன்னிடத்தன்பு மிகும்படி அருள் செய்யவேண்டும் என்பதாம்.

வி - ரை. "கலந்து நின்னடியாரோடன்று வாளா களித்திருந்தேன்" என்றது சிவபெருமான் திருப்பெருந்துறையில் தம்மை யாட்கொண்டபோது அடியார் கூட்டத்தோடு குருந்த மரத்தடியில் எழுந்தருள அவர்களோடு கூடிக் களித்தமையை. வாளா களித்திருந்தே னென்றது "அவ்வடியார்களைப்போல் தாமும் சிவபெருமானது மகிமாதிசயங்களை யுள்ளவா றுணர்ந்து களியாமையையும், களித்திருப்பின் விட்டுப் பிரியாமையையும் குறிக்கின்றது. அதுமுத லிதுவரையில் அப்படி களிக்கப்பெறுமல் கழிந்த நாட்கள் பலவென்றற்கு "புலர்ந்துபோன காலங்கள்" என்றும், அப்பெருமானைப் பிரிந்த காரணத்தால், நீங்கிய துன்பம் பின்னும் வந்தது என்றற்கு "புகுந்து நின்றதிடர்" என்றும், அதுகாரணத்தால் முன் களித்திருந்த நான் இப்போது வாடினேன் என்பதும், அந்த வாட்டம் நீங்க உனது சோதிரூபத்தைத் தரிசிக்கப்பெறுமல் அழிந்தேன் என்பதும், அவ்வாறு அழியாதபடி அடியேற்கு அன்பு மிகும்படி செய்யாய் என்பதும் தோன்ற "பின்னாள் உலர்ந்துபோனே னுடையானே, உலவா வின்பச்சுடர் காண்பான், வுலர்ந்துபோனேன் அருள் செய்யாய் ஆர்வம் கூர வடியேற்கே" என்றும் கூறினர். (க)

அடியார்சிலருன்னருள்பெற்று
ராார்வங்கூரயானவமே
முடையார்பிணத்தின்முடிவின்றி
முனிவாலடியேன்மூக்கின்றேன்
கடியேனுடையகடுவினையைக்
களைந்துன்கருணைக்கடல்பொங்க
உடையாயடியேனுள்ளத்தே
யோவாதுருகவருளாயே.

ப - ரை. அடியார் சிலர் - அடியார்களிற் சிலர், ஆர்வம்கூர- உன்னிடத்தன்பு மிகுதலால், உன் அருள் பெற்ருர் - உன்னருளைப் பெற்றுக் கொண்டார், அடியேன் யான் - அடியவனுகிய நான், அவமே - வீணே, முடைஆர்பிணத்தில் - முடைநாற்றம் பொருந்திய சரீரத்தில் அகப்பட்டு, முடிவுஇன்றி-முடிவில்லாமல், முனிவால் - கோவகுணத்தால், மூக்கின்றேன்-முதிராநின்றேன், கடியேனுடைய-கொடியேனது, கடுவினையை - கொடுந்தொழிலை, களைந்து - நிர்மூலமாக்கி, உன்கருணைக்கடல் பொங்க-உன்கருணை சமுத்திரம் பொங்கும்வண்ணம், உடையாய் - உடையவனே, அடி

யேன் - அடியனேன், உள்ளத்தே - மனத்தின்கண்ணே, ஓவாது உருக - இடையறு துருகும்படி, அருளாய் - அருள் புரிவாயாக, எ - று.

க - ரை. உன்னடியார் சிலர் உன்னிடத் தன்புமிகுதலால் உன் திருவருளைப் பெற்றார், நான் வீணாக முடை யுடம்பிலிருந்து காலங் கழிக்கின்றேன், கொடியேனது வினையைக் களைந்து உன் கருணைக்கடல் பெருகவும், அடியேன் மனமுருகவும் அருள் செய்ய வேண்டும் என்பதாம்.

வி - ரை. உயிர்க் குணங்களிற் சிறந்த அன்பில்லாமையால் உயிரிருந்தும் உடம்பைப் பிணம் என்றார். (௨)

அருளாரமுதப்பெருங்கடல்வா
யடியாரெல்லாம்புக்கழுந்த
இருளாராக்கையிதுபொறுத்தே
யெய்த்தேன்கண்டாயெம்மானே
மருளார்மனத்தோருன்மத்தன்
வருமாலென்றிங்கெனைக்கண்டார்
வெருளாவண்ணமெய்யன்பை
யுடையாய்பெறநான்வேண்டுமே.

ப - ரை. அருள் - அருளாகிய, ஆர் - அரிய, அமுதப் பெருங் கடல்வாய் - பெரிய அமிர்த சாகரத்தில், அடியார்எல்லாம் - அடியார் எல்லாரும், புக்குஅழுந்த - போய் மூழ்க, இருள்ஆர் - அஞ்ஞான விருள் நிறைந்த, ஆக்கை - உடம்பாகிய, இது பொறுத்தே - இதனைச் சுமந்தே, எய்த்தேன் - இளைத்தேன், எம்மானே - எம்மையுடையானே, மருள்ஆர் - மருட்சிநிறைந்த, மனத்து - மனத்தினையுடைய, ஓர்உன்மத்தன் - ஒரு பித்தனானவன், வரும் என்று - வருகின்றான் என்று, இங்கு - இவ்வுலகத்தில், என்னைக் கண்டார் - என்னைக் கண்டோர், வெருளா வண்ணம் - அஞ்சாத வண்ணம், உடையாய் - உடையவனே, நான் - அடியேன், மெய் யன்பை பெறவேண்டும்-உன்னிடத்து உண்மையன்பை யடைய வேண்டும், எ - று.

க - ரை. அடியாரெல்லாரும் உன்னருட் கடலிற் புகுந்தழுந்த நானொருவனும் இந்தவுடம்பைச் சுமந்திளைத்தேன், என்னைக் கண்டோர், பித்தன் வருகிறானென்று அஞ்சாதவண்ணம் மெய் யன்பை நான் பெறவேண்டும் என்பதாம். (௩)

வேண்டும்வேண்டுமெய்யடியா
　　ருள்ளேவிரும்பியெனையருளால்
ஆண்டாயடியேனிடர்களைந்த
　　வமுதேயருமாமணிமுத்தே
தூண்டாவிளக்கின்சுடரனையாய்
　　தொண்டனேற்குமுண்டாங்கொல்
வேண்டாதொன்றும்வேண்டாது
　　மிக்கவன்பேமேவுதலே.

ப - ரை. வேண்டும் வேண்டும் - உன்னையே யாக்காலும் விரும்புகிற, மெய்யடியார் உள்ளே-மெய்யடியார் நடுவில், என்னை-மெய்யடியனல்லாத என்னை, அருளால் - பெருங் கருணையால், விரும்பி ஆண்டாய் - விரும்பி யாண்டருளினவனே, அடியேன் இடர்களைந்த - அடியேனது துன்பத்தை யொழித்த, அமுதே - அமிழ்தே, அரு - அரிய, மாமணிமுத்தே - பெருமை பொருந்திய ரத்நமாகிய முத்தமே, தூண்டாவிளக்கின் சுடர் அனையாய் - தூண்டவேண்டாத தீபச்சுடரை யொப்பவனே, வேண்டாத ஒன்றும் வேண்டாது - விரும்பப்படாததாகிய ஒரு பொருளையும் விரும்பாமல், மிக்கஅன்பே மேவுதல் - மிக்கஅன்பையே பொருந்துதல், தொண்டனேற்கும் உண்டாம் கொல் - தொழும்பனாகிய எனக்கு முண்டாமோ, எ - று.

க - ரை. உன் மெய்யடியார் நடுவே என்னை உன் பெருங் கருணை காரணமாக ஆண்டருளினவனே, என் துன்பத்தை யொழித்த அமிர்தமே, முத்தே, தூண்டாவிளக்கின் சுடர்போல்வாய், மிக்க அன்பையே பெறுதல் தொண்டனேனுக்கும் உண்டாமோ என்பதாம். (௪)

மேவுமுன்றனடியாருள்
　　விரும்பியானுமெய்ம்மையே
காவிசேருங்கயற்கண்ணாள்
　　பங்காவுன்றன்கருணையினால்
பாவியேற்குமுண்டாமோ
　　பரமானந்தப்பழங்கடல்சேர்ந்
தாவியாக்கையானெனதென்
　　றியாதுமின்றியறுதலே.

ப - ரை. காவிசேரும் - நீலோத்பலத்தின் தன்மை பொருந்திய, கயல்கண்ணாள் - சேல்போன்ற கண்களையுடைய உமாதே

வியின், பங்கா - பாகனே, மேவும் - பொருந்திய, உன்றன் அடியார் - உன்னடியார்கள், உள்விரும்பி - மனத்தால் விரும்ப, யானும் - அடியேனும், மெய்ம்மையே - உண்மையாகவே, உன்றன் கருணையினால் - உன்னருளால், பழம் - பழமையாகிய, பரமஆனந்தக் கடல் சேர்ந்து - பரமாநந்த சாகரத்தை யடைந்து, ஆவியாக்கை - உயிருடம்புகளை, யான் எனது என்ற - யான் என்னது என்று சொல்லப்பட்ட, யாதும் இன்றி - எதுவுமில்லாமல், அறுதல் - அற்றொழிதல், பாவியேற்கும் உண்டாமோ - பாவியாகிய எனக்கும் உண்டாகுமோ, எ - று.

க - ரை. உன்னடியார்கள் மனத்தில் விரும்பும்படி உன் கருணையினால் பேராநந்தக் கடல் சேர்ந்து ஆவியாக்கைகளை யான் எனது என்று சொல்லப்பட்ட சொற்கள் சிறிது மில்லாது அற்றொழிதல் பாவியேனுக்கும் உண்டாகுமோ என்பதாம். (௫)

அறவேபெற்றார்நின்னன்ப
ரந்தமின்றியகநெகவும்
புறமேகிடந்துபுலைநாயேன்
புலம்புகின்றேனுடையானே
பெறவேவேண்டுமெய்யன்பு
பேராவொழியாப்பிரிவில்லா
மறவாநினையாவளவிலா
மாளாவின்பமாகடலே.

இ - ரை. நின் அன்பர் - உன்னன்பர்கள், அறவேபெற்றார் - நிராசையைப் பெற்றவராய், அந்தம் இன்றி - முடிவில்லாமல், அகம் நெகவும் - உள்ளமுருகாநிற்கவும், புலைநாயேன் - புலைத்தன்மையுள்ளநாயினேன், புறமேகிடந்து புலம்புகின்றேன் - புறத்திற்றனே கிடந்து புலம்பாநின்றேன், உடையானே - உடையவனே, பேரா - நிலைபெயராததும், ஒழியா - ஒழியாததும், பிரிவு இல்லா - பிரிவில்லாததும், மறவா - மறவாததும், நினையா - நினையாததும், அளவு இல்லா - அளவில்லாததும், மாளா - தொலையாததும்ஆகிய, இன்பம் மா கடலே - ஆநந்தமாகிய பெரியசாகரமே, மெய்யன்பு பெறவே வேண்டும் - மெய்யன்பை அடியேன் பெறுகையே தகுதியாம்—எ - று.

க - ரை. உன் அன்பர் நிராசையுடையவராய் மனமுருகாநிற்கவும், புலைநாயேன் புறத்தே கிடந்து புலம்புகின்றேன், அடியேன் மெய்யன்பைப் பெறுகையே தகுதி யென்பதாம்.

வி - ரை. அறவு-அறுகை, அதாவது ஆசை நீக்கம். இது இருவகைப் பற்றையுந் துறத்தலைத் துறவு என்றாற்போல்வது. நான் உன்னிடத்தன்பைப் பெறுவேனாயின் உன்னன்பர்போல நிராசையுடையேனாய் இன்பமடைவேன் என்பதாயிற்று. பேரா, ஒழியா, பிரிவில்லா, அளவில்லா, மாளா என்பன இன்பத்தையும்; மறவா, நினையா என்பன அனுபவிப்போனையும் விசேஷித்து நின்றன. மறத்தலில்லாதபோது நினைத்தலில்லை யாதலால் "மறவா நினையா" என்றார். (சு)

கடலேயனையவானந்தங்
கண்டாரெல்லாங்கவர்ந்துண்ண
இடரேபெருக்கியேசற்றிங்
கிருத்தலழகோவடிநாயேன்
உடையாய்நீயேயருளுதியென்
றுணர்த்தாதொழிந்தேகழிந்தொழிந்தேன்
சுடராரருளாலிருணீங்கச்
சோதியினித்தான்றுணியாயே.

ப - ரை. கடலே அனைய - சமுத்ரத்தையே நிகர்த்த, ஆநந்தம் - இன்பத்தை, கண்டார் எல்லாம் - கண்டவராகிய உன் அடியாரெல்லாரும், கவர்ந்து உண்ண - அவ்வின்பத்தைக் கவர்ந்துண்ணுநிற்க, அடிநாயேன் - அடிமையாகிய நாயினேன், இடரேபெருக்கி - துன்பத்தையே பெருகப்பண்ணி, ஏசற்று-இளைத்து, இங்கு-இவ்வுலகில், இருத்தல் அழகோ - இருத்தல் அழகாமோ, உடையாய் - உடையவனே, நீயே அருளுதியென்று - நீயே யருள்செய்வையென்று துணிந்து, உணர்த்தாது ஒழிந்து - அறிவியா தொழிந்து, கழிந்து ஒழிந்தேன் - கழிந்தொழிந்து விட்டேன், இனித்தான் - இனியேனும், சோதி - பரஞ்சோதியே, அருள் ஆர் சுடரால் - அருளாகிய அரிய வொளியினால், இருள்நீங்க - எனது அஞ்ஞான விருளொழியுமாறு, துணியாய் - சேதிப்பாயாக, எ - று.

க - ரை. இன்பக்கடலைக் கண்ட அடியாரெல்லாரும் கவர்ந்துண்ணுநிற்க, அடியே னொருவனும் துன்பத்தைப் பெருக்கியிளைத்து இங்கிருப்பது அழகாகுமோ, நீயே அருள் செய்வாயென்று அறிவியாதிருந்துவிட்டேன், இனியாயினும் என் அஞ்ஞானஇருள் நீங்கும்படி உன் அருட்சுடர் பரப்பவேண்டும் என்பதாம்.

வி - ரை. நீ உடையவனும் நான் உடைமையும் ஆதலாலும் நீ முற்றறிவுடைய னாதலாலும் நீயே யென்குறைகளை யுணர்ந்

தொழித்தருள்வா யென்று நான் அறிவியா தொழிந்தேன் என்ற தற்கு, "உடையாய் நீயே யருளுதியென் றுணர்த்தா தொழிந்தே கழிந்தொழிந்தேன்" என்றார். (எ)

துணியாருருகாவருள்பெருகத்
தோன்றுந்தொண்டரிடைப்புகுந்து
திணியார்மூங்கிற்சிந்தையேன்
சிவனேநின்றுதேய்கின்றேன்
அணியாரடியாருனக்குள்ள
வன்புந்தாராயருளளியத்
தணியாதொல்லைவந்தருளித்
தளிர்ப்பொற்பாதந்தாராயே.

ப - ரை. துணியா - (நீயே பரமென்று) துணிந்து, உருகா - மனமுருகி, அருள்பெருக - உன் திருவருள் பெருகும் வண்ணம், தோன்றும் - தோன்றாநின்ற, தொண்டரிடைப் புகுந்து - தொண்டரிடத்துப் புகுந்து, திணி ஆர் மூங்கில் - வலிமை பொருந்திய மூங்கிலையொத்த, சிந்தையேன் - மனத்தினை யுடையேன், சிவனே - மங்களகரனே, நின்று தேய்கின்றேன் - நின்று தேயாநின்றேன், அணி ஆர் - அழகு பொருந்திய, அடியார் - அடியவர், உனக்கு உள்ள - உன்னிடத்தில்வைத்த, அன்பும் தாராய் - அன்பையும் எனச்குக் கிருபை பண்ணாய், அருள் அளிய - அருள் கனிய, தணியாது - தாமதியாமல், ஒல்லைவந்தருளி - விரைவில் வந்தருளி, தளிர் - தளிர்போலும், பொன் - அழகிய, பாதம் தாராய் - திருவடியைத் தந்தருளாய், எ - று.

க - ரை. உன் தொண்டரிடைப் புகுந்து நின்று வலியமூங்கில் போன்ற மனத்தை யுடையேன் தேய்கின்றேன், உன்னிடத் தன்பு செய்தலையும் தரமாட்டாய், உன்பேரருளால் விரைந்தெழுந் தருளி உன் திருவடியைத் தந்தருளுவாயாக என்பதாம்.

வி - ரை. கோட்டமுடைய சிந்தைஎன்பதற்கு "மூங்கிற் சிந்தை" என்றார். (அ)

தாராவருளொன்றின்றியே
தந்தாயென் றுன்றமரெல்லாம்
ஆரா நின்றாரடியேனு
மயலார்போலவயர்வேனோ

சீராரருளாற்சிந்தனையைத்
திருத்தியாண்டசிவலோகா
பேரானந்தம்பேராமை
வைக்கவேண்டும்பெருமானே.

ப - ரை. தாரா அருள் ஒன்று இன்றியே - தரவொண்ணாத அருள் சிறிது மில்லாமல், தந்தாய் என்று - தந்தருளினையென்று, உன்தமர் எல்லாம் - உன்னடியா ரெல்லாரும், ஆராநின்றார் - ஆரவாரியாநின்றார், அடியேனும் - அடியனேனும், அயலார் போல அயர்வேனோ - அயலவர்போலத் தளர்வேனோ, சீர் ஆர் அருளால் - சிறப்புள்ள உன் திருவருளால், சிந்தனையை - என்மனத்தை, திருத்தியாண்ட - திருத்தியாண்டருளின, சிவலோகா - சிவபுரத்திறைவனே, பெருமானே - எம்பிரானே, பேரானந்தம் பேராமை வைக்கவேண்டும் - பேரின்பம் நிலைபெயராமல் வைத்தருளல் வேண்டும், எ - று.

க - ரை. தரவொண்ணாத உன்னருள் முழுதும் தந்துவிட்டனையென்று உன்னடியா ரெல்லாரும் களிக்கின்றார், அடியேன் ஒருவனும் அயலார்போல அயர்வேனோ, பேரின்பத்தை யெனக்கு நிலைபெயரா தருள் செய்யவேண்டும் என்பதாம். (கூ)

மானோர்பங்காவந்திப்பார்
மதுரக்கனியேமனநெகா
நானோர்தோளாச்சுரையொத்தா
னம்பியித்தால்வாழ்ந்தாயே
ஊனேபுகுந்தவுனையுணர்ந்தே
யுருகிப்பெருகுமுள்ளத்தைக்
கோனேயருளுங்காலந்தான்
கொடியேற்கென்றோகூடுவதே.

ப - ரை. மான்ஓர்பங்கா - மானை ஒருபாகத்திலுடையானே, வந்திப்பார் - துதிப்பார்க்கு, மதுரக்கனியே - தீங்கனியே, மனம் நெகா நான் - மனம் நெகிழாத நான், ஓர்தோளாச்சுரை ஒத்தால் - ஒரு தொளைக்காத சுரையை யொத்திருந்தால், நம்பி - பூர்ணனே, இத்தால் வாழ்ந்தாயே - இதனால் வாழ்ந்தனையோ, ஊனே புகுந்த - உடம்பின்கண்ணே புகுந்த, உன்னை உணர்ந்து - உன்னையறிந்து, உருகிப்பெருகும் உள்ளத்தை - உருகிப் பெருகாநின்ற மனத்தை, கோனே - இறைவனே, அருளும் காலம் - நீ யருள் செய்யு

காலம், கொடியேற்கு - கொடியேனுக்கு, என்றே கூடுவது - எப்பொழுதோ உண்டாவது, எ - று.

க - ரை. உமாதேவி பங்கனே, துதிப்பவர்க்கு இனிய கனியே, மனம் நெகிழாத நான் ஒரு துளைக்காத சுரையை நிகர்த்திருந்தால், இதனால் நீ வாழ்ந்துவிட்டாயோ, என்னுடம்பிற் புகுந்த உன்னை யறிந் துருகுதற் குரியமனத்தை நீயெனக் கருளுங்காலம் எக்காலமோ என்பதாம்.

வி - ரை. தொளைக்காத முழுச்சுரை, கமண்டலம், வீணைக்காய் முதலியவாகப் பயன்படாமைபோல நான் பயனற்றவனானல் என்றற்கு, "நானோர் தோளாச்சுரை யொத்தால்"என்றார்.()

கூடிக்கூடியுன்னடியார்
குனிப்பார்சிரிப்பார்களிப்பாரா
வாடிவாடிவழியற்றேன்
வற்றன்மரம்போனிற்பேனோ
ஊடியூடியுடையாயொடு
கலந்துள்ளுருகிப்பெருகிநெக்
காடியாடியானந்த
மதுவேயாகவருள்கலந்தே.

ப - ரை. உன்அடியார் - உன்தொண்டர்கள், கூடிக்கூடி - சேர்ந்து சேர்ந்து, குனிப்பார் - கூத்தாடுவார், சிரிப்பார் - நகைப்பார், களிப்பார்ஆ - களிப்பார்ஆக, வாடிவாடி - வாட்டமடைந்து வாட்டமடைந்து, வழியற்றேன் - நெறியற்றவனாகிய நான், வற்றல் மரம்போல் நிற்பேனோ - வற்றல் மரத்தை ஒப்ப நிற்பேனோ, ஊடிஊடி - பிணங்கிப் பிணங்கி, உடையாயொடு - உடையவனாகிய உன்னுடன், கலந்து - சேர்ந்து, உள்உருகி - மனமுருகி, பெருகி - பெருக்கமடைந்து, நெக்கு - நெகிழ்ந்து, ஆடிஆடி - கூத்தாடிக் கூத்தாடி, ஆநந்தமதுவேயாக - இன்பமயமேயாம்படி, கலந்து அருள் - சேர்ந்து அருள் செய்வாயாக, எ - று.

க - ரை. உன்தொண்டர்கள் கூடிக்கூடிக் கூத்தாடுவாரும் சிரிப்பாரும், களிப்பாருமாயிருக்க, வாடி வாடி வழியறியாத நானொருவனும் வற்றன் மரம்போல நிற்பேனோ, உடையவனாகிய உன்னோடு பிணங்கிப் பிணங்கி, கலந்து, உள்ளுருகி, ஆநந்தரூபமே யாகும்படி எனக்கும் அருள் செய்வாயாக என்பதாம்.

வி - ரை. இறைவனோடு ஊடுதலாவது, தம்மைக் கலந்தருளாமையால் வெறுத்துக் கொள்ளுதல். (௧௧)

# குழைத்தபத்து.

ஆத்துமநிவேதனம்.
திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

குழைத்தாற்பண்டைக்கொடுவினைநோய்
காவாயுடையாய்கொடுவினையேன்
உழைத்தாலுறுதியுண்டோதா
னுமையாள்கணவாவெனையாள்வாய்
பிழைத்தாற்பொறுக்கவேண்டாவோ
பிறைசேர்சடையாய்முறையோவென்
றழைத்தாலருளாதொழிவதே
யம்மானேயுன்னடியேற்கே.

ப - ரை. பண்டைக் கொடுவினை - பழமையாகிய கொடிய வினைகளும், நோய் - அவற்றின் காரியமாகிய நோய்களும், குழைத்தால்-என்னை வாட்டினுல், உடையாய்-உடையவனே, காவாய்-நீ என்னைக் காவாதிருக்கிருய், கொடு வினையேன் - கொடிய வினைகளையுடையேன், உழைத்தால் - (அத்துன்பத்திற் கிடந்து) உழைத்தால், உறுதியுண்டோ-(உனக்கு) நன்மையுளதோ, உமையாள் கணவா - உமாநாயகனே, என்னை யாள்வாய் - என்னை ஆளக்கடவை, பிழைத்தால் - அடியேன் பிழைசெய்தால், பொறுக்கவேண்டாவோ - நீ பொறுத்தருளல் வேண்டாவோ, பிறைசேர் சடையாய் - சந்திரன் பொருந்திய சடையையுடையானே, முறையோ வென்று அழைத்தால் - முறையோ வென்று நான் அழைத்தால், அம்மானே - எனது தந்தையே, உன் அடியேற்கு - உன்னடியனேனுக்கு, அருளாதொழிவதே - அருள்செய்யாமல் ஒழிவதோ உனக்குத் தகுதியாவது, எ - று.

க - ரை. பழமையாகிய வினைகளும் அவற்றின் காரியமாகிய நோய்களும் என்னை வருத்தினுல், நீ என்னைக் காவாதிருக்கி

ருய், நான் அத்துன்பத்திற்கிடந்து வருந்திஞல் உனக்கு நன்மை யுண்டோ, அடியேன் பிழைசெய்தால் நீ பொறுத்தருளவேண் டாவோ, யான் முறையோவென் றழைத்தால் அடியேனுக்கு அருள்செய்யா தொழிவதோ உனக்குத் தகுதி என்பதாம்.

வி - ரை. காரணகாரிய முறையே "வினைநோய்" என்ருர்.

அடியேனல்லலெல்லாமுன்
ஊகலவாண்டா யென்றிருந்தேன்
கொடியேரிடையாள்கூறுவெங்
கோவேயாவாவென் றருளிச்
செடிசேருடலைச்சிதையாத
தெத்துக்கெங்கள் சிவலோகா
உடையாய் கூவிப்பணிகொள்ளா
தொறுத்தா லொன்றும்போதுமே.

ப - ரை. அடியேன் அல்லல் எல்லாம் - அடியேனது துன்ப மெல்லாம், முன் - முன்னமே, அகல - நீங்கும்படி, ஆண்டாய் என்று இருந்தேன் - ஆண்டனையென் றிருந்தேன், கொடி - பூங் கொடிபோலும், ஏர் - அழகாகிய, இடையாள் - இடையையுடை யாளாகிய உமாதேவியின், கூறு - பங்கா, எம் கோவே - எம்மி றைவா, ஆவாவென்று அருளி - அய்யோவென் றிரங்கியருளி, செடிசேர் உடலை - குற்றம் பொருந்திய வுடம்பை, சிதையாதது- அழிக்காதிருப்பது, எத்துக்கு - யாதுக்கு, எங்கள் சிவலோகா - எங்கள் சிவலோகனே, உடையாய் - உடையவனே, கூவிப்பணி கொள்ளாது - அழைத்துப் பணிகொள்ளாமல், ஒறுத்தால்-வருத் திஞல், ஒன்றும் போதுமே - அவ்வொறுத்தலொன்றுமே யமை யுமோ——, எ - று.

க - ரை. அடியேனது துன்பமெல்லாம் முன்னமே நீங்கும் படி என்னையாண்டருளினை யென்றிருந்தேன், அந்தோ வென் றிரங்கி இவ்வுடம்பை யொழியா திருப்பது யாதுக்கு, என்னைக் கூவிப் பணிகொள்ளாது வருத்திஞல் அதுவே யமையுமோ என் பதாம். (௨)

ஒன்றும்போதாநாயேனை
யுய்யக்கொண்டநின்கருணை
இன்றேயின்றிப்போய்த்தோதா
னேழைபங்காவெங்கோவே

குன்றேயனையகுற்றங்கள்
குணமாமென்றேநீகொண்டால்
என்றான்கெட்டதிரங்கிடா
யெண்டோண்முக்கணெம்மானே.

ப - ரை. ஒன்றும் போதா நாயேனை - ஒன்றுக்கும் பற்றாத நாயினேனை, உய்ய - உய்யும்படி, கொண்ட - முன்னமே ஆட்கொண்ட, நின் கருணை - உன் கருணையானது, இன்று - இப்பொழுது, இன்றிப் போய்த்தோ - இல்லாமற் போய்விட்டதோ, ஏழை பங்கா - உமையாள் பங்கனே, எம் கோவே - எம்மிறைவனே, குன்றே அனைய குற்றங்கள் - மலைபோன்ற குற்றங்களையும், குணம் ஆம் என்றே நீ கொண்டால் - குணங்களாமென்றே நீ திருவுளம் பற்றுவையாயின், கெட்டது என்-உனக்குக் கெடுதியென்ன, இரங்கிடாய் - இரங்கியருளாய், எண் தோள் - எட்டுத் தோள்களையும், முக்கண்-மூன்று கண்களையுமுடைய, எம்மானே - எம்பெரியோனே——, எ - று.

க - ரை. ஒன்றுக்கும் பற்றாத நாயேனை முன்னமே உய்யக் கொண்ட நின் கருணை இப்பொழுது இல்லாமற் போயிற்றோ, என்பெருங் குற்றங்களையும் குணங்களாகக் கொண்டால் உனக்குக் கெடுதியுண்டோ, இரங்கியருள்வாயாக என்பதாம்.

வி - ரை. போயிற்றோ என்பது போய்த்தோ என வந்தது. ஏழை - பெண். அது இங்கு உமாதேவியை யுணர்த்திற்று. (௩)

மானேர்நோக்கிமணவாளா
மன்னேநின்சீர்மறப்பித்திவ்
வூனேபுகவென்றனை நூக்கி
யுழலப்பண்ணுவித்திட்டாய்
ஆனாலடியேனறியாமை
யறிந்துநீயேயருள்செய்து
கோனேகூவிக்கொள்ளுநா
ளென்றென்றுன்னைக்கூறுவதே.

ப - ரை. மான்நேர் நோக்கி - மானினது பார்வையை நிகர்த்த பார்வையையுடைய வுமாதேவிக்கு, மணவாளா-மணாளனே, மன்னே - அரசனே, நின் சீர் மறப்பித்து - உன் சீரை மறக்கப் பண்ணி, இவ்வூனே புக - இவ்வுடம்பின் கண்ணே புகும்படி, என்றனை நூக்கி - என்னைச் செலுத்தி, உழலப் பண்ணுவித்திட்

டாய் - (அதனோடு) கூடி உழலுமாறு செய்துவிட்டாய், ஆனால் - ஆயின், அடியேன் அறியாமை அறிந்து - அடியேனது அறிவின்மையை உணர்ந்து, நீயே அருள் செய்து - நீயே அருள் புரிந்து, கோனே - இறைவனே, கூவிக்கொள்ளும் நாள் - கூவிக்கொள்ளுங் காலம், என்று என்று உன்னைக் கூறுவதே - எக்காலமோவென்று உன்னைக் கூறுவதுதானோ (எனக்கு ஊதியம்)—, எ-று.

க - ரை. உன் சீரினை யான் மறக்கும்படி செய்து இவ்வுடம்பில் என்னை நுழைத்து அதில் என்னை உழலப்பண்ணினாய், ஆனால் இறைவனே அடியேனது பேதைமையை யறிந்து நீயே யருள்செய்து என்னைக் கூவிக்கொள்வது என்றோ வென்று முறையிடுவதுதானோ எனக்கு ஊதியமாவது என்பதாம்.

வி - ரை. மான் ஏர் நோக்கி எனப்பிரித்து, மானினது நோக்கம்போலும் அழகாகிய நோக்கத்தையுடையாள் என்றுரைத்தலுமாம். நூக்குதல் - செலுத்துதல், தள்ளுதல் எனினுமாம். ()

கூறுநாவேமுதலாகக்
கூறுங்கரணமெல்லாநீ
தேறும்வகைநீதிகைப்புநீ
தீமைநன்மைமுழுதுநீ
வேறோர்பரிசிங்கொன்றில்லை
மெய்ம்மையுன்னைவிரித்துரைக்கில்
தேறும்வகையென்சிவலோகா
திகைத்தாற்றேற்றவேண்டாவோ.

ப - ரை. கூறும் - சொல்லப்பட்ட, நாவே முதலாக-நாவையே முதலாக, கூறும் - சொல்லப்படுகின்ற, கரணமெல்லாம் நீ - கருவிகளெல்லாம் நீயே, தேறும் வகைநீ - தெளியும்வகை நீயே, திகைப்பும் நீ - திகைத்தலும் நீயே, தீமை நன்மை முழுதும் நீ - தீமை நன்மைகளாகிய முழுதும் நீயே, வேறு ஓர் பரிசு-மற்றொரு தன்மை, இங்கு - இவ்விடத்து, ஒன்று இல்லை - சிறிதுமில்லை, மெய்ம்மை - மெய்ம்மையையுடைய, உன்னை விரித்து உரைக்கில் - உன்னை விரித்துச் சொன்னால், தேறும்வகை என்-தெளியும் வகையாது, சிவலோகா - சிவலோகனே, திகைத்தால் - (எம்போலியர்) திகைப்படைந்தால், தேற்ற வேண்டாவோ - நீ தெளிவிக்க வேண்டாவோ——, எ - று.

க - ரை. நா முதலான கருவிகள் நீயே, தெளியும்வகை நீயே, திகைப்பும் நீயே, தீமை நன்மைகள் யாவும் நீயே, உண்

மையாய் உன் தன்மையை விரித்துச் சொல்லுமிடத்துவேறொரு வகையு மிங்கில்லை, இப்படியானால் உன்னைத் தெளிந்தறியும் வகையாது, யான் திகைத்தால் என்னை நீ தெளிவிக்கவேண் டாவோ என்பதாம். (௭)

வேண்டத்தக்கதறிவோய்நீ
வேண்டமுழுதுந்தருவோய்நீ
வேண்டுமயன்மாற்கரியோய்நீ
வேண்டியென்னைப்பணிகொண்டாய்
வேண்டிநீயாதருள்செய்தா
யானுமதுவேவேண்டினல்லால்
வேண்டும்பரிசொன்றுண்டென்னி
லதுவுமுன்றன்விருப்பன்றே.

ப - ரை. வேண்டத்தக்கது - யாம் விரும்பத்தக்கதை, அறிவோய் நீ - அறிபவன் நீ, வேண்ட - விரும்ப, முழுதும் - முழுமையும், தருவோய் நீ - தருபவன் நீ, வேண்டும் - காண விரும்பிய, அயன் மால்கு - பிரம விஷ்ணுக்களுக்கு, அரியோய் நீ - அரியவன் நீ, வேண்டி என்னைப் பணிகொண்டாய் - விரும்பி என்னைப் பணிகொண்டனை, வேண்டி - விரும்பி, நீயாது அருள் செய்தாய் - நீ எதனை யருள்செய்தனையோ, அதுவே-அதனையே, யானும் வேண்டின் அல்லால் - நானும் விரும்பினல்லது, வேண்டும் பரிசு ஒன்று உண்டு என்னில் - வேண்டுங் காரியமொன்றுளதென்றால், அதுவும் உன்றன் விருப்பு அன்றே - அதுவும் உன் விருப்பமே யன்றோ——, எ - று.

க - ரை. யான் விரும்பத்தகுந்ததை யறிவோன் நீயே, விரும்பினால் விரும்பின அவற்றை யெல்லாம் தருவோன் நீயே, பிரம விட்டுணுக்களுக்கு அரியவன் நீயே, விரும்பி யென்னைப் பணிகொண்டனை, நீ யருள்செய்வது யாதோ அதையே நானும் விரும்புவதல்லது வேறில்லை, வேறொன்றை நான் விரும்பினால் அதுவும் உன் விருப்பமே யன்றோ என்பதாம்.

வி - ரை. முற்றறிவனாதலால் "வேண்டத்தக்க தறிவோய்" என்றும், ஆன்மாக்கள் விரும்புவன வெல்லாம் தரும் உதார சீலனாதலால் "வேண்ட முழுதுந் தருவோய், என்றும், பிரம விட்டுக்கள் அறியவொண்ணாது நிமிர்ந்து நின்றவனாதலால், "வேண்டுமயன்மாற் கரியோய்" என்றும் கூறினார். (௮)

அன்றேயென் றனுவியு
　　முடலுமுடைமையெல்லாமும்
குன்றேயனையாயென்னையாட்
　　கொண்டபோதேகொண்டிலையோ
இன்றேரிடையூறெனக்குண்டோ
　　வெண்டோண்முக்கணெம்மானே
நன்றேசெய்வாய்பிழைசெய்வாய்
　　நானேவிதற்குநாயகமே.

ப - ரை. அன்றே - அக்காலத்திற்றானே, என்றன் ஆவியும் - என்னுயிரும், உடலும் - உடம்பும், உடைமை எல்லாமும் - பொருளும் ஆகிய எல்லாவற்றையும், குன்றே அனையாய் - மலையையே யொத்திருப்பவனே, என்னை ஆட்கொண்டபோதே - என்னை யடிமைகொண்ட பொழுதே, கொண்டிலையோ - நீ யேற்றுக் கொண்டனை யல்லையோ, இன்று - இப்பொழுது, எனக்கு - அடியேனுக்கு, ஓர் இடையூறு உண்டோ - ஒரு இடையூறுளதோ, எண்டோள் - எட்டுத் தோள்களையும், முக்கண் - மூன்று கண்களையுமுடைய, எம்மானே - எம் பெரியோனே, நன்றே செய்வாய் - நன்மையையே செய்யக்கடவை, பிழையே செய்வாய் - தீமையையே செய்யக்கடவை, நானே இதற்கு நாயகம் - இந்த விடயத்துக்குத் தலைவன் நான்றானே——, எ - று.

க - ரை. என்னை யாட்கொண்ட அந்நாளிற்றானே என் உயிர் உடல் பொருள் எல்லாவற்றையும் நீ யேற்றுக்கொண்டிலையோ, இன்று ஒரு இடையூறு எனக்குண்டோ, நீ யெனக்கு நன்மை செய்தாலும் சரி, தீமை செய்தாலும் சரி, அதற்கு நான் அதிகாரியன்று என்பதாம்.

வி - ரை. இறைவன் குருமூர்த்தமா யெழுந்தருளித் தம்மை யாட்கொண்ட காலத்தில் உடல்பொருளாவிகளைக் குருதக்கணையாகக்கொடுத்து விட்டதனால் "என்றன் ஆவியுமுடலுமுடைமையெல்லாமும் குன்றே யனையாய் என்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ" என்றார். (எ)

நாயிற்கடையாநாயேனை
　　நயந்துநீயேயாட்கொண்டாய்
மாயப்பிறவியுன்வசமே
　　வைத்திட்டிருக்குமதுவன்றி

ஆயக்கடவேனுனோ தா
  னென்னதோவிங்கதிகாரம்
காயத்திடுவாயுன் னுடைய
  கழற்கீழ்வைப்பாய்கண் ணுதலே.

ப - ரை. நாயின் கடை ஆம் நாயேனை - நாய்ச்சாதியினும் கடைப்பட்ட நாயினேனை, நயந்து - விரும்பி, நீயே ஆட்கொண்டாய் - நீயே யாட்கொண்டனை, மாயப் பிறவி - மாயமாகிய பிறவிகள், உன் வசமே - உன் வசத்திற்றானே, வைத்திட்டிருக்குமது அன்றி - வைத்திருப்பதல்லாமல், ஆயக்கடவேன் நானோ தான் - (அவற்றின் உத்பத்தி நாசங்களைப்பற்றி) ஆராயக்கடவேன் நான்றானோ, இங்கு - இவ்விடத்தில் நடக்கும், அதிகாரம் என்னதோ- அதிகாரம் என்னது தானோ, காயத்து இடுவாய் - (பல்வேறு வகைப்பட்ட) சரீரங்களில் (என்னை) யமைக்கக்கடவை, உன்னுடைய கழல் கீழ்வைப்பாய்-(அன்றி) உன் திருவடியின் கீழமைக்கக் கடவை, கண்ணுதலே - நெற்றிக்கண்ணனே——,எ - று.

க - ரை. நாயினுந் தாழ்ந்த என்னை விரும்பி நீயே யாட்கொண்டனை, பிறவியானது உன் வசப்பட்டதன்றி அதனை யாராயக்கடவேன் நான்றானோ, எனக்கதிகாரமில்லை, என்னை இவ்வுடம்பில் வைத்தாலும் சரி, உன் திருவடிக்கீழ் வைத்தாலும் சரி, என்பதாம். (அ)

கண்ணார் நுதலோய்கழலிணைகள்
  கண்டேன்கண்கள்களிகூர
எண்ணாதிரவும்பகலுநா
  னவையேயெண்ணுமதுவல்லால்
மண்மேல்யாக்கைவிடுமாறும்
  வந்துன்கழற்கேபுகுமாறும்
அண்ணாவெண்ணக்கடவேனோ
  வடிமைசாலவழகுடைத்தே.

ப - ரை. கண் ஆர் நுதலோய் - கண்ணுள்ள நெற்றியையுடையானே, கண்கள் களிகூர - கண்களுக்குக் களிப்பு மிகும்படி, கழலிணைகள் - உன் திருவடியிணையை, கண்டேன் - கண்டு கொண்டேனாய், இரவும் பகலும் - இரவினும் பகலினும், எண்ணாது - அவற்றையே நினையாமல், நான் நவையே யெண்ணுமது அல்லால் - நான் குற்றங்களையே நினைப்பதல்லது, மண்மேல்

யாக்கை விடுமாறும் - பூமியின்மீது சரீரத்தை நீங்கும் விதத்தையும், வந்து உன் கழற்கேபுகும் ஆறும் - வந்து உன் திருவடியிற் சேரும் விதத்தையும், அண்ணா - தந்தாய், எண்ணக்கடவேனோ - நினைக்கக்கடவேனோ, அடிமை-என்னடிமைத்திறம், சால அழகு உடைத்து - மிகவும் அழகுடைத்தா யிருந்தது——,எ - று.

க - ரை. இறைவனே, உன் திருவடியைக் கண்ணாரக்கண்டு கொண்டு அதனையே இரவும் பகலும் எண்ணுவதல்லது இவ்வுடம்பை நீங்குவதையும், வந்து உன் திருவடியை யடைவதையும் எண்ணக்கடவேனோ, என் அடிமைத்திறம் மிக்க அழகுடைத்து னென்பதாம். (௯)

அழகேபுரிந்திட்டடிநாயே
　　னரற்றுகின்றேனுடையானே
திகழாநின்றதிருமேனி
　　காட்டியென்னைப்பணிகொண்டாய்
புகழேபெரியபதமெனக்குப்
　　புராணநீதந்தருளாதே
குழகாகோலமறையோனே
　　கோனேயென்னைக்குழைத்தாயே.

ப - ரை. அடி புரிந்திட்டு - உன் திருவடியை விரும்பி, நாயேன் - நாயினேன், அரற்றுகின்றேன் - அரற்றாநின்றேன், உடையானே - உடையவனே, திகழாநின்ற - விளங்காநின்ற, திருமேனி காட்டி - திருமேனியைக் காட்டி, என்னைப் பணி கொண்டாய் - என்னைப் பணிகொண்டனை, புகழ்பெரிய பதம் - புகழினாற் பெரிய பதவியை, எனக்கு - அடியேனுக்கு, புராண - பழையோனே, நீ தந்தருளாதே - நீ தந்தருளாமல், குழகா - சட்டழகனே, கோலமறையோனே - அழகிய வேதியனே, கோனே - இறைவனே, என்னைக் குழைத்தாயே - என்னை வாட்டினையே, அழகே - (இது உனக்கு) அழகோ——,எ - று.

க - ரை. உன் திருவடியை விரும்பி நான் அரற்றாநின்றேன். உன் திருமேனியைக் காட்டி என்னைத் தொண்டு கொண்டனை, புகழாற் சிறந்த பதத்தைத் தந்தருளாமல் என்னை வாட்டினை, இது உனக்கு அழகாகுமோ என்பதாம்.

வி - ரை. புராண என்பது புராதந என்னும் சொல்லின் பரியாயம். (௧௦)

# உயிருண்ணிப்பத்து.

சிவானந்தமேலிடுதல்.

திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கலிவிருத்தம்.

பைந்நாப்படவரவேரல்கு
　　லுமைபாகமதாயென்
மெய்ந்நாடொறும்பிரியாவினைக்
　　கேடாவிடைப்பாகா
செந்நாவலர்பரசும்புகழ்த்
　　திருப்பெருந்துறையுறைவாய்
எந்நாட்களித்தெந்நாளிறு
　　மாக்கேனினியானே.

ப - ரை. பைநா - பசியநாவினையுடைய, அரவு-பாம்பினது, படம் - படம்போன்ற, ஏர்அல்குல் - அழகாகிய அல்குலையுடைய, உமை - உமாதேவியின், பாசமதாய் - பங்கையுடையனாய், என் மெய் - என் உடம்பை, நாள்தொறும் - தினந்தோறும், பிரியா - விட்டு நீங்காத, வினைக்கேடா - வினைக்கேடனே, விடைபாகா - விடைப்பாகனே, செம்நாவலர் - செம்மையினையுடைய நாவலரால், பரசும் - துதிக்கப்பட்ட, புகழ் - புகழையுடைய, திருப்பெருந்துறை உறைவாய் - திருப்பெருந்துறையில் வசிப்பவனே, யான் - நான், இனி - இனி, எந்நாள் களித்து - எந்நாள் களிப்படைந்து, எந்நாள் இறுமாக்கேன் - எந்நாள் இறுமாந்திருக்கக்கடவேன்——, எ - று.

க - ரை. உமாதேவிபாகனாய் என்னுடம்பினின்றும் பிரியாமல் நாடோறும் எழுந்தருளியிருக்கின்ற வினைக்கேடனே, விடைப்பாகனே, திருப்பெருந்துறையில் வாழ்வோனே, நான் இனியெந்நாளில் உன்னைக்கண்டுகளித்து இறுமாந்திருப்பேனோஎன்பதாம்.

வி - ரை. வினைக்கேடன் - வினையைக் கெடுப்பவன். (க)

நானாரடியணைவானொரு
நாய்க்குத்தவிசிட்டிங்
கூனாருடல்புகுந்தானுயிர்
கலந்தானுளம்பிரியான்
தேனார்சடைமுடியான்மன்னு
திருப்பெருந்துறையுறைவான்
வானோர்களுமறியாததோர்
வளமீந்தனனெனக்கே.

ப - ரை. அடிஅணைவான் - தன்திருவடியை யடையும்பொருட்டு, நான்ஆர் - நான்யாவன், (அங்ஙனமொரு உரிமையுமில்லாத) ஒருநாய்க்குத் தவிசு இட்டு - ஒருநாயினேனுக்கு ஆசநமளித்து, இங்கு - இவ்விடத்தில், ஊன்ஆர் உடல் - மாமிசம் பொருந்திய உடம்பில், புகுந்தான் - புகுந்து, உயிர்கலந்தான் - உயிரிற்கூடி, உள்ளம்பிரியான் - என்னுளம்பிரியாதவனாய், தேன் ஆர் சடைமுடியான் - (கொன்றைமலர்த்) தேன்நிறைந்த சடைமுடியையுடையான், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறை உறைவான்-திருப்பெருந்துறையில் நித்யவாசம்பண்ணுவோன்,(அவன்) வானோர்களும் அறியாதது - தேவர்களுமறியாததாகிய, ஓர்வளம்- ஒப்பற்றசெல்வத்தை, எனக்கு ஈந்தனன் - எனக்குத் தந்தருளினான்——,எ - று.

க - ரை. தன் திருவடியை யடைதற்குரியவுரிமையொன்று மில்லாத நாயினேனுக்குத் தவிசளித்து, என்னுடம்பின்கண்ணே புகுந்து உயிரிற்கலந்து என்மனத்தைவிட்டு நீங்காதவனும், தேனார்ந்தசடைமுடியை யுடையவனும், திருப்பெருந்துறையில் வாழ்பவனும் ஆகிய சிவபெருமான், தேவர்களும் அறியாத ஒப்பற்ற செல்வத்தை யெனக்கருள்செய்தான் என்பதாம். (உ)

எனைநானென்பதறியேன்பக
லிரவாவதுமறியேன்
மனவாசகங்கடந்தானெனை
மத்தோன்மத்தனாக்கிச்
சினமால்விடையுடையான்மன்னு
திருப்பெருந்துறையுறையும்
பனவனெனைச்செய்தபடி
றறியேன்பரஞ்சுடரே.

ப - ரை. என்னை நான்என்பது அறியேன் - நானென்ன பொருளென்பதை யுணர்ந்திலேன், பகல் இரவு ஆவதும் அறியேன்-பகலிரவுகளாவன வற்றையு முணர்ந்திலேன், மனவாசகம் கடந்தான் - மனோவாக்குக்களுக் கெட்டாதவனாகிய இறைவன், எனை-என்னை, மத்தோந்மத்தன் ஆக்கி-மதோந்மத்தனாகப்பண்ணி, சினமால்விடை யுடையான் - கோவத்தையுடைய மால்விடை யுடையவன், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறையுறையும் பனவன் - திருப்பெருந்துறையில் நித்யவாசம் பண்ணுகிற வேதியன், என்னைச்செய்த படிறு அறியேன் - என்னைச்செய்த வஞ்சனையை யறிந்திலேன், பரஞ்சுடரே-பரஞ்சோதியே——,எ - று.

க - ரை. நான் என்னபொருளென் றுணர்ந்திலேன், பகலிரவாவதையு மறிந்திலேன், மனவாசகங்களுக் கெட்டாதவனாகிய திருப்பெருந்துறையான் என்னைச்செய்த வஞ்சனை யின்னதென் றறியேன் என்பதாம்.

வி - ரை. மனவாசகங்கடந்தான் என்றாராயினும் இனம்பற்றிக் காயத்தையும் சேர்த்து முக்கரணங்களுக்கும் எட்டாதவன் எனக்கொள்க. (௬)

வினைக்கேடருமுளரோபிறர்
சொல்லீர்வியனுலகில்
எனைத்தான்புகுந்தாண்டானென
தென்பின்புரையுருக்கிப்
பினைத்தான்புகுந்தெல்லேபெருந்
துறையிலுறைபெம்மான்
மனத்தான்கண்ணினகத்தான்மறு
மாற்றத்திடையானே.

ப - ரை. எனை - என்னை, தான் - தானே, புகுந்து ஆண்டான் - வந்தாண்டருளினன், பினை - பிறகும், தான் - தானே, புகுந்து - வந்து, எனது என் பின்புரை உருக்கி - எனது எலும்பின் தொளைகளை யுருகப்பண்ணி, பெருந்துறையில் உறைபெம்மான்-திருப்பெருந்துறையில் நித்யவாசம்பண்ணுகிற பெருமான், மனத்தான் - என்மனத்தின் கண்ணன், கண்ணின் அகத்தான் - கண்ணின் கண்ணன், மற்றும் - பின்னும், மாற்றத்திடையான் - வாக்கின்கண்ணன், (ஆதலால் இவனைப்போல) வியன்உலகில் - பெரியவுலகின்கண், வினைக்கேடரும் - வினையைக் கெடுப்பவர்க

ளும், பிறர்உளரோ - மற்றையருளரோ, சொல்லீர் - (உளராயின் நீங்கள்) சொல்லுங்கள்——, எ - று.

க - ரை. என்னைத்தானே வலியவந்தாண்டருளினன், மேலும் என் என்பினையுருக்கித் திருப்பெருந்துறையிலெழுந்தருளியிருக்கும் பெருமான், என்மனத்தினிடத்தும், கண்ணினிடத்தும் வாக்கினிடத்துமிருக்கின்றனன், இவன்போல வினைக்கேடர் இவ்வுலகத்தில் வேறொருவர் உளரோ, சொல்லுங்கள் என்பதாம்.

வி - ரை. புரை - தொளை, எல்லே-அதிசயவிரக்கச்சொல்.

பற்றாங்கவையற்றீர்பற்றும்
பற்றாங்கதுபற்றி
நற்றாங்கதியடைவோமெனிற்
கெடுவீரோடிவம்மின்
தெற்றார்சடைமுடியான்மன்னு
திருப்பெருந்துறையிறைசீர்
கற்றாங்கவன்கழல்பேணின
ரொடுங்கூடுமின்கலந்தே.

ப - ரை. பற்று அவை அற்றீர் - இருவகைப்பற்றுக்களாகிய அவைகளை ஒழிந்தீர்களாய், பற்றும்பற்று அதுபற்றி - பற்றவேண்டியபற்றாகிய அதனைப்பற்றி, நன்று ஆம்கதி - நன்மையாகிய கதியை, அடைவோம் என்னில் - அடைவோமென்று நீங்கள் எண்ணினால், கெடுவீர் - கெடுவீர்காள், ஓடிவம்மின் - ஓடிவாருங்கள், தேன்தார் - தேனோடுகூடிய கொன்றைமலர் மாலையையணிந்த, சடைமுடியான் - சடைமுடியையுடையான், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறைஇறை - திருப்பெருந்துறை இறைவன், (அவனது)சீர் - புகழை, கற்று-கற்று, அவன்கழல்பேணினரொடும் - அவன்திருவடியை விரும்பியடைந்த அடியவரோடும், கலந்துகூடுமின் - கலந்துகூடுங்கள்——, எ - று.

க - ரை. விடவேண்டியபற்றுககளைவிட்டுப் பற்றவேண்டிய பற்றினைப்பற்றி நற்கதியை யடையவேண்டுமென் றெண்ணுவீர்களாயின், ஓடிவாருங்கள், வந்து திருப்பெருந்துறை யிறைவனது சீரைக்கற்று அவன்திருவடியை விரும்பின அடியாரோடும் கூடுங்கள் என்பதாம்.

வி - ரை. பற்று இரண்டனுள் முன்னையது உலகப்பற்று, பின்னையது கடவுட்பற்று. நன்று-நற்று என வலித்தல்பெற்றது.

தேன். தென் எனக்குறுகிற்று. தென் அழகெனக்கொண்டு, தெற்று - அழகையுடையது எனினுமாம், ஆர் - அரிய. ஆங்கு மூன்றும் அசைநிலைகள். (ரு)

கடலின்றிரையதுபோல்வரு
கலக்கமலமறுத்தென்
உடலும்மெனதுயிரும்புகுந்
தொழியாவண்ணநிறைந்தான்
சுடருஞ்சுடர்மதிசூடிய
திருப்பெருந்துறையுறையும்
படருஞ்சடைமகுடத்தெங்கள்
பரன்றான்செய்தபடிறே.

ப - ரை. கடலின் திரைபோல்வரு - கடலின்கண் அலைகள்போல் ஒன்றன்பின்னொன்றாக வருகின்ற, கலக்கம்மலம்அறுத்து - என்மனோசலநத்தையும் மலங்களையும்மாற்றி, என் உடலும் - என் உடம்பின்கண்ணும், என்து உயிரும் - என் உயிரின்கண்ணும், புகுந்து - பிரவேசித்து, ஒழியாவண்ணம் நிறைந்தான் - ஒழியாவகை நிறைந்திருந்தான், சுடரும்சுடர் - பிரகாசியாநின்ற சீதளகிரணங்களையுடைய, மதி - சந்திரனை, சூடிய - அணிந்த, திருப்பெருந்துறை உறையும் - திருப்பெருந்துறையில் நித்யவாசம்பண்ணுகிற, படரும் - பரந்த, சடைமகுடத்து - சடா மகுடத்தையுடைய, எங்கள்பரன்செய்த - எங்கள் பரமன்செய்த, படிறு எ - வஞ்சகம் இருந்தபடி என்னையே——, எ - று.

க - ரை. கடலின்கண் அலைகள்போல ஒன்றன்பின் ஒன்றாய்த்தொடர்ந்து வருகின்ற கலக்கமலமறுத்து, என் உடலிலும் உயிரிலும்புகுந்து ஒழியாவண்ணம் நிறைந்திருப்பவனும், திருப்பெருந்துறையில் வாழ்வோனுமாகிய சிவபெருமான்செய்த வஞ்சகம் இருந்தவாறென்னை யென்பதாம். (சு)

வேண்டேன்புகழ்வேண்டேன்செல்வம்
வேண்டேன்மண்ணும்விண்ணும்
வேண்டேன்பிறப்பிறப்புச்சிவம்
வேண்டார்தமைநாளும்
தீண்டேன்சென்றுசேர்ந்தேன்மன்னு
திருப்பெருந்துறையிறைதாள்

பூண்டேன்புறம்போகேனினிப்
புறம்போகலொட்டேனே.

ப - ரை. புகழ்வேண்டேன் - புகழைவிரும்பேன், செல்வம் வேண்டேன் - செல்வத்தைவிரும்பேன், மண்ணும் விண்ணும்வேண்டேன் - மண்ணையும் விண்ணையும் விரும்பேன், பிறப்பு இறப்புவேண்டேன் - பிறப்பிறப்பையும் விரும்பேன், சிவம் வேண்டார்தம்மை - சிவத்தை விரும்பாதவரை, நாளும் - எந்நாளும், சென்றுதீண்டேன் - போய்த்தொடேன், மன்னு திருப்பெருந்துறைஇறை தாள் - நிலைபெற்ற திருப்பெருந்துறையிலுள்ள இறைவரது திருவடியை, பூண்டேன் - பூண்டுகொண்டேன், புறம்போகேன் - வெளியிற் போகேன், இனி - இனி, புறம்போகல் ஒட்டேன் - (அத்திருவடியை) வெளியே போகவொட்டேன்——, எ - று.

க - ரை. புகழ் செல்வம் முதலானவற்றை விரும்பேன், சிவத்தைவிரும்பாதவரைச் சென்றுதீண்டேன், சென்றுதிருப்பெருந்துறை யிறைவனது திருவடியை யடைந்தேன், இனிபுறம்போகேன், அந்தத் திருவடியை என்மனத்தி னின்றும் வெளியே போகவொட்டேன் என்பதாம்.

வி - ரை. இறைவனது திருவடிப்பேறு பெற்றார்க்கு மற்றைப்பேறுகளில் விருப்பஞ்சேற லரிதாகலால், "வேண்டேன் புகழ்வேண்டேன் செல்வம்வேண்டேன் மண்ணும் விண்ணும் வேண்டேன் பிறப்பிறப்புச் சிவம்வேண்டார்தமை நாளுந்தீண்டேன் சென்றுசேர்ந்தேன் மன்னுதிருப்பெருந்துறையிறைதாள்" என்றார். (எ)

கோற்றேனெனக்கென்கோகுரை
கடல்வாயமுதென்கோ
ஆற்றேனெங்களரனேயரு
மருந்தேயெனதரசே
சேற்றார்வயல்புடைசூழ்தரு
திருப்பெருந்துறையுறையும்
நீற்றார்தருதிருமேனிநின்
மலனேயுனையானே.

ப - ரை. ஆற்றேன் - சகியேன், எங்கள் அரனே - எங்களுடைய அரனே, அருமருந்தே - அரிய அமுதமே, எனது அரசே - என்னரசனே, சேற்று ஆர்வயல் - சேற்றினை யுடையனவாகிய

வயல்கள், புடை சூழ்தரு - பக்கங்களில் சூழ்ந்திருக்கிற, திருப்பெருந்துறை உறையும் - திருப்பெருந் துறையில் நித்யவாசம் பண்ணுகிற, நீற்று ஆர்தரு - திருவெண்ணீற்றால் நிறைக்கப்பட்ட, திருமேனி - திருமேனியை யுடைய, நின்மலனே - நிர்மலனே, உன்னை - நின்னை, யான் - நான், எனக்கு கோற்றேன் என்கோ - எனக்கு மரக்கிளைகளிற் கட்டியதேன் என்கேனோ, குரை- ஒலியாநின்ற, கடல்வாய் - கடலிற் கிடைத்த, அமுது என்கோ- அமிர்தமென்கேனோ, எ - று.

க - ரை. திருப்பெருந்துறை யிறைவனே, உன்னைக் கோற்றேன்என்பேனோ, பாற் கடலிற் றோன்றிய அமிர்தம் என்பேனோ என்பதாம். (அ)

எச்சம்மறிவேனனெனக்
கிருக்கின்றதை யறியேன்
அச்சோவெங்களரனேயரு
மருந்தேயெனதமுதே
செச்சைமலர்புரைமேனியன்
றிருப்பெருந்துறையுறைவான்
நிச்சம்மெனநெஞ்சின்மன்னி
யானாகிநின்றானே.

ப - ரை. அச்சோ - அச்சோ, எங்கள் அரனே - எங்களுடைய அரனே, அருமருந்தே - அரிய அமிர்தமே, எனது அரசே- என்னரசனே, செச்சைமலர் புரை மேனியன் - வெட்சிமலரை யொத்த திருமேனியை யுடையவனாய், திருப்பெருந்துறை உறைவான் - திருப்பெருந்துறையில் நித்யவாசம் பண்ணுவோனாய், நிச்சம் - நாடோறும், என நெஞ்சில் மன்னி - என் மனத்தில் நிலைபெற்று, யான் ஆகிநின்றானே - நானாகி நின்றவனே, நான் எச்சம் அறிவேன் - நான் எனக்கருளாத உன் குறையை யறிவேன், எனக்கு இருக்கின்றதை அறியேன் - என்னிடத்துள்ள குறையையறிகிலேன், எ—று.

க-ரை. திருப்பெருந் துறையில் வாழ்பவனாய் நாள்தோறும் என் நெஞ்சில் நிலைபெற்று யானாகி நின்றவனே, எனக்கருளாமையாகிய உன் குறையை யறிபவனாயினேன், என்னிடத்துள்ளகுறையை யறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. எச்சம் - குறை. அச்சோ - இரக்கச்சொல். புரைதல் - நிகர்த்தல். நித்தம் நிச்சம் எனவந்தது. (௬)

வான்பாவியவுலகத்தவர்
தவமேசெயவவமே
ஊன்பாவியவுடலைச்சுமந்
தடவிமரமானேன்
தேன்பாய்மலர்க்கொன்றைமன்னு
திருப்பெருந்துறையுறைவாய்
நான்பாவியனானுனை
நல்காயெனலாமே.

ப - ரை. வான்பாவிய உலகத்தவர் - உயர்ந்த விண்ணுலகத்தாரும், தவமே செய்ய - தவத்தையே செய்யாநிற்க, (இழிவினையுடைய நான்) அவமே - வீணே, ஊன்பாவிய - மாமிசம்பொருந்திய, உடலை - உடம்பை, சுமந்து, தாங்கி, அடவிமரம் ஆனேன் - காட்டுமரம்போல் பயனிலி ஆனேன், தேன்பாய் - தேன் பெருகுகின்ற, மலர்க் கொன்றை - மலர்களையுடைய கொன்றை மரங்கள், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறை உறைவாய் - திருப்பெருந்துறையில் நித்யவாசம் பண்ணுவோனே, நான்பாவியன் ஆனால் - நான் பாவியேனாயின், உன்னை நல்காய் எனலாமே, உன்னை அருளா யென்று சொல்லல் தகுமோ, எ—று.

க - ரை. விண்ணுலகத்தார் தவஞ்செய்யாநிற்க, நான்வீணாக இந்த வுடம்பைச் சுமந்து காட்டுமரமானேன், திருப்பெருந்துறையிறைவனே, நான் பாவியேனாயின் உன்னைக்கிருபைசெய்யாதவன் என்று சொல்லலாமோ என்பதாம்.

வி - ரை. வான்பாவிய வுலகத்தவர் - பெருமை நிறைந்த எல்லா வுலகத்தாரும் எனினுமாம். (கப)

# அச்சப்பத்து.

ஆனந்தமுறுதல்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

புற்றில்வாளரவுமஞ்சேன்
    பொய்யர்தம்மெய்யுமஞ்சேன்
கற்றைவார்சடையெம்மண்ணல்
    கண்ணுதல்பாதநண்ணி
மற்றுமோர்தெய்வந்தன்னை
    யுண்டெனநினைந்தெம்பெம்மாற்
கற்றிலாதவரைக்கண்டா
    லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. புற்று இல் - புற்றைவீடாகவுடைய, வாள் - ஒளியுள்ள, அரவும் அஞ்சேன் - பாம்பையுமஞ்சேன், பொய்யர்தம்மெய்யும் அஞ்சேன் - பொய்யர்களுடைய கற்பனையையும் அஞ்சேன், கற்றை - திரட்சியாகிய, வார்சடை - நீண்ட சடையையுடைய, எம்அண்ணல் - எம்பெரியோனாகிய, கண்ணுதல் - நெற்றிக் கண்ணனது, பாதம் நண்ணி-திருவடியை யடைந்து, மற்றும் ஓர் தெய்வம் தன்னை - வேறுமொரு தெய்வத்தை, உண்டு என நினைந்து - உண்டென்று நினைந்து, எம்பெம்மான் - எம்பெருமானை, கற்றிலாதவரைக்கண்டால் - கல்லாதவரைக்கண்டால், அம்ம - அம்மா, நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்விதத்தை யென்சொல்வோம். எ - று.

க - ரை. பாம்புக்கும் அஞ்சேன், பொய்யருக்கும் அஞ்சேன், சிவபெருமானது புகழைக் கல்லாதவரைக்கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம்.

வி - ரை. வாள் - ஒளி. அண்ணல் - பெருமையிற்சிறந்தோன், அஞ்சேன் என ஒருமையால் முதற்கட்கூறி, யாம் அஞ்சுமாறேஎனப் பன்மையால் இறுதிக்கட் கூறுதல் வழுவாமெனின், அன்று, என்னை, பாம்புமுதலியவற்றிற் கஞ்சுதல் தம்மிடத்தும்,

பிறதெய்வங்களை வழிபடுவோரைக்கண்டால் அஞ்சுதல் தம்மிடத்தும் தம்மினத்தாரிடத்தும் கொண்டனராதலா லென்க. (க)

வெருவரேன்வேட்கைவந்தால்
  வினைக்கடல்கொளினுமஞ்சேன்
இருவராள்மாறுகாணு
  வெம்பிரான்றம்பிரானுர்
திருவுருவன்றிமற்றோர்
  தேவரெத்தேவரென்ன
அருவராதவரைக்கண்டா
  லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. வேட்கைவந்தால் வெருவரேன் - ஐம்புல ஆசைவரின் அதற்கு அஞ்சேன், வினைக்கடல் கொளினும் அஞ்சேன் - வினையாகிய கடல் என்னைக் கவரினும் அஞ்சேன், இருவரால் - பிரமவிட்டுணுக்களாகிய இருவராலும், மாறுகாணு - வேறுபட்டுக் காணாத, எம்பிரான் - எம்பெருமானாகிய, தம்பிரானுர் - இறைவரது, திருவுருஅன்றி - திருவுருவத்தையன்றி, மற்று ஓர் தேவர் - வேறொரு தேவர், எத்தேவர் என்ன - எந்தத் தேவரென்று, அருவராதவரைக் கண்டால் - அருவருக்காதவரைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. வேட்கை வந்தால் அஞ்சேன், வினையாகிய கடல் என்னைச் சூழ்ந்துகொண்டாலும் அஞ்சேன், பிரமவிட்டுணுக்கள் மாறுபட்டுக் காணாத சிவபெருமானது திருவுருவத்தையன்றி மற்றைத் தேவர்களைத் தேவர்களல்லரென்று அருவருக்காதவரைக் கண்டால் யாம் அஞ்சுவோம்.

வி - ரை. வினை அளவில்லன என்றற்கு "வினைக்கடல்" என்றார். இருவரால் மாறுபட்டுக் காணாமையாவது, பிரமனாகிய அன்னத்துக்கு இறைவனது திருவடித் தாமரையும், திருமாலாகிய பன்றிக்கு இறைவனது சடைக்காடும் தகுதியாயிருக்க, அவ்வாறு தேடாமல் ஒன்று தேடவேண்டியதனை மற்றொன்று தேடினமையால் காணாமை. இதனைத் திருக்கோவையார், அசு-ம் செய்யுளின் விசேடவுரையிற் காண்க. (உ)

வன்புலால்வேலுமஞ்சேன்
  வளைக்கையார்கடைக்கணஞ்சேன்
என்பெலாமுருகநோக்கி
  யம்பலத்தாடுகின்ற

என்பொலாமணியையேத்தி
        யினிதருள்பருகமாட்டா
அன்பிலாதவரைக்கண்டா
        லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. வல்புலால் வேலும்அஞ்சேன் - வலியதாகிய மாமிசந்தங்கிய வேலினையும் அஞ்சேன், வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன் - வளையலையணிந்த கையினையுடைய மாதரது கடைக்கண்களையும் அஞ்சேன், என்பு எல்லாம் உருகநோக்கி - அன்பருடைய எலும்புகளெல்லாம் உருகும்படி நோக்கி, அம்பலத்து ஆடுகின்ற - அம்பலத்தின்கண் நடிக்கின்ற, என் பொல்லாமணியை ஏத்தி - என் முழுமணியைத் துதித்து, இனிது அருள் பருகமாட்டா - இனிமையாகிய அருளை நுகரமாட்டாத, அன்பு இல்லாதவரைக் கண்டால் - அன்பில்லாதவரைக் காணின், அம்ம நாம்அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. வேலாயுதத்துக்கு அஞ்சேன், மாதரது கடைக்கண்ணுக்கு அஞ்சேன், பொன்னம்பலத்திலாடுகின்ற சிவபெருமானிடத் தன்பு செய்யாதவரைக்கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம். (௩)

கிளியனார்கிளவியஞ்சே
        னவர்கிறிமுறுவலஞ்சேன்
வெளியநீறாடுமேனி
        வேதியன்பாதநண்ணித்
துளியுலாங்கண்ணராகித்
        தொழுதழுதுள்ளநெக்கிங்
களியிலாதவரைக்கண்டா
        லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. கிளி அன்னார் - கிள்ளையை யொத்த மாதர்களுடைய, கிளவி அஞ்சேன் - சொல்லினை யஞ்சேன், அவர் - அவர்களுடைய, கிறி முறுவல் அஞ்சேன் - பொய் நகையைஅஞ்சேன், வெளிய நீறுஆடும் - வெள்ளியநீறு பூசப்பட்ட, மேனி - திருமேனியையுடைய, வேதியன் பாதம் நண்ணி - வேதியனது திருவடியை யடைந்து, துளிஉலாம் கண்ணர்ஆகி - நீர்த்துளிகள் சிந்துகின்ற கண்களையுடையராகி, தொழுது அழுது - வணங்கி யழுது, உள்ளம் நெக்கு - மனம் நெகிழ்ந்து, இங்கு - இவ்விடத்தில், அளி

யிலாதவரைக் கண்டால் - அன்பில்லாதவரைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. மாதரது சொல்லுக்கு அஞ்சேன், அவரது பொய் நகைக்கு அஞ்சேன், சிவபெருமானது திருவடியை யடைந்து அவனை வழிபட்டு மனமுருகாதவரைக் கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம். (ச)

பிணியெலாம்வரினுமஞ்சேன்
பிறப்பினேடிறப்புமஞ்சேன்
துணிநிலாவணியினுன்றன்
றொழும்பரோடழுந்தியம்மால்
திணிநிலம்பிளந்துங்காணுச்
சேவடிபரவிவெண்ணீ
றணிகிலாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. பிணியெலாம் வரினும் அஞ்சேன் - நோய்களெல்லாம் வந்தாலும் அஞ்சேன், பிறப்பினேடு இறப்பும் அஞ்சேன் - பிறப்புக்கும் இறப்புக்கும் அஞ்சேன், துணி நிலா - சந்திரகண்டத்தை, அணியினுன் - அணியாகவுடைய சிவபெருமானுடைய, தொழும்பரோடு - தொண்டரோடு, அழுந்தி - சிவானந்தத்திலழுந்தி, அ மால்-அந்தத் திருமால், திணி - பலம்பொருந்திய, நிலம்-பூமியை, பிளந்தும் - கீண்டு சென்றும், காணு-காணுத, சேவடி - திருவடியை, பரவி - வழிபட்டு, வெண்ணீறு - திருவெண்ணீற்றை, அணிகிலாதவரைக்கண்டால் - அணியாதவர்களைக்கண்டால், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. பிணிகளுக்கு அஞ்சேன், பிறப் பிறப்புக்களுக்கு அஞ்சேன், சிவபெருமானது திருவெண்ணீற்றை யணியாதவரைக் கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம். (ரு)

வாளுலாமெரியுமஞ்சேன்
வரைபுரண்டிடினுமஞ்சேன்
தோளுலாநீற்றனேற்றன்
சொற்பதங்கடந்தவப்பன்
தாளதாமரைகளேத்தித்
தடமலர்புனைந்துநையும்

ஆளலாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. வாள் உலாம் - ஒளி பொருந்திய, எரியும் அஞ்சேன் - நெருப்பையும் அஞ்சேன், வரைபுரண்டிடினும்அஞ்சேன் - மலைகள் புரண்டாலும் அஞ்சேன், தோள்உலாம் நீற்றன் - தோள்களின்மேலணிந்த திருவெண்ணீற்றை யுடையான், ஏற்றன் - இடபவாகனத்தை யுடையான், சொற்பதம் கடந்த அப்பன் - சொல்லளவைக் கடந்த உபகாரசீலன், (அவனுடைய) தாளதாமரைகள் - பாத தாமரைகளை, ஏத்தி - துதித்து, தடம் மலர் புனைந்து - பெருமைபொருந்திய அத்திருவடி மலரை சிரசிலணிந்து, நையும் - நைகின்ற, ஆள் அல்லாதவரைக் கண்டால் - ஆட்படாதவரைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. நெருப்புக்கு அஞ்சேன், மலை புரண்டாலும் அஞ்சேன், சிவபெருமானது திருவடியை வழிபட்டு அவனுக் காட்படாதவரைக் கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம்.

வி - ரை. தடமலர் புனைந்து என்பதற்கு தாமரை மலரைக் கொண் டலங்கரித்து எனினுமாம். தாள தாமரை என்பதில் தாள குறிப்புப்பெயரெச்சம். (சு)

தகைவிலாப்பழியுமஞ்சேன்
சாதலைமுன்னமஞ்சேன்
புகைமுகந்தெரிகைவீசிப்
பொலிந்தவம்பலத்துளாடும்
முகைநகைக்கொன்றைமாலை
முன்னவன்பாதமேத்தி
அகநெகாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. தகைவுஇல்லா - தடுத்தற்கரிய, பழியும் அஞ்சேன் - பழியையும்அஞ்சேன், சாதலை - இறத்தலை, முன்னம் அஞ்சேன் - முன்னமே அஞ்சேன், புகை முகந்த - புகையைக்கொண்ட, எரி - மழுவை, கைவீசி - கையால் வீசி, பொலிந்த - விளங்காநின்ற, அம்பலத்துள் ஆடும் - அம்பலத்தில் நடிக்கின்ற, முகை - மொட்டுக்கள், நகை - விரியாநின்ற, கொன்றைமாலை - கொன்றைமாலையைத் தரித்த, முன்னவன் - முன்னோனது, பாதம் ஏத்தி - திருவடியைத் துதித்து, அகம் நெகாதவரைக்கண்டால் - மனம் உருகாதவரைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. தடுத்தற்கரிய பழிக்கு அஞ்சேன், இறப்புக்கு அஞ்சேன், சிவபெருமானது திருவடியைத் துதித்து மனமுருகாதவரைக் கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம். (எ)

தறிசெறிகளிறுமஞ்சேன்
தழல்விழியுழுவையஞ்சேன்
வெறிகமழ்சடையனப்பன்
விண்ணவர்நண்ணமாட்டாச்
செறிதருகழல்களேத்திச்
சிறந்தினிதிருக்கமாட்டா
அறிவிலாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. தறிசெறி - கட்டுத்தறியிற் கட்டப்பட்ட, களிறும் அஞ்சேன் - யானையையும் அஞ்சேன் - தழல்விழி-நெருப்பையொத்த கண்களையுடைய, உழுவை அஞ்சேன் - புலியையும் அஞ்சேன், வெறிகமழ் சடையன் - மணம் பரிமளிக்கிற சடையையுடையான், அப்பன் - எமது தந்தை, (அவனது) விண்ணவர் நண்ணமாட்டா - தேவர்களும் அடையவொண்ணாத, செறிதரு - நெருங்கிய, கழல்கள் - திருவடிகளை, ஏத்தி - துதித்து, சிறந்து - சிறப்புற்று, இனிது - இனிதாக, இருக்கமாட்டா - இருக்கமாட்டாத, அறிவு இல்லாதவரைக் கண்டால்-அறிவிலிகளைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. யானைக்கு அஞ்சேன், புலிக்கு அஞ்சேன், சிவபெருமானது திருவடியைத் துதித்து, மேன்மையடைந் திருக்கமாட்டாத அறிவிலிகளைக்கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம். (அ)

மஞ்சுலாமுருமுமஞ்சேன்
மன்னரோடுறவுமஞ்சேன்
நஞ்சமேயமுதமாக்கு
நம்பிரானெம்பிரானாய்ச்
செஞ்செவேயாண்டுகொண்டான்
றிருமுண்டந்தீட்டமாட்டா
தஞ்சுவாரவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. மஞ்சு உலாம் - மேகத்திற் சஞ்சரிக்கிற, உருமும் அஞ்சேன் - இடியையும் அஞ்சேன், மன்னரோடு உறவும் அஞ்

சேன் - அரசரோடு உறவு செய்தலையும் அஞ்சேன், நஞ்சமே - விஷத்தையே, அமுதம் ஆக்கும் - உணவாகச்செய்த, நம்பிரான் - இறைவனானவன், எம்பிரான்ஆய் - எம் தலைவனாகி, செஞ்செவே ஆண்டுகொண்டான் - எம்மைச் செவ்வையாக ஆண்டுகொண்டான், (ஆதலால் அவனது) திரு - திருவெண்ணீறாகிய செல்வத்தை, முண்டம் தீட்டமாட்டாது - தமது நெற்றியில் பூச மாட்டாமல், அஞ்சுவார் - அஞ்சுவோர்களாகிய, அவரைக் கண்டால்-அவர்களைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ-று.

க - ரை. இடிக்கும் அஞ்சேன், அரசரோ டுறவு செய்யவும் அஞ்சேன், இறைவன் எம்மை யாண்டுகொண்டான் ஆதலால் நெற்றியில் விபூதி அணியமாட்டாமல் அஞ்சுவோரைக் கண்டால், யாம் அஞ்சுவோம் என்பதாம், (கூ)

கோணிலாவாளியஞ்சேன்
கூற்றுவன்சீற்றமஞ்சேன்
நீணிலாவணியினானை
நினைந்துநைந்துருகிநெக்கு
வாணிலாங்கண்கள்சோர
வாழ்த்திநின்றேத்தமாட்டா
ஆணலாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

ப - ரை. கோள் நிலா - கொலைத்தன்மை தங்கிய, வாளி அஞ்சேன் - அம்பை யஞ்சேன், கூற்றுவன் - யமனது, சீற்றம் அஞ்சேன் - கோவத்தை அஞ்சேன், நீள் - நீண்ட, நிலா அணியினானை - சந்திரனாகிய அணியையுடையானை, நினைந்து - எண்ணி, நைந்து உருகி - மனம் நைந்து உருகி, நெக்கு - நெகிழ்ந்து, வாள் நிலாம் - ஒளி பொருந்திய, கண்கள் - விழிகளில், சோர - நீர் சோர, வாழ்த்தி நின்று - துதித்து நின்று, ஏத்தமாட்டா - புகழ மாட்டாத, ஆண் அலாதவரைக்கண்டால் - ஆண்மையுடைய ரல்லாதாரைக் காணின், அம்ம நாம் அஞ்சுமாறே——, எ - று.

க - ரை. அம்புக்கும் அஞ்சேன், யமனது கோவத்துக்கும் அஞ்சேன், சந்திரசேகரனாகிய சிவபெருமானை நினைந்து நைந்துருகிக் கண்களில் நீரொழுக நின்று வாழ்த்தாதவரைக் கண்டால் யாம் அஞ்சுவோம் என்பதாம்.

வி - ரை. கோண் இலாவாளி என்ப் பிரித்து கோணுதலில்லாத அம்பு என்றுரைத்தலுமாம். (கo

# திருப்பாண்டிப்பதிகம்.

சிவானந்தவிளைவு.

திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

பருவரைமங்கைதன்பங்கரைப்பாண்டியற்காரமுதாம்
ஒருவரையொன்றுமிலாதவரைக்கழற்போதிறைஞ்சித்
தெரிவரநின்றுருக்கிப்பரிமேற்கொண்டசேவகனர்
ஒருவரையன்றியுருவறியாதென்றனுள்ளமதே.

ப - ரை. பருவரை மங்கை தன் பங்கரை - பெரிய பர்வத ராஜ புத்ரியாகிய பார்வதி பாகரை, பாண்டியன்கு ஆர் அமுது ஆம் ஒருவரை - பாண்டியனுக்கு அரிய அமிர்தமாகிய ஒருவரை, ஒன்றும் இல்லாதவரை - ஒரு எல்லை சிறிதும் இல்லாதவரை, கழல் போது இறைஞ்சி - திருவடித்தாமரைகளை யான் வணங்கி, தெரிவர நின்று - கண்ணுக்குத் தெரியும்படி நின்று, உருக்கி-மனத்தை உருகப்பண்ணி, பரிமேற்கொண்ட சேவகனர் ஒருவரை அன்றி - குதிரைமேற்கொண்ட சேவகனர் ஒருவரை அன்றி, என்றன் உள்ளம் - என்மனம், உரு அறியாது - வேறொருதெய்வத்தின் உருவறியமாட்டாது——, எ - று.

க - ரை. உமாதேவிபாகரும், பாண்டியனுக்கு அரிய அமிர்தம்போன்றவரும், ஒருவரம்பில்லாதவரும் ஆகிய சிவபெருமானை, நான் திருவடித்தாமரையை வணங்க, என் கண்ணுக்குப் புலப்படவந்து நின்று என்மனத்தையுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனரையன்றி, வேறொரு தெய்வத்தின் உருவத்தை என் மனமறியமாட்டாது என்பதாம்.

வி - ரை. ஒன்றுமிலாதவர் என்பதற்கு நாமரூபாதிகள் ஒன்றுமில்லாதவர் என்றுரைப்பினுமமையும். உரு என்றது பிறதெய்வங்களினுருவத்தை. பாண்டியன் என்றது அரிமர்த்தந பாண்டியராஜனை, இவனுக்குக் காட்சிகொடுத்து உய்வித்ததனால் இறைவனை, "பாண்டியற்காரமுதாமொருவர்" என்றார். (க)

சதுரைமறந்தறி மால்கொள்வர் சார்ந்தவர் சாற்றிச் சொன்னோம், கதிரைமறைத்தன்ன சோதிகழுக் கடை கைப்பிடித்துக், குதிரையின் மேல்வந்து கூடிடுமேற்குடி கேடுகண்டீர், மதுரையர்மன்னன் மறுபிறப்போட மறித்திடுமே.

ப - ரை. சார்ந்தவர் - அடைந்தவர்கள், சதுரை மறந்து அறிமால் கொள்வர் - தஞ்சதிரை மறந்து அறியாநின்ற ஆசை கொள்வர், சாற்றிச் சொன்னோம் - உறுதியாகச் சொன்னோம், கதிரை மறைத்தன்ன - சூரியகாந்தியை மறைத்தாற்போன்ற, சோதி - பரஞ்சோதி, கழுக்கடை கைப்பிடித்து - ஈட்டியைக் கைப்பிடித்து, குதிரையின் மேல்வந்து கூடிடுமேல்-குதிரைமேற் கொண்டுவந்து கூடிடுமாயின், குடிகேடு கண்டீர் - நமது குடிக்குக் கெடுதியுண்டாகும், மதுரையர் மன்னன் - அரிமர்த்தந பாண்டியராஜனது, மறுபிறப்பு ஓடமறித்திடும் - மறுபிறவியோட அதனைத் தடுக்கும்——, எ - று.

க - ரை. அடைந்தவர் தமது நிலைமையை மறந்து ஆசை கொள்வர், உறுதியாய்ச் சொன்னோம், சூரியனை மறைத்தாற்போன்ற சிவபெருமானது ஒளியுருவானது ஈட்டியைக் கைப்பிடித்துக் குதிரையின்மேல் ஏறிவந்து சந்திக்குமானால் நமது குடிக்குக் கெடுதியுண்டாகும், அன்றியும், பாண்டியனது மறுபிறவியோட அதனைத்தடுக்கும் என்பதாம்.

வி - ரை. சாற்றிச் சொல்லுதல் - பறைசாற்றிச் சொல்லுதல் எனினுமாம். கதிர்-சூரியன் எனினுமாம். கழுக்கடை-சூலம் எனினுமாம், ஆயினுஞ் குதிரைச் சேவகர் ஈட்டியைக் கைக்கொண்டு வருவதே வழக்கமாதலால் ஈட்டியென்றலே பொருத்தமுடைத்து. சோதியைக்காண்டலும் பிறவியோடாநிற்க அதனையோடாமல் தடுத்துக்கொல்லும் என்றவாறாயிற்று, குடிகேடாவது - சந்ததியற்றுப்போதல், (பிறவியற்றொழிதல்). (உ)

நீரின்பவெள்ளத்து ணீந்திக் குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர், பாரின்பவெள்ளங் கொளப்பரிமேற் கொண்ட பாண்டியனார், ஓரின்பவெள்ளத் துருக்கொண்டுதொண்டரை யுள்ளங்கொண்டார், பேரின்ப வெள்ளத்துட் பெய்கழலேசென்று பேணுமினே.

ப - ரை. நீர் - நீங்கள், இன்பவெள்ளத்துள் - ஆநந்தக்கடலில், நீந்தி குளிக்கின்ற - நீந்தி முழுகுகின்ற, நெஞ்சம் கொண்

டீர் - மனத்தையுடையீர், பார்-உலகமெல்லா வற்றையும், இன்ப வெள்ளம் கொள்ள - ஆநந்தக்கடலானது கவர்ந்து கொள்ளு மாறு, பரிமேற்கொண்ட பாண்டியனுர் - குதிரைமேற்கொண்ட பாண்டிப்பிரானுர், ஒர் - ஒப்பற்ற, இன்பவெள்ளத்து உருக்கொ ண்டு - ஆநந்தக்கடலினுருவங்கொண்டு, தொண்டரை உள்ளங் கொண்டார்-தொண்டரை மனங்கவர்ந்தார், (ஆதலால்) பேரின்ப வெள்ளத்துள் - பேரானந்தக் கடலில், பெய்கழலே - (அவரது) வீரக்கழலையணிந்த திருவடியையே, சென்று பேணுமின்-சென்று பற்றுங்கள்——, எ - று.

க - ரை. ஆநந்தக்கடலில் நீந்தி யழுந்தவேண்டு மென்கிற எண்ணமுடையவர்களே, உலகமுழுதும் இன்பப்பெருக்குக் கவ ரும்படி குதிரைமேற்கொண்ட பாண்டிப்பிரானுர், ஒப்பற்ற இன் பப்பெருக்கின் உருவத்தைக்கொண்டு தொண்டருடைய மனங்க ளைக் கவர்ந்துகொண்டார், பேரின்பப்பெருக்கில் இறைவரது திருவடியாகிய புணையையே பற்றுங்கள் என்பதாம்.

வி - ரை. குளித்தல் - அழுந்தல். பேரின்ப வெள்ளத்துட் பெய்கழலே சென்று பேணுமின் என்றமையால், பேணுவிடின் பேரின்பவெள்ளம் உங்களை யீர்த்துச் செல்லும் என்றாராயிற்று. பேணுதல் - பற்றுதல். பாண்டியனுர் என்றது சோமசுந்தர பாண் டியனுய் வந்த இறைவனை. (௬)

செறியும்பிறவிக்குநல்லவர்செல்லன்மின்றென்னனன்னு
டிறைவன்கிளர்கின்றகாலமிக்காலமெக்காலத்துள்ளும் [ட்
அறிவொண்கதிர்வாளுறைகழித்தானந்தமாக்கடவி
எறியும்பிறப்பையெதிர்ந்தார்புரளவிருநிலத்தே.

ப - ரை. தென்னன் நல் நாட்டு-பாண்டியனது நல்ல நாட் டின்கண், இறைவன் - இறைவனுனவன், கிளர்கின்ற காலம் - விளங்குகின்ற காலம், இக்காலம் - இந்தக்காலமே (ஆதலால்) - எக்காலத்துள்ளும் - எந்தக் காலத்திலும், அறிவு - ஞானமாகிய, ஒள் கதிர்வாள் - ஒட்பமாகிய கிரணங்களையுடைய வாளை, உறை கழித்து - உறையை நீக்கி, ஆநந்தமாகடவி - இன்பமென்னுங் குதிரையைச் செலுத்தி, இருநிலத்து - பெரிய நிலவுலகத்தில், எதிர்ந்தார் புரள - எதிர்ந்தவர் புரளும்படி, பிறப்பை எறியும் - பிறவியை வீசுவன், (ஆதலால்) செறியும் பிறவிக்கு - மிக்க பிறவி களுக்கு, நல்லவர் செல்லல்மின் - நல்லோர் செல்லற்க—,எ-று.

க - ரை. பாண்டி நாட்டின்கண் இறைவன் விளங்குதற்குரியகாலம் இந்தக்காலமே, எக்காலத்திலும் ஞானவாளையுறைநீக்கி இன்பமாகிய குதிரையைச் செலுத்தி இவ்வுலகத்தில் பிறந்தவர் புரளும்படி அவர்களுடைய பிறவிப்பகையை வீசுவன், ஆதலால், நல்லவர்கள் இப்பொழுது பாண்டிநாட்டில் பிறவாதிருக்கக்கடவர் என்பதாம்.

வி - ரை. செறிதல் - நெருங்குதல். கிளர்தல்-விளங்குதல். அறிவு - ஞானம். மா - குதிரை. எறிதல் - வெட்டுதல். (௪)

காலமுண்டாகவேகாதல்செய்துய்ம்மின்கருதரிய
ஞாலமுண்டானொடுநான்முகன்வானவர்நண்ணரிய [கு
ஆலமுண்டானெங்கள்பாண்டிப்பிரான் றன்னடியவர்க்
மூலபண்டாரம்வழங்குகின்றான்வந்துமுந்துமினே.

ப - ரை. காலம் உண்டாகவே-காலமுண்டாயிருக்கச்செய்தேயே, காதல்செய்து - அன்புசெய்து, உய்மின் - உஜ்ஜீவியுங்கள், கருது அரிய - நினைத்தற்கரிய, ஞாலம் உண்டானொடு - உலகமுண்டவனோடு, நான்முகன் - பிரமனும், வானவர் - பிறதேவர்களும், நண் அரிய-கிட்டுதற்கரிதாகிய, ஆலம் உண்டான் - விஷமுண்டவன், எங்கள் பாண்டிப்பிரான் - எங்கள் பாண்டிப்பெருமான், தன் அடியவர்க்கு - தன்னடியார்களுக்கு, மூலபண்டாரம் - மூலதநத்தை, வழங்குகின்றான்-வழங்காநின்றான், வந்து முந்துமின் - வந்து முந்துங்கள்——, எ - று.

க - ரை. காலமுண்டாயிருக்கும்போதே இறைவனுக் கன்புசெய்து உய்யுங்கள், திருமால் முதலியோர் அணுகுதற்கரிய விஷத்தையுண்டவனும், எங்கள் பாண்டிப் பிரானுமாகிய சிவபெருமான் தன் அடியார்க்கு மூல திரவியத்தை வழங்காநின்றான், அதனை விரும்புவோர் வந்து முந்துங்கள் என்பதாம்.

வி - ரை. காதல் - அன்பு. ஆலம் - விஷம். பண்டாரம் - பொக்கசம் (களஞ்சியம்). வழங்குதல்-தாராளமாய்க்கொடுத்தல். ஞாலமுண்டான் - திருமால். "ஞாலமுண்டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய ஆலம்" என்றது பாற்கடலிற்றோன்றித் திருமால் முதலிய தேவர்களுக்கு அச்சம் விளைவித்த நஞ்சை" மூலபண்டாரம் என்றது முத்தியை. (ரு)

ஈண்டியமாயாவிருள்கெடவெப்பொருளும்விளங்கத்
தூண்டியசோதியைமீனவனுஞ்சொல்லவல்லனல்லன்
வேண்டியபோதேவிலக்கிலைவாய்தல்விரும்புமின்றாள்
பாண்டியனாரருள்செய்கின்றமுத்திப்பரிசிதுவே.

ப - ரை. ஈண்டிய மாயா இருள்கெட-நெருங்கிய மாயாந்தகாரம் அழியவும், எப்பொருளும் விளங்க - எப்பொருளும் விளங்கவும், தூண்டிய சோதியை - குதிரை செலுத்திவந்த ஒளியை, மீனவனும் - பாண்டியனும், சொல்லவல்லன் அல்லன் - சொல்லவல்லவன் அல்லன், வேண்டிய போதே - விரும்பினபோதே, ஐவாய்தல் விலக்கில் - ஐவாயவேட்கையை விலக்க விரும்பினால், தாள் விரும்புமின் - அவனது திருவடியை விரும்புங்கள், பாண்டியனார் - பாண்டிப்பிரானார், அருள்செய்கின்ற - அருள்செய்தற்குரிய, முத்திப்பரிசு இதுவே - முத்தியின் தன்மை யிதுவேயாம்——, எ - று.

க - ரை. நெருங்கிய மாயையிருள் கெடவும், எப்பொருளும் விளங்கவும், குதிரை செலுத்திவந்த ஒளியைப் பாண்டியனும் சொல்லவல்லனல்லன், விரும்பினபோதே ஐவாயவேட்கையை விலக்க விரும்பினால் அவனது திருவடியை விரும்புங்கள், பாண்டிப்பிரானார் அருள்செய்தற்குரிய முத்தியின் தன்மை யிதுவேயாம் என்பதாம்.

வி - ரை. ஈண்டுதல் - நெருங்குதல். மீனவன் - மீனக்கொடியையுடையவன். இறைவனது அருளொளியானன்றி ஏனைய ஒளிகளான் அழித்தற்கரிய மாயையிருள் என்றற்கு "ஈண்டிய மாயாவிருள்கெட" என்றும், இருணீங்கினாலன்றிப் பதார்த்த தரிசநம் இல்லையாதலால் "இருள்கெட வெப்பொருளும் விளங்க" என்றும் கூறினார். வாய்தல் - வாசல். அது ஐம்பொறிகள் தத்தம்புலன்களிற் செல்லும்வழி. முத்திப்பரிசு - முத்தியாகிய பரிசில் எனினுமாம். பரிசில் - வெகுமதி. (சு)

மாயவனப்பரிமேல்கொண்டுமற்றவர்கைக்கொளலும்
போயறுமிப்பிறப்பென்னும்பகைகள்புகுந்தவருக்
காயவரும்பெருஞ்சீருடைத்தன்னருளேயருளும்[ளே.
சேயநெடுங்கொடைத் தென்னவன் சேவடிசேர்மின்க

ப - ரை. மாயம்வனம் பரிமேல்கொண்டு - மாயமாகிய அழகிய குதிரையை மேற்கொண்டு, மற்றவர் கைக்கொளலும் - (அந்

தத் திருக்கோலத்தை) ஏனையர் தரிசித்தலும், இப்பிறப்பு என்னும் பகைகள்போய் அறும் - இப்பிறவிகளென்னும் பகைகள்போயொழியும், புகுந்தவருக்கு - தன்னைச் சரண்புகுந்தார்க்கு, ஆய - உண்டாகிய, அரு-அருமையாகிய, பெருஞ்சீர்உடை-பெருஞ்சிறப்பையுடைய, தன் அருளே அருளும் - தன்னருளேயே யருள்செய்யும், (ஆதலால்) சேயநெடுங்கொடை - மிகப்பெரிய முத்திக் கொடையையுடைய, தென்னவன்-பாண்டிப்பிரானது, சேவடி - திருவடியை, சேர்மின்கள் - அடைமின்கள்——, எ - று.

க - ரை. மாயமாகிய குதிரையை மேற்கொண்டு அத்திருக்கோலத்தை மற்றவர் தரிசித்தலும் இப்பிறவிகளாகிய பகைகள் போயொழியும், தன்னைச் சரணடைந்தவருக்கு அரும் பெருஞ் சிறப்பையுடைய தன்னருளேயே யருள்செய்யும் ஆதலால் மிகவும் பெரிதாகிய முத்திக் கொடையையுடைய பாண்டிப் பிரானது திருவடியை அடையுங்கள் என்பதாம்.

வி - ரை. பொய்ப்பரியாதலால் மாயப்பரி என்றார். வனம்-அழகு. நெடுமை பெருமைமேலது. (எ)

அழிவின்றிநின்றதொரானந்தவெள்ளத்திடையழுத்திக்
கழிவில்கருணையைக்காட்டிக்கடியவினையகற்றிப்
பழமலம்பற்றறுத்தாண்டவன்பாண்டிப்பெரும்பதமே
முழுதுலகுந்தருவான்கொடையேசென்றுமுந்துமினே.

ப - ரை. அழிவு இன்றி நின்றது - அழிவில்லாமல் நின்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, ஆநந்தவெள்ளத்திடை அழுத்தி - ஆனந்தக் கடலில் அழுந்தப்பண்ணி, கழிவு இல் கருணையைக் காட்டி - நீங்காத கருணையைக்காட்டி, கடியவினை அகற்றி - கொடியவினைகளை அகலப்பண்ணி, பழமலம்பற்று அறுத்து - பழைய மலங்களைப் பற்றறுத்து, ஆண்டவன் - ஆண்டருளினவன் (தருவது பாண்டிப் பெரும்பதமே - பாண்டிப் பெரும்பதத்தை மாத்திரமேயோ (அன்று), முழுது உலகும் தருவான் - எல்லாவுலகங்களையும் உங்கள் ஆட்சியாகத் தருவான், (ஆதலால்) கொடையே - (அவனது) முத்திக்கொடையையே, சென்று முந்துமின் - போய்முந்துங்கள்——, எ - று.

க - ரை. அழிவின்றி நின்றதாகிய ஒப்பற்ற இன்பக்கடலில் அழுத்தி, நீங்காத கருணையைக்காட்டி, கொடியவினைகளை அகலப்பண்ணி, பழமலங்களைப் பற்றறுத்து, ஆண்டருளினவனாகிய சிவபிரான், பாண்டிப்பெரும்பத மாத்திரமன்று எல்லாவுலகங்களை

யும் தந்தருளுவன் ஆதலால், அவனது முத்திக்கொடையையே, முந்திச்சென்று ஏற்றுக்கொள்ளுங்கள் என்பதாம்.

வி - ரை. கழிவு - நீக்கம். பதம் - பதவி. பாண்டிப் பெரும்பதமே என்பதில் ஈற்றேகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. (அ)

விரவியதீவினைமேலைப்பிறப்புமுந்நீர்கடக்கப்
பரவியவன்பரையென்புருக்கும்பரம்பாண்டியனார்
புரவியின்மேல்வரப்புந்திகொளப்பட்டபூங்கொடியார்
மரவியன்மேல்கொண்டுதம்மையுந்தாமறியார்மறந்தே.

ப - ரை. விரவிய - கலந்த, தீவினை - தீவினைகாரணமாகிய, மேலைப்பிறப்பு - மேற்பிறவிகளாகிய, முந்நீர் - கடலை, கடக்க - கடக்கும் பொருட்டு, பரவிய அன்பரை - வழிபட்ட அடியார்களை, என்பு உருக்கும் - என்புருகப்பண்ணுநின்ற, பரம் பாண்டியனார் - மேலான பாண்டிப் பிரானார், புரவியின்மேல் வர - குதிரையின்மேல் வர, புந்திகொளப்பட்ட (அக்கோலத்தினால்) தம் அறிவு கோட்பட்ட, பூங்கொடியார் - மாதர்கள், மர இயல் மேல்கொண்டு - மரத்தின தியற்கையை மேற்கொண்டு, மறந்து - மறந்து, தம்மையும் தாம் அறியார் - தம்மையுந் தாம் அறியாராயினர்,——, எ - று.

க - ரை. தீவினை காரணமாகிய மேலைப் பிறவிகளென்கிற கடலைக் கடக்கும் பொருட்டு வழிபட்ட அடியார்களை என்புருக்குகின்ற பாண்டிப்பிரானார் குதிரையின்மேல் வர, அந்தத் திருக் கோலத்தால் தம் அறிவிழந்த மாதர்கள், தம்மைத்தாமறியாமல் மறந்து மரத்தினது இயற்கையை மேற்கொண்டார்கள் என்பதாம்.

வி - ரை. விரவுதல் - கலத்தல். முந்நீர் - கடல். புரவி - குதிரை. மரவியன்மேல் கொள்ளலாவது - மரம்போலசைவற நிற்றல் (பரவசப்பட்டு நிற்றல்). பூங்கொடியார்-உவமையாகுபெயர். இயல் - சுபாவம். இறைவன் குதிரைச் சேவகனாய் எழுந்தருளின திருக்கோலத்தைக் கண்ணாரக்கண்ட மாதர் அவனது அழகிலீடுபட்டுத் தம்மைத்தாம் மறந்து பரவசப்பட்டு நின்றார்கள் என்றற்கு, "பரம் பாண்டியனார் புரவியின்மேல்வரப் புந்திகொளப்பட்ட பூங்கொடியார் மரவியன்மேல்கொண்டு தம்மையுந்தாமறியார் மறந்தே" என்றார். (கூ)

கூற்றைவென்றாங்கைவர் கோக்களையும்வென்றிருந்தழ
கால், வீற்றிருந்தான்பெருந் தேவியுந்தானுமோர் மீன
வன்பால், ஏற்றுவந்தாருயிருண்டதிறலொற்றைச் சேவ
கனே, தேற்றமிலாதவர் சேவடிசிக்கெனச்சேர்மின்களே

ப - ரை. ஓர் மீனவன்பால் - ஒப்பற்ற பாண்டியனிடத்து, ஏற்றுவந்து - இரந்துவந்து, ஆர் உயிர் உண்ட - (அவனது) அரிய வுயிரையுண்ட, திறல்-வெற்றியையுடைய, ஒற்றைச் சேவகனே - ஒப்பற்ற வீரனே, கூற்றை வென்று - யமனை வென்று, ஆங்கு - அவ்வாறே, ஐவர் கோக்களையும் வென்று - ஐவராகியவிடய அரசர் களையும் வென்று, இருந்து - இருந்து, பெருந்தேவியும் தானும் - பெருந்தேவியும் தானுமாக, அழகால் - அழகோடு, வீற்றிருந் தான் - வீற்றிருந்தனன், தேற்றம் இல்லாதவர் - தெளிவில்லாத வர்களே, சேவடி - அவனது திருவடியை, சிக்கென - உறுதியாக, சேர்மின்கள் - அடையுங்கள்,—எ - று.

க - ரை. ஒப்பற்ற பாண்டியனிடத்தில் இரந்துவந்து அவ னது அரியவுயிரையுண்ட வெற்றியையுடைய ஒப்பற்ற வீரனே, யமனை வென்று, அவ்வாறே விடயங்களாகிய அரசரைவரையும் வென்று, பெருந்தேவியும் தானுமாக அழகோடுவந்து வீற்றிருந் தான், தெளிவில்லாதவர்களே, அவனது திருவடியை உறுதியாக அடையுங்கள் என்பதாம்.

வி - ரை. கோ-அரசன். திறல்-வெற்றி. தேற்றம்-தெளிவு. கூற்றைவென்றது மார்க்கண்டன் பொருட்டு. கூற்றை வென் றாங்கு-யமனை வென்றாற்போல என்றுரைப்பினுமாம். "கூற்றை வென்று" என்று தொடங்கி, "சேர்மின்களே" என்று முடித்த மையால், நீங்களும் இறைவனது திருவடியை யடைந்தால், யமனை வெல்லும் வலியும் ஐம்புல வாசையை அழிக்குந்திறமும் உங்களுக்குண்டா மென்றாராயிற்று. (௧0)

---

# பிடித்தபத்து,

முத்திக்கலப்புரைத்தல்.
திருத்தோணிபுரத்தி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

உம்பர்கட்கரசேயொழிவறநிறைந்த
யோகமேயூத்தையேன்றனக்கு
வம்பெனப்பழுத்தென்குடிமுழுதாண்டு
வாழ்வறவாழ்வித்தமருந்தே
செம்பொருட்டுணிவேசீருடைக்கழலே
செல்வமேசிவபெருமானே
எம்பொருட்டுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. உம்பர்கட்கு அரசே - தேவர்களுக் கிறைவனே, ஒழிவு அறநிறைந்த - நீக்கமின்றி நிறைந்த, யோகமே - உயர்வே, ஊத்தையேன் தனக்கு - மனக்களங்கத்தை யுடையேனாகிய எனக்கு, வம்பு எனப்பழுத்து - புதுமையென்று கண்டோர் சொல்லும்படி கனிந்து, என்குடி முழுது ஆண்டு - என்குடி முழுமையு மாட்கொண்டருளி, வாழ்வு அறவாழ்வித்த - ஏனைய வாழ்வுகள் இணையின்றி யொழியும் வண்ணம் எம்மை வாழ்வித்தருளின, மருந்தே - அமிர்தமா யிருப்பவனே, செம்பொருள் துணிவே, (வேதாகமங்களின்) செவ்விய பொருளினது நிச்சயமா யிருப்பவனே, சீர் உடைக்கழலே - சிறப்பையுடைய திருவடியை யுடையவனே, செல்வமே - ஐசுவரியமா யிருப்பவனே, சிவபெருமானே- சிவபிரானே, எம்பொருட்டு - எங்கள் உய்வின் பொருட்டு, உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் - உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி - இனி, எழுந்தருளுவது - நீயெழுந்தருள்வது, எங்கு - எவ்வாறு,——எ - று.

க - ரை. தேவர்களுக் கிறைவனே, நீக்கமற நிறைந்த உயர்பொருளே, மனக்களங்க முடையவனாகிய எனக்கு, கண்டோர்

இது புதுமையாமென்று சொல்லும் வண்ணம் மனங் கனிந்து என்குடி முழுது மாட்கொண்டு மேலான வாழ்வை யருளின அமிர்தமே, வேதாகமங்களின் செவ்விய பொருளினது நிச்சயமே, சிறந்த திருவடியை யுடையவனே, செல்வமே, சிவபிரானே, எம் பொருட்டு உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருளுவது எவ்வாறு என்பதாம்.

வி - ரை. அன்பரைப் பிறவிக் கடலினின்றும் முத்திக் கரையிலேற்றும் புணையாயிருத்தலால் திருவடியைச் "சீருடைக் கழலே" என்றார். தம்மையொத்த அடியாரையும் தம்மொடுபடுத்தற்கு "எம்பொருட்டு" என்றார். (க)

விடைவிடாதுகந்தவிண்ணவர்கோவே
வினையனேனுடையமெய்ப்பொருளே
முடைவிடாதடியேன்மூத்தறமண்ணாய்
முழுப்புழுக்குரம்பையிற்கிடந்து
கடைபடாவண்ணங்காத்தெனையாண்ட
கடவுளேகருணைமாகடலே
இடைவிடாதுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை: விடை - இடபத்தை, விடாதுகந்த - விடாமலேற்ற, விண்ணவர் கோவே - தேவர்பிரானே, தீவினையினேனுடைய மெய்ப்பொருளே - தீவினையினேனுடைய உண்மைப் பொருளே, அடியேன் - அடியனேன், மூத்து-(அஞ்ஞானத்தால்) முதிர்ந்து,அறமண்ணாய்-முழுதும் பாழாகி, முடைவிடாத புலால் நாற்றம் நீங்காத, முழுப்புழுக் குரம்பையில் கிடந்து - முழுப் புழுக் கூட்டிற் கிடந்து, கடைபடாவண்ணம் - கடையணுகாத வகை - என்னைக் காத்து ஆண்ட - என்னைக் காத்தாட்கொண்ட, கடவுளே - சுவாமி, கருணைமாகடலே - பெருங்கருணைக் கடலே, இடைவிடாது - இடையறாமல், உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்- உன்னை உறுதியாகப் பிடித்தேன், எங்கெழுந்தருளுவதினியே, —— எ - று.

க - ரை. இடபவாகநனே, தேவர் பிரானே, வினையேனது உண்மைப் பொருளே, அடியேன் இப்புழுக்கூடாகிய வுடம்பிற் கிடந்து கடையணுகாத வண்ணம் காத்தருளின கடவுளே, கருணைக் கடலே, இடையறாமல் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருளுவது எவ்வாறு என்பதாம். (உ)

அம்மையேயப்பாவொப்பிலாமணியே
யன்பினில்விளைந்தவாரமுதே
பொய்ம்மையேபொருக்கிப் பெழுதினைச்சுருக்கும்
புழுத்தலைப்புலையனேன்றனக்குச்
செம்மையேயாயசிவபதமளித்த
செல்வமேசிவபெருமானே
இம்மையேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. அம்மையே - தாயே, அப்பா - தந்தையே, ஒப்பு இல்லாமணியே - உவமையற்ற மாணிக்கமே, அன்பினில் விளைந்த - அன்பாகிய கடலில் விளைந்த, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, பொய்ம்மையே பெருக்கி - பொய்யையே பெருகப்பண்ணி, பொழுதினைச் சுருக்கும் - பொழுதைப் போக்குகின்ற, புழுத்து அலை - புழுத்தலையாநின்ற, புலையனேன் தனக்கு - புலையனேனுக்கு, செம்மைஆய - செப்பமாகிய, சிவபதம் அளித்த - சிவபதத்தைத்தந்த, செல்வமே—,சிவபெருமானே—,இம்மையே-இம்மையிற்றானே, உன்னைச் சிக்கெனப்பிடித்தேன்—,எங்கு எழுந்து அருளுவது இனி—, எ - று.

க - ரை. தாயே, தந்தையே, உவமையற்ற மாணிக்கமே, அன்பென்னுங் கடலிற் றோன்றிய அமிர்தமே, பொய்யைப் பெருக்கிப் பொழுதைப் போக்குகின்ற புலையேனுக்குச் செப்பமாகிய சிவபதத்தைத் தந்த செல்வமே, சிவபெருமானே, இம்மையில் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம்.

வி - ரை. ஆன்மாக்களுக்கு நித்தியமாகிய தாய் தந்தை சிவபெருமா னாதலால் "அம்மையே அப்பா" என்றார். விளைந்தவாரமுதே என்றமையால் அன்பைக் கடலாக்கி யுரைக்கலாயிற்று. ( )

அருளுடைச்சுடரேயளிந்தவோர்கனியே
பெருந்திறலருந்தவர்க்கரசே
பொருளுடைக்கலையேபுகழ்ச்சியைக்கடந்த
போகமேயோகத்தின்பொலிவே
தெருளிடத்தடியார்சிந்தையுட்புகுந்த
செல்வமேசிவபெருமானே
இருளிடத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. அருள் உடைச்சுடரே - அருளையுடைய தீபமே, அளிந்தது - கனிந்ததாகிய, ஓர் கனியே - ஒரு கனியே, பெருந் திறல் - பெருவலி யமைந்த, அருந்தவர்க்கு அரசே - அரிய தபோதநருக்கு அரசனே, பொருள் உடை- உண்மைப்பொருளையுடைய, கலையே - நூலே, புகழ்ச்சியைக்கடந்த-கீர்த்தியைக்கடந்த, போகமே - போகமே, யோகத்தின் பொலிவே - யோகத்தின் பிரபாவமே, தெருள் இடத்து - தெளிவாகிய இடத்தையுடைய, அடியார் சிந்தையுள் புகுந்த - அடியவர் மனதிற் புகுந்த, செல்வமே—,சிவபெருமானே—,இருளிடத்து - அஞ்ஞான இருள்மிகுந்த இவ்வுலகத்தில், உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் - உன்னை யுறுதியாகப் பற்றினேன், எங்கெழுந்தருளுவ தினியே—,எ - று.

க - ரை. அருட் சுடரே, கனிந்த கனியே, அருந்தவர்க் கரசனே, மெய்ப்பொருளையுடைய நூலே, புகழ்ச்சிக்கெட்டாதபோகமே, யோகத்தின் விளக்கமே, தெளிந்த அடியவர்மனத்திற்புகுந்த செல்வமே, சிவபெருமானே, அஞ்ஞான இருள் நிறைந்த இவ்வுலகத்தில் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம்.

வி - ரை. தவவலியின் மிக்க ஆற்றலின்மையால், "பெருந்திற லருந்தவர்க்கு" என்றார். அது கௌதமன், குறுமுனி முதலானோரிடத்துக் காண்க. (ச)

ஒப்புனக்கில்லாவொருவனேயடியே
　　னுள்ளத்துளொளிர்கின்றவொளியே
மெய்ப்பதமறியாவீறிலியேற்கு
　　விழுமியதளித்ததோரன்பே
செப்புதற்கரியசெழுஞ்சுடர்மூர்த்தீ
　　செல்வமேசிவபெருமானே
எய்ப்பிடத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
　　னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. உனக்கு ஒப்பு இல்லா ஒருவனே - உனக்கு உவமைப்பொருளொன்றில்லாத ஒருவனே, அடியேன் உள்ளத்துள்- அடியேனது மனத்தில், ஒளிர்கின்ற ஒளியே - பிரகாசிக்கிற பிரகாசமே, மெய்ப்பதம் அறியா - உண்மைப் பதத்தை யறியாத, வீறு இலியேற்கு - மேன்மையில்லாதவனாகிய எனக்கு, விழுமியது - மேலான பொருளை, அளித்தது - தந்தருளினதாகிய, ஓர் அன்பே - ஒப்பற்ற அன்புருவே, செப்புதற்கு அரிய - சொல்லு

தற் கரிதாகிய, செழுஞ்சுடர் மூர்த்தி - செழுமையாகிய சுடருருவே, செல்வமே,—சிவபெருமானே—,எய்ப்பு இடத்து-இளைத்த இடத்தில், உன்னைச் சிக்கெனப் பிடித்தேன், எங்கு எழுந்தருளுவ தினியே,——எ - று.

க - ரை. ஒப்பில்லாதவனே, அடியேன் மனத்தில் விளங்குகின்ற ஒளியே, உண்மைப் பதத்தை யறியாத எனக்கு மேலாகிய பொருளைத் தந்தருளினதாகிய அன்புருவே, சொல்லுதற் கரிதாகிய செழுஞ்சுட ருருவே, செல்வமே, சிவபெருமானே, இளைத்த இடத்தில் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம். (ரு)

அறவையேன்மனமேகோயிலாக்கொண்டாண்
டளவிலாவாநந்தமருளிப்
பிறவிவேரறுத்தென்குடிமுழுதாண்ட
பிஞ்ஞகாபெரியவெம்பொருளே
திறவிலேகண்டகாட்சியேயடியேன்
செல்வமேசிவபெருமானே
இறவிலேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. அறவையேன் மனமே - அநாதையேனாகிய என் மனத்தையே, கோயிலாக் கொண்டு - கோயிலாகக் கொண்டு, ஆண்டு - ஆண்டருளி, அளவு இல்லா - அளவற்ற, ஆநந்தம் அருளி - இன்பத்தைக் கொடுத்து, பிறவிவேர் அறுத்து - என் பிறவியை வேரோடு களைந்து, என்குடி முழுது ஆண்ட - என் குடி முழுதையு மாண்டருளின, பிஞ்ஞகா - பிஞ்ஞகனே, பெரிய எம்பொருளே - பெரிதாகிய எமது செல்வமே, திறவிலேகண்ட காட்சியே - வெளிப்படையாகக் கண்ட காட்சியே, அடியேன் செல்வமே--,சிவபெருமானே—,இறவிலே-முடிவிலே, உன்னைச் சிக்கெனப்பிடித்தேன்—,எங்கெழுந்தருளுவதினியே,—— எ - று.

க - ரை அறவையாகிய என் மனத்தைக் கோயிலாகக் கொண்டாண்டு, எல்லையில்லா இன்பத்தை யருள்செய்து, பிறவி வேரறுத்து, என்குடி முழுது மாண்டருளின பிஞ்ஞகனே, எம் பெருஞ் செல்வமே, வெளிப்படையாய்க் கண்ட காட்சியே, செல்வமே; சிவபெருமானே, முடிவிலே உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம்.

வி - ரை. அறவை-திக்கற்றவன், திறவு-திறத்தல். (வெளியாதல்) காட்சி - தோற்றம். அற்புதம் எனினுமாம். இறவு-இறுதி. ()

பாசவேரறுக்கும்பழம்பொருடன்னைப்
பற்றுமாறடியனேற்கருளிப்
பூசனையுகந்தென்சிந்தையுட்புகுந்து
பூங்கழல்காட்டியபொருளே
தேசுடைவிளக்கேசெழுஞ்சுடர்மூர்த்தி
செல்வமேசிவபெருமானே
ஈசனேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. பாசவேர் அறுக்கும் - இருவகைப் பற்றுக்களின் வேரை யறுக்கின்ற, பழம்பொருள் தன்னை - பழம் பொருளை, பற்றுமாறு அடியனேற்கு அருளி - பற்றும் வகையை எனக்கு அருள்செய்து, பூசனை உகந்து - என் பூசையை யேற்று, என் சிந்தையுள் புகுந்து - என் மனத்திற் புகுந்து, பூங்கழல் காட்டிய பொருளே - பொலிவாகிய திருவடியைக் காட்டின பொருளே, தேசு உடைவிளக்கே - ஒளியை யுடைய தீபமே, செழுஞ்சுடர் மூர்த்தி - செழுமையாகிய ஒளியுருவே, செல்வமே—, சிவபெருமானே—, ஈசனே-ஈச்சுரனே, உன்னைச் சிக்கெனப்பிடித்தேன்—, எங்கெழுந்தருளுவ தினியே,—— எ - று.

க - ரை. பாசவேரைச் சேதிக்கின்ற உபாயத்தைப் பற்றும் வழியை யெனக் கருள்செய்து, என் பூசையை யேற்று, என்மனத்திற் புகுந்து திருவடியைக் காட்டிய பொருளே, ஒளியையுடைய தீபமே, ஒளியுருவமே, செல்வமே, சிவபெருமானே, ஈசனே, உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்ருள்வது எவ்வாறு என்பதாம்.

வி - ரை. பாசம் - மாயை யெனினுமாம். பழம்பொருள் - பழைய வுபாயம். பூ-அழகு, அன்றித் தாமரைமலர் எனினுமாம்.

அத்தனேயண்டரண்டமாய்நின்ற
வாதியேயாதுமீறில்லாச்
சித்தனேபத்தர்சிக்கெனப்பிடித்த
செல்வமேசிவபெருமானே
பித்தனேயெல்லாவுயிருமாய்த்தழைத்துப்
பிழைத்தவையல்லையாய்நிற்கும்

எத்தனேயுன்னேச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. அத்தனே - தந்தையே, அண்டர் அண்டமாய் நின்ற - தேவர்களுக்கோ ரண்டமாகிநின்ற, ஆதியே - முதல்வனே, யாதும் ஈறுஇல்லா-சிறிதும்முடிவில்லாத, சித்தனே-அறிவுருவனே,பத்தர்சிக்கெனப்பிடித்த-பக்தர்கள்உறுதியாகப்பற்றின,செல்வமே—,சிவபெருமானே—,பித்தனே-பிச்சனே,எல்லாவுயிருமாய்த்தழைத்து-எல்லா வுயிர்களுமாகித் தழைத்து, பிழைத்து-தப்பி, அவை யல்லேயாய் நிற்கும் - அவைக ளல்லேயாய் நிற்கிற, எத்தனே—,உன்னேச்சிக்கெனப்பிடித்தேன்—,எங்கெழுந்தருளுவதினியே—,எ - று.

க - ரை. அத்தனே, ஆதியே, முடிவிலலாத சித்தனே, பத்தர் உறுதியாய்ப் பிடித்த செல்வமே, சிவபெருமானே, பித்தனே, எல்லா வுயிர்களுமாகிச் செழித்து அவை யல்லாமலும் நிற்கின்ற எத்தனே, உன்னே உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம்.

வி - ரை. சித்தன்-கீர்த்தியுள்ளோன் எனினுமாம், எத்தன்-உபாயத்தில் வல்லவன். எல்லாவுயிருமாயிருந்தும் இறைவன் பற்றறநிற்றலால், "எல்லா வுயிருமாய்த் தழைத்துப்பிழைத்தவை யல்லேயாய் நிற்கும் எத்தனே" என்ருர். (அ)

பாலினேந்தூட்டுந்தாயினுஞ்சாலப்
பரிந்துநீபாவியேனுடைய
ஊனினேயுருக்கியுள்ளொளிபெருக்கி
யுலப்பிலாவானந்தமாய
தேனினேச்சொரிந்துபுறம்புறந்திரிந்த
செல்வமேசிவபெருமானே
யானுனேத்தொடர்ந்துசிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. பால் - பாலே, நினேந்து ஊட்டும் - காலமறிந்தூட்டுகிற, தாயினும் - தாயைப் பார்க்கினும், சாலப்பரிந்து - மிகவும் பரிவுகொண்டு, நீபாவியேனுடைய ஊனினே உருக்கி - நீபாவியேனது உடம்பை யுருகப்பண்ணி, உள் ஒளிபெருக்கி - மனத்துக்கொளியாகிய ஞானத்தைப் பெருகப்பண்ணி, உலப்பு இல்லா - கெடுதியில்லாத, ஆனந்தம் ஆய - இன்பமாகிய, தேனினேச் சொரிந்து - தேனேப் பொழிந்து, புறம்புறம் திரிந்த - புறம் புறமாகத்

திரிந்த, செல்வமே—,சிவபெருமானே—,யான் உன்னைத் தொடர்ந்து-நான் உன்னைத்தொடர்ந்து, சிக்கெனப்பிடித்தேன்—, எங்கெழுந்தருளுவ தினியே,——எ - று.

க - ரை. தாயினும் மிக்க அன்புள்ளவனாய், பாவியேனது ஊனையுருக்கி, உள்ளொளியைப் பெருகச்செய்து, கெடுதியில்லாத இன்பத்தேனைச் சொரிந்து, அயலாய்த் திரிந்த செல்வமே, சிவபெருமானே, நான் உன்னைத் தொடர்ந்து உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம். (கூ)

புன்புலால்யாக்கைபுரைபுரைகனியப்
பொன்னெடுங்கோயிலாப்புகுந்தென்
என்பெலாமுருக்கியெளியையாயாண்ட
வீசனேமாசிலாமணியே
துன்பமேபிறப்பேயிறப்பொடுமயக்காந்
தொடக்கெலாமறுத்தநற்சோதீ
இன்பமேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ப - ரை. புல்புலால் யாக்கை - அற்பமாகிய புலாலுடம்பு, புரைபுரை கனிய - உட்டுளைகள்தோறும் கனிய, (அதனை) பொன் - பொன்னினாற் செய்யப்பட்ட, நெடுங்கோயில் ஆ - பெரிய கோயிலாகக் கொண்டு, புகுந்து - நுழைந்து, என் என்பு எல்லாம் உருக்கி - என்னெலும்புகளை யெல்லாம் உருகப்பண்ணி, எளியை ஆய் - எண்மையனாகி, ஆண்ட - ஆண்டருளின, ஈசனே- ஈச்சுரனே, மாசு இல்லா மணியே, குற்றமில்லாத மாணிக்கமே, துன்பமே - துன்பமும், பிறப்பே - பிறப்பும், இறப்பொடு - இறப்போடுகூடிய, மயக்குஆம் - மயக்கமும் ஆகிய, தொடக்கு எல்லாம் அறுத்த - பற்றுக்களெல்லா வற்றையும் அறுத்தருளின, நல் சோதீ - மேலான சோதியே, இன்பமே - ஆநந்தமே, உன்னைச் சிக்கெனப்பிடித்தேன்—,எங்கு எழுந்தருளுவதினியே,——எ-று.

க - ரை. என்புலா லுடம்பையே பொற்கோயிலாகக் கொண்டு அதிற் புகுந்து என் என்பெல்லா முருகச்செய்து எளியையாகி ஆண்டருளின ஈசனே, மாசிலாமணியே, துன்பம் பிறப்பு இறப்பு மயக்கம் முதலானவற்றை யறுத்த பேரொளியே, இன்பமே, உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீயெழுந்தருள்வது எவ்வாறு என்பதாம், (௧0)

# திருவேசறவு.

## சுட்டறிவொழித்தல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

### கோச்சகக்கலிப்பா.

இரும்புதருமனத்தேனையீர்த்தீர்த்தெனென்புருக்கிக்
கரும்புதருசுவையெனக்குக்காட்டினையுன்கழலிணைகள்
ஒருங்குதிரையுலவுசடையுடையானேநரிகளெல்லாம்
பெருங்குதிரையாக்கியவாறன்றேயுன்பேரருளே.

ப - ரை. இரும்புதரும் மனத்தேனை - இரும்பை யொத்த மனத்தினையுடைய என்னை, ஈர்த்து ஈர்த்து - இழுத்து இழுத்து, என் என்பு உருக்கி - என்னெலும்புகளை யுருகப்பண்ணி, கரும்பு தருசுவை - கரும்பஞ்சாற்றினால் தரப்பட்ட சுவைபோல, உன் கழலிணைகள் காட்டினை - உன் திருவடியிணையைக் காட்டியருளினை; ஒருங்கு - ஒருங்கே, திரை உலவு - கங்கை யுலாவுகின்ற, சடை உடையானே - சடையை யுடையவனே, நரிகள்எலலாம் - நரிகளெல்லாவற்றையும், பெருங்குதிரை ஆக்கிய ஆறு அன்றே - பெரிய குதிரைகளாகச் செய்தருளின விதமல்லாவா, உன்பேரருள் - உன் பெருங்கருணையாவது, எ - று.

க - ரை. இரும்பை நிகர்த்த மனத்தையுடைய என்னை யெலும்புருகப்பண்ணி, கருப்பஞ்சாற்றின் சுவைபோல உன்னிரண்டு திருவடிகளைக் காட்டினை, கங்கைச் சடையனே, நரிகளை யெல்லாம் பரிகளாகச் செய்ததல்லவா உன் பேரருள் என்பதாம்.

வி - ரை. இரும்புதரு என்பதில் தரு உவமவுருபு, கரும்பு தரு என்பதில் தரு என்பதும் அது. (க)

பண்ணார்ந்தமொழிமங்கைபங்காநின்னாளானார்க்
குண்ணார்ந்தவாரமுதேயுடையானேயடியேனை
மண்ணார்ந்தபிறப்பறுத்திட்டாள்வாய்நீவாவென்னக்
கண்ணாரவுய்ந்தவாறன்றேயுன்கழல்கண்டே.

ப - ரை. பண் ஆர்ந்த-பண்ணின் தன்மைநிறைந்த,மொழி-சொல்லையுடைய, மங்கை - உமாதேவியின், பங்கா - பாகனே, நின் ஆள் ஆனார்க்கு - உன்னடிமை யானார்க்கு, உண் - உண்பதற்குரிய, ஆர்ந்த - நிறைந்த, ஆர் அமுதே - அரிய அமிர்தமே,உடையானே,உடையவனே-அடியேனை-அடியனேனை,மண் ஆர்ந்தபிறப்பு அறுத்திட்டு-மண்ணுலகிற் பொருந்திய பிறவிகளை யறுத்திட்டு, ஆள்வாய்-ஆள்பவனே, நீ வாவென்ன- நீ வாவென்றழைத்தலும், உன் கழல் - உன்திருவடியை, கண் ஆரக்கண்டு அன்றே - கண்ணாரக்கண்டு அன்றோ, உய்ந்தஆறு - யான் உய்ந்தவிதம், எ - று.

க - ரை. உமாதேவிபங்கனே, அடியார்க்கு அமிர்தமாயிருப்பவனே, அடியேனை இப் பிறப்பறுத்து ஆள்பவனே, நீ வாவென்றழைத்தலும், உன் திருவடியைக் கண்ணாரக் கண்டல்லவோ நான் பிழைத்தவிதம் என்பதாம். (௨)

ஆதமிலியான்பிறப்பிறப்பென்னுமருநரகில்
ஆர்தமருமின்றியேயழுந்துவேற்காவாவென்
றோதமலிநஞ்சுண்டவுடையானேயடியேற்குன்
பாதமலர்காட்டியவாறன்றேயெம்பரம்பரனே.

ப - ரை. ஆதம் இலி - ஆதரவற்றவனாகிய, யான் - நான், பிறப்பு இறப்பு என்னும் - பிறப்பு இறப்பு என்கிற, அருநரகில் - அரிய நரகத்தில், ஆர் தமரும் இன்றியே - உறவினர் ஒருவருமில்லாமலே,அழுந்துவேற்கு - அழுந்துகின்ற எனக்கு,ஆவாவென்று-ஐயோவென்றுஇரங்கி, ஓதம்மலி-கடலின்கண்மிக்கெழுந்த,நஞ்சு-விடத்தை, உண்ட - பருகின, உடையானே - உடையவனே, அடியேற்கு - அடியேனுக்கு, உன் பாதமலர் காட்டியவாறு - உன் திருவடி மலரைக் காட்டியவிதம் என்ன, எம் பரம்பரனே - எங்களுடைய பரம்பரனே, எ - று.

க - ரை. இறைவனே, பிறப் பிறப்பென்னும் அரிய நரகத்தில் ஆதரவற்றவனாய் அழுந்துகின்ற எனக்கு அந்தோ வென்றிரங்கி, உன் திருவடியைக் காட்டின விதம் என்னோ, என்பதாம்.

வி - ரை. ஆதம் - ஆதரவு, தமர் - உறவினர், ஓதம்-கடல். அன்று எ அசை நிலைகள். (௩)

பச்சைத்தாலரவாட்டிபடர்சடையாய்பாதமலர்
உச்சத்தார்பெருமானேயடியேனையுய்யக்கொண்
டெச்சத்தார்சிறுதெய்வமேத்தாதேயச்சோவென்
சித்தத்தாறுய்ந்தவாறன்றேயுன்றிறனினைந்தே.

ப - ரை. பச்சைத்தாலு-பச்சை நிறமாகிய நாவினையுடைய, அரவுஆட்டீ-பாம்பைஅனாயிற்கட்டிஅசைப்பவனே,படர்சடையாய்-பரந்தசடையையுடையானே,பாதமலர்-திருவடிமலரை,உச்சத்தார்-சிரசின்மேற்றாங்கின அன்பராகிய பெருமானே-பிரானே, அடியேனை உய்யக்கொண்டு-அடியேனை உய்யும்படி யேற்றுக்கொண்டு, எச்சத்து ஆர் - குறைவினால் நிறைந்த, சிறுதெய்வம் - சிறுதெய்வங்களை, எத்தாதே - துதியாதே, அச்சோ - அந்தோ, உன் திறன் நினைந்து - உன் திறத்தையெண்ணி, என் சித்தத்து ஆறு - என் நினைவின் பிரகாரம், உய்ந்த ஆறு - உய்ந்த விதம் என்ன வியப்பு, எ - று.

க - ரை. பாம்பாட்டீ, படர்ந்த சடையை யுடையவனே, அன்பர் பெருமானே, நீ அடியேனை யாட்கொண்டமையால், சிறு தெய்வங்களைத் துதியாமல் என் எண்ணத்தின்படி நான் உன் தன்மையை நினைந்து உயந்தவிதம் என்ன வியப்பு என்பதாம்.

வி - ரை. பச்சைத்தாள் என்றும் பாடம். இதற்குப் பச்சைக்கால் எனப் பொருள் கூறலாம். ஆயின் பாம்புக்குக் காலிலி யென்னும் பெயர் வழங்குதலாலும், உயிருண்ணிப்பத்து முதற்பாட்டில் "பைந்நாப்பட வரவே ரல்குல்" எனக்கூறுதலாலும், தாள் என்னும் பாடம் பாடமன்மை யறிக. உச்சம்-உயர்ச்சி,உச்சத்தார் - உயர்ச்சியுடையோராகிய முனிவர் தேவர் முதலாயினோர் எனினுமமையும். (ச)

கற்றறியேன்கலைஞானங்கசிந்துருகேனுயிடினும்
மற்றறியேன்பிறதெய்வம்வாக்கியலால்வார்கழல்வந்
துற்றிறுமாந்திருந்தேனெம்பெருமானேயடியேற்குப்
பொற்றவிசுநாய்க்கிடுமாறன்றேநின்பொன்னருளே.

ப - ரை. கலை ஞானம் - கலைஞானங்களை, கற்றறியேன் - கற்றுணரேன், கசிந்து உருகேன் - மனங்கசிந் துருகமாட்டேன், ஆயிடினும் - ஆனாலும், பிறதெய்வம் - வேறு தெய்வத்தை, அறியேன் - அறிந்திலேன், வாக்கு இயலால் - வாக்கின் தன்மையால், வந்து - வந்து, வார்கழல் உற்று - பெரிய கழலையணிந்த திருவடியையடைந்து, இறுமாந்து இருந்தேன் - இறுமாப்புக் கொண்டிருந்தேன், எம்பெருமானே - எம்பிரானே, அடியேற்கு - அடியேனுக்குச்செய்த, நின் பொன் அருள் - உன் திருவருளானது,நாய்க்கு பொற்ற விசு இடும் ஆறு - நாய்க்குச் சுவர்ணாசன மிட்டபிரகாரம், (இது என்ன வியப்பு,) எ - று.

க - ரை. கலைஞானத்தைக் கற்றறியேன், மனங் கசிந்துரு கேன், ஆயினும், வேறு தெய்வத்தை யறிந்திலேனாகி வந்து உன் திருவடியை யடைந்து இறுமாந்திருந்த எனக்கு உன்னருள் வாய்த்தது பொற்றவிசுநாய்க் கிட்டாற்போல்வதன்றோ என்பதாம்.

வி - ரை. கலை - நூல், கலைஞானம் - நூலறிவு, வாக்கியல்- வாக்கின் தொழில் (பாடுதல்) (ரு)

பஞ்சாயவடிமடவார்கடைக்கண்ணாலிடர்ப்பட்டு
நஞ்சாயதுயர்கூரநடுங்குவேனின்னருளால்
உய்ஞ்சேனெம்பெருமானேயுடையானேயடியேனை
அஞ்சேலென்றாண்டவாறன்றேயம்பலத்தமுதே.

ப - ரை. பஞ்சு ஆய அடி - செம்பஞ்சியூட்டிய பாதங்களை யுடைய, மடவார் - மாதர்களுடைய, கடைக்கண்ணால் - கடைக்கண் பார்வையால், இடர்ப்பட்டு - துன்பப்பட்டு, நஞ்சு ஆய - விடத்தன்மையுள்ள, துயர் கூர - துன்பமிக, நடுங்குவேன் - நடுங்குவேனானேன், எம்பெருமானே:——, உடையானே - உடையவனே, அடியேனை - அடியனேனை, அம்பலத்து அமுதே - தில்லையம்பலத்தின் கண்ணதாகிய அமிர்தமே, நின் அருளால்-உன்கருணையால், அஞ்சேல் என்று - அஞ்சாதேயென்று, ஆண்டவாறு அன்றே-ஆண்டருளின விதத்தாலன்றோ, உய்ஞ்சேன்-நான் உய்ந்தேன், எ - று.

க - ரை. மாதர் கடைக்கண்ணால் வருந்தி நடுங்குகின்றநான் உன் அருளால் உய்ந்தேன், நீ அடியேனை அஞ்சேல் என்று ஆண்டருளினவிதம் என்னவியப்பு என்பதாம்.

வி - ரை. பஞ்சாய - பஞ்சூட்டப்பெற்ற, மடவார் - மடப்பத்தை யுடையார், துயர் கூர்தல் - துயரமிகுதல். (சு)

என்பாலைப்பிறப்பறுத்திங்கிமையவர்க்குமறியவொண்ணாத்
தென்பாலைத்திருப்பெருந்துறையுறையுஞ்சிவபெருமான்
அன்பாநீயகநெகவேபுகுந்தருளியாட்கொண்ட
தென்பாலேநோக்கியவாறன்றேயெம்பெருமானே.

ப - ரை. என் பாலைப்பிறப்பு அறுத்து - என்னிடத்துப் பிறவியைஅறுத்து, இங்கு - இவ்விடத்து, இமையவர்க்கும் அறிய வொண்ணா - தேவர்களுக்கு மறியவொண்ணாத, தென்பாலை - தென்றிசைக் கண்ணதாகிய, திருப்பெருந்துறை உறையும்-திருப் பெருந்துறையில் வாசம்பண்ணுகிற, சிவபெருமான் - சிவபெரு

மானே, நீ - நீ, அன்பால் - என்மீதுவைத்த கருணையால், அகம் நெக -மனநெகிழும்படி, புகுந்தருளி - எழுந்தருளி, ஆட்கொண்டது - ஆட்கொண் டருளினது, எம்பெருமானே - எம்பிரானே, என்பாலேநோக்கியவாறு அன்றே-என்னிடத்தேநோக்கம்வைத்த பிரகாரமன்றே, எ - று.

க - ரை. தேவர்களுக்கும் அறியவொண்ணாத தென் திருப்பெருந்துறைச் சிவபெருமானே, என் பிறப்பறுத்து, என்மனமுருகப் புகுந்தருளி, அன்பினால் நீ யாட்கொண்டது என்னிடத்து உன் கிருபா நோக்கம்வைத்த விதமன்றே என்பதாம்.

வி - ரை. பாலே என்பவற்றுள் ஐசாரியை. இமையவர்க்கும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. (எ)

மூத்தானேமூவாதமுதலானேமுடிவில்லா
ஓத்தானேபொருளானேயுண்மையுமாயின்மையுமாய்ப்
பூத்தானேபுகுந்திங்குப்புரள்வேனைக்கருணையினால்
பேர்த்தேநீயாண்டவாறன்றேயெம்பெருமானே.

ப - ரை. மூத்தானே - முதிர்ந்தவனே, மூவாத - முதிராத, முதலானே - முதல்வனே, முடிவுஇல்லா-முடிவற்ற, ஓத்தானே - வேதத்தை யுடையவனே, உண்மையும் ஆய் - மெய்யுமாகி, இன்மையும் ஆய் - பொய்யுமாகி, பூத்தானே புகுந்து - பூமியில் நீயே வலியவந்து, இங்குப் புரள்வேனை - இங்குப்புரளாநின்ற என்னை, கருணையினால் - கிருபையினால், எம்பெருமானே - எம்பிரானே, பேர்த்தே நீ யாண்டவாறு - நிலைபெயர்த்து ஆண்டருளினவிதம் என்ன வியப்பு, எ - று.

க - ரை. இறைவனே, இவ்வுலகத்திற் பிறந்திறந்துழல்வேனாகிய என்னைக் கருணையினால் ஆண்டருளினவிதம் என்ன வியப்பு என்பதாம்.

வி - ரை. ஓத்து-வேதம், பேர்த்தல் - நிலைபெயர்த்தல். பூ-பூமி. "உண்மையுமா யின்மையுமாய்ப் பூத்தானே" என்பதற்கு அன்பர்க்கும் அல்லாதார்க்கும் முறையே மெய்யும் பொய்யுமாய்த் தோன்றுவோனே என்றுரைத்தலும் பொருந்தும். (அ)

மருவினியமலர்ப்பாதமனத்தில்வளர்ந்துள்ளுருகத்
தெருவுதொறுமிகவலறிச்சிவபெருமானென்றேத்திப்
பருகியநின்பரங்கருணைத்தடங்கடலிற்படிவாமா
றருளெனக்கிங்கிடைமருதேயிடங்கொண்டவம்மானே

ப - ரை. இனிய மரு - இனிய மணமுள்ள, மலர் - தாமரை மலர்போன்ற, பாதம் - உன் திருவடி, மனத்தில் வளர்ந்து - என் மனதில்தங்கி, உள் உருக - (அதனால்) மனமுருக, தெருவு தொறும் - தெருக்கள்தோறும், மிக அலறி - மிகவுமலறுநின்று, சிவ பெருமான் என்று எத்தி - சிவபெருமானே யென்று துதித்து, பருகிய - பருக, நின்பரங்கருணைத்தடங்கடலில் - உனது பெருங் கருணையாகிய பெரிய சமுத்திரத்தில், படிவு ஆம் ஆறு - மூழ்கும் படி, இங்கு - இவ்விடத்து, இடை மருதே - திருவிடைமருதூரை யே, இடங்கொண்ட - இடமாகக்கொண்ட, அம்மானே - தந்தை யே, எனக்கு அருள் - எனக்குக்கிருபை செய்வாய், எ - று.

க - ரை. திருவிடை மருதூரி லெழுந்தருளிய சிவ பெரு மானே, உன் திருவடி என்மனதில் தங்கி அதனால் என் மனமுரு க, தெருக்கள் தோறும் அலறிச்சிவபெருமானே யென்றுதுதித்து, உன் கருணைக்கடலில் அழுந்தும் வண்ணம் எனக்கருள் செய்வா யாக என்பதாம். (கூ)

நானேயோ தவஞ்செய்தேன்சிவாயநமவெனப்பெற்றேன்
தேனாயின்னமுதமுமாய்த்தித்திக்குஞ்சிவபெருமான்
தானேவந்தெனதுள்ளம்புகுந்தடியேற்கருள்செய்தான்
ஊனாருமுயிர்வாழ்க்கையொறுத்தன்றேவெறுத்திடவே.

ப - ரை. நானே யோதவம் செய்தேன் - நான் தானோதவ ம்செய்தேன், சிவாய நம எனப்பெற்றேன் - சிவாயநமஎன்று சொல்லப்பெற்றேன், தேன் ஆய் - தேனாகி, இன் அமுதமும் ஆய் - இனிய அமிர்தமுமாகி, தித்திக்கும் - இனிக்கின்ற, சிவபெ ருமான் தானே - சிவபெருமான் தானாகவே, வந்து-எழுந்தருளி, எனது உள்ளம் புகுந்து - என் மனம் புகுந்து, ஊன் ஆரும் - உடம்போடு பொருந்திய, உயிர்வாழ்க்கை - உயிர் வாழ்க்கையை, ஒறுத்து வெறுத்திட - அருவருத்து வெறுக்கும்படி, அடியேற்கு அருள்செய்தான் - அடியேனுக்கு அருள் செய்தனன், எ - று.

க - ரை. சிவபெருமான் தானே யெழுந்தருளி என்மனதிற் புகுந்து, இவ்வுடம்போடு கூடிவாழும் வாழ்க்கையை வெறுக்கும் வண்ணம் எனக்கருள் செய்தான், இவ்வாறு இவன் அருள் செய் தற்கு நான்தானோ தவஞ்செய்தேன், சிவாயநம என்று சொல்லப் பெற்றேன் என்பதாம். (கO)

# திருப்புலம்பல்.

சிவானந்தமுதிர்வு.

திருவாரூரிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## கொச்சகக்கலிப்பா.

பூங்கமலத்தயனொடுமாலறியாதநெறியானே
கோங்கலர்சேர்குவிமுலையாள்கூறுவெண்ணீறுடீ
ஓங்கெயில்சூழ்திருவாரூருடையானேயடியேனின்
பூங்கழல்களவையல்லாதெவையாதும்புகழேனே.

ப - ரை. பூங்கமலத்து - பொலிவாகிய தாமரைமலரை யிடமாகவுடைய, அயனொடு - பிரமனுடன், மால் - திருமாலும், அறியாத நெறியானே - அறியாத வழியையுடையவனே, கோங்கு - கோங்கரும்பை யொத்த, அலர் சேர் - பரத்தலையுடைய, குவி முலையாள் - குவிந்த தனங்களையுடையாளாகிய உமாதேவியின், கூறு-பங்கனே, வெண்ணீறு ஆடீ-திருவெண்ணீற்றைஉடையானே,ஓங்கு-உயர்ந்த, எயில் சூழ் - மதில்சூழ்ந்த, திருவாரூர் உடையானே - திருவாரூரை யிடமாகவுடையவனே, அடியேன் - அடியனேன், நின் பூங்கழல்கள் அவை யல்லாது - உன் தாமரைமலர் போன்ற திருவடிகளாகிய அவற்றையன்றி, எவை - எவையுள்ளனவோ (அவற்றை), யாதும் புகழேன் - சிறிதும் புகழமாட்டேன்——,எ - று.

க - ரை. திருவாரூரில் எழுந்தருளி யிருக்கின்ற இறைவனே, அடியேன் உன் திருவடியையன்றி வேறு எந்தப் பொருளையும் புகழமாட்டேன் என்பதாம்.

வி - ரை. கோங்கு - கன்னிகாரமரம், இது இதன் அரும்புக் காயிற்று. "கோங்கிற்பொலியரும்பேய் கொங்கைபங்கன்" என்பது திருக்கோவையார். (க)

சடையானேதழலாடீதயங்குமூவிலைச்சூலப்
படையானேபரஞ்சோதீபசுபதீமழவெள்ளை [ளன்
விடையானேவிரிபொழில்சூழ்பெருந்துறையாயடியே
உடையானேயுனையல்லாதுறுதுணைமற்றறியேனே

ப - ரை. சடையானே - சடையவனே, தழலாடீ-அழலாடு வோனே, தயங்கும் - விளங்குகின்ற, மூவிலை-மூன்றிலை வடிவின தாகிய, சூலப்படையானே - சூலாயுதத்தையுடையவனே, பரஞ் சோதி - பரஞ்சோதியே, பசுபதீ-பசுபதியே, மழவெள்ளை விடை யானே-இளமையாகிய வெள்ளிய இடபத்தையுடையவனே, விரி பொழில் சூழ் - விரிந்த சோலைகள் சூழ்ந்த, பெருந்துறையாய் - திருப்பெருந்துறையையுடையவனே, உடையானே - உடையவ னே, அடியேன் நான் - அடியேனாகிய நான், உன்னை யல்லாது - உன்னை யன்றி, உறுதுணை - உற்றதுணை, மற்று அறியேன் - வேறொருவரை யறியேன்——,எ - று.

க - ரை. இறைவனே, உன்னையன்றி வேறொரு உற்றதுணை யை நான் அறியேன் என்பதாம்.

வி - ரை. தயங்குதல் - விளங்குதல். படை-ஆயுதம். உற்ற துணை - உறுதித்துணை. (உ)

உற்றாரையான்வேண்டேனூர்வேண்டேன்பேர்வேண்டே
கற்றாரையான்வேண்டேன்கற்பனவுமினியமையும் [ன்
குற்றாலத்தமர்ந்துறையுங்கூத்தாவுன்குரைகழற்கே
கற்றாவின்மனம்போலக்கசிந்துருகவேண்டுவனே.

ப - ரை. உற்றாரை-உறவினரை, யான் வேண்டேன்-நான் விரும்பேன், ஊர் வேண்டேன் - ஊரை விரும்பேன், பேர்வேண் டேன் - பேரை விரும்பேன், கற்றாரை யான்வேண்டேன் - கற்ற வரை நான் விரும்பேன், கற்பனவும் - கற்கவேண்டு வனவும், இனி அமையும் - இனிப்போதும், குற்றாலத்து - திருக்குற்றாலத் தில், அமர்ந்து உறையும் - விரும்பியுறைகின்ற, கூத்தா - கூத்த னே, உன் குரைகழற்கே - உனது ஒலிக்கின்ற வீரகண்டையை யணிந்த திருவடியை யடையும்பொருட்டே, கற்றாவின் மனம் போல - கன்றையுடைய பசுவின் மனத்தைப்போல, கசிந்து உருகவேண்டுவன் - மனம் கசிந்துருகவேண்டுவேன்——,எ - று.

க - ரை. உற்றார் முதலிய வொருபொருளையும் நான் விரும் பேன், இறைவனே, உன் திருவடியை யடையும்பொருட்டே கற் றாவின் மனம்போலக் கசிந்துருக விரும்புவேன் என்பதாம்.

வி - ரை. குற்றாலம் - ஓர் திருப்பதி. கன்று என்பது கற்று என வலித்தல் பெற்றது. கன்றையுடைய பசு என்பது பொருள்.

# குலாப்பத்து.

அனுபவமிடையீடுபடாமை.

தில்லையி லருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கோச்சகக்கலிப்பா.

ஓடுங்கவந்தியுமேயுறவென்றிட்டுள்கசிந்து
தேடும்பொருளுஞ்சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியேன்
ஆடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. அடியேன் - அடியனேன், ஓடும்-பலிபாத்திரமும், கவந்தியுமே - கோவணமுமே, உறவு என்றிட்டு - உறவென்று துணிந்து, உள் கசிந்து - மனங்கசிந்து, தேடும் பொருளும்-தேடுதற்குரிய பொருளும், சிவன் கழலேயெனத் தெளிந்து - சிவபெருமானது திருவடியே யென்று தேறி, கூடும் உயிரும் - உடலுமுயிரும், குமண்டையிட - நிறைந்து தெவிட்ட, குனித்து - நடித்து, ஆடும் - கூத்தாடுகின்ற, குலாத்தில்லையாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லையாண்டானைப் பற்றிக்கொண்டேன் ——, எ - று.

க - ரை. அடியேன், பலிபாத்திரமும் கோவணமுமே உறவென்று துணிந்து, தேடுதற்குரிய பொருளும் சிவபெருமானது திருவடியேயெனத் தெளிந்து, உடலுமுயிரும் நிறைந்து தெவிட்டும்படி நடித்துக் கூத்தாடுகின்ற தில்லையாண்டானைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. குமண்டையிடல் - நிறைந்து தெவிட்டல். (ஆநந்தம் நிறைந்து தெவிட்டல்) ஆடுதல் - கூத்தாடுதல். ஆடுங்குலாத்தில்லையாண்டான் நடேசப்பெருமானைக் குறிக்கவந்த ஒருதொடர்மொழி. குலாத்தில்லை - விளங்குதலையுடையதில்லை. கொண்டன்று என்பது கொண்டது எனப்பொருள்பட்டது. திருக்கோவையார் 204 - ம் செய்யுளில் "தாயிற்சிறந்தன்று நாண்டையலார்க்கு" என்பதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த வுரையைநோக்குக. ஏ-அசை. வியப்பிடைச்சொல்லுமாம். (க)

துடியேரிடுகிடைத்தூமொழியார்தோணசையால்
செடியேறுதீமைகளெத்தனையுஞ்செய்திடினும்
முடியேன்பிறவேனெனைத்தனதாண்முயங்குவித்த
அடியேன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. என்னை - அடியேனை, தனதாள் முயங்குவித்த - தன் திருவடிகளில் பொருந்தப்பண்ணின, குலாத்தில்லை யாண்டானை——, அடியேன் கொண்டன்று, ஆதலால்) துடி - உடுக்கையை யொத்த, ஏர் - அழகாகிய, இடுகு இடை-சிறுகிய இடையையும், தூமொழியார் - பரிசுத்தமாகிய சொல்லையுமுடைய மாதரது, தோள் நசையால் - தோள்களின் மீதுள்ள விருப்பத்தால், செடியேறு தீமைகள் - குற்றம்பொருந்திய தீங்குகள், எத்தனையுஞ் செய்திடினும் - எத்தனையாயினுஞ் செய்தாலும், முடியேன்-நான் இறக்கமாட்டேன், பிறவேன்-பிறக்கமாட்டேன்——,எ-று.

க - ரை. தன் திருவடிகளில் என்னைப் பொருந்தப்பண்ணின தில்லையாண்டானைப் பற்றினேன் ஆதலால் மாதர்மீதுள்ள விருப்பத்தால் எத்தனை தீமைகள் செய்தாலும் அடியேன் பிறந்திறந்துழலேன் என்பதாம். (௨)

என்புள்ளுருக்கியிருவினையையீடழித்துத்
துன்பங்களைந்துதுவந்துவங்கடூய்மைசெய்து
முன்புள்ளவற்றைமுழுதழியவுள்புகுந்த
அன்பின்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. என்பு உள்ளுருக்கி - என்புகளை உள்ளுருகப் பண்ணி, இருவினையை ஈடு அழித்து - இருவினைகளைப் பெருமையழித்து, துன்பம் களைந்து - துன்பங்களைக் கடிந்து, துவந்துவங்கள் தூய்மை செய்து - இருவகைப்பற்றுக்களை யொழித்து, முன்புள்ளவற்றை - இனிவரக்கடவனவாயுள்ள துன்பங்களை, முழுது அழிய - முழுதும் அழிக்கும்படி, உள் புகுந்த - என் மனத்தின் கண்ணே புகுந்த, அன்பின் - அன்பினையுடைய, குலாத்தில்லையாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லையாண்டானைப் பற்றினேன்——,எ - று.

க - ரை. என்புகளை யுள்ளுருக்கி, இருவினைகளைப் பெருமை கெடுத்து, துன்பத்தைக் கடிந்து, தொடர்புகளை யொழித்து, இனி வரக்கடவனவாக வுள்ள துன்பங்களை முழுதும் நசிப்பிக்கும்படி என் மனத்திற்புகுந்த தில்லையாண்டானைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. துவந்துவம் - பற்று. இது வடமொழி. தூய்மை செய்தல் - இல்லையாகச் செய்தல். அழிய என்னுந் தன்வினை பிறவினைப் பொருளில் வந்தது. (ரு

குறியுநெறியுங்குணமுமிலார்குழாங்கடமைப்
பிறியுமனத்தார்பிறிவரியபெற்றியனைச்
செறியுங்கருத்திலுருத்தமுதாஞ்சிவபதத்தை
அறியுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. குறியும் - அடையாளமும், நெறியும் - வழியும், குணமும் - குணங்களும், இல்லார் - இல்லாதாரும், குழாங்கள் தமை - பாசக்கூட்டங்களை, பிறியும் மனத்தார் - விட்டு நீங்குகின்ற மனத்தினையுடையவரும் ஆகிய அன்பர், பிறிவு அரிய பெற்றியனை - தன்னைவிட்டுப் பிரிதற்கரிய தன்மையையுடையவனை, செறியும் கருத்தில் உருத்து - அன்பரது பொருந்திய கருத்தின்கண் திருவுருக்கொண்டு, அமுது ஆம் சிவபதத்தை-அமிர்தமாகிய சிவபதவியை, அறியும் - எல்லாவற்றையும் அறிகின்ற, குலாத் தில்லையாண்டானைக் கொண்டன்று —, எ - று.

க - ரை. அன்பர் விட்டு நீங்குதற்கரிதாகிய தன்மையை யுடையவனும், அன்பர் மனத்திற்றோன்றி அமுதம்போல இனி மையைத் தருகின்ற சிவபதமாயிருப்பவனும், எல்லாவற்றையும் அறிகின்றவனுமாகிய தில்லையாண்டானைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. குழாம் - பாசக்கூட்டம். (மனைவிமக்கள் முதலானோர்) பெற்றி - குணம். அறிதல் - எல்லாவற்றையு முணர்தல். (முற்றறிவு - சர்வஞ்ஞதை). (சு)

பேருங்குணமும்பிணிப்புறுமிப்பிறவிதனைத்
தூரும்பரிசுதுரிசறுத்துத்தொண்டரெல்லாம்
சேரும்வகையாற்சிவன்கருணைத்தேன்பருகி
ஆருங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. பேரும் - நாமமும், குணமும் - குணங்களும், பிணிப்புறும் - தொடக்குறுகின்ற, இப்பிறவிதனை - இந்தப் பிறவியை, தூரும் பரிசு - தூரும் வண்ணம், துரிசு அறுத்து - பற்றறுத்து, தொண்டர் எல்லாம்-தொண்டர்களெல்லாம், சேரும் வகையால் - கூடும் விதத்தால், சிவன் - சிவபெருமானது, கருணை - கருணையாகிய, தேன் பருகி - தேனைப்பருகி, ஆரும் - நிறைகின்ற,

குலாத்தில்லையாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லையாண் டானைப் பற்றினேன்,——எ - று.

க - ரை. பேரும் குணமும் பந்திக்கிற இந்தப் பிறவியைப் பற்றறுத்து, அடியாரெல்லாரும் கூடும் வகையால் சிவபெருமா னது கருணையாகிய தேனையுண்டு, நிறைந்திருக்கின்ற தில்லையி லுள்ள இறைவனைப் பற்றினேன் என்பதாம். (ரு)

கொம்பிலரும்பாய்க்குவிமலராய்க்காயாகி
வம்புபழுத்துடலமாண்டிங்ஙன்போகாமே
நம்புமென்சிந்தைநணுகும்வண்ணம்நானணுகும்
அம்பொன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. கொம்பில் - மரக்கொம்பில், அரும்பு ஆய்-அரும்பு போன்றும், குவிமலர் ஆய் - குவிந்த மலர்போன்றும், காய் ஆகி - காய்போன்றும், வம்பு பழுத்து-வீணே பழுத்து, உடலம் மாண்டு- உடம்பழிந்து, இங்ஙன் போகாமே - இவ்வாறு உடம்பின் பயனி ன்றி மாளாமல், நம்பும் என் சிந்தை - நம்புகின்ற என்மனத்தில், நணுகும் வண்ணம் - இறைவன் பொருந்துமாறு, நான் அணுகும்- நான் பொருந்தப் பெறுகின்ற, அம்பொன் - அழகிய பொன்னுலா கிய, குலாத்தில்லை - விளங்குகின்ற தில்லையிலுள்ள, ஆண்டானைக் கொண்டன்று——, எ - று.

க - ரை. கொம்பினிடத்து அரும்பு முதலியவைபோல உட ம்பு இளமையாயிருந்து முதிர்ந்தழிந்து போகாமல், நம்புகின்ற என்மனம் இறைவனைப் பொருந்தும்படி நான் அடையப் பெற்ற தில்லையாண்டானைப் பற்றினேன் என்பதாம். (சு)

மதிக்குந்திறலுடையவல்லரக்கன்றோணெரிய
மிதிக்குந்திருவடியென்றலைமேல்வீற்றிருப்பக்
கதிக்கும்பசுபாசமொன்றுமிலோமெனக்களித்திங்
கதிர்க்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. மதிக்கும் திறல் உடைய - எல்லாரும் மதித்தற் குரிய வலியமைந்த, வல் அரக்கன் - வலிய அரக்கனாகிய ராவண னது, தோள் நெரிய - தோள்கள் நெரியும் வண்ணம், மிதிக்கும் - மிதிக்கின்ற, திருவடி - திருவடியானது, என் தலைமேல் வீற்றிரு ப்ப - என் சிரமீது வீற்றிராநிற்க, கதிக்கும்-மிகுகின்ற, பசுபாசம்- பசுபாசங்களாகிய, ஒன்றும் இலோம் என-சிறிதுமிலேம் என்று, களித்து - களிப்படைந்து, இங்கு - இவ்விடத்து, அதிர்க்கும் -

யான் ஆரவாரிக்கின்ற, குலாத்தில்லை - விளங்குகின்ற தில்லையி லுள்ள, தில்லையாண்டானைக் கொண்டன்று——, எ - று.

க - ரை. இராவணன் தோள்கள் நெரியும்படி மிதித்த திரு வடி யென் தலைமேல் வீற்றிருக்க, வளராநின்ற பசுபாசங்கள் சிறிதுமில்லை யாயினேமென்று களித்து யான் ஆரவாரிக்கின்ற தில்லையிலுள்ள இறைவனைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. தோணெரிய மிதிக்குந் திருவடி யென்றமையால் வல்லரக்கன் என்பது இராவணனுக்காயிற்று. (எ)

இடக்குங்கருமுருட்டேனப்பின்கானகத்தே
நடக்குந்திருவடியென்றலைமேனட்டமையால்
கடக்குந்திறலைவர்கண்டகர்தம்வல்லாட்டை
அடக்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. இடக்கும் - பூமியைப் பிளக்கு மியல்புள்ள, கரு - கரிய, முருட்டு - முறட்டுத்தனமுள்ள, ஏனப்பின் - பன்றியின் பின்னே, கானகத்து - காட்டில், நடக்கும் திருவடி - நடக்கின்ற திருவடியை, என் தலைமேல் நட்டமையால் - என் சிரமீது நாட்டி னமையால், கடக்கும் திறல் - (யாவரையும்) வெல்லுதற்குரிய வலியமைந்த, ஐவர் - ஐம்பொறிகளாகிய, கண்டகர்தம் - துட்டர் களுடைய, வல் ஆட்டை - வலிய ஆடலை, அடக்கும் - அடக்கு கின்ற, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில் லையாண்டானைப் பற்றினேன், எ - று.

க - ரை. பன்றியின்பின்னே நடந்த திருவடியை என் தலை மேல் நட்டதனால், ஐம்பொறிகளது வலியை யடக்குகின்ற தில்லை யாண்டானைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. இறைவன் அநாதியாகவே ஐம்பொறி நீக்கமுடை யவ னாதலால், "கடக்குந் திறலைவர் கண்டகர்தம் வல்லாட்டை அடக்கும் குலாத்தில்லையாண்டான்" என்றார். (அ)

பாழ்ச்செய்விளாவிப்பயனிலியாய்க்கிடப்பேற்குக்
கீழ்ச்செய்தவத்தாற்கிழியீடுநேர்பட்டுத்
தாட்செய்யதாமரைச்சைவனுக்கென்புன்றலையால்
ஆட்செய்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. பாழ் செய் விளாவி - பாழ் நிலத்தைச் சேர்ந்து, பயன் இலியாய்க் கிடப்பேற்கு - பயனற்றவனாய்க் கிடக்கின்ற எனக்கு, கீழ்செய்த வத்தால் - முன்னைப் பிறவிகளிற்செய்ததவப்

பயனால், கிழியீடு நேர்பட்டு - நிதிப்பொதிபோல் கிடைக்கப்பெற்று, தாள் - தன் திருவடியாகிய, செய்யதாமரை - செந்தாமரை மலரையுடைய, சைவனுக்கு - சைவனுக்கு, என் புல் தலையால் - என் புல்லிய தலையினால், ஆள்செய் - அடிமைசெய்தற்கிடமாகிய, குலாத்தில்லை - விளங்குகின்ற தில்லையிலுள்ள, ஆண்டானைக்கொண்டன்று——, எ - று.

க - ரை. பாழ் நிலத்தை யடைந்து பயன் பெறாதவனாய்க் கிடக்கின்ற எனக்கு முன்செய்த தவப்பயனால் நிதிப் பொதிபோலக் கிடைக்கப்பெற்றுச் செந்தாமரை மலர்போலுந் திருவடியையுடைய சைவனுக்கு என் புல்லிய தலையினால் அடிமை செய்தற்குரிய தில்லையிலுள்ள இறைவனைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. விளாவல் - கலத்தல். கிழியீடு - நிதிப் பொதி - (புதையல்). (கூ)

கொம்மைவரிமுலைக்கொம்பனையாள்கூறனுக்குச்
செம்மைமனத்தாற்றிருப்பணிகள்செய்வேனுக்
கிம்மைதரும்பயனித்தனையுமீங்கொழிக்கும்
அம்மைகுலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

ப - ரை. கொம்மை - திரட்சியும், வரி - தேமலையுமுடைய, முலை - தனங்களையுடைய, கொம்பு அனையாள் - பூங்கொம்பையொத்தவளாகிய உமாதேவியின், கூறனுக்கு - பங்கனுக்கு, செம்மை மனத்தால் - செப்பமாகிய மனத்தினால், திருப்பணிகள் செய்வேனுக்கு - திருப்பணிகள் செய்கின்ற எனக்கு, இம்மை தரும் பயன் இத்தனையும் - இம்மையிற் கொடுத்தற்குரிய பயன்களாகிய சுகதுக்கங்கள் இவ்வளவும், ஈங்கு ஒழிக்கும் - இவ்விடத் தொழிக்கின்ற, அம்மை - அழகாகிய, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

க - ரை. உமாதேவி பாகனாகிய சிவபிரானுக்குத் திருப்பணிகள் செய்கின்ற எனக்கு, இம்மையில் கொடுத்தற்குரிய சுகதுக்கங்க ளெல்லாவற்றையும் இவ்விடத் தொழிக்கின்ற தில்லையாண்டானைப் பற்றினேன் என்பதாம்.

வி - ரை. முத்தியடைவோர்க்கு எல்லாப் பயனும் நுகர்ந்தொழிய வேண்டுதலால், "இம்மை தரும் பயனித்தனையு மீங்கொழிக்கும்" என்றார். (கய)

# அற்புதப்பத்து.

அனுபவமாற்றாமை.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

மையலாயிந்தமண்ணிடைவாழ்வெனு
மாழியுளகப்பட்டுத்
தையலாரெனுஞ்சுழித்தலைப்பட்டுநான்
றலைதடுமாறாமே
பொய்யெலாம்விடத்திருவருடந்துதன்
பொன்னடியிணைகாட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோ
ரற்புதம்விளம்பேனே.

ப - ரை. மையலாய் - மயக்கங்கொண்டு, இந்தமண்ணிடை வாழ்வு என்னும் - இந்த மண்ணுலக வாழ்வென்கிற, ஆழியுள் அகப்பட்டு - கடலில் அகப்பட்டு, தையலார் என்னும் - மாதர் என்கிற, சுழித்தலைப்பட்டு - சுழியினிடத்துச் சிக்கி, நான் தலை தடுமாறாமே - நான்தலை தடுமாறாமல், பொய்யெலாம்விட - பொய்யெல்லாம் விடும்படி, திருவருள் தந்து - திருவருள் செய்து, தன் பொன்னடியிணை காட்டி - தன் திருவடியிணை காட்டி, மெய்யனாய் வெளிகாட்டி - திருமேனியை யுடையனாய் வெளிப்பட்டு, முன் நின்றது - எதிர் நின்றதாகிய, ஓர் அற்புதம் - ஒப்பற்ற ஆச்சரியத்தை, விளம்பேன் - சொல்ல அறியேன், எ - று.

க - ரை. நான் மயக்கங்கொண்டு, இந்த மண்ணுலக வாழ்வென்னும் கடலில் அகப்பட்டு, மாதரென்னுஞ் சுழியிற் சிக்கித் தலை தடுமாறாமல், இறைவன், என் பொய்யெல்லாம் விட்டொழியத் தன் திருவருளைத் தந்து தன் பொன்னடி யிரண்டுங்காட்டி, திருமேனியோடு வெளிப்பட்டு எனக்கெதிரே நின்ற அற்புதத்தை நான் சொல்ல அறியேன் என்பதாம். (க)

ஏய்ந்தமாமலரிட்டுமுட்டாததோ
　　ரியல்பொடும்வணங்காதே
சாந்தமார்முலைத்தையனல்லாரொடுந்
　　தலைதடுமாறாகிப்
போந்தியான்றுயர்புகாவணமருள்செய்து
　　பொற்கழலிணைகாட்டி
வேந்தனாய்வெளியேயென்முனின்றதோ
　　ரற்புதம்விளம்பேனே.

ப - ரை. ஏய்ந்த - பொருந்திய, மா - அழகையுடைய, மலர் இட்டு - மலர்தூவி, முட்டாதது - தடைப்படாததாகிய, ஓர் இயல்பொடும் - ஒரு இயற்கையோடும், வணங்காதே - வணங்காமலே, சாந்தம்ஆர் - சந்தனக் குழம்பு பூசப்பட்ட, முலை - தனங்களையுடைய, தையல் நல்லாரொடும் - மாதர்களோடும், தலை தடுமாறு ஆகி - தலை தடுமாற்றமடைந்து, யான் துயர் புகாவண்ணம் - நான் துன்பத்திற் புகாதவகை, போந்து அருள்செய்து - வந்து அருள் புரிந்து, பொன்கழல் இணைகாட்டி - திருவடியிணையைக் காட்டி, வேந்தனாய் - அரசனாகி, வெளியே - வெளிப்படையாகவே, என்முன் நின்றது - என் முன்னே நின்றதாகிய, ஓர் அற்புதம் விளம்பேன் - ஒரு ஆச்சரியத்தைச் சொல்ல அறியேன் எ - று.

க - ரை. இறைவன், தன்னை மலர்களால் அருச்சித்து வணங்காமல் மாதரோடு கூடித் தலை தடுமாற்றமடைந்து, துன்பத்திற் புகாவண்ணம் அருள்செய்து தன் திருவடியைக் காட்டி, எனக்கெதிரே வெளிப்பட்டு நின்ற அதிசயத்தை நான் சொல்ல அறியேன் என்பதாம். (௨)

நடித்துமண்ணிடைப்பொய்யினைப்பலசெய்து
　　நானெனதெனுமாயம்
கடித்தவாயிலேநின்றுமுன்வினைமிகக்
　　கழறியேதிரிவேனைப்
பிடித்துமுன்னின்றப்பெருமறைதேடிய
　　வரும்பொருளடியேனை
அடித்தடித்துவக்காரமுன்றீற்றிய
　　வற்புதமறியேனே.

ப - ரை. மண்ணிடை நடித்து - மண்ணுலகத்தில் நடித்த லைச்செய்து, பொய்பலசெய்து - பொய்யைப் பலவாக்கி, நான் எனது என்னும் - நான் எனது என்கிற, மாயம் - மாயமாகிய பாம்பு, கடித்த வாயிலேநின்று - கடித்த வாயிலிருந்து, முன்வினை - பூர்வ கர்மங்களாகிய விஷமானது, மிக - மிகுதலால், கழறியே திரிவேனை - புலம்பித்திரிகின்ற என்னை, பிடித்து முன் நின்று - பற்றி முன்னேநின்று, அப்பெருமறை தேடிய - அந்தப் பெரிய வேதங்கள் தேடின, அரும்பொருள் - அரும் பொருளானது, அடியேனை - அடியனேனை, அடித்து அடித்து - அடித்தடித்து, அக்காரம் - சர்க்கரைக்கட்டியை, முன் தீற்றிய - முன்னேயூட்டின, அற்புதம் அறியேன் - ஆச்சரியத்தைச் சொல்ல அறியேன், எ - று.

க - ரை. இந்தப் பூமியில் நடித்து, பொய்யாகியகாரியங்கள் பலவற்றைச் செய்து, நான் எனது என்கிற மாயப் பாம்பானது கடித்தவாயிலே நின்று முன்னைவினையாகிய விடமானது மிகுதலால் புலம்பித்திரிகின்ற என்னை இறைவன் பிடித்து, அடித்தடித்துச் சர்க்கரைக் கட்டியை உண்பித்த அதிசயத்தைச் சொல்ல அறியேன் என்பதாம்.

வி - ரை. கடித்த என்னுங் குறிப்பால் மாயத்தைப் பாம்பென்றும் வினையை விடமென்றும் உரைக்கலாயிற்று. (௫)

பொருந்துமிப்பிறப்பிறப்பிவைநினையாது
பொய்களேபுகன்றுபோய்க்
கருங்குழலினார்கண்களாலேறுண்டு
கலங்கியேகிடப்பேனைத்
திருந்துசேவடிச்சிலம்பவைசிலம்பிடத்
திருவொடுமகலாதே
அருந்துணைவனாயாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே.

ப - ரை. பொருந்தும் - பொருந்திய, இப்பிறப்பு இறப்பு இவை - இந்தப் பிறப்பு இறப்புக்களாகிய இவைகளை நீக்கும் உபாயத்தை, நினையாது - சிந்திக்காமல், பொய்களே புகன்றுபோய் - பொய்களையே சொல்லிக்கொண்டுபோய், கருங்குழலினார் - கரிய கூந்தலையுடைய மாதர்களுடைய, கண்களால் ஏறுண்டு - கண்களாகிய வாளினா லெறியப்பட்டு, கலங்கியே கிடப்பேனை - கலங்கியே கிடக்கின்ற என்னை, திருந்து - திருத்தமாகிய, சேவடி -

திருவடியி லணியப்பட்ட, சிலம்பு அவை - சிலம்புகளாகியஅவை, சிலம்பிட - சத்திக்க, திருவொடும் அகலாதே - உமாதேவியோடுங் கூடி நீங்காமல், அருந்துணைவனாய் - எனக்கு அரியதுணைவனாகி, ஆண்டுகொண்டருளிய - ஆண்டுகொண்டருளின, அற்புதம் அறியேன், எ - று.

க - ரை. பிறப் பிறப்புக்களாகிய இவைகளை நினையாமல் பொய்பேசிச் சென்று மாதர்களாகிய வாளினா லெறியப்பட்டுக் கலங்கிக் கிடக்கின்ற என்னை, இறைவன் தன் தேவியாரோடுங் கூடி யெழுந்தருளி யாண்டுகொண் டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. ஏறுண்டு என்றதற்கேற்பக் கண்களை வாளாக்கி யுரைக்கலாயிற்று. திரு - அழகு, அது இங்கு அழகிற் சிறந்தவளாகிய உமாதேவியை யுணர்த்திற்று. அருந்துணைவன் - கிடைத்தற் கரிய துணைவன். (ச)

யாடுஞ்சுற்றமுமற்றுளபோகமு
மங்கையர்தம்மோடும்
கூடியங்குளகுணங்களாலேறுண்டு
குலாவியேதிரிவேனை
வீடுதந்தென்றன்வெந்தொழில்வீட்டிட
மென்மலர்க்கழல்காட்டி
ஆடுவித்தெனதகம்புகுந்தாண்டதோ
ரற்புதமறியேனே.

ப - ரை. மாடும் - பொன்னோடும், சுற்றமும் - உறவோடும், மற்று உள்ள போகமும் - மற்றுமுள்ள போகங்களோடும், மங்கையர் தம்மோடும் - மாதர்களோடும், கூடி - சேர்ந்து, அங்கு உள்ள - அவற்றிலுள்ள, குணங்களால் ஏறுண்டு - குணங்களால் பற்றுண்டு, குலாவியே திரிவேனை - குலாவிக்கொண்டே திரிகின்ற என்னை, வீடுதந்து - வீட்டினைத்தந்து, என்றன் வெந்தொழில் வீட்டிட - என் தீவினைகளை யழிக்க, மெல்மலர் - மெல்லிய தாமரை மலர்போன்ற, கழல்காட்டி - திருவடியைக்காட்டி, ஆடுவித்து - என்னை ஆட்டி, எனது அகம்புகுந்து - என் மனம் புகுந்து, ஆண்டது - ஆண்டருளினதாகிய, ஓர்அற்புதம் அறியேன்——, எ-று.

க - ரை. பொன்முதலிய செல்வங்களோடும் மாதர்களோடுங் கூடி அவ்விடத்துள்ள குணங்களால் பற்றுண்டு குலாவித் திரிகின்ற என்னை, இறைவன் என் தீவினைகளை நீக்கி வீடு தந்தரு

ளும்பொருட்டுத் தன் திருவடியைக் காட்டி, என்னை நடிப்பித்து என் மனத்திற் புகுந்து ஆண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம். (ரு)

வணங்குமிப்பிறப்பிறப்பிவைநினையாது
மங்கையர்தம்மோடும்
பிணைந்துவாயிதழ்ப்பெருவெள்ளத்தழுந்திநான்
பித்தனாய்த்திரிவேனைக்
குணங்களுங்குறிகளுமிலாக்குணக்கடல்
கோமளத்தொடுங்கூடி
அணைந்துவந்தெனையாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே.

ப - ரை. வணங்கும் - யாவரும் தாழ்தற்குரிய, இப்பிறப்பு இறப்பு இவை - இந்தப் பிறப்பு இறப்புக்களாகிய இவைகளை நீக்கும் உபாயத்தை, நினையாது - சிந்திக்காமல், மங்கையர் தம்மோடும் - மாதர்களோடும், பிணைந்து-புணர்ந்து, வாய் இதழ் - அவர்களுடைய வாயிதழாகிய, பெருவெள்ளத்து - பெருங் கடலில், நான் அழுந்தி - நான் முழுகி, பித்தனாய்த்திரிவேனை - பித்தனாகித் திரிகின்ற என்னை, குணங்களும் குறிகளும் இல்லா - தீக்குணங்களும் குறிகளுமில்லாத, குணக்கடல் - நற்குணக் கடலானது, கோமளத்தொடும் - பச்சை நிறமுள்ள உமாதேவியோடும், கூடி அணைந்து வந்து - கூடிச் சேர்ந்துவந்து, என்னை ஆண்டு கொண்டருளிய - என்னை யாண்டுகொண் டருளின, அற்புதம் அறியேன்——, எ - று.

க - ரை. இந்தப் பிறப்பிறப்புத் துன்பங்களை நீக்கும் உபாயத்தைச் சிந்திக்காமல், மாதரோடுகூடி அவர்களுடைய இதழமுதாகிய வெள்ளத்தி லழுந்திப் பித்தனாய்க் கிடக்கின்ற என்னை, இறைவன் உமாதேவியோடு கூடி யெழுந்தருளி ஆண்டுகொண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. இதழ் - அதரம். கோமளம் - பச்சை. அது இங்கு பச்சை நிறத்தையுடைய உமாதேவிக்காயிற்று. கோமளம் - இளமைச் செவ்வியெனினுமாம். (சா)

இப்பிறப்பினிலிணைமலர்கொய்துநா
னியல்பொடஞ்செழுத்தோதித்
தப்பிலாதுபொற்கழல்களுக்கிடாதுநான்
றடமுலையார்தங்கள்

மைப்புலாங்கண்ணாலே றுண்டுகிடப்பேனை
மலரடியிணைகாட்டி
அப்பனென்னைவந் தாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே.

ப - ரை. இப்பிறப்பினில் - இந்தப் பிறவியில், இணை மலர் கொய்து - தனக்குத்தானே நிகராகிய மலரைப் பறித்து, நான் - யான், இயல்பொடு - ஓதவேண்டிய இயல்புடன், அஞ்சு எழுத்து ஓதி - ஐந்தெழுத்தை யோதி, தப்பு இலாது - பிழையில்லாமல், பொற்கழல்களுக்கு இடாது - உன் பொன்னடிமீது சொரியாமல், நான் - யான், தடமுலையார்தங்கள் - பெரிய தனங்களையுடைய மாதர்களுடைய, மைப்பு உலாம் கண்ணால் - கறுத்தநிறமாயெழில் விளங்குகின்ற கண்ணாகிய வாளால், ஏறுண்டு கிடப்பேனை - எறியுண்டு கிடக்கின்ற என்னை, மலர்அடியிணை காட்டி-தன் தாமரை மலர்போலுந் திருவடியிணையைக் காட்டி, அப்பன் - என் தந்தை- வந்து - வந்து, என்னை ஆண்டுகொண்டருளிய - என்னை யாண்டு கொண்டருளின, அற்புதம் அறியேன்——,

க - ரை. இந்தப் பிறப்பில் மலர்களைக் கொண்டு அருச்சித்து ஐந்தெழுத்தை யோதி உய்யாமல் மாதர்களுடைய கண்ணாகிய வாளாலெறியப்பட்டுக் கிடக்கின்ற என்னை, இறைவன் தன்திருவடியைக் காட்டி வந்தாண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. தடம் மலையெனினுமாம். (எ)

ஊசலாட்டுமிவ்வுடலுயிராயின
விருவினையறுத்தென்னை
ஓசையாலுணர்வார்க்குணர்வரியவ
னுணர்வுதந்தொளியாக்கிப்
பாசமானவைபற்றறுத்துயர்ந்ததன்
பரம்பெருங்கருணையால்
ஆசைதீர்த்தடியாரடிக்கூட்டிய
வற்புதமறியேனே.

ப - ரை. இவ்வுடல் உயிர் ஆயின - இவ்வுடல் உயிர் ஆயின வற்றை, ஊசல் ஆட்டும் - ஊசலாட்டுகின்ற, இருவினை - என் இருவினைகளை, அறுத்து - சேதித்து, என்னை-அடியேனை, ஓசையால் - சத்தரூபமாகிய கலைகளைக்கொண்டு, உணர்வார்க்கு - அறி

யப்புகுவார்க்கு, உணர்வு அரியவன் - உணர்தலருமையானவன், உணர்வு தந்து - எனக்கு அறிவைக்கொடுத்து, ஒளி ஆக்கி-என்னை ஒளியுருவாக்கி, பாசம் ஆனவை - பாசமானவைகளை, பற்றறுத்து - பற்றறச்செய்து, உயர்ந்த - உயர்வாகிய, தன்பரம் பெருங்கருணையால்-தனது மேலானபெருங்கருணையினால், ஆசை தீர்த்து-என் அவாவை யறுத்து, அடியார் அடி கூட்டிய - தன் அடியாரடிகளிற் சேர்த்த, அற்புதம் அறியேன்——, எ - று.

க - ரை. இறைவன், இந்த வுடலுயிர்களை ஊசலாட்டுகின்ற இருவினைகளை யறுத்து, அறிவைத்தந்து, ஒளியுருவாக்கி, பந்தங்களைப் பற்றறுத்து, தன் பெருங்கருணையால் ஆசையை யொழித்து தன் அடியாரடிகளில் என்னைச் சேர்த்த அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. ஊசலாட்டுதல் - மேல்கீழாகமாறி வரப்பண்ணுதல். ஓசை - சத்தம், அது இங்கு சத்தப்பிரமாணமாகிய நூல்களை யுணர்த்திற்று. (அ)

பொச்சையானவிப்பிறவியிற்கிடந்துநான்
புழுத்தலைநாய்போல
இச்சையாயினவேழையர்க்கேசெய்தங்
கிணங்கியேதிரிவேனை
இச்சகத்தரியயனுமெட்டாததன்
விரைமலர்க்கழல்காட்டி
அச்சனென்னையுமாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே.

ப - ரை. பொச்சை ஆன - காட்டை யொத்த, இப்பிறவியில் கிடந்து - இப்பிறவிப் பள்ளத்திற் கிடந்து, நான் - யான் புழுத்து அலைநாய்போல - புழுத்தலைகின்ற நாயைப்போல, இச்சையாயின - விரும்பினவற்றை, ஏழையர்க்கே செய்து - மாதருக்கே செய்து, அங்கு - அவ்வாறே, இணங்கியே திரிவேனை - அவரோடிணங்கியே திரிகின்றேனை, இச்சகத்து-இவ்வுலகத்தில், அரி அயனும் எட்டாத - திருமாலும் பிரமனும் காணமாட்டாத, தன் விரைமலர்க் கழல்காட்டி - தன் மணமலர்போலுந் திருவடியைக் காட்டி, அச்சன் - என்னுயிருருவமாயிருப்பவன், என்னையும் ஆண்டுகொண்டருளிய, அற்புதம் அறியேன்——, எ - று.

க - ரை. இந்தப் பிறவிக்காட்டிற் கிடந்து புழுத்தலையாநின்ற நாய்போல மாதர் விரும்பினவற்றைச் செய்து திரிகின்ற

என்னை, இறைவன் தன் திருவடியைக்காட்டி ஆண்டுகொண்டருளிய அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. பொச்சை - புழுக்கூடு எனினுமமையும். அச்சு - உயிர். அச்சன் - உயிராயிருப்பவன். (கூ)

செறியுமிப்பிறப்பிறப்பிவைநினையாது
செறிகுழலார்செய்யும்
கிறியுங்கீழ்மையுங்கெண்டையங்கண்களு
முன்னியேகிடப்பேனை
இறைவனெம்பிரானெல்லையில்லாததன்
னிணைமலர்க்கழல்காட்டி
அறிவுதந்தெனையாண்டுகொண்டருளிய
வற்புதமறியேனே.

ப - ரை. செறியும் - நெருங்கிய, இப்பிறப்பு இறப்பு இவை நினையாது - இந்தப்பிறப்பிறப்புக்களாகிய இவைகளை நீக்கும் உபாயத்தைச் சிந்திக்காமல், செறிகுழலார் செய்யும் - மாதர்கள் செய்கிற, கிறியும் - பொய்நடையையும், கீழ்மையும் - தாழ்வையும், கெண்டையங் கண்களும் - மீன்போலுங் கண்களையும், முன்னியே கிடப்பேனை - நினைந்தே கிடக்கின்ற என்னை, இறைவன்- தலைவன், எம்பிரான் - எம்பெருமான், எல்லையில்லாத - எல்லையற்ற, தன் இணைமலர்க் கழல்காட்டி - தனது மலர்போலுந் திருவடியிணையைக்காட்டி, அறிவுதந்து-உணர்வைக்கொடுத்து, என்னை ஆண்டுகொண்டருளிய அற்புதம் அறியேன்——, எ - று.

க - ரை. நெருங்கின இந்தப் பிறப்பிறப்புத் துன்பங்களை நீக்கும் உபாயத்தைச் சிந்தியாமல் மாதர் செய்யும் பொய்நடை முதலாயினவற்றை நன்றென நினைந்து கிடக்கின்ற என்னை, இறைவன் தன்திருவடியைக் காட்டி ஆண்டுகொண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பதாம். (க0)

---

# சென்னிப்பத்து.

சிவ விளைவு.

திருப்பெருந்துறையிலருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரிய விருத்தம்.

தேவதேவன்மெய்ச்சேவகன்
　　தென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுத
　　லாயவானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றி
　　யறியொணாமலர்ச்சோதியான்
தூயமாமலர்ச்சேவடிக்கணஞ்
　　சென்னிமன்னிச்சுடருமே.

ப - ரை. தேவதேவன் - தேவர்பிரான், மெய்ச்சேவகன் - உண்மையாகிய வீரத்தையுடையவன், தென்பெருந்துறை நாயகன் - தென்பெருந்துறைக் கிறைவன், மூவராலும் அறியொணா - மும்மூர்த்திகளாலும் அறியவொண்ணாத, முதல்ஆய - முதல்வனாகிய, ஆனந்தமூர்த்தியான் - ஆநந்த ரூபியாயிருப்பவன், அன்பர் அன்றி யாவராயினும் - அன்பரல்லாமல் மற்றெவர்களா யிருப்பினும், அறியொணா - அறியக்கூடாத, மலர்ச்சோதியான் - பரவுதலையுடைய சோதியையுடையவன், (அவனது) தூய - பரிசுத்தமான, மலர் - தாமரை மலர்போலும், சேவடிக்கண் - திருவடிக்கண்ணே, நம் சென்னிமன்னி - நம் சிரங்கள் பதிந்து, சுடரும் - விளங்காநிற்கும், எ - று.

க - ரை. தேவதேவனும், உண்மையாகிய வீரனும், தென்பெருந்துறை நாயகனும், மூவராலு மறிய வொண்ணாத முதன்மையாகிய ஆநந்த வுருவினனும், அன்பராலன்றி வேறொருவராலு மறியப்படாதவனும் ஆகிய சிவபெருமானது திருவடியின் கண்ணும் சிரம் நிலைபெற்று விளங்காநிற்கும் என்பதாம். (க)

அட்டமூர்த்தியழகனின்னமு
தாயவானந்தவெள்ளத்தான்
சிட்டன்மெய்ச்சிவலோகநாயகன்
றென்பெருந்துறைச்சேவகன்
மட்டுவார்குழன்மங்கையாளையோர்
பாகம்வைத்தவழகன்றன்
வட்டமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே.

ப - ரை. அட்டமூர்த்தி - அட்டமூர்த்தங்களை யுடையவன், அழகன் - சுந்தரன், இன்ப அமுதுஆய - இனிய அமிர்தமாகிய, ஆநந்தவெள்ளத்தான் - ஆநந்தக்கடலா யிருப்பவன், சிட்டன் - மேலானவன், மெய் - அழியாத, சிவலோகநாயகன் - சிவபுரத்துக் கிறைவன், தென்பெருந்துறைச் சேவகன் - தென்றிருப்பெருந் துறையிலுள்ள வீரன், மட்டுவார் - தேனொழுகாநின்ற, குழல் - கூந்தலையுடைய, மங்கையாளை - உமா தேவியை, ஓர்பாகம் வைத்த அழகன் தன்-ஒருபங்கில் அமைத்த யவ்வநன் (அவனது), வட்டம் மா மலர் - வட்டவடிவாகிய பெரிய தாமரை மலர்போன்ற, சேவடிக்கண் - திருவடிக்கண்ணே, நம் சென்னிமன்னி - நம் தலைபதிந்து, மலரும் - விகசிக்கும், எ - று.

க - ரை. அட்டமூர்த்தியா யிருப்பவனும், அழகனும், ஆநந்தக்கடலா யிருப்பவனும், மேலோனும், சிவலோக நாயகனும், பெருந்துறைப் பெருமானும், உமாதேவி பங்கனும் ஆகிய சிவபெருமானது திருவடியின்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்கா நிற்கும் என்பதாம். (உ)

நங்கைமீரெனைநோக்குமின்னங்க
ணாதனம்பணிகொண்டவன்
தெங்குசோலைகள்சூழ்பெருந்துறை
மேயசேவகனாயகன்
மங்கைமார்கையில்வளையுங்கொண்டெம்
முயிருங்கொண்டெம்பணிகொள்வான்
பொங்குமாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னிமன்னிப்பொலியுமே.

ப - ரை. நங்கைமீர் - பெண்களே, என்னை நோக்குமின் - என்னை நோக்குங்கள், நங்கள்நாதன் - நம்மிறைவன், நம்பணி

கொண்டவன் - நம்மைப் பணிகொண்டவன், தெங்கு சோலைகள் சூழ் - தென்னஞ் சோலைகள் சூழ்ந்த, பெருந்துறை மேய - பெருந்துறையிற் பொருந்திய, சேவகன் - வீரன், நாயகன் - நாதன், மங்கைமார் கையில் வளையுங்கொண்டு - மங்கைமார்களுடைய கையிலுள்ள வளையலையுங் கொண்டு, எம் உயிரும் கொண்டு - எம்முயிரையுங் கொண்டு, எம்பணிகொளவான் - எம்மைப் பணிகொள்பவன், (அவனது) பொங்கும் - விளங்குகின்ற, மாமலர் - பெரிய மலரை யொத்த, சேவடிக்கண் - திருவடிக்கண்ணே, நம்சென்னிமன்னி - நம் சிரம் பொருந்தி, பொலியும் - விளங்கும், எ - று.

க - ரை. பெண்களே, என்னை நோக்குங்கள், எம்மைப் பணிகொண்ட பெருந்துறைப்பெருமான், மங்கையர் கை வளையலையும் எமது உயிரையும் கவர்ந்தவன், அவ்விறைவனது திருவடிகள் எமது சிரத்தில் நிலைபெற்று விளங்காநிற்கும் என்பதாம்

வி - ரை. இறைவன் உலாவரக்கண்ட மாதர் கைவளையிழத்தல் நாணிழத்தல் முதலியவற்றை யுடைய ராதல் இயற்கையாதலால், "நங்கைமார் கையில் வளையுங் கொண்டெம் முயிருங் கொண்டு" என்றார். (ரு)

பத்தர்சூழப்பராபரன்
பாரில்வந்துபார்ப்பானெனச்
சித்தர்சூழச்சிவபிரான்
றில்லைமூதூர்நடஞ்செய்வான்
எத்தனாகிவந்தில்புகுந்தெமை
யாளுங்கொண்டெம்பணிகொள்வான்
வைத்தமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே.

ப - ரை. பராபரன் - பராத்பரன், சிவபிரான் - சிவபெருமான், பார்ப்பான் என - வேதியன்போல, பாரில்வந்து - பூமியில் வந்து, பத்தர்சூழ - பக்தர் சூழவும், சித்தர் சூழ - சித்தர் சூழவும், தில்லைமூதூர் - தில்லையாகிய பழையவூரில், நடம் செய்வான் - நடனம் பண்ணுவோன், எத்தன் ஆகிவந்து - ஏமாத்துவோனாகிவந்து, இல்புகுந்து - எம்மில்லிற் புகுந்து, எம்மை ஆளுங் கொண்டு - எம்மை யடிமையுங்கொண்டு, எம்பணிகொள்வான் - எம்மைப் பணிகொள்வோன், (அவனது) மாவைத்த - பெருமைதங்கிய, மலர் - தாமரை மலர்போலும், சேவடிக்கண் - திரு

வடிக்கண்ணே, நம்சென்னிமன்னி - நம்சிரம் படிந்து, மலரும் - விகசிக்கும், எ - று.

க - ரை. பத்தர் சூழும் பராபரனும், சித்தர் சூழும் சிவபெருமானும், தில்லையில் நடிப்போனும், தானே யெம்மிடத்தெழுந்தருளி யெம்மை யாட்கொண்டு எம்பணி கொள்பவனும் ஆகிய இறைவனது திருவடிக்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்கும் என்பதாம்,

வி - ரை. பத்தர்சூழ் அப்பராபரன் எனப்பிரித்துப் பத்தர் சூழ்கின்ற அந்தப் பராபரன் எனவும், சித்தர்சூழ் அச்சிவபிரான் எனப் பிரித்துச் சித்தர் சூழ்கின்ற அந்தச்சிவபிரான் எனவும் உரைப்பினும் பொருந்தும். (ச)

மாயவாழ்க்கையைமெய்யென்றெண்ணி
மதித்திடாவகைநல்கினன்
வேயதோளுமைபங்கனெங்க
டிருப்பெருந்துறைமேவினன்
காயத்துள்ளமுதூறவூறநீ
கண்டுகொள்ளென்றுகாட்டிய
சேயமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே.

ப - ரை. மாயவாழ்க்கையை-பொய்வாழ்வை, மெய்யென்று எண்ணி - மெய்யென்று நினைத்து, மதித்திடாவகை-மதியா வண்ணம், நல்கினன் - அருளினன், வேய - மூங்கிலின் தன்மையவாகிய, தோள் - தோள்களையுடைய, உமை - உமாதேவியின், பங்கன் - பாகன், எங்கள் திருப்பெருந்துறை மேவினன் - எங்கள் திருப்பெருந்துறையிற் பொருந்தினவன், காயத்துள்-உடம்பினுள்ளே, அமுது ஊறஊற - அமிர்தம் சுரக்கச் சுரக்க, நீகண்டு கொள் என்று காட்டிய - நீ கண்டுகொள்ளென்று காட்டின, சேயமாமலர்-பெரிய செந்தாமரை மலர்போன்ற, சேவடிக்கண் - திருவடிக்கண்ணே, நம்சென்னிமன்னி - நம் சிரம் படிந்து, திகழும்-விளங்காநிற்கும், எ - று.

க - ரை. மாயவாழ்வை மெய்யென்று மதிக்காதபடி எனக்குக் கிருபை செய்தவனும், உமாதேவிபங்கனும், பெருந்துறையில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய சிவபெருமான், உடம்பினுள் அமுது சுரக்க நீ கண்டுகொள்ளென்று காட்டின திருவடிக்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்காநிற்கும் என்பதாம். (ரு)

சித்தமேபுகுந்தெம்மையாட்கொண்டு
　　தீவினைகெடுத்துய்யலாம்
பத்திதந்துதன்பொற்கழற்கணே
　　பன்மலர்கொய்துசேர்த்தலும்
முத்திதந்திந்தமூவுலகுக்கு
　　மப்புறத்தெமைவைத்திடும்
அத்தன்மாமலர்ச்சேவடிக்கணஞ்
　　சென்னிமன்னிமலருமே.

ப - ரை. சித்தமே புகுந்து - மனமே புகுந்து, எம்மைஆட் கொண்டு - எம்மையாட்கொண்டருளி, தீவினை கெடுத்து - தீவினையை அழித்து, உய்யல் ஆம்பத்திதந்து - உஜ்ஜீவிக்கலாம்படியான பத்தியைக்கொடுத்து, தன்பொன்கழல் கண்ணே - தன் பொன்னடிக்கண்ணே, பல்மலர் கொய்து சேர்த்தலும் - பலமலர்களைப் பறித்துச் சேர்த்தலும், முத்திதந்து - வீட்டைக் கொடுத்து, இந்த மூவுலகுக்கும் அப்புறத்து - இந்த மூன்றுலோகங்களுக்கும் அப்புறத்தில், எம்மை வைத்திடும் - எம்மை வைக்கின்ற, அத்தன் - எமது தந்தையின், மாமலர் சேவடிக்கண் - அழகிய தாமரை மலர்போலுந் திருவடிக்கண்ணே, நம்சென்னிமன்னி மலரும் - நம் சிரம் படிந்து மலராநிற்கும், எ - று.

க - ரை. எமது மனத்திற் புகுந்து எம்மையாட்கொண்டு, தீவினையை யொழித்து உய்தற் கேதுவாகிய பத்தியைத் தந்து, முத்தியையுந்தந்து இந்த மூன்றுலகங்களுக்கும் அப்புறத்தேயெம்மை வைக்கின்ற இறைவனது திருவடிக்கண் எமது சிரம் நிலை பெற்று விளங்காநிற்கும் என்பதாம்.

வி - ரை. வைத்திடுமெத்தன் என்பதனை வைத்திடும் மத்தன் எனப் பிரித்து, தன் திருவடியில் மலர் சேர்த்தலும் இந்த மூவுலகுக்கும் அப்புறத்தே எமை வைத்த பித்தன் என்றுரைப்பினும் பொருந்தும். (கூ)

பிறவியென்னுமிக்கடலைநீந்தத்தன்
　　பேரருடந்தருளினன்
அறவையென்றடியார்கடங்க
　　ளருட்குழாம்புகவிட்டுநல்
உறவுசெய்தெனையுய்யக்கொண்ட
　　பிரான்றனுண்மைப்பெருக்கமாம்

திறமைகாட்டியசேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே.

ப - ரை. பிறவியென்னும்-பிறவியென்கிற, இக்கடலை நீந்த- இந்தக் கடலை நீந்திக் கடத்தற்கு, தன் பேர் அருள் - தன் பேரருளாகிய மரக்கலத்தை, தந்தருளினான் - கொடுத்தருளினான், அறவை யென்று - அநாதை யென்று, அடியார்கள் தங்கள் - அடியார்களுடைய, அருள்குழாம் - அருட்கூட்டத்தில், புகவிட்டு - புகப்பண்ணி, நல்உறவுசெய்து - நல்லவுறவாக்கி, என்னை உய்யக்கொண்ட - என்னை யுய்யும்படி யாட்கொண்ட, பிரான்றன் - பெருமானது, உண்மைப் பெருக்கம் ஆம் திறமைகாட்டிய - மெய்யின் பெருக்கமாகிய திறமையைக் காட்டின, சேவடிக்கண் - திருவடியின் கண்ணே, நம்சென்னிமன்னித் திகழும்——, எ - று.

கு - ரை. பிறவி யென்கிற இந்தக் கடலை நீந்துதற்குத் தன் பேரருளாகிய புணையைத் தந்தருளினவனும், அநாதை யென்று என்னைத் தன்னடியார் கூட்டத்திற் புகவிட்டு அவர்களை யெனக் குறவாக்கி என்னை யுய்யக்கொண்டபிரானும் ஆகிய சிவபெருமானது திருவடிக்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்கா நிற்கும் என்பதாம்.

வி - ரை. "பிறவியென்னு மிக்கடலை நீந்த" என்றமையால் பேரருளை மரக்கலமாக்கி யுரைக்கலாயிற்று. (எ)

புழுவினாற்பொதிந்திடுகுரம்பையிற்
பொய்தனையொழிவித்திடும்
எழில்கொள்சோதியெம்மீசனெம்பிரா
னென்னுடையப்பனென்றென்று
தொழுதகையினராகித்தூமலர்க்
கண்கணீர்மல்குந்தொண்டர்க்கு
வழுவிலாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிமலருமே.

ப - ரை. புழுவினால் பொதிந்திடு - புழுக்களாற் பொதியப்பட்ட, குரம்பையின் - உடம்பாகிய, பொய்தனை ஒழிவித்திடும் - பொய்யை ஒழிவியாநின்ற, எழில்கொள் சோதி - அழகைக்கொண்ட சோதி, எம் ஈசன் - எம்மீச்சுரன், எம்பிரான் - எம்பெருமான், என்னுடைஅப்பன் - என்தந்தை, என்று என்று - என்று பலகாற்சொல்லி, தொழுத கையினர்ஆகி - அஞ்சலித்த கைகளை

யுடையராகி, தூ - பரிசுத்தமாகிய, மலர் - தாமரை மலர்போலும், கண்கள் - கண்களில், நீர் மல்கும் - நீர் நிறைக்கின்ற, தொண்டர்க்கு - தொண்டர்களுக்கு, வழுவு இல்லா - (முத்தியளித்தலில்) தவறுதல் இல்லாத, மலர் - தாமரை மலரையொத்த, சேவடிக்கண்—, நம் சென்னிமன்னி மலரும்——, எ - று.

க - ரை. புழுக்கூடாகிய இவ் வுடம்பை யொழிக்கின்ற சோதி, எம்மீசன், எம்பிரான், என்னுடையப்பன் என்று பல கால்சொல்லிக் கைகுவித்துக் கண்ணீர் மல்குந் தொண்டர்க்கு முத்தியளித்தலில் தவறாத இறைவனது திருவடிக்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்காநிற்கும் என்பதாம்.

வி - ரை. என்று என்று என்ற அடுக்கு பலதரஞ் சொல்லி யென்னும் பொருளது. தொழுதல் இவ்விடத்து அஞ்சலித்தல் என்னும் பொருளது. மல்குதல் - நிறைதல். குரம்பையின் என்பதில் இன் அல்வழிச்சாரியை. திருக்கோவையார் 74 - ம் செய்யுளில், "கண்ணின்வலை" என்பதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த வுரையை நோக்குக. (அ)

வம்பனாய்த்திரிவேனை வாவென்று
வல்வினைப்பகைமாய்த்திடும்
உம்பரானுலகூடறுத்தப்
புறத்தனாய்நின்றவெம்பிரான்
அன்பரானவர்க்கருளிமெய்யடி
யார்கட்கின்பந்தழைத்திடும்
செம்பொன்மாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னித்திகழுமே.

ப - ரை. வம்பனாய்த் திரிவேனை - வம்பனாகித் திரிகின்ற என்னை, வா என்று - வாவென்றழைத்து, வல் - வலிய, வினை - வினைகளாகிய, பகை - பகைவரை, மாய்த்திடும் - அழிக்கின்ற, உம்பரான் - தேவன், உலகு - உலகங்களை யெல்லாம், ஊடு அறுத்து - ஊடுருவிச் சென்று, அப்புறத்தனாய் நின்ற - அப்பாற்பட்டவனாய் நின்ற, எம்பிரான் - எம்பெருமான், அன்பர் ஆனவர்க்கு அருளி - அன்பராயிருப்பவர்களுக்கு அருள்புரிந்து, மெய்யடியார் கட்கு - மெய்யடியவர்க்கு, இன்பம் தழைத்திடும் - இன்பம் செழிப்பிக்கின்ற, செம்பொன் - செம்பொன்போன்ற, மா - அழகிய, மலர் - தாமரை மலர்போன்ற, சேவடிக்கண் - திருவடியின்கண்ணே, நம் சென்னி மன்னித் திகழும்——, எ - று.

க - ரை. வம்பனுய்த் திரிகின்ற என்னை வாவென்றழைத்து வலிய வினையாகிய பகையை யழிக்கின்றதேவனும், எல்லா வுலகங்களையும் கடந்து நின்றவனும் ஆகிய சிவபெருமானது செம்பொன்போலுந் திருவடிக்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்கா நிற்கும் என்பதாம்.

வி - ரை. உம்பரான் - மேலிடத்தை யுடையவன், (மேலிடம் - முத்தியுலகு) ஊடறுத்தல் - ஊடுருவுதல். (கூ)

முத்தனைமுதற்சோதியைமுக்க
  ணப்பனைமுதல்வித்தினைச்
சித்தனைச்சிவலோகனைத்திரு
  நாமம்பாடித்திரிதரும்
பத்தர்காளிங்கேவம்மினீருங்கள்
  பாசந்தீரப்பணிமினோ
சித்தமார்தருஞ்சேவடிக்கணஞ்
  சென்னிமன்னித்திகழுமே.

ப - ரை. முத்தனை - பாச விமுக்தனை, முதல் சோதியை - முதன்மையாகிய ஒளியை, முக்கண் அப்பனை - மூன்று கண்களை யுடைய எமது தந்தையை, முதல் வித்தினை - முதல் விதையை, சித்தனை - அறிவுருவனை, சிவலோகனை - சிவபுரத்தானை, திருநாமம் பாடி - (அவனது) திருநாமங்களைப் பாடி, திரிதரும் - திரியாநின்ற, பத்தர்காள் - பத்தர்களே, நீர் இங்கே வம்மின் - நீங்கள் இங்கு வாருங்கள், உங்கள் பாசம் தீர - உங்கள் பாசம் அறும்படி, பணிமின் - வணங்குங்கள், சித்தம்ஆர்தரு - எமது உள்ளத்திற் பொருந்திய, சேவடிக்கண் - திருவடிக்கண்ணே, நம்சென்னி மன்னித் திகழும்——, எ - று.

க - ரை. முத்தனும், முதற்சோதியும், முக்கண்ணப்பனும், முதல் வித்தும், சித்தனும், சிவலோகனும் ஆகிய சிவபெருமானது திருநாமங்களைப் பாடித் திரிகின்ற பத்தர்களே, இங்குவந்துஉமது பாசத்தளையற இறைவனை வணங்குங்கள், அவனது திருவடிக்கண் எமது சிரம் நிலைபெற்று விளங்காநிற்கும் என்பதாம். (கo)

# திருவார்த்தை.

அறிவித்தன்புறுதல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

மாதிவர்பாகன்மறைபயின்ற
வாசகன்மாமலர்மேயசோதி
கோதில்பரங்கருணையடியார்
குலாவுநீதிகுணமாகநல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்த
வருளறிவாரெம்பிரானுவாரே.

ப - ரை. மாது இவர்பாகன் - பெண்ணமைந்த பாகத்தை யுடையான், மறைபயின்ற வாசகன் - வேதம்பயின்ற திருவாக்கை யுடையான், மாமலர் மேயசோதி - அழகிய (அன்பரது இருதய மாகிய) மலரின்மீ தமர்ந்த ஒளி, கோதுஇல் பரம் கருணை - குற்ற மற்ற பெருங்கருணை, அடியார் குலாவும் நீதி-அடியாரது விளங்கு கின்ற நீதியை, குணமாக - குணமாகக்கொண்டு, நல்கும்-அருள் புரிகின்ற, போது அலர்-பேரரும்புகள் மலர்கின்ற, சோலை-சோலை சூழ்ந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக் கும், எம் புண்ணியன் - எம் புண்ணியன், மண்ணிடை வந்து இழிந்து - மண்ணுலகில் வந்திறங்கி, ஆதிபிரமம் வெளிப்படுத்த - முதன்மையாகிய பிரமத்தை வெளிப்படுத்தின, அருள் அறிவார் - அருளையறிபவர், எம்பிரான் ஆவார் - எம்பெருமானுவார், எ - று.

க - ரை. பெண்பாகனும், வேத வாக்கினனும், அன்பருள் ளக் கமலத் தமர்ந்த ஒளியும், குற்றமற்ற பெருங்கருணை வடிவம், அடியார் ஒழுக்கத்தை நீதியாய்க்கொண்டு அவர்களுக் கருள்செய் கிற பெருந்துறைப் புண்ணியனும் ஆகிய இறைவன் மண்ணில் வந்திறங்கி முதன்மையாகிய பிரமத்தை வெளிப்படுத்தின அருளை யறிபவர் எம்பிரான் ஆவார் என்பதாம்.

வி - ரை. இவர்தல் - ஏறுதல், அது இங்கு அமர்தற் பொருளது. மலர் - அன்பருள்ளக்கமலம், "மலர்மிசை யேகினான்" என்றவிடத்தும் இப்பொருட்டாதல் காண்க. (க)

மாலயன்வானவர்கோனும்வந்து
வணங்கவவர்க்கருள்செய்தவீசன்
ஞாலமதனிடைவந்திழிந்து
நன்னெறிகாட்டிநலந்திகழும்
கோலமணியணிமாடநீடு
குலாவுமிடைவைமடநல்லாட்குச்
சீலமிகக்கருணையளிக்குந்
திறமறிவாரெம்பிரானாவாரே.

ப - ரை. மால் - திருமாலும், அயன் - பிரமனும், வானவர் கோனும் - தேவர் பிரானாகிய இந்திரனும், வந்து - வந்து, வணங்க- பணிய, அவர்க்கு அருள்செய்த - அவர்களுக்கு அருள் புரிந்த, ஈசன் - ஈச்சுரன், ஞாலம்அதனிடை - உலகத்தில், வந்து இழிந்து - வந்திறங்கி, நல் நெறி காட்டி - நல் வழியைக் காட்டி, நலம் திகழும் - நன்மை விளங்குகின்ற, கோலம் - அழகிய, மணி அணி - மணிகளால் அலங்கரிக்கப்பட்ட, மாடம் - மாடங்கள், நீடு குலாவும் இடைவை - நெடிது விளங்குகின்ற திருவிடைமருதூரில், மட நல்லாட்கு - மடமகளுக்கு, சீலம் மிக - ஒழுக்கம் மிகும்படி, கருணை அளிக்கும் - கருணைசெய்த, திறம்அறிவார் - திறத்தை யறிபவர், எம்பிரான்ஆவார்-எம்பெருமான்ஆவார், எ-று.

க - ரை. திருமால் பிரமன் இந்திரன் என்னும் மூவரும் வந்துவணங்க, அவர்க் கருள்செய்த ஈசன், பூமியில் வந்திறங்கி நன்னெறியைக் காட்டி, மணிமாடங்கள் மிகுந்த திருவிடைமருதூரில் ஒரு பெண்ணுக்கு ஒழுக்க மிகும்படி கருணைசெய்த தன்மையை அறிபவர் எம்பிரானாவார் என்பதாம்.

வி - ரை. வானவர்கோனும் என்ற வும்மையை மால் அயன் என்பவற்றோடுங் கூட்டுக. (உ)

அணிமுடியாதியமரர்கோமா
னானந்தக்கூத்தனறுசமயம்
பணிவகைசெய்துபடவதேறிப்
பாரொடுவிண்ணும்பரவியேத்தப்

பிணிகெடநல்கும்பெருந்துறையெம்
பேரருளாளன்பெண்பாலுகந்து
மணிவலைகொண்டுவான்மீன்விசிறும்
வகையறிவாரெம்பிரானவாரே.

ப - ரை. அணிமுடியாதி - அழகிய கிரீடம் முதலானவை களையுடைய, அமரர்கோமான் - தேவர்பிரான், ஆநந்தக் கூத்தன் - ஆநந்த நிருத்தம் பயின்றவன், அறுசமயம் - ஆறு சமயங்களும், பணிவகைசெய்து - வணங்கும் வகைசெய்து, படவதுஏறி - தோணியேறி, பாரொடு விண்ணும் - மண்ணுலகோடு விண்ணுலகும், பரவியேத்த - வழிபட்டு வாழ்த்த, பிணிகெட - பிறவிப்பிணி யொழிய, நல்கும் - அருள்செய்கின்ற, பெருந்துறை - திருப்பெருந்துறையிலுள்ள, எம் - எம்முடைய, பேர்அருளாளன் - பெருங்கருணையாளன், பெண்பால் உகந்து - பெண்பாகத்தை விரும்பி, மணிவலைகொண்டு - அழகிய வலையைக்கொண்டு, வான்மீன்விசிறும் - மேலாகிய மீன்களை விசிறிப்பிடிக்கின்ற, வகை - விதத்தை, அறிவார் - அறிபவர், எம்பிரான்ஆவார்——, எ - று.

க - ரை. தேவர்களுக்குத் தலைவனும், அறுசமயத்தாரும் பணியும் வகைசெய்து தோணியேறி, மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் துதித்து வழிபட, அவர்களுடைய நோய் நீங்கும் வண்ணம் அருள்செய்த பெருந்துறையானும் ஆகிய சிவபெருமான், வலைவீசிய வரலாற்றின் வகையை யறிபவர் எம்பிரானவார் என்பதாம். (கூ)

வேடுருவாகிமகேந்திரத்து
மிகுகுறைவானவர்வந்துதன்னைத்
தேடவிருந்தசிவபெருமான்
சிந்தனைசெய்தடியோங்களுய்ய
ஆடலமர்ந்தபரிமாவேறி
யையன்பெருந்துறையாதியந்நாள்
ஏடர்களையெங்குமாண்டுகொண்ட
வியல்பறிவாரெம்பிரானவாரே.

ப - ரை. வேடு உருஆகி - வேடுவனது உருவமாகி, மகேந்திரத்து - மகேந்திர மலையின்கண், மிகு குறைவானவர் வந்து - மிக்க குறையையுடைய தேவர்வந்து, தன்னைத் தேட இருந்த - தன்னைத் தேடும்படியிருந்த, சிவபெருமான் - சிவபிரான், சிந்தனை செய்து - சிந்தித்து, அடியோங்கள் உய்ய - அடியேங்கள் உய்யும்

வண்ணம், ஆடல் அமர்ந்த - வெற்றியமைந்த, பரி மா ஏறி - குதிரையேறி வந்தவன், ஐயன் - கடவுள், பெருந்துறைஆதி - திருப்பெருந்துறை முதல்வன் அந்நாள் - அக்காலத்தில், ஏடர்களை - தோழர்களை, எங்கும் ஆண்டுகொண்ட - எவ்விடத்தும் ஆண்டு கொண்ட, இயல்புஅறிவார் - இயற்கையை யறிபவர், எம்பிரான் ஆவார்——, எ - று.

க - ரை. வேட வுருக்கொண்டு, மகேந்திரமலையில் தேவர் வந்து தம் குறைகூறி யிரக்க எழுந்தருளி யிருந்தவனும், அடியோங்கள் நினைந்துய்யும்பொருட்டுக் குதிரையேறி வந்தவனும், பெருந்துறை முதல்வனும் ஆகிய சிவபெருமான், அக்காலத்தில் தோழர்களை யாண்டுகொண்ட தன்மையை யறிபவர் எம்பிரானாவார் என்பதாம். (சு)

வந்திமையோர்கள்வணங்கியேத்த
மாக்கருணைக்கடலாயடியார்
பந்தனைவிண்டறநல்குமெங்கள்
பரமன்பெருந்துறையாதியந்நாள்
உந்துதிரைக்கடலைக்கடந்தன்
றோங்குமதிலிலங்கையதனில்
பந்தணைமெல்விரலாட்கருளும்
பரிசறிவாரெம்பிரானாவாரே.

ப - ரை. இமையோர்கள் வந்து - தேவர்கள் வந்து, வணங்கியேத்த - வணங்கித் துதிக்க, மா - பெரிய, கருணைக்கடலாய் - கருணா சாகரமாகி, அடியார் பந்தனைவிண்டுஅற - அடியவரது பந்தங்கள் விட்டொழிய, நல்கும் - அருள்புரிகின்ற, எங்கள்பரமன் - எங்கள் மேலோன், பெருந்துறைஆதி - திருப்பெருந்துறை முதல்வன், அந்நாள் - அக்காலத்தில், உந்து திரைக்கடலை - எறியாநின்ற அலைகளையுடைய கடலை, கடந்து - தாண்டி, அன்று - அந்நாள், ஓங்கும் - உயர்ந்த, மதில் - மதில் சூழ்ந்த, இலங்கை யதனில் - இலங்கையில், பந்துஅணை - பந்தணைந்த, மெல் விரலாட்கு - மெல்லிய விரல்களை யுடையளாகிய மந்தோதரிக்கு, அருளும் பரிசு அறிவார் - அருளுந் தன்மையை யறிபவர், எம்பிரான் ஆவார்——, எ - று.

க - ரை. தேவர்கள் வந்து வணங்கித் துதிக்கக் கருணை செய்து, அடியார்களுடைய பிறவித்தளையற் றொழியக் கருணை செய்த மேலோனும், பெருந்துறை முதல்வனும் ஆகிய சிவபெரு

மான், முற்காலத்தில் கடலைக் கடந்து சென்று இலங்கையில் மந்தோதரிக்கு அருள்செய்த தன்மையை யறிபவர் எம்பிரானுவார் என்பதாம்.

வி - ரை. பந்தனை - பந்தம்(கட்டு). இலங்கையென்ற குறிப்பால் பந்தணை மெல்விரலாள் என்றது மந்தோதரிக்காயிற்று. (ரு)

வேவத்திரிபுரஞ்செற்றவில்லி
வேடுவனுய்க்கடிநாய்கள்சூழ.
ஏவற்செயல்செய்யுந்தேவர்முன்னே
யெம்பெருமான்றானியங்குகாட்டில்
ஏவுண்டபன்றிக்கிரங்கியீச
னெந்தைபெருந்துறையாதியன்று
கேவலங்கேழலாய்ப்பால்கொடுத்த
கிடப்பறிவாரெம்பிரானுவாரே.

ப - ரை. திரிபுரம் வேவ - திரிபுரம் வேம்படி, செற்றவில்லி- ஜெயித்த வில்லையுடையவன், வேடுவனுய் - வேடனுகி, கடி-காவலாக, நாய்கள் சூழ - நாய்கள் சூழ்ந்துவர, ஏவல் செயல் செய்யும் தேவர் முன்னே - ஏவற்றொழில் செய்யும் தேவர்களுக்கெதிரில், எம்பெருமான் தான் இயங்கு காட்டில் - எம்பெருமான் தான் வழங்குங் காட்டில், ஏவுண்ட பன்றிக்கு - அம்புதைத்த பன்றிக்கு, இரங்கி - இரக்கம்செய்து, ஈசன் - ஈச்சுரன், எந்தை - என் தந்தை, பெருந்துறைஆதி - திருப்பெருந்துறை முதல்வன், அன்று - அந்நாளில், கேவலம் - தனிமையாகிய, கேழல் ஆய் - பன்றியாகி, பால்கொடுத்த - பாலூட்டின, கிடப்பு - கிடக்கையை, அறிவார் - அறிபவர், எம்பிரான்ஆவார் - ——,எ - று.

க - ரை. திரிபுரங்களை அழித்தவனும், பெருந்துறை முதல்வனும் ஆகிய சிவபெருமான், வேடுவனுய் வந்து, அம்பு தைத்த பன்றிக் கிரங்கி, தானொரு பன்றியாகிப் பால்கொடுத்த வரலாற்றை யறிபவர் எம்பிரானுவார் என்பதாம்.

வி - ரை, கடி - கடிக்கின்ற எனினுமாம். இயங்குதல் - சஞ்சரித்தல். ஏ - அம்பு. கேழல் - பன்றி. (சு)

நாதமுடையதோர்நற்கமலப்
போதினினண்ணியநன்னுதலார்
ஓதிப்பணிந்தலர்தூவியேத்த
வொளிவளர்சோதியெம்மீசன்மன்னும்

போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்துதோன்றிப்
பேதங்கெடுத்தருள்செய்பெருமை
யறியவல்லாரெம்பிரானுவாரே.

ப - ரை. நாதம் உடையது - வண்டின் ஒலியை யுடையதாகிய, ஓர் நல்கமலப் போதினில் நண்ணிய-ஒரு நல்ல கமலப்பூவிற் பொருந்திய, நல்நுதலார் - கலைமகள் மலர்மகள் என்னும் இருவரும், ஓதிப்பணிந்து - துதித்துப் பணிந்து, அலர்தூவியேத்த - மலர் தூவித் துதிக்க, ஒளிவளர்சோதி - ஒளிவளராநின்ற சோதி, எம் ஈசன் - எம்மீச்சுரன், மன்னும்-நிலைபெற்ற, போதுஅலர்சோலை - பேரரும்புகள் அலர்கின்ற சோலைகள் சூழ்ந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையிலுள்ள, எம் புண்ணியன் - எம் தர்மமூர்த்தி, மண்ணிடை வந்து தோன்றி - பூமியில் வந்து காட்சிகொடுத்து, பேதம்கெடுத்து - வேற்றுமையையழித்து, அருள்செய் பெருமை- அருள்செய்த பெருமையை, அறியவல்லார் - அறியவல்லவர்கள், எம்பிரான் ஆவார்——, எ - று.

க - ரை. திருமகளும் கலைமகளும் துதித்து வணங்கி மலர்களா லருச்சித்து வழிபட, பெருந்துறைப் புண்ணியன் அவர்கள் பொருட்டுப் பூமியில் எழுந்தருளி அவர்கள் வேறுபாட்டைக் கெடுத் தருள் செய்த பெருமையை யறிபவர் எம்பிரானுவார் என்பதாம்.

வி - ரை. கமலப்போதினி னண்ணிய நன்னுதலார் எனப் பன்மையாற் கூறினமையால் மலர்வாழ்க்கையை யுடைய, கலைமகளையும் திருமகளையும் கொள்ளலாயிற்று. (எ)

பூவலர்கொன்றையமாலைமார்பன்
போருகிர்வன்புலிகொன்றவீரன்
மாதுநல்லாளுமைமங்கைபங்கன்
வண்பொழில்சூழ்தென்பெருந்துறைக்கோன்
ஏதில்பெரும்புகழெங்களீச
னிருங்கடல்வாணற்குத்தீயிற்றோன்றும்
ஓவியமங்கையர்தோள்புணரு
முருவறிவாரெம்பிரானுவாரே.

ப - ரை. பூஅலர்கொன்றை அம்மாலை - பூக்கள் அலரப்பெற்ற அழகிய கொன்றைமாலையை யணிந்த, மார்பன் - மார்பை

யுடையவன், போர் உகிர் - போர்செய்ய வல்ல நகங்களையுடைய, வல் புலி - வலிய புலியை, கொன்ற வீரன் - கொன்ற சேவகன், மாதுநல்லாள் - மாதுநல்லாளாகிய, உமை - உமையென்கிற, மங்கை - மங்கைப்பருவத்தை யுடையாட்கு, பங்கன் - பாகன், வண்பொழில் சூழ் - வளவிய சோலைகள்சூழ்ந்த, தென் பெருந்துறைக்கோன் - தென்றிருப்பெருந்துறை யிறைவன், ஏதம் இல் பெரும்புகழ் - குற்றமற்ற பெருங் கீர்த்தியை யுடைய, எங்கள் ஈசன் - எங்கள் ஈச்சுரன், இருங்கடல் வாணற்கு - பெரியகடலில் வாழ்வோனாகிய வருணனுக்கு, தீயில் தோன்றும் - நெருப்பில் அவதரித்த, ஓவியமங்கையர் தோள்புணரும் - சித்திரப் பாவைபோன்ற மங்கையருடைய தோளைப்புணர்ந்த, உரு அறிவார் - உருவத்தை யறிபவர், எம்பிரானாவார்——, எ - று.

க - ரை. கொன்றைமலர் மாலையைத்தரித்த மார்பை யுடையவனும், புலியைக்கொன்ற வீரனும், உமாதேவிபங்கனும், பெருந்துறைப் பெருமானும் ஆகிய சிவபெருமான், வருணனுக்கு நெருப்பிலுண்டாகிய ஓவிய மாதருடைய தோளைப்புணர்ந்த உருவத்தை யறிபவர் எம்பிரானாவார் என்பதாம். (அ)

தூவெள்ளைநீறணியெம்பெருமான்
சோதிமகேந்திரநாதன்வந்து
தேவர்தொழும்பதம்வைத்தவீசன்
றென்னன்பெருந்துறையாளியன்று
காதல்பெருகக்கருணைகாட்டித்
தன்கழல்காட்டிக்கசிந்துருகக்
கேதங்கெடுத்தென்னையாண்டருளுங்
கிடப்பறிவாரெம்பிரானாவாரே.

ப - ரை. தூ - பரிசுத்தமாகிய, வெள்ளை நீறு அணி - திருவெண்ணீற்றை யணிந்த, எம்பெருமான் - எம்பிரான், சோதி - ஒளியையுடைய, மகேந்திரநாதன் - மகேந்திரமலைக் கிறைவன், வந்து - வந்து, தேவர்தொழும் பதம்வைத்த - தேவர் வணங்கும் படியான பாதத்தைவைத்த, ஈசன் - ஈச்சுரன், தென்னன் - தென்னவன், பெருந்துறையாளி - திருப்பெருந்துறையை யாள்பவன், அன்று - அந்நாளில், காதல் பெருக - ஆசை மிகும்படி, கருணை காட்டி - கருணையைக் காட்டி, தன்கழல் காட்டி - தன் திருவடியைக் காட்டி, கசிந்து உருக - மனம் கசிந்துருகும்படி, கேதம் கெடுத்து - துன்பத்தை யொழித்து, என்னை ஆண்டரு

ளும் - என்னை யாண்டருளின, கிடப்பு அறிவார் - கிடக்கையை யறிபவர், எம்பிரான் ஆவார்——, எ - று.

க - ரை. திருவெண்ணீ றணிந்த எம்பெருமானும், ஒளியுள்ள மகேந்திரநாதனும், தேவர்கள் வந்து வணங்கப்பெற்றவனும், பெருந்துறைப் பெருமானும்ஆகிய சிவபெருமான் கருணைசெய்து, தன் திருவடியைக் காட்டி, என்மனங் கசிந்துருகும்படி என் துன்பங்களைக் கெடுத்து என்னை யாண்டருளின வரலாற்றை யறிபவர் எம்பிரானுவார் என்பதாம். (கூ)

அங்கணனெங்களமரர்பெம்மா
னடியார்க்கமுதனவனிவந்த
எங்கள்பிரானிரும்பாசந்தீர
விகபரமாயதோரின்பமெய்தச்
சங்கங்கவர்ந்துவண்சாத்திேனுடுஞ்
சதுரன்பெருந்துறையாளியன்று
மங்கையர்மல்குமதுரைசேர்ந்த
வகையறிவாரெம்பிரானுவாரே.

ப - ரை. அம்கணன் - கிருபைக்கண்ணன், எங்கள் அமரர் பெம்மான் - எங்கள் தேவர்பிரான், அடியார்க்குஅமுதன் - அடியவர்களுக்கு அமுதம்போன்றவன், அவனி வந்த - பூமியில் வந்த, எங்கள்பிரான் - எங்கள் பெருமான், *இருபாசம் தீர - பெரியபாசம் நீங்கவும், இகபரம்ஆயது - இம்மை மறுமைப்பயனு யிருப்பதாகிய, ஓர் - ஒப்பற்ற, இன்பம் எய்த - ஆநந்தத்தை யடையவும், சங்கம் கவர்ந்து - சங்கவளையலை யெடுத்துக்கொண்டு, வண்சாத்திேனுடும் - வளவிய தலைச்சாத்துடன், சதுரன் - சதுரப்பாட்டையுடையான், பெருந்துறைஆளி - திருப்பெருந்துறை யிறைவன், அன்று - அந்நாளில், மங்கையர் மல்கும் - மாதர்கள் நிறைந்த, மதுரைசேர்ந்த - மதுரையை யடைந்த, வகைஅறிவார் - வகையை யறிபவர், எம்பிரான்ஆவார்——, எ - று.

க - ரை. கிருபாநோக்க முடையவனும், தேவர் பெருமானும், அடியார்க்கு அமுதமாயிருப்பவனும் பூமியில் எழுந்தருளிய எங்கள் பெருமானும்ஆகிய சிவபிரான் யாம்பெரிய பாசம்நீங்கவும், இம்மை மறுமை யின்பங்களை யடையவும், சங்கவளையலை யெடுத்துக்கொண்டு தலைக்கோலத்தோடு மங்கையர்நிறைந்த மதுரையை யடைந்த வகையை யறிபவர் எம்பிரானுவார் என்பதாம். (சo)

# எண்ணப்பதிகம்.

ஒழியாவின்பத்துவகை.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

பாருருவாயபிறப்பறவேண்டும்
பத்திமையும்பெறவேண்டும்
சீருருவாயசிவபெருமானே
செங்கமலமலர்போல்
ஆருருவாயவென்னாரமுதேயுன்
னடியவர்தொகைநடுவே
ஓருருவாயநின்றிருவருள்காட்டி
யென்னையுமுய்யக்கொண்டருளே.

ப - ரை. பார் - பூமியில், உரு ஆய - பல உருக்கொண்ட, பிறப்பு அறல் வேண்டும் - என் பிறவி யறவேண்டும், பத்திமையும் பெறவேண்டும்-உன்னிடத்தில் பத்தியையும் அடையவேண்டும், சீர்உருஆய - சிறப்பையே உருவமாகக்கொண்ட, சிவபெருமானே - சிவபிரானே, செங்கமல மலர்போல் - செந்தாமரை மலர்போல, ஆர்உருஆய - நிறைந்த திருமேனியைக் கொண்ட, என்ஆர்அமுதே - என்அரியஅமிர்தமே, உன்அடியவர் தொகை நடுவே - உன்அடியார் கூட்டத்தின் நடுவே, ஓர்உருஆய - ஒப்பற்ற உருவமாகிய, நின் திருவருள் காட்டி - உன் திருவருளைக் காட்டி, என்னையும் - அடியேனையும், உய்ய - உஜ்ஜீவிக்கும்படி, கொண்டருள் - ஏற்றருள்வாயாக, எ - று.

க - ரை. உலகில் பிறக்கின்ற பிறவி யற்றொழிய வேண்டும், பத்தியையும் நான் பெறவேண்டும், சிவபெருமானே, என் அரிய அமிர்தமே, உன் அடியார் கூட்டத்தின் நடுவே உன் திருவருள் காட்டி என்னையும் உய்யக்கொண்டருள வேண்டும் என்பதாம். (க)

உரியேனல்லே னுனக்கடிமை
யுன்னைப்பிரிந்திங்கொருபொழுதும்
தரியேனுயேனின்னதென்
றறியேன்சங்கராகருணையினுல்
பெரியோனொருவன்கண்டுகொளென்றுன்
பெய்கழலடிகாட்டிப்
பிரியேனென்றென்றருளியவருளும்
பொய்யோவெங்கள்பெருமானே.

ப - ரை. உனக்கு - உனக்கு, அடிமை - அடியனேன்; உரியேன் அல்லேன் - உரியவனல்லேன், (அப்படியிருந்தும்) உன்னைப்பிரிந்து - உன்னைநீங்கி, இங்கு ஒருபொழுதும் தரியேன் - இவ்விடத்து ஒருபொழுதும் சகித்திரேன், நாயேன் - நாயினேன், இன்னது என்றுஅறியேன் - (அதற்குக் காரணம்) இன்னதென்றறியமாட்டேன், சங்கரா - சங்கரனே, கருணையினுல் - கருணையால், பெரியோன் ஒருவன் - பெரியோனுகிய வொருவன்யான் கண்டுகொள் என்று - (என்னைக்) கண்டுகொள்வாயென்று, உன் - உனது, பெய்கழல் - கழலையணிந்த, அடிகாட்டி - திருவடியைக் காட்டி, பிரியேன் என்று என்று - உன்னைப் பிரியேனென்று பலகாற்சொல்லி, அருளியஅருளும் - அருளினஅருளும், பொய்யோ - பொய்தானே, எங்கள் பெருமானே——, எ - று.

க - ரை. இறைவனே, நான் உனக்குரியேனல்லேன், (அப்படியிருந்தும்) உன்னைப் பிரிந்து ஒருபொழுதும் தரித்திரேன், இதற்குக் காரண மின்னதென் றறியேன், நீ உன் கருணையினு லெழுந்தருளி, நான் பெரியவன், என்னைக் கண்டுகொள்வாயென்று உன் திருவடியைக் காட்டிப் பிரியேனென் றருள்செய்ததும் பொய்யோ என்பதாம். (உ)

என்பேயுருகநின்னருளளித்துன்
னிணைமலரடிகாட்டி
முன்பேயென்னையாண்டுகொண்ட
முனிவாமுனிவர்முழுமுதலே
இன்பேயருளியெனையுருக்கி
யுயிருண்கின்றவெம்மானே
நண்பேயருளாயென்னுயிர்
நாதாநின்னருணுணுமே.

ப - ரை. என்பே உருக - என்புகளே யுருகும் வண்ணம், நின் அருள் அளித்து - உன்னருளைத் தந்து, உன் - உன்னுடைய, இணை - இரண்டாகிய, மலர்-தாமரைமலர்போலும், அடிகாட்டி - திருவடியைக்காட்டி, முன்பே - முன்னமே, என்னை ஆண்டுகொண்ட - என்னை யாண்டுகொண்டருளின, முனிவா - முனிவனே, முனிவர் - முனிவருக்கு, முழு முதலே - முழு முதல்வனே, இன்பே அருளி - சுகத்தையே கொடுத்து, என்னை உருக்கி - என்னை யுருகப்பண்ணி, உயிர் உண்கின்ற - என்னுயிரைக் கவர்கின்ற, எம்மானே - எம்பெரியோனே, என்உயிர் நாதா - என் பிராண நாதனே, நின் அருள் - உன்னருளை, நாணுமே - கூசாமல், நண்பே அருளாய் - நட்பாகவே அருள்செய்வாயாக, எ - று.

க - ரை. என்என்புருக அருள்செய்து உன் இரண்டு திருவடிகளைக் காட்டி, முன்னமே யென்னை யாண்டுகொண்ட இறைவனே, இன்பந்தந்து என்னுயிரை யுண்கின்ற எம்மானே, என்னுயிர்த் தலைவனே, நீ நாணமல், உன்னருளை யெனக் கருள்செய்ய வேண்டும் என்பதாம்.

வி - ரை. இணை - தமக்குத்தாமே சமானமான எனினுமாம் முனிவன் - மநநசீலன், இன்பு - இன்பம், நாணுதல் - உரியனல்லாதவனுக்கு அருள்செய்ய நாணுதல், உயிருண்ணுதலாவது உயிரைத் தன்வயமாக்கிக் கொள்ளுதல். (ரு)

பத்திலனே னும்பணிந்திலனே னுமுன்
    னுயர்ந்தபைங்கழல்காணப்
பித்திலனே னும்பிதற்றிலனே னும்
    பிறப்பறுப்பாயெம்பெருமானே
முத்தனையானேமணியனையானே
    முதல்வனேமுறையோவென்
றெத்தனையானும்யான்றொடர்ந்துன்னை
    யினிப்பிரிந்தாற்றேனே.

ப - ரை. பத்துஇலன்எனும் - பத்தியிலேனாயினும், பணிந்திலன் எனும் - பணிந்திலேனாயினும், உன் - உன்னுடைய, உயர்ந்த - உயர்வாகிய, பைங்கழல்காண - பசியதிருவடியைக் காணும் பொருட்டு, பித்துஇலன்எனும் - பித்திலேனாயினும், பிதற்றிலன் எனும் - பிதற்றிலேனாயினும், பிறப்புஅறுப்பாய் - என் பிறவியை யறுத்தருள்வாய், எம்பெருமானே - எம்பிரானே, முத்து அனை

யானே - முத்தையொத்தவனே, மணிஅனையானே-மாணிக்கத்தை யொத்தவனே, முதல்வனே - தலைவனே, முறையோ என்று - முறையோவென்று, எத்தனையானும் - எவ்வளவாயினும், யான் உன்னைத் தொடர்ந்து - யான் உன்னைப்பற்றி, இனிப்பிரிந்து ஆற்றேன் - இனிப்பிரிந்திருந்து சகித்திலேன், எ - று.

க - ரை. பத்தியிலேனாயினும், உன்னைப் பணிந்திலேனாயினும், உன் திருவடியைக் காணும்பொருட்டுப் பித்திலேனாயினும், பிதற்றிலேனாயினும், எம்பெருமானே, எமது பிறப்பை யறுத்தருள வேண்டும், இனி யுன்னைப் பிரிந்திருக்கச் சகியேன் என்பதாம்.

வி - ரை. பத்து - பற்று. பித்து - பைத்தியம். முத்து திருநீறுபூசப்பெற்ற திருமேனிக்கும், மணிஅஃதின்றிய இயற்கைத் திருமேனிக்கும் உவமையாகக் கொள்க. இவ்வாறன்றி முத்து மாணிக்கம் என்பனபோல அருமைப் பொருளா யிருப்பவன் எனினுமாம். (ச)

காணுமதொழிந்தேனின்றிருப்பாதங்
கண்டுகண்களிகூரப்
பேணுமதொழிந்தேன்பிதற்றுமதொழிந்தேன்
பின்னையெம்பெருமானே
தாணுவேயழிந்தேனின்னினைந்துருகுந்
தன்மையென்புன்மைகளால்
காணுமதொழிந்தேனீயினிவரினுங்
காணவுநாணுவனே.

ப - ரை. நின்திருப்பாதம் - உன்திருவடியை, காணுமது ஒழிந்தேன் - காண்பதை யொழிந்தேன், கண்களிகூரக் கண்டு - கண்கள் களிப்பு மிகும்படி கண்டு, பேணுமதொழிந்தேன்-விரும்புவதையும் ஒழிந்தேன், பிதற்றுமது ஒழிந்தேன் - பிதற்றுவதையும் ஒழிந்தேன், பின்னை எம்பெருமானே - மேலும் எம்பிரானே, தாணுவே - சிவபிரானே, அழிந்தேன் - நசித்தேன், நின்நினைந்து உருகும் தன்மை - உன்னைநினைந் துருகும் தன்மையை, என் புன்மைகளால் - என் புன்மைகளினால், காணுமது ஒழிந்தேன்-காண்பதை யொழிந்தேன், நீ இனிவரினும் - நீ யினிவந்தாலும், காணவும் நாணுவன் - உன்னைப் பார்க்கவும் நாணுவேன், எ - று.

க - ரை. உன் திருவடியைக் காண்பதை யொழிந்தேன், கண்களிகூரக் கண்டு விரும்புவதையு மொழிந்தேன், பிதற்றுதலையு மொழிந்தேன், உன்னை நினைந்துருகும் தன்மையையும் என்

இழிகுணங்களால் ஒழிந்தேன், நீ யினி வந்தாலும் உன்னைக் காண வும் நாணுவேன் என்பதாம்.

வி - ரை. தாணு - இறுதிக்காலத்தும் அழியாதிருப்பவன் என்னும் பொருளமைந்தவடசொல். (ரு)

பாற்றிருநீற்றெம்பரமனைப்
பரங்கருணையோடுமெதிர்ந்து
தோற்றிமெய்யடியார்க்கருட்டுறையளிக்குஞ்
சோதியைநீதியிலேன்
போற்றியென்னமுதேயெனநினைந்தேத்திப்
புகழ்ந்தழைத்தலறியென்னுள்ளே
ஆற்றுவனாகவுடையவனேயெனை
யாவவென்றருளாயே.

ப - ரை. பால் - வெண்மையாகிய, திருநீற்று - திருநீற்றை யணிந்த, எம்பரமனை - எம்மேலோனாகிய வுன்னை, பரங்கருணை யோடும் - பெருங்கருணையோடும், எதிர்ந்து தோற்றி - எதிரிற் காணப்பட்டு, மெய்யடியார்க்கு - மெய்யடியவர்க்கு, அருள்துறை அளிக்கும் - அருள்வழியைக் கொடுக்கின்ற, சோதியை - ஒளியுரு வாகிய வுன்னை, நீதியிலேன்-நீதியில்லாதவனாகிய நான், போற்றி- வணங்கி, என் அமுதே என - என்னமிர்தமே யென்று, நினைந்து ஏத்தி - நினைந்து தோத்திரம்பண்ணி, புகழ்ந்து-கீர்த்தித்து, அழை த்து - கூவி, அலறி - அலறுநின்று, என்உள்ளே - என்மனத்தின் கண்ணே, ஆற்றுவன்ஆக - தணிவேனாகும்படி, உடையவனே - உடையானே, என்னை - அடியேனை, ஆவஎன்று அருளாய்-ஐயோ வென்றிரங்கி யருள்வாய், எ - று.

க - ரை திருவெண்ணீற்றை யணிந்த எம்மேலோனும், பெ ருங்கருணையோடு தோன்றி அடியார்க்கருள் செய்கின்ற ஒளியுரு வனும் ஆகிய சிவபெருமானே, அடியேன், போற்றியென் னமுதே யென்று நினைந்து துதித்து புகழ்ந்து அழைத்து அலறி என்னுள் ளே தணிவேனாகும்படி என்னை அந்தோவென் றிரங்கி யருள்வா யாக என்பதாம். (சு)

# யாத்திரைப்பத்து.

அனுபவாதீதமுரைத்தல்.

தில்லையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார்சென்னிமன்னனெம்
        புயங்கப்பெருமான்சிறியோமை
ஓவாதுள்ளங்கலந்துணர்வா
        யுருக்கும்வெள்ளக்கருணையினால்
ஆவாவென்னப்பட்டன்பா
        யாட்பட்டீர்வந்தொருப்படுமின்
போவோங்காலம்வந்ததுகாண்
        பொய்விட்டுடையான்கழல்புகவே.

ப - ரை. பூஆர் சென்னிமன்னன் - கொன்றைமலரை யணிந்த சிரத்தையுடைய தலைவன், எம்புயங்கப் பெருமான் - எமது புயங்கப்பெருமான், சிறியோமை - சிறியேமாகியநம்மை, ஓவாது- இடையறாமல், உள்ளம்கலந்து - மனத்திற் கலந்து, உணர்வுஆய்- அறிவுருவாகி, உருக்கும் - அம்மனத்தை உருக்குகின்ற, வெள்ளக் கருணையினால் - கடலை யொத்த கருணையால், ஆவா என்னப் பட்டு - ஐயோவென் றிரங்கப்பட்டு, அன்புஆய் - அன்புருவாகி, ஆட்பட்டீர் - ஆட்பட்டவர்களே, பொய்விட்டு - பொய்வாழ்வை விட்டு, உடையான் கழல்புக - உடையவன் திருவடியிற் சேர, காலம் வந்தது - காலம் சம்பவித்தது, (ஆதலால்) போவோம் - போய்ச் சேர்வோம், வந்து ஒருப் படுமின் - ஒருமைப்பட்டு வாருங்கள், எ - று.

க - ரை. கொன்றைமலரைச் சிரத்திலணிவோனும், புயங்கப் பெருமானும் ஆகிய சிவபிரான், சிறியோங்களை நீங்காமல் மனத்திற் கலந்து அறிவுருவாய் மனத்தை யுருக்குகின்ற கடல் போலுங் கருணையால் ஆவாவென் றிரங்கப்பட்டு அன்பினால் ஆட்பட்டவர்களே உடையவன் திருவடியையடையச் காலம் கிட்டி

ற்று ஆதலால் யாம் போவோம், நீங்கள் வந்து ஒருப்படுங்கள் என்பதாம்.

**வி - ரை.** இறைவனுக்குக் கொன்றைமலர் விருப்பமாதலால் பூ என்றது கொன்றைமலரை யென்றுரைக்கலாயிற்று. புயங்கம்-ஓர் கூத்து-பாம்பு. புயங்கமென்னும் கூத்தையுடையவன், அன்றி, பாம்பை பயணிர்தவன் என்பது பொருள். ஒருப்படுதல் - ஒருமனப்படுதல். (க)

புகவேவேண்டாபுலன்களினீர்
　　புயங்கப்பெருமான்பூங்கழல்கள்
மிகவேநினைமின்மிக்கவெல்லாம்
　　வேண்டாபோகவிடுமின்கள்
நகவேஞாலத்துள்புகுந்து
　　நாயேயனையநமையாண்ட
தகவேயுடையான்றனைச்சாரத்
　　தளராதிருப்பார்தாந்தாமே.

**ப - ரை.** நகவே - (மெய்யன்பர்) சிரித்தற்பொருட்டே, ஞாலத்துள் புகுந்து - பூமியில் எழுந்தருளி, நாயேஅனைய-நாயையே ஒத்த, நம்மையாண்ட - எம்மையாண்டருளின, தகவேயுடையான்றனை - தகுதியையேயுடையவனை, சார - அடையும்பொருட்டு, தளராதிருப்பார் - தளராதிருப்பவர், தாம்தாமே - தாம்தாமாகவே விளங்குவர், (ஆதலால்) நீர் - நீங்கள், புலன்களில் - ஐம்புலன்களின் வழியில், புகவேவேண்டா - பிரவேசிக்கவே வேண்டா, புயங்கப்பெருமான்-புயங்கப் பெருமானுடைய, பூங்கழல்கள்-தாமரைப்பூவை நிகர்த்த திருவடிகளை, மிகநினைமின் - மிகுதியும் நினையுங்கள், மிக்க எல்லாம் - (அத்திருவடிகளை) ஒழிந்தனயாவையும், வேண்டா-விரும்பப்படாதனவாக, போகவிடுமின்கள்-செல்லவிடுங்கள், எ - று.

**க - ரை.** மெய்யன்பர் நகைக்கும்படி பூமியில் வந்து நம்மையாண்டருளின தகுதியுடையவனாகிய சிவபெருமானைச் சேரின், சேர்ந்தவர் எக்காலத்தும் தளராது ஒருதன்மையராய் வாழ்வார், ஆதலால் நீங்கள் புலன்வழியிற் புகவேண்டா, இறைவனது திருவடிகளை மிகுதியாக நினையுங்கள், மற்றவற்றை யெல்லாம் விரும்பாமல் போகவிடுங்கள் என்பதாம்.

**வி - ரை.** புயங்கப்பெருமான் - புயங்கனாகிய பெருமான், தகவு - தகுதி, (கிருபை) (உ)

தாமேதமக்குச்சுற்றமுந்
தாமேதமக்குவிதிவகையும்
யாமாரெமதார்பாசமா
ரென்னமாயமிவைபோகக்
கோமான்பண்டைத்தொண்டரொடு
மவன்றன்குறிப்பேகுறிக்கொண்டு
போமாறமைமின்பொய்நீக்கிப்
புயங்கனாள்வான்பொன்னடிக்கே.

ப - ரை. தமக்குச் சுற்றமும்தாமே-தமக்குறவாவதும்தாமே, தமக்குவிதிவகையும்தாமே - தமக்கு விதிவகையாவதும் தாமே, யாம்ஆர் - நாம் என்பது யார், எமதுஆர் - எமது என்பது யார், பாசம்ஆர் - பாசம் என்பது யார், என்னமாயம்-என்ன மாயங்கள், இவைபோக - இவை யொழியும்படி, கோமான்-இறைவனுடைய, பண்டைத் தொண்டரொடும் - பழவடியாரோடும், அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு - அவ்விறைவனது திருவுளக் குறிப்பையே குறிக்கொண்டு, பொய்நீக்கி - பொய்வாழ்வை யொழித்து, புயங்கன் - புயங்கனும், ஆள்வான் - எம்மை யாள்வோனுமாகிய சிவபிரானுடைய, பொன் அடிக்கு-திருவடிக்கீழ், போம்ஆறு அமைமின் - போகும் வண்ணம் அமையுங்கள், எ - று.

க - ரை. சுற்றமுதலிய எல்லாம் இறைவர் தாமேயாக நாம் முதலிய யாவும் ஒழியும்படி பழவடியாரோடும் கூடி அவ்விறைவனது குறிப்பையே கடைப்பிடித்துப் பொய் வாழ்வையொழித்துப் புயங்கனாள்வான் பொன்னடியிற் புகுதற்கு ஒருப்படுங்கள் என்பதாம்.

வி - ரை. கோமான் - பெருமையிற் சிறந்தோன், பண்டை. என்பதில் ஐசாரியை. குறிப்பு - திருவுளக்குறிப்பு. குறிக்கொள்ளல் - உறுதியாய்த்துணிதல். (௯)

அடியாரானீரெல்லீரு
மகலவிடுமின்விளையாட்டைக்
கடிசேரடியேவந்தடைந்து
கடைக்கொண்டிருமின்றிருக்குறிப்பைச்
செடிசேருடலைச்செலநீக்கிச்
சிவலோகத்தேநமைவைப்பான்
பொடிசேர்மேனிப்புயங்கன்றன்
பூவார்கழற்கே புகவிடுமே.

ப - ரை. அடியார் ஆனீர் எல்லீரும் - அடியாராகிய நீங்கள் எல்லீரும், விளையாட்டை அகலவிடுமின் - பிரபஞ்சப்பற்றிலகப்பட்டு உழலுதலாகிய விளையாட்டை நீங்கவிடுங்கள், கடிசேர் அடியே வந்து அடைந்து-மணந்தங்கிய திருவடியையே வந்தடைந்து, திருக்குறிப்பை - இறைவனது திருவுளக்குறிப்பை, கடைக்கொண்டு இருமின் - உறுதியாகக்கொண்டிருங்கள், (அங்ஙனஞ் செய்திராயின்) செடிசேர் உடலை-குற்றங்கூடிய வுடம்பை, செலநீக்கி-தூரமாக வொழித்து, சிவலோகத்தே - சிவபுரத்தே, நம்மை வைப்பான் - நம்மைவைக்கும்பொருட்டு, பொடிசேர்மேனி - திருவெண்ணீறு பூசப்பட்ட திருமேனியையுடைய, புயங்கன் - புயங்கப்பெருமான், தன் - தனது, பூ - தாமரைப் பூப்போன்ற, ஆர் - அருமையாகிய, கழற்கே - திருவடிக்கண்ணே, புகவிடும் - புகவிடுவான், எ - று.

க - ரை. அடியாராகிய நீங்களெல்லீரும் விளையாட்டைவிடுங்கள், இறைவனது திருவடியையே சேர்ந்து அவனது திருக்குறிப்பை உறுதியாகக் கொண்டிருங்கள். அப்படி செய்தால் இந்த வுடம்பைத் தூரமா யொழித்து சிவலோகத்தில் எம்மை வைக்கும் பொருட்டு இறைவன் தன் திருவடிக்கண்ணே புகவிடுவான் என்பதாம்.

வி - ரை. விளையாட்டு - பொய்நடிப்பு. கடி-விளக்கமெனினுமமையும். உயிர்களுக்குக் காவலாகிய எனினுமமையும். கடைக்கொள்ளல் - உறுதியாகக் கொண்டிருத்தல். (ச)

விடுமின்வெகுளிவேட்கைநோய்
மிகவோர்காலமினுமில்லை
உடையானடிக்கீழ்ப்பெருஞ்சாத்தோ
டுடன்போவதற்கேயொருப்படுமின்
அடைவோநாம்போய்ச்சிவபுரத்து
ளணியார்கதவதடையாமே
புடைபட்டுருகிப்போற்றுவோம்
புயங்கனாள்வான்புகழ்களையே.

ப - ரை. வெகுளி - கோபத்தை, விடுமின் - விடுங்கள், வேட்கைநோய் - ஆசைநோயானது, மிகவு - மிகுதல், இனும் ஓர்காலம் இல்லை - இன்னும் ஓர்காலத்தில் இல்லை, உடையான் அடிக்கீழ் - உடையவனது திருவடிக்கீழ், பெருஞ்சாத்தோடு - பெரிய அலங்கார திரவியங்களோடும், உடன் போவதற்கே -

கூடச்செல்வதற்கே, ஒருப்படுமின் - ஒருப்படுங்கள், நாம்போய் - நாம் சென்று, சிவபுரத்துள் அடைவோம்-சிவநகரையடைவோம், அணி ஆர் - அழகு பொருந்திய, கதவு அடையாமே - கதவடைக்கப் பெருமல், புடைபட்டு - அதன்பாற்பட்டு, உருகி-மனமுருகி, புயங்களுள்வான் புகழ்களை—,போற்றுவோம்-புகழ்வோம்——, எ - று.

க - ரை. வெகுளியை விடுங்கள், விட்டால், ஆசைநோய் மிகாது, உடையவனது திருவடிக்கீழ் அமைந்திருக்க ஒருப்படுங்கள். நாம் சிவபுரத்திற் சென்று அவ்விறைவனது புகழை மனமுருகும்படி பாடுவோம் என்பதாம்.

வி - ரை. இறைவனை வழிபடுவோர்க்கு அவ்வழிபாட்டானுண்டாகும் பயனையும் தவஞ்செய்வோர்க்குத் தவப்பயனையும் இன்னும் பல நன்மைகளையும் கொடுக்கவல்ல தாதலால்"விடுமின் வெகுளி" என முதற்கட்கூறினர். (௫)

புகழ்மின்றொழுமின்பூப்புனைமின்
புயங்கன்றாளே புந்திவைத்திட்
டிகழ்மினெல்லாவல்லலையு
மினியோரிடையூறடையாமே
திகழுஞ்சீரார்சிவபுரத்துச்
சென்றுசிவன்றாள்வணங்கிநாம்
நிகழுமடியார்முன்சென்று
நெஞ்சமுருகிநிற்போமே.

ப - ரை. புயங்கன் தாளே - புயங்கனது திருவடியையே, புகழ்மின் - புகழுங்கள், தொழுமின்-தொழுங்கள், பூ புனைமின் - பூவால் அலங்கரியுங்கள், புந்திவைத்திட்டு - (அதனை) மனத்திலமைத்துக்கொண்டு, எல்லா அல்லலையும்-எல்லாத் துன்பங்களையும், இகழ்மின் - இகழுங்கள், இனி-இனி, ஓர் இடையூறு அடையாமே - ஒரு இடையூறு சேராமல், திகழும் - விளங்குகின்ற, சீர் ஆர் - சிறப்பமைந்த, சிவபுரத்துச் சென்று - சிவபுரத்திற்போய், சிவன்தாள் வணங்கி - சிவபெருமானது திருவடியை வணங்கி, நாம் - யாம், நிகழும் - விளங்காநின்ற, அடியார் முன் சென்று - அடியவர் முன்னே சென்று, நெஞ்சம் உருகி நிற்போம் - மனமுருகி நிற்போம்——,எ - று.

க - ரை. புயங்கனது திருவடியைப் புகழுங்கள், அதனை மனத்தில் வைத்து வணங்குங்கள், மலரால் அலங்கரியுங்கள்,

அல்லல் எல்லாவற்றையும் விடுங்கள், இனி ஒரு இடையூறு வராமல் சிவபுரத்திற் சென்று இறைவன் திருவடியை வணங்கி, அடியார்க் கெதிரிற்போய் நெஞ்சுருகி நிற்போம் என்பதாம். (சு)

நிற்பார்நிற்கநில்லாவுலகி
னில்லோமினிநாஞ்செல்வோமே
பொற்பாலொப்பாந்திருமேனிப்
புயங்கனாள்வான்பொன்னடிக்கே
நிற்பீரெல்லாந்தாழாதே
நிற்கும்பரிசேயொருப்படுமின்
பிற்பானின்றுபேழ்கணித்தாற்
பெறுதற்கரியன்பெருமானே.

ப - ரை. நில்லாவுலகில் - நிலைநில்லாத வுலகின்கண், நிற்பார் நிற்க - நிற்பவர் நிற்கக்கடவர், இனி நாம் நில்லோம் - இனி நாம் நிற்கமாட்டோம், பொற்பால் - அழகினால், ஒப்பு ஆம் - (தனக்குத்தானே) நிகராகின்ற, திருமேனி - திருமேனியையுடைய, புயங்கனாள்வான் பொன்னடிக்கே - புயங்கனாள்வானது திருவடிக்கண்ணே, செல்வோம் - புகுவோம், நிற்பீர் எல்லாம் - நிற்பீரெல்லீரும், தாழாதே நிற்கும் பரிசே - எப்பொழுதும் தாழாமல் நிற்கும் வண்ணமே, ஒருப்படுமின் - ஒருப்படுங்கள், பிற்பால் நின்று - பின்னே நின்று, பேழ்கணித்தால் - விழித்தால், பெருமான் - எம்பெருமான், பெறுதற்கரியன் - பெறுதற்கரியனாவான் ——— எ - று.

க - ரை. பொய்யுலகிலிருப்பவர் இருக்கக் கடவர், இனி நாம் இரோம், பொன்போலுந் திருமேனியையுடைய புயங்கனாள்வான் பொன்னடிக்கே புகுவோம், நாம் எல்லாரும் எப்பொழுதும் தாழாமல் நிற்கும் வண்ணம் ஒருப்படுங்கள், பின்னின்று விழித்தால் எப்பெருமான் பெறுதற்கரியனாவான் என்பதாம்,

வி - ரை. நில்லாவுலகு - பொய்யுலகு. "பொற்பாலொப்பாம் திருமேனி" என்பதற்கு பொன்னின் பகுதியை நிகர்க்கின்ற திருமேனியென் றுரைத்தலுமொன்று. (எ)

பெருமான்பேரானந்தத்துப்
பிரியாதிருக்கப்பெற்றீர்காள்
அருமாலுற்றுப்பின்னைநீ
ரம்மாவழுங்கியரற்றாதே

திருமாமணிசேர்திருக்கதவந்
திறந்தபோதேசிவபுரத்துத்
திருமாலறியாத்திருப்புயங்கன்
றிருத்தாள்சென்றுசேர்வோமே.

ப - ரை. பெருமான்-இறைவனது, பேரானந்தத்து-பேரின்பத்தில், பிரியாதிருக்கப் பெற்றீர்காள் - பிரியாமலிருக்கப் பெற்றவர்களே, அருமால் உற்று-அரிய மயக்கத்தை யடைந்து, பின்னை-பிறகு, நீர் - நீங்கள், அம்மா - ஆச்சரியம், அழுங்கி - துன்பப்பட்டு, அரற்றாதே - அரற்றாமல், திருமாமணி சேர் - அழகிய பெரிய ரத்நங்கள் பொதியப்பெற்ற, திருக்கதவம் - திருக்கதவு, திறந்தபோதே - திறந்திருக்கும்போதே, சிவபுரத்து - சிவபுரத்திலுள்ள, திருமால் அறியா - திருமாலறியாத, திருப்புயங்கன் - திருப்புயங்கனது, திருத்தாள்-திருவடியை, சென்று சேர்வோம் - சென்றடைவோம்——,எ - று.

க - ரை. எம்பெருமானது பேராநந்தத்தில் பிரியாதிருக்கப் பெற்றவர்களே, அரியமயக்கத்தை யடைந்து துன்பப்பட்டு அரற்றாமல், திருமாமணிகளால் அலங்கரிக்கப்பட்ட திருக்கதவு திறந்திருக்கும்போதே சிவபுரத்திற் சென்று திருப்புயங்கனது திருவருடியை யடைவோம் என்பதாம். (அ)

சேரக்கருதிச்சிந்தனையைத்
திருந்தவைத்துச்சிந்திமின்
போரிற்பொலியும்வேற்கண்ணாள்
பங்கன்புயங்கனருளமுதம்
ஆரப்பருகியாராத
வார்வங்கூரவழுந்துவீர்
போரப்புரிமின்சிவன்கழற்கே
பொய்யிற்கிடந்துபுரளாதே.

ப - ரை. சேரக்கருதி-அடையக்கருதி, சிந்தனையைத் திருந்த வைத்து - மனத்தைத் திருந்தவைத்து, சிந்திமின் - இடைவிடாமல் நினையுங்கள், போரில் பொலியும் - போரில் விளங்குகின்ற, வேல் கண்ணாள் - வேல்போன்ற கண்களையுடையளாகிய உமாதேவியின், பங்கன் - பாகன், புயங்கன்-புயங்கப்பெருமான், (அவனது) அருள் அமுதம்-அருளாகிய அமிர்தத்தை, ஆரப்பருகி-நிறையப்பருகி, ஆராத ஆர்வம் கூர - தணியாத ஆசைமிக, அழுந்துவீர் - மூழ்குவீர்கள், பொய்யில் கிடந்து புரளாதே - பொய்

யிற்கிடந்து புரளாமல், சிவன் கழற்கே - சிவபெருமானது திரு வடியையே, போரப்புரிமின் - மிகவும் விரும்புங்கள்---,எ - று.

க - ரை. இறைவனை யடையவெண்ணி, மனத்தைத் திரு த்தமாய் வைத்துச் சிர்தியுங்கள், உமாதேவி பங்கனுகிய சிவபெரு மானது அருளமுதைப்பருகித்தணியாத அன்புமிக அர்த அமுதக் கடலில் அழுந்துவீர்கள், இந்தப் பிரபஞ்சமாகிய பொய்யிற் கிடந்து புரளாமல் இறைவனது திருவடியையே விரும்புங்சள் என்பதாம். (௬௯

புரள்வார்தொழுவார்புகழ்வாரா
யின்றேவந்தாளாகாதீர்
மருள்வீர்பின்னைமதிப்பாரார்
மதியுட்கலங்கிமயங்குவீர்
தெருள்வீராகிலிதுசெய்ம்மின்
சிவலோகக்கோன்றிருப்புயங்கன்
அருளார்பெறுவாரகலிடத்தே
யந்தோவந்தோவந்தோவே.

ப - ரை. புரள்வார் - புரள்வாரும், தொழுவார்-தொழுவா ரும், புகழ்வார் - புகழ்வாரும், ஆய் - ஆகி, இன்றே வந்து - இப் பொழுதே வந்து, ஆள் ஆகாதீர் - ஆட்படாதவர்களே, பின்னை மருள்வீர் - பிறகு மருட்சியை யடைவீர்கள், மதிப்பார் ஆர் - உம்மை மதிப்பவர்யார், மதி உள் கலங்கி மயங்குவீர் - மதியி னுள்ளே கலக்கத்தை யடைந்து மயங்காநிற்பீர், தெருள்வீர் ஆகில் - தெளிவடைய விரும்புவீராகில், இது செய்மின் - புரளு தல் முதலிய இவற்றைச் செய்யுங்கள், (இப்படி செய்யாவிடின்) சிவலோகக்கோன் - சிவபுரத்தரசன் ஆகிய, திருப்புயங்கன்-திருப் புயங்கனது, அருள் - அருளை, அகல் இடத்து - அகன்ற உலகின் கண், ஆர் பெறுவார் - யாவர் பெறவல்லார், அந்தோ அந்தோ அந்தோ---, எ - று.

க - ரை. புரளுதல் முதலான வற்றைச் செய்து இன்றே வந்து ஆட்படாதவர்களே, பின்னே மருள்வீர், உங்களை மதிப் பார் யார், அறிவு கலங்கி மயங்குவீர்கள், தெளிவுள்ளவர்களா னல் புரளுதல் முதலாகிய இவற்றைச் செய்யுங்கள், இப்படிச் செய்யாவிடின் சிவபெருமானது அருளைப் பெறுவோர் இவ்வுல கத்தி லொருவருமில்லை என்பதாம். (௯0)

# திருப்படையெழுச்சி.

பிரபஞ்சப்போர்.

தில்லையி லருளிச்செயப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கலிவிருத்தம்.

ஞானவாளேந்துமையர்நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர்மதிவெண்குடைகவிமின்
ஆனநீற்றுக்கவசமடையப்புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப்படைவாராமே

ப - ரை. ஞானவாள் ஏந்தும் - ஞானமாகிய வாளையேந்துகின்ற, ஐயர் - ஐயரது, நாதப்பறை அறைமின் - நாதமாகிய பறையை யறையுங்கள், மானம் மா ஏறும் ஐயர்-பெருமையாகிய குதிரைமீதேறுகின்ற ஐயனை, மதிவெண்குடை கவிமின் - அறிதலாகிய அறிவென்கிற வெண்குடையை நிழற்றுங்கள், ஆனநீற்றுக் கவசம் - நன்மையாகிய திருவெண்ணீறாகிய போர்வையினுள்ளே, அடையப் புகுமின்கள் - முழுதும் புகுந்து கொள்ளுங்கள், (இங்ஙனம் செய்வீர்களாயின்) மாயப்படை வாராமே-மாயமாகிய படைகள் வந்து நம்மை நலியாமல், நாம் வானவூர் கொள்வோம் - நாம் சிதாகாயமாகிய ஊரைச்சைப்பற்றுவோம் — எ-று.

க - ரை. ஞானமாகிய வாளைத்தாங்கிய இறைவரது நாதப்பறையை முழக்குங்கள், பெருமையாகிய குதிரை யேறுகின்ற இறைவனை அறிதலாகிய அறிவென்கிற வெண்குடையைக் கவியுங்கள், திருவெண்ணீற்றுக் கவசத்தில் மறைந்து கொள்ளுங்கள், இப்படி செய்வீர்களாயின், நாம் மாயப்படையை வென்று முத்தியுலகைக் கைக்கொள்வோம் என்பதாம். (க)

தொண்டர்காடுசெல்லீர்பத்தர்காள்சூழப்போகீர்
ஒண்டிறல்யோகிகளேபேரணியுந்தீர்கள்
திண்டிறற்சித்தர்களேகடைக்கூழைசென்மின்கள்
அண்டர்நாடாள்வோநாமல்லற்படைவாராமே,

ப - ரை. தொண்டர்காள் - தொண்டர்களே, தூசி செல்லீர் - நீங்கள் முன்னணிப்படையாகச் செல்லுங்கள், பத்தர்காள்-பத்தர்களே, சூழப்போகீர் - நீங்கள் சூழச்செல்லுங்கள், ஒள் - ஒட்பமான, திறல் - வலிமையுள்ள, யோகிகளே - யோகவான்களே, பேர் அணி உந்தீர்கள் - நீங்கள் பெரும்படை வகுப்பைச் செலுத்துங்கள், திண் திறல் சித்தர்களே - சரீரமனோதிடங்களையுடைய சித்தர்களே, கடைக்கூழை செல்மின்கள் - நீங்கள் பின்னணிப்படையாகச் செல்லுங்கள், (இங்ஙனம் செய்வீர்களாயின்) அல்லல் படைவாராமே - துன்பமாகிய படைகள் வந்து நலியாமல், நாம் அண்டர் நாடு ஆள்வோம் - நாம் தேவர் நாட்டையாளலாம்——,எ - று.

க - ரை. தொண்டர்களே, நீங்கள் முன்னணியாய்ச் செல்லுங்கள், பத்தர்களே, நீங்கள் சூழ்ந்து செல்லுங்கள், யோகிகளே, நீங்கள் பெரிய அணியைச் செலுத்துங்கள், சித்தர்களே, நீங்கள், பின்னணியாய்ச் செல்லுங்கள், இப்படி செய்வீர்களாயின், நாம் தேவருலகத்தை யாளலாம் என்பதாம். (உ)

# திருவெண்பா.

அணைந்தோர் தன்மை.
திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## நேரிசை வெண்பா.

வெய்யவினையிரண்டும்வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகாதென்செய்கேன் - செய்ய
திருவார்பெருந்துறையான்றேனுந்துசெந்தீ
மருவாதிருந்தேன்மனத்து.

ப - ரை. செய்ய - செவ்விய, திரு ஆர் பெருந்துறையான்- அழகு நிறைந்த பெருந்துறையையுடையவனுகிய, தேன் உந்து செந்தீ - தேனைப்பொழிகின்ற செந்தீயை, மருவாது இருந்தேன் மனத்து - பொருந்தா திருந்தேனது மனத்தின்கண், வெய்ய - கொடிய, வினையிரண்டும் - இருவினைகளும், வெந்து அகல - வெந்தொழிய, மெய் உருகி - உடலுருகி, பொய்யும் பொடியாகாது - பொய்யும் நீருயொழியாது, என் செய்கேன் - (இதற்கு) நான் என் செய்யக்கடவேன், எ - று.

க - ரை. திருப்பெருநதுறையையுடையவனுகிய இறைவனை யடையாதிருந்த என்மனத்தில் கொடியவினை யொழிய உடலுருகி பொய்யும் நீருகாது, இதற்கு யான் என்செய்வேன் என்பதாம்.

வி - ரை. பொய் - பொய்யொழுக்கம். தேனுந்து செந்தீ - இறைவனது திருமேனியைக் குறித்தது. செந்தீயாயினும் அன்பர் கண்ணுக்கினிமையைத்தருதலால், "தேனுந்துசெந்தீ" என்ருர்.(1)

ஆர்க்கோவரற்றுகோவாடுகோபாடுகோ
பார்க்கோபரம்பரனேயென்செய்கேன் - தீர்ப்பரிய
ஆனந்தமாலேற்றுமத்தன்பெருந்துறையான்
தானென்பாராரொருவர்தாழ்ந்து.

ப - ரை. தாழ்ந்து - வணங்கி, ஆர்க்கோ - இரைவேனே- அரற்றுகோ - அரற்றுவேனே, ஆடுகோ - ஆடுவேனே, பாடுகோ, பாடுவேனே, பார்க்கோ - நோக்குவேனே, பரம்பரனே - மிகவும் மேலானவனே, என்செய்கேன் · என்செய்யக் கடவேன், தீர்ப்பு

அரிய - நீக்குதற்கரிதாகிய, ஆனந்தம் - இன்பத்தைத் தருகின்ற, மால் ஏற்றும் - பைத்தியத்தை மிகுவிக்கின்ற, அத்தன் - எமது தந்தையாவான், பெருந்துறையான் தான் - திருப்பெருந்துறையை யுடையவன்முன், என்பார் - என்று என்னோடு கூடிநின்றுசொல் லுவோர் ஆகிய, ஒருவர் ஆர் - ஒருவர் யாவர், எ - று.

க - ரை. என்னோடு கூடிநின்று, இன்பப்பித்தேற்றுவோன் திருப்பெருந்துறை யிறைவனே யென்பா ரொருவரு மில்லை ஆதலால் யாரொருவனும் இரைவேனோ, ஆற்றுவேனோ, ஆடு வேனோ, பாடுவேனோ, பார்ப்பேனோ, யான் என்செய்வேன் என்பதாம். (உ)

செய்தபிழையறியேன்சேவடியேகைதொழுதே
உய்யும்வகையினுயிர்ப்பறியேன் - வையத் [ன்
திருந்துறையுள்வேன்மடுத்தென்சிந்தனைக்கேகோத்தா
பெருந்துறையின்மேயபிரான்.

ப - ரை. வையத்து இருந்து - பூமியின்கண்ணே யிருந்து உறையுள்வேல் - உறையினுள்ளே யிருந்தவேலை, என் சிந்தனைக்கே மடுத்துக் கோத்தான் - என்மனத்தி லழுத்திக்கோத்தான், பெருந் துறையில் மேயபிரான் - திருப்பெருந்துறையில் மேவிய சிவபெரு மான், (இங்ஙனஞ் செய்தற்குக் காரணமாக), செய்த - நான்செய்த, பிழை - குற்றத்தை, அறியேன் - அறிந்திலேன், சேவடியே கை தொழுது - திருவடியையே கைகுவித்து வணங்கி, உய்யும் வகை யின் - பிழைக்கும் வகையினது, உயிர்ப்பு - நிலையையும், அறியேன் - அறிந்திலேன், எ - று.

க - ரை. திருப்பெருந்துறை யிறைவன் தன்வேலை யென் மனத்துக் கோத்தான், இதற்குக் காரணமாக நான் செய்த பிழை யை யறிந்திலேன், அவனது திருவடியையே கைதொழுது உய் யும் வகையின் நிலையையும் அறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. உய்தல் - பிழைத்தல். உயிர்ப்பு - நிலை. இறைவ னது வேலழகு தம்மனத்துக் குடிகொண்டிருத்தலால், "வேன் மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்" என்றார். மேவிய என்பது மேய எனத்தொகுத்தல் பெற்றது. (ங)

முன்னைவினையிரண்டும்வேரறுத்துமுன்னின்றான்
பின்னைப்பிறப்பறுக்கும்பேராளன் - றென்னன்
பெருந்துறையின்மேயபெருங்கருணையாளன்
வருந்துயரந்தீர்க்குமருந்து.

ப - ரை. பின்னைப்பிறப்பு - பின்னே யுண்டாகக் கடவதான பிறவியை, அறுக்கும்-சேதிக்கிற, பேராளன்-திருநாமத்தை யுடையான், தென்னன் - தென்னவன், பெருந்துறையில் மேய - திருப்பெருந்துறையில் மேவிய, பெருங் கருணையாளன் - பெருங் கருணையையுடையான், வருந்துயரம் - இனிவரக்கடவதான துன்பத்தை, தீர்க்கும் - ஒழிக்கின்ற, மருந்து - ஔடதம், (இங்ஙனமாகிய சிவபெருமான்) முன்னைவினையிரண்டும் - முன்னே செய்த வினைகளிரண்டன் துன்பவின்பக் கூறுபாடுகளை வேர்அறுத்து-வேரோடறுத்து, முன்நின்றான் - எதிரே நின்றனன், எ - று.

க - ரை. மேல்வரக்கடவனவாகிய பிறவிகளைச் சேதிக்கும் பெரியோனும், தென்னனும், திருப்பெருந்துறையை யடையவனும், பெருங்கருணையாளனும், வருந்துன்பங்களைத் தீர்க்குமருந்தாயிருப்பவனும் ஆகிய சிவபெருமான், யான் முன்செய்த வினை யிரண்டையும் வேரறுத்து எனக்கெதிரே நின்றான் என்பதாம்.

வி - ரை. பேராளன் - பெரியோன், பிரசித்தன் எனினுமாம். கருணையாளன் - கருணையை யாள்பவன். (௪)

அறையோவறிவார்க்கனைத்துலகுமீன்ற
மறையோனுமாலுமால்கொள்ளு - மிறையோன்
பெருந்துறையுண்மேயபெருமான்பிரியா
திருந்துறையுமென்னெஞ்சத்தின்று.

ப - ரை. அறிவோர்க்கு - அறியப்புகுவார்க்கு, அறையோ - சொல்லளவேயாமோ, அனைத்து உலகும் ஈன்ற - எல்லாவுலகங்களையும் சிருட்டிசெய்த, மறையோனும்-வேதியனாகிய பிரமனும், மாலும் - திருமாலும், மால்கொள்ளும்-மயக்கங்கொள்ளுதற்குரிய, இறையோன் - இறைவன், பெருந்துறையுள்மேய பெருமான் - திருப்பெருந் துறையில் மேவியபிரான், பிரியாது-நீங்காது, இன்று-இப்பொழுது, என் நெஞ்சத்து இருந்து உறையும் - என்மனத்தின்கண் தங்கி வாழ்வன், எ - று.

க - ரை. அறியப்புகுவார்க்குச் சொல்லளவேயாமோ, பிரமனும் திருமாலும் அறியாது மயக்கத்தை யடைகின்ற இறைவனும் திருப்பெருந்துறையி லெழுந்தருளினவனும் ஆகிய சிவபிரான், இன்று என் மனத்தில் தங்கி வாழ்கின்றான் என்பதாம்.

வி - ரை. அறை - சொல். எல்லாவுலகங்களையும் படைப்பவனாதலால் பிரமனை "அனைத்துலகுமீன்ற மறையோன்" என்றார். மறையோன் - வேதியன். (௫)

பித்தென்னையேற்றும்பிறப்பறுக்கும்பேச்சரிதாம்
மத்தமேயாக்கும்வந்தென்மனத்தை - யத்தன்
பெருந்துறையானாட்கொண்டுபேரருளானோக்கும்
மருந்திறவாப்பேரின்பம்வந்து.

ப - ரை. அத்தன் - எமது தந்தையும், பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவனும், ஆட்கொண்டு - அடிமைகொண்டு, பேர் அருளால் - பெருங்கருணையால், நோக்கும் - பார்க்கிற, மருந்து - மருந்தாயிருப்பவனும், இறவா - இறுதியில்லாத, பேரின்பம் - பேராநந்தரூபமா யிருப்பவனும் ஆகிய இறைவன், வந்து - எழுந்தருளி, என்னைப்பித்து ஏற்றும் - என்னைப் பித்தேறப்பண்ணுவன், பிறப்பு அறுக்கும் - பிறவியை யறுப்பான், பேச்சு அரிது ஆம் - புகழ்ந்து பேசுதற்கு அருமையாவன், வந்து - அவன் வந்து, என் மனத்தை - என் நெஞ்சை, மத்தமே ஆக்கும் - உன் மத்தமாகவே செய்வான், எ - று.

க - ரை. திருப்பெருந்துறை யிறைவன், வந்து என்னைப்பித்தேற்றுவன், என் பிறவியையறுப்பான், துதித்தற்கரியனான இறைவன் என் மனத்தை உன்மத்தமாக்குவன் என்பதாம். (சு)

வாராவழியருளிவந்தெனக்குமாறின்றி
ஆராவமுதாயமைந்தன்றே - சீரார்
திருத்தென்பெருந்துறையானென்சிந்தைமேய
ஒருத்தன்பெருக்குமொளி.

ப - ரை. சீர்ஆர் - சிறப்புப்பொருந்திய, திருத்தென் பெருந்துறையான் - தென்றிருப்பெருந்துறையை யுடையான், என் சிந்தைமேய ஒருத்தன் - என் மனத்திற் றங்கிய ஒப்பற்றவன், பெருக்கும் ஒளி - பெருக்காநின்ற ஒளியுருவாயிருப்பவன், (அவன்) வாராவழி அருளி - இனிப்பிறவிக்கு வாராத நெறியை யருளிச்செய்து, வந்து - வந்து, எனக்கு - அடியேனுக்கு, மாறுஇன்றி - எதிரில்லாமல், ஆராஅமுதுஆய் - - தெவிட்டாத அமிர்தரூபமாய், அமைந்தன்று - அமைந்திருப்பது என்னவியப்பு, எ - று.

க - ரை. திருப்பெருந்துறை யிறைவனும், என்மனத்திலெழுந்தருளியிருக்கு மொருவனுமாகிய இறைவன், வந்து இனிப்பிறவிக்கு வாராத வழியையருளி, எனக்கு ஆராவமுதா யமைந்திருப்பது என்ன வியப்பு என்பதாம். (எ)

யாவர்க்குமேலாமளவிலாச்சீருடையான்
யாவர்க்குங்கீழாமடியேனை - யாவரும் [மான்
பெற்றறியாவின்பத்துள்வைத்தாய்க்கென்னெம் பெரு
மற்றறியேன்செய்யும்வகை.

ப - ரை. யாவர்க்கும் - எல்லார்க்கும், மேல்ஆம் - மேன்மையாகிய, அளவு இல்லா - அளவுஇல்லாத, சீர் உடையான் - சிறப்புடையவனும், யாவர்க்கும் கீழ்ஆம் அடியேனை - எல்லார்க்கும் கீழாகிய அடியனேனை, யாவரும் - எவ்வெவரும், பெற்றறியா - கிடைத்தறியாத, இன்பத்துள் - ஆநந்தத்தில், வைத்தாய்க்கு - வைத்தருளினவனுமாகிய வுன்பொருட்டு, என் எம்பெருமான் - என்னெம்பெருமானே, மற்றுசெய்யும்வகை - வேறு கைம்மாறு செய்யும் வகையை, அறியேன் - அறிந்திலேன், எ - று.

க - ரை. எல்லார்க்கும் மேலாகிய இறைவனும், என்னைப் பேரின்பத்துள் வைத்தவனுமாகிய உனக்குக் கைம்மாறு செய்யும் வகையறிந்திலேன் என்பதாம். (அ)

மூவருமுப்பத்துமூவருமற்றொழிந்த
தேவருங்காணச்சிவபெருமான் - மாவேறி
வையகத்தேவந்திழிந்தவார்கழல்கள்வந்திக்க
மெய்யகத்தேயின்பமிகும்.

ப - ரை. மூவரும் - மும்மூர்த்திகளும், முப்பத்துமூவரும் - முப்பத்துமூன்றுதேவரும், மற்று ஒழிந்ததேவரும் - அவர்களின் வேறொழிந்த தேவர்களும், காண - காணாத, சிவபெருமான் - சிவபிரானது, மாஏறி-குதிரைமீதேறி, வையகத்துவந்து இழிந்த - பூமியில் வந்திறங்கின, வார்கழல்கள் - நெடிய வீரக்கழலையணிந்த திருவடிகளை, வந்திக்க - வணங்க, மெய்அகத்து - உண்மையாகிய மனத்தின்கண், இன்பம் மிகும் - ஆநந்தம் அதிகரிக்கும், எ - று.

க - ரை. மும்மூர்த்திகளும், முப்பத்துமூன்று தேவர்களும், மற்றைத் தேவர்களும் கண்டறியாத சிவபெருமானது திருவடிகளை வணங்கினால், உண்மையாகிய மனத்தின்கண் ஆநந்தம் அதிகரிக்கும் என்பதாம்.

வி - ரை. மூவராவார் - பிரம விட்டுணு உருத்திரர். முப்பத்துமூவராவார் - ஆதித்தர் பன்னிருவர், அச்சுவினிதேவர் இருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர். ஒழிந்த தேவராவார் இந்திரன் முதலானோர். (கூ)

இருந்தென்னையாண்டானிணையடியேசிந்தித்
திருந்திரந்துகொண்ணெஞ்சேயெல்லாந் - தருங்காண்
பெருந்துறையின்மேயபெருங்கருணையாளன்
மருந்துருவாயென் மனத்தேவந்து.

ப - ரை. இருந்து - நீங்காதிருந்து, என்னையாண்டான் - என்னையாண்டருளினவனது, இணையடியே சிந்தித்து இருந்து - இரண்டு திருவடிகளையே சிந்தனைசெய்துகொண்டிருந்து, எல்லாம் - வேண்டிய எல்லாப் பொருள்களையும், இரந்துகொள் - வேண்டிக்கொள், (வேண்டிக்கொண்டால்) பெருந்துறையில்மேய- திருப்பெருந்துறையில்மேவிய, பெருங்கருணையாளன் - பெருங் கருணையை யுடையவன், என்மனத்தே - என்மனத்தின்கண்ணே, மருந்து உருவாய்வந்து - மருந்துருவாகி வந்து, தரும் - கொடுத் தருள்வான், எ - று.

க - ரை. நெஞ்சே; என்னை யாண்டருளினவனாகிய இறைவ னது திருவடியைச் சிந்தித்துக்கொண்டிருந்து வேண்டும் பொருள் களையெல்லாம் வேண்டிக்கொள், வேண்டினால் திருப்பெருந்துறை யான் நீ வேண்டுமவற்றை யெல்லாம் தந்தருளுவன் என்பதாம்.

இன்பம்பெருக்கியிருளகற்றியெஞ்ஞான்றும்
துன்பந்தொடர்வறுத்துச்சோதியா - யன்பமைத்துச்
சீரார்பெருந்துறையானென்னுடையசிந்தையே
ஊராகக்கொண்டானுவந்து.

ப - ரை. சீர்ஆர் - மேன்மை நிரம்பிய, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், இன்பம் பெருக்கி - ஆநந்தம் பெருகச் செய்து, இருள் அகற்றி - அஞ்ஞான விருட்டை யகலப் பண்ணி, எஞ்ஞான்றும் - எப்பொழுதும், துன்பம் தொடர்வு அறுத்து - துன்பத்தைப் பற்றறுத்து, சோதி ஆய் - ஒளியுரு வாகி, அன்புஅமைத்து - தன்னிடத்து செய்யவேண்டிய அன்பை யும் எனக்கமையப்பண்ணி, என்னுடைய சிந்தையே - என்மனத் தையே, உவந்து - மகிழ்ந்து, ஊர்ஆகக் கொண்டான் - உறையிட மாகக் கொண்டனன், எ - று.

க - ரை. திருப்பெருந்துறையான், ஆநந்தம் பெருகச்செய் து, அஞ்ஞான விருளையகற்றி, துன்பத்தை பற்றறுத்து, தன்னி டத்தன்பையும் எனக்கருள் செய்து, என்மனத்தையே தனக்கு திருக்கோயிலாகக் கொண்டான் என்பதாம். (கக)

# பண்டாயநான்மறை.

அனுபவத்துக்கையமின்மையுரைத்தல்.
திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

நேரிசைவெண்பா.

பண்டாயநான்மறையும்பாலணுகாமாலயனும்
கண்டாருமில்லைக்கடையேனைத் - தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்குநெஞ்சமே
உண்டாமோகைம்மாறுரை.

ப - ரை. பண்டு ஆய - பழமையாகிய, நால்மறையும்-நான்கு வேதங்களும், பால்அணுகா - அவன்பக்கத்தில் அணுகமாட்டா மால் அயனும் - திருமால் பிரமன் என்பவருள்ளும், கண்டாரும் இல்லை - கண்டிருப்பாரும் இல்லை, (அங்ஙனமாக) நெஞ்சமே - மனமே, கடையேனை - கடையேனாகிய என்னை, தொண்டு ஆகக் கொண்டு அருளும் - அடிமையாகக் கொண்டருளின, கோகழி - திருவாவடு துறையில்மேவிய, எம்கோமாற்கு-எமது தலைவனுக்கு, கைம்மாறு உண்டாமோ - (நாம் செய்தற்குரிய) கைம்மாறு உண்டாயிருக்குமோ, உரை - சொல்வாய், எ - று.

க - ரை. நெஞ்சமே, பழமையாகிய நான்கு வேதங்களும் பக்கத்தில் அணுகமாட்டா, திருமால்பிரமன் என்போருங் கண்டறியார், அப்படிப்பட்ட கோகழி யெம்கோமான் கடையேனைத் தொண்டுகொண்டதற்கு நாம் செய்யுங் கைம்மாறு முளதோ?

வி - ரை. நான்மறையும் மாலயனும் என்ற வும்மைகள் உயர்வு சிறப்பு. (க)

உள்ளமலமூன்றுமாயவுகுபெருந்தேன்
வெள்ளந்தரும்பரியின்மேல்வந்த-வள்ளல்
மருவும்பெருந்துறையைவாழ்த்துமின்கள்வாழ்த்தக்
கருவுங்கெடும்பிறவிக்காடு.

ப - ரை. உள்ள-நமக்குண்டாயிருக்கிற, மலம்மூன்றும்-மும்மலங்களும், மாய - கெடும்படி, உகுபெருந்தேன் வெள்ளம்தரும் -

சிந்துகின்ற பெருந்தேன் பெருக்கைத் தருகின்ற, பரியின்மேல் வந்த - குதிரையின்மேல் வந்த, வள்ளல் - வள்ளன்மையுள்ள சிவ பெருமான், மருவும் - பொருந்தியிருக்கிற, பெருந்துறையை - திருப்பெருந்துறையை, வாழ்த்துமின்கள் - வாழ்த்துங்கள், வாழ்த்த - வாழ்த்தினுல், பிறவிக்காடு - பிறவியென்னும் காடானது, கருவும்கெடும் - வேரோடும் கெடும், எ - று.

க - ரை. தொண்டர்களே, நமது மும்மலங்கள் கெடும்படி இன்பப் பெருந் தேனைச் சொரிகின்ற இறைவன் எழுந்தருளியிருக்கிற திருப்பெருந்துறையை வாழ்த்துங்கள், வாழ்த்தினுல் நம் பிறவிக்காடு வேரோடும் கெடும் என்பதாம்.

வி - ரை. மலமூன்றுவன - ஆணவம், மாயை, காமியம் என்பன. பெருந்தேன் என்றது இன்பத்தேனை. வள்ளல் - உதாரன், (வரையாது கொடுப்போன்,) கரு இவ்விடத்து வேருக்காயிற்று.

காட்டகத்துவேடன்கடலில்வலைவாணன்
நாட்டிற்பரிப்பாகனம்வினையை - வீட்டி
அருளும்பெருந்துறையானங்கமலபாதம்
மருளுங்கெடநெஞ்சேவாழ்த்து.

ப - ரை. காட்டகத்துவேடன் - காட்டினிடத்து வேடனய் வந்தவனும், கடலில்வலைவாணன் - கடலினிடத்துப் பரதவனய் வந்தவனும், நாட்டில் பரிப்பாகன் - பாண்டி நாட்டினிடத்துக் குதிரைப்பாகனய் வந்தவனும், நம்வினையை - நம்முடைய வினைகளை, வீட்டிஅருளும் - கெடுத்து நமக்கருள்புரிகின்ற, பெருந்துறையான்-திருப்பெருந்துறையை யுடையவனுமாகிய சிவபிரானது, அம் - அழகிய, கமலபாதம் - தாமரை மலர்போன்ற திருவடிகளை, மருளும்கெட - நமது மருட்சியும் அழியும்படி, நெஞ்சே வாழ்த்து - மனதே வாழ்த்துவாய், எ - று.

க - ரை. நெஞ்சே, காட்டில் வேடனய்வந்தவனும், கடலில் வலையனய் வந்தவனும், பாண்டிநாட்டில் குதிரைப்பாகனய் வந்தவனும், நமது வினைகளைக் கெடுத்து நம்மை யாண்டருள் செய்கின்ற திருப்பெருந்துறையானும் ஆகிய சிவபெருமானது திருவடியை நமது மருள் கெடும் வண்ணம் வாழ்த்துவாயாக என்பதாம்.

வி - ரை. காட்டகத்து வேடன் என்றது பன்றியின்பொருட்டு அருச்சுனனேடு போர்செய்ய வந்த திருக்கோலத்தை. கடலில் வலைவாணன் என்றது கடலில்வலைவீசின திருக்கோலத்தை. நாட்டில் பரிப்பாகன் என்றது நரி பரியாக்கின காலத்தில் குதிரைச் சேவகனய் வந்த திருக்கோலத்தை. (ரு)

வாழ்ந்தார்களாவாரும்வல்வினையமாய்ப்பாரும்
தாழ்ந்துலகமேத்தத்தகுவாருஞ்-சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சியேத்துந்திருவார்பெருந்துறையை
நன்றிறைஞ்சியேத்துநமர்.

ப - ரை. அமரர் - தேவர்கள், சூழ்ந்துசென்று - சூழ்ந்துபோய், இறைஞ்சி - வணங்கி, ஏத்தும் - துதிக்கின்ற, திருவார்பெருந்துறையை - அழகு நிறைந்த திருப்பெருந்துறையென்னுந் திருப்பதியை, நன்றுஇறைஞ்சி யேத்தும் - நன்றாக வணங்கித் துதிக்கின்ற, நமர் - அன்பர்கள், வாழ்ந்தார்கள் ஆவாரும் - வாழ்ந்தோராவாரும், வல்வினையை மாய்ப்பாரும் - வலிய வினைகளைக் கெடுப்பவர்களும், உலகம் - உலகமானது, தாழ்ந்து - வணங்கி ஏத்தத்தகுவாரும் - துதித்தற்குரியாரும் ஆவார், எ - று.

க - ரை. திருப்பெருந்துறையை வணங்கித் துதிக்கின்ற அன்பர்கள், வாழ்ந்தோராவாரும், வலியவினைகளைக் கெடுப்பவர்களும், உலகம் வணங்கித் துதித்தற்குரியோரும் ஆவர் என்பதாம்

வி - ரை. வாழ்ந்தார்கள் - முத்தி யுலகத்திற்சென்று வாழ்ந்தவர்கள். (ச)

நண்ணிப்பெருந்துறையைநம்மிடர்கள்போயகல
எண்ணியெழுகோகழிக்கரசைப்-பண்ணின்
மொழியாளோடுத்தரகோசமங்கை மன்னிக்
கழியாதிருந்தவனைக்காண்.

ப - ரை. நம் இடர்கள் போய்அகல - நம்முடைய துன்பங்கள் போய் நீங்க, பெருந்துறையை நண்ணி - திருப்பெருந்துறையையடைந்து, எழு - எழுச்சியையுடைய, கோகழிக்கு அரசை - திருவாவடு துறைக்கிறைவனை, எண்ணியெழு - நினைத்தெழு, பண்ணின் மொழியாளோடு - பண்போல மொழியையுடையவளாகிய உமாதேவியோடு, உத்தரகோசமங்கைமன்னி - திருவுத்தரகோச மங்கையைப் பொருந்தி, கழியாது இருந்தவனை - நீங்காதிருந்தவனை, காண் - சேவிப்பாய், எ - று.

க - ரை. நெஞ்சே, கோகழிக்கரசனும், எம்பிராட்டியோடு திருவுத்தரகோசமங்கையில் நிலைபெற்று நீங்காதிருப்பவனுமாகிய சிவபெருமானைச்சிந்தித்தெழுவாயாக, சேவிப்பாயாக என்பதாம்.

வி - ரை. எழுஎன்பதற்குவினைமுதலாகநெஞ்சு வருவிக்கப்பட்டது. (ரு)

காணுங்கரணங்களெல்லாம்பேரின்பமெனப்
பேணுமடியார்பிறப்பகலக்-காணும்
பெரியானைநெஞ்சேபெருந்துறையிலென்றும்
பிரியானைவாயாரப்பேசு.

ப - ரை. காணும் - காணப்பட்ட, கரணங்கள் எல்லாம் - கருவிகள் யாவும், பேரின்பம் என - பேரானந்த ரூபமேயாமென்று, பேணும் - போற்றுகின்ற, அடியார் - அடியார்கள், பிறப்பு அகல - தம்பிறவிநீங்க, காணும் - சேவிக்கிற, பெரியானை - பெரியோனை, பெருந்துறையில் -திருப்பெருந்துறையில், என்றும் பிரியானை - எப்பொழுதும் பிரியாதிருப்பவனை, நெஞ்சே - மனமே, வாயாரப்பேசு - வாயாரப் புகழ்ந்து பேசுவாய், எ - று.

க - ரை. நெஞ்சே, காணப்பட்ட கருவிகள் யாவும்பேரின்பவுருவாய்ப் போற்றுகின்ற அடியார்கள் தம்பிறவி யொழியும்படி சேவிக்கிற பெரியோனும், திருப்பெருந்துறையை எப்பொழுதும் பிரியாதவனுமாகிய சிவபெருமானை வாயாரப் புகழ்ந்து பேசுவாயாக என்பதாம். (சு)

பேசும்பொருளுக்கிலக்கிதமாம்பேச்சிறந்த
மாசின்மணியின்மணிவார்த்தை-பேசிப்
பெருந்துறையேயென்றுபிறப்பறுத்தேனல்ல
மருந்தினடியென்மனத்தேவைத்து.

ப - ரை. நல்ல மருந்தின் அடி - நல்ல அமிர்தம்போன்ற சிவபிரானது திருவடியை, என்மனத்துவைத்து - என்மனத்தின்கண் அமைத்து, பேசும் பொருளுக்கு - பேசப்பட்ட பொருள்களுக்கு, இலக்கு - லக்ஷயமாய், இதம்ஆம்பேச்சு இறந்த - இதமான சொல்லிறந்த, மாசுஇல் மணியின்-மாசிலாமணியினது, மணிவார்த்தை-திருவார்த்தையை, பேசி-பேசி, பெருந்துறையே என்று-திருப்பெருந்துறையே யென்று சொல்லி, பிறப்பு அறுத்தேன் - பிறவியைச் சேதித்தேன், எ - று.

க - ரை. நல்ல அமிர்தம்போல்பவனாகிய சிவபெருமானது திருவடியை என்மனத்திலிருத்தி, சொல்லளவைக் கடந்த அவனது திருவார்த்தையைப் பேசி, அவனது திருப்பெருந்துறையை வாழ்த்தி என்பிறவித்தளையைச் சேதித்தேன் என்பதாம்.

வி - ரை. இலக்கு - குறி (லக்ஷயம்) இதம் - நன்மை. மாசு- அழுக்கு. யாவரானும் போக்கப்படாத பிறவிக்கு மருந்தாதலால் இறைவனை நல்ல மருந்தென்றார் எனினுமாம். (எ)

# திருப்படையாட்சி.

சிவோபாதியொழிதல்.

தில்லையி லருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியவிருத்தம்.

கண்களிரண்டுமவன்கழல்கண்டு
களிப்பனவாகாதே
காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வு
கடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறு
மறந்திடுமாகாதே
மாலறியாமலர்ப்பாதமிரண்டும்
வணங்குதுமாகாதே
பண்களிகூர்தருபாடலொடாடல்
பயின்றிடுமாகாதே
பாண்டிநன்னாடுடையான்படையாட்சிகள்
பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம்வந்து
வெளிப்படுமாகாதே
மீன்வலைவீசியகானவன்வந்து
வெளிப்படுமாயிடிலே.

ப - ரை. மீன்வலைவீசிய - மீன்படுக்கும் வலையை விசிறின, கானவன் - வேடன், வந்து வெளிப்படுமாயிடில் - வந்து நமக்கு வெளிப்படையாகச் சேவைதந்தருள்வனாயின், கண்கள் இரண்டும் - இருகண்ணும், அவன்கழல்கண்டு - அவனது திருவடியைக் கண்டு, களிப்பனஆகா - களிக்குந்தொழில்கள் இசையா, காரிகையார்கள் தம்வாழ்வில் - மாதர் வாழ்வில், என்வாழ்வு - என்வாழ்வானது, கடைப்படும் ஆகாது - இழிவடைதலாகாது, மண்களில் வந்துபிறந்திடும் ஆறு - உலகங்களில் வந்து பிறக்கும் வண்ணம், மறந்திடும் ஆகாது - மறந்திடலுமாகாது, மால்அறியா - திருமா

லறியாத, மலர்பாதம் இரண்டும் - தாமரைமலர் போன்ற திருவடியிரண்டையும், வணங்குதும் ஆகாது - வணங்கலுமாகாது, பண் - பண்களால், களிகூர்தரு - மகிழ்வை மிகுதியாய் தருகிற, பாடலொடுஆடல் - பாடலோடாடல்கள், பயின்றிடும் ஆகாது-பயிறலுமாகாது, பாண்டிநல்நாடு உடையான் - நல்லபாண்டிநாட்டையுடையானது, படையாட்சிகள் பாடுதும் ஆகாது - திருப்படையாட்சிகளைப் பாடுதலுமாகாது, விண்களிகூர்வது - விண்ணுலகம் களிப்புமிகுதற்கேதுவாகிய, ஓர் வேதகம் வந்து வெளிப்படும் ஆகாது - ஒருவேதகம் வந்து வெளிப்படுதலுமாகாது, எ - று.

க - ரை. இறைவன் நமது கண்ணுக்குப் புலப்படுவனுயின், அவன் திருவடியைக் கண்டு களித்தல் முதலிய செய்கைகள் நமக்கு இசையா வென்பதாம்.

வி - ரை. இறைவனது திருவுருவத்தைக் கண்ணுரக் கண்டால் சீவோபாதிகள் யாவுமொழிதலால் இவ்வாறு கூறினர். வேதகம் - வேறுபடுத்தல், அதாவது சீவத்துவத்தை மாற்றிச் சிவமாக்குதல். (க)

ஒன்றினொடொன்றுமோரைந்தினொடைந்து
முயிர்ப்பதுமாகாதே
உன்னடியாரடியாரடியோமென
வுய்ந்தனவாகாதே
கன்றைநினைந்தெழுதாயெனவந்த
கணக்கதுவாகாதே
காரணமாகுமனுதிகுணங்கள்
கருத்துறுமாகாதே
நன்றிதுதீதெனவந்தநடுக்க
நடந்தனவாகாதே
நாமுமெலாமடியாருடனேசெல
நண்ணுதுமாகாதே
என்றுமெனன்புநிறைந்தபராவமு
தெய்துவதாகாதே
ஏறுடையானெனையாளுடைநாயக
னென்னுள்புகுந்திடிலே.

ப - ரை. ஏறு உடையான் - இடபவாகநத்தையுடையவன், என்னைஆள் உடை நாயகன் - என்னை யாளாகவுடைய தலைவன்,

சன் உள் புகுந்திடில் - என் மனத்திற் புகுந்துவிடின், ஒன்றினொடு ஒன்றும் - ஒன்றொடொன்றும், ஓர் ஐந்தினோடு ஐந்தும் - ஒரைந் துடன் ஐந்தும், உயிர்ப்பதும்ஆகாது - பிழைத்திருப்பதும் இசை யாது, உன அடியார்அடியார்அடியோம் என - உன்னடியார்க்கடி யார்க்கு அடியோங்களென்று, உய்ந்தனஆகா - உஜ்ஜீவித்த தொ ழில்களிசையா, கன்றை நினைந்து எழு - கன்றை நினைத்தெ ழாநின்ற, தாய் எனவந்த - தாய்ப் பசுவைப்போல வந்த, கணக் கதுஆகாது - கணக்கு இசையா, காரணம்ஆகும் - காரணமாகிய, அநாதி குணங்கள்-பழமையாகிய குணங்கள், கருத்துறும்ஆகாது - கருத்திற் பொருந்துதலும் இசையாது, நன்றுஇது - நன்மைஇது, தீது என தீமை யிது என்னும்படி, வந்த-உண்டாகிய,நடுக்கம்-சல னங்கள், நடந்தனஆகா - சென்றனவு மிசையா, நாமும் எல்லாம் - நாமெல்லாமும், அடியாருடனே செல்ல - அடியாரோடு செல்லும் பொருட்டு, நண்ணுதும் ஆகாது - பொருந்துதலும் இசையாது, என்றும் - எப்பொழுதும், என்அன்புநிறைந்த - என்னன்பின்கண் நிறைந்த, பராஅமுது - மேலானஅமிர்தத்தை, எய்துவதுஆகாது - அடைவது மாகாது, எ - று.

க - ரை. இடபவாகநனாகிய சிவபெருமான் என் மனத்திற் புகுந்திடின், ஒன்றினொ டொன்றுமொ ரைந்தினொ டைந்து முயி ர்த்தல் முதலிய செய்கைகள் நமக்கு இசையா வென்பதாம்.

வி - ரை. ஒன்றினொடொன்று - ஆன்மாவோடுஆன்மா, ஐந் தினொடைந்து - பொறிகளோடு புலன்கள். (உ)

பந்தவிகாரகுணங்கள்பறிந்து
யறிந்திடுமாகாதே
பாவனையாயகருத்தினில்வந்த
பராவமுதாகாதே
அந்தமிலாதவகண்டமுநம்மு
ளகப்படுமாகாதே
ஆதிமுதற்பரமாயபரஞ்சுட
ரண்ணுவதாகாதே
செந்துவர்வாய்மடவாரிடரானவை
சிந்திடுமாகாதே
சேலனகண்களவன்றிருமேனி
திளைப்பனவாகாதே

இந்திரஞாலவிடர்ப்பிறவித்துய
　　ரேகுவதாகாதே
என்னுடைநாயகனாகியவீச
　　னெதிர்ப்படுமாயிடிலே.

ப - ரை. என்னுடை நாயகன் ஆகிய ஈசன் - என் தலைவனாகிய ஈச்சுரன், எதிர்ப்படும்ஆயிடில் - எதிர்ப்படுமாயின், பந்த விகாரகுணங்கள் - பந்த சம்பந்தமாகிய விகாரகுணங்கள், பறிந்துமறிந்திடும்ஆகாது - பறிபட்டுத் தடைபடலு மாகாது, பாவனைஆய கருத்தினில் வந்த - சிந்தனையாகிய கருத்தில் வந்த, பராவமுது ஆகாது - மேலான அமிர்தமென்பதும் ஆகாது, அந்தம் இல்லாத-முடிவில்லாத, அகண்டமும் - அகண்டரூபமும், நம்முள் அகப்படும்ஆகாது - நமக்குள்ளே யகப்படுதலுமாகாது, ஆதிமுதல் பரம் ஆய பரஞ்சுடர் - ஆதிமுதல்வனாகிய மேலான பரஞ்சோதி, அண்ணுவதுஆகாது - பொருந்துதலாகாது, செந்துவர்வாய் - செம்பவளம்போன்ற வாயினையுடைய, மடவார் - மாதர்களா லுண்டாகிற, இடர்ஆனவை - துன்பங்களானவை, சிந்திடும்ஆகாது - நசித்தலும் ஆகாது, சேல்அன்ன கண்கள் - மீன்போன்ற கண்கள், அவன் திருமேனி - அவனது திருமேனியை, திளைப்பன ஆகாது - அநுபவித்தலும் ஆகாது, இந்திரஞாலம் - இந்திரசாலம் போன்ற, இடர் - துக்கரூபமாகிய, பிறவித்துயர் - பிறவித்துன்பம், ஏகுவது ஆகாது - ஒழிந்துபோதலு மாகாது, எ - று.

க - ரை. இறைவனாகிய சிவபெருமான் வந்து நம் கண்ணுக்குப் புலப்படுவானாயின், பந்த விகாரகுணங்கள் பறிந்து மறிந்திடல் முதலிய செய்கைகள் நமக்குத் தகாவென்பதாம்.

வி - ரை. பந்தம் - பிறவிக்கட்டு. அண்ணுதல் - பொருந்துதல். துவர் - பவளம். திளைத்தல் - அநுபவித்தல். இந்திரஞாலம்-இந்திரசாலம். (அற்புதங்களைக் காட்டும் வித்தை.) இது அறுபத்து நான்கு கலைஞானங்களி லொன்று. (௬)

என்னணியார்முலையாகமளைந்துட
　　னின்புறுமாகாதே
எல்லையின்மாக்கருணைக்கடலின்றினி
　　தாடுதுமாகாதே
நன்மணிநாதமுழங்கியெனுள்ளுற
　　நண்ணுவதாகாதே
நாதனணித்திருநீற்றினைநித்தலு
　　நண்ணுவதாகாதே

மன்னியவன்பரிலென்பணிமுந்துற
வைகுவதாகாதே
மாமறையும்மறியாமலர்ப்பாதம்
வணங்குதுமாகாதே
இன்னியற்செங்கழுநீர்மலரென்றலை
யெய்துவதாகாதே
என்னையுடைப்பெருமானருளீச
னெழுந்தருளப்பெறிலே.

ப - ரை. என் அணி ஆர் முலை - என் அழகு நிரம்பிய முலைகள், என்னையுடைப் பெருமான் - என்னையாளாக வுடைய பிரான், அருள் ஈசன் - அருளையுடைய ஈச்சுரன், எழுந்தருளப் பெறில் - எழுந்தருளப் பெற்ருல், ஆகம் அளைந்து - இறைவனது திருமார்பைப் புல்லி, உடன் - உடனே, இன்பு உறும் ஆகாது - சுக மடைதலுமாகாது, எல்லை இல் - எல்லை யற்ற, மா - பெரிய, கருணைக்கடல் - கருணைக் கடலில், இன்று - இப்பொழுது, இனிது ஆடுதும் ஆகாது - இனிதாக ஆடுதலுமாகாது, நல் - நல்ல, மணி நாதம் முழங்கி - மணியோசை முழங்கி, என் உள் உற - என்னுள்ளே மிகுதியாக, நண்ணுவது ஆகாது - பொருந்துதலும் ஆகாது, நாதன் - இறைவனது, அணி - அழகையுடைய, திரு நீற்றினை - திருவெண்ணீற்றை, நித்தலும் - நாள்தோறும், நண்ணுவது ஆகாது - பொருந்துதலாகாது, மன்னிய - நிலைபெற்ற, அன்பரில் - அன்பர்களுள்ளே, என்பணி - என்னடிமைத்திறம், முந்துற வைகுவது ஆகாது - முற்பட்டிருத்த லாகாது, மாமறையும் அறியா - பெரிய வேதங்களுமறியாத, மலர்ப்பாதம் - தாமரை மலரையொத்த திருவடிகளை, வணங்குதும் ஆகாது - வணங்குதலு மாகாது, இன் இயல் - இனிய இயல்பமைந்த, செங்கழுநீர் மலர் - செந்தாமரை மலர்போலுந் திருவடி, என் தலை - என் சிரசின்மீது, எய்துவது ஆகாது - பொருந்தலாகாது, எ - று.

க - ரை. இறைவன் எனக்கெதிரே யெழுந்தருளப்பெற்ருல் என்னணியார் முலையாக மளைந்துட னின்புறுதல் முதலிய செய்கைகள் எமக்குத் தகாவென்பதாம்.

வி - ரை. நாதம் - நாத தத்துவம். செங்கழு நீர் என்பது திருவடிக் குவமையாகப் புணர்க்கப்பட்டதனுல் செந்தாமரைக் காயிற்று. (௪)

மண்ணினின்மாயைமதித்துவகுத்த
மயக்கறுமாகாதே
வானவருந்மறியாமலர்ப்பாதம்
வணங்குதுமாகாதே
கண்ணிலிகாலமனைத்தினும்வந்த
கலக்கறுமாகாதே
காதல்செயும்மடியார்மனமின்று
களித்திடுமாகாதே
பெண்ணலியாணெனநாமெனவந்த
பிணக்கறுமாகாதே
பேரறியாதவனேகபவங்கள்
பிழைத்தனவாகாதே
எண்ணிலியாகியசித்திகள்வந்தெனை
யெய்துவதாகாதே
என்னையுடைப்பெருமானருளீச
னெழுந்தருளப்பெறிலே.

ப - ரை. என்னை யுடைப்பெருமான் - என்னை யடிமையாக வுடையபிரான், அருள் ஈசன் - அருளையுடைய ஈச்சுரன், எழுந்தருளப் பெறில் - எழுந்தருளப் பெற்ருல், மண்ணினில் - பூமியில், மாயை மதித்து வகுத்த - மாயையால் மதித்து வகுக்கப்பட்ட, மயக்குஅறும்ஆகாது - மயக்கமறுதலு மாகாது, வானவரும்அறியா- தேவர்களும் அறியாத, மலர்பாதம் - தாமரை மலர்போலுந் திருவடிகளை, வணங்குதும் ஆகாது - வணங்குதலுமாகாது, கண் இலி காலம்அனைத்தினும் - நினைத்தற்கரிய காலமெல்லாம், வந்த-உண்டாகிய, கலக்கு அறும் ஆகாது - கலக்கமறுதலு மாகாது, காதல் செய்யும் - அன்புசெய்கின்ற, அடியார்மனம் - அடியவரது மனம், இன்று - இப்பொழுது, களித்திடும் ஆகாது - களித்திடுதலுமாகாது, பெண் அலி என - பெண் பேடெனவும், ஆண்என - ஆண் எனவும், நாம் என - நாமெனவும், வந்த - உண்டாகிய, பிணக்கு அறும் ஆகாது - பிணக்கமறுதலு மாகாது, பேர்அறியாத - பேர் சொல்ல அறியாத, அனேக பவங்கள் - பல பிறவிகளில் நின்றும், பிழைத்தன ஆகாது - பிழைத்துப் போயினவு மாகாது, எண் இலி ஆகிய - கணக்கற்றனவாகிய, சித்திகள் வந்து - சித்திகள் வந்து, என்னை எய்துவது ஆகாது - என்னை யடைவதாகாது, எ - று.

க - ரை. இறைவன் எனக்கெதிரில் எழுந்தருளப்பெற்றால், மண்ணினின் மாயை மதித்து வகுத்த மயக்கறுதல் முதலியவை எமக்குத் தகாவென்பதாம்.

வி - ரை. கண்ணுதல் - நினைத்தல், பவம் - பிறப்பு, சித்திகள் - எண்வகைச் சித்திகள். அவை அணிமாமுதலியன. (௫)

பொன்னியலுந்திருமேனிவெண்ணீறு
பொலிந்திடுமாகாதே
பூமழைமாதவர்கைகள்குவிந்து
பொழிந்திடுமாகாதே
மின்னியனுண்ணிடையார்கள்கருத்து
வெளிப்படுமாகாதே
வீணைமுரன்றெழுமோசையிலின்ப
மிகுத்திடுமாகாதே
தன்னடியாரடியென்றலைமீது
தழைப்பனவாகாதே
தானடியோமுடனேயுயவந்து
தலைப்படுமாகாதே
இன்னியமெங்குநிறைந்தினிதாக
வியம்பிடுமாகாதே
என்னைமுனாளுடையீசனெனத்த
னெழுந்தருளப்பெறிலே.

ப - ரை. என்னைமுன் ஆள்உடை - என்னை முன்னே யாளுதலையுடைய, ஈசன் - ஈச்சுரன், என் அத்தன் - என் தந்தை, எழுந்தருளப்பெறில் - எழுந்தருளப்பெற்றால், பொன் இயலும்-பொன் போல விளங்குகிற, திருமேனி - திருமேனியின் மீது, வெண்ணீறு - திருவெண்ணீறு, பொலிந்திடும் ஆகாது - பிரகாசித்தலுமாகாது, மாதவர் - பெருந்தவத்தினரது, கைகள் குவிந்து - கைகள் கூம்பி, பூ மழை - புஷ்பமாரியை, பொழிந்திடும் ஆகாது - பொழிதலுமாகாது, மின் இயல் - மின்னினது இயற்கையமைந்த, நுண் இடையார்கள் - நுண்ணிய இடையினையுடைய மாதர்களுடைய, கருத்து - உட்குறிப்பானது, வெளிப்படும்ஆகாது-வெளிப்படுதலுமாகாது, வீணை முரன்று எழும் ஓசையில் - வீணைமுழங்கியுண்டாகின்ற நாதத்தில், இன்பம் மிகுத்திடும் ஆகாது - இன்பமிகுதலுமாகாது, தன் அடியார்அடி - தன்னடியார்களுடைய திரு

வடி, என் தலைமீது - என் சிரசின்மேல், தழைப்பன ஆகாது - செழிப்பன ஆகாது, தான் அடியோம் உடனே - தான்அடியோங் களுடனே, உய்ய வந்து - உய்யும்படி வந்து, தலைப்படும்ஆகாது - கலத்தலாகாது, இன் இயம் - இனிய வாத்தியங்கள், எங்கும்நிறைந்து - எவ்விடத்தும் நிறைந்து, இனிதாக இயம் பிடும் ஆகாது - இனிதாக முழங்குதலுமாகாது, எ - று.

க - ரை. என்னை முன்னே யாண்டருளின இறைவன் எழுந்தருளப்பெற்றால், பொன்னியலுந் திருமேனி வெண்ணீறு பொலிந்திடுதல் முதலியவை தசா என்பதாம்.

வி - ரை. இயலுதல் - போலுதல், விளங்குதல் எனினுமாம். மின் - மின்கொடி, முரலல் - சத்தித்தல், இயம் - வாத்தியம். (௬)

சொல்லியலாதெழுதூமணியோசை
 சுவைதருமாகாதே
துண்ணெனவென்னுளமன்னியசோதி
 தொடர்ந்தெழுமாகாதே
பல்லியல்பாயபரப்பறவந்த
 பராபரமாகாதே
பண்டறியாதபரானுபவங்கள்
 பரந்தெழுமாகாதே
வில்லியனன்னுதலார்மயலின்று
 விளைந்திடுமாகாதே
விண்ணவரும்மறியாதவிழுப்பொரு
 ளிப்பொருளாகாதே
எல்லையிலாதனவெண்குணமானவை
 யெய்திடுமாகாதே
இந்துசிகாமணியெங்களையாள
 வெழுந்தருளப்பெறிலே.

ப - ரை. இந்து சிகாமணி-சந்திரசேகரமணி, எங்களை ஆள - எங்களை யாள்வதற்கு, எழுந்தருளப் பெறில் - எழுந்தருளப் பெற்றால், சொல் இயலாது - சொல்நடை யாடாமல், எழு - உண்டாகிற, தூமணியோசை - பரிசுத்தமான மணியொலி, சுவை தரும் ஆகாது - சுவைதருதலு மாகாது, துண்ணென - துண்ணென்று, என் உள்ளம் மன்னிய சோதி - என் மனத்தில் நிலைபெற்ற ஒளி, தொடர்ந்து எழும் ஆகாது - தொடர்ந் தெழுதலுமாகாது, பல்

இயல்பு ஆய - பல இயல்புகள் வாய்ந்த, பரப்பு அற - பரப்புக் கெட, வந்த - வந்த, பராபரம் ஆகாது - பராபரமாகாது, பண்டு அறியாத - முன்னறியாத, பராநுபவங்கள்-மேலான அநுபவங்கள், பரந்தெழும் ஆகாது - பரந்தெழுதலுமாகாது, வில் இயல் - வில்லின் றன்மை யமைந்த, நல் நுதலார் - அழகிய நெற்றியையுடைய மாதர்களுடைய, மயல் - மையலானது, இன்று - இப்பொழுது, விளைந்திடும் ஆகாது - விளைதலு மாகாது, விண்ணவரும் அறியாத-தேவர்களும் அறியாத, விழுப்பொருள் - மேலானபொருளாகிய, இப்பொருள் ஆகாது - இந்தப் பொருளாகாது, எல்லை யிலாதன - எல்லை யற்றனவாகிய, எண்குணமானவை - எட்டுக் குணங்களானவைகள், எய்திடும் ஆகாது - உண்டாதலுமாகாது, எ - று.

க - ரை. சந்திரசேகரனாகிய மாணிக்கம் எம்மை யாண்டருளும்பொருட்டு எழுந்தருளினால், சொல்லியலா தெழு தூமணியோசை சுவைதருதல் முதலியவை தகா என்பதாம்.

வி - ரை. சொல்லியலா தெழுதலாவது பேச்சிறக்க வெழுதல். மணியோசை - சிலம்பொலி, இதுபோலுஞ் செய்தி குருமுகத்தா லுணரத்தக்க தாதலால் இங்கு விரித்துரைக்கப் படவில்லை. எண்குணம் - எட்டுக்குணம், அவை தன்வயத்தனாதல் முதலியன, இவை சைவாகமத்திற் கூறப்பட்டன. வரம்பில் ஞானம் முதலியவாக ஆருகதராற் கூறப்பட்டன. (எ)

சங்குதிரண்டுமுரன்றெழுமோசை
தழைப்பனவாகாதே
சாதிவிடாதகுணங்கணம்மோடு
சலித்திடுமாகாதே
அங்கிதுநன்றிதுநன்றெனுமாயை
யடங்கிடுமாகாதே
ஆசையெலாமடியாரடியோமெனு
மத்தனையாகாதே
செங்கயலொண்கண்மடந்தையர்சிந்தை
திளைப்பனவாகாதே
சீரடியார்கள்சிவானுபவங்க
டெரிந்திடுமாகாதே
எங்குநிறைந்தமுதூறுபரஞ்சுட
ரெய்துவதாகாதே

ஈறறியாமறையோனெனையாள
வெழுந்தருளப்பெறிலே.

ப - ரை. ஈறுஅறியா - முடிவறியப்படாத, மறையோன் - வேதியன், என்னைஆள - என்னையாட்கொள்ள, எழுந்தருளப் பெறில் - எழுந்தருளப்பெற்றால்; சங்கு - சங்குகள், திரண்டு - கூட்டங்கூடி, முரன்று - முழங்கி, எழும்ஓசை - உண்டாகின்ற வோசையானது, தழைப்பன ஆகாது - செழிப்பனஆகாது, சாதி விடாத குணங்கள் - சாதியைவிடாத குணங்கள், நம்மோடு - நம் முடன், சலித்திடும்ஆகாது - சலித்திடுதலுமாகாது, அங்கு - அவ் விடத்து, இதுநன்று இதுநன்று என்னும் - இதுநன்மை இது நன்மை யென்கிற, மாயை - மாயையானது, அடங்கிடும் ஆகாது - அடங்குதலுமாகாது, ஆசையெல்லாம் - அவாமுழுதும், அடியார் அடியோம் என்னும் - அடியார் அடியோம் என்கிற, அத்தனையா காது - அவ்வளவாகாது, செம்கயல் - செங்கயல்போன்ற, ஒள்கண் - ஒட்பமான கண்களையுடைய, மடந்தையர் - மாதரது, சிந்தைதிளைப் பன ஆகாது - மனம் அநுபவிப்பன ஆகாது, சீரடியார்கள் - சிறப் புடைய அடியார்களுடைய, சிவாநுபவங்கள் - சிவாநுபவங்களை, தெரிந்திடும் ஆகாது - தெரிந்திடுதலுமாகாது, எங்கும் நிறைந்து - எவ்விடத்தும் நிறைந்து, அமுதுஊறு - அமுதூறுகின்ற, பரஞ் சுடர் - பரஞ்சோதியானது, எய்துவது ஆகாது - பொருந்துதலா காது, எ - று.

க - ரை. முடிவறியப்படாத வேதியனாகிய சிவபெருமான் என்னை யாண்டருளும் பொருட்டு எழுந்தருளுவனாயின், சங்கு திரண்டு முரன்றெழுமோசை தழைத்தல் முதலியவை ஆகா வென்பதாம்.

வி - ரை. சலித்தல் - வெறுத்தல். கயல் - சேல்மீன். ஒண் கண் - அழகாகிய கண். மடந்தையர் - மடப்பத்தையுடையார். மடப்பம் - இளமை, பெண்மைக்குணம் நான்கனுள்ஒன்று எனினு மாம். (அ)

# ஆனந்தமாலை.

சிவானுபவவிருப்பம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியவிருத்தம்.

மின்னேரனையபூங்கழல்க
ளடைந்தார்கடந்தார்வியனுலகம்
பொன்னேரனையமலர்கொண்டு
போற்றாநின்றாரமரரெல்லாம்
கன்னேரனையமனக்கடையாய்க்
கழிப்புண்டவலக்கடல்வீழ்ந்த
என்னேரனையேனினியுன்னைக்
கூடும்வண்ணமியம்பாயே.

ப - ரை. மின்நேர் - மின்னலையொத்த, (மின் ஏர் - மின்னுதலும் அழகுமுள்ள,) அனைய - அத்தன்மையவாகிய, பூங்கழல்கள் - பொலிவாகிய திருவடிகளை, அடைந்தார் - அடைந்த அன்பர்கள், வியன் உலகம் கடந்தார் - பெரியவுலக விவகாரங்களைக் கடந்தார்கள், அமரர் எல்லாம் - தேவரெல்லாரும், பொன்நேர் - பொன்னையொத்த, அனைய-அத்தன்மையவாகிய, மலர்கொண்டு- மலர்களால் அருச்சித்து, போற்றா நின்றார் - வணங்கா நின்றார்கள், கல்நேர் அனைய - கல்லைநிகர்த்த அத்தன்மைத்தாகிய, மனக்கடை ஆய் - மனத்தையுடைய கடையனாய், கழிப்புண்டு - அறிஞரால் தள்ளப்பட்டு, அவலக்கடல் வீழ்ந்த-துன்பக்கடலில் விழுந்த, என்நேர் அனையேன் - என்னை நானே நிகர்த்த அத்தன்மையேன், இனி - இனி, உன்னைக்கூடும் வண்ணம் - உன்னையடையும் வகை, இயம்பாய் - சொல்வாய், எ - று.

க - ரை. இறைவனே, உன் திருவடியை யடைந்த அன்பர்கள் இவ்வுலகமாயையைக் கடந்தார்கள், தேவர்களெல்லாம் மலர்களால் அருச்சித்து வணங்கா நின்றார்கள். அப்படியிருக்கும்போது, கல்லைநிகர்த்த மனத்தையுடையனாய்க் கழிக்கப்பட்டுத் துன்பக்கடலில் வீழ்ந்த யான் இனியுன்னை யடையும்வகையைச் சொல்வாயாக என்பதாம்.

வி - ரை. மின்னேர் என்பதை மின்நேர் - மின் ஏர், என இரண்டு வகையாய்ப் பிரித்துப் பொருள் கூறுக. பூ - தாமரை மலர் எனினுமாம். கடை - பண்பாகுபெயர். கழிப்புண்ணல் - தள்ளப்படுதல். அவலம் - துன்பம். (க)

என்னாலறியாப்பதந்தந்தா
யானதறியாதேகெட்டேன்
உன்னாலொன்றுங்குறைவில்லை
யுடையாயடிமைக்காரென்பேன்
பன்னாளுன்னைப்பணிந்தேத்தும்
பழையவடியரொடுங்கூடா
தென்னாயகமேபிற்பட்டிங்
கிருந்தேனோய்க்குவிருந்தாயே.

ப - ரை. என்னால் அறியா - என்னாலுணரப்படாத, பதம் தந்தாய் - பதத்தைக்கொடுத்தாய், யான் - அடியேன், அது அறியாதே கெட்டேன் - அதனை யறியாமலே கெட்டுப்போனேன், உன்னால் ஒன்றும் குறைவு இல்லை-உன்னால் ஒரு குறைவுமில்லை, உடையாய் - உடையவனே, அடிமைக்கு ஆர் என்பேன் - அடியேற்கு யாருளர் என்பேன், பல்நாள் உன்னைப்பணிந்து ஏத்தும் - பலநாளும் உன்னை வணங்கித் துதிக்கின்ற, பழைய அடியரொடும் கூடாது - பழவடியாருடன் சேராமல், என் நாயகமே - என் தலைவனே, பிற்பட்டு - பிறகிட்டு, நோய்க்கு விருந்தாய் - பிணிக்கு விருந்தாகி, இங்கு இருந்தேன் - இவ்விடத்திருந்தேன், எ - று.

க - ரை. இறைவனே, என்னால் அறியவொண்ணாத பதவியைக் கொடுத்தாய், நான் அதனை யறியாமல் கெட்டேன், உன்னால் ஒரு குறைவுமில்லை, அடியேனுக்குப் பற்றுயாருளர் என்பேன், எப்பொழுதும் உன்னைப் பணிந்து துதிக்கின்ற உன் பழவடியாரோடு கூடாமல் பின்னிட்டு, நோய்களுக்கு விருந்தாக இங்கிருந்தேன் என்பதாம்.

வி - ரை. என்னாலறியாப்பதம் என்றது முத்திப்பதத்தை. பதம் திருவடியெனினுமாம். நோய்க்கு விருந்தாயிருத்தலாவது நோய்களுக்கு வயப்பட்டிருத்தல். (உ)

சீலமின்றிநோன்பின்றிச்
செறிவேயின்றியறிவின்றித்
தோலின்பாவைக்கூத்தாட்டாய்ச்
சுழன்றுவிழுந்துகிடப்பேனை
மாலுங்காட்டிவழிகாட்டி
வாராவுலகநெறியேறக்

கோலங்காட்டியாண்டானைக்
கொடியேனென்றோகூடுவதே.

ப - ரை. சீலம் இன்றி - ஒழுக்க மில்லாமலும், நோன்பு இன்றி-விரதங்களில்லாமலும், செறிவேயின்றி-அடக்கமேயில்லாமலும், அறிவுஇன்றி - ஞானமில்லாமலும், தோலின்பாவை-தோற்பாவையின், கூத்தாட்டு ஆய் - கூத்தாட்டை யொத்து, சுழன்று விழுந்து கிடப்பேனை - சுழன்று வீழ்ந்து கிடக்கிற என்னை, மாலும் காட்டி - தன்னிடத்தில் விருப்பத்தையுண்டாக்கி, வழிகாட்டி - வழியையுங் காட்டி, வாராவுலகம் - மீளாவுலகில், நெறிஏற - முறையேயேற, கோலம்காட்டி-தனது திருக்கோலத்தைக்காட்டி, ஆண்டானை - ஆட்கொண்டருளினவனை, கொடியேன் - கொடியனேன், கூடுவது - சேர்வது, என்றோ - எக்காலமோ, எ - று.

க - ரை. ஒழுக்கம் முதலானவை யில்லாமல் தோற்பாவையின் கூத்தாட்டை நிகர்த்துச் சுழன்று கிடக்கின்ற என்னை, தன்னிடத்து அன்பு முதலியவற்றைக் கொடுத்து, ஆண்டருளின இறைவனைக் கொடியேன் சேர்வது எந்நாளோ என்பதாம். (ரு)

கெடுவேன்கெடுமாகெடுகின்றேன்
கேடிலாதாய்பழிகொண்டாய்
படுவேன்படுவதெல்லாநான்
பட்டாற்பின்னைப்பயனென்னே
கொடுமாநரகத்தழுந்தாமே
காத்தாட்கொள்ளுங்குருமணியே
நடுவாய்நில்லாதொழிந்தக்கா
னன்றோவெங்கணாயகமே.

ப - ரை. கெடுவேன் - கெடக்கடவேனாகிய நான், கெடுமா கெடுகின்றேன்-கெடும் வண்ணம் கெடா நின்றேன், கேடு இலாதாய் - கெடுதியற்றவனே, பழிகொண்டாய் - நிந்தையை யேற்றுக்கொண்டாய், படுவேன் - படக்கடவேன், படுவது எல்லாம் - படவேண்டியவை யெல்லாம், நான் பட்டால் - நான் பட்டால், பின்னை - பிறகு, பயன் என்னே - பிரயோஜநமென்ன, கொடு - கொடிய, மா - பெரிய, நரகத்து அழுந்தாமே - நரகத்தில் அழுந்தாமல், காத்து ஆட்கொள்ளும் - காத்தாட்கொள்ளுகின்ற, குரு மணியே - தேசிகரத்நமே, நடுவாய் நில்லாது ஒழிந்தக்கால் - நீ நடுவு நிலையாய் நில்லாதொழிந்தால், நன்றோ - உனக்கு நன்மையாமோ, எங்கள் நாயகமே - எம்மிறைவனே, எ - று.

க - ரை. கெடுவேன் கெடுமாறு கெடுகின்றேன், கெடுதியில்லாத நீ நிந்தையை யடைந்தாய், படுதற்குரிய துன்பங்களை யெல்லாம் நான் பட்டால் உனக்குப் பயனென்னை, கொடிய நரகத்தில் நான் அழுந்தாமல் என்னைக் காத்தாட்கொள்ளும் மாணிக்கமே, நீ நடுவு நிலைமையில் நில்லாதொழிந்தால் உனக்கு அழகாகுமோ என்பதாம்.

வி - ரை. மாணிக்கத்தின் மிக்க மணியில்லாமையால் அதனைக் "குருமணி" என்றார். (ச)

தாயாய்முலையைத்தருவானே
தாராதொழிந்தாற்சவலையாய்
நாயேன்கழிந்துபோவேனோ
நம்பியினித்தானல்குதியே
தாயேயென்றுன்றாளடைந்தேன்
றயாநீயென்பாலில்லையே
நாயேனடிமையுடனாக
வாண்டாய்நான்றான்வேண்டாவோ.

ப - ரை. தாய் ஆய் - தாயாகி, முலையைத்தருவானே-முலையூட்டுவோனே, தாராது ஒழிந்தால் - தாராதொழிந்தால், சவலையாய் - சவலைப்பிள்ளையாகி, நாயேன் கழிந்துபோவேனோ - நாயினேன் ஒழிந்துபோவேனோ, நம்பி - நம்பீ, இனித்தான் நல்குதி - இனியாயினும் அருள்செய்வாய், தாயே யென்று - மாதாவே யென்று, உன்தாள் அடைந்தேன் - உன் திருவடியை யடைந்தேன், நீ என் பால் தயா இல்லையே - நீ யென்னிடத்துத் தயாவானாக இருக்கவில்லையே, நாயேன் அடிமை - நாயினேனது அடிமைத்திறம், உடன் ஆக ஆண்டாய் - கூடவே நிசழும்படி ஆண்டருளினை, நான்தான் வேண்டாவோ - அடியேன் மாத்திரம் வேண்டாவோ, எ - று.

க - ரை. தாயாகி முலைபுண்பிப்போனே, முலைதாராவிடின் நாயேன் சவலையாய் ஒழிவேனோ. இனியாயினும் அருள்செய்வாய், தாயே யென்று உன் திருவடியை யடைந்தேன், நீ யென்னிடத்துக் கிருபையுள்ளவனாக இருக்கவில்லையே, நாயினேனது அடிமைத்திறம் வேண்டி என்னை யாண்டருளினை, அடிமைத்திறமேயன்றி அடியேன் வேண்டாவோ என்பதாம்.

வி - ரை. தாயாய் என்றது தாயுருவாகி என்றபடி. சவலை - மெலிவு. இது பாலில்லாமல் மெலிந்த குழந்தைக் காயிற்று. நம்பி - மங்களகுணங்களால் நிறைந்தவன். நீ யென்பாலில்லையே என்பதற்கு நீ யென்பட்சத்திலில்லையோ என்றுரைப்பினுமாம்.

கோவேயருளவேண்டாவோ
கொடியேன்கெட.வேயமையுமே
ஆவாவென்றுவிடிலென்னை
யஞ்சேலென்பாராரோதான்
சாவாரெல்லாமென்னளவோ
தக்கவாறன்றென்னுரோ
தேவேதில்லைநடமாட
திகைத்தேனினித்தான்றேற்றாயே.

ப - ரை. கோவே - இறைவனே, அருளவேண்டாவோ - நீ யருள்புரிய வேண்டாவோ, கொடியேன் கெடவே அமையுமே - கொடியனேன் கெட்டொழிதலே போதுமோ, ஆவா என்று விடில் - நீ அய்யோவென்றிரங்காவிடின், என்னை-என்னை, அஞ்சேல் என்பார்-அஞ்சவேண்டா மென்பவர், ஆரோதான்-யாவரோதான், சாவார் எல்லாம் என் அளவோ - பிறவிப்பயனடையாமல் இறப்பாரெல்லாரும் என்னளவேயோ, தக்க ஆறு அன்று என்றோ - உனக்குத் தக்கவிதமல்லவென்று ஒருவரும் சொல்லாரோ, தேவே - தேவனே, தில்லை-திருத்தில்லையின்கண், நடம் ஆடீ - நடநமாடுவோனே, திகைத்தேன் - மயங்கினேன், இனித்தான் தேற்றாய் - இனியாயினும் தெளிவிப்பாய், எ - று.

க - ரை. இறைவனே, நீ யருளவேண்டாவோ, கொடியேன் கெடலே யமையுமோ, அந்தோவென்று நீ யிரங்காவிடின் என்னை அஞ்சேல் என்பவர் யாருளர், பிறவிப்பயனடையாமல் இறப்பவரெல்லாரும் என்னளவுதானோ, என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்று ஒருவரும் சொல்லாரோ, நான் திகைத்தேன், இனியாயினும் தெளிவிப்பாயாக என்பதாம். (சு)

நரியைக்குதிரைப்பரியாக்கி
ஞாலமெல்லாநிகழ்வித்துப்
பெரியதென்னன்மதுரையெல்லாம்
பிச்சதேற்றும்பெருந்துறையாய்
அரியபொருளேயவநாசி
யப்பாபாண்டிவெள்ளமே
தெரியவரியபரஞ்சோதீ
செய்வதொன்றுமறியேனே.

ப - ரை. நரியை - நரிகளை, குதிரைப் பரியாக்கி - குதிரை வாகநமாகப்பண்ணி, ஞாலம் எல்லாம் நிகழ்வித்து - உலகமெல்லாம் பரவச்செய்து, பெரிய - பெரிதாகிய, தென்னன் - பாண்டியனது, மதுரையெல்லாம் - மதுரைப்பதி முழுதும், பிச்சு ஏற்றும் - பித்தேறச் செய்த, பெருந்துறையாய் - திருப்பெருந்துறையையுடையவனே, அரியபொருளே - அருமையாகிய பொருளே, அவநாசி அப்பா - அவநாசியப்பனே, பாண்டிவெள்ளமே - பாண்டிக் கடலே, தெரிய அரிய - தெரிதற்கரிதாகிய, பரஞ்சோதீ - பரஞ்சுடரே, செய்வது - செய்யவடுப்பதாகிய காரியம், ஒன்றும் அறியேன் - சிறிதும் அறியேன், எ - று.

க - ரை. நரியைப் பரியாக்கி உலகமெல்லாம் பரவச்செய்து மதுரைப்பதி முழுதும் பித்தேற்றிய பெருந்துறைப் பெருமானே, அரும்பொருளே, அவநாசியப்பனே, பாண்டிநாட்டுக் கடலே, தெரிதற்கரிய மேலான ஒளியே, நான் உய்யும்பொருட்டுச் செய்யவடுப்பதாகிய காரியத்தைச் சிறிது மறிந்திலேன் என்பதாம்.

வி - ரை. அவநாசி - ஓர் திருப்பதி. (எ)

# அச்சோப்பதிகம்.

அனுபவவழியறியாமை.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

கலிவிருத்தம்.

முத்திநெறியறியாதமூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப்பழவினைகள்பாறும்வண்ணம்
சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட
அத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. முத்திநெறி அறியாத - முத்திமார்க்கத்தை யுணராத, மூர்க்கரொடும் முயல்வேனை - மூர்க்கரொடு சேர்ந்து அவர் வழியில் முயல்கின்ற எனக்கு, பத்திநெறி அறிவித்து - பக்திமார்க்கத்தை யுணர்த்தி, பழவினைகள் பாறும் வண்ணம் - பழவினைகள் ஒடும் வண்ணம், சித்தம்மலம் அறுவித்து - மனக்களங்கத்தை யறப்பண்ணி, சிவம் ஆக்கி - சிவரூபமாக்கி, என்னை ஆண்ட - என்னை யாண்டருளின, அத்தன் - எமது தந்தை, எனக்கு அருளிய ஆறு - எனக்கருள்செய்த பேற்றை, ஆர்பெறுவார் - வேறு யாவர் பெறவல்லார், அச்சோ - அதிசயம், எ - று.

க - ரை. முத்திவழியை யறியாத மூர்க்கரோடு கூடி அவர் வழியில் முயல்கின்ற எனக்குப் பத்திவழியை யறிவித்து, என்பழவினைகள் ஒடும்படி மனமாசகற்றிச் சிவரூபமாக்கி என்னை யாண்டருளின எமது தந்தையாகிய சிவபெருமான் எனக்கருள்செய்த பேற்றைப் பெற வல்லவர் யாவர் என்பதாம்.

வி - ரை. அச்சோ - அதிசயக் குறிப்புச் சொல். (க)

நெறியல்லாநெறிதன்னைநெறியாகநினைவேனைச்
சிறுநெறிகள்சேராமேதிருவருளேசேரும்வண்ணம்
குறியொன்றுமில்லாதகூத்தன்றன்கூத்தையெனக்
கறியும்வண்ணமருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. நெறி அல்லாநெறி தன்னை - தீநெறியை, நெறியாக நினைவேனை - நன்னெறியாக நினைகின்ற என்னை, சிறுநெறிகள் சேராமே - சிறியவழிகளிற் சேராமல், திருவருளே சேரும்

வண்ணம் - திருவருணெறியையே சேரும் வகை, குறி ஒன்றும் இல்லாத - பெயர் ஒன்றுமில்லாத, கூத்தன் தன் கூத்தை - கூத்தப்பிரானது திருவிளையாட்டை, எனக்கு அறியும் வண்ணம் - எனக்கு அறியலாம்படி, அருளிய ஆறு - அருள்புரிந்த பேற்றை, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. கெட்ட வழியை நல்ல வழியாக நினைகின்ற எனக்குத் தாழ்ந்த வழிகளிற் சேராதபடி தன் திருவருளையே சேரும் வண்ணம் இறைவன் தன் திருவிளையாடலை யெனக்கருள்செய்த பேற்றைப் பெறவல்லார் யாவர் என்பதாம். (உ)

பொய்யெல்லாமெய்யென்றுபுணர்முலையார்போகத்தே
மையலுறக்கடவேனைமாளாமேகாத்தருளித்
தையலிடங்கொண்டபிரான்றன்கழலேசேரும்வண்ணம்
ஐயனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை பொய்யெல்லாம் - பொய்களெல்லாம், மெய் என்று - உண்மையென்று துணிந்து, புணர் - நெருங்கிய, முலையார் - தனங்களையுடைய மாதரது, போகத்தே - போகத்தின் கண்ணே, மையல் உறக்கடவேனை - மயக்கமடையக் கடவேனை, மாளாமேகாத்தருளி - நசியாமற் காத்தருள்செய்து, தையல்-பெண்ணை, இடம்கொண்ட பிரான் - இடப்பாகத்திற் கொண்ட பெருமான், தன் கழலே சேரும் வண்ணம் - தன் திருவடியையே சேரும் வகை, ஐயன் - எம்மிறைவன், எனக்கு அருளிய ஆறு, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. பொய்யை மெய்யென்று கருதி மாதர்போகத்தில் மயங்காநின்ற என்னை அழியாமற் காத்தருளித் தனது திருவடியையே அடையும் வண்ணம் இறைவன் எனக்கருள்செய்த பேற்றைப் பெற வல்லார் யாவர் என்பதாம். (ந)

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை, எண்ணமிலா வன்பருளி யெனையாண்டிட் டென்னையுந்தன், சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம், அண்ணலெனக் கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. மண்ணதனில் - மண்ணில், பிறந்து - ஜநித்து, எய்த்து - இளைத்து, மாண்டுவிழக்கடவேனை - மடிந்துவிழக் கடவனான எனக்கு, எண்ணம் இல்லா-நினைத்தற்கரிய, அன்புஅருளி - அன்பு தந்து, என்னை ஆண்டிட்டு - என்னை யாண்டுகொண்டு,

என்னையும் - அடியேனையும், தன் - தனது, சுண்ணம் - பொடி யுருவாகிய, வெண்ணீறு அணிவித்து - திருவெண்ணீற்றை யணியச் செய்து, தூநெறியே சேரும் வண்ணம் - பரிசுத்தமான மார்க்சத்தையே யடையும் வண்ணம், அண்ணல் - பெரியோனாகிய சிவபிரான், எனக்கு அருளியவாறு, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. மண்ணுலகிற் பிறந்து இளைத்து மடிந்துவிழக் கடவேனுக்கு அளவுபடாத அன்பை யருள்செய்து என்னை யாண்டு, என்னைத் தன் திருவெண்ணீ றணிவித்துப் பரிசுத்தமாகிய முத்திநெறியை யடையும் வண்ணம் இறைவன் எனக்கருள்செய்த பேற்றைப் பெறவல்லார் யாவர் என்பதாம். (ச)

பஞ்சாயவடிமடவார்கடைக்கண்ணாலிடர்ப்பட்டு
நெஞ்சாயதுயர்கூரநிற்பேனுன்னருள்பெற்றேன்
உய்ஞ்சேனானுடையானேயடியேனைவருகவென்
றஞ்சேலென்றருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. பஞ்சுஆய - பஞ்சை யொத்த, அடி - பாதங்களையுடைய, மடவார் - மாதரது, கடைக்கண்ணால் - கடைக்கண்களால், இடர்ப்பட்டு - துன்பப்பட்டு, நெஞ்சு ஆயதுயர்கூர நிற்பேன் - மனநிரம்பிய துயரம் மிகு மாறுநிற்பேன், உன் அருள் பெற்றேன், உன்னருள் கிடைக்கப் பெற்றேன், நான் உய்ஞ்சேன் - நான் பிழைத்தேன், உடையானே - உடையவனே, அடியேனை வருகஎன்று - அடியேனை வாவென் றழைத்து, அஞ்சேல் என்று - அஞ்சவேண்டா வென்று, அருளியவாறு, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. மாதருடைய கடைக்கண்ணால் துன்பமடைந்து நிற்கின்ற நான் உன்னருளைப் பெற்றேன், பிழைத்தேன், அடியேனை வாவென் றழைத்து அஞ்சேல் என்றருளின பேற்றைப் பெற வல்லார் யாவர் என்பதாம்.

வி - ரை. பஞ்சாயஅடி - பஞ்சூட்டிய அடியெனினுமமையும். உய்ந்தேன் உய்ஞ்சேன் எனத் திரிந்தது. (ரு)

வெந்துவிழுமுடற்பிறவிமெய்யென்றுவினைபெருக்கிக்
கொந்துகுழற்கோல்வளையார்குவிமுலைமேல்வீழ்வேனைப்
பந்தமறுத்தெனையாண்டுபரிசறவென்றுரிசுமறுத்
தந்தமெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. வெந்துவிழும் - வெந்துவிழுகின்ற, உடல்பிறவி - உடம்போடு கூடிப்பிறத்தலை, மெய்என்று - உண்மையென்று

துணிந்து, வினைபெருக்கி - தீவினைகளைப் பெருகப்பண்ணி, கொந்துகுழல் - பூங்கொத்துக்களை யணிந்த கூந்தலையும், கோல்வளையார்-வளையமாகிய வளையலையுமுடைய மாதரது, குவிமுலைமேல் - கூம்பிய முலைமேல், வீழ்வேனை - விழுகின்ற என்னை, பந்தம் அறுத்து - பாசக்கட்டைச் சேதித்து, என்னை ஆண்டு - என்னை யாண்டருளி, பரிசுஅற - என் பசுத்தன்மைகெட, என் துரிசும் அறுத்து- என் குற்றத்தையும் அறுத்து, அந்தம் - முடிவான பொருளை, எனக்கு அருளியவாறு, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. இந்தப் பிறவியை மெய்யெனக் கருதித் தீவினைகளைப் பெருக்கி மாதர் தனங்களின்மேல் விழுகின்ற என்பந்தத்தைச் சேதித்து என்னை யாண்டருளி, என் குற்றங்களையு மொழித்து முடிவான பொருளை யெனக் கருள்செய்த பேற்றைப் பெறவல்லார் யாவர் என்பதாம். (சு)

தையலார்மையலிலே தாழ்ந்துவிழக்கடவேனைப்
பையவேகொடுபோந்துபாசமெனுந் தாழுருவி
உய்யுநெறிகாட்டுவித்திட்டோங்காரத்துட்பொருளை
ஐயனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. தையலார் - மாதர்களுடைய, மையலிலே - மயக்கத்திலே, தாழ்ந்துவிழக் கடவேனை - தாழ்ந்துவிழக் கடவனான என்னை, பையவேகொடு போந்து - மெல்லக்கொண்டு வந்து, பாசம் என்னும் - பாசமென்கிற, தாழ்உருவி - தாழை யுருவி, உய்யும் நெறி காட்டுவித்திட்டு - பிழைக்கும் வழியைக் காட்டுவித்து, ஓங்காரத்து உட்பொருளை - ஓங்காரத்தின் அகப்பொருளை, ஐயன் - இறைவன், எனக்கு அருளியவாறு, ஆர்பெறுவார் அச்சோ, எ - று.

க - ரை. மாதர் மயக்கத்தில் தாழ்ந்து விழக்கடவேனாகிய என்னை மெல்லக் கொண்டுவந்து பாசம் என்கிற தாழைக் கழற்றி உய்யும் வழியைக் காட்டி ஓங்காரப் பொருளையும் எனக்கருள்செய்த பேற்றைப் பெறவல்லார் யாவர் என்பதாம்.

வி - ரை. பைய - மெல்ல, (மெதுவாக) ஓங்காரம் - பிரணவம். (எ)

சாதல்பிறப்பென்னுந்தடஞ்சுழியிற்றடுமாறிக்
காதலின்மிக்கணியிழையார்கலவியிலேவிழுவேனை
மாதொருகூறுடையபிரான்றன்கழலேசேரும்வண்ணம்
ஆதியெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. சாதல் பிறப்பு என்னும் - இறத்தல் பிறத்தல்என்கிற, தடம் சுழியில் - பெருஞ்சுழியி லகப்பட்டு, தடுமாறி, தடுமாற்ற மடைந்து, காதலின்மிக்கு - ஆசையி லதிகரித்து, அணியிழையார் கலவியிலே விழுவேனை - மாதரது புணர்ச்சியில் வீழ்வேனை, மாது - பெண்ணை,ஒருகூறு உடையபிரான் - ஒருபாகத்திலுடைய பெருமான், தன் கழலே சேரும் வண்ணம் - தன் திருவடியையே அடையும் வண்ணம், ஆதி - முதல்வன், எனக்கு அருளியவாறு, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. இறப்புப் பிறப்பென்கிற பெரிய சுழிகளிற் சிக்கித் தடுமாறி மாதர் கலவியில் வீழ்கின்ற நான் தன் திருவடியை யடையும் வண்ணம் இறைவன் அருள்செய்த பேற்றைப் பெறவல்லார் யாவர் என்பதாம். (அ)

செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்றான்
நம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
அம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

ப - ரை. செம்மை நலம் அறியாத - செப்பமாகிய நன்மையை யறியாத, சிதடரொடுந் திரிவேனை - அறிவிலிகளோடு கூடித் திரிகிற என்னை, மும்மை மலம் அறுவித்து - மும்மலங்களையும் அறும்படிப் பண்ணி, முதல்ஆய முதல்வன் - முதற்பொருளாகிய தலைவன், நம்மையும் ஓர் பொருள் ஆக்கி - நம்மையும் ஒருபொருளாக்கி, நாய்சிவிகை ஏற்றுவித்த அம்மை - நாயைப் பல்லக்கிலேறப்பண்ணின அத்தன்மையாக, எனக்கு அருளியவாறு, ஆர்பெறுவார், அச்சோ, எ - று.

க - ரை. செப்பமாகிய நல்வழியை யறியாத அறிவிலிகளோடு கூடித்திரிகின்ற என்னை, முதல்வனாகிய சிவபெருமான் மும்மலங்களையு மறும்படிச்செய்து,எம்மையு மோர் பொருளாக்கி, நாயைச் சிவிகையி லேற்றின அத்தன்மைபோல் எனக்கருள்செய்த பேற்றைப் பெறவல்லார் யாவர் என்பதாம். (கூ)

திருச்சிற்றம்பலம்.

இதனுளடங்கிய திருப்பதிகங்கள் - ருக.

திருவாசகம் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாசகத்தின்

## திருப்பதிக முதற்குறிப் பகராதி.

| பதிகம். | பக்கம். |
|---|---|

*

உ

சிவமயம்.

# பிழைதிருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௨௭ | நாகம் | நரகம் |
| ௧௬ | ௧௯ | வட்டநூலார் | வடநூலார் |
| ௨௨ | ௩௧ | சாவேன | சாவேன் |
| ௨௩ | ௧௨ | வேணடு | வேண்டு |
| ௨௪ | ௫ | மதநாகமங்களின் | மதனாகமங்களிற் |
| ௨௬ | ௧௫ | முனிவருடைய | முனிவருடைய |
| ௪௦ | ௩௦ | வாகீசர் | திருஞானசம்பந்தர் |
| ௪௪ | ௧௮ | (எனககு) | (எனக்கு) |
| ௫௦ | ௧ | அளித்தார்க்கும் | அறிந்தார்க்கும் |
| ௫௩ | ௨௬ | தத்தை | தந்தை |
| ௫௪ | ௧௮ | என்கிற | என்கிற |
| ௫௪ | ௧௯ | அரும்பெரருள் | அரும்பொருள் |
| ௫௫ | ௨௨ | போன்ற் | போன்ற |
| ௫௭ | ௨௦ | பிரயோஜங்க | பிரயோஜனங்க |
| ௫௯ | ௨௭ | எம்பெருமானே | எம்பெருமானே |
| ௬௧ | ௨௯ | முடயார் | முடையார் |
| ௬௩ | ௧௫ | அனித்தருணாதலால் | அனித்தருறுதலால் |
| ௭௪ | ௨௨ | எனபவற்றி | என்பவற்றி |
| ௯௫ | ௪ | னேனையும் | னேனையுன் |
| ௧௦௦ | ௨ | கடன்மையாம் | கடமையாம் |
| ௧௦௩ | ௯ | ஒறுதெனை | ஒறுத்தெனை |
| ௧௦௮ | ௧௯ | துன்பதித்னின்றும் | துன்பத்தினின்றும் |
| ௧௧௦ | ௨௯ | யென்னிலல்லால் | யென்னிநல்லால |
| ௧௧௪ | ௬ | உத்தானித்தல் | உத்தூளித்தலை |
| ௧௪௯ | ௨௩ | பூதமாய்த் | பூதமாய்ச் |
| ௧௫௨ | ௩௦ | புடைமையாலும் | யுடைமையாலும் |
| ௧௫௨ | ௩௩ | பிர | பிரா |
| ௧௫௪ | ௨௨ | ஒரொருகொல் | ஒரொருகால் |
| ௧௬௯ | ௪ | நல்திபேல் | நல்குதியேல் |
| ௧௭௦ | ௯ | விண்ணுறுங் | விண்ணுனுங் |
| ௧௮௯ | ௧௭ | ஒலிசெய்ய | ஒலிசெய்ய |
| ௧௯௪ | ௮ | வர்களாவிலுங் | தேவர்களாவிலுங் |
| ௨௧௨ | ௧௨ | உருத்தை | உருவத்தை |
| ௨௧௪ | ௩௧ | சிவ | சிவம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௨௩ | ௩௪ | எதுகையின்பப்பொரு | எதுகையின்பொருட்டு |
| ௨௨௭ | ௨௭ | வானசரடாத் [ட்டு | வான்சரடாத் |
| ௨௨௭ | ௨௮ | சாத்தினனகாண் | சாத்தினன்காண் |
| ௨௩௮ | ௨௬ | காணம் | காரணம் |
| ௨௫௧ | ௨௩ | சிலர்குப் | சிலர்க்குப் |
| ௨௭0 | ௩0 | பகுதலும் | புகுதலும் |
| ௨௭௫ | ௨௩ | தாமயைரும்புகள் | தாம்ரையரும்புகள் |
| ௨௭௭ | ௨௫ | பூணணிந்த | பூணணிந்த |
| ௨௮௨ | ௩௩ | ணஎக்கு | எனக்கு |
| ௨௯௬ | ௨௭ | ஏன்னௌஉடையாய் | என்னைஉடையாய் |
| ௨௯௬ | ௨௭ | எனனையுடையோய் | என்னையுடையோய் |
| ௨௯௯ | ௪௯ | வேதமுலான | வேதமுதலான |
| ௩00 | ௯ | பொறுந்துறை | பெறுந்துறை |
| ௩௧௧ | ௪ | ஏன்னையொரு | என்னையொரு |
| ௩௧௧ | ௩௪ | மெய்ச்சுவாரும் | மெச்சுவாரும் |
| ௩௧௨ | ௧௫ | வாழ்த்த | வாழ்த்தா |
| ௩௫௨ | ௨௭ | சேஜோமயமனை | தேஜோமயனை |
| ௩௭௨ | ௧0 | மேவியசீர | மேவியசீர் |
| ௩௮௪ | ௧௮ | யான்டருளினவனை | யாண்டருளினவனை |
| ௩௮௭ | ௧௭ | வுலர்ந்து | அலந்து |
| ௩௯௧ | ௩ | நிணா | நிரா |
| ௪0௭ | ௧௫ | என்துஉயிரும் | எனதுயிரும் |
| ௪0௯ | ௪ | யுடைம | யுடைய |
| ௪௧௭ | ௩௪ | என்ப் | எனப் |
| ௪௧௯ | ௨ | சொன்ஞைம | சொன்ஞேம் |
| ௪௨0 | ௨௯ | ஒட்யமாகிய | ஒட்டமாகிய |
| ௪௨௮ | ௩ | பொருக்கிப்பெழுதளை | பொருக்கிப்பொழுதனை |
| ௪௩௧ | ௨௫ | யெழர்ருள்வது | யெழுந்தருள்வது |
| ௪௩௪ | ௧௪ | கரும்பஞ்சாற்றிஞல் | சருப்பஞ்சாற்றிஞல் |
| ௪௪௯ | ௨௭ | மாயம் | மாயக் |
| ௪௭0 | ௧0 | அவதழ்பூத | அவதரித்த |
| ௪௭௬ | ௧௪ | எம்மோமேலாஞகிய | எம்மேலோஞகிய |
| ௪௮0 | ௨௫ | சாச்தோ | சாத்தோ |
| ௪௮௩ | ௧௮ | திருவரு | திருவ |
| ௪௯௨ | ௨௪ | அககற்றி | அகற்றி |

சிவமயம்.

# திருச்சதகம்.

எக-வது. புணர்ப்பதொக்க என்னுந்திருப்பாசுரம்.

(இ-ள்.) புணர்ப்பதொக்க-ஆண்டவனோடு மாறுகொண்டுதிரி கின்ற அடிமையானவனை அந்த ஆண்டவன் சதுர்வித உபாயங் களினாலும் தன்னடிமை யென்று தன்னோடுங் கூட்டிக்கொள்வ தொப்ப, எந்தை யென்னை யாண்டு பூண நோக்கினாய்-திருவடிக் கருகராகிய மெய்யடியார் குணங்க ளொன்று மில்லாதவனாய்க் காமவெகுளி மயக்கங்களினால் பிரபஞ்சத்தை மெய்யென்று சுழல் கின்ற வென்னைக்கிருபையினாலே ஆசாரியமூர்த்தமா யெழுந்தரு ளிவந்து தடுத்தாட்கொண்டு மெய்யடியார் கண் மேல் வைக்குங் கிருபா நோக்கத்தை யடியேன் போதத்துக்குள்ளும் புறனுமா யழுந்த வைத்தருளிச் செய்தாய், புணர்ப்பதன்றி தென்றபோது-அரிபிரமாதிகட்குங் கிடையாத விந்தக் கிருபாநோச்சம் ஒன்றுக் கும் பற்றாதவெனக்குக் கிடைப்பதன்றென்று கிருபையருமையை யறிந்தபோது, நின்னோடென்னோடென்னிதாம் புணர்ப்பதாக - என்னதாகியிருந்த சகசமலமொன்றும் நின்னோடுமென்னை யிரண் டற்ற அத்துவிதமாய்க் கூட்டுவதாகவும், அன்றிதாக வன்பு நின் கழற்கணே புணர்ப்பதாக - முன் யானெனதாய் நின்ற பிரபஞ்ச மானவிது இப்போது யானெனதென்றதாகவும் இப் பிரபஞ்சத் தின் மேனின்ற அன்பு சுவாமிகள் திருவடிக்கண்ணே மீளாது நிற்பதாகவுமாயின, அங்கணாள புங்கமான போகமே-அழகிய கண் ணாளா அரிபிரமாதியர் போகங்களையுங் கடந் திருப்பதான் சிவா னந்தபோகமே இந்தக் காருணியத்துச்கு நாயேனாற் கைம்மாறும் உண்டுகொலோ. எ-று.

ஆண்டு பூணநோக்கினாய்-என்றமையான், புணர்ப்பதொக்க என்ற உவமைக்கு ஆண்டவனடிமை வருவிக்கப்பட்டது. பூண நோக்குதல் - போதம் பதையாது வைத்த நோக்கம். கிருபை யரு மையை யறிந்தபோது தற்செயல் முழுதுமிறந்து சிவத்தோடத்து விதமான படியினாலே, நின்னோடுமென்னைப் புணர்ப்பதாக என் றார். என்னோடும் என்ற மூன்றனுருபை என்னையென்னு மிரண்ட னுருபாகக் கொள்க. உம்மைகளும் ஆயினவென்னும் ஆக்கமுந் தொக்குநின்றன.

சிவமயம்.

# திருவெம்பாவை.

ஆடிமாதமுதல் மார்கழிமாத வரையும் இராத்திரியாகவும் தைமாதமுதல் ஆனிமாதவரையும் பகலாகவும் இது தேவர்களுக்கொருநாள், சங்காரகாலத்துக்குஞ் சிருஷ்டி காலத்துக்கும் பிரமாணமாக இந்த ஆறுமாதமும் பிரிந்து நடக்கும் மார்கழி மாதம் உதயகாலமாய்ச் சிருஷ்டிகாலத்துக் கேதுவாயிருக்கும்.

பிரபஞ்ச சிருஷ்டியைத் திருவுளத்தடைத்து வைந்தவசத்தியைச் சிருஷ்டிக்கத் தொடங்குகிற அவசரந் திருப்பள்ளியெழுச்சியென வழங்கும்.

இனி அந்தச் சுத்தமாயை நாதவிந்துகளாகவும், சாதாக்கியமாகவும், மகேசுரமாகவும், சுத்தவித்தையாகவும் அஞ்சுதலமாயிருக்கும்; நாதவிந்துகளாகிய தலங்களிலே பரமும், பரையும் அதிஷ்டிக்குஞ் சாதாக்கியமாகிய தலத்திலே சதாசிவமூர்த்தி யெழுந்தருளியிருப்பர். போகாங்கங்களாகிய அணுசதாசிவரே சேவிக்கவும், இதன் கீழே யீசுரற் கதிட்டானமாகிய மகேசுரதலத்திலே அனந்தாதியஷ்ட வித்தியேசுரர் சேவிக்கவும், இதன்கீழே உருத்திரர்க்கதிஷ்டானமாகிய சுத்தவித்தியாதலத்திலே மந்திரேசுரர்சேவிக்கவும்,இப்படிப் பிரபஞ்சவனுக்கிரக காரியமாகப் பராசத்தியிற்றோன்றிய ஞானக் கிரியைக ளொத்த விச்சையே திருமேனியான சதாசிவமூர்த்தி திருவருளால் அந்த மகேசுர தத்துவத்திலே சத்திமண்டலத்தி லிருந்த மனோன்மனி சத்தியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி சர்வபூத தமனியைச் சிருஷ்டிக்க, அந்தச் சர்வபூத தமனி பெலப்பிரமதனியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி பெலவிகரணியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி காளியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி இரவுத்திரியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி சேட்டையைப் பிரேரிக்க, அந்தச் சத்தி வாமையைப் பிரேரிக்க, இப்படி பிரேரியா நிற்கப்பட்டநவசத்திகள் பிரேரகத்தினுல்மாயையை அதிஷ்டித்திருக்கிற அனந்ததேவராலே அசுத்தமாயை காரியப்பட்டுப் பிருதிவி முடிவான பிரபஞ்சகாரியம் நடக்கும். இனி:

க-வது. ஆதியுமந்தமும் என்னுந்திருவாசகம்.

மனோன்மனி யென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ச் சர்வபூத தமனியை யுணர்த்துகிறது.

உ-வது. பாசம் பரஞ்சோதி என்னும் திருவாசகம்.

சர்வபூததமனியென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ப் பெலப்பிரமதனி யென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது.

௩-வது. முத்தன்ன வெண்ணகையாய் என்னுந் திருவாசகம்.

பெலப்பிரமதனி யென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ப் பெல விகரணியென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது.

௪-வது. ஒண்ணித்திலநகையாய் என்னுந் திருவாசகம்.

பெலவிகரணி யென்னுஞ் சத்தியின் திருவாக்காய்க் காளி யென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது.

௫-வது. மாலறியாநான்முகன் என்னுந் திருவாசகம்.

காளியென்னுஞ் சத்தியின் திருவாக்காய் இரவுத்திரி யென் னுஞ் சத்தியை யுணர்த்துகிறது.

௬-வது. மானேநீ நென்னலே என்னுந் திருவாசகம்.

இரவுத்திரி யென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ச் சேட்டை யென்னுஞ் சத்தியை யுணர்த்துகிறது.

௭-வது. அன்னேயிவையும் என்னுந் திருவாசகம்.

சேட்டையென்னுஞ் சத்தியின் திருவாக்காய் வாமையென் னுஞ் சத்தியை யுணர்த்துகிறது.

௮-வது. கோழிசிலம்ப என்னுந் திருவாசகம்.

வாமையென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ச் சுத்தமாயையை ப்பிரேரிக்கிற அனந்ததேவரை ஆசரித்து அப்பால் பிரகிருதியில் விகுர்தியான ஆன்ம தத்துவம் நடப்பது பொருட்டாக விஷ்ணுவி னிடத்தில் அதிஷ்டிக்கிற சிவ சத்தியை நோக்கி, ஆழியா னன் புடைமையாமாறு மிவ்வாறோ என்று பிரேரித்ததாகக் கூறுதினது ஆக இப்படி நவசத்திகள்கூடி விசுவகாரியம் பண்ணுகிறதே பாட் டாகப் பாடியபடி.

௯-வது. முன்னைப்பழம்பொருள் என்னுந் திருவாசகம்.

அநாதியாயுள்ளவர்களுக் கெல்லாம் அநாதியாயுள்ளவனுமாய் அனுபவிப்பவர்களுக்கு மேன்மேலும் புதுமைகொடுக்கும் ஆனந் தத்தைக் கொடுப்போனுமா யிருக்கிற உன்னடியார் அடிபணித லும், அவர்களை ஆசரித்தலும், அவர்களே பர்த்தாவாக அங்கீகரித்த லும், அவரேவற் பணிசெய்தலும், யாங்களுரிமையா யிந்த முறை மைஒழியாவண்ணம் பிரசாதித்தருளில் ஒருகுறைவுபாடு மில்லோ மென்று நவசத்திகளுந் தம்மிற் சொல்லியது.

உன்னடியார் - என்பது, விஞ்ஞானகலரில் மலபக்குவராய் அணுசதாசிவரென்னும் பேர் பெற்றிருப்பார் ஒருவகையும், அதி காரமலத்துடனே கூடிய யனந்தாதி யஷ்டவித்தியேசுரரென்னும் பேர் பெற்றிருப்பார் ஒருவகையும், ஆணவமல சகிதராய்ச் சத்த

கோடி மகாமந்திரேசுரரென்று பேர் பெற்றிருப்பார் ஒருவகையுமாக விஞ்ஞானகலர் மூன்று வகையையும், அன்றியும், உன்னடியார் என்பது இனி நிரை நிரையாக அணு சதாசிவர்தாள் பணிவோம், அட்டவித்தியேசுரர்க்குப் பாங்காவோம், சத்தகோடி மகாமந்திரேசுர ரெங்களுக்குப் பத்தாக்க ளாவார்க ளென்றலுமாம். சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம் என்பது, அவர்களேவலால் அசுத்தமாயையைப் பிரேரியா நிற்போ மென்க.

கO-வது. பாதாள மேழினும் என்னுந் திருவாசகம்.

பாதாள மேழினுங்கீழ் சொற்சழிவு பாதமலர் என்பது நூறாயிரம் யோசனையான பூமியின் கனத்தையும், சிவஞானமன்றியே தபசு பண்ணுகிறவர்கள் சென்றிருக்கும் இடமாகிய கனிட்ட பாதாளத்தையும், அதன்கீழே உண்டாகிய அசுரகண்டம், சர்ப்ப கண்டம், இராச்சதகண்டம், இப்படி ஒவ்வொன்று மும்மூன்று கண்டமாய் ஆடகேசுரர்க்குப் புவனமுமாயிருக்கிற ஏழு பாதாளத்துக்கும் அதன் கீழாக ரவுரவம், கும்பீபாகம், அவிசிகம் என்று சொல்லப்பட்ட மயிரராச நரசமூன்றும் இவையுட்படப் பதின்மூன்று நரகம் ஒரு அடுக்காகவும், பத்து நரகம் ஒருஅடுக்காகவும், ஒன்பது நரகம் ஒரு அடுக்காகவும், ஆக முப்பத்திரண்டு நரகமும், இவர்களைச் சூழ்ந்து சேவித்திருக்கிற நூற்றெட்டு நரகமும் ஆக நூற்றுநாற்பது நரகமுங் கூர்மாண்டதேவரென்னும் உருத்திரர்க்குப் புவனமா யிருக்கப்பட்ட நரகபுவனங்களுக்குங் கீழ்க் காலாக்கினி உருத்திரர் புவனம் பதினேழுகோடி யோசனையாய் அண்டகடாக மூடப்பட்ட புவனமாயிருக்கும். இப்படிச் சொல்லப்பட்ட பிரமாண்ட முதலாக அண்டங்க ளனைத்துக்கும் ஆதார பூதமாய்ச் சிவசத்தியான ஆதார சத்திக்கும் அப்பாற் சிவனுடைய பூரணத்துக்கு வெல்லைப்படுத்தி இன்னமட்டென்று சொல்லுதற்கு முடியாததலால் சொற்கழிவா யிருக்கப்பட்டது மலர்போன்ற சிபாதமாகையாலும், போதார்புனை முடியு மெல்லாப் பொருண் முடிவே-இனிப்பிருதிவியண்ட முன்சொன்ன அண்ட கடாகமுதல் ஐம்பதுகோடி யோசனையுட்பட மேற் புவலோக முதல் சிவலோகமளவாக எழுலோகமு மேல் அண்டகடாக முட்பட ஐம்பது கோடி யோசனையுமாகப் பிரமாண்டம் நூறுகோடி யோசனையாக, அதற்குமேல் அதிற் பதின்மடங்கு அப்பு அண்டம், அதற்குமேல் அதிற் பதின்மடங்கு தேயு அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு வாயு அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு ஆகாச அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு மன அண்டம், அதற்குமேல் பதின் மடங்கு புத்தி அண்டம், அதற்குமேல் பதின் மடங்கு

ஆங்கார அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு குண அண்டம், அதன்மேல் நூறுமடங்கு பிரகிருதி அண்டம், அதன்மேல் நூறு மடங்கு அராக அண்டம், அதன்மேல் நூறுமடங்கு வித்தை அண் டம், அதன்மேல் நூறுமடங்கு கலையண்டம், அதன்மேல் நூறு மடங்கு நியதி அண்டம், அதன்மேல் நூறுமடங்கு கால அண்டம், அதன்மேல் ஆயிரமடங்கு அசுத்தமாயை. அதன்மேல் பதிஞயிரம டங்கு சுத்தமாயையிற் சுத்தவித்தை, அதற்குமேல் பதிஞயிரமட ங்கு மகேசுவரம், அதற்குமேல் சாதாக்கியம், அதற்குமேல் பர விந்து,அதற்குமேல் பரநாதம்.அப்பால் சிவனுடைய பூரணம்அளவு எல்லைப்படாதாதலின் எல்லாப்பொருள்களுக்கு முடிவுமாயிருப் பது திருமுடியாதலாற் சிவபாதமுந் திருமுடியுமொருவர்க்கும் அளவுபடுத்த முடியாதாதலாலும்.—பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்-முன்சொல்லி வரப்பட்ட லோகங்களிடத்தும் அத ற்கு மேலுங் கீழுஞ் சத்தி சிவான்மக பூரணமாக விருக்கையாலே ஒருவடிவாய் ஏகதேசியுமாயிரான், ஆதலாலும்,—வேதமுதல் விண் ணேரு மண்ணுந் துதித்தாலுமோத வுலவா வொருதோழன் தொ ண்டருளன் - சதுர்வேதங்களும் பிரம விஷ்ணுக்களாகிய தேவர் களும் பூமியிலுண்டானவர்களும் அளவற்ற தோத்திரம் பண்ணி ஞலும் அந்தத் தோத்திரத்திஞ லின்னமட்டென்று அளவுபடுத்த முடியாமல் முன்சொன்ன தேவர்கள் திரட்சியாகிய வீட்டங்கள் தோன்றலுள் சாத்திரங்களைக் கிளறிக்கிளறிப் பல படப்பன்னியுந் தெரியாதவஸ்துவை,—கோதில் குலத் தரன்றன் கோயிற்பி ணுப் பிள்ளைகாள் - உபாதி சூனியஞய் நிர்மலஞய் அரனென்னுந் திருநாமத்தை யுடையவனுமா யிருக்கிற சிவனுக்கு ஆலயமான சுத்த மாயையிற் சுத்தவித்தையிலிருந்து தம்பிராஞற் பணிவிடை யாகப் பிரபஞ்சகாரியத்தைப் பண்ணுமவர் வாமைமுதலாகிய சிவ சத்திகள், ஏதவனூரேதவன்பே ராருற்றூராரயலா ரேதவனைப் பா டும் பரிசேலோ ரெம்பாவாய் - இப்படியே யுணர்ந்தாச்கு உணர்வரி யோஞகிய சிவபெருமானுக்கூரோது பேரோது உறவார் அடுத்தோ ரார் இவைகளொன்று மில்லாமையாலிந்த முறைமையையுடைய சிவபெருமானைப்பாடும் வண்ணம் எவ்வண்ணமோதோழி எ-று.

சிவமயம்.

# திருப்படையாட்சி.



## க-வது. கண்களிரண்டும் என்னுந் திருப்பாசுரம்.

இச்செய்யுள் என்னுதலிற்றோவெனின் படையாட்சியோடு பாசறைக்கட்சென்ற தலைவன் சத்தனுதலால் அவன் வருவலென வுரைத்த பருவமும் வந்தது - அவனும் வருவன், என்றுற்றுவித்த பாங்கிக்குத் தலைவி அவன் வெளிப்படின் றனக்குளதாம் போகானந்தப்பேற்றைக் கூறுதலை யுணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) கலவனுருக்கொடு வலைவீசி மீனினைப்படுத்த சிவனெனுந் தலைவன் வந்து வெளிப்படி னுண்டென்னிரண்டு கண்களுமவன் றிருக்கழல் கண்டு களிப்பனவாகிய நிகழ்ச்சியு முளதாகாது. பிரிவறியாது தன் றலைவருடன் புணர்ந்து நிற்குமேனை மாதர்வாழ்வினின்று மென்வாழ்வு கடைப்படுமாறு மாகாது. இனி மண்ணுலகங்களின் வந்து பிறந்திடுமாறு மறந்திடுமாறு முளதாகாது. திருமாலறியாத் திருமலர்ப்பாத மிரண்டனையும் வணங்குதுமென்று சொல்லுஞ் சொன்னிகழ்ச்சியு முளதாகாது. களிப்பினை மிகத்தரும் பண்ணினைப் பொருந்திய பாடலோடாடல் பயின்றிடுமாறு முளதாகாது. நல்வளநிறைந்த திருப்பாண்டிநாடதனையே திருப்படைவீடாக வுடையான் படையாட்சிகள் பாடுதுமென்று சொல்லுஞ் சொன்னிகழ்ச்சியு முளதாகாது. இருமலமுடைய பிரளயாகலர் களிகூரத்தக்கதாக மான்மழு சதுர்ப்புயத்தோடுவந்து வெளிப்படுமாறு வெளிப்படுதலு முளதாகாது. ஆண்டுயான் சிவபோகமென்னுஞ் சிவாநுபூதி சொரூபியாவே னென்பதாம்.

ஈண்டுதலைவி சீவன் முத்தன். தலைவன் சத்தனுகிய பரமசிவன். பாங்கி திருவருளெனவறிக. சைவாகமத்து முத்தியினு மும்முதலு முண்டென்பதனுன் முத்தியினு மாண்டானடிமையிருக்க விவ்வாறு கூற லாகாதெனின், அறியாதுகூறினுய், மலமாயா கன்மங்களோடு கூடித் திரோதப்பட்டுச் சனனமரணமுற்றுவரு மான்மா விருவினையு மொருகாலத்தே வந்து புசிக்கைக்குச் சமமுற்ற வெல்லையிற்போன பலகோடி பவங்களிலே செய்துவந்த சரியா கிரியா யோகத் தவப்பயனுன் மலபரிபாகப்பட்டுச் சிவஞானத்தைப்பெற்றுத் திருவருடாரகமாகநின்று சீவகரணங்களெல்லாஞ் சிவகரணங்களாய்ச் சிவனேடொன்றுய்ச் சாயுச்சியமாவன்; சாயுச்சிய

மாமிடத்து வேருய் நின்று கலப்பின் கலத்தல் கூடாமையானும் ஒன்ருய்நின்று கலப்பின் கலத்தலின்மையானும் அட்பொடுகலந்த வுப்புப்போல வேறறநின்று சாயுச்சியமாவன்; ஆனவிடத்து மூன்று முதலு மிருக்கினு மவை முன்போலச் சீவித்து நிற்பனவுஞ் செய்யாமனிற்கும்; நிற்கவே ஆன்மா சிவனோடு அத்துவிதமாய் நிற்பானுதலா லாண்டு சிவனையுஞ் சுட்டியறியான் இதுவிதுவென்று சுட்டியறியப்பட்டனவெல்லாம் விடையமாய்ப் பொய்ப்பொருளா மாதலி னவ்வாறு அவை பொய்ப்பொருளென வறிந்தவிடத்தே சுட்டற்ற வுண்மையாகிய சிவரூபமாவன்; அங்ஙனஞ் சிவரூபனுன முத்தாத்மாவினுலே யிவ்வாறு சுட்டியறித லின்ருமாதலி னிவ்வாறு கூறுதலா மெனக்கொள்க. இதனைச் சிவஞானபோதம் அ-கூ-க0-கக - ஆஞ் சூத்திரங்களாலு மிந்நான்கு சூத்திரங்களின் பொருள்களை விரித்துச் சித்தியார் சிவப்பிரகாசங்களிற் கூறிய திருவிருத்தங்களாலு மறிக.

ஏகாரங்க ளீற்றசை. தேற்றமெனினு மமையும். அன்றி வினுவாகக்கொண்டாமெனப் பொருள்கொளளின், காரிகையார்கடம் வாழ்விலென்வாழ்வு கடைப்படுமோசாதே யென்பதைத் திலதருப்பணஞ் செய்யல் வேண்டும். இதுமுதலிய பல குற்றங்களுண்டாம். அவற்றை விரிப்பிற்பெருகுமென் ருெழிந்தாம். இச்செய்யுளிற் கூறப்படு மாகாதென்னு மொழிசட்கு ஆமெனப் பொருள் கூறி ஞகாதோவெனி ஞகாது, என்னெனின் யாண்டும் எதிர்மறையை யுடன்பாடாகக் கூறுதற்கிலக்கணமின்மையின். செய்யாயென்னு முன்னிலை யொருமையேவ லெதிர்மறை வினைமுற்றை யுடன்பாட்டு வினை முற்ருகப் பொருள்கொள்ளுதல்போ லிதனையும் பொருள் கொள்ளுத லாகாதோவெனின் ஆகாது; என்னெனின் அதனை யெதிர்மறை வினைமுற்ருகப் பொருள்கொள்ளுமிடத்து எதிர்மறையாகார மிடையிற் புணர்ந்துகெட்டு நின்றதாகவு முடன்பாட்டு வினைமுற்ருகப் பொருள்கொள்ளுமிடத்து அவ்வெதிர்மறை யாகாரம் வேண்டாது நிற்பதாகவும் கொள்ளுதலானு மிதனிடத்தில் எதிர்மறையாகாரம் புணர்ந்து நிற்றலி னுடன்பாடாகக் கொள்ளுதற் கேலாமையானுமென்க. கண்களிரண்டாவன: ஞானக்கண்ணு மூனக்கண்ணுமாம். ஏனையவற்றை விரித்துக் கடாவிடைகளாகக் கூறுதற் கிஃதமைய மன்றென விடுத்தனம்.

### சிதம்பரம் சபாநாயகரபிஷேகம்.

சித்திரையிலோணமுதற்சேரானியுத்திரமாஞ்
சத்துதனுவாதிரையுஞ்சார்வாகும்—பத்திவளர்
மாசியரிகன்னிமருவுசதுர்த்தசிமன்
றீசரபிஷேகதினமாம்.

### அஷ்டவீரட்டம்.

பூமன்சிரங்கண்டியந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாவழுவூர்
காமன்கொறுக்கையமன்கடவூரிந்தக்காசினியிற்
றேமன்னுகொன்றையுந்திங்களுஞ்சூடிதன்சேவகமே.

### சமயதூரவர் திருநக்ஷத்திரம்.

சித்திரைச்சதயமப்பர்சிறந்தவைகாசிமூல
மத்தரைப்பணிசம்பர்தரானிமாமகத்திலந்த
முத்தமிழ்வாதவூரர்முதியநல்லாடிதன்னிற்
சுத்தமாஞ்சோதிநாளிற்சுந்தரர்கைலைசேர்ந்தார்.

### சமயதூரவர் வயசு.

அப்பருக்கெண்பத்தொன்றருள்வாதவூரருக்குச்
செப்பியநாலெட்டிற்றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்குமூவாறுதொன்ஞானசம்பந்தர்க்
கந்தம்பதினாறறி.

---